தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—137

# ஆக்ஸ்ஃபோர்டின் இந்திய வரலாறு-I

## (THE OXFORD HISTORY OF INDIA)



ஆசிரியர்

காலஞ்சென்ற வின்சென்ட் ஏ. ஸ்மித், சி.ஐ.இ.

மூன்றும் பதிப்பு

பெர்சிவல் ஸ்பியரால்

திருத்தியமைக்கப்பட்டது

பாகம்—I

சர் மார்டிமர் வீலர், ஏ. எல். பாஷாம்

ஆகியோரால் திருத்தி எழுதப்பட்டது.

தமிழாக்கம்

தி. வெ. குப்புசாமி, எம்.ஏ. (வரலாறு),
எம்.ஏ. (பொருளாதாரம்), எம்.ஏ. (அரசியல்),
வரலாறு, பொருளாதாரத்துறை,
இலட்சுமிபுரம் கல்லூரி,
நெய்யூர் போஸ்ட், கன்னியாகுமரி மாவட்டம்




தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—April, 1967

B.T.P. No. 137



# THE OXFORD HISTORY OF INDIA

Vincent A. Smith

*Translation*

T. V. Kuppuswami

PRICE Rs. 8-25

This translation of The Oxford History of India by Vincent A. Smith is published by arrangement with the Clarendon Press, Oxford.

*Printed by*
Amurtha Printers,
111-C, Arcot Road,
Madras-24.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **'ஆக்ஸ்ஃபோர்டின் இந்திய வரலாறு-I'** என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 137ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 172 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலு வீற்றிருக்கிறாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முகவுரை

'ஆக்ஸ்போர்டு இந்திய வரலாறு' என்ற நூல் 1919 ஆம் ஆண்டில் முதன் முறையாக வெளியிடப் பெற்றது. 1911 ஆம் ஆண்டு வரையிலுமுள்ள வரலாறு அதில் கண்டிருந்தது. அந்நூல் முழுவதையும் காலஞ்சென்ற வின்செண்ட் ஸ்மித் அவர் களே இயற்றியிருந்தார். பரந்த அறிவிற்கும், தெளிந்த கூற்றிற் கும், அச்சமற்ற கருத்துகளுக்கும் அந்நூல் மிகவும் பெயர் பெற் றிருந்தது. இத் துறையில், விலை மதிப்பற்ற ஓர் களஞ்சியமாக அந்நூல் விளங்கிற்று. பல மாறுதல்கள், கடந்த நாற்பதாண்டு களாக நேர்ந்திருந்த போதிலும், இன்றும் அந் நூல் ஜீவித்து வருகிறது. இந்திய நாட்டில், சிறந்து விளங்குவதன்றி, அந் நாட் டின் வரலாற்றை எடுத்துரைக்கும் ஈடிணையற்ற நூலாகவும் அது விளங்கி வருகிறது. ஐயமற்ற நூலின் சிறப்பிற்கு இவைகளே போதிய காரணங்களாகும். ஸ்மித் அவர்களின் வரலாற்று நூலைக் சுவையற்றதென்று குறைப்படுவோரும், விருப்பு வெறுப்புகள் நிறைந்ததென்று தூஷிப்பவரும் பலருண்டு. ஆனால், இன்றும் அதில் சுவை காணும் வாசகர்கள் பலரிருந்து வருகின்றனர். தெளிவாகச் செய்திகளை எடுத்துரைக்கின்ற பாங்கினை அவர்கள் விரும்புகின்றனர். வெறுப்பின் காரணமாக எழுந்தவை என்று கருதப்படுவைகளை, நேர்மையான கூற்றுகள் என்று எண்ணுப வர்களும் அல்லது தவறான மதிப்பீடுகள் என்று கருதுபவர்களும் உண்டு. தேர்ந்த ஞானத்தையும், நுண்ணிய அறிவுடன் கூடிய மதிப்பீடுகளையும் அடிப்படையாகக் கொண்டிருப்பதாலேயே, இன்றும் வின்செண்ட் ஸ்மித்தின் வரலாற்று நூல் உயிருடனி ருந்து வருகிறது. உள்ளதை, உள்ளவாறே எடுத்துரைக்கின்ற போதிலும், நாம் மேலே குறிப்பிட்டுள்ள குறைதிசயங்களோடு, பரந்த ஆதரிச நோக்கும் கொண்டிருப்பதாலேயே நூல் இன் றும் வழங்கி வருகிறது. பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சியின் இறுதியாண்டுகளில் இந் நூல் உருப்பெற்றிருக்கிறது. அக் காலங்களில், நிலவிய உணர்ச்சியுடனேயே, தற்கால சுதந்திர இந்திய நாட்டிலும் அந்நூல் பயன்படுத்தப்படுகிறது. இது ஒன்றே அந்நூலின் உண்மை மதிப்பிற்கும், நிலைபெற்று விளங் கும் தன்மைக்கும் போதிய சான்றாகும்.

1923 ஆம் ஆண்டில் இரண்டாம் பதிப்பு வெளியாயிற்று. காலஞ்சென்ற எஸ். எம். எட்வர்டு என்பவர், பதிப்பாசிரிய ராகப் பணியாற்றி, 1921 ஆம் ஆண்டு வரையுள்ள வரலாற்றுச் செய்திகளையும் இணைத்தார்.

1912 ஆம் ஆண்டில் நிலவிய நிலை நீடித்திருக்கும் என்ற கருத்து மாய்ந்துவிட்டது. அச் சகாப்தம் முற்றுப்புள்ளியிடப் பெற்றுவிட்டது. வரை படங்கள் மட்டிலுமின்றி, சிந்தனைகளும், கருத்துச் சூழ்நிலைகளும் முற்றிலும் மாறிவிட்டன. எனவே, புதிதாக வெளியிடப் பெறுகின்ற பதிப்பில் புதிய மாறுதல்கள் ஏற்பட வேண்டுமென்பது தடுக்கவியலாத ஒன்றாகும். என்றாலும் I, II ஆம் பகுதிகளில் வின்செண்ட் கூறியவைகளில் பெரும் பகுதியை மாறுதல்களின்றிக் கடைப்பிடிப்பது சாத்தியமாயிற்று. வின்செண்ட் ஸ்மித்தின் மரணத்திற்குப் பின், இந்திய முற்கால வரலாற்றைக் குறித்த சில செய்திகள் வெளியாகியிருக்கின்றன. நூலின் மூன்றாவது பதிப்பில் இவைகளை உள்ளடக்கி, சர் ஆர். மார்டிமர் வீலர் அவர்கள் புதிய அதிகாரமொன்றையும் இணைத்துள்ளார். பண்டைய வரலாற்றுப் பகுதியின், எஞ்சிய பாகங்களை (பகுதிகள் I—III) லண்டனிலுள்ள, ஆசிய ஆப்பிரிக்க நாட்டு ஆராய்ச்சிக் கழகத்தைச் சார்ந்த பேராசிரியர் ஏ. எல். பாஷாம் அவர்கள் மீண்டும் பரிசோதித்து வழங்கியுள்ளார். இடைக்கால அல்லது இஸ்லாமியராட்சியை (பகுதிகள் IV—VI) அதே ஸ்தாபனத்தைச் சார்ந்த திரு ஜே. பி. ஹாரிசன் என்பவர், பரிசோதித்து வெளியிட்டுள்ளார். இடைக்கால வரலாறு, பண்டைய வரலாற்றைக் காட்டிலும் மிகத் தெளிவாக எடுத்துரைக்கப்பட வேண்டுமென்பது திரு ஸ்மித் அவர்களின் நோக்கமாகும். அவரது நூலின் தன்மையும் அதுவேயாகும். இது எண்ணிப்பார்ப்பதற்கே வியப்பாக உள்ளது. இத்தகைய முறைகளைப் பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தைப் பொறுத்தவரையில் கையாளுவதற்கில்லை. பொது நோக்கில், ஏற்பட்டுள்ள மாறுதல் மிகப் பரந்தது. ஆடையைச் சீர்படுத்துவது, ஒரு சிறு தையலை அளிப்பது போன்று அமையுமேயன்றி, புதுமை யூட்டவல்லதாக மாறிவிட முடியாது. இவ் வரலாறு முழுவதையும் (பகுதிகள் VII—X) தனியொரு நபர், மாறியுள்ள மறு நோக்கை மனத்தில் கொண்டு, மீண்டும் எழுத வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. பிரிட்டிஷ் ஆட்சி வரலாறு முழுவதும் முற்றுப்பெற்ற ஓர் கதையாகவே கையாளப்பட்டிருக்கின்றது. இந்திய நாட்டில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் எழுச்சியும், வீழ்ச்சியும் என்ற நோக்கில் வரலாறு தொகுக்கப்படவில்லை. மேலை நாட்டு அரசியல், உத்திகள், கருத்துகள் ஆகியவைகளின் தொடர்பினால் இந்திய நாடு அடைந்த மாறுதல் என்ற அடிப்படையிலேயே வரலாறு எழுந்துள்ளது. இந்நன்மைகளை வழங்கிய வள்ளலாகக் கிழக்கிந்தியக் கம்பெனியும் அதை உருவாக்கிய சிற்பியாகப் பிரிட்டனும் விளங்கி வருகின்றன.

இத்தகைய புதுநோக்கில் பிரிட்டிஷ் ஆட்சியைக் கையாள வேண்டிய நிலை ஏற்பட்டதால் பகுதிகள் II III-க்கு இடையே

சில மாறுதல்களையும் புகுத்த வேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் இந்தியா என்பதைவிட பிரிட்டிஷ் ஆட்சிக்கால இந்திய வரலாறு என்ற நோக்கில் பகுதி III உருப் பெற வேண்டியிருந்ததால், இந்திய நாட்டு மன்னர் ஆண்டு வந்த இந்தியாவைப் பற்றிய வரலாற்றில் அதிகக் கவனம் செலுத்த வேண்டியதாயிற்று. இதனால் இரண்டாம் பகுதியில் சில செய்திகளை அறவே நீக்கி விடுவதும், அல்லது மூன்றாம் பகுதியில் சில செய்திகளை மீண்டும் எடுத்துரைப்பதும் தேவையாயின. முகலாய, பிரிட்டிஷ் ஆட்சிக் காலங்களை இணைத்துவிடும் எண்ணம் எனக்குண்டு. இந்தியா மற்றும் பிரிட்டிஷ் நூல் இழைகளை ஒருங்கு சேர்த்து நன்முறையில் நெசவு செய்வதும் மிகஇன்றியமையாததாகவும் தோன்றியது. இதனால் சில செய்திகளை மீண்டும் எடுத்துரைக்க வேண்டிய அவசியமும், சில தலைப்புகளைப் புனராய்வு செய்ய வேண்டிய நிலையும் ஏற்பட்டன. பொருத்தமான ஓர் வரலாற்று நோக்கு இவைகளாலேயே ஏற்பட வேண்டியிருந்தது. மராட்டியர், பதினெட்டாம் நூற்றாண்டில் ஆப்கானியர், சீக்கியர், முகலாய சாம்ராச்சியத்தின் இறுதிக் காலக் காட்சிகள், ஆகிய வரலாறுகளைக் கையாளும் போது, இத்தன்மையான குணாதிசயங்கள் மிக நன்றாகப் புலப்படும்.

ஒவ்வொரு அதிகாரத்தின் இறுதியிலும் பொருத்தமுடைய மேற்கோள் நூல்களைப் பற்றிய சிறு குறிப்புகள் வழங்குகின்ற முறை நூல் முழுவதும் கையாளப்பட்டுள்ளது. கால வரன் முறைகளைக் குறிக்கும் அட்டவணைகளும் பகுதி I லும் II லும் அளிக்கப்படுகின்றன. பகுதி மூன்றில் சம காலச் செய்திகள் அடங்கிய காலவரன் முறை அட்டவணை, நான்கு பகுதிகளுக்குமாக (பகுதிகள் VII—X) ஒருங்கு சேர்த்து அப்பாகத்தின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. வரை படங்களும், விளக்கச் சித்திரங்களும், மீண்டும் பரிசோதிக்கப் பட்டிருக்கின்றன.

இந்தியரின் பெயர்களையும், சில சொற்களையும் ஆங்கிலத்தில் வடிக்கின்ற முயற்சி, சற்றுக் கடினமாகவே காணப்படுகிறது. ஏராளமான பொதுமக்கள் படித்துணர வேண்டுமென்ற எண்ணத்துடன் உருவாகின்ற நூலில், பெயர்களும், பிற கலைச்சொற்களும் தெளிவாக அமைந்திருக்கவேண்டும். அதே சமயத்தில் இலக்கண சுத்தமும் காப்பாற்றப்பட வேண்டும். இந்தியச் சொற்கள் பல, ஆங்கில மொழி இலக்கியத்தோடு இரண்டறக் கலந்து விட்டன. அவைகளை இலக்கண சுத்தமாக எழுதும் போது, வழக்கிலிருக்கின்ற சொல் முறைகளையும் கையாளவேண்டியிருப்பதால், பல சிரமங்கள் விளைகின்றன. இவ்வாறே

'மிராட்' என்பதற்கு 'மீரட்' என்றும், 'உஃகா' என்பதற்கு 'ஹுகா' என்றும் 'தாக்' என்பதற்குத் 'துக்' என்றும் கையாள வேண்டியிருக்கிறது. இறுதியாகக் குறித்துள்ள வார்த்தையில் மேலும் ஒரு சிக்கல் உள்ளது. எழுத்துச் சேர்க்கை மாறுவதோடு பொருளும் மாறி விடுகிறது (பொதுவில் கொள்ளைக் காரன் என்பதற்குப் பதிலாக, சில சடங்கு முறைகளின்படி கொலை செய்பவன்). நாம் கையாண்டிருக்கும் முறை வருமாறு: I மற்றும் II ஆம் பகுதிகளில் பொதுவாக ஏற்கப்படுகின்ற ஹண்டேரியன் முறையில் எழுத்துச் சேர்த்து, உச்சரிப்பதற்கேற்ற அடையாளக் குறிகளுடன் மொழிமாற்றம் செய்யப்பட்டிருக்கிறது. வழக்கிலுள்ள 'அக்பர்' 'பெங்கால்' போன்ற சில சொற்களே இதற்கு விதி விலக்காகின்றன. பகுதி III–ல் இச்சிக்கல் மேலும் அதிகரிக்கிறது. ஏராளமான இந்தியச் சொற்கள் ஆங்கில இலக்கியத்திலேயே கையாளப் படுகின்றன. தெளிவாகத் தெரிய வேண்டுமென்பதைக் கருதி இலக்கண சுத்தம் ஓரளவு இங்கு கைவிடப்படுகிறது. ஹண்டேரியன் முறை, பொதுவில் கடைப்பிடிக்கப்படுகிறதென்றாலும், உச்சரிப்பிற்கு உதவுகின்ற அடையாளக் குறிகள் அகற்றப்பட்டு விட்டன. 'கான்பூர்', 'லக்நௌ' ஆகிய வழக்கிலுள்ள சொற்களில் எவ்வித மாறுதலும் இல்லை. ஆங்கிலத்தில் வடிக்கின்ற போது பொருளும், எழுத்துச் சேர்க்கையும் மாறுபடுகின்ற சொற்களில், மிகக் கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது. உதாரணம் 'தக்'. இந்தியச் சொற்களை, ஆக்ஸ்போர்ட் அகராதியின் விதி முறைகளைப் பின்பற்றியே ஆங்கிலத்தில் வடித்திருக்கின்றோம்.

பி. ஈ. ராபர்ட்ஸ் என்பவர் இயற்றியுள்ள 'பிரிட்டிஷ் இந்திய வரலாறு' என்ற நூலின் மூன்றாவது பதிப்பிற்கு சீரமைக்கப் பெற்ற பொருள் பகுதி X ல் அதிகாரம் 6—9 வரையுள்ள பக்கங்களில் சேர்க்கப்பட்டுள்ளது.

மூன்றும் பகுதியைத் தொகுப்பதில் நான் பலரது உதவியைக் கோரி அடைந்துள்ளேன். குறிப்பாக என் மனைவிக்கு நன்றி கூறக் கடன்பட்டுள்ளேன். அவள் எனக்களித்த ஊக்கமும் நுண்ணறிவு மிக்க அவளது மதிப்பீடுகளும், இந்நூலைத் தொகுப்பதில் எனக்கு மிகவும் உதவியிருக்கின்றன.

ஜூன் 1957 டி. ஜி. பி. எஸ்.

# பொருளடக்கம்

## பிரிவு I

பக்கம்

பகுதி III

## விளக்கப் படங்கள்

### வரை படங்கள்



### புகைப்படங்கள்

# தோற்றுவாய்

## 1. கண்ணோட்டம் (General)

பூகோள நிலப்பரப்பை விளக்கும் படங்கள் 1947ஆம் ஆண்டு இந்தியப் பிரிவினைக்கு முன்புள்ள எந்த நிலப்பகுதியை 'இந்தியா' எனக் குறிக்கின்றனவோ, அப் பகுதியின் வரலாற்றையே இந் நூல் விரித்துரைக்கும். அந் நிலப்பகுதி வடக்கு, வடமேற்கு, வடகிழக்குத் திசைகளில் மலைகளாலும், பிறவிடங்களில் கடலாலும் சூழப்பட்டிருப்பது தெளிவாக விளங்கும். பர்மா பகுதியும் சில காலம் இவ்விந்திய ஆட்சியுள் அடங்கியிருந்ததெனினும், இந்திய நாட்டுடன் அதை இணைத்துப் பேசுவது பொருத்தமற்றதெனத் தென்படுகிறது. இந்தியத் தொடர்பு பர்மாவிற்குப் பத்தொன்பதாம் நூற்றாண்டிற்குமேல் அதிகமாக ஏற்பட்டதெனினும், பர்மிய நாட்டு வரலாற்றைத் தனியானதொரு பகுதியாகக் கருதுவது முறையாகும். சிங்களம் இந்திய உபகண்ட நிலப்பகுதியிலிருந்து பிளவுபட்டு நிற்கிறதென்றாலும், அதற்கு இந்திய நாட்டுடன் நெருங்கிய தொடர்பு உண்டு. ஆங்காங்கே இவ்விரு நாடுகளிடையுள்ள தொடர்புகளை எடுத்துரைக்கவேண்டிய அவசியமேற்படுகிறதெனினும், சிங்கள அரசியல் வரலாற்றை வேறுபடுத்தித் தனியானதொரு பகுதியாகக் கற்பதே மிகவும் சிறந்தது.

### பரந்த நிலப்பகுதி (Vast Extent of Area)

இந்திய நாட்டுப் புவியியலையும், நில, நீர் வளங்களையும் விரித்துரைக்கும் நூல்கள் பல உண்டு. அவ் விஷயங்களை, இங்கு மீண்டும் எடுத்துரைக்க வேண்டுமென்பதில்லை. 'பூவியலும், கால வரன்முறையில் செய்திகளைத் தொகுப்பதும் (Chronology) வரலாற்றின் இரு கண்களாகச் சூரியசந்திரர்போல் விளங்குகின்றன' என ரிச்சர்ட் ஹாக்லியுட் (Richard Hakluyt) வெகு

காலத்திற்கு முன்னரே கூறியுள்ளார். ஆகையால், வரலாற்றுடன் நேரிடைத் தொடர்புகொண்ட பூவியலைப்பற்றிய ஒருசில கருத்துகளைக் கூறவேண்டிய தேவையுமுண்டு. இந்திய நாடு மிகப் பரந்து விளங்குவதால், அதை ஓர் உபகண்டமெனக் கருதுவது மரபாயிருக்கிறது. இந் நாட்டுப் பூவியல் சிறப்புகளில் 'விஸ்தீரணம்' (large extent) தலைமையானது. இந் நாட்டின் கடற்கரை ஏறக்குறைய 3,400 மைல் நீளமுள்ளது. 1,600 மைல் நீளமுள்ள மலைத்தொடர்கள் வடதிக்கிலுள்ளன. மக்கள் தொகை 400 மில்லியனுக்கும் சற்று அதிகமாகவே காணப்படுகிறது. இத்துணைச் சிறப்புகள் வாய்ந்த இந்திய வரலாறு நீண்டதாகவும் நுண்ணியதாகவும் விளங்குவது இயற்கையே அல்லவா? பிற சிறு நாட்டு வரலாறுகளை எடுத்துரைக்கும் போது கையாளப்படும் 'விரித்துரைத்தல்' என்னும் முறையில் இந்திய வரலாற்றையும் சுலபமாக எடுத்துரைக்கலாம் எனக் கருதுவது பேதமையாகும். இந்திய நாட்டைப்பற்றிய ஏராளமான செய்திகள் யாவற்றையும் நூலில் புகுத்தும் நோக்கத்தை விடுத்து, தெளிவான முக்கியச் செய்திகளைத் தொகுத்தளிப்பதே நூலாசிரியன் மேற்கொள்ளக்கூடிய சீரிய முயற்சியாகும்.

### உள்நாட்டுப் பகுதியும் தீபகற்பப் பகுதியும் (Continental and Peninsular Regions)

பரந்த உள்நாட்டுப் பகுதியும், வெப்ப மண்டலங்களும், மித உஷ்ணப் பகுதிகளும், சற்றேறக் குறைய அதே பரப்புள்ள தீபகற்பப் பகுதியும் இந்திய நாட்டில் அடங்கியுள்ளவை என்பது புவியியல் குணதிசயங்களில் கவனத்திற்குரியதாகும். இந் நாட்டு வரலாற்றுடன் இப் புவியியல் தன்மை நேரிடைத் தொடர்பு கொண்டது.

### ஐயத்திற்கிடமற்ற மூன்று தனிப் பிரிவுகள் (Three Territorial Compartments)

புவியியல் அமைப்புகளால் இந்திய நாடு பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை ஐயமற்ற மூன்று தனிப் பிரிவுகளாகப் பிளவுபட்டிருந்ததெனலாம். கொங்காணம், இமாலயப் பகுதி போன்ற பிற சிறு பகுதிகளும் இருந்தன. முப்பெருந் தனிப் பகுதிகள் வருமாறு: (1) வடக்கிலுள்ள சிந்து, கங்கை நதிகளின் சமவெளிகள்; (2) நர்மதை ஆற்றிற்குத் தெற்கிலும், துங்கபத்திரா, கிருஷ்ணா ஆறுகளின் வடக்கிலுமுள்ள தக்காண பீடபூமி; (3) இந் நதிகளுக்குமப்பால் தென்கோடியிலுள்ள மூவேந்தர்களின் ஆட்சியிலடங்கிய 'தமிழ்நாடு'. பொதுவாகப் பேசுமிடத்து, ஒவ்வொரு பகுதிக்கும் தனித் தனியான வரலாறு

உண்டு. ஒவ்வொன்றும் சிக்கல் நிறைந்த, சுவையான தனி வரலாறாக விளங்கும். இம் மூன்று பகுதிகளின் வரலாறுகளுக்கும் தொடர்பேற்படுத்தும் பொதுச் செய்திகள் குறைந்த அளவிலேயே காணப்படுகின்றன.

**வடபகுதியின் சிறப்பியல்** (Dominance of the North)

முற்காலத்தில் 'ஆரியாவர்த்தம்' என்றும், தற்காலத்தில் 'இந்துஸ்தானம்' என்றும் வழங்கப்பெறும் வடக்குச் சமவெளிகளில், பேரரசுகள் பல தோன்றித் தழைத்தோங்கியிருந்தன. வெளியுலகினருக்குக் களிப்பூட்டும் சுவை மிக்க காட்சிகள் நிறைந்த அரசியல் அரங்கமாக இப் பகுதி விளங்கிவருகிறது. பனியுருகிப் பாயும் அகன்ற ஆறுகளின் நீர்வளமும், பொன் விளைவிக்கவல்ல சமவெளிகளின் நிலவளமும் பண்டைக் காலந் தொட்டுப் பல்லாயிரக் கணக்கான மக்களைக் கவர்ந்துள்ளன. நாட்டின் தலைவாயில் என்றுமே மூடிக்கிடந்ததில்லை. குறிப்பாக, வடமேற்கிலுள்ள தலைவாயில்கள் வழியே புகுந்த ஆர்வமிக்க அன்னியப் படைத்தலைவர் பலர், பேரரசுகளைச் சமைத்து நெடுங் காலம் அரசு செலுத்தினர். தெற்கிலுள்ள வெப்ப மண்டலத் தீபகற்பப் பகுதி, பிற நாட்டினருடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்ததெனினும், இயற்கையில் தனிமை எய்திய இப் பகுதி அந்நியரின் கவனத்தை அதிகமாகக் கவரவில்லை; இப் பகுதியினரும் அந்நியருடன் அதிக உறவாடியதுமில்லை. எனவே, இப் பகுதியின் வரலாறு தனிப்பட்டதொன்றாக விளங்கிவருகிறது. இந்திய வரலாற்றாசிரியனின் கவனத்தை வடபகுதியே பெரும்பாலும் கவருவதாகிறது. தக்கணமும், தென்கோடியிலுள்ள தமிழ்நாடும் அவனது கவனத்தையும் கருத்தையும் அதிகமாகக் கவருவதில்லை.

தெற்கில் தோன்றிய எந்த நாடும் வடபகுதியைக் கைப்பற்றி ஆட்சி செய்ததாக வரலாறு இல்லை. பேராசை கொண்ட வடநாட்டு மன்னர் சிலர், எல்லைக் கோடான நர்மதைக்கும் தெற்கில் அரசியல் ஆதிக்கம் பெற்று ஆட்சி செலுத்தியுள்ளனர். பதினெட்டாம் நூற்றாண்டில் தீபகற்ப இந்தியாவைத் தனது கேந்திரமாகக் கொண்டு ஃபிரஞ்சு சாம்ராஜ்யம் ஏற்படுத்த எண்ணிய 'டூப்ளே' யின் (Dupleix) முயற்சி தோல்வியுற்றது. வளமிக்க வங்காளத்தையும் கங்கைச் சமவெளியையும் கைப்பற்றியதன் விளைவாகவே ஆங்கிலேயர் முயற்சி கைகூடியது எனலாம். பின்னொரு சமயம் பஞ்சாபைக் கைப்பற்ற விரும்பிய ஆங்கிலேயரின் முயற்சியும், சிந்து நதியில் தடையின்றிக் கப்பல் செலுத்தும் உரிமையை ஆங்கிலேயர் பெற்றிருந்ததாலேயே வெற்றி பெற்

| தொழிலாளர் எண்ணிக்கை | இறுதிநிலை ஆக்கம் (ஒரு வாரத்திற்கு) |
|---|---|
| 9 | 27 |
| 10 | 24 |
| 11 | 20 |

இந்த நிறுவனம் பின்வரும் எந்தச் சூழ்நிலையிலும் சமநிலையில் இயங்கிக்கொண்டிருக்கும் :

| | உற்பத்தி விலைகள் (ஓர் அலகு) | கூலிகள் (ஒரு வாரத்திற்கு) | அமர்த்தப்பட்ட தொழிலாளர் எண்ணிக்கை |
|---|---|---|---|
| (1) | 10 ஷில்லிங் | 13 பவு. 10 ஷி. | 9 பேர் |
| (2) | 10 ஷில்லிங் | 12 பவு. | 10 பேர் |
| (3) | 10 ஷில்லிங் | 10 பவு. | 11 பேர் |
| (4) | 4 ஷில். 6 பென்னி | 12 பவு. | 9 பேர் |
| (5) | 12 ஷில்லிங் | 12 பவு. | 11 பேர் |

உற்பத்திக்குரிய பொருள் விலை விகிதங்கள் ஒரே நிலையில் இருக்குமானால், இந்த விலைகள் குறையும்பொழுது ஒரு நிறுவனம் இதர சாதனங்களில் எதையும் மிகுதியாகக் கூட்டிக்கொள்ளும். இந்த விலைகள் கூடும்பொழுது மேற்குறித்த சாதனங்களையும் குறைத்துக்கொள்ளும். மாறாக, உற்பத்தி சாதனங்கட்குரிய ஊதிய விகிதங்கள் ஒரே நிலையில் இருக்குமானால், இதன் உற்பத்திப் பொருள் விலைகள் உயரும்பொழுது மிகுந்த சாதனங்களையும், விலைகள் குறையும்பொழுது குறைந்த சாதனங்களையும் மேற்கொள்ளும்.

ஒரு குறிப்பிட்ட துறைச் சாதனத்தைமட்டும் கொண்டு தயாரிக்கப்படும் உற்பத்திப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை, அந்தச் சாதனத்தின் ஊதியத்தை உயர்த்திவிடுகிறது. (இந்தக் குறிப்பிட்ட துறைச் சாதனம், இதர தொழில்களை நோக்கும்பொழுது, அவற்றைவிட இங்கே மிகுந்த விகிதாசாரத்தில் பயன்படுத்தப்படக் கூடும்.) போர்க்கருவிகள் நிறையவேண்டும் என்ற தேவை மிகுதி, எஃகு தொழிலாளர்கள், இயந்திரப் பொறியாளர்கள் ஆகியோரின் கூலியை உயர்த்த முனைகிறது; எஃகின் விலையையும் கூட்டி விடுகிறது. நிறைய வீட்டு வசதிகள் வேண்டும் என்ற தேவை மிகும்பொழுது அது கொத்தர்களின் கூலியையும், கட்டடப் பொருள்களின் விலையையும் உயர்த்திவிடுகிறது. உணவு உதவிக் கொடைகள் அளிப்பது (subsidies) நில வாரங்களை உயர்த்தி விடுகின்றது.

போக்கு மாறுபட்டிருந்திருக்க வேண்டுமெனச் சொல்வதைத் தவிர மிகைப்படுத்திக் கூறுவதற்கில்லை. இதைப்போலவே, வேதகால ஆறுகள், சில முனிவர்களின் பெயரால் அழைக்கப் படுகின்றன. அவைகள் தற்போதில்லை. வருணனைகளிலிருந்து அவ்வாறுகளின் தன்மைகளை அறிவதோடு, அவற்றின் போக்கை யும் ஒருவாறு ஊகித்தறியக்கூடும். அவை பலதரப்பட்டவை யாக இருந்திருக்க வேண்டுமென்பதையும் அனுபவ வாயிலாக ஓரளவு அறியக்கூடும். சொகுசான நாற்காலிகளில் அமர்ந்து, நவீன தேசப்படப் புத்தகங்களைப் புரட்டி மதிப்புரை வழங்கி வரும் நூலாசிரியர்கள், நாம் காட்டிய உண்மைகளையெல்லாம் பாராட்டுவதற்குச் சித்தமாக இல்லை. மறுக்கமுடியாத அவ் வுண்மைகள் அவர்களுக்கு வேம்பாக இருப்பினும் வியப்பொன்று மில்லை. ஆதி இஸ்லாமியப் படையெடுப்புக் காலங்களிலும் ஆற்றுப் போக்குகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. அவ் வுண்மைகளையெல்லாம் சமகால வரலாற்றாசிரியர்கள் எடுத் தியம்புகின்றனர். இடைக்காலங்களில் தோன்றியுள்ள மாறுதல் களையும், அவைகளின் தன்மைகளையும் எப்பொழுதும் மனத்தி லிருத்திக்கொள்ளவேண்டும். பண்டைக் கால ஆற்றுத் தொகுதி களின் ஒரு பிரிவெனக் கருதப்படும் 'ஹக்ரா அல்லது வாஹிந்தா ஆறு' (Hakra or Wahindah river) கல்லிடைப் பிறந்து 'பகவல்பூர்' (Bahawalpur) வழியாக ஓடியிருக்கவேண்டும். காலப்போக்கில் வழக்கொழிந்து பதினெட்டாம் நூற்றாண்டு வரை சிறுகச் சிறுக மறைந்திருக்கவேண்டும். மண்மேடுகள் பல மறைந்த மாநகரங்களின் சிறப்புகளுக்குச் சான்று பகரும் ஊமைச் சாட்சிகளாக இருக்கின்றன. ஜீவாம்ருதமென விளங்கிய ஆறுகள் தங்கள் போக்கைத் திடீரென மாற்றிக்கொண்டதால், பொலிவிழந்து சிறப்புக் குன்றிய நகரங்களின் தொகை எண்ணி லடங்காது. இந்திய ஆறுகளின் விசித்திரப் பாங்கை விரித் துரைத்துச் சுவைமிக்க பெரிய நூலொன்று வரையலாகும்.

**நகரங்கள் அமைந்த இடங்களின் இயல்புகள் (Position of the Cities)**

மேற்கூறிய நம் கருத்தை வலுப்படுத்தும் மற்றுமொரு குறிப்புமுண்டு. பண்டை நாட்களில் நதிக்கரையோரங்களிலேயே முக்கிய நகரங்களை எழுப்பினர். பெரும்பாலான நகரங்கள் இரு நதிகள் சேரும்போது ஏற்படுகின்ற இடைநிலப் பகுதிகளில் முகத்துவாரத்திற்கு அருகில் தோன்றி வளர்ந்தன. இதை விளக்குவதற்குப் பல மேற்கோள்கள் எடுத்துரைக்கலாமெனினும், ஒன்றே போதுமானது. அக் காலங்களில் 'பாடலிபுத்திரம்' என் றும், தற்காலங்களில் 'பாட்னா' என்றும் வழங்கப்பெறும் நகரம் 'சான்' (Son), 'கங்கை' (Ganges) நதிகளின் ஆற்றிடைப் பகுதியில்

அமைந்துள்ளது. ஆற்றுநீரால் இயற்கையில் நகரம் பாதுகாக்கப் படுவதை நினைவில் கொள்ளவேண்டும். தற்போதுள்ள நகரம், கூடலுக்குச் (confluence) சுமார் பன்னிரண்டு மைல் தொலைவில் அமைந்துள்ளது. எனவே, முற்காலத்திலிருந்த பாதுகாப்பான சூழ்நிலை மறைந்துவிட்டதெனலாம். இந் நகரத்தைக் குறித்து உள்நாட்டு, மற்றும் அந்நிய நாட்டுச் சமகால வரலாற்று அறிஞர்கள் விடுத்துச் சென்றுள்ள குறிப்புகளை மதிப்பிடும் தற்கால வரலாற்றாசிரியர்கள் நாம் குறித்த அடிப்படைச் செய்தியை மறந்துவிடுவதால், பெருந் தவறுகளை இழைத்துவிடுகின்றனர்.

## நிலப்பரப்பில் ஏற்படும் மாறுதல்கள் (Changes of the Land)

கடற்கரை கடலலைகளால் மாற்றப்படுவதும், நிலப்பரப்பில் மேடுகளும் பள்ளங்களும் தோன்றி மறைவதும் காலப்போக்கில் ஏற்படுகின்ற சாதாரண மாறுதல்களாகும். இத்தன்மையான மாறுதல்கள் தோன்றுவது இயற்கை என்ற உண்மையைப் புறக்கணித்து வரலாறு எழுத முயன்றால், வெற்றி கிடைக்காது; மாபெருந் தவறுகள் பல இழைக்க நேருமென்பதை ஆசிரியன் உணரவேண்டும். உதாரணமாக, நியார்க்கசு (Nearchos) என்ற கிரேக்கனின் பிரயாணத்தை நன்கு அறிந்து சுவைக்கவேண்டுமென்னின், கிரேக்க ஆசிரியர்கள் விடுத்துள்ள புவியியற் கூறுகளையும், நவீன புவியியற் கருத்துக்களையும் நன்கு உணர்ந்து அதைக் கற்கவேண்டும். பண்டைய ஆசிரியர் தரும் செய்திகள் சில, மேல்நோக்கில் தவறுகளெனத் தோன்றலாகும். அவர்கள் கூறிச் சென்ற காலந்தொட்டு நிகழ்ந்திருக்கும் புவியியல் மாறுதல்களைக் கருத்தில்கொண்டு ஊன்றிநோக்கும்போது, அவைகள் பெரும் உண்மைகளே என்பது புலனாகும். நெல்லை மாவட்டத்திலுள்ள 'கொற்கை', 'காயல்' போன்ற வணிக நகரங்கள் முற்காலத்தில் மிக்க புகழுடன் விளங்கின என்பதை நாமறிவோம். தற்போது கடற்கரையினின்றும் மிக்க தொலைவில் அவைகள் மண்ணோடு மண்ணாகப் பொலிவிழந்து புதைந்து நிற்கின்றன. காலப் போக்கில் கடற்கரையின் மட்டம் உயர்ந்துவிட்டதால், அந் நகரங்களுக்கு இக் கதி ஏற்பட்டதென்னும் உண்மையைப் புவியியல் மாறுதல்களை மனத்திற்கொள்ளாது எவ்வாறு அறிய இயலும்? அதே பகுதியில், வேறு சில இடங்களில், நாம் குறித்த வாணிப நகரங்களுக்கு அருகிலேயே இதற்கு நேர்மாறான விபத்துகள் ஏற்பட்டுள்ளன. கடல் பொங்கியெழுந்து நிலப் பகுதிகளை விழுங்கியிருக்கிறது. நவீன பூகோளப் படங்கள் இத்தகைய அரிய உண்மைகளையெல்லாம் நமக்கு எடுத்துணர்த்துவதில்லை. அதன் மாயையை அறிந்த வரலாற்று அறிஞர்களே பண்டைய வரலாற்றை நன்கு எடுத்தியம்ப வல்லவர்களாவர். ஜெர்மானியர்,

மற்றும் பல பேராசிரியர்கள் இப் பேருண்மையை மறந்து, தங்கள் பணியைச் சரிவர ஆற்ற இயலாது தோல்வியுற்றிருக்கின்றனர். வரலாறு வரைவது என் தலையாய தொழிலன்று; ஒழிந்த நேரங்களில் பொழுதுபோக்காக இப் பணியில் நான் ஈடுபட்டுவருகிறேன். எனவே, இவ் விஷயத்தை விரித்துரைக்க விரும்பவில்லை.

## இந்திய வரலாற்றுக் காட்சிகள் (The Scenes of Indian History)

இயற்கைச் சக்திகளால் மூன்றாகப் பிரிவுற்றுக் காணப்படும் ஒவ்வொரு பகுதியிலும் கவனத்துக்குரிய வரலாற்று நிகழ்ச்சிகள் பல காணக்கிடக்கின்றன. இந்துஸ்தானம், தக்காணம், தமிழகம் என்ற மூன்று பிரிவுகளும் பத்தொன்பதாம் நூற்றாண்டு இடைப்பகுதிவரையிலும் தனித்தனிப் பகுதிகளாகவே கருதப்படக்கூடியவை எனினும், அக்காலவரைக்குப் பின் இயற்கை எல்லைகளைத் தகர்த்துத் தனிமையை அகற்றி, முப்பெரும் பகுதிகளையும் இணைக்கும் பல புதிய கருத்துகள் தோன்றியுள்ளன. வல்லமையுள்ள கங்கை, சிந்து நதிகளின் குறுக்கே மாபெரும் பாலங்களமைத்ததைப் போலவே, ஒவ்வொரு சிறு வாய்க்காலையும் கடப்பதற்கு ஏற்ற முறையில் ஆறு அடி நீளமுள்ள சிறு பாலங்களும் அமைக்கப்பெற்றுள்ளன. கேட்பாரற்றுக் கிடந்த 'காந்த்வானா' (Gondwana)வும், நர்மதை நதிக்கரையோரங்களும், அருகிலுள்ள கானகங்களும் அச்சம் விளைவிக்கும் தீய சக்திகளின் இரகசிய மறைவிடங்களாக இனியும் விளங்க இயலாது; மேற்கு மலைத்தொடரிலுள்ள செங்குத்தான கணவாய்கள் பிரிட்டிஷ் படைவீரருக்குத் தீராப் பிரச்சினைகளாக இனியும் இல்லை; ரெயில் பாலங்களும் பெருவழிச் சாலைகளும் அவைகளைத் தற்போது இணைத்துவிட்டன. பம்பாய்த் துறைமுகமும் இன்றுபோல் அன்றுமிருந்ததெனினும், மலைத்தொடர்களும், சேறுநிறைந்த நீர்த்தேக்கங்களும், நிலப்பிளவுகளும் சூழ்ந்து பயனற்றதாகவே விளங்கியிருந்தது.

## கோட்டைகள் (Fortresses)

வளர்ந்துவரும் விஞ்ஞான அறிவு நதிகள், மலைத்தொடர்கள் காடுகள் போன்ற இயற்கையிலமைந்த எல்லைக் கோடுகளை மட்டிலும் தகர்த்துவிடுவதோடு நின்றுவிடவில்லை. பண்டைக் காலக் கோட்டைகள் சில அழிவற்றவைகளெனப் புகழ் பெற்றிருந்தன. ஏராளமான பொருளை இலஞ்சமாக வாரி வழங்கி, அவைகளைக் கைப்பற்றுவதே வழக்கமாயிருந்தது; ஏனெனில், போரிட்டு அவைகளை எளிதில் கைப்பற்ற இய

லாது. விஞ்ஞானம் அம் முறையை அடியோடு மாற்றியது. கோட்டைகளின் மதிப்புக் குறைந்துவிட்டது. காண்டேஷில் (Khandesh) உள்ள 'அசிர்கார்' (Asirgarh) கோட்டை, பதினறு பதினேழாவது நூற்றூண்டுகளில் உலக மகா அதிசயங்களில் ஒன்ருக விளங்கியது. அதினும் வலிமையுள்ள கோட்டையைக் காண்பதரிதாயிருந்தது. ஏனெனில், அக்பர் சக்கரவர்த்தியின் படைபலம் அதன் முன் பயனற்றிருந்தது; பண மூட்டையின் வலிமையாலேயே அக்பர் கோட்டையைக் கைப்பற்றினன். இன்று மருந்திற்கும் ஒரு காவலாளியின்றி, அக் கோட்டை பாழடைந்து நிற்கிறது. குவாலியர் (Gwalior) கோட்டையை 'சிந்தியா'வின் (Sindia) சுவாதீனத்திற்கே விட்டுவிடுவதென்று லார்டு டஃப்ரின் (Dufferin) தீர்மானித்தபோது, பேரரசின் பாதுகாப்பிற்குக் குந்தகமெதுவுமின்றி அது நிறைவேறியது. தக்காணத்தின் உயர்ந்த மலைத்தொடர்களின் உச்சியிலமைந்திருந்த கோட்டைகளைக் கைவசப்படுத்துவதற்கு ஔரங்கசீப் எவ்வாறு தவங்கிடந்தான் என்பதை இன்றும் நாம் கண்டறியலாம். இந்து, முஸ்லிம் மன்னர்களிடையே நிகழ்ந்த போர்களில், கேந்திரங்களாக விளங்கிய பல கோட்டைகள் ஒளியிழந்து விட்டன. அவைகளை எவரும் திரும்பிப் பார்ப்பதில்லை. கோட்டை கொத்தளங்களின் முற்றுகைகளை வர்ணிப்பதிலேயே நேரத்தைச் செலவு செய்து பண்டைய வரலாறுகள் எழுதப் பெற்றுள்ளன. அத்தகைய முயற்சி வழக்கொழிந்தது; மீண்டும் எழப்போவதில்லை. ஆற்றல் மிக்க படைத்தலைவர்கள் தற்போது ரெயில் நிலையத்தைப்பற்றிய நினைவில் அதிக கவனம் செலுத்துவரேயன்றி, எட்டாத கோட்டைகளைப்பற்றி எண்ணமிடுவதில்லை.

**வடவர் வரலாறு (The Northern Record)**

வடநாட்டு வரலாற்றில் அதிக கவனம் செலுத்தவேண்டிய தேவையை முன்னர் எடுத்துரைத்தோம். தீபகற்பப் பகுதியைக் காட்டிலும் வடபகுதிகளில் தெளிவான வரலாற்றுச் செய்திகள் காணக் கிடைக்கின்றன வென்பது மற்றுமொரு காரணமாகும். கிறிஸ்து சகாப்தம் தொடங்குவதற்கு முன்னுள்ள தென்னிந்திய வரலாறு தெளிவுற்றுக் காணப்படுகிறது. இந்துஸ்தான வரலாற்றை, கிறிஸ்து சகாப்தத்திற்குப் பன்னிரண்டு நூற்றூண்டுகளுக்கு முன்பிருந்தே தெளிவாக நாம் அறியலாகும். தென்னிந்திய வரலாற்றைத் தெளிவுபடுத்தும் சான்றுகள் கிடைப்பது அருமையாயிருப்பதால். அவ் வரலாறு தொடர்ச்சியற்றுக் குறைபாடுள்ளதாக விளங்குகிறது. குறைபாடுகளை நீக்கி முழுமையான லரலாறு வரைவது மிகவும் கடினம்.

### கடலாதிக்கம் (Sea-power)

1498ஆம் ஆண்டில் மூன்று சிறிய கப்பல்களுடன் வாஸ்கோ-ட-காமா (Vasco-da-Gama) கள்ளிக்கோட்டையில் வந்திறங்கினன். கடல் மார்க்கமாக இந் நாட்டை நோக்கி வரும் துணிகர மாலுமிகளுக்கு வழிகாட்டியாக அமைந்ததுடன், இந்திய வரலாற்றிலும் அவன் வருகை புரட்சிகரமான மாறுதலை உண்டாக்கியது. ஆதியில், கடல் வழியாக இந்தியக் கடற்கரைகளில் குடிபுகுந்தவர்களுக்கு வாணிகம் ஒன்றே நோக்கமாயிருந்தது. இந் நாட்டில் நிலையாகக் குடிபுகவேண்டுமென்றோ, அரசியல் ஆதிக்கம் பெறவேண்டுமென்றோ அவர்கள் எண்ணவில்லை. முதலாவதாகக் குடியேறிய போர்த்துகீசியர், அவர்களைப் பின்தொடர்ந்த டச்சுக்காரர், ஃபிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகியோருக்கு எவ்வாறு அரசியலாதிக்கம் பெறுவதில் வழி காட்டினரென்றும், பிரிட்டிஷ் சாம்ராச்சியம் சமைப்பது எவ்வாறு சாத்தியமாயிற்றென்றும் இங்கு எடுத்துரைக்க வேண்டுமென்பதில்லை. அரசியல் நோக்கில் வடமேற்குத் திக்கிலுள்ள கணவாய்களின் செல்வாக்குக் குறைந்துவிட்டது என்பதேபோல், பம்பாய், கராச்சிபோன்ற துறைமுகங்களின் செல்வாக்கு உயர்ந்துவிட்டது.

### முடிவற்ற பன்மைக் கூறு (Endless Diversity)

இன, மொழி அடிப்படைகளில் வேறுபட்ட பகுதிகள் (பன்மை) பல இந்திய நாட்டிலுண்டு என்பதில் ஐயமில்லை. இவ் வேறுபாடுகளின் காரணமாகவே இந் நாட்டு வரலாற்றைப் பற்றிய பொறுப்பற்ற வதந்திகள் பல எழுந்தன. வெப்பு, மழை உயர்ந்தும் தாழ்ந்துமுள்ள பல்வகை நிலப்பகுதிகள், வெவ்வேறு சீதோஷ்ண நிலை ஆகியவை இந் நாட்டு இயற்கையமைப்பின் முக்கிய அம்சங்களாக விளங்குகின்றன. சீதோஷ்ண நிலையைப் பொறுத்துத் தாவர இனங்களும், பலவகை மிருகங்களும் காணப்படுவதும் இயல்பேயாகும். பண்பற்ற காட்டுமிராண்டியிலிருந்து பண்பு மிக்க வேதாந்திவரை இந் நாட்டு மக்களினத்தில் அமைந்து, நாடு ஓர் மக்களினக் கண்காட்சிசாலையாக விளங்கிவருகிறது. இனத்தாலும், மொழியாலும், நடையுடைபாவனைகளாலும் இந் நாடு பிளவுபட்டு விளங்குவதற்கு, பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்குமுன் அரசியலில் ஒற்றுமையின்றி இந் நாடு பல பகுதிகளாகப் பிரிந்து நின்றமையே காரணமாகும். கி.மு. நான்காவது நூற்றாண்டில் மெகாஸ்தனீசின் செவிக்கெட்டிய இராச்சியங்களின் மொத்த எண்ணிக்கை நூற்றுப் பதினெட்டேயாகுமெனினும்; அதற்கும் சற்று அதிகமாகவே இருந்திருக்கக்கூடும். ஒவ்வொரு நூற்

ருண்டிலிருந்த அரசர்களின் கூட்டங்களும், அரசுகளின் எண்ணிக்கையும் கணக்கிலடங்கா. அவ்வப்போது வலிமை மிக்க சாம்ராச்சியங்கள் எழுந்து, தாற்காலிகமான அரசியலொற்றுமையை ஏற்படுத்திவந்தன. அத்தகைய முயற்சிகள் மிகக் குறைவாகவே காணக்கிடக்கின்றன. அரசியலொற்றுமை ஏற்படாத காலங்களில் நாட்டிலிருந்த அரசுகள், ஒன்றோடொன்று இணையாது தம்மிச்சையாகத் திரியும் சிறு அணுக்கள் போல் காட்சியளித்தன. அவை ஒவ்வோர் அமயம் ஓடித் திரிந்துகொண்டும், மற்றும் சில சமயங்களில் ஓய்ந்து இளைப்பாறிக்கொண்டும் இருந்துவந்தன.

### பன்மையில் ஒருமை (Unity in Diversity)

இத் தன்மைய பன்மைக் கூறுவாய்ந்த இந்திய வரலாற்றைச் சுருக்கமாகச் சிறு நூலொன்றில் அடக்கி விவரிப்பது எங்ஙனம்? நாம் எடுத்துக்கூறிய பன்மைக் குணங்களைப் புறக்கணிக்க இயலாது; அவைகளால் வரலாறு எழுதுவோருக்கும் கற்போருக்கும் பல இடையூறுகள் ஏற்படுகின்றன. ஆயிரமாண்டுகளுக்கும் மேலாக இயங்கிய ஒவ்வொரு பகுதியிலுமுள்ள இந்த நாட்டு அரசு ஒவ்வொன்றின் வரலாற்றையும் வரைவது சாத்தியமற்றது. ஆயினும், இப் பிரச்சினைக்கு ஒரு வழி காட்டுவது நாட்டில் நாம் காணும் 'பன்மையில் ஒருமை' என்னும் அடிப்படை ஒருமைப்பாடு. மேல்நோக்கில் நாம் காணும் பல்வகையான வேறுபாடுகளுக்கிடையில் நாட்டின் அடிப்படை ஒருமை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஐயத்திற்கிடமெதுவுமின்றிக் காணப்படுகிறது. இவ் வொருமைப்பாட்டின் தன்மைகளும் குணங்களும் கவனத்திற்குரியவை; 'இந்திய' என்னும் சொல் ஓர் உபகண்டத்தைக் குறிப்பதே எனினும், அதனால் இந்திய வரலாற்றின் ஒருமைப்பாடு நிலை பெற்றுவிடவில்லை. 'ஆசியா' என்னும் சொல் ஒரு கண்ட முழுவதையும் சுட்டுவதாயிருப்பினும், அக் கண்டத்தின் முழு வரலாறும் அத்துணை சுலபமாக வரையப்படுவதில்லையல்லவா? புவியியல் நோக்கில் நிலப்பரப்பை வரையிட்டு, ஒரு பெயரையும் சூட்டிவிடுவதால் மட்டிலும் ஒருமைப்பாட்டிற்கு வழிகோலுவதென்பது இயலாது. 'ஒருமைப்பாடு' என்பது அவைகள் யாவற்றினும் மேம்பட்டது.

### அரசியல் ஒற்றுமை (Political Union)

இந்திய நாட்டின் எல்லாப் பகுதிகளையும் வெற்றி கண்டு ஒருவன் அரசு சமைத்தாலும், அல்லது அதிகாரபூர்வமான இறைமைச் சக்தியொன்றின்கீழ்ப் பேரரசு எழுந்தாலும், வரலாற்

ருசிரியனின் பணி எளிதாகிவிடும். பிரிட்டிஷ் சாம்ராச்சியம் நாட்டை ஆளத் தொடங்குவதற்குமுன் அந்நிலை ஏற்படவில்லை. 1877ஆம் ஆண்டில் இந்தியாவின் அரசியென விக்டோரியா ராணியை ஏற்றுக்கொண்ட நாள்முதல், வெகு அண்மையிலேயே அந்நிலை ஏற்பட்டதெனலாகும். 1858ஆம் ஆண்டில் விக்டோரியா அரசி இந்திய நாட்டின் நேரடி நிர்வாகத்தை ஏற்ற நாள் முதல், அல்லது 1818ஆம் ஆண்டு ஹேஸ்டிங்ஸ் பிரபு மகாராட்டிரரைச் சிதறடித்து, நாடு முழுவதும் கிழக்கிந்தியக் கம்பெனியின் அரசியலாதிக்கத்திற்குட்பட்டுவிட்டது எனப் பிரகடனம் விடுத்த நாள் முதல், இந்திய அரசியலொற்றுமை ஏற்பட்டுவிட்டது எனக் கூறுவதும் பொருந்தும். ஹேஸ்டிங்ஸ் பிரபு கொண்டாடிய இறைமை, மற்ற இந்து முஸ்லீம் மன்னர்களாட்சியிலும் நிறுவப்பெற்றதில்லை. செல்யூகஸ் நிகேடரை முறியடித்த மௌரியரின் ஆதிக்கம் தற்போது ஆப்கானிஸ்தானம் என வழங்கப்பெறும் பகுதியோடு இந்துகுஷ்வரையிலும் பரவியிருந்தது. இதைத் தவிர மைசூரின் வடபகுதிவரையிலும் மௌரியரின் நேரடியாட்சி நடைபெற்றதெனலாகும். தென்கோடியிலிருந்த தமிழகத்தைத் தன்னாட்சியில் இணைக்க அசோகன் முயலவில்லை. குஷண சாம்ராஜ்யமும், குப்தப் பேரரசும் வடக்கிலேயே இயங்கின. பதினான்காம் நூற்றாண்டில் அரசு செலுத்திய முகம்மது-பின்-துக்ளக்கினது அரசியலாதிக்கம் சிறிது காலம் பெயரளவிலேயே தென்கோடிவரை பரவியது. அக்பரோ அல்லது அவரது வரலாற்றாசிரியர்களோ தென்கோடியிலுள்ள தமிழகத்தைப்பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. 1565ஆம் ஆண்டில் சீர்குலைந்த விஜயநகர சாம்ராச்சியத்தையும்கூட அவர்கள் குறிப்படவில்லை. தக்காண பீடபூமி முழுவதையும் தன்னடிப்படுத்த வேண்டுமென்ற பேரவா முகலாய சக்கரவர்த்திக்கு இருந்து வந்தது என்பது உண்மையேயாகும். பம்பாயை இலக்காகக் கொண்டு எல்லை வகுத்தால் அஹமது நகருடன் அக்பராதிக்கம் நின்றுவிட்டதென்பதால், அக்பருக்கு முழுவெற்றி இல்லை என்றே முடிவு செய்யவேண்டும். சாம்ராச்சிய வெறி அக்பரது சந்ததியர்களையும் பற்றியிருந்தது. பதினெட்டாம் நூற்றாண்டு இறுதியில் ஔரங்கசீப்பின் பேராட்கள், தஞ்சை, திருச்சியிலிருந்து ஓரிரு முறை திறை வசூலித்தனர் என்றும் தெரியவரும். சற்றேறக்குறைய இந்தியா முழுவதையும் ஆண்டுவந்த பெருமை, ஔரங்கசீபை ஒருவாறு சாரும். 1739ஆம் ஆண்டுவரை காபூலும் அவனது சாம்ராச்சியத்திலடங்கியிருந்தது. அரைகுறையாக அரசியலொற்றுமையேற்பட்டிருந்த காலங்களெல்லாம், வரலாற்று ஆசிரியனின் பெருமுயற்சிக்குத் துணைபுரிகின்ற சுமைதாங்கிகளாக விளங்குகின்றன. பேரரசுகளின் வரலாற்றைக் கூறுவது

அராஜகக் காலங்களின் குழப்பமிக்க வரலாறுகளைத் தொகுப்பதைவிடச் சற்று எளிதாக விளங்கும்.

இந்திய நாட்டின் அரசியலொற்றுமை செயல்முறையில் ஏற்படவில்லையெனினும், பல நூற்றாண்டுகளாக அதுவே மக்களின் குறிக்கோளாக இருந்திருக்கிறது. 'அகில இந்தியத் தலைமை' என்ற குறிக்கோளும், அவ்விந்தியத் தலைவனைச் 'சக்கரவர்த்தி, ராஜா' என்றெல்லாம் அழைக்கும் மரபும் வடமொழி இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் ஏராளமாகக் காணப்படுகின்றன. மகாபாரதக் கதையில் வரும் குருக்ஷேத்திரப் போரில், தென்கோடியிலிருந்து வடவெல்லைவரையிலுமுள்ள பல தேச மன்னர்களும் பங்கு கொண்டனர் என்றறிவோம். இந்திய மக்களனைவரும் பொதுவானதொரு பிரச்சினைக்கு முடிவு காண்பதில் ஆர்வம் செலுத்தினர் என்பதற்கு மேற்குறித்த மகாபாரத சம்பவம் சான்று பகரும். அவர்கள் யாவரும் ஒருவரோடொருவர் தொடர்புகொண்டிருக்கவேண்டுமென்பதும் தெளிவு. இந்திய வரலாறு வரைந்த ஐரோப்பியர், நாட்டிலுள்ள பன்மைக் கூறுகளில் அதிக கவனம் செலுத்தியுள்ளனரேயன்றி, ஒருமைப்பாட்டை உணர்ந்திலர். சுயேச்சையுள்ள 'ஜோசப் கன்னிங்ஹாம்' (Joseph Cunningham) என்பவரை மட்டிலும் இதற்கு விலக்காக எண்ணலாகும். 1845ஆம் ஆண்டில் சீக்கியரை ஒடுக்குவதில் பிரிட்டிஷார் முனைந்தபோது, சீக்கியரடைந்த கலவரத்தைத் தெளிவாக்கி அவர் எழுதியது வருமாறு: 'சிங்களத் தீவுட்பட காபூலிலிருந்து அஸ்ஸாம் பள்ளத்தாக்குவரையிலும் இந்தியா ஒரு நாடாகவே கருதப்படுகிறது. அங்குச் சமைக்கப்பெறும் அரசு ஓர் இனம் அல்லது ஒரு பேரரசனின் தனியுரிமையாகவே மக்களால் கருதப்பெறுகிறது.'[1] எனவே, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக 'அரசியலொற்றுமை'க் குறிக்கோள் இந்திய மக்களுள்ளத்தில் வேரூன்றியிருந்தது என்றாலும், நடைமுறையில் நாட்டிலுள்ள சிற்றரசர்களாலும் பேரரசர்களாலும் ஒப்புக்கொள்ளப்பெற்றதொரு தனியரசு 1877ஆம் ஆண்டிலேயே நிறுவப்பெற்றதென்பதும் மறுக்க முடியாத உண்மையாக இருக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சியால் நன்முறையில் பயனடைந்தமைக்கும், சிறிய அறிவாளிகளின் கூட்டமென விளங்கிய அகில இந்திய தேசிய காங்கிரசு, மகாத்மா காந்தியடிகளின் தலைமையில் உபகண்ட முழுவதுமுள்ள மக்களுள்ளத்தை ஆட்கொண்டு விரைவில் பரவியமைக்கும் பன்னெடுங்காலமாக மக்களுள்ளங்களில் வேரூன்றித் தழைத்து

[1] சீக்கியர் வரலாறு (1853), பக்கம் 283.

வளர்ந்தோங்கிவந்த அடிப்படையொற்றுமைத் தத்துவமே காரணமாக விளங்குகிறது.

**இந்து சமயத்தின் அடிப்படை ஒருமைப்பாடு (Fudamental Unity of Hinduism)**

இந்திய மக்களில் பெரும்பாலானவர் பல்வகையிலும் மாறுபட்டவரெனினும், தங்களுக்கே உரித்தானதொரு வகை நாகரிகத்தையும் வாழ்க்கை முறையையும் கடைப்பிடித்தொழுகிவருகின்றனர். இந்து சமயம் என்ற பொதுப் பெயரில் வழங்கக்கூடிய இக் கலாசாரத்தைப்போல் உலகில் வெறெங்கிலும் காண இயலாது. இந்தியா பிராமண நாடான இந்து நாடாகும். சாத்துவீக முறையில் தங்கள் கொள்கைகளை இந் நாடு முழுவதிலும் பரவச்செய்து, அவர்கள் வெற்றிகண்டனர். பிராமணப் படைப்பான 'சாதிமுறை' என்னும் சமூகப் பாகுபாட்டைப் போல், பர்மா, திபெத் ஆகிய இந் நாட்டையொட்டிய பகுதிகளில் நாம் காண்பதரிது. இச் சமூகமுறை இந்து நாடெங்கிலும் பரவியுள்ளது. சிறுபான்மை வகுப்பினரான முஸ்லீம்களின் மீது இப் பாகுபாட்டினால் விளைந்திருக்கும் ஆதிக்கம் அதிகமாகக் காணப்படும். பொதுவாக இந்துக்கள் பிராமணருக்கு மரியாதை செலுத்துகின்றனர்.[1] யாவரும் பசுவைத் தெய்வமெனப் போற்றி வணங்குவர். ஒருசிலர் புராதனச் சமய நூல்களையும் வேதங்களையும் ஏற்பதில்லை. சம்ஸ்கிருதம் எங்கும் புனிதமொழியாகக் கருதப்படுகிறது. விஷ்ணு, சிவன் வழிபாடு பிரபலமாக நாடெங்கும் காணப்படுகிறது. உஷ்ணப் பகுதியான சேதுவிலிருந்து பனி உறைந்த பத்ரிநாத்வரை யாத்திரை செல்லும் பக்தனுக்கு எங்கும் ஒரேவகையான மனநிறைவு கிடைக்கிறது. 'ஏழு புனிதத் தலங்கள்' பட்டியலில் தென்பகுதி, வடபகுதி ஆகிய இரு பகுதிகளிலுமுள்ள தலங்கள் இடம்பெறுகின்றன. இவ்வாறே நதிகளின் புனிதத்தன்மையிலும் இட வேற்றுமை என்ற பாகுபாடின்றி மக்கள் நம்பிக்கையுடையவராக விளங்குகின்றனர். மகாபாரதம், இராமாயணம்போன்ற இதிகாசங்கள் நதிகளின் பெருமை பேசுகின்றன.

அரசியலடிப்படையில் ஏற்பட்ட ஒருமைப்பாடு, இயற்கையிலமைந்த தனிமை வாயிலான ஒருமை ஆகியவை யொருபுறமிருக்க, இவை யாவற்றினும் மேம்பட்ட ஒருமையுணர்ச்சி இந்திய மக்களிடைப் பரவியுள்ளதென்பது தெளிவாக விளங்கும். இனம்,

1 கன்னடப் பகுதிவாழ் லிங்காயதர் (Lingayats) இதற்கு விதிவிலக்காவர் எனினும், மற்றவர் மரியாதை செலுத்துகின்றனர்.

வரைக்கும், ஒரு சாதனத்தின் இறுதிநிலை ஆக்க மதிப்பிற்குச் சமமாக அதன் ஊதியமும் இருக்கும் என்பது உண்மையாகாது; அப்பொழுது இறுதிநிலை ஆக்க மதிப்பு அதன் ஊதியத்தைவிட அதிகமாகவே இருக்கும். இப்படி ஏற்பட்டுவிட்டதற்காக இந்த இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாட்டைப் புறக்கணித்துவிட வேண்டும் என்று நான் குறிப்பிடவில்லை. இக் கோட்பாட்டின் அடித்தளமாக அமைந்துள்ள குறைந்துசெல் விளைவு விதியானது, பல்வேறு காரணிகளின் கூட்டுகளை வெவ்வேறு விகிதத்தில் சேர்த்துப் பெறும் ஆக்கப் பொருள்களின் தொகைகளுக்கு ஏற்படும் விளைவுகளோடு தானும் தொடர்புகொண்டுள்ளது. எனவே, இவ் விளைவு விதி நிறைவுப் போட்டி நிலையைப் போலச் சர்வாதீன நிலைக்கும் சரியாகப் பொருந்தும். ஒரு தொழில் நிறுவனம், தனது உற்பத்திக் காரணிகட்குச் செலுத்தவேண்டிய ஊதியத்தைத் தானே அறுதியிட்டுக் கொள்ளுதல் என்பது பொதுவாக இயலாது. ஏனென்றால், இந்த நிறுவனங்கள் தாங்கள் வாங்கும் மூலப்பொருள்கள், இதர சாதனங்கள் என்பனவற்றிற்கும், வாடகைக்குக் கொள்ளும் பணிகள், உழைப்பாளர்களின் உதவிகள் என்பனவற்றிற்கும் உரிய ஊதியங்களை, அங்காடி நிலவரத்திற்கு ஏற்ப அவை எப்படியிருந்தாலும் செலுத்த வேண்டியதிருக்கும். ஒரு குறிப்பிட்ட காரணியின் விநியோகம் மிகுதிப்பட்டால், அக் காரணிக்கு உரிய ஊதியத்தை இது குறைக்க முற்படும்; அக் காரணியின் வினியோகம் குறைந்தால் அதன் ஊதியத்தை உயர்த்த முற்படும். மேற்குறித்த காரணியின் உற்பத்தித் திற அலகுகளில் மிகையானவையோ குறைவானவையோ பயன்கொள்ளப்படும்பொழுது, அக் காரணியின் உழைப்பிற்குரிய இறுதிநிலை ஆக்கத்திறம் குறைந்தும் கூடியும் அமைவதாலேயே இந்த ஊதிய மாற்றங்கள் ஏற்படுகின்றன; இவ் வுற்பத்திக் காரணிகளின் தொடர்புடைய ஊதியங்கள், அவற்றின் தொடர்புடைய இறுதிநிலை ஆக்கத் திறங்களையே பிரதிபலிக்கின்றன; ஆக்கப் பொருளுக்கு ஏற்படும் அதிகப்படியான தேவையானது, அத் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டுள்ள இதர சாதனங்களைவிட அதிகமான வீதத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள ஒரு குறிப்பிட்ட காரணிக்கு உரிய ஊதியத்தையும் உயர்த்திவிட முற்படுகிறது; இதைப்போல, அப் பொருளுக்கு ஏற்படும் தேவைக் குறைவானது அச் சாதனத்திற்கு ஏற்படும் ஊதியத்தைக் குறைத்துவிடுகிறது. மேற்குறித்த நிலைகளெல்லாம், வணிகப் போட்டியானது நிறைவாயிருந்தாலும், நிறைவு குன்றியிருந்தாலும் ஒரேமாதிரியாகவே அமைந்திருக்கும்.

இக் கோட்பாடு, வேலை நிறைவுடைமையையும் கருத்தில் கொண்டிருக்கிறது. உற்பத்திக் காரணி யொன்றின் இதர கூறுக

சரித்திர ஆராய்ச்சியாளரின் கவனத்தை அது மிகையாகக் கவர்ந்துள்ளது. தென்னிந்திய வரலாற்றில் மிக்க ஆர்வமுள்ள ஒருவர் கீழ்வருமாறு உரைப்பர் : 'கங்கைச் சமவெளியை ஆதார மாகக்கொண்டு வரலாறு' எழுதும் வழக்கம் வரலாற்றுசிரியர் களின் குருதியோடு நன்ருகக் கலந்துவிட்டது. பல ஆண்டு களாக அதுவே சிறந்த முறையென்றும் கருதப்படுகிறது. ஆனல், சிறந்ததோர் வரலாறு எழுத விரும்பும் ஆசிரியன், தென்திசையி லுள்ள கிருஷ்ண, காவிரி, வைகை நதிகளின் (மதுரை, பாண்டி நாடுகளிலுள்ள) முகத்துவாரத்திலிருந்து தொடங்கி நூலெழுது வது சாலச்சிறந்த விஞ்ஞான ரீதியான முறையாகும்.' கொள்கை யளவில் இதைச் சிறந்த அறிவுரையாக ஏற்றாலும், தற் போதுள்ள நிலையில் இதைக் கடைப்பிடிப்பதென்பது சாத்திய மில்லை.[1] என் அறிவிற்கு எட்டியவரை, அவ்வாறு முயல்வது வீண் என்றே தோன்றுகிறது.

### அரசியல் பரிணமத்தில் கவனக்குறைவு (Lack of Political Evolution)

அரசியல் நிறுவனங்களின் வளர்ச்சியிலுள்ள பல்வேறு நிலை களை ஆய்வதில் இந்திய வரலாற்றில் கவனக்குறைவு காணப்படு கிறது. மகா அலெக்சாந்தர் இந்நாட்டின்மீது படையெடுத்து வந்தபோது, வழக்கிலிருந்த மாளவர், க்ஷுத்ரகர் (Kshudrakas), மற்றும் லிச்சாவிகள் (Lichhchavis), யௌதேயர் (Yaudheyas) போன்ற குடியரசுகளைப்பற்றிய பிற்காலச் செய்திகள் நமக்குக் கிடைப்பதில்லை. அவைகளின் தன்மைகளை அறிவதற்கும் வகை யின்றி எவ்விதச் சுவடுமின்றி அவை மறைந்திருக்கின்றன. தன் னிச்சைப்படி அரசு செலுத்திய முடிமன்னராட்சியொன்றே வர லாற்றுசிரியரின் முழு இலக்காக விளங்குகிறது. கொடுங்கோ லாட்சியின் வளர்ச்சிக்கேற்ற சூழ்நிலை நாட்டில் இருந்ததில்லை. ஆட்சிபீடத்திலமர்ந்து அரசு செலுத்திய முடிமன்னன் ஒவ்வொரு வனின் திறமையும் செல்வாக்கும் வேறுபட்டதாக இருந்தது. எனவே, கொடுங்கோலனயினும் சாதுவாயினும், அவனது தான் தோன்றி அரசின் வெற்றியின் அளவுகோல், எந்நாட்டிலும் எக் காலத்திலும் ஒன்ருகவே கருதப்படவேண்டும்.

### சிறு குடியாட்சிகளின் அகால மறைவு (Extinction of Tribal Constitutions)

சிறு குடியாட்சிகள் பல காலப்போக்கில் மறைந்தமைக்கு அவை மங்கோலியப் படைப்புகள் என்பதையே காரணமாகக்

[1] கருத்துகள் யாவும் மூலநூல்களைச் சார்ந்தவை.

கூறவேண்டும். திபெத்தியர், கூர்க்கர், மற்றும் இமாலயப் பகுதி வாழ் மக்கள் பலர் மங்கோலியர் எனக் கருதப்படுவர். கிறிஸ்து சகாப்தத்தையொட்டிய காலங்களில், வட இந்தியாவில் வாழ்ந்த மக்களினத்தில் சாதாரணமாக ஒப்புக்கொள்ளப்படுவதைவிட மங்கோலியக் கலப்புச் சற்று அதிகமாகவே இருந்தது. இந்தோ-ஆரிய பிராமணக் கோட்பாடுகளின் ஆதிக்கம் அதிகரிக்கவே, மங்கோலியப் பண்பாடு வலிமை இழக்க நேரிட்டது. ஆரியருடன் தொடர்பில்லாத பிற நிறுவனங்கள் மறைந்ததுபோலவே, மங்கோலியப் படைப்புகளான சிறு குடியாட்சிகளும் மறைந்தன. பிராமண சமயத்தினர் யதேச்சாதிகாரத்தோடு[1] திருப்தி கொண்டனர். பழங்கால இந்திய மன்னர்களின் அதிகாரம் வரையறுக்கப்பட்டிருந்ததென அறிஞர் பலர் கூறிவருகிறார்கள். அதில் எனக்கு நம்பிக்கையில்லை. அதன் காரணமாகவே 'யதேச்சாதிகாரம்' அல்லது 'கொடுங்கோன்மை' என்ற வர்ணனையை மேற்கொண்டேன். பழங்கால நூல்கள் மன்னர்களைக் குறை கூறுவதைக்கொண்டும், மன்னர்கள் முனிவரையும், மற்றும் பெரியோர்களையும் மதித்துச் செயலாற்றவேண்டும் எனப் புத்தி புகலுவதைக்கொண்டும் இவ்வாசிரியர்கள் 'முடியாட்சி' வரையறுக்கப்பெற்றதென்னும் தவறான எண்ணங்கொண்டிருக்கின்றனர். நூல்களில் காணப்படும் செய்திகளில் தேவைக்கதிகமான கவனம் இவர்கள் செலுத்தியுள்ளனர் என்பது தெளிவு. உண்மையில் இந்திய நாட்டுக் கொடுங்கோல் மன்னர்கள் சக்தி வாய்ந்தவர்களே; தங்கள் விருப்பத்திற்கேற்றவாறு அவர்கள் அரசுசெலுத்த வல்லவரென்பதும் தெளிவு. அவனது யதேச்சாதிகாரத்திற்குத் தடையேதும் ஏற்பட்டதெனில், அதற்கு அவனது வலியின்மையே காரணமாக இருந்திருக்கவேண்டும். சந்திரகுப்த மௌரியனைப் போன்றதொரு வல்லமை மிகுந்த மன்னனை, சாத்திர நூல்கள் எவ்வகையிலும் கட்டுப்படுத்தியதாகத் தெரியவில்லை. பிற்காலத்தில் நன்னடத்தைக் கொள்கை

1 குழப்பமிக்க இவ்விஷயத்தைப்பற்றிய கருத்துகளுக்கு, நூலாசிரியனின் 'லிச்சாவிகளுக்குள்ள திபேத்தியத் தொடர்பு' (Ind. Ant., Vol. XXXII, 1903, பக்கம் 238 ff) என்ற கட்டுரையையும்,

'யௌதேய குடியாட்சி முறையின் திபேத்திய விளக்கம்' (Ibid, Vol. XXXV. 1906, பக்கம் 290) என்ற கட்டுரையையும்.

பி. சி. லா எழுதிய 'பழங்கால இந்தியாவின் க்ஷத்திரிய குடிகள்' (Calcutta 1933),

'பண்டைக் கால மத்திய இந்திய க்ஷத்திரிய குடிகள்' (Calcutta, 1920) என்ற கட்டுரைகளையும்,

இம் மக்களுக்குள்ள மங்கோலியத் தொடர்பை விளக்கி டாக்டர் ஸ்மித் எழுதியுள்ள நூல்களையும், டாக்டர் லா போன்ற ஏனைய ஆசிரியர்கள் அக் கருத்துகளை மறுத்து எழுதியுள்ள நூல்களையும் காண்க.

ஒப்பிட்டுப் பார்க்கையில் மூலதனத்தின் அளவு மிகக் குறைவாகவே இருக்கிறது. இதன் விளைவாக, வட்டிவீதங்களும் இலாபங்களும் (சட்டத்தால் வரம்புகட்டப்பட்டாலொழிய—அப்படி வரம்புகட்டிவிட்டால்—கூடிய அளவில் தேவைப்படும் மூலதனத்தை முதலீடு செய்வது தடைப்பட்டுவிடும்) உயர்ந்து செல்லவே முற்படுகின்றன.[1]

கானடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் நிலப்பரப்பு அதிகமாயிருக்கின்றது; எனவே, இந்நாடுகளின் நிலப்பரப்பு மிகுதி நிலவாரங்களைக் குறையச் செய்கிறது. கிரேட் பிரிட்டன், ஜப்பான் போன்ற பரப்புக் குறைந்த நாடுகளில் நிலவாரங்களை உயர்த்தச் செய்கிறது.

கூலிமுறைகளைப்பற்றிய இப் பொதுக் கருத்துக்கு ஒரு வெளிப்படையான விதிவிலக்குமிருக்கிறது. இஃது என்னவெனில், சில வளர்ச்சி குன்றிய நாடுகளில் உள்ள பயிற்சிபெற்ற மருத்துவர்கள், பொறியியலினர், இதர பணித்துறையினர் முதலியோர் பெரும்பாலான் மேற்கு நாடுகளில் உள்ளவர்களைவிட அதிகப்படியான சம்பாத்தியத்தைப் பெறுகிறார்கள். இதற்குரிய காரணத்தை ஆராயும்பொழுது, இந்த வெளிப்படையான விதிவிலக்கும், பொதுவான விதியோடு பொருந்தித்தான் இருக்கிறது என்பதைக் கண்டறியலாம். இத்தகைய நாடுகளில் தொழில்நுட்பக் கல்வியும் பல்கலைக்கழகப் பயிற்சி வாய்ப்பும் மிகக் குறைவாயிருப்பதால் போதுமான நபர்கள் கிட்டுவதில்லை. இதனால் தேவைப்படுவோரைக் காட்டிலும் மிகக் குறைந்த அளவினரே இருப்பதால், இவர்கட்கு மிகுந்த ஊதியம் கிட்ட வாய்ப்பேற்பட்டுவிடுகிறது. ஜப்பானில் தொழில்நுட்பக் கல்வி எங்கும் பரவி இருக்கிறது. இங்கே, பொறியியலினர் மாதம் ஒன்றுக்கு 15 பவுன் ஊதியத்திலேயே வாழ்க்கையைத் துவங்கி, கிட்டத்தட்ட 50 பவுன் அளவுக்கே உயர்கிறார்கள். இதைப் போல இந்தியாவில் நிறையப் பல்கலைக்கழகங்கள் இருக்கின்றன;

[1] சில பொருளாதார நிபுணர்கள், இந்தப் பத்தியில் உள்ள கருத்தை ஏற்க இசையமாட்டார்கள். மிகுந்த புறநாட்டுப் பொருளாதார வளம்கொண்ட கிரேட் பிரிட்டன் போன்ற ஒரு நாட்டில், மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத்திறன் அதிகமாகவே இருக்குமென்றும்; அல்லது ஓர் எளிய நாட்டில், மூலதனத்திற்குரிய தேவையானது, அந்த நாட்டின் குறைவான உண்மை வருமானத்தால் கட்டுப்படுத்தப்படுகின்றதென்றும் இவர்கள் விவாதிப்பார்கள்.

சில முதலீடுகள் உரிய பலனை அளிக்கமாட்டா என்பது உண்மைதான். ஒரு குறிப்பிட்ட தொழிலகத்தைப்பொறுத்தவரையில், ஒரு நாடு என்பது மிக மிகச் சிறிய அங்காடியாக அமைந்துவிடலாம்; இந்த நாட்டில் உழைப்பாளர்கள் அபரிமிதமாகவும் குறைந்த கூலிக்கும் கிடைக்கையில், கூலி முறையில் சேமிப்புக்காக மேற்கொள்ளப்படும் உத்திகள் உரிய இலாபத்தைத் தராது போகலாம். என்றாலுங்கூட, என்னுடைய நம்பிக்கை என்னவென்றால், நன்கு ஆராய்ந்து மேற்கொள்ளப்பட்ட நிரப்புத் திறமுடைய முதலீடுகளின் (complementary investments) திட்டமானது, தேசிய வருமான இனங்களில் எப்படியும் உயர்ந்த பலன்களையே நல்கும் என்பதே ஆகும்.

கல்லிலேயே, அவ்வுருவத்தை நம்மால் வடிக்க இயலும். கணக்கற்ற சாம்ராச்சியங்களின் எழுச்சி, வீழ்ச்சிகளையும், கொடுங்கோலர்களின் ஊர்வலத்தையும், சற்றுப்பொறுமையுடன் கற்றுஉணரவேண்டியதவசியமாகிறது. கருத்துவளர்ச்சியின் செழுமையைச் சுவைத்து ரசிக்கும் ஆர்வத்தில், சுவையற்ற செய்திகளைச் சற்று வெறுப்புடன் படித்துணரவேண்டியதைத் தவிர வேறு வழியில்லை. பலதுறைகளிலும் தோன்றி வளர்ந்த கருத்து வளர்ச்சியை விவரிக்க இயன்ற அளவில் முயன்றிருக்கிறேன். அம்முயற்சி தவிர்க்கமுடியாத காரணங்களால், சில சந்தர்ப்பங்களில் தடைபட்டிருக்கிறது. ஆர்வமிக்க வாசகர்கள், அப்பகுதிகளைக் குறித்த, தனி நூல்களை மேலும் படித்துப் பயனடையலாம்

**வரலாற்றுத் தலைப்புகள்** (Divisions of the history)

இந்திய வரலாற்று நூல்களில் பகுதித் தலைப்புகள் பெரும்பாலும் ஒரே சீராகவே, அமைந்திருக்கும். 'ஆதி இந்தியா', 'இந்து இந்தியா' என்ற பகுதிகளின் எல்லைக்கோடாக, மௌரிய வம்ச ஆட்சித்தொடக்கத்தை, வசதியை முன்னிட்டு அமைத்திருக்கிறேன். கி. பி. 647-ல் ஹர்ஷசக்கரவர்த்தியின் மறைவுவரை 'இந்துசகாப்தம்' என்ற தலைப்பில் செய்திகள் கூறப்பட்டுள்ளன. மற்றுமோர் பகுதியைத் தொடங்குவதற்கு இது தகுந்த பிரிவினையாக இருக்கிறது. IV, V, VI, பகுதிகளில் தகுந்த தலைப்புகளின் கீழ் இஸ்லாமிய ராட்சியைப்பற்றிய செய்திகளும், இந்து சாம்ராச்சியமான விஜயநகர வரலாறும் கூறப்பட்டிருப்பதின் காரணம் கூறுமலே விளங்கும். VII, VIII, IX, X, ஆகிய நான்கு பகுதிகளும், பிரிட்டிஷ் ஆட்சியை விரித்துரைக்கின்றன. பகுதி VII, VIII, ஆகியவற்றினிடையே எல்லைக்கோடாக 1818ஆம் ஆண்டையே குறிப்பிடவேண்டும். ஹேஸ்டிங்கிஸ் பிரபுவின் ஆட்சி இறுதியை எல்லையாகக் குறிப்பது என் அறிவிற்கெட்டிய வரையில் சிறந்ததாக இல்லை. 1858ஆம் ஆண்டுமுதல் வைசிராய்களின் ஆட்சிக்காலம் தொடங்குகிறது. எனவே 1858ஆம் ஆண்டு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை மறுப்பதற்கில்லை.

**மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்**

இவ்வதிகாரத்தில் கூறியுள்ள செய்திகளைப் பல நூல்கள் வாயிலாக ஆசிரியர் வெளியிட்டுள்ளார்—இ. எச். ஐ. [4](1923) முகவுரை.

ஆக்ஸ்போர்டு மாணவனின் இந்திய வரலாறு (புதிய வெளியீடு. அத்தியாயம் 1)

ஆக்ஸ்போர்டின் பிரிட்டிஷ் சாம்ராச்சிய ஆய்வு 1914—அத். vii.

புவியியலை வருணிக்கும் நூல் ‘இந்திய நாட்டின் புவியியல்’—ஜி. பாட்டர்சன் (கிறித்துவ இலக்கிய சங்கம், லண்டன் 1909).

கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றில் (Vol.i ) எச். மாக்கிந்தரின் கட்டுரை.

இந்தியப் புவியியலுக்குத் தகுந்த முன்னுரையாக அமையும். எல். டி. ஸ்டாம்ப் (L. D. Stamp) என்பவரின் ‘ஆசிய நாட்டு மாகாணப் பொருளாதாரப் புவியியல்’ (8ஆம் பதிப்பு, லண்டன் 1950) என்னும் நூலில் காணப்படும் அத்தியாயங்கள் சில மிகப் பயனுள்ளவையாக இருக்கின்றன.

ஐ.ஜி. (இந்திய சாம்ராச்சியம்) 1907, Vol. i. மற்றும் அதைச் சார்ந்த தேசப்படங்களையும் பயன்படுத்தலாம் (1909).

ராதாகுமட் முகர்ஜி என்பவரின் ‘இந்திய நாட்டின் அடிப்படை ஒற்றுமை’ (லாங்மென்ஸ், 1914) என்னும் சிறு நூல் அரசியல் காரணங்களுக்காக எழுந்ததெனினும் தேர்ந்த அறிவுடன் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது.

சர். ஏ. லியால் என்பவர், ‘இந்திய நாட்டில் பிரிட்டிஷ் சாம்ராச்சிய எழுச்சியும் வளர்ச்சியும்’ (மர்ரே, 1910) என்னும் தமது நூலில், இந்திய வரலாற்றில் கடலாதிக்கத்தின் தன்மையைத் தெளிவாகக் கூறியுள்ளார்.

ஓ. கே. ஸ்பேட் (O.K. Spate) என்பவரின் ‘இந்திய-பாகிஸ்தான் நாடுகளின் புவியியல்’ என்னும் நூல் அண்மையில் வெளியிடப்பட்ட பயனுள்ள நூல்களில் ஒன்றாகும்.

## 2. ஆதாரங்கள் (Sources)

### கி.மு. 650–க்கு முந்திய, காலவரன்முறையில் அமைக்கப்பெறாத வரலாறு (Undated History, before 650 B. C.)

'உண்மை வரலாறு' என்பது காலவரன்முறை என்ற எலும்புக்கூட்டின் உதவியுடன் உருவாகிறது. நிகழ்ச்சிகள் நடைபெற்ற காலங்கள் ஐயத்திற்கிடமின்றி நிருணயிக்கப்படுகின்றன. கிரேக்க நாட்டைப்போல, இந்திய நாட்டிலும் அத்தகைய முறை கிறிஸ்துவிற்குமுன் ஏழாம்நூற்றாண்டு இடைக்கால அல்லது இறுதிக்காலச் செய்திகளைத் தொகுப்பதில் கையாளப்படுகிறது.[1] இதற்கு முந்திய கால வரலாற்றுச் செய்திகளைக் காலவரன்முறையில் தொகுத்தளிப்பது இயலாததொன்றாக விளங்குகிறது. ஓரிருசெய்திகள் கிடைக்கின்றன எனினும், தெளிந்த அவைகளை உண்மையென ஏற்று, வரலாறமைப்பதற்குப் போதுமான துணிவு நமக்கு ஏற்படுவதில்லை. அவைகளை வரிசைப்படுத்துவதும், எவ்வாறு அவை நிகழ்ந்தன என்று கண்டறிவதும் கூடப் பல சர்ந்தர்ப்பங்களில் கடின முயற்சியாகிறது. இவ்விடர்ப்பாடுகளைக் காரணம்காட்டி, தொன்மைவாய்ந்த இந்நாட்டு வரலாற்றை ஆதியிலிருந்து கூறாது, தப்பிவிடலாமென்று எந்த வரலாற்றாசிரியனாலும் எண்ண இயலாது. தெளிவான வரலாறு தொடங்குதற்கு முன்னுள்ள ஆதி இந்தியாவின் அரசியல், சமூக, சமய, இலக்கிய, கலை வரலாறுகளை, ஒருவகையாகவேனும் எடுத்துரைப்பது வரலாற்றாசிரியனின் கடமையாக இருக்கிறது. பண்டைய வடமொழி, பாலி, தமிழ் இலக்கியங்களில் வரலாற்றுண்மைகள் பல பொதிந்து கிடக்கின்றன. அவைகளில் பெரும்பாலானவை ஐரோப்பிய மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு நமக்குக் கிடைக்கின்றன. மலைபோல் குவிந்துகிடக்கும் இவ்விலக்கியக் குவியலை, அதிலும் குறிப்பாகத் தென்னகத்தேயுள்ளவைகளை ஆய்வது மிகக்கடினமான

[1] கிரேக்க வரலாற்றில் நமக்குக் கிடைக்கும் தெளிவான, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நாள் 'ஏப்ரல் 6, 648 கி. மு.' ஆகும். ஆர்கிலோகஸ் (Archilochus) என்னும் புகழ்பெற்ற கவி, அன்று நிகழ்ந்த சூரிய கிரகணத்தைக் கண்டான் (கிரேக்க வரலாறு—பியூரி (Bury) 1904, பக்கம் 119). ஏதன்ஸில் சைலான் (Cylon) சதித்திட்டமொன்றைத் தீட்டினான். கி.மு. 632-ல் நடைபெற்ற இந்தச்செய்தியே கிரேக்க வரலாற்றில் முதன் முறையாக நமக்குக் கிடைப்பது. சோலன் (Solon) நகர ஆர்கன் பதவிக்காலம் கி.மு. 594-593 அல்லது 592-591 எனக் கருதப்படுகிறது. (Ibid பக்கம் 178, 182.)

முயற்சியேயாம். அதை எண்ணுந்தோறும் மலைப்பு ஏற்படுகிறது. இத்துறையில் அதிகக் கவனம் செலுத்தவேண்டிய தவசியமாகும். ஐரோப்பிய, அமெரிக்க, இந்திய மேதைகள் பெருமுயற்சி மேற்கொண்டு பல அரிய விஷயங்களைக் கண்டெடுத்திருக்கிறார்கள். அவர்தம் பெருமுயற்சியால், ஆதிகால இந்திய வரலாற்றைப் பெயரளவிலேனும் நம்மால் தொகுப்பது சாத்தியமாகிறது. அத்தகைய பொது வரலாறு, பல வகைகளில் குறைபாடுடையதாயிருக்கிறது. குறிப்பாக, வேதகால வரலாறும், பண்டைய திராவிட நாகரிக வரலாறும் தெளிவாகக் கிடைக்கவில்லை. எனினும், இந்தியப்பண்பாட்டு வளர்ச்சியின் பல நிலைகளையும் ஊகித்து அறிந்துகொள்ளும் வாய்ப்புக் கிட்டுகிறது. ஓரளவிலேனும், காலவரன்முறை அடிப்படையில் இவைகளை நாம் தொகுக்கமுடிவது குறித்துத் திருப்தியடைகிறோம். பகுதி I-ன் இரண்டாவது அதிகாரத்தால் அத்தகைய வரலாற்றை இந்நூலில் காணலாம்.

**காலவரன்முறையைக் குறித்த குழப்பங்கள் (Chronological puzzles)**

வட இந்தியாவைப் பொறுத்தவரையில், கி. மு. 650 ஆம் ஆண்டுமுதல் உண்மை வரலாறு தொடங்குகிறதெனக்கூறலாம். தீபகற்ப இந்தியாவைக் குறித்து, அதற்குப் பல ஆண்டுகளுக்குப் பின்னும் திட்டமாகச் செய்தியொன்றையும் காலவரன்முறையடிப்படையில் கூற இயலாது. கி. மு. 326-ல் அலெக்சாந்தர் இந்திய நாட்டின்மீது படையெடுத்தான். அதற்கு முன்னுள்ள வட இந்திய வரலாற்றிலும்கூட, தெரிந்த விவரத்திலிருந்து யூகத்தின்பேரில் தெரியாத வரலாற்றைத் தொகுக்கிறோமேயன்றி வேறல்ல. நமக்குத்தெரிந்த ஐயமற்ற வரலாற்றுத் தொடர்புகொண்ட ஆண்டு கி. மு. 326 ஆகும்.

ஆதிகால இந்துசமய வரலாற்றைத்தொகுப்பதிலுள்ள இடர்கள் பலவற்றை இங்குத் தெரிந்துகொள்வது வரலாற்று மாணவர்களுக்குப் பயனுள்ளதாகும். பல நிகழ்சிகளைத் தகுந்த ஆதாரங்களின்மையால் தேதிவாரியாகத் தொகுக்க முடிவதில்லை. பல்வகையான தேதிகள் தரப்படுகின்றன. ஆனால், ஒன்றுக்கொன்று முரண்பாடுள்ளவைகளாதலால், பலவகை விளக்கங்களுக்கு அவை இலக்காகின்றன. 'அ', அல்லது 'ஆ' என்ற ஓர் அரசன் பட்டமெய்திய காலத்தை அடிப்படையாகக்கொண்டு, செய்திகள் சில தரப்படுகின்றன. ஆனால் 'அ', அல்லது 'ஆ', எப்பொழுது வாழ்ந்தவன் என்ற உண்மையறியாது, அதனடிப்படையிலெழும் காலவரன்முறைகளை எவ்வாறு பயன்படுத்தமுடியும்? பல

தடவைகளில் '215ஆம் ஆண்டு' என்று மொட்டையாக அறிவிக்கப் படுகிறது. சகாப்தத்தைப்பற்றிய குறிப்பு எதுவுமில்லை; அல்லது தற்கால ஐரோப்பிய நூலாசிரியர்களின் வழக்கம்போல் '1914ஆம் ஆண்டு' என்பதால் கி.பி. 1914 என்பதே என்று ஊர்ச்சிதம் செய்யக்கூடிய வழக்காறு எதுவும் நமக்கு வழிகாட்டியாகவுமில்லை. எனவே, சகாப்தத்தைக் குறிப்பது இன்றியமையாததாகிறது. எனினும், சகாப்தம் எந்த ஆண்டு முதல் தொடங்குகிறது என்ற பிரச்சினையும் கூடவேயிருந்துவரும். உதாரணமாகக் குப்தர்கால நிகழ்ச்சிகளைப்பற்றிய தெய்திக்குறிப்புகள் பல வழக்கிலிருந்தனவெனினும், அவைகளை நம்பிக்கையுடன் கையாள்வதற்கு வரலாற்று ஆசிரியனுக்குப் பல ஆண்டுகள் பிடித்தன. குப்தசகாப்தத்தின் முதல் ஆண்டு - கி.பி. 320-1 என 'பிளீட்' (Fleet) என்பவர் நிரூபித்தார். இவ்வடிப்படை உண்மை தெரிந்ததும் குப்தவமிசம் முழுவதும் அதற்குரிய வரலாற்றுக் கோவையில் அமைந்துவிட்டது. இவ்வாறு ப்ளீட் அளித்த அடிப்படைத் தெய்திக் குறிப்பொன்று புராதன இந்தியாவின் பல நூற்றாண்டுச் செய்திகளைக் கோவையாகச் செம்மைப் படுத்துவதற்கு உதவியது. இந்தோ–சித்திய அல்லது குஷணர் வரலாற்றைத் தெளிவுபடுத்தும் கல்வெட்டுகள் ஏராளமாகக்கிடைக்கின்றன. அவைகளில் தெய்திக்குறிப்புகளும் காணப்படுகின்றன. உதாரணமாகத் தெய்திக்குறிப்புடன் கூடிய சான்று ஒன்றில் '98 ஆம் ஆண்டில்' என்ற வாசகம் காணப்படுகிறது. இன்றுவரை, எந்த சகாப்தத்தின் 98 ஆம் ஆண்டு என்று நம்மால் அறியக்கூடவில்லை. இதன் விபரீதவிளைவு, தலைசிறந்த வமிசமொன்றின் வரலாற்றைக் கோவையாகத் திடமுடன் நம்மால் எடுத்தியம்ப இயலவில்லை. இந்திய வரலாற்றின் முக்கியப் பகுதியொன்று இன்றும் கண்ணும்பூச்சி விளையாட்டாக இருந்து வருகிறது. காலவரன்முறைபற்றிய இப்பெருங் குழப்பத்தால் கிறிஸ்து சகாப்தத்தின் முதல் இரு நூற்றாண்டுக்கால, சமய, இலக்கிய, கலை, அரசியல் வரலாறு முற்றுப்பெறாத வெறுங்கதையாக இருந்து வருகிறது.

இந்தியநாட்டில், சற்றேறக்குறைய முப்பதிற்கும் மேற்பட்ட சகாப்தங்கள் நிலவிவந்திருக்கிறன.[1] சகாப்தங்களின் தொடக்கக் காலங்களைத் தீர்மானிப்பதில் வானநூல் வல்லுநர்களின் கருத்து

[1] கன்னிங்ஹாம் (Cunnigham) என்பவரின் இந்திய சகாப்தங்களை விளக்கும் நூலொன்று (Book of Indian Eras 1883) 27 சகாப்தங்களைப் பற்றி விவாதிக்கிறது. மற்றும் பல சகாப்தங்களிருந்தன என்பதைச் சான்றுகளிலிருந்து அறியலாகும்.

சங்கவாதிகள் அறிந்திருப்பதால், மோசமான காலங்களில் தம் கூலியைக் குறைக்க முற்படுவதையும் தடுத்துவிடுகிருர்கள். நடைமுறையில், கீன்சு (Keynes) என்பார் கூறியுள்ள முறையிலேயே மந்த காலங்களுக்கு மாற்றுக் காண முயலவேண்டும். அதாவது, கூலிகளை மிக அதிகமாகக் குறைத்துவிட்டாலுங்கூட, இக் குறைப்பு கூலிபெறுவோரிடையே முழு வேலையுடைமையைப் பேணிக் கொள்ளும்; இதைப்போலவே தம் வருமானங்களில் ஏற்படும் அதிகப்படியான குறைவு, சுயேச்சைத் தொழிலாளர்களிடமும் முழு வேலையுடைமையைப் பேணிக்கொள்ளும்.

## 2. கூலிகளின் பொது அளவு நிலை

ஒரு தொழிலாளி பணமாகப் பெறும் கூலியைவிட (money wage) அப் பணத்தைக்கொண்டு வாங்கும் பொருள்களின் அளவே அவனுக்கு மிகவும் முக்கியமானதாகும். இவன் பெறும் பணக் கூலியைவிட, இவனது வாழ்க்கைத்தரச் செலவுகள் உயர்ந்து விட்டால், இவன் பிழைப்பு மோசமாகிவிடுகிறது; இவன் பெறும் உண்மையான கூலி (real wage) குறைந்துவிடுகிறது.

இதனுல்தான் தொழிற்சங்கங்கள் தம்மால் முடிந்தபோதெல்லாம் தம் தொழிலாளர்கள் உண்மையான கூலியில் உயர்வு பெறுதற்கே முனைகின்றன. பணக் கூலியில் ஏற்படும் உயர்வானது உழைப்பின் ஆக்கத்திறத்தின் இணையான உயர்வோடு பொருந்தி விட்டால், வாழ்க்கைத்தரச் செலவு உயரவே மாட்டாது; ஏனென்ருல், இக் கூலி உயர்வால் பெறும் அதிகப்படியான செலவு சக்தியானது இதற்கு இணையான அதிகப்படியான பொருள் ஆக்கத்தால் ஈடுசெய்யப்பட்டுவிடும். அப்படியில்லாமல், இணையான ஆக்கத் திறத்தில் எவ்வித உயர்வுமின்றி, பணக் கூலியில்மட்டும் உயர்வு ஏற்பட்டால், அப்பொழுது வாழ்க்கைத்தரச் செலவுகள் கூடுதற்கு வாய்ப்பேற்படுகிறது. ஏனென்ருல், தொழிற் செலவுகளில் ஏற்படும் உயர்வானது நுகர்வோருக்கு மாற்றப்பட்டுவிடுகிறது. இதனுல் பொருள்களின் விலை கூடி, வாழ்க்கைச் செலவும் அதிகரித்து விடுகிறது. அப்படியில்லையென்ருல், வேலையின்மை ஏற்பட்டு விட நேரும். ஏனென்ருல், பொருள்களின் இறுதிநிலை ஆக்க மதிப்பெல்லாம் ஒரே நிலையில் இருக்கும்பொழுது, சில நிறுவனங்களால், அதிகப்படியான கூலியைக் கொடுத்து, முன்புபோல் மிகுதியான தொழிலாளர்களை வேலைக்கு வைத்துக்கொள்ள முடிவதில்லை. இதனுல் அவை தொழிலாளர்களைக் குறைக்க முற்படுகின்றன.

புதுமையான நெறிகளையும் முறைகளையும் புகுத்தக்கூடிய, மூலதனத்தை நிறைய முதலீடு செய்து, ஒரு தொழிலகத்தைப்

களை யுண்டுபண்ணுகின்றன. பிரிட்டிஷ் ஆட்சியைக் குறித்த கால ஆராய்ச்சி அத்துணைக் கடினமாக இல்லை. பழங்கால, புதிய ஆராய்ச்சியாளர்களிடையில் அவ்வப்போது சில கருத்து வேறுபாடுகளும், ஒரு சில குழப்பங்களும் காணப்படுகின்றன வெனினும், அவை அதிக சிரமம் கொடுப்பதில்லை. உதாரணமாக, அறிஞர்களுக்குள் பதினேழாம் நூற்றாண்டுச் செய்திகளில் பத்துத் தினங்கள், பதினெட்டாம் நூற்றாண்டில் பதினொரு தினங்கள் என்ற அளவிலேயே இக்கருத்து வேற்றுமைகள் காணப்படும்.[1]

**இந்து வரலாற்றை விளக்கும் அறுவகைச் சான்றுகள் (Six classes of Sources of Hindu History)**

கி. மு. 650ஆம் ஆண்டிற்கு மேற்பட்ட இந்து வரலாற்றிற் குரிய அடிப்படைச் சான்றுகள் அல்லது நூலாசிரியர் தரும் செய்திகளைச் சற்று ஆராய்வோம். இந்நாட்டிலகப்படும் சான்று களை முறையே ஐம்பெரும் பகுதிகளில் அமைக்கலாகும்: (1) கல் வெட்டுகள் அல்லது வெட்டெழுத்துச் சான்றுகள் (Inscriptions or Epigraphic-evidence), (2) நாணயங்கள் அல்லது நாணயச் சான்றுகள் (Coins or numismatic evidence), (3) நினைவுச் சின்னங்கள், கட்டடங்கள், கலைப் பொருள்கள், மற்றும் புதை பொருள்கள் (Monuments, buildings and workes of Art or Archaeological evidence) (4) இலக்கியங்களில் பொதிந்து கிடக்கும் தேச இயல்புகள் (Tradition, as recorded in literature) (5) புராதன வரலாற்று நூல்கள். இவைகளில் சில சம காலத்தவைகளாகவும், மற்றும் பல பிற்காலத்தவைகளாகவு மிருக்கலாம். அடிப்படைச் சான்றுகளின் வரிசையில் ஆறுவதாக விளங்குவது அன்னியர் இந்நாட்டைக் குறித்து விட்டுச்சென்ற நூல்கள். பலநாடுகளிலிருந்து அன்னியர் சிலர் இந்நாட்டிற்கு யாத் திரை மேற்கொண்டு விஜயம்செய்தவர்கள். நூலாசிரியர்களில் கிரேக்க, சிங்கள, சீனதேசத்தவர்கள் குறிப்பிடத்தக்கவர்களா

[1] நூற்றாண்டுகள் செல்லச் செல்ல, உரோமானியச் செய்திப் பட்டியலில் (Roman calender) பல குழப்பங்கள் ஏற்படலாயின. 1582ஆம் ஆண்டில் அவைகளைச் சீர்திருத்துவதற்கு பதின்மூன்றும் கிரகரி (Gregory XIII) என்னும் போப்பாண்டவர் முயன்றார். அவர் கருத்தின்படி 158_ஆம் ஆண்டு அக். 5 என்னும் தெய்தியை அதே ஆண்டு அக். 15 எனக் கொள்ளவேண்டுமென்று. முடிவாயிற்று. போர்த்துகீசியர், ஃபிரெஞ்சு காரர் போன்ற பல நாட்டினர் இச்சீர்திருத்தத்தை ஏற்றனர். 1752ஆம் ஆண்டு வரை பிரிட்டனும், அயர்லாந்தும் போப்பாண்டவரின் கருத்தை ஏற்க வில்லை. 1752ஆம் ஆண்டு செப்டம்பர் 3 ஆம் தேதியை அதே ஆண்டு செப்டம்பர் 14ஆம் தேதியாக ஏற்கவேண்டுமெனப் பாராளுமன்றம் சட்ட மொன்றைப் பிறப்பித்தது. இக்கணக்கு முறையில் பதினொரு நாட்கள் விடப்பட்டன. பழம் முறையை 1917ஆம் ஆண்டு வரையில் ரஷ்யா கடைப்பிடித்தது. அப்போது பதின்மூன்று நாட்கள் வரை கணக்கிலடங்க வில்லை.

இங்ஙனம் தமது தொழிற்சாலைப் பொருள்களுக்கு விலை ஏறும் பொழுதெல்லாம் கூலி உயர்வும் வேண்டுமென்று கேட்பவர்கள், அப் பொருள்களுக்கு விலை குறையும்போதெல்லாம், தம் கூலியையும் குறைத்துக்கொள்ள இசையவேண்டும்; இந்த நிலையில்கூட, இவர்கள் வேறோரிடத்தில் வேலை பெறமுடியுமென்றால், இவ்விதம் ஏற்படும் விலைக்குறைவைக் கட்டுப்படுத்திவிடக்கூடும்.

பொருள்களின் விலை ஏறும்பொழுது கூலி உயர்வு கொடுப்பதும் அவை குறையும்பொழுது கூலியைக் கொஞ்சம் குறைப்பதும் நடைமுறையில் இருக்கின்றன. என்றாலும், இலாபங்களைவிடக், கூலிகள் அதிகமாக ஒரு நிலையில் நிற்கின்றன. ஏனென்றால், பொருள்களின் விலை கூடினால் இலாபம் அதைத் தன் பக்கத்தில் சேர்த்துக்கொள்ளுவதும், விலை குறைந்து நஷ்டமேற்பட்டால் அது தன்னிடமிருந்து கொடுத்து ஈடுசெய்வதும் இன்று வழக்கமாக இருக்கிறது.

பணமாகப் பெறும் கூலியிலிருந்து மாறுபட்ட, உண்மைக் கூலியின் (real wage) பொது அளவானது தேசீய வருமானத்தில் உழைப்பிற்குள்ள பங்கை ஓரளவு சார்ந்தே அமைகின்றது; இதுவும் வியாபார நிலைகளில் அவ்வப்போது ஏற்படும் மாற்றங்களுக்குத்தக மாறிமாறி அமையக்கூடும். ஆனால், தலா ஒவ்வொருவரும் ஆக்கி வெளியிடும் பொருள் அளவுகளாலேயே இது முழுக்கமுழுக்கக் கட்டுப் படுத்தப்பட்டிருக்கிறது. மேலை நாடுகளில், கடந்த ஐம்பது, நூறு ஆண்டுகளில் தலா ஒவ்வொரு தொழிலாளிக்கும் உரிய ஆக்கம் இரண்டு மூன்று மடங்குகள் பெருகிவிட்டதால், இந் நாடுகளின் உண்மைக் கூலிகளும் இரண்டு, மூன்று மடங்குகள் பெருகியுள்ளன. இவ்விதம் ஒவ்வொரு தொழிலாளியின் பொருளாக்கமும் மிக மிக உயர்ந்திருப்பதால், ஏனைய வளர்ச்சியில் பின்தங்கிய நாட்டுத் தொழிலாளர்களின் உண்மைக் கூலியைவிட, இவர்களின் உண்மைக் கூலி மிகவும் அதிகமாக இருக்கிறது. இங்ஙனம் ஒவ்வொரு தொழிலாளிக்கும் அதிகமான பங்கு கொடுக்கவேண்டு மென்றால், இவர்கட்குப் பங்கிட்டுக் கொடுப்பதற்கு வேண்டிய மிகப் பெரிய இருப்பு இருக்கவேண்டுமல்லவா? ஒவ்வொருவருக்கும் பெரிய துண்டு ரொட்டி வேண்டுமென்றால், பகிர்ந்துகொடுக்கப் போதிய, பெரிய ரொட்டியே இருக்கவேண்டுமல்லவா?

## 3. ஒரு தொழிலுக்குள்ளேயே சம்பாத்தியத்தில் வேறுபாடுகள்

ஒரு தொழிலை எடுத்துக்கொண்டால், இதில் பல்வேறு விதங்களும், தரங்களும் உடைய தொழிலாளர்கள் அடங்கியிருப்பர்.

மீரிலும், மத்திய இந்தியாவிலுள்ள தார் (Dhar) பகுதியிலும், கண்டெடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுகள் சிலவற்றில், நாடகப்பகுதிகள் சில பொறிக்கப்பெற்றுள்ளன. சித்தூர்க்கோட்டைத்தூபியிலுள்ள கல்வெட்டொன்றில் கட்டடக் கலையைப்பற்றிய குறிப்புகளும், இந்திய சங்கீதக் கருவியான வீணையையும் அதன் இசையையும் பற்றிய பல குறிப்புகளும், சென்னை மாவட்டத்திலுள்ள புதுக்கோட்டையிலுள்ள கல்வெட்டுகளிலும் காணப்படுகின்றன. உலோகச் சாசனங்களில், ஒரு சில படையல்களாகக் காணப்படுகின்றன. கோரக்பூர் ஜில்லாவில் கண்டெடுக்கப்பெற்ற 'ஷோகௌரா'ச் சாசனம் (Sohgaura plate) அரசாங்கக் கிடங்குகளை (Store-houses)ப் பற்றியதாகவுள்ளது.

ஆயிரக்கணக்கில், இத்தகைய சாசனங்கள் வரிசைப்படுத்தப்பட்டும், வெளியிடப்பட்டுமிருக்கின்றன. குறிப்பாகத் தீபகற்ப இந்தியாவில் இவைகளை ஏராளமாகக் காணலாம்.

**நாணயங்கள்** (Coins)

நாணயங்களில் பொறிக்கப்பெற்றிருக்கும் கதைகள் உண்மையில் நாம் மேற்குறித்த சான்று வகையைச் சேர்ந்தவையேயாகும். என்றாலும் அவைகளைத் தனியாக ஆய்வதே முறை. நாணயங்களை ஆய்ந்து வரலாறு அறிவதற்குத் தனித்திறமை வேண்டும். செய்திகளெதுவுமின்றி - மழுங்கலாக வுள்ள நாணயங்களை ஆய்ந்து, அக்கால நிலைகளை ஒருவாறு உணரக் கூடும். பழங்கால நிலைகளை இந்நாணயங்கள், நன்கு விளக்க வல்லவையாக இருக்கின்றன. நாணயங்களில் பொறிக்கப்பெற்றிருக்கும் செய்திக்குறிப்புகள், கால ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுகின்றன. குறிப்பாக, இஸ்லாமிய ஆட்சியைக் குறித்தபொழுது வரலாற்றை நூல்களின் உதவிகொண்டு அறிகிறோம். ஐயப்பாடுகள் தோன்றுமிடங்களிலெல்லாம் நாணய ஆராய்ச்சி மிகவும் உதவுகின்றது. சந்தேகத்திற்கிடமான செய்திகளையும், குழப்பமிக்க காலநிர்ணயத்தையும் நாணய ஆராய்ச்சி வாயிலாகத் தெளிவுபடுத்தி நீக்கலாகும். பாக்ட்ரிய, இந்தோ-கிரேக்க, இந்தோ பார்த்திய வமிசங்களைப்பற்றிய தெளிவற்ற வரலாறு, நாணய ஆராய்ச்சியின் வாயிலாக நமக்குக் கிட்டியுள்ளன. அவ்வமிசங்களைப் பற்றிய நம் அறிவிற்கு நாணயங்களே ஆதாரமாக விளங்குகின்றன.

**புதை பொருள்கள் தரும் வரலாறு** (Archaeological Evidence)

நாம் மேற்குறித்த நாணயம், மற்றும் சாசன ஆராய்ச்சி நீங்கலாக, பண்டைய கட்டடங்கள், நினைவுச்சின்னங்கள், கலைப்

டன்னைத் தோண்டிவிட்டால், இரண்டு மடங்கு கூலி பெறுவார். ஒரு நாளைக்கு ஒரு டன் தோண்டுபவரைவிட இவருக்கு இருமடங்கு கூலி தரப்படும்.

இதர துறைகளில், அதாவது, அரசாங்கப் பொதுப் பணிகள், அலுவலகப் பணிகள் என்பனவற்றில் செய்யப்படும் வேலையின் விளைவைப்பொறுத்துக் கூலியை நிர்ணயிப்பது சாத்தியமில்லை. செய்யப்படும் வேலையின் தரத்தை நிர்ணயிப்பது கடினமாயிருக்கும். இன்னும் சில துறைகளில், செய்யப்படும் வேலையின் அளவைக் கொண்டு கூலியை நிர்ணயிக்க முற்பட்டால், அது வேலைத் தரத்தைப் பாதித்துத் தொழில்நுட்பத் திறமையைச் சீர்குலைத்து விடும். ஆனாலுங்கூட, இயந்திரப் பொருளாக்கம், சுரங்கத் தொழில், கட்டடத் தொழில் ஆகியவற்றில் செய்யப்படும் பெரும்பாலான வேலைகட்கு அவற்றின் அளவைக்கொண்டே கூலிகள் வழங்கப்படுகின்றன. இங்ஙனம் கொடுப்பது ஏற்புடையதுதானா?

எனக்கு இது சந்தேகமேதுமின்றி ஏற்புடையதாகவே தோன்றுகிறது. செய்யும் வேலைக்கும் பெறும் கூலிக்கும் இடையே நெருங்கிய உறவுப் பிணிப்பு இருக்கும்வரை, அதிகப்படியாக உழைத்து அதிகமான கூலி பெறவேண்டுமென்ற முனைப்பும் முயற்சியும் எப்போதும் இருக்கும். தன்னோடு உள்ள ஒருவன், தன்னைவிடக் குறைந்த வேலையைச் செய்துவிட்டுத் தன்னைப்போலவே கூலி பெறுவதைப் பாடுபட்டு முயன்று உழைக்கும் ஒரு தொழிலாளி கண்டால் மனம் தளர்வான்; தன் உழைப்பு வேகத்தை மட்டுப்படுத்திக்கொள்ளவே முயல்வான். வேலையின் அளவைக்கொண்டு கூலி கொடுப்பதென்பது நியாயமான முறை என்பதோடு, அதிகப்படியான விளைவைப் பெருக்கவும், அதன் வாயிலாக அதிகப்படியான உண்மைக் கூலிகளைக் கொடுக்கவும் தூண்டும் ஒருவகை ஆற்றல் வாய்ந்த முறையுமாகும். சோவியத் ருஷியா இதை நன்கு உணர்ந்திருப்பதால்தான், இயன்ற துறைகளில் எல்லாம், வேலையின் அளவைப்பொறுத்தே கூலியை வழங்குகிறது.

ஆனால், கிரேட் பிரிட்டனில் உள்ள பல தொழிற்சங்கங்கள் இவ்விதம் வேலையின் அளவைப்பொறுத்துக் கூலி கொடுப்பதை ஏற்க மறுத்து, நேரவீதக் கூலி (time - rates) வேண்டுமென்று வற்புறுத்துகின்றன. கடந்த காலங்களில் மோசமாக நடந்துகொண்ட சில முதலாளிகளின் போக்கே ஓரளவு இந்த நிலைக்குக் காரணம் என்று சொல்லலாம். வேலைவீத அடிப்படையின் உந்துதலால் தமது தொழிலாளர்கள் நிறைய வேலைபார்க்க முடிகிறது என்பதைக் கண்டவுடன், இந்த வேலைவீதக் கூலிகளைக் குறைத்து

களைப் பரிசீலித்து, வரலாற்றுச் செய்திகளை மெல்லமெல்லக் கண்டறிவதில் பல இன்னல்கள் உள்ளன. அவை வரலாற்றுக் கண்ணுடன் எழுந்தவையல்ல. இலக்கண நூல்களிலிருந்து, வரலாற்றுச் செய்திகள் அங்கொன்று இங்கொன்ருகச் சுரண்டி எடுக்கப்படுகின்றன. சரித்திரச் செய்திகளை அடிப்படையாகக் கொண்ட ஒருசில நாடகங்கள், முக்கியத் தகவல்கள் சிலவற்றை அளிக்கின்றன. கி. மு. 326-க்குமேலும் 'மரபுச்'செய்திகளையொட்டியே வரலாறு பெரும்பாலும் அமைகிறது.

**இந்து இந்தியாவில் வரலாற்று இலக்கியங்களின்மைக்கு உரிய காரணங்கள்** (Absence of Hindu historical literature explained)

இஸ்லாமியராட்சிக் காலத்திற்கு முற்பட்ட இந்திய இலக்கியங்கள், வரலாற்றிற்கு எவ்வகையிலும் பயனற்றவை என்னும் கருத்தில் ஓரளவு உண்மையிருக்கிறதெனினும், அக்கருத்தை முழுவதும் ஏற்பதற்கில்லை. வடமொழி இலக்கியங்கள் பல, பிராமணர்களால் இயற்றப்பெற்றவை. அவர்களுக்கு வரலாறு எழுதுவது முக்கிய நோக்கமாக இருக்கவில்லை; பிற விஷயங்களில் அவர்கள் நாட்டமுள்ளவராயிருந்தனர். ஆனால் மன்னர்களுக்குத் தங்கள் சிறப்புகளை அழியாது என்றும் நிலைபெறச் செய்ய வேண்டுமென்ற அவா இருந்தது. இதற்கான முயற்சிகளையும் அவர்கள் மேற்கொண்டனர். அவர்தம் முயற்சி அதிக வெற்றியடையவில்லை என்னும் வருந்தத்தக்க நிலைக்கு, மன்னர்களைக் குறைகூறிப் பயனில்லை. மிக்க பிரயாசையுடன் தயாரிக்கப் பெற்றும், வரிசைப்படுத்தப் பெற்றுமுள்ள இச்சான்றுகள், இயற்கைச் சக்திகளாலும், பூச்சிகளாலும் அழிக்கப்பெற்றதோடு, நாட்டிலே ஏற்பட்ட அரசியல் குழப்பங்களால் பெரும்பாலனவை மறைந்துவிட்டன. பண்டைக்கால இந்து மன்னரவைகளில் கவிகளும், ஏடுகள் பதிவோரும் நிறைந்திருந்தனர். நாட்டிலேற்படும் சிறப்புகளையெல்லாம் குறித்துவைப்பதும், ஆட்சியின் புகழ் பாடுவதும் அவர்தம் கடமையாக இருந்தது. அத்தகைய ஏடுகளின் பகுதிகளை 'கர்னல் டாட்' (Colonel Tod) என்பவர் பாதுகாத்து வெளியிட்டார். 1829ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற 'ராஜஸ்தானப் பழம் பெரும்பொருள்களும், வரலாறும்' (Annals and Antiquites of Rajasthan) என்னும் நூலின் ஆசிரியர் அவரேயாவர். அந்நூலைப்போன்ற பிறிதொன்று இல்லை. பழம்பெரும் மன்னர்கள் தயாரித்த, சரித்திரக் குறிப்புகள், நினைவுகூர்வதற்கும் இயலாத வகையில் அழிந்துவிட்டன. பழமையான 'புராணங்களில்' வமிசாவளிகள், அரசகுடும்பத் தொடர்புகள் போன்ற சில செய்திக் குறிப்புகள் அடங்கி

யுள்ளன. சில கல்வெட்டுகளின் முகவுரையில் தல வரலாற்றுக் குறிப்புகள் தரப்படுகின்றன. எனவே, கருத்துகளுக்கு வரலாற்றுணர்வு இல்லையென்பது உண்மையாகாது. இலக்கியத் துறையில் அதிகக் கவனம் செலுத்திவந்த பிராமணர்களுக்கு வரலாறு எழுதவேண்டுமென்ற ஆர்வம் மிகுந்திருக்கவில்லை. அவர்களியற்றிய வரலாற்றுத் தொடர்புள்ள 'பிரசஸ்தி' என்னும் செய்யுள்கள் சில இலக்கியச் சுவைமிக்கவையாக விளங்குகின்றன. வடமொழியிலுள்ள சிறந்த வரலாற்று இலக்கியங்கள் சில எல்லைப் பிரதேசங்களிலிருந்து எழுந்தவை. பன்னிரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற காஷ்மீர் நாட்டு 'ராஜதரங்கிணி' என்னும் சந்தத்துடன்கூடிய சுவைமிக்க செய்யுள்கள், யாவற்றிலும் சிறந்து விளங்குகின்றன. ஐரோப்பியர் கருத்தினடிப்படையில் அந்த நூலையும்கூட வரலாற்று நூல் என ஏற்கவியலாது. பிராமண நூலாசிரியர் பலர், நம்பகமுள்ள வரலாற்றுச் செய்திகளுடன், காதல் ரசனையுடன்கூடிய நூல்கள் சில இயற்றினர். இவர்களில் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த பாணனை (Bana) முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். பாணன் இயற்றிய 'ஹர்ஷனின் சாதனைகள்' என்னும் அரும்பெரு நூலின் உதவியுடன், தானேஸ்வர கனோஜ் நாடுகளின் தலைவன் வரலாறு நன்கு அறியப்படுகிறது.

வரலாற்று நூல்கள் அல்லது வரலாற்றுச் சார்புடைய நூல்கள் பல தென்னிந்தியமொழிகளில் உண்டு. எச். எச். வில்சன் (H. H. Wilson) என்பவர் தொகுத்தளித்திருக்கும் 'மெக்கன்சி தொகுப்புகளை' (Meckenzie Collection) வரலாற்றுச் சான்றுகளெனக் கருதலாம். அக்கையேடுகளில் 'வரலாறு' ஓரளவு காணப்படுகிறது.

**அன்னியர் சாட்சியம் (Foreign Evidence)**

பண்டைய இந்து வரலாறு தொகுப்பதற்கு, நாம் மேற் குறித்த சான்றுகள் இன்றிமையாத அடிப்படைகளாவதோடு, அன்னியர் சிலர் தரும் தகவல்களும் மிகவும் உதவுகின்றன. கி மு. ஐந்தாம் நூற்றாண்டின் கிரேக்க நூலாசிரியர்களான ஹீரோடோடசு (Herodotus), டீசியஸ் (Ktesias) ஆகியோர் தாங்கள் கேட்டறிந்த செய்திகள் சிலவற்றைத் தருகின்றனர். எனினும், மகா அலெக்சாந்தர் இந்தியாமீது படையெடுத்த (கி.மு. 326—323) காலம் வரையிலும் ஐரோப்பியருக்கு இந்திய வரலாறு திரையிடப்பட்டு மூடிக்கிடந்தது. அலெக்சாந்தரின் அலுவலர்கள் தந்த குறிப்புகள் அறியாமைத்திரையை அகற்றின. அக்குறிப்புகள் முழுவதும் இன்று அகப்படவில்லையெனினும், பிற்கால

கிரேக்க, உரோமானிய நூல்களில், குறிப்புகளின் பெரும்பகுதி காப்பாற்றப்பட்டிருப்பதைக் காணலாம். மகா அலெக்சாந்தரது படையெடுப்பை இந்து நூலாசிரியன் எவனும் குறிப்பிடவில்லை. இஸ்லாமியர் தரும் குறிப்புகளும் அதிகப் பயனளிப்பதில்லை. நான்காவது நூற்றுண்டு இறுதியில் சந்திரகுப்த மௌரியனின் அவையில் கிரேக்க தூதுவனுக இருந்த செல்யூகஸ் நிகேடர் (Seleukos Nikator) இந்தியாவைப்பற்றிய சிறந்த வரலாறு ஒன்று வரைந்தான். சிதறுண்ட அந்நூலின் பெரும்பகுதி இன்றும் நமக்குக் கிடைக்கிறது.

கி.மு. 120 ஆண்டு தொடங்கிய சீனவரலாறு நமக்குத் தேவையான செய்திகள் சிலவற்றைத் தருகிறது. கி. பி. 400லிருந்து 700 வரை பௌத்தமதத்தின் தாயகமான இந்தியாவிற்கு ஏராளமான சீனயாத்திரிகர்கள் விஜயம் செய்தனர். இந்நாட்டைப் பற்றிய தகவல்களை அவர்கள் நமக்கு அளிக்கின்றனர். அன்னியர் தரும் செய்திகளில், சீனயாத்திரிகர் நமக்களித்திருக்கும் தகவல்கள் மிக அதிகமாகக் காணப்படும். கல்வெட்டுகளின் உதவியாலும் நாணய ஆராய்ச்சியின் வாயிலாகவும், சந்திரகுப்த விக்ரமாதித்தியனது ஆட்சியைப்பற்றிய சுவையற்ற வரலாறு அறியப்படுகிறது. அவ்வரலாற்றிற்கு, சீனயாத்திரிகர்களில் முதல்வனுன (கி.பி. 389-414) பாஹியான் (Fa-hsian)தரும் தகவல்கள் உயிரூட்டி, ஜீவகளை அளிக்கின்றன. அதைப்போலவே ஏழாவது நூற்றுண்டில் இந்நாட்டிற்கு விஜயம்செய்த 'ஹுயூன் ஸாங் (Hsuan Tsang) அல்லது யுவாங்-சுவாங் (Yuan-Chwang) ஹர்ஷ வர்த்தனனைக் குறித்த ரஸமான செய்திகளறிவிப்பதோடு இந்தியநாட்டின் ஒவ்வொரு பகுதியையும் பற்றிய, முக்கியச் செய்திகள் பலவற்றை அளிக்கிருன். இட்-சிங், (I-tsing) மற்றும் அவனைப்போன்ற அறுபதிற்கும் மேற்பட்ட பிற யாத்திரிகர்களும் தங்கள் பிரயாண அனுபவங்களைப்பற்றிய குறிப்புகளை விட்டுச் சென்றுள்ளனர். இந்து இந்தியாவின் பண்டைய வரலாற்று நூல் எதுவும் தெளிவற்றதும் உயிரற்றதுமாகவே காட்சியளிக்கும். யாத்திரிகர் அளிக்கும் விரிவான தகவல்கள், அவ்வரலாற்றிற்கு உயிரளித்துச் சிறப்பெய்தச் செய்கிறது.

**ஆல்பிருனி (Alberuni)**

பதினோராம் நூற்றுண்டு முற்பகுதியிலேயே, கஜினிமுகம்மது இந்திய நாட்டின்மீது படையெடுத்து வந்தபோது அவனுடன் ஆல்பிருனி இந்திய நாட்டில் புகுந்தான். கணித சாத்திரத்திலும் வான சாத்திரத்திலும் மிகவும் வல்லவனுன அவனுக்கு, 'ஆசான்'

(Master-மாஸ்டர்) என்ற பட்டப்பெயர் மிகவும் பொருத்தமாகச் சூட்டப்பட்டிருக்கிறது. இந்தியரது வாழ்க்கை முறையைக் கண்டறிவதில் தன் கூரிய அறிவை அவன் செலுத்தினான்; வடமொழியைக் கசடறக் கற்றறிந்தான். 'இந்திய நாட்டு விசாரணை' (Tahkik-I-Hind) (An Enquiry into India) என்னும் அருமையான நூல் இயற்றினான். வழியாகத் தொகுக்கப் பெற்றிருக்கும் இந்நூல், அவனது மேதைக்கும் தெளிவான கருத்துகளுக்கும் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. ஐந்து நூற்றாண்டுகளுக்குப்பின், 'அக்பரின் கொள்கைகள்' (Institutes of Akbar-Ain-i-Akbari) என்னும் அபுல் பாசலின் (Abu-l Fazl) நூலிற்கு இந்நூல் வழிகாட்டியாக இருந்தது. ஆல்பிருனியின் அடிபற்றி இந்நூல் வரையப்பட்டிருக்கிறதென்பதில் ஐயமெதுவுமில்லை; நூலின் அமைப்பு அதைத் தெளிவாக வெளிப்படுத்துகிறது.

**இஸ்லாமியர் தரும் வரலாறுகள்** (Muslim histories)

பிராமணரைப் போலன்றி இஸ்லாமியருக்கு வரலாறு எழுதுவதில் ஆர்வமிருந்தது. இதனால் ஆசிய நாட்டிலாண்டுவந்த இஸ்லாமிய வமிசம் ஒவ்வொன்றின் சிறப்பையும் எடுத்துரைக்கும் நூலாசிரியன் ஒருவன் இருப்பது தெரியவருகிறது. இந்திய வரலாற்றையே அவர்கள் எடுத்துரைத்தனர் என்றாலும், பாரசீக மொழியில் அவர்கள் நூலியற்றினர். நூலில் பெரும்பகுதி இஸ்லாமியரின் சிறப்புகளை விவரிப்பதில் செலவிடப்படுகிறது என்றாலும், ஆங்காங்கே இந்தியவரலாறு குறிக்கப்பெற்றுள்ளது. ஒரு சில நூல்கள், இந்திய வரலாறாகவே எழுந்தவையாகக் காணப்படுகின்றன. மிகக் கவனமுடன் எழுதப்பெற்ற, பெரிஷ்டாவின் (Firishta-Ferishta) நூல் அவையாவற்றிலும் சிறந்து விளங்குகிறது. அக்பர், ஜஹாங்கீர் ஆகியோரின் ஆட்சிக்காலங்களில் அந்நூல் உருப்பெற்றது. எல்பின்ஸ்டன் (Elphinston) எழுதிய 'இந்திய வரலாற்றிற்கு' பெரிஷ்டாவின் நூல் ஆதாரமாக விளங்குகிறது.

'இந்திய வரலாற்றாசிரியர் கூறும் இந்திய வரலாறு' (The History of India as told by its own Historians) (லண்டன் 1867-77) என்னும் நூல் எட்டுப் பகுதிகள் கொண்டது. சர் ஹென்றி எலியட் (Sir Henry Elliot) என்பவரும், பேராசிரியர் ஜான் டௌசன் (John Dowson) என்பவரும் வெளியிட்டுள்ள அந்நூல் பாரசீக மொழியிலுள்ள இந்திய வரலாற்றின் சாரமாகவும் மொழிபெயர்ப்பாகவும் அமைந்திருக்கிறது. எஸ். எச். ஹோடிவாலா (S.H. Hodivala) என்பவரின் 'இந்து-முஸ்லீம் வரலாற்று

ஆய்வு (Studies in Indo-Muslim History) (பம்பாய் 1939) என்னும் நூல், மேற்குறித்த நூலின் விளக்கமாக விளங்குவதுடன், வரலாற்றைப் பொதுவில் நிறைவுசெய்கிறது. சர் எட்வர்ட் பெய்லி (Sir Edward Bayley) என்பவர் இயற்றிய முற்றுப்பெறாத 'குஜராத்தின் வரலாறு' (History of Gujarat) என்னும் நூல், எலியட், டௌசன் ஆகியோரின் நூல்களுக்குத் துணைபுரியும் வகையில் அமைந்திருக்கிறது. ராவெர்டி (Raverty) என்பவரின் தகபத்–இநசிரி (Tabaqat–i–Nasiri) என்னும் நூலில் ஆங்கில மொழிபெயர்ப்பும், ப்ளாக்மென், ஜாரட் (Blockmann and Jarorett) ஆகியோரின் ஐன் – இ – அக்பாரி (Ain–i–Akbari)யின் மொழிபெயர்ப்பும்; எச். பீவரிட்ஜ் (H. Beveridge) என்பவரின் 'அக்பர் நாமா' (Akbarnama) 'ஜஹாங்கிரைப் பற்றிய நினைவுகள்' (Memoirs of Jehangir) ஆகிய நூல்களின் மொழிபெயர்ப்புகளும்; 'ராங்கிங்' (Ranking) 'லோ' (Lowe) ஆகியோர் மொழிபெயர்த்துள்ள 'பதோனி' (Badaoni)யின் நூல்களும், ஔரங்கசீப்பின் ஆட்சியை விரித்துரைக்கும் புலமைமிக்க, பேராசிரியர் ஜாதுநாத் சர்க்காரின் (Jadunath Sarkar) நூலும் குறிப்பிடத்தக்கவையாக விளங்குகின்றன. 'பாபர்' முதல் 'ஔரங்கசீபின்' ஆட்சிவரையுள்ள செய்திகளடங்கிய மூல இலக்கியச் சான்றுகளின் பயனை 'முகலாய இந்திய வரலாற்றிற்குரிய அடிப்படை நூல்கள்' என்னும் தமது நூலில், எஸ். ஆர். சர்மா (S. R. Sharma) அவர்கள் நன்கு ஆராய்ந்து கருத்தறிவிக்கிறார். மேலும் பல அருமையான நூல்கள் உள்ளன. இந்த நூலின் ஆசிரியரும், (Vincent A. Smith) அக்பரது வாழ்க்கை வரலாற்றை விரிவான நூலொன்றில் கூறியுள்ளார்.

இஸ்லாமியர் ஆட்சிக் காலத்தை பொறுத்த அளவில், வரலாற்று மாணவனுக்குத் தேவையான நூல்கள் பல முன்னரே வெளியிடப்பெற்றுள்ளன. கல்வெட்டுகள், நாணயங்கள். மரபு, இலக்கியங்கள் ஆகிய சான்றுகளை ஆராய்ந்தறிந்து, மிகப் பிரயாசையுடன் தான் கண்டெடுக்கும் செய்திகளை ஒன்றோடொன்று பொருத்தி இந்துப்பகுதியை வரலாற்றாசிரியன் உருவாக்க இயலும். இஸ்லாமிய ஆட்சியை விவரிக்கும்போது அவனது நிலை அத்துணை சிரமமாக இல்லை. நூல்களில் காணப்படும் முரண்பட்ட கருத்துகளே அவனுக்குப் பெரும் தொல்லையளிக்கின்றன. காலவரன்முறையைக் குறித்த முடிவற்ற குழப்பமும், நூல் தொகுப்பதில் ஏற்பட்டிருக்கும் சிறு தவறுகளும் அவனுக்குச் சற்றுச் சிரமமாகத் தோன்றுகின்றன.

சேகரித்திருக்கும் செய்திகளை உறுதிப்படுத்துவதற்கும், ஒப்புநோக்குவதற்கு மன்றிப் பிறிதொன்றிற்கும் கல்வெட்டுகள், நாணயங்கள், சாசனங்கள் ஆகியவற்றின் உதவி அவனுக்குத் தேவையில்லை என்பது விளங்கும்.

பாரசீக மொழியிலுள்ள வரலாறுகளைத் தற்கால ரீதியில் மதிப்பிடும்போது அவை குறைபாடுள்ளவைகளாகவே இருக்கின்றன. இத்தகைய குறைபாடுகளைக் குறித்து எத்தகைய கருத்து நாம் கொண்டிருந்தபோதும், பாரசீக மொழியிலுள்ள வரலாற்றுச் செய்திகளை அடிப்படையாகக்கொண்டு, அவைகளின் உதவியின்றி வரலாறு உருவாக்குவது இயலாது. ஸ்டோரி (Storey) என்பவரின் 'பாரசீக இலக்கிய நூல்களின் பொது ஆராய்ச்சி என்னும் நூலின் (Bio-bibliographical Survey of Persian Literature, Vol. IV) நான்காம் பகுதியில் பாரசீக மொழியிலக்கியங்களில் அடங்கிய இந்திய வரலாற்றுச் செய்திகள் விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன.

**இஸ்லாமியர் ஆட்சிகாலத்திற்கு அன்னியர் தரும் சாட்சியம் (Foreign evidence for the Muslim period)**

இந்துக்களின் ஆட்சியை விளக்குவதற்கு அன்னியரது சாட்சியம் எத்துணை இன்றியமையாததாக விளங்குகிறதோ அதைப் போலவே இஸ்லாமியராட்சியை விளக்குவதிலும் அன்னியரது சாட்சியம் துணைபுரிகின்றது. ஒன்பதாம் நூற்றுண்டு முதல், இடைக்கால இந்தியாவைக் குறித்த பல தகவல்களை முஸ்லீம் வணிகர்களும் மற்றும் பல யாத்திரிகர்களும் வெளியிட்டிருக்கின்றனர். பதினைந்தாம் நூற்றுண்டு ஐரோப்பியர் சிலர் தரும் தகவல்கள் அங்கொன்றுமிங்கொன்றுமாகக் கிடைக்கின்றன. பதினாறும் நூற்றுண்டுமுதல், ஐரோப்பியர் நம்பகமுள்ள தகவல்கள் பலவற்றை அளிக்கின்றனர். இஸ்லாமியர் தரும் தகவல்களுடன் இவைகளையும் இணைத்து அதிகப் பயன்பெறலாகும். இஸ்லாமிய நூலாசிரியர், செய்திகளை வேறு கண்ணுடன் நோக்கியதால் சில செய்திகளைக் கூறுதுவிட்டனர். அக் குறைகளை நீக்குவதற்கும் வரலாற்று வாசகர்களுக்குச் சுவையளிப்பதற்கும் ஐரோப்பியர் தரும் தகவல்கள் உதவிபுரிகின்றன. குறிப்பாக ஏசுசபை மதபோதகர்கள் தரும் தகவல்கள் இஸ்லாமியர் வரலாறு சமைப்பதற்கு மிகுந்த பயனளிப்பவை. இம் மதபோதகர்கள் கல்வியறிவும், தனிப்பயிற்சியும் பெற்றிருந்ததோடு, கூரிய நோக்கமுடையவர்களாக விளங்கினர். அவர்கள் அளிக்கும்

செய்திகள் இந் நூலில் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. வரலாற்றாசிரியர்கள், பொதுவாக இச் செய்திகளில் அதிக கவனம் செலுத்துவதில்லை. ஏசுசபை மதபோதகர்களின் குறிப்புகளும், மற்றும் அன்னியரின் விசேடக் குறிப்புகளும் ஆங்காங்கே உரிய இடங்களில் எடுத்துரைக்கப்படும்.

**ஐரோப்பியர் ஆட்சி காலவரலாற்றையும் பிரிட்டிஷ் ஆட்சி கால வரலாற்றையும் தொகுப்பதற்குதவும் அடிப்படைச் சான்றுகள்**
**(Authorities for Indo-European history and British period)**

சற்றேறக்குறைய ஆயிரமாண்டுகளுக்கு முற்பட்ட அரசினருக்குச் சொந்தமான ரிகார்டுகளும், தனியாருக்குரிமையான பத்திரங்களும், ஐரோப்பிய நாடுகளில் ஏராளமாகக் கிடைக்கின்றன. இச் சுரங்கங்களிலிருந்து போதிய அளவிற்குச் செய்திகளை வெட்டியெடுக்கலாம். இந்து–முஸ்லீம் காலத்து வரலாறு தொகுப்பதற்குக் கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் காணப்படும் செய்திகளைத்தவிர வேறு அதிகமாகக் கிடைப்பதில்லை. அக்பராட்சியிலும், அவரது சந்ததியாராட்சியிலுமுள்ள சில சாசனங்கள் கிடைக்கின்றன. இருந்தும் முகலாயரைப்பற்றி நாம் அறியும் விவரங்கள் பெரும்பாலும் வரலாற்றாசிரியனின் கைத்திறனேயாம். நாணயச்சான்றுகளும், கல்வெட்டுகளும் அன்னியரின் சாட்சியங்களும் குறைபாடுகளைப் பூர்த்தி செய்கின்றன. பதினெட்டாம் நூற்றாண்டில் அத்தகைய நிலை நீடிப்பதில்லை. மகாராட்டிரர் விட்டுச்சென்ற சாசனங்கள் பல பீஷ்வாக் (Peshwa)களின் பாதுகாப்பறையில் காப்பாற்றப் பட்டிருந்தன. ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிக்குச் சொந்தமான தஸ்தாவேஜுகள், பதினேழாம் நூற்றாண்டுத் தொடக்கத்திலேயே எழுந்தவையாகும். போர்த்துகீசிய, டச்சுப் பழம் பொருள்கூடங்களில் பதினாறும் நூற்றாண்டுச் சாசனங்கள் பல காணக்கிடைக்கின்றன.

பதினெட்டாம் நூற்றாண்டு இடைப்பகுதியிலிருந்து, பிரிட்டிஷாரின் ஆட்சி தொடங்கும் காலத்தைச் சேர்ந்த, தனியார் மற்றும் அரசினருக்குச் சொந்தமான தஸ்தாவேஜுகள் ஏராளமாகக் கிடைக்கின்றன. அவைகளில் பெரும்பகுதி அச்சிடப் பெற்றும், அகர வரிசைப் படுத்தப்பெற்றும் நமக்குக்கிடைக்கின்றன. வரலாற்றின் தனிப்பகுதிகளை விரிவாக எழுத முற்பட்ட ஆசிரியர்களால், அவை பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளன. எனினும் பெரும்பகுதி இன்னும் பயன்படுத்தப்பட

வில்லை. இந்நூலைத் தொகுப்பதில், கையேட்டுப் பிரதிகளை நான் அதிகமாகப் பயன்படுத்தவில்லை. அச்சில் வெளிவந்திருப்பவைகளை மட்டிலும் கூடியவரை படித்து, உணர்ந்து, பயன்படுத்துவதற்கு முயன்றிருக்கிறேன். அவைகள் யாவையும் கற்றறிவதென்பது இயலாத காரியமாக உள்ளது. நான் கையாண்டு உபயோகித்திருக்கும் சாசனங்களைக் குறித்த விவரமான பட்டியலை ஒவ்வோர் அதிகாரத்தின் இறுதியிலும் கொடுத்திருக்கிறேன்.

**இந்திய வரலாற்று ஆராய்ச்சிக் கலையின் இன்றையநிலை (Present state of Indian historical studies)**

மூலச் சான்றுகளைப்பற்றிக் கூறிவரும் இந் நிலையில், இந்திய வரலாற்று ஆராய்ச்சித் துறையின் இன்றைய நிலையைச் சுருக்கமாக விவரிப்பது பொருத்தமுள்ளதாக இருக்குமென எண்ணுகிறேன்.

'பண்டைக்கால இந்தியாவின் வரலாறு' (Early History of India) என்னும் நூலின் முதற்பதிப்பு 1904ஆம் ஆண்டில் வெளிவந்தது. அதற்குமுன் இந்து சகாப்தத்தைப்பற்றிய பொது வரலாறெதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. இந் நூலில் காணப்படும் 'இந்து சகாப்த' வரலாறு, 1923ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற மூலநூலின் நான்காம் பதிப்பில் காணப்பெறும் விஷயங்களின் சுருக்கமேயாகும். இந்நூலில் குறித்த பகுதியை வேறு கண்ணுடன் ஆராய்ந்திருப்பதோடு, புதிய செய்திகள் சில வற்றையும் சேர்த்திருக்கிறேன். பெரும்பகுதியை மேலும் விரித்துரைக்க வேண்டும். வருங்கால ஆராய்ச்சியின் விளைவாகப் பல கருத்துகள் தெளிவு பெறக்கூடும் என்பது உறுதி.

**இஸ்லாமிய ராட்சி காலம் (The Muslim period)**

1841ஆம் ஆண்டில், எல்பின்ஸ்டன் (Elphinstone) 'இந்திய வரலாறு' (History of India) என்னும் புகழ்பெற்ற நூலை வெளியிட்டார். 1761ஆம் ஆண்டில் நிகழ்ந்த 'பானிபட்' போர் வரையுள்ள, இந்துஸ்தான அல்லது வடஇந்திய வரலாற்றை முறையாகக் கற்பதற்கு அந் நூல் வகைசெய்தது. 'பெரிஷ்டா' (Firishta), 'காபிகான்' (Khafi khan) அகியவர்களின் நூல்களைத் தழுவி எல்பின்ஸ்டன் தமது நூலைத் தொகுத்துள்ளாரெனினும், அம் முயற்சி நிலையான பயனளித்தது. எனினும், காலமாற்றங்களேற்பட்டபின், வரலாற்று ஆராய்ச்சிகளுக்கோ அல்லது

சாதாரண வாசகனுக்கோ, அந் நூலினுல் அதிகப் பயனில்லை என்று நான் கூறினுல், அது அந் நூலின் மேன்மைக்கு எவ்வகையிலும் இழுக்கு உண்டாக்கப் போவதில்லை. எல்பின்ஸ்டன் நூலியற்றியதை அடுத்து மேலும் பல மூலநூல்கள் வெளியிடப் பெற்றுள்ளன. புதை பொருளாராய்ச்சித் துறையிலும் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. புதிய கருத்துகளினடிப் படையில் திருத்தங்களேற்படுத்துவது அவசியமாகிறது. மேலும் வாசகரின் நோக்கும் மாறுபட்டிருக்கிறது. ஏடுபுனைந்த இஸ்லா மியரையடுத்து எழுதப்பெற்ற எல்பின்ஸ்டனின் புனிதநூலில் காணப்படும் செய்திகளைக்காட்டிலும், அதிக அறிவு பெறவேண்டு மென்ற அவா மேலோங்கியிருக்கிறது.

டெல்லி சுல்தான்களின் வரலாறு திருப்திகரமாக எழுதப் பெறவில்லை. சுருக்கமானதொரு வரலாற்றை நம்பிக்கையோடு எழுதுவதற்கு விரிவான அறிவுப்பெருக்கமும் தெளிவான சிந்தனை யும் தேவைப்படுகின்றன. இவ்வகையில், டெல்லி சுல்தானி யராட்சியைப் பற்றிய நூலொன்று எழுதுவதற்குப் பல்லாண்டு முயற்சி தேவையாக இருக்கக்கூடும். பதினைன்காம் நூற் ருண்டில் டெல்லியின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுச் சுதந்திர மடைந்த பாமினி, மற்றும் பல சிறிய இராச்சியங்களின் வரலாறு கள் நன்கு எழுதப்பெற்றுள்ளனவெனினும், மேலும் ஆராய்ச் சிக்கு அவை இடமளிக்கின்றன. பரந்த இந்து சாம்ராச்சிய மாகிய விஜய நகரத்தின் வரலாறு (1336-1565) ராபர்ட் சூவெல் (Robert Sewell) என்பவரின் கடுமையான முயற்சியால் முதன் முறையாக வெளியிடப்பெற்றது அதையொட்டி, ஒரு சில திருத் தங்களுடன், பல இந்திய நூலாசிரியர்கள் தத்தம் நூல்களை வெளியிட்டனர். இந்திய வரலாற்றுத் துறையில், சிறந்த ஆராய்ச்சிகள், தற்போது இந்திய மேதைகளால் மேற்கொள்ளப் படுகின்றன. இதனுல், நாட்டு வரலாற்றை எடுத்துரைப்பதி லுள்ள பொது நோக்கு முற்றிலும் மாறுபட்டிருக்கிறது. தற்கால வரலாற்றுசிரியனெருவன், பொது மக்களை அறிவுறுத்துவதற்கும், எல்பின்ஸ்டன், மில் (Mill) ஆகியோர் மேற்கொண்ட முயற்சி களுக்குமிடையே மிகுந்த வேற்றுமை காணப்படும்.

முகலாய வமிசத்தினரின் உண்மைவரலாறு தெளிவுறத் தொடங்கியிருக்கிறது. திரு & திருமதி ஹென்றி பீவரிட்ஜ் (Mr & Mrs Henry Beveridge) ஆகியவர்களின் ஆராய்ச்சிகளின் விளைவாக, பாபர், ஹுமாயூன், அக்பர் ஆகியோரது வரலாறு தெளிவுற்றிருக்கிறது. இந்நூலாசிரியரின் (V. A. Smith) முயற்சி

யால், அக்பரது வாழ்க்கையைக் குறித்த புதிய தகவல்கள் பல வெளிவந்துள்ளன. எல்பின்ஸ்டனால் திருப்திகரமாகக் கையாளப் பெறாத ஜஹாங்கீரின் சுவைமிக்க வரலாறு, பெனிபிரசாத் (Beni Prasad) என்பவரால் தற்போது வெளியிடப்பெற்றிருக்கும் 'ஜஹாங்கீரின் வரலாறு' (History of Jehangir) என்னும் நூலில் நன்கு விளக்கம் பெறுகிறது. பெனிபிரசாதின் நூலில் மேலும் பல ஐரோப்பிய சான்றுகளின் விரிவான பட்டியல் காணப்படுகிறது.

ஷாஜஹான் ஆட்சியில், வாரிசுரிமைப் போருக்கு முந்திய வரலாறு, மூலநூல்களை ஆராய்வதின்மூலம் தெளிவுறவேண்டும். கைவசமுள்ள ஆதாரங்களைப் பயன்படுத்தி நானளிக்கும் வரலாறு ஒருவகையில் புதுமையானது. பல ஆண்டுகளில் நீடித்த சிக்கல்கள் நிறைந்த ஔரங்கசீப்பின் ஆட்சியைப் போதிய கவனத்துடன் கற்று, ஆய்ந்து பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் அவர்கள் (Professor Jadunath Sarkar) வெளியிட்டிருக்கிறார். அவரது நூல் இன்றியமையாததொரு சாதனமாக விளங்குகிறது. இர்வைன் (Irvine), சர்க்கார் (Sarkar), டாக்டர் ஸ்பியர் (Dr. Spear) ஆகியோரது நூல்கள், பிற்கால முகலாயரின் வரலாற்றைத் தெளிவுபடுத்துகின்றன.

### பிரிட்டிஷாரின் ஆட்சிகாலம் (The British period)

ஜேம்ஸ் மில் (James Mill) என்பவரின் பிரசித்திப்பெற்ற 'பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாறு' (History of British India) என்னும் நூல், முதன்முறையாக 1817ஆம் ஆண்டில் வெளிவந்தது. ஆசிரியரின் சொந்த மொழியிலேயே கூறும்போது, 'இந்தியாவுடன் நேரடித்தொடர்புகொண்ட பிரிட்டிஷ் விவகாரங்களின் வரலாறு' என்பது பொருந்தும். அத்தகைய தகவல்களை முதன் முறையாக அந் நூல் தொகுத்தளித்தது. 1805-லிருந்து 1835 வரை, 'மில்' எழுதிய நூலையடுத்து, எச். எச். வில்சன் என்பவர் நூலொன்று இயற்றினார். குறைபாடுகள் பல காணப்படுகின்றனவெனினும், ஆய்வுக்குரிய துணைப் புத்தகமாக அது மிகவும் பயன்படுகிறது. நூற்றுநாற்பது ஆண்டுகளுக்குமுன் அது இயற்றப்பெற்றது. எனவே, முகவுரைநூல், என்பதைக் காட்டிலும் அதிகமான சிறப்பு தற்போது அதற்கில்லை.

பிரிட்டிஷ் ஆட்சிகால வரலாறு ஒருவகையில் முழு உருப் பெற்றிருக்கிறது என எண்ணலாம். ஆயினும் அந்த நோக்கமுடன்

திருப்திகரமான வரலாறு எதுவும் எழுதப்பெறவில்லை. சர். ஏ. லயால் (Sri. A. Lyall) என்பவரின் 'இந்தியாவில் பிரிட்டிஷ் டொமினியன்' (British Dominion in India) என்னும் நூல் அதிகார வர்க்கத்தின் செல்வாக்கை விளக்குவதாயிருக்கிறது. சர் டபிள்யூ. டபிள்யூ, ஹண்டர் (Sir W. W. Hunter) என்பவர் எழுதியுள்ள 'பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாறு' (History of British India) என்னும் நூல் இருபகுதிகள் வெளிவந்த பிறகு நின்றுவிட்டது. உதாரக்கொள்கையை இந்நூல் அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஹண்டரின் உதவியாளராகப் பணியாற்றிவந்த, காலஞ்சென்ற பி.இ. ராபர்ட்ஸ் (P.E. Roberts) என்பவர், ஹண்டரின் முயற்சியைப் பூர்த்திசெய்கின்ற வகையில் 'பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாறு' என்னும் நூலியற்றினர். புலமையும் அழகும்கொண்டு மிளிரும் இந்நூல் 1932லிருந்து 1947 வரை மூன்று பதிப்புகளாக வெளிவந்துள்ளது. சிப்பாய் கலகத்திற்குமேற்பட்டு இந்நூலின் பயன் அதிகமாக இல்லை. தாராளக்கொள்கையின் விபரீதப் போக்கு காரணமாக, ராபர்ட்ஸ் சற்று அதிர்ச்சியடைந்திருக்க வேண்டும். 1918–ல் மாட்ண்ட்போர்டு சகாப்தத்தின் தலைவாயிலோடு, 'கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றின்' (The Cambridge History of India) இருபகுதிகளும் (பகுதி v–ம் vi–ம்) முடிகின்றன. இவை மிகச் சிறந்த நூல்களென்பதில் ஐயமில்லை. ஆட்சிமுறைகளைக்குறித்த வர்ணனைகளில் மிக்க கவனம் செலுத்தியதால், சுவையான பொது வரலாற்றை இந் நூல்கள் கொண்டிருக்கவில்லை. இவ்வகையில் ஐந்தாம் பகுதி ஆறுவது பகுதியைக் காட்டிலும் சிறந்ததெனலாம். பிரிட்டிஷ் இந்திய வரலாற்றில் 'இந்திய நோக்கு' என்னும் புதுக்கருத்தின் சாயல், எட்வர்ட் தாம்ப்ஸன் (Edward Thompson), ஜி.டி. காராட் (G.T. Garratt) ஆகியோர் இயற்றியுள்ள இந்தியாவில் 'பிரிட்டிஷ் ஆட்சியின் எழுச்சியும் நிறைவும்' (Rise and Fulfilment of British Rule in India) (1934) என்னும் நூலில் தென்படுகிறது. ஆசிரியர்கள் இந் நூலில் தேவைக் கதிகமான மேற்கோள்களைச் சேர்த்திருப்பதோடு, அடிக்கடி தங்கள் சொந்தக் கருத்துகளையும் வற்புறுத்தியிருக்கின்றனர். இதனால், நூலைச் சுவைத்துப்படிக்கும் ஆர்வம் குறைவதோடு, மேற்கோள் நூலாக விளங்கவேண்டுமென்ற ஆசிரியர்களின் எண்ணமும் ஈடேறவில்லை. 'மேலைநாடுகளும் தற்கால இந்தியாவும்' (Modern India and the West) என்ற சாதம் வமிச ஆராய்ச்சி நூல், எல். எஸ். எஸ். ஓ. மாலேயின் (L.S.S.O. Malley) பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது (1941). இந்திய, மேலைநாட்டுப் பண்பாடுகளின் கலவையை இந் நூல் உணர்த்துகிறது. ஆர்.சி. மஜூம்தார், எச். சி. ரா்ய்சௌதுரி, கே. கே. தத்தா ஆகிய மூவரின் கூட்டுமுயற்சியான 'இந்தியாவின்

சிறப்பு வரலாறு' (Advanced History of India) என்னும் நூலை இறுதியாகக் குறிப்பிடவேண்டும். 1946ஆம் ஆண்டில் முதன் முறையாக இந் நூல் வெளியிடப்பெற்றது. தாம்ப்ஸன், காரட் ஆகியோரின் அடிச்சுவடுகளைப்பற்றி, அந் நூலின் மூன்றும் பகுதியில் பிரிட்டிஷ் ஆட்சி விரிவாகக்கூறப்பட்டுள்ளது. தாம்ப்ஸன், காரட் ஆகியோரின் புலமை காணப்படவில்லையெனினும் பின்னர்க் கூறிய நூலில் விருப்பு வெறுப்புகளுக்கு இடமளிக்கப் படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**மாறுபட்டிருக்கும் முறைகள் (Changed Methods)**

நாம் மேலே விவரித்திருக்கும் இந்திய வரலாற்று ஆராய்ச்சியின் தற்போதைய நிலையிலிருந்து வரலாற்றுச் சுருக்கமொன்று எழுதவிரும்பும் ஆசிரியனுக்கு அவனது சமீபகால முன்னோர்களைக்காட்டிலும்கூடச் சற்று அதிகமான வாய்ப்புகள் கிட்டியிருப்பது உண்மையேயாகும். இருந்தபோதிலும், இப் பரந்த நூலின் ஒவ்வொரு பகுதியிலும், சீர்தூக்கி ஆராயப்பெற்ற நம்புதற்குரிய கருத்துகளை அளிப்பது அசாத்தியமானதொன்ருக இருக்கிறது. கடினமுயற்சியை மேற்கொண்டு சில பகுதிகளில் முழுவிவரங்களையும் கொடுப்பது சாத்தியமாயிற்று. மற்றப் பகுதிகளில், ஆராய்ச்சி என்னும் கலப்பையின் முனையால் வரலாறு என்னும் விளைநிலத்தைக் கொத்திக் கொடுப்பதுமட்டிலும் கைகூடியிருக்கிறது.

கடந்த கால நிகழ்ச்சிகளைக் கொண்டு நிகழ் காலத்தை விளக்குவதில் நாம் அடையும் வெற்றியிலேயே வரலாற்றின் உபயோகமும் சுவையும் அடங்கியிருக்கின்றன. நாம் வாழும் காலத்தின்கீழ் சூழ்நிலை நம் மூதாதையர் வாழ்ந்தகால நிலைகளினின்றும் மாறுபட்டது. ஐயத்திற்கிடமின்றி நாமறிந்துள்ள கடந்த காலச் செய்திகளை, புதிய ரசிகர்களுக்கு எடுத்துரைக்க வேண்டிய நிலையில், எத்துணைச் சிறியதாயினும் நூலொன்று நமக்குத் தேவைப்படுகிறது. புத்துணர்ச்சிபெற்று அந் நூலை உருவாக்க முயலவேண்டும். ஒருசிலர் எண்ணுவதுபோலப் பிளாசிச் சண்டையிலிருந்து இந்திய வரலாறு தொடங்குவதில்லை; தொடங்குவதும் சாத்தியமில்லை. புலமைமிக்க வரலாறு அல்லவெனினும், நம் பழங்காலத்தைப் பற்றிய உண்மை அறிவு, நம்மை எதிர்நோக்கியிருக்கும் தற்காலப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குப் பெரிதும் உதவியளிக்கும் என்பது உறுதியேயாம்.

இந்திய வரலாற்றின் எந்த ஒரு பகுதியையும் நன்கறிவதற்கு, குறிப்பாகச் சமீபகால நிகழ்ச்சிகளைச் சரியான முறையில் தெரிந்துகொள்வதற்கு, இந்திய வரலாற்றை முழுமையாகக் கற்பதொன்றே சிறந்த மார்க்கமாகும்.

### மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

இஸ்லாமியருக்கு முற்பட்ட கால வரலாற்றிற்குரிய மேற்கோள் நூல்கள் இ.எச்.ஐ.[4] (1923)யில் முன்னர்த் தரப்பட்டுள்ளன. இவைகளை அதனுடன் இணைத்துக் கற்கவேண்டும்.

இந்துக்களின் காலண்டர், மற்றும் காலவரன்முறையைக் குறித்தவைகளுக்கு சர். அலெக்சாந்தர் கன்னிங்ஹாம் (கல்கத்தா 1883) எழுதியுள்ள 'இந்திய சகாப்தங்களின் பட்டியல்' (The Book of Indian Eras) என்னும் நூலையும், ஆர். சூவெல்லும்; எஸ்.பி. தீக்ஷித்தும் (லண்டன் 1898) (R. Sewell and S. B. Dikshit) எழுதியுள்ள 'இந்திய காலண்டர், (Indian Calendar) என்னும் நூலையும் பார்க்க.

சி. மேபல் டப் (C. Mable Duff) (ஸ்ரீமதி டபிள்யு. ஆர். ரிக்மெர்ஸ் (Mrs. W. R. Rickmers) (வெஸ்ட் மின்ஸ்டர் 1889) எழுதியுள்ள 'பண்டைக்காலந் தொட்டுப் பதினாறும் நூற்றாண்டு வரையுள்ள இந்திய வரலாற்றுக் கால வரன் முறை' (The Chronology of India from the Earliest Times to the Beginning of the Sixteenth Century) என்னும் நூல் சிறந்ததேயெனினும், பல வகைகளில் காலத்திற்கொவ்வாததாக உள்ளது; ஜே. பர்கெஸ் (J. Burgess) (எடின்பரோ-1913) எழுதியுள்ள 'பதினைந்தாம் நூற்றாண்டு இறுதியிலிருந்து தொடங்கி நானூறு ஆண்டுகளுக்குள்ள கால வரன்முறை (கி.பி. 1494-1894) (The Chronology of Modern India for Four Hundred Years, from the Close of the Fifteenth Century) என்னும் நூலும், பார்னெட் (Barnett) என்பவரின் 'இந்திய நாட்டுப் பழமைச் சின்னங்கள்' (Antiquities of India) என்னும் நூலும், இந்து சகாப்தத்தைக் குறித்து, விரிவான காலவரன்முறைப் பட்டியல்களைக் கொண்டிருக்கின்றன.

நூலாசிரியனின் இ. எச். ஐ.[4] மற்றும் மேற் கொள்ளப்பட்டிருக்கும் நூல், இவைகளைத் தவிர பண்டைய இந்தியா, இந்து இந்தியா ஆகியவற்றின் நூல்களைத் தெளிவாக எடுத்துரைக்கும் பட்டியலில் 'கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு' (பகுதி 1, ஆதி

காலத்திலிருந்து கிறிஸ்து சகாப்தத் தொடக்கம் வரை. பதிப்பு. இ. ஜே. ராப்சன் 1922) (Combridge History of India); எச். சி. ராய் சௌதுரியின் 'ஆதிகால இந்தியாவின் அரசியல் வரலாறு' (6ஆவது பதிப்பு, கல்கத்தா, 1954) (Political History of Ancient India) என்னும் இன்றியமையாத நூல்; ஃபிரெஞ்சு மொழியிலுள்ள மூன்று அற்புத நூல்கள், படித்தறிவதற்குச் சற்றுக் கடினமானவை, எல்-டீலா-வால்லி போசின் என்பவரால் எழுதப்பெற்றவை (Indo Europeens et Indo-Iraniens, l'Inde jusque vers 300 av. F.c இரண்டாம் பதிப்பு 1936,' L' Inde aux temps des Mauryas et des Barbares, Grecs, Scythes, Parthes et Yueh-tchi 1930; மற்றும் (Dynasties et histoire de l'Inde depuis Kanishk a jusqu'aux invasions musulmanes 1935 ; ஆகிய யாவையும் Histoire du monde என்னும் நூல் வரிசையில் போக்கார்ட் (Boccard) (பாரிஸ்) என்பவரால் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. ஆர். சி. மஜூம்தார் அவர்களைப் பதிப்பாசிரியராகக்கொண்டு பாரதீய வித்யாபவன், பம்பாய், வெளியிட்டிருக்கும் பத்துப் பாகங்கள் கொண்ட ' இந்திய மக்களின் வரலாறும், பண்பாடும் ' என்னும் (History and Culture of the Indian People) நூல் வரிசை மிகவும் முக்கியமானது. கி. பி. 8ஆவது நூற்றாண்டு வரையுள்ள வரலாறு மூன்று பகுதிகளாக ஏற்கெனவே வெளியிடப்பட்டிருக்கிறது. (வேத காலம், 1951, சாம்ராச்சிய ஒருமைக் காலம் 1951, புராண இலக்கிய சகாப்தம் 1954) இவைகளில் முதல் புத்தகம், புராணக் கதைகளில் அதிக நம்பிக்கையுடன் அவைகளினடிப்படையில் தொகுக்கப் பட்டிருக்கிறது. எனவே கருத்து வேற்றுமைகளுக்கு இடமளித்திருக்கிறது. மற்றுமுள்ள இரு நூல்கள் மிகச் சிறந்தவை. 'கேம்பிரிட்ஜ், இந்திய வரலாற்றுச் சுருக்கம்' என்னும் நூலின் தனிப்பட்ட பகுதிகள் சில (எச். எச். டாட்வெல் 1934, முஸ்லிம் ஆட்சிக்கு முந்திய கால வரலாறு ஜே. ஆலன் ஆகியவர் பதிபித்தது) மற்றும் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரின்—'இந்திய வரலாறு'—பாகம் I (சென்னை 1950).

கார்பஸ் இன்ஸ்கிருப்ஷனம் இண்டிகாரும், எபிகிராபியா இண்டிகா, எபிகிராபியா கர்நாடிகா, தென்னிந்திய கல்வெட்டுகள், ஆகியவை, புதை பொருளாராய்ச்சி இலாகாவினராலும், இந்திய மாகாண அரசினராலும், பல சஞ்சிகைகளிலும் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் மொழி பெயர்ப்புகளும், பொருளடக்கத்தின் சுருக்கமும் காணப்படும். இந்திய வரலாற்றையும் பண்பாட்டையும் விளக்கும் தேர்ந்தெடுக்கப் பெற்ற சில வெட்டெழுத்துச் சாசனங்கள் ' பாகம் 1 (கல்

கத்தா 1942) என்னும் டி.சி. சர்க்காரின் நூல், குப்த சாம்ராச்சிய இறுதிக்காலம் வரையுள்ள முக்கிய சாசனங்களின் தொகுப்பு, நன்கு விளக்கப்பட்டிருக்கிறது—ஆங்கில மொழிபெயர்ப்புகள் இல்லை.

பிரிட்டிஷ் மியூசியத்தின் (B.M.) இந்திய நாணயப் பட்டியல்களிலும், இந்திய மியூசியங்களிலும், 'இந்திய நாணய ஆராய்ச்சி சங்க சஞ்சிகை'யிலும், நாணயச் சான்றுகளைப்பற்றிய குறிப்புகள் ஏராளமாக இருக்கின்றன. இ. ஜே. ராப்சனின் 'இந்திய நாணயங்கள்' என்னும் நூலில், மிகவும் பயனுள்ள பொதுக் குறிப்புகள் கிடைக்கின்றன. கிரண்டிரிஸ் ii. 3, பி. ஸ்டிராஸ்பர்க், 1897).

இந்தியப் புதை பொருளாராய்ச்சிச் சஞ்சிகைகளில், புதைபொருள்களைப்பற்றிய விவரங்கள் வெளியிடப்படுகின்றன.

முக்கியமான இலக்கிய மொழிபெயர்ப்பு நூல்களும், மற்றும் இலக்கியங்களும் இந் நூலின் ஒவ்வோர் அதிகாரத்திலும் இறுதியிலுள்ள நூலடைவுகளில் (மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்) தரப்பட்டுள்ளன.

பண்டைய இந்தியப் பண்பாட்டை விளக்கும் நூல்களில், எல். டி. பார்னட் என்பவரின் 'இந்திய நாட்டுப் பழங்காலச் சிறப்புகள்' (லண்டன் 1913), பி மேஸன்—ஔர்செல் மற்றும் பலர் எழுதியுள்ள, 'பண்டைய இந்தியாவும் இந்தியப் பண்பாடும்' (பண்டைய பண்பாடுகளின் வரிசை லண்டன், 1934–ல் எம். ஆர். டோபி என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது) 'இந்தியா, அதிசய நாடு' (லண்டன் 1954) என்னும் ஏ. எல். பஷாமின் நூல், மற்றும் ஜி. டி. காரட் தொகுத்துள்ள 'இந்தியக் கலை வழிச்செல்வம்' (ஆக்ஸ்போர்ட் 1937) என்னும் நூல் நல்லதொரு தொகுப்பு— 'லி–இந்தி, கிளாசிக்' என்னும் ஃபிரெஞ்சு நூல் சிறந்ததொரு இலக்கியம். எல். ரினெவ் ஜே. பிலியோசத் மற்றும் பலர் சேர்ந்து இந் நூல் இயற்றியுள்ளனர். இதில் இரு பகுதிகள் வெளியாகியிருக்கின்றன (பாரிஸ் 1949, 1954). மற்றுமொரு பகுதி அதி விரைவில் வெளியாகுமென ஆவலுடன் எதிர்ப்பார்க்கப்படுகிறது. 'லா–சிவிலிசேஷன் டி. எல். இ. இண்டி ஆன்சியுன்' (பாரிஸ் 1950) என்னும் ரினெல்வின் சிறு நூலும் மிகப் பயனுடையதே. அரசியல் வாழ்க்கை, மற்றும் அரசியல் கொள்கைகள் வளர்ச்சி ஆகியவைகளைக் குறித்த நூல்கள், இரண்டாம் புத்தகம், அதிகாரம் ஒன்றின் இறுதியிலுள்ள நூலடைவில் குறிப்பிடப் பெற்றுள்ளன.

பகுதி 1

# புராதன இந்தியா

## 1. வரலாற்றிற்கு முந்தியகால இந்தியா : மக்களினத்தின் கூறுகள்

## (Prehistorci India, Elements of the Population[1])

### மனிதனின் தொன்மை (Antiquity of man)

சுமார் 500,000 ஆண்டுகளுக்கு முன்னரே, மனித இனம் புவியில் வாழ்ந்திருக்க வேண்டுமென, நவீன ஆராய்ச்சி கணக்கிடுகிறது. ஒரு சில எலும்புக் கூடுகளின் உதவியாலும், காலத்தால் அழிக்கப் பெருத மனித உழைப்பால் எழுந்த பல கருவிகளை ஆய்வதாலும், ஆதி மனிதன் வாழ்ந்த கால நிலையை, ஓரளவு நாம் அறிகிறோம். எகிப்து, மெசபடோமியா ஆகிய இடங்களில் காணப்படும் எழுதி வைக்கப்பெற்ற சாசனங்கள் சுமார் 5000 ஆண்டுக்கால வரலாற்றை உணர்த்த வல்லவைகளாக இருக்கின்றன. வாய்மொழியாக நம்வரை எட்டியிருக்கும் இந்திய மரபுச் செய்திகள் இரண்டு மில்லினியங்களுக்குப் பின் எழுந்தவையாகக் காணப்படுகின்றன. இந்திய உபகண்டத்தில் கிடைக்கும், ஐயத்திற்கிடமற்ற முதல் வரலாற்று ஏடுகள், கி.மு. ஆருவது நூற்ருண்டின் இறுதிக் காலத்திற்கு முன் தோன்றவில்லை எனக் கூறலாம். அக் காலத்திலேயே, வடமேற்கு இந்தியா அகாமினிட் சாம்ராச்சியத்தின் (Achaemenid Empire) ஒரு பகுதியாயிற்று.

[1] பழங்கால மனிதனைக் குறித்து ஆராய்ச்சி மிக முன்னேற்றமடைந்திருக்கிறது. எனவே, இவ்வதிகாரத்திலுள்ள செய்திகளைப் பெரும்பாலும் மீண்டும் திருத்தி எழுதுவதின் தேவையைப் பதிப்பாசிரியர் உணருவர்.

**பழுங்கற்கால மனிதன் (Palaeolithic man)**

பிறநாட்டைப் போலவே இந்திய நாட்டிலுமுள்ள பழமை வாய்ந்த மனித இனத்தின் சிறப்புகளை ஆய்ந்து உணரப்புகுமுன், இரு கருத்துகளைத் தொடக்கத்திலேயே வலியுறுத்த வேண்டும். முதலாவதாக, முறையாக நிறுவப்பெற்ற தொடர்புச் சாதனங்களில்லாததும் அங்கொருவரும் இங்கொருவருமாக மக்கள் வாழ்ந்ததுமான உலகில், ஒருசிறு உதவிக் கருவி, மக்களின் பல்லாண்டு முயற்சியை உணர்த்துவதாக் இருக்கும். உதாரணமாக ஒரு சிறு கல்லைச் சிறிது செம்மைப்படுத்துவதற்குக் கால் மில்லியன் ஆண்டுகள் பிடித்திருக்கக்கூடும். இரண்டாவதாக, அழியாப் பொருள்கள் ஒருசில, சான்றுகளாகக் கிடைக்கின்றன. அவைகளை மட்டிலும் ஆதரவாகக் கொண்டு பண்பாட்டின் எல்லையையும், தன்மையையும் அறிவது முறையல்ல. சில சமயங்களில் தேங்கிக் கிடந்த மக்களின் ஆற்றலை மறைத்து, அவரது மௌனத்தைச் சான்றுகள் மிகைப்படுத்தி விளக்கவும் கூடும். இந்திய நாட்டைப் பொறுத்தவரையில் மூன்றாவது குறிப்பொன்றையும் சேர்க்கலாம். ஐரோப்பிய நாடுகளிலும் வட ஆஃப்பிரிக்காவிலும், ஆதிகால மனிதனின் சம காலப் புவி அமைப்பு இயலின் பல நிலைகளும் வரிசைப்படுத்தப்பட்டிருக்கின்றன. அதனால், பகுதி வாரியாக இவைகளை அமைப்பதும் அவைகளிடையேயுள்ள தொடர்புகளை அறிவதும் சுலபமாக இருக்கின்றன. இந்திய நாட்டில் தொடர்ச்சியான புவி அமைப்பியல் ஆராய்ச்சி மேற் கொள்ளப்படவில்லை. அவ்வப்போது ஒருசில முயற்சிகள் மேற்கொள்ளப் பெற்றிருக்கின்றன. அவைகளுடன் ஆதிகால மனிதனின் வாழ்க்கை வரலாறுகளை ஒப்பு நோக்கி அமைப்பது கடினமான பிரச்சினையாக இருந்து வருகிறது. அத்தகையதொரு சூழ்நிலையில், இந்திய நாட்டிலேயாயினும் அல்லது ஐரோப்பிய நாட்டிலேயாயினும் மனித முயற்சியின் போக்கையும், அம்முயற்சியால் விளைந்தவைகளை ஆய்வதும் ஓரளவு பயனையே தரக்கூடும். ஊகங்கள் யாவும், தாற்காலிகமானவைகளாகவே இருக்கக்கூடும் அவ்வாறே, ஸோம் நதிக்கரையில் (Somme) அபிவைல் (Abbeville) என்னுமிடத்தில் கண்டெடுக்கப் பெற்ற கைக்கோடரிகளும், சென்னையின் அருகில் கண்டெடுக்கப்பெற்றவைகளும், உருவத்திலும், வேலைப்பாட்டிலும் ஒரே வகையாக இருக்கக்கூடும். என்றாலும் அவை சம காலத்தை விளக்கவல்ல சான்றுகளாக உள்ளனவா என்பதை அறிந்துகொள்ளச் சற்றுத் தீவிரமான ஆராய்ச்சி தேவைப்படுகிறது.

மத்திய ஐரோப்பாவில் புவி அமைப்பு-இயலில் 'ப்ளீ டோசீன்' (Pleistocene) நிலையொன்று பேசப்படுகிறது. பல உருவமுடைய மனித இனம் அக் காலத்தில் வாழ்ந்ததாகவும் நம்பப்படுகிறது. தெளிவான நான்கு பெரும் பிரிவுகளையும், மற்றும் பல சிறு பிரிவுகளையும் கொண்ட குளிர் காலமொன்றும் இருந்திருக்கக் கூடும். மலையுச்சியிலிருந்து பனிக்கட்டிகள் உருகிப் பாய்ந்து அண்டையிலிருந்த நிலப்பரப்பு முழுவதையும் மூடியிருக்க வேண்டும். இத்தகைய உறைபனி பரவிய காலங்களுக் குரித்தான சுவடுகள் சில கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவைகளின் உதவியால் மக்கள் மற்றும் உயிரினங்கள் தோன்றிய கால நிலைகள் வரையறுக்கப்படுகின்றன. ஐரோப்பிய நாடுகளில் ஏற்பட்டனவாகக் கருதப்படும் நான்கு பெரும் 'உறைபனிப் பரவல்கள்' வட இந்தியாவில், அதிலும் குறிப்பாக வடமேற்கில் ராவல் பிண்டி மாவட்டத்திலுள்ள 'ஸோகன்' (Sohan) அல்லது 'ஸோன்' (Soan) நதிப் பள்ளத்தாக்கிலேற்பட்ட 'உறைபனிப் பரவல்களோடு சம காலத்தவைகளாகக் கருதப்படுகின்றன. 'ப்ளீஸ்டோசின்' காலத்திற்குப் பின் ஐந்தாவதொன்று நிகழ்ந்ததாகவும் கூறப்படுகிறது. இக் கருத்துகளை உறுதிப்படுத்துவதற்கும் தெளிவாக்குவதற்கும் இன்னும் அதிகமான முயற்சி எடுப்பது தேவையாகும். அதற்கிடையில் செய்திகளை வரிசைப் படுத்துவதற்கு இது ஒரு வகையில் உதவக்கூடும். தெற்கில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் 'பிரளய காலத்தை (Pluvial period) வடக்கிலுள்ள 'உறை பனிப் பரவல்'களோடு சமகாலத்தவையாகக் கருதுவதும் ஓரளவு பயனளிக்கவல்லதாக விளங்குகிறது. குறிப்பாக வெப்ப மண்டலப் பகுதிகளில் இரு நிகழ்ச்சிகளினிடையுள்ள தொடர்பு மிகவும் சந்தேகத்திற்கிடமளிப்பதாக இருக்கிறது.

உறைபனி பரவத் தொடங்கிய காலத்திலும் அதையடுத்துக் கடுமை குறைந்த இடைக் காலத்திலும் மனித இனம் வாழ்ந்ததாகத் தற்போது கருதப்படுவதில்லை. உறைபனிப்பரவல் இரண்டாவது முறையாகத் தொடங்கி, (ஐரோப்பிய நாட்டு 'மிண்டல்' காலத்தையொட்டியது.) அதன் கூரை நன்கு வேயப்பெற்ற பிறகு, மனிதன் குவார்ட்சைட் (Quartzite) கல்லினலான கரடு முரடான தனியுரிமைகளான ஆயுதங்களைப் புவியின் மீது எறிந்தான். பெரும் சம்மட்டிகளால் பட்டறைகளிலிடப்பெற்ற கற்பாறைகளை உடைத்து, தனக்குத் தேவையான கற்கருவிகளை இக் காலத்திலேயே அவன் உருவாக்கியிருக்க வேண்டும். அக் கருவிகள் யாவும் ஒரு புறம் செதுக்கப் பெற்றுப் பார்வைக்குச்

சற்று விகாரமாகவுமிருக்கின்றன. கரடுமுரடான இக்கருவிகளை 'ஸோகனுக்கு முந்தியவை' (pre - sohan) களாகக் கருதுகிறோம். ஏனெனில், ஸோகன் பள்ளத்தாக்கில், சற்றுப் பக்குவமடைந்து தேர்ச்சி பெற்றுக் கருவிகள் உற்பத்தி செய்யப்பட்டவையாகத் தென்படுகின்றன. அவை, பிற்காலங்களில் தோன்றியிருக்க வேண்டும்.

உறைபனிப் பரவலின் மூன்ரும் நிலை வரையிலும் (ரிஸ்? Riss?) ஸோகன் கைத்தொழில் விருத்தியடைந்திருக்க வேண்டும். 'பண்பட்ட ஸோகன்' (Evolved Sohan) உற்பத்தி உறைபனிப் பரவலின் நான்காம் நிலை வரையிலும் வளர்ச்சியடைந்திருக்கக் கூடும். ஊர்ம்? Wurm?) அகன்ற மெல்லிய புணி போன்ற கூழாங்கல் தகடுகளையுடைய சிறு மண்வெட்டி போன்ற ஆயுதங்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. கூழாங் கல்லினாலான கருவிகள் பாறைகளிலிருந்து செதுக்கி யெடுக்கப்பட்டிருக்க வேண்டும். பட்டறைகளில் இட்டுக் குறித்த வடிவம் கொடுக்கப்பட்டதாகத் தோன்றவில்லை. மண்வெட்டி போன்ற கருவிகளில் பொருத்துமிடங்கள் எடுப்பாகக் காணப்படுகின்றமையால் இவை இங்கிலாந்து தேசத்துக் கிளாக் டோனியன் கைத்தொழிலை நினைவூட்டுவதாயிருக்கிறது (Clactonian industry). நாள்கள் செல்லச் செல்ல மிருது கல் கருவிகள் குறைகின்றன. கற்றகடுகள் பொருத்தப் பெற்ற கருவிகள் ஐரோப்பிய நாட்டு, இடைக் கற்கால 'லெவெல்லாய்சன்' (Levalloisian) கருவிகளை ஒத்திருக்கின்றன. வருடக் கணக்கில் இவைகளின் வயதைக் கணக்கிடும் போது; சுமார் 400,000 ஆண்டுகளுக்கு முன் இத் தொழில் தொடங்கியிருக்கக்கூடுமெனத் தெரிகிறது. இக் கருத்தை மிகவும் சரியென ஏற்றுக்கொள்ளக் கூடாது. கால அளவு மிக நீண்டிருப்பதால், 300,000 ஆண்டுகளுக்கும் மேற்பட்டிருக்க வேண்டுமென ஒருவாறு அனுமதிக்கலாகும்.

சோகன் பகுதியை யொத்து, அதன் ஆதி அந்திய காலக் கருவிகளைப் போன்று, தகடுகள் போலன்றிச் சற்றுக் கனமான வேறு கருவிகள் தோன்றின. இக் கருவிகள் தெளிவான உருவங்களில் அமைந்தவை. சிற்பங்களை வடித்தெடுப்பது போல, குவார்ட்சைட் கற்பாறைகளைத் தேவையான வடிவத்தில் செதுக்கி யெடுத்திருக்கிருர்கள். ஆதியில் கற்சம்மட்டிகள் பயன்படுத்தப் பெற்றன. பிற்காலங்களில், மரத்தடிகளும் கொம்பு ஆப்புகளும் சிறுகச் சிறுக உபயோகத்திற்கு வந்திருக்கவேண்டும். இவைகளின் உதவியால் தகடுபோன்ற வடுக்கள் செதுக்கப்பட்டிருக்க

வேண்டும். இவைகளால் கருவிக்கு ஒரு நிலையான உருவம் கிடைத்திருக்க வேண்டும். இத்தகைய கருவிகளில் ஈட்டி முனையுடன் கூடிய கைக்கோடரி மிக அதிகம். இத்தகைய வகை ஐரோப்பாவிலும் ஆஃப்பிரிக்காவிலும் மிக மிக அதிகம். ஆதி காலத்து 'அகியூல்' வகையை இவை பெரிதும் ஒத்திருக்கின்றன.

வடமேற்கு இந்தியாவிலும், மற்றும் சில பகுதிகளினும் தகட்டுக் கருவிகளும், செதுக்கியெடுக்கப்படும் கருவிகளும் சற்றேறக் குறைய சம காலத்தவைகளாயினும், அவைகள் வெவ்வேறு காலங்களில் தோன்றியிருக்க வேண்டும்; வெவ்வேறு மனித இனங்களால் தோற்றுவிக்கப்பட்டிருக்க வேண்டுமென்பதிலும் ஐயமில்லை. 'கென்ட்'டிலுள்ள 'ஸ்வான்ஸ் கோம்ப்' (Swans combe என்னுமிடத்தில் மண்டையோடு ஒன்று கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. அது நவீன கால மனித ஓடு போன்றது. கனமான பழங் கருவிகளின் குவியலில் அது கண்டெடுக்கப்பட்டு, அக் கருவிகளின் சம காலத்திலுள்ள மனிதனின் மண்டையோடாக அது கருதப்படுகிறது. தகடுகள் போன்ற கருவிகளோவெனில், வழக்கொழிந்த மனித இனத்தின் படைப்புகளா யிருந்திருக்க வேண்டும். மனித இனக்கிளையின் நிலைதாழ்ந்த முன்னோர்களால் இக் கருவிகள் உற்பத்தி செய்யப்பட்டிருக்க வேண்டும். இந்திய உபகண்டத்தில் இரு வகைக் கருவிகளும் ஒருங்கே கலந்துகாணப்படுகின்றமையால் இருவகையான மனித வர்க்கங்களும் ஒரே காலத்தில் வசித்து வந்தனரா என்பதை ஊகித்தறிய இயலாது. அவ் வர்க்கங்களின் எலும்புகள் நமக்குக் கிடைப்பதில்லை என்பது இந் நிலைக்குக் காரணமாயிருக்கிறது. பழங்கற்கால மனித இனத்தின் எலும்புக் கூடுகளைக் கண்டெடுப்பது இந்தியப் புதைபொருளாராய்ச்சியாளரின் தலையாய தேவையாக இருந்து வருகிறது.

பழங் கற்காலத்தைச் சேர்ந்த தென்னிந்தியக் கருவிகளில் கைக் கோடரி மிகவும் முக்கியமானது. அங்குக் கண்டெடுக்கப் பெற்றிருக்கும் தனிரகங்களுக்கு 'மதராஸ் உற்பத்தி' என்ற தனித் தலைப்பு வழங்கப்பட்டிருக்கிறது. பெரும் பகுதி தீபகற்ப இந்தியாவில் கண்டெடுக்கப்படுகின்றன. என்னுலும், அது பல விடங்களிலும் பரவியிருந்ததென்பதையும் நாம் மறப்பதற்கில்லை. சோகன் பள்ளத்தாக்கில் மட்டிலுமன்றி, குஜராத்திலும் அந்திய அக்யூலியன் வகையைச் சார்ந்த கைக்கோடரிகள் சபர்மதி ஆற்றின் கரைகளிலிருந்து கண்டெடுக்கப் பெற்றிருக்கின்றன. உறை பனிப்பரவலின் மூன்ரும் நிலையைச் சேர்ந்தவைகளாகக் கருதி,

150,000—200,000 ஆண்டுகளுக்கு முன் இதை உற்பத்தியாயிருக்க வேண்டும் எனக் கணக்கிடப்படுகிறது. இத் துறையில் மீண்டும் அதிகமான ஆராய்ச்சி தேவைப்படுகிறது.

நமக்குக் கிடைத்திருக்கும் ஒரு சில சான்றுகள் அக் கால மக்களின் வாழ்க்கையை விரித்துரைக்கப் போதியனவாக இல்லே. பிற நாட்டைப் போல, இந் நாட்டிலும் வாழ்ந்திருந்த அம் மக்கள் வேட்டையாடித் திரிபவர்களாகவும், உணவு சேகரிப்பவர்களாகவும் வாழ்க்கை நடத்தியிருக்க வேண்டும். பழக்கப்பட்ட மிருகங்கள் அவர் வசமில்லே; பயிர்த்தொழில் அவர்களுக்குத் தெரியாது; ஏராளமாக வளர்ந்திருந்த இலேகளின் போஷாக்குத் தன்மையை அவர்கள் அறிந்திருக்க வேண்டும். சிறு சிறு கூட்டங்களாக வாழ்ந்த அவர்கள், நாடோடி வாழ்க்கையைப் பெரும்பாலும் மேற்கொண்டிருக்க வேண்டும். ஆற்றோரங்களில் உணவு தேடித் திரிந்ததோடு, குகைகளிலும், தோல் அல்லது சருகுகளினல் வேயப் பெற்ற குடிசைகளிலும் அவர்கள் வாழ்ந்திருந்தனரென்றும், கற்கருவிகளோடு எலும்பு, மரம் மற்றும் நார்களேயும் உபயோகித்தனரென்றும் நாம் கற்பனே செய்து கொள்ளலாம். அனுபவங்களேயும், அறிவினல் புலனுகிய உண்மைகளேயும் பரிமாறிக் கொள்வதற்கு மிகச் சாதாரண மொழியொன்று கையாளப் பெற்றதென எண்ணலாம். குடும்பங்கள் ஒரு சிலவேயிருந்ததோடு அங்கொன்று மிங்கொன்றுமாக அவை சிதறியிருந்தன. இனக் கூட்டங்களுள்ளும் நெருங்கிய தொடர்பில்லே, இதனல் அறிவைத் தேக்கி வழி முறையாக முன்னேறுவதற்கு வாய்ப்பில்லாது போயிற்று. மில்லினியம் மில்லினியம் ஆண்டுகளாக, முயற்சிக்குத் தேவையான வாய்ப்புகளின்றி ஆரம்ப நிலேயிலுள்ள அச் சமூகம் ஒரே வகையான வாழ்க்கையை மேற்கொண்டு இயங்கி வந்தது.

**இடைக் கற்காலப் படைப்புகள்**

வடக்கு மற்றும் மேற்கு ஐரோப்பாவில் 'ப்ளீஸ்டோசீன்" சகாப்த பழங்கற்கால நிலேயை அடுத்து, புதைபொருளாராய்ச்சியாளர் மனித இன வளர்ச்சியின் மற்றுமொரு நிலேயைக் குறிப்பர். அக் கால நிலேயில் எலும்பு, பிளின்ட் என்னும் ஒருவகைக் கல் ஆகியவைகளாலான கருவிகளின் உதவி கொண்டு வேட்டையாடியும் மீன் பிடித்தும் ஜீவித்திருந்தனர். மீன் பிடிக்கும் தூண்டில்களுக்கும் மற்றும் எலும்புடன் பொருத்திய துணேக் கருவிகளாகவும் பிளின்ட் உபயோகிக்கப் பெற்றது. காலப்போக்கில் மண் பாண்டங்களும் உற்பத்தியாயின; வேடுவனுக்குத் துணே

யாக நாய் வளர்க்கும் பழக்கம் உண்டாயிற்று. கி.மு. 10,000 முதல் கி.மு. 2500 வரை வியாபித்திருக்கின்ற இக் காலப் பகுதி, 'கற்கால இடைப் பகுதியாக'க் குறிப்பிடப்படுகிறது. இக் காலத்திற்கே உரியதான பிளின்ட் கருவிகளுக்கு 'மைக்ரோலித்துகள்' என்ற பெயர் வழங்குகிறது. நீண்ட காலமாக சமீபக் கிழக்கில் பரவியிருந்த பயிர்த் தொழில், ஐரோப்பாவின் மேற்குப் பகுதிகளில் பரவியதும், அதனுடன் கல் அல்லது பிளின்ட் கருவிகள் உற்பத்தி மற்றும் மண்பாண்ட உற்பத்தி ஆகிய கைத்தொழில்களுடன் புதியதொரு சகாப்தம் தொடங்கியது. இக் காலக் கற்கருவிகள் மெருகிடப்பெற்று, நன்கு உருவாக்கப் பெற்றிருந்தன. இச் சகாப்தம் 'புதிய கற்காலம்' எனப் பெயர் பெறும். இதன் காலவரை சுமார் ஒரு மில்லியன் ஆண்டுகள் எனக் கருதப்பெற்றபோதும், அதன் எல்லையைப் பற்றிய கருத்துகள் பகுதிக்குப் பகுதி மாறுபட்டிருந்தன.

மேற்கூறிய பண்பாட்டுப் பாகுபாட்டு முறைகளை இந்திய நாட்டில் கையாளுவது அதிகப் பயனளிக்காது என்பதோடு, சில சந்தர்ப்பங்களில் தவறான கருத்துகளையும் அறிவிக்கக்கூடும். மைக்ரோலித்துகள் இந்தியாவில் ஏராளமாகக் கிடைக்கின்றன. அவைகளைப் பற்றிய செய்திகள் தெளிவாக இல்லை. அவைகளில் சில பிந்திய காலத்தவை. மைசூர் சமஸ்தான பிரமகிரி என்னுமிடத்தில் ஜாஸ்பர், அகேட், கார்னிலியன் மற்றும் பல்வகைக் கற்களாலான மைக்ரோலித்துக் கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அதனுடன் மெருகிடப்பெற்ற கற்கோடரிகளும், சிறிது செப்பு உலோகமும் வெண்கலமும், கைத்திறனால் உருவாக்கப்பெற்ற மண் கலங்களும், கண்டெடுக்கப் பெற்றன. இவைகளை ஆராய்வதின் மூலம், கி. மு. 200ஆம் ஆண்டை இறுதிக் காலவரையாக ஏற்காலமென்ற எண்ண முண்டாகிறது. ஐரோப்பிய நாட்டு 'டார்டினாய்சியன் (Tardenoisian) வகையைப் போன்ற பிற மைக்ரோலித்துகள், விந்திய மலைகள் நர்மதை நதியோரங்கள் மற்றும் பல விடங்களில் காணக்கிடைக்கின்றன. இவைகள் பிறவடிவங்களிலும், ராம்பஸ் வடிவங்களிலும் மற்றும் மட்கலங்களுமாக உள்ளன. குஜராத்திலுள்ள லாங்நாஜ் என்னுமிடத்தில் கண்டெடுக்கபெற்ற மைக்ரோலித்துகளில் மட்கலங்களும் இருக்கைகளும் அதிகமாக உள்ளன. சற்று ஆழமான இடங்களிலிருந்து கண்டெடுக்கப்பட்டவைகளில், அரைகுறையாக பாசில் நிலையுற்ற நவீன மனிதர்களின் மண்டையோடுகள் போன்றவை கண்டெடுக்கப் பெற்றுள்ளன. இப் பகுதியில் கண்டெடுக்கப்பட்டுள்ள களிமண் பாண்டங்கள் மைசூரைச் சார்ந்தவைகளைவிடக் காலத்தால் முற்பட்டவையாக விளங்கு

கின்றன. என்றாலும் அவைகள் தோன்றிய காலத்தைத் திட்ட வட்டமாக அறிவிக்க இயலவில்லை. 'இடைக் கற்கால சகாப்த' மொன்று இந்தியாவில் இருந்திருக்கக்கூடும் என எண்ணுவதற்கு வகையுண்டெனினும் கண்டெடுக்கப் பெற்றுள்ள 'மைக்ரோலித்து கள்' பிற்காலத்தைச் சேர்ந்தவை என்பதில் சிறிதும் ஐயமில்லை.

**பயிர்த் தொழில்**

இவர்களும், மட்கல உபயோகத்தை அறியாத அவரது முன்னோரும் எவ்வளவில் பயிர்த் தொழிலைக் கடைப்பிடித்தன ரென்பதை அறியக்கூடவில்லை. 'லாங்னாஜில்' (Langhnaj) கண் டெடுக்கப்பெற்றவைகளில், ஆடு வகைகள் மற்றும் கால்நடைகள், மான், பன்றி, குதிரை, நாய், காண்டாமிருகம் உட்படவுள்ள பல மிருகங்களின் எலும்புகள் கிடைப்பதால் பயிர்த் தொழிலும் அதனுடன் வேட்டையாடுவதும் முக்கிய உணவளிப்பவையா யிருந்திருக்க வேண்டுமென எண்ணுவதற்கு இடமுண்டு. (குதிரை கள் இருந்தனவென்பது கவனத்திற்குரியது; இதுபற்றிய அதிக மான விவரங்கள் கிடைப்பதில்லை.) இதற்கு மாறாகக் குவெட்டா விற்கு அருகிலுள்ள கைல் குல் முகமது (Kile Gul Muhammad) என்னுமிடத்திலுள்ள சான்றுகள் கற்காலக்கிராமம் ஒன்றிருந் திருக்க வேண்டுமென்பதை வற்புறுத்துகின்றன. அப் பண்பாடு தழைத் தோங்கிய காலத்தில் மட்கலங்கள் இல்லை என்பதைத் தவிர, இயற்கையினின்று மிகவும் மாறுபட்ட பின்வந்தோர்களின் பண்பாட்டுடன் ஒப்பிடலாகும். பயிர்த் தொழிலில் ஈடுபட் டிருந்த ஆதிகால இனங்கள் சில 'ஜோர்தானில்' (Jordan) உள்ள ஜெரிக்கோ (Jericho)விலும் இராக்கின் வடபகுதியிலுள்ள ஜார்மோவிலும் வாழ்ந்திருந்ததாக அண்மையில் தகவல் வெளி யிடப்படுகிறது. அங்கு ரேடியோ கார்பன் ஆராய்ச்சி முறையில் அத்தகைய நாகரிகம் தழைத்தோங்கிய காலம் கி.மு. 4700 அல்லது அதற்கு முன்புமிருக்கலாமெனக் கருதப்படுகிறது. அக் குடியினருக்குப் பயிர்த் தொழில் தெரிந்திருந்ததெனத் தகுந்த தடையமின்றிக் கூறத் துணிவதும், பிற பொதுக் கருத்துகளை வடித்து வெளியிடத் துணிவதும் ஆத்திர வேலையாக முடியும்.

**புதிய கற்கால, உலோக கற்கால சகாப்தங்கள்**

உலோகங்களைத் தவிர, மற்றக் கற்கருவிகளை உபயோகித் ததும், பயிர்த் தொழிலைப் பின்பற்றியதும் புதிய கற்காலத்தின் குணங்களெனக் கருதப்படும். கிராம வாழ்க்கையை மேற் கொண்டதின் பயனாக இவை எழுந்தனவென்பதும் தெளிவு. இந்திய நாட்டைப் பொறுத்தவரையில் இக்கால ஆராய்ச்சி

குறைவுடையதாகக் காணப்படுகிறது. புதிய கற்காலத்தில் செப்பு அதன் கலவையாகிய வெண்கலம் ஆகிய உலோகங்களினலான கருவிகளோடு, கற்கருவிகளும் பயன் படுத்தப்பெற்றிருக்கின்றன. உலோகம் மற்றும் கற்கருவிகளை மக்கள் உபயோகித்த காலத்தினின்றும் புதிய கற்காலத்தைத் தனியாகப் பாகுபாடு செய்வது கடினம். பிற்பகுதிகளில் கிராமிய வாழ்க்கைப் பண்டை முறைகளிலேயே நடைபெற்றது. ஆனல் அதினின்றும் 'உலோக கற்காலம்' எழுந்தது. அதைப்பற்றிய விவரங்கள் பலவற்றைப் பின்னர்க் கூறுவோம்.

தற்போது, மேற்கு பாகிஸ்தான் என வழங்கப்பெறும் வடமேற்கு இந்தியாவில், கிராமிய வாழ்க்கையின் மாறுதல்கள் சிறுகச்சிறுக ஏற்படும்போது, சற்றேக்குறைய கி. மு. மூன்ருவது மில்லினியம் அல்லது அதற்கும் முன்பாகப் புதியதொரு வாழ்க்கை முறை கிளைத்தெழுந்துகொண்டிருந்தது. அது பெரும்பாலும் பாரசீகப் பீடபூமியுடன் தொடர்புடையதாக இருந்தது. எனினும், அது பலூசிஸ்தானத்தின் ஒடுங்கிய பள்ளத்தாக்குகளின் வழியே, சிந்துநதியின் பரந்த சமவெளிக்கும் ஒரு காலத்தில் "காகர்" (Ghaggar) அல்லது சரஸ்வதி (Sarasvati) என்ற பெயருடன், இமாலயத்திலிருந்து பகவல்பூர், பிகானிர் மாகாணங்கள் வழியாக ஓடி, சிந்து நதியின் தென்புறமாக அரபிக்கடலில் சேர்ந்த நதியின் சமவெளிகளிலும் பரவியது. ஐந்தாவது மில்லினியம் அல்லது அதற்குச் சற்றுமுன்பிருந்து பாரசீகப் பீடபூமியில் ஆங்காங்கேயுள்ள குன்றுகளில் சிதறி வாழ்ந்த குடியானவர்களும், ஆடுமாடு வளர்ப்பவர்களும் குடியேறியிருந்தனர். தலப்பண்பாட்டில் அவர்கள் ஊறியிருந்ததோடு அரசியலிலும் விடுதலைப் பற்று மிக்கவராக இருந்தனர். நாலாவது மில்லினியத்தின் முற்பகுதியில், இக் குடிகளில் சிலர் தென்மேற்கு முகமாக, டைகிரிஸ் (Tigris), யூப்ரடிஸ் (Euphrates) பள்ளத்தாக்குகளில் புகுந்து, மெசபடோமிய நதிக்கரையில் வெண்கல உபயோகம் அதிகமாகக் காணப்படும் நாகரிகமொன்றை ஏற்படுத்தினர் என ஒரு சாரார் கருதிவருகின்றனர். தென்கிழக்கு முகமாக, இந்திய உப கண்டத்தை நோக்கி, பள்ளத்தாக்குகளின் வழியே, மூன்ருவது மில்லினியத்தின் முற்பகுதியிலாவது (அதற்கு முற்படாவிடினும்) ஒரு சிலர் குடியேறியிருக்கவேண்டும். இத்தகைய குடியேற்றத்தைப் பற்றிய தெளிவான விவரங்கள் கிடைக்கவில்லை. புவிப் பரப்பில் கண்டெடுக்கப்பட்ட மண் ஓடுகளை ஆய்ந்து, பொதுவான பல ஊகங்கள் வெளியிடப்படுகின்றன. பரவலாக, இப் பண்பாட்டுக் கூறுகளும், காலவரையும் அறிந்து

வெளியிடப்பெற்றிருக்கின்றன. இக் கருத்துகளை உறுதிப் படுத்துவதற்கு மேலும் புதைபொருளாராய்ச்சி தேவையாயிருக்கிறது. ஆக்கிரமிப்பு விரைவில் நடைபெறவில்லை. அவர்களது குடியேற்றம் இரண்டு ஏக்கர் விஸ்தீரணமுள்ள சிறு குன்றுகளாகக் காணப்படுகிறது. அடுக்கடுக்காக ஒன்றின் மீதொன்றாகக் கட்டப்பெற்ற கட்டடங்களாலும், அண்டையிலுள்ள பள்ளத்தாக்குகளின் குறுக்காக நீர்ப்பாசன வசதிக்கான அணைக்கட்டுகள் எழுப்பப்பெற்றதாலும், குன்றுகளில் சில நூறு அடி உயரமுள்ளவைகளாகவும் காணப்படுகின்றன. உயர்ந்த குன்றுகளின் இடையில் அல்லது அருகில் அமைந்த போதும், இக் கிராமிய–இனங்கள், நெடுங்காலம் வழக்கிலிருக்கத்தக்கதொரு வாழ்க்கை முறையைத் தோற்றுவித்தன என ஊகிக்கலாம்.

இங்குமங்கும் 'செர்ட்'[1] (Chert) தொழிலங்கள் இருந்தமைக்குரிய சுவடுகள் தென்படுகின்றன. இதனால் குடியேற்றங்களின் முன்னேற்றம் தடைபெற்றிருக்கக் கூடும். சிந்துப் பகுதியிலுள்ள 'சுக்கூர், ரோகிரி' ஆகிய இடங்களிலுள்ள 'ப்ளேக் (Flake) தொழில்கள்' சிந்து சமவெளி நாகரிகத்தின் 'பிளேட்' (Blade) தொழில் வகைகளுக்கு முந்தியவையாக இருக்கக்கூடும். அவைகளின் காலவரைகளையும் மற்றும் பண்பாட்டுப் பின்னணிகளைப் பற்றியும் தெளிவான செய்திகள் தற்போது நமக்குக் கிடைப்பதில்லை.

தெற்கிலும், கிழக்கிலும், அஸ்ஸாம், பர்மா வரையிலும் கற்கருவிகள் ஏராளமாகச் சிதறிக்கிடக்கின்றன. அவை பெரும்பாலும் கூரிய முனைகளையுடைய, கோழி முட்டைவடிவமுள்ள தட்டையான அடிப்புறத்தைக் கொண்ட மெருகிடப்பெற்ற கோடரிகளாகும். மைசூரிலுள்ள பிரமகிரியிலும் இத்தகைய கருவிகள் கண்டெடுக்கப்பெற்றுள்ளன. அதனுடன் கையால் செய்யப்பெற்ற மட்கலங்களும், செப்பு, வெண்கலத் துண்டுகளும் கி. மு. 200ஆம் ஆண்டு வரையில் கண்டெடுக்கப்பெற்றிருக்கின்றன. தொன்மை மிக்கவையாயினும் முதலாவது மில்லினியத்தைச் சேர்ந்தவைகளாகவே அவைகளைக் கருத வேண்டும். கற்காலத்தின் ஆதிகுடிகளும், முன்னேற்றமடைந்த வசதிகளுடன் கூடிய பின்னோரும் இணைவது போன்ற நிகழ்ச்சிகள் புராதன இந்தியாவில் மட்டிலுமன்றிப் பிற்காலங்களிலும் கூடக் காணப்படுகின்றன.

[1] சிலிகா போன்ற பொருள்கள் சேர்ந்த 'கால்சிடோனு' என்னும் கல்லினால் செய்யப்படுகின்ற பிளின்ட் முதலிய கருவிகள்.

**சிந்து சமவெளி நாகரிகம் (The Indus civilization)**

பலூக் (Baluch) குன்றுகளிலிருந்து வெளியேறிய கிராமியக் குடிகள் சிந்து, காகர் பள்ளத்தாக்குகளில் வாழ்க்கைப் பிரச்சினை தங்களை எதிர்நோக்கியிருக்கக் கண்டனர். அதன் விளைவாக ஆர்வமிகுதியால் அதிசயக்கத்தக்க நூதன வாழ்க்கை முறைகளைக் கடைப்பிடிக்கலாயினர். உயர்ந்த பூமியின் பள்ளத்தாக்கு இயற்கை வசதிகள் நிரம்பிய சூழ்நிலையுடன், ஆண்டு தோறும் பொங்கியெழுந்து வரும் வெள்ளப் பெருக்கால் கொண்டுசேர்க்கப்படுகின்ற வண்டல் நிரம்பியதாக இருந்தது. இவ்வாறு பொங்கியெழுந்துவரும் ஆற்று வெள்ளம் ஒவ்வோரமயம் நன்மை பயப்பதாகவும், மற்றும் சில சமயங்களில் கோரமான நாசங்களுக்கும் காரணமாயிருந்தது. உயர்ந்த பள்ளத்தாக்கின் 'தமனி' போன்ற முக்கிய ஆற்றிலிருந்து ஆர்ட்டரி (artery) போன்ற பல கிளை நதிகள், கிராம வாழ் மக்களின் அருகே பாய்ந்தோடி போக்குவரவிற்கும், வாணிபப் பெருக்கிற்கும் வாய்ப்பளித்தன. போக்குவரவும், வாணிபப் பெருக்கமும், சில சமயங்களில் சமாதானமாகவும், சில சமயங்களில் கடும் போட்டியுடனும் நடைபெற்றன. கற்பாறைகளும், பிற தாதுக்களும் எங்கும் சிதறிக் கிடக்கவில்லை. கொத்து வேலைகளுக்குப் பதிலாகச் செங்கல் கட்டடங்கள் எங்கும் எழுந்தன. தேவையான தாதுப் பொருள்களையும், ஆபரணங்களுக்குத் தேவையான இரத்தினங்களையும் வியாபார நோக்குடன் தேடிப்பிடித்தாலன்றிக் கிடைப்பது அருமையாயிற்று. தேவைப் பெருக்கம், மற்றும் வாய்ப்புகளின் உடனடி விளைவு, முயற்சியை ஒன்று கூட்டுவதும் அவைகளை விரிவு படுத்துவதுமாக முடிந்தது. பெருவாரியான மக்களினம் ஒன்று சேர்வதும், அவர்கள் கூட்டுவாழ்க்கை நடத்துவதற்கான வாய்ப்புகள் ஏற்படுத்துவதும் தேவைகளாயின; அதற்கேற்ற வசதிகளும் தோன்றின. நகர வாழ்க்கையின் விளைவான 'நாகரிகம்' தோன்றியது.

நாமறிந்த வரையில், நகர வாழ்க்கையும் அதன் துணையும் விளைவுமான எழுத்து முறையும், சிந்து சமவெளியில் தோன்றுவதற்கு முன்னரே மெசபடோமியாவில் தோன்றியிருக்கவேண்டும். இவையிரண்டும், மெசபடோமியாவில் நான்காம் மில்லினியப் பிற்பகுதியில் தொடங்கியதாகத் தெரிய வரும். அவை மூன்றும் மில்லினியத்தின் இடைக்காலத்தில் சிந்து சமவெளியை வந்தடைந்ததாகவும் தெரிய வருகிறது. சிந்து சமவெளி நாகரிகம், எவ்வளவில் மெசபடோமிய முறைக்குக் கடன்பாடுடையதாக இருக்கிறது என்பதைத் திட்டவட்டமாகக் கூறவியலாது. எகிப்து நாகரிகமும் ஒப்பு

நோக்கிற்கு உடன்பாடுடையதே. எகிப்து நாகரிகத் தொடக்க காலத்து வாழ்க்கை முறை மெசபடோமியாவை ஒத்திருப்ப தாகத் தோன்றும். அதிலும் குறிப்பாக, எகிப்திலும் செங்கல்



சிந்து சமவெளி நாகரிகம்

கட்டடங்கள் மெசபடோமியாவைப் பின்பற்றி எழுந்தவையாக இருக்கக்கூடும். முதல் அரசகுலம் எகிப்தை ஆள்த்தொடங்கு வதற்கு முன்புள்ள எழுத்துமுறைகளைக் குறித்து யாதொன் றும் கூறுவதற்கில்லை. அக் காலத்தில் வழங்கிய முறை மெசப

டோமியாவின் 'ப்ரோட்டோ-லிட்ட்ரேட்' (Proto-literate) முறையைப் பல நூற்றுண்டுகளாகப் பின்பற்றியதால் எழுந்த முறையின் நிலையிலேயே காணப்படுகிறது. கட்டட நிர்மாணத் துறையிலும் எழுத்துக்கலையிலும், நிலவும் 'கருத்துகள்' மெசபடோமியாவிலிருந்து கொண்டவை என ஒருவாறு யூகித்தறியலாம். ஆனல் தலத்தின் இயற்கை முறை, உடனடியாகவோ அல்லது சிறிது காலவரையறைக்குள்ளாகவோ, கருத்துகளைத் தன்



மொகஞ்சதாரோ—தாழ்ந்ததொரு சந்து

னடிமையாக்கிக் கொண்டிருக்கவேண்டும். இது போலவே, சிந்து சமவெளியில் முதலாவதாகக் குடியேறிய மக்கள், தலத் தேவையைப் பூர்த்தி செய்யவேண்டிய சூழ்நிலையில், வாய்ப்புகளைப் பயன்படுத்தி, கட்டட நிர்மாணத்திலும், எழுத்துக்கலையிலும் மெசபடோமியக் கருத்துகளை மனத்தில் வாங்கி, தங்களுக்குகந்ததொரு வகையாகப் பயன்படுத்தியிருக்கவேண்டும்.

சிம்லா மலைக்குன்றுகளின் அடிவாரத்திலுள்ள 'ரூபார்' (Rupar) என்னுமிடத்திலிருந்து, அரபிக்கடலின் கரையிலுள்ள 'சத்கேஜன்–தார்' (Sutkagen-dor) வரையிலுள்ள, சுமார் அறுபதிற்கும் மேற்பட்ட இடங்களில், சிந்து சமவெளி நாகரிகத்தை



மொகஞ்சதாரோ—சாக்கடைகளுடன் கூடிய வீதி

விளக்கும் சான்றுகள் கண்டெடுக்கப் பெற்றுள்ளன. சான்றுகளின் உதவிகொண்டு அதன் காலவரையறை கி. மு. 2500 லிருந்து 1500 வரை இருக்கக்கூடும் எனத் தாற்காலிகமாகக் கொள்ளலாம். சான்றுகள் கண்டெடுக்கப்பட்டிருக்கும் பகுதி ஆயிரம் மைல்களையும் கடந்து தெற்கு முகமாகக் குஜராத்தை நோக்கிப் பரவியுள்ளது. சிந்து நதியின் தலைப் பகுதியிலும், கீழ் முகமாகவும் ஆகிய இரு பகுதிகளாகச் சான்றுகளகப்படும் பிரதேசங்கள் பிரிக்கப்படுகின்றன. ஒவ்வொரு பகுதியின் சிகரமாக, மூன்று மைல்கள் சுற்றளவுள்ள நகரமொன்று விளங்குகிறது. முந்திய பகுதிக்கு 'ஹரப்பா' (பஞ்சாப்) நகரமும், பிந்திய

பகுதிக்கு 'மொகஞ்சதாரோ' (சிந்து)வும் கேந்திரங்களாக விளங்குகின்றன. இரண்டும் நகரங்களே என்பதில் ஐயமெதுவுமில்லை. ஒரு சாம்ராச்சியத்தின் இரு தலைநகரங்களாக அவை விளங்கியனவா? அல்லது தனித் தனியான இரு இராச்சியங்களின் தலைநகரங்களாக அவை விளங்கியனவா?—என்ற கேள்விகளுக்கு யூகத்திலன்றித் திட்டவட்டமான பதிலிறுக்க இயலாது.



மொகஞ்சதாரோ—கல்லிலாகிய தலை

பரந்து கிடக்கும் இந் நாகரிகம் எவ்வாறு தோன்றிய தென்பதைக் குறித்துத் தற்போது அதிகமாகக் கூறுவதற்கில்லை. ஹரப்பாவிலுள்ள ஒரு சிறு பகுதியில் மட்டிலும், புதை பொருளாராய்ச்சியாளர், ஆழமாக வெட்டியெடுக்கும் முயற்சியில் வெற்றி கண்டுள்ளனர். மொகஞ்சதாரோவில், சதுப்பு நிலமாயிருப்பதாலும், நீரூற்றுப் பெருக்கத்தாலும் ஆழமாக வெட்டும் முயற்சி கைகூடவில்லை. செய்திகளிலிருந்து, நாகரிகத்தின் அதிசயிக்கத்தக்க ஒருமைப்பாட்டை நன்கறியலாகும்.

பிற்கால, ஆராய்ச்சியாளர் மேற்கொண்ட பொதுமுறைகளால் மிகைப்படுத்திக் கூறல் என்னும் குறைபாடு காணப்பட்ட போதிலும், நாகரிகத்தின் உயர்தன்மையை எவ்வகையிலும் சந்தேகிப்பதற்கில்லை. மாபெரும் கட்டடங்களுக்குப் பதிலாக சிறு எளி வளைகள் போன்ற கட்டடங்களும் அதிக ஜன நெருக்க



மொகஞ்சதாரோ–வெண்கலச் சிலை

மும், பிற்காலங்களில் இந் நாகரிகம் சற்றுத் தாழ்ந்த நிலை யெய்தியதென்பதை உணர்த்துவதாகின்றன. நிலை தாழ்ந்திருக்கக்கூடுமேயன்றி நாகரிகத்தின் சிறப்பு மயங்கிவிடவில்லை. ஆயிரமாண்டுகளாகச் சிந்து சமவெளியினர் விதிமுறைப்படி எழுந்த ஒரே வகையான வாழ்க்கை முறையையே கடைப்பிடித்தனர். எடுப்பிலேயே சிறப்பாக அமைந்துவிட்டதால் அதில் மேலும் பல மாறுதல்களேற்படுத்த வேண்டுமென்ற அவா அவர்களுக்கில்லாது போயிற்று. அவர்களது வாழ்க்கை முறை, திட்டவட்டமான சமுதாயக் கட்டுப்பாட்டு விதிகளை அடிப்படை

யாகக் கொண்டிருந்தது ; மொகஞ்சதாரோவிலும், அதைக் காட்டிலும் சற்றுக் குறைந்த அளவில் ஹரப்பாவிலும் காணப் படும் நகர அமைப்பிலிருந்து, உரிமைபெற்ற அதிகார வர்க்கம் இருந்திருக்க வேண்டுமென உணரலாகும். இவ்விரு இடங் களிலும், நகரங்களின் மேற்கில், சற்று உயரமான இடங்களில் கோட்டைகள் காணப்படுகின்றன. இக் கோட்டைகள் 400 × 200 கஜப் பரப்புள்ளவைகளாகவும், 20-50 அடி உயரமுள்ளவை களாகவும், களிமண் மற்றும் களி மண்ணினலான செங்கல்களை ஒன்றின் மேலொன்ருக அடுக்கிவைத்துக் கட்டப்பெற்றுள்ளன. இவைகளைச் சுற்றிலும், சில திசைகளில் முழுமையாகவும், மற்றும் சில திசைகளில் அரைகுறையாகவும் சுவர்கள் எழுப்பப் பெற்றுள்ளன. ஈரக் களிமண் செங்கல்களாலும், நன்கு சுடப் பெற்ற செங்கல்களாலுமான பெரும் கோபுரங்கள் கோட்டை களின்மேல் கட்டப்பட்டுள்ளன. மொகஞ்சதாரோவில் கோட் டையின் உட்புறமுள்ள கட்டடங்கள் சில கண்டெடுக்கப் பெற் றுள்ளன. புனித குளமொன்றும், வசிப்பதற்கு அல்லது (மத குருக்களின் ?) கல்லூரியாகப் பயன்பட்டிருக்கக்கூடிய பெருங் கட்டடமொன்றும், அவை கூடுவதற்கான பரந்த கூடங்களும்; தானியங்களைச் சேமித்து வைப்பதற்கான பெருங் குதிர் ஒன்றும் கண்டெடுக்கப்பெற்றுள்ளன. தானியங்கள் திறைகளாக வசூ லிக்கப்பெற்றுச் சேமிக்கப்பட்டிருக்கவேண்டும் என எண்ணு வதற்கும் இடமுண்டு. இதுபோன்ற தானியக் குதிர்கள் ஹரப்பாவில் வரிசையாகக் காணப்படுகின்றன. அவை, கோட் டைக்குச் சற்றுத் தாழ்ந்த இடத்தில் ஆற்ருேரமாக (பழைய) அமைந்துள்ளன. புள்ளியிடப் பெற்றதுபோன்ற, வட்ட வடிவ மான செங்கல் மேடைகள் அதைச்சுற்றிலும் காணப்படுகின்றன. தானியங்களை அரைப்பதற்கு இவைகள் பயன்பட்டிருக்கக்கூடும். இதனருகிலேயே, தொழிலாளருக்கென விடுதிகள் பல அமைக் கப்பெற்றுள்ளன. திட்டமிட்டு ஜியோமித்ரி முறையில் இவை அமைந்திருப்பதைத் கொண்டு, சக்திவாய்ந்த ஒரு தலைவன் அல்லது குழு ஆட்சியைக் கைக்கொண்டு அரசு செலுத்தியிருக்கிற தென்பதை உணரலாகும்.

மொகஞ்சதாராவிலும், யூகத்தினடிப்படையில் ஹரப்பா விலும்கூட, அடித்தளத்திலுள்ள நகரத்தில் பல பகுதிகள் ஒரு கூட்டாக அமைந்திருக்கக்கூடும். ஒவ்வொன்றும், நாம் மேலே குறித்த கோட்டையின் பரப்புள்ளதாக இருந்ததோடு, சுமார் 30 அடி அகலமுள்ள கரடுமுரடான மேல் தளமுடைய வீதிகளால் இணைக்கப்பெற்றிருந்தன. பெரும்பகுதிகள் மீண்டும் பல சிறிய சந்துகளாகப் பிரிக்கப்பெற்றிருக்கின்றன. சிறு சந்துகளிலும்

மற்றும் பெரு வீதிகளிலும், செங்கற் சாக்கடைகளும், ஆங்காங்கே, மனிதர் இறங்கிச் சுத்தம் செய்வதற்கு வசதியாகப் பெருந் துவாரங்களும் அமைக்கப்பட்டுள்ளன. வீடுகளில் சாளரங்கள் காணப்படுவதோடு மேல் தளங்களுக்குச் செல்வதற்கான செங்கற் படிக்கட்டுகளும் உண்டு. சில வீடுகளில் மேல்தளங்கள் இல்லை; தட்டையான கூரைகளே காணப்படுகின்றன. கோவில்கள் இருந்தன என்பதை வலியுறுத்தத்தக்க சான்றுகள் இல்லை. தாடியுடன் கூடிய, மண்டியிட்டு அமர்ந்தது போன்ற கற்சிலைகள், ஒரு சில தெய்வங்களை நினைவூட்டுபவையாக விளங்குகின்றன. நுணுக்கமான கருத்துகள் பலவற்றைக்கொண்ட பிற்கால இந்து மதச் சார்புள்ளதோர் சமயம் அல்லது சமயங்கள் இருந்திருக்க வேண்டுமென்பதை வலியுறுத்தும் வேறு சான்றுகள் பல உண்டு. கொம்புகளுடன் கூடிய சிவனது உருவம் ஒன்று இவைகளில் குறிப்பிடத்தக்கது. கட்டடக்கலை எங்கும் மிக எளிமையானதாகவே காணப்படுகிறது. இன்றைக்கிருப்பதைக் காட்டிலும், சற்று ஈரமான பகுதியாக இருந்திருக்க வேண்டுமென்பதால் எங்கும் சுட்ட செங்கலின் உபயோகமும், பூச்சு வேலைகளுக்குக் களிமண்ணின் உபயோகமும் மிகுதியாகத் தென்படுகின்றன. வளைவுகள் குறைவாகக் காணப்பெறுகின்றன. பெரும்பாலும் இருமருங்கிலும் பூசப்பெற்றவைகளாக இருக்கின்றன. தாங்குவதற்கான முட்டுகளில்லாத வளைவுகள் இல்லையென்றே கூறலாம்.

'செர்ட்' வகைக் கற்கருவிகளோடு செப்பு, வெண்கலக் கருவிகள், சிந்து மக்களின் எளிமையான உடைமைகளாக இருந்தன. தட்டையான கோடரிகள், கத்திகள், ரம்பங்கள் ஈட்டிகள், குத்துவாள்கள் அல்லது குட்டையான கத்திகள் போன்ற ஆயுதங்களை அவர்கள் கையாண்டுவந்தனர். 'சுட்ட மண்' (Terracotta) ணாலான மிருகங்களின் உருவம் அமைந்த பொம்மைகள், குறிப்பாகக் காளைகள் ஏராளமாகக் கிடைக்கின்றன. அதனுடன் தனிரகமான பெண் உருவங்களுமுண்டு. இவையாவும் கடவுளரிடம்பெற்ற சலுகைகளுக்குக் கடனிறுக்கின்ற வகையில் அளிக்கப் பெற்றவைகளாக இருக்கவும்கூடும். ஊடுருவும் வட்டங்கள், பிப்பல் மர இலைகள், மயில்கள் மற்றும் கறுப்புநிற வரை கோட்டுச் சித்திரங்கள் பலவற்றைக் கொண்ட செந்நிறமுள்ள இங்குள்ள மட்கலங்களைப் போலப்பிற இடங்களில் காணவில்லை. மற்றும் காணப்படும் சிறு பொருள்களில் சோப்புக் கல் இலச்சினைகள் சிறப்பு வாய்ந்தவை. இவைகளில், பெரும்பாலும் மிருகங்களின் உருவங்களும், ஒவ்வோரமயங்களில் மனித உருவங்களும் பொறிக்கக்கப் பெற்றுள்ளன. புலி,

காண்டாமிருகம், யானை, முதலை, ஆகிய பல உருவங்களுமுண்டு. இவைகளில் சில, வழிபாட்டு முறைகளுடன் தொடர்பு கொண்டவையாக இருப்பதை நோக்கும்போது, மிருக வழிபாடு ஆர்வமுடன் கடைப்பிடிக்கப்பட்டிருக்கக்கூடும் என்ற எண்ணந் தோன்றும். சிந்து சமவெளிப்பொருள்கள் சிலவற்றோடு இவ்விலச்சினைகள் அல்லது இவைகளைச் சார்ந்த இலச்சினைகள் சில




மொகஞ்சதாரோவின் அமைப்பை விளக்கும்
வரைப் படம்

அதிலும் குறிப்பாகச் சற்றேறக்குறைய, கி.மு. 2350 ஆண்டுக் காலத்து சர்கோனைய்டுகளின் ஆட்சிகாலத்துப் பொருள்களாக மெசபடோமியாவில் கண்டெடுக்கப்படுகின்றன. சிந்து சமவெளி நாகரிகம் உச்சநிலை எய்திய காலத்தைச் சிறிதளவேனும் விளக்குவதற்கு, மெசபடோமியாவுடன் ஒப்புநோக்கும் முறை ஒருவகையில் பயனளிக்கக்கூடும். மேலை நாட்டினருடன் இம்மக்கள் கொண்டிருந்த வாணிபத்தொடர்பு தனிச்சிறப்புடன் எடுத்தியம்புகின்ற அளவில் நடைபெற்றதாக எண்ணுவதற்கில்லை.




கோட்டையின் அமைப்பை விளக்கும் படம்—ஹரப்பா

பெரும்பாலான இலச்சினைகளில் சித்திர எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. சிந்து நாகரிகத்தின் விளங்காத அதிசயங்களின் சிகரமாக இவை இருந்து வருகின்றன. இவ்வெழுத்துக்களுக்கு விளக்கம் கூறும் முயற்சிகள் யாவும் இது வரை வெற்றிபெறவில்லை. வரிவடிவங்களின் மொத்த எண்ணிக்கையை நோக்கும்போது அவை அகர வரிசையில் அமைந்தவையல்ல என்பது புலப்படும். ஒலியைக் குறிப்பவைகளாக அவை விளங்குகின்றன. கோடுகள் பல இவ் வரிவடிவங்களை உண்டாக்குகின்றன. இவை இடமிருந்து வலமாகவும், வலமிருந்து இடமாகவும் செல்லுகின்றன. உழவில் ஏர் முனையால் பூமியில் எழும் கோடுகளைப்போன்று இவை தோன்றும் (Boustrophedon). இதுவரை கண்டறிந்த எந்த ஓர் எழுத்து முறையையும் இது ஒத்திருக்கவில்லை.

மேற்குத் திசையிலிருந்து இவ்வெழுத்து முறையின் அடிப்படைக்கான கருத்து எழுந்திருக்கக் கூடும் என நாம் முன்னர் உரைத்தோம். அவ்வெண்ணத்தில் தவறேதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. பிற்காலங்களில், இந்திய நாட்டில் நடைமுறையிலிருந்த 'பிராம்மி' (Brahmi) வரிவடிவத்தின் தந்தையாக சிந்து சமவெளி முறையைக் கருதுவதும், மேலும் உறுதி பெற வேண்டியதாயிருக்கிறது.

மொகஞ்சதாரோவின் சின்னங்கள் யாவும் சிறுகச் சிறுக, நெடுங்காலமாகச் சிதைந்து வந்திருப்பதால், அதன் கோரமுடிவின் விளைவாகத் துண்டிக்கப்பட்ட மனித எலும்புக் கூடுகள் அங்கொன்று மிங்கொன்றுமாக வீதிகளிலும், சிறந்த மாடங்களிலும் கூடச் சிதறிக் கிடக்கின்றன. ரிக்வேதச் செய்யுள்களினடிப்படையில் இச்செய்தி தோராயமாக எடுத்துரைக்கப்படுகிறது. வளமிக்க ஐந்து (ஏழு) நதிகள் பாயும் சிந்து சமவெளியின் வலுவான கோட்டைகளை ஆரியப்படையினர் எவ்வாறு தாக்கினரென இச்செய்யுள்கள் எடுத்தியம்புகின்றன. ஆரியர் சிந்து வெளியின் மீது எப்போது படையெடுத்து வந்தனர் என்பது விவாதத்திற்கு உரிய செய்தியாக இருக்கிறது. ரிக்வேதச் செய்யுள்களின் தீவிரச் செய்திகளினடிப்படையில் உருவாகும் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு ஆரியர் படையெடுத்து வந்த காலமாக இருக்கவேண்டுமெனப் பெரும்பாலான அறிஞர் ஒப்புக் கொள்ளுவர். புதை பொருளாராய்ச்சியும், இலக்கிய வாயிலான கருத்துகளும் ஒன்றுகூடி கி.மு. 1500க்குச் சற்றுமுன்பாகச் சிந்து வெளி நாகரிகம், பொங்கியெழும் அநாகரிகமான ஒரு கூட்டத்தினரால் அழிக்கப்பெற்றிருக்க வேண்டுமென்ற ஒரே

செய்தியை வலியுறுத்துகின்றன. அழிவிற்குக் காரணமான அக் கூட்டத்தினருக்கு வீராவேசம் மிகுந்திருந்தமையால், நகர வாழ்க்கையொன்றின் நினைவுச் சின்னங்கள் அவர் தம் உள்ளங் களை ஆட்கொள்ளவில்லை. ஆனால் அதிக கவனத்துடன் ஆராய் வோருக்குச் சிந்து நதிச் சின்னங்கள் உண்மை நிலைமை உணர்த்த வல்லவை. முறியடிக்கப்பட்டோரின் பண்பாடுகளில் ஒரு சில, படை யெடுத்து வந்தவர்களின் சமயக் கோட்பாடுகளுடன் ஒன்றி, தற்கால இந்தியர் வாழ்க்கை முறையிலும் இடம் பெற்றி ருப்பதைக் காணலாம். நாம் ஏற்கெனவே குறித்த சிவபெரு மானின் வடிவம், லிங்க வழிபாட்டை வற்புறுத்தும் சான்றுகள்; பிராணிகளிடம், அதிலும் குறிப்பாக மாடுகளிடம் அவர்கள் செலுத்திய விநயத்துடன் கூடிய அன்பு, ஆகியவற்றிற்கும் ஆரிய வழிபாட்டு முறைகளுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. என்றாலும் பிற்காலத்தில் தோன்றிய ஆரிய உடையில் உள்ள பிராமண சமயத்தின் பல குணாதிசயங்களைச் சிந்து வெளிப் பண்புகள் முன்னறிவிக்கின்றன.

### படை யெடுத்து வந்த ஆரியர்

தொடர்ந்த ஆயிரமாண்டுகள், தோராயமாக கி.மு. 1500 லிருந்து 500 வரையிலுமுள்ள இடைவெளி 'இருண்ட மில்லினி யம்' எனப்படும். இக்காலத்து நிகழ்ச்சிகளை நாம் அறிந்துகொள் வதற்குத் தெளிவற்ற இலக்கிய மரபு (பெரும்பாலும் வாய் மொழியாகப் பெறப்படுவது) பெரும்பாலும் துணை நிற்கிறது. நம்பிக்கையுள்ள பிரசான்றுகள் மேலும் மேலும் பெருகிவரு கின்றனவெனினும், தேவையை அவை பூர்த்தி செய்வதில்லை. இந் நாட்டில் வாழ்ந்த, கருநிறமும் சப்பை மூக்கும் கொண்ட 'தஸ்யு'க்களுடன், படையெடுத்து வந்த ஆரியர் முதன் முதலாக எவ்வாறு தொடர்பு கொண்டனர் என்பதைக் குறித்த செய்தி களை, ரிக்வேதச் செய்யுள்களிலிருந்து அங்கொன்று மிங்கொன்று மாகப் பிரித்தெடுத்து, ஒருவாறு தொகுக்க இயலும். 'தஸ்யு'க் கள் முதலாவதாக ஆரியர்களை எதிர்ப்பவராகவும் பின் அவர் தம் குடிகளாகவுமிருந்தனர். படையெடுத்து வந்தோரின் முதற் கடவு ளாகிய இந்திரன், போர்க் கடவுளாக விளங்கினான். ஆரிய வீரன் இந்திரனைப் போன்றவன். தாடியுடைய முகமும், மிக்க பலமும் கொண்ட இவனுக்குப் பசி மிகுதியுண்டு. தெய்விக பானமான சோமரசம் பருகுவதில் அதிக விருப்பமுடையவன். சோமரசம் எவ்வாறு கூட்டப்படுகிறது என்பது விளங்கவில்லை; ஆயினும் இது கிரேக்கருடைய தேன்பாகுக்கு ஒப்பான சிறப்புடையது. போருக்குச் சென்றாலும் அல்லது பந்தயத்திற்குச் சென்றாலும், இரண்டு குதிரைகள் பூட்டிய, இரு சக்கரங்களுள்ள தேரில்

ஏறி, வில் அல்லது ஈட்டியைக் கையிலேந்தி, சாரதி யொருவன் அருகில் இருக்க, செல்வது வழக்கம். 'அக்கினி குண்டம்' வீட்டின் முக்கிய உடைமையாக விளங்கியது. வீட்டைப்பற்றிய விவரங்கள் அதிகமாகக் கிடைப்பதில்லை. மரம், ஓலை இவைகளின் உதவியால் எழுப்பப்பெற்ற நீண்டசதுர வடிவமுள்ள வாசஸ்தலங்களில் அவன் வசித்திருக்க வேண்டும். சூதாடுவதற்கும், மற்றும் பொது அலுவல்களைப் பற்றி ஆலோசிப்பதற்குமான விசாலமான கூடங்களுமிருந்தன. கோவில்களைக் குறித்த வர்ணனைகள் அதிகமில்லை. திறந்த வெளிகளில் வழிபடுவதற்கென எழுப்பப்பெற்ற மேடைகளும் மிருக பலியிடுவதற்கென ஒதுக்கப்பெற்ற தனியிடங்களு மிருந்தன. மிருகங்களைக் கட்டி வைப்பதற்கென, கம்பங்கள் இருந்தன. பாட்டும் கூத்தும் அவர்களுக்குத் தெரிந்தவைகளே. பேரிகை, புல்லாங்குழல், மற்றும் ஏழு தந்திகளையுடைய யாழ் போன்ற கருவிகளையும் அவர்கள் இசைத்தனர்.

வெள்ளாடு, மறியாடு முதலியவைகளை அவர்கள் மேய்த்தனர். கால் நடை வளர்ப்பதும், மாமிசம் உண்பதும் அவர்தம் வாழ்க்கை நெறிகளாக விளங்கின. இடைக்காலத்திலும், தற்காலங்களிலும் உள்ளோரிடமிருந்து இம்முறையில் அவர்கள் வேறுபட்டவரேயாவர். உழவுத் தொழிலிலும் அவர்களுக்குப் பயிற்சி உண்டு. 'பார்லி' விளைவித்து உண்டனர். இதனால் அவர்கள் நிலையான வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர் என எண்ணுவதற்கில்லை. நாடோடிகளாகத் திரிந்து வாழ்ந்தனர் என்ற கருத்தை, இவ்வொரு காரணத்தால் மாற்றிக்கொள்ளத் தேவையில்லை. வீரகாவிய காலத்தின், பொது மரபுக்கு ஏற்றவாறு, ஹோமர் காலத்திய கிரேக்கர், மற்று மேலை நாட்டுக் கெல்ட்டுகள், போன்ற அன்னியரைப் போலவே சுற்றித் திரிந்து, வாழ்க்கை நடத்தினர். வீரர்கள் சிலர் மிக ஏற்றம் பெற்றிருந்த பொது நிலை நிலவியது. எனவே சாத்விகமான உழவுத் தொழிலைவிட, உண்பதிலும் போரிடுவதிலுமே இவருக்கு அதிகமான விருப்பமிருந்து வந்தது.

### சிந்து சமவெளி நாகரிகத்திற்குப் பிற்காலம்

ஊக்க மிகுந்த இவ் வீர மக்கள், அமைதி மிக்க சாத்விக மக்களின் மீது படையெடுத்ததின் விளைவாக நீண்டதொரு குழப்ப நிலை ஏற்பட்டது. வட மேற்கு இந்தியாவில் வாழ்க்கை நடத்திய சாத்விக மக்கள், தங்கள் வாழ்க்கை முறைகளை விளக்க வல்ல சான்றுகள் பலவற்றை விடுத்துச் சென்றிருக்க வேண்டும். சிதறிக் கிடக்கும் இச் சான்றுகள் சில, அவரது வாழ்க்கை வர



கல், உலோக கற்காலக் கருவிகள்



பஞ்சாப் சோகன்வெளியில் கிடைத்த கற்கோடரிகள்



மொகஞ்சதாரோவில் கிடைத்த முத்திரை உருவங்களும் படிவங்களும்

லாற்றை நேராக எடுத்துரைப்பவையாகவும் மற்றும் சில மறைமுகமாக எடுத்துரைப்பவையாகவும் உள்ளன. அவை களை வகைப்படுத்தி அறிந்து கொள்வதற்கு முயற்சி தேவையா கிறது, 'நால்' அல்லது வடக்கு பலூசிஸ்தானத்து 'சாப்' (Zhob) பகுதியிலுள்ள 'ராணு குந்தை' போன்ற கிராமக் குன்றுகள், அல்லது அதற்கும் சற்றுத் தெற்கிலுள்ளவைகள் நாம் முன் குறித்த சமர்களைத் தேவையான அளவிற்கு நினைவூட்டுகின்றன. 'நால்' பகுதியிலுள்ள குன்றிற்குச் 'செங்குன்று' அல்லது 'சோர் டாம்ப்' (Sohr Damb) என்ற பெயர் வழங்கி வருகிறது. அங் குள்ள நிலப்பகுதி தீயினால் எரிக்கப்பட்டதுபோன்று சிவப்பு நிற முடையதாக இருப்பதே அதற்குக் காரணமாகும். சிந்து சம வெளி நாகரிக காலத்தில் எழுந்த 'சான்ஹுதாரோ' (Chanhu-daro) என்ற ஒரு நகரமுண்டு. இது மொஹஞ்ச தாரோவிற்குத் தெற்கில் எண்பது மைல் தொலைவிலுள்ளது. இங்குள்ள சிந்து வெளியினர் வீடுவாசல்களைத் துறந்து வெளியேறிவிட்டதால், அவர்களைத் தொடர்ந்து பொருளாதார வசதி குறைந்த மற்று மொரு கூட்டத்தினர் இங்குக் குடியேறினர். இவரது பண் பாட்டைப் புதை பொருளாராய்ச்சியாளர் 'ஜுகர் பண்பாடு' (Jhukar culture) எனக் குறிப்பர். முன்னோர் விட்டுச்சென்ற இடிந்த வீடுகளில் குடியேறியதோடு, நீண்ட சதுரமரன கூரை வேய்ந்த நொறுங்கிய செங்கற்களாலான வாசஸ்தலங்களையும் இவர்கள் ஏற்படுத்திக்கொண்டனர். வட்ட வடிவமான இலச் சினைகளை இவர்கள் வழங்கியதாகத் தெரிகிறது. இவ்விலச்சினை களில் வரிவடிவம் எதுவுமில்லை. துர்த்தேவதைகளை விரட்டு வதற்கான களிமண் தாயத்துகள், மற்றும் தரங்குறைந்த அலங் கார வேலைப்பாடுகளமைந்த மட்கலங்கள் சில காணப்படு கின்றன. சிந்து சமவெளி மக்கள் பெற்றிருந்த தேர்ச்சி யையும், கலைநுட்பத்தையும் இச் சின்னங்களில் காண்பதரிது. தெற்கு பலூசிஸ்தானத்து 'ஷாஹி தும்ப்' (Shahi-tump) என்ற இடத்திலுள்ள கல்லறையிலிருந்து, செப்பு இலச்சினைகள் கண் டெடுக்கப்பெற்றுள்ளன. கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த இச் சான்று, மக்கள் ஒருவரோடொருவர் கொண்டிருந்த தொடர்பால் சிதைந்து சீர்குலைந்த சிந்து வெளி நகரமொன்றில் புதைக்கப்பட்டிருக்கவும் கூடும். ஹரப்பாவிலும் கூட, அந் நகரம் சிதைந்தபின், மற்றுமொரு கூட்டத்தினர் குடியேறி, நார்கள் வேய்ந்த கூரைகளமைத்து வீடுகள் கட்டி வாழ்ந்தனர் எனத் தெரிய வருகிறது. இக் கூட்டத்தினர் எப்பகுதியிலிருந்து வந்த வர் என்பது விளங்கவில்லை. இறந்தவர்களைப் புதைக்கும் வழக் கம் ஆதியில் இருந்தது. பிரேதங்களை இயற்கையின் கருணைக்கு விட்டுவிடும் வழக்கமும், ஒரு சில எலும்புகளை மட்டிலும் சேக

ரித்து, மண்கலங்களில் இட்டுப் புதைக்கும் வழக்கமும் பிற்காலங்களில் நிலவியிருக்கவேண்டும். 'H-கல்லறை' மக்கள் எனப் பொதுவான பெயரால் வழங்கப்பெறும் இக் கூட்டத்தினர் ஆரியரெனத் தோராயமாக ஊகிக்கலாம். ஆனல் அவர்களைக் குறித்த தெளிவான செய்திகள் இல்லை. சிந்து சமவெளியினர் முறியடிக்கப்பட்டு அல்லது வெளியேறிய பின், எக்காலத்தில் இவர் குடியேறியிருக்கக்கூடும் என்ற பிரச்சினையும் சிக்கல் நிறைந்தது.

மேற்கூறியவைகளைத் தவிர, மேலும் சில சான்றுகளும் நாம் ஆராய்ந்து வரும் ஆயிரமாண்டுக் காலத்தவைகளாகக் கருதப்படுகின்றன. இவைகளைக் குறித்து ஒரு சில தகவல்களே நமக்குக் கிடைக்கின்றன. பிக்கானரைச் சார்ந்த 'த்ருஷத்வதி'-(Drishadvati) பள்ளத் தாக்கிலும், யமுனையின் (Jumna) மேற்கரையிலுள்ள ஹஸ்தினபுரத்திலும் சில மட்கலங்கள் கிடைத்துள்ளன. இவை அழகு குன்றியவையாகவும், ஒருவித மஞ்சள் நிறமாகவும் காணப்படுவதால் இவைகளை 'மஞ்சட்கலங்கள்' (Ochre Ware) என்றே அழைக்கிறோம். சிந்து சமவெளி காலத்தைத் தொடர்ந்து அதிவிரைவிலேயே இவைகளும் உண்டாகியிருக்கவேண்டும். குயவன் சக்கரத்தின் உதவியோடு சாம்பல் நிறமுள்ள மற்றும் சில பாண்டங்களும் உருவாக்கப்பெற்றன. கறுப்பு அல்லது காக்கி நிற வர்ணக் கோடுகள், நெடுக்காக இவைகளின் மேல் தீட்டப்பெற்றிருக்கின்றன. சட்லஜ், சரஸ்வதி மற்றும் த்ருஷத்வதி பள்ளத்தாக்குகளில், அதாவது பஞ்சாப் பிக்கானர் பகுதியில், கிறிஸ்துவிற்கு முந்திய இறுதி மில்லினியத்தின் முற்பகுதியில் இவைகளை மக்கள் விரும்பி உபயோகித்திருக்கவேண்டும். இம் மக்கள், மண் வீடுகள் கட்டி, உழவுத் தொழிலை மேற்கொண்டு, ஆடுமாடுகளை வளர்த்து வாழ்க்கை நடத்தினரென்று தெரியவருகிறது. நிலையான வாழ்க்கை நடத்திய இவரது பண்பாடு 'வெண்கல சகாப்த'ப் பண்பாட்டை (செப்பு அல்லது வெண்கல அம்பு முனைகள்) ஒத்திருந்தது. நகர வாழ்க்கையில் இவர்கள் மோகங்கொண்டிருந்தனர் என்றும் கூறலாம். சாம்பல் நிற மட்கலங்களை உபயோகித்த இம் மக்களின் பண்பாடு சிந்து சமவெளியிலும் இருந்ததா என்பது இன்னும் அறியக்கிடக்கிறது. கங்கைச் சமவெளியின் மத்தியப் பகுதியில் காடுவெட்டித் திருத்திக் குடியேறுவதில் முனைந்திருந்தனர் எனத் தோன்றுகிறது. தெற்கிலுள்ள தக்காணப்பகுதியாகிய கஞ்சீரியா வரையிலும், கங்கை-யமுனைப் பள்ளத் தாக்குகளில் வெண்கலக் கருவிகளோடு, சுமார் இருபதிற்குமேற்பட்ட இடங்களில் மஞ்சட்கலங்களும் (Oche Ware) கண்டெடுக்கப்பெற்றுள்ளன. தோளில் மாட்டிச் செல்வதற்கு ஏற்ற தட்டையான

கோடரிகளும், நீண்ட கடப்பாரைகளும், ஐரோப்பிய நாட்டு இடைக்கற்காலத்தைச் சேர்ந்த கொம்பு அல்லது எலும்பினு லான முனையில் முட்களுடன் கூடிய ஆயுதங்களைப் போன்றவை களும், மிருகங்களின் புலன்கருவிகளை யொத்த, கொண்டை யுடன் கூடிய கைப்பிடிகளையுடைய வாள்களும், இங்குக் கண் டெடுக்கப்பெற்றுள்ளன. துரதிருஷ்டவசமாக, முறைப்படி அவை களை அமைக்க இயலவில்லை. கி.மு. 1500–500 காலத்தைச் சேர்ந்த வையாக இருக்கக்கூடும் என்ற கருத்து ஏற்கக்கூடியதே எனி னும், ஏட்டுச்சுரைக்காயாகவே இருந்து வருகிறது. அவைகளும், சாம்பல் நிறக் கலங்களும், மஞ்சட்கலங்களும் வட இந்தியாவின் மீது படை யெடுத்து வந்த ஆரியர் காலத்தைச் சார்ந்தவை என்னும் கருத்தும், பெரிதும் ஊகத்தின் விளைவென்றே கொள்ள வேண்டும்.

சான்றுகளையும் ஆரியப் படையெடுப்புக்குறித்த சிக்கலான பிற செய்திகளையும் ஒப்பு நோக்கி, எதிரிணையாக அல்லது துணை யாகச் சில கருத்துகளும் வெளியிடப்பெற்றுள்ளன. வட பலூசிஸ் தானத்தில் கண்டெடுக்கப்பெற்ற கல்லறைகள் சில இரும்பு சகாப்தத்தைச் சார்ந்தவை. அவை ஆரியருக்குச் சொந்தமான வையாக இருக்கக் கூடுமெனத் தெளிவற்றதொரு கருத்து நிலவி வருகிறது. முகலாயருக்குச் சொந்தமான குந்தையில் (Ghundai) முக்காலி வடிவமான ஜாடியும், கழுத்தணி, காதணி, மோதி ரங்கள், அம்பு முனைகள் ஆகியவையும் கண்டெடுக்கப்பட்டிருக் கின்றன. அவையாவும் வெண்கலத்தாலானவை. பாரசீக நாட்டு 'சியால்க் B' வகையைச் சார்ந்தவை. கி. மு. ஆயிரமாண்டுக்கும் முற்பட்டவையாக அல்லது சற்றுப் பிந்தியவைகளாக இவைகளை நாம் கருதலாம். ஆரிய மொழி பேசிவந்த முதற் கூட்டத்தின ரின் உடைமைகளாக இவைகளைக் கருதுவதற்கு ஆதாரங்கள் இல்லை. நமக்குக் கிடைக்கும் ஆதாரங்களின் அடிப்படையில், ஆரிய உடைமைகளாக இவைகளைக் கருதுவதில் தற்போது நாம் காட்டிவரும் ஊக்கம், தவறானது என்று கூடுமானால் நான் எச் சரிக்கவும் விரும்புகிறேன். நாம் ஆராய்ந்து வரும் பண்பாட்டுக் காலத்திற்கும், பரந்த பிரதேசங்களுக்கும் ஆரியருக்கும் எவ்வித தொடர்பும் இல்லையென்றே கருதுகிறேன். ஆரிய மொழி பேசியவரின் தொடர்பு ஏதாவது காணப்படுமாயின் அது பண் பாட்டை அழிக்கும் முயற்சியாகவே இருக்கக்கூடும்.

கி. மு. ஆறாவது நூற்றாண்டில் வடக்குச் சமவெளிகளில் சாம்பல் நிறக்கலங்களின் பண்பாட்டொளி மங்கி வந்தது. அதே சமயத்தில், கங்கையின் மத்திய சமவெளியிலும், அதற்கப்பாலும்,

ஒளி பொருந்திய புதிய வகையான மட்கலங்களின் உற்பத்தி பெருகிற்று. குழிவான அகன்ற கலங்களும் தட்டை வடிவமுள்ள தட்டுகளும் அதிகமாகக் காணப்படுகின்றன. வெண்ணிற மண்ணின் மேல் பளபளப்பான கறுப்பு நிறம் அல்லது கருமை நிறைந்த சாம்பல் வர்ணப்பூச்சு இங்குக் கையாளப்பட்டிருப்பதால், இதைக் கரு நிறமுள்ள வடநாட்டுக் கலங்கள் என்ற ஒரு தனி வகையாகக் கருதும் பழக்க மிருந்து வருகிறது. கங்கை, யமுனைக் கரையோரங்களில் நகர வாழ்க்கை நன்கு வளர்ந்து ஓங்கியிருந்ததை எடுத்துரைக்க வல்ல சான்றுகளாக இவை இருக்கின்றன. நகர வாழ்க்கை, இப் பகுதிகளின் மேற்கிலுள்ள சிந்து சமவெளி நாகரிகத்தின் அழிவிற்கு அரை மில்லினிய ஆண்டுகளுக்குப்பின் தொடங்கி யிருக்கக் கூடும். கங்கை வெளியில் அடர்த்தியான காடுகள் பரவலாக உண்டு. எனவே, சிந்து வெளி நகரங்களின் அண்மையிலிருந்த போதும், வேறு சில காரணங்களாலும், நகர வாழ்க்கை முறைகள் பரவுவதில் சற்றுக் கால தாமதம் ஏற்பட்டிருக்கவேண்டும். வட நாட்டுக் கறுப்பு வர்ணக் கலங்கள் தோன்றியதைத் தொடர்ந்து, இரும்பின் உபயோகமும் தொடர்ந்தது. முட்களுடன் கூடிய அம்பு முனைகள், உளிகள், அரிவாள்கள் மற்றும் சில கருவிகளின் உபயோகமும் தொடங்கியது. சுட்டசெங்கல்களின் உதவியுடன் பெரிய வீடுகள் கட்டுவதும் நகர முறையில் பெருகலாயிற்று. மெருகிடப்பெற்ற கரு நிற மட்கலங்களை யடுத்தும், அதற்குச் சற்று முந்திய காலத்திலும், மத்திய இந்தியாவிலுள்ள மாளவ பீட பூமியில் பிறிதொரு வகையான மட்பாண்டங்களின் உற்பத்தி தொடங்கியதெனலாம். நர்மதை, சம்பல் ஆறுகளின் பள்ளத்தாக்குகளில் இவ்வுற்பத்தி மிகுதியாக இருந்தது. சிவப்பு நிற மண்ணில், கறுப்பு வர்ணம் பூசப் பெற்ற எளிய கலங்களே இங்கு மிகுதியாக உற்பத்தியாயிற்று. நெடுங்காலமாக வழங்கிவந்த சிறு கற்களாலான தகடுகளின் உற்பத்தியோடு இம் மட்கலங்களை இணைத்துப் பேசுவதும் உண்டு. ஆனால், இம்மட் கலங்களுடன் தட்டையான செப்புக் கோடரிகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. கி. மு. ஆறுவது நூற்றாண்டிற்கு முன், இரும்பின் உபயோகம் இந்தியாவிலிருந்தது என்பதை உறுதிப்படுத்தும் சான்றுகள் தற்போது இல்லை.

### வரலாற்றிற்கு முந்திய கால இறுதியில் தென் இந்தியா

கி. மு. 500ஆம் நூற்றாண்டிற்குச் சற்று முன்பாக அக்காமினெட் சாம்ராச்சியத்தை, பாரசீகத்தின் பெருமன்னன் 'டேரியஸ்' (டரையசு) என்பவன் ஆண்டுவந்தான். இச்சாம்ராச்சியத்துடன் தொடர்பு கொண்டிருந்த காலத்திலேயே வடமேற்கு இந்தியா வரலாற்றுக் காலத்தில் அடிவைத்ததென ஒருவாறு கூற இயலும்.

கி. மு. 326-ல் மாவீரன் அலக்சாந்தரைத் தொடர்ந்து கிரேக்க வரலாற்ருசிரியர்கள் இந்தியாவிற்குள் நுழைந்தனர். தென்னிந்தியாவைப் பொறுத்த அளவில், செய்திகள் இத்துணைத் தெளிவாகக் கிடைப்பதில்லை. அசோகரின் கல்வெட்டுகள்



தென் இந்தியாவில் கண்டெடுக்கப் பெற்ற
கற்கோடரி வகைகள்

மைசூர் மாகாணத்தில் வடபகுதிலே கிடைக்கின்றன. கி.மு. 250-ல் எழுப்பப் பெற்ற இவை பௌத்த சமயப் பற்றுள்ள மன்னனின் கட்டளைகளைத் தாங்கி நிற்கின்றன. இருப்பினும், சுற்றியுள்ள இருள் சூழ்ந்த வரலாற்றை, தெளிவுபடுத்தும் ஆற்றல் அவைகளுக்கில்லை. கி.பி. முதல் நூற்றுண்டு முதல் இந்திய உபகண்டத்திற்கும் ரோம்நாட்டிற்குமிடையே வாணிபத்தெடர்பு ஏற்பட்டது. இதனல் மேலைநாட்டுப் புவி–இயல் வல்லுநர்களுக்கு இந்திய நாட்டை அறிந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. இந்திய இலக்கியத்திலும், பொறி எழுத்து முறைகளிலும் ஓரளவு உரோமானிய ஆதிக்கம் புகுந்தது. இச்சான்றுகளை வகைப்படுத்துவதில் எத்தகைய நன்லமயுண்டு எனக் கூறுவதற்கில்லை. தென் இந்தியாவின் ஆதிவரலாறு கி. மு. 250-லிருந்து கி. பி. 100 வரையுள்ளகாலத்துடன் முடிவடைகிறதெனக்கூறலாம்.எனினும், கி. பி. 100-க்குப் பல ஆண்டுகளுக்குப் பின்னுள்ள செய்திகளிலும், வரலாற்றிற்கு முந்திய கால ஆராய்ச்சி முறை நீடிக்க வேண்டுமென்றே தோன்றுகிறது. ரோமானிய அரசை, அகஸ்டஸ் என்பான் ஆண்டுவந்தபோது, இந்தோ-ரோமானிய வாணிபத் தொடர்பு உரமிட்டு வளர்க்கப் பெற்றது. கி. பி. முதல் நூற்றுண்டில் இத்தொடர்பு ஏற்பட்டதால், அவ்வாண்டுடன் தென் இந்தியாவின் ஆதிவரலாறு முடிவுறுவதாகக் கருதுவது மேலும் சிறந்ததென நான் கருதுவேன். அந் நூற்றுண்டுமுதல் மேலை

நாட்டுத் தொடர்பால் தென்னிந்திய வரலாறு மேலும் புதுமை பெறுகிறது. தக்காணத்திலெழுந்த சக்திவாய்ந்த சாதவாகன சாம்ராச்சியம், வரலாற்றை மேலும் தெளிவாக்குவதில் துணை புரிகிறது.

'கற்கோடரி'ப் பண்பாடு (stone axe culture) இருந்து வந்த தென்பதை முன்னரே குறித்தோம். மைசூர் மாகாணத்திலுள்ள பிரமகிரியிலும், அதையடுத்த பெல்லாரி மாவட்டத்திலும், நெடுங் காலத்திற்குத் தக்காணத்திலும் கி.மு. 200-க்கு முன் இப்பண்பாடு வழக்கிலிருந்திருக்க வேண்டுமென, அப் பகுதிகளில் கண்டெடுக்கப் பெற்ற சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. பர்மாவிலிருந்து குமரிமுனை வரை இதேபோன்ற மெருகேற்றப் பெற்ற கூரிய முனையுடன் கூடிய கோடரிகள் பல கண்டெடுக்கப் பட்டுள்ளன. அவைகளில் பெரும்பகுதி பூமியின் மேல்தளங்களி லிருந்தே கிடைத்துள்ளன. அவைகளுக்கென்று தனிப்பட்ட பண்பாட்டுத் தொடர்பு இல்லை. எனவே, இவையாவும் ஒரே பண்பாட்டு வகையைச் சார்ந்தவையென்றோ அல்லது சமகாலத்த வையென்றோ கூறிவிட இயலாது. பிரமகிரி-பெல்லாரிப் பண்பாடு எப்போது எதுவரை, தழைத்திருந்ததென்பதை உறுதி செய்வ தற்கு மேலும் பல இடங்களில் புதைபொருள் ஆராய்ச்சி நடை பெறவேண்டும். தென்கோடியில் மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சி யின் விளைவாகச் சில சான்றுகள் கிடைத்துள்ளன. கி.மு. முதல் மில்லினியத்தின் இடைப் பகுதியின் சற்று முன்பு அல்லது பின்பாக, மரத்தினால் எழுப்பப்பெற்ற குடிசைகளில் மக்கள் வாழ்ந்தனர். மட்கலங்களைக் கைகளினால் உருவாக்கினர். கொத்து வேலையாலும், மரம், செடி, கொடி உருவங்களைச் செதுக்கியும், மற்றும் பல குறிப்பிட்ட வடிவங்களை வெட்டியும், கலங்களை அவர்கள் அழகு படுத்தினர். களிமண்ணினால் கலங்கள் செய்யப் படும்போது, இவ்வுருவங்களும் செதுக்கப்பெற்று, பின் சூளை களில் வேகவைக்கப் பெற்றிருக்கவேண்டும். கரடு முரடான சிறு கற்கருவிகளும், அங்கொன்று மிங்கொன்றுமாகச் செப்பு அல்லது வெண்கலக் கருவிகளும், இப் பகுதியில் கண்டெடுக்கப்பெற்று எஞ்சி நிற்கின்றன. இறந்தவரை, உரிய பாண்டங்களில் இட்டுப் புதைக்கும் வழக்கமும் இருந்திருக்கவேண்டும். வட்டவடிவமான அடித்தளங்களையுடைய பானைகளில், சிறுவர்களின் உடல்கள் பத்திரப்படுத்தப் பெற்றிருந்தன.

**'மெகாலிதிக்' கல்லறைகள்**

கி. மு. மூன்றுவது நூற்றுண்டில் பிரமகிரியும், பெல்லாரியும் மௌரிய சாம்ராச்சியத்தில் அடங்கியிருந்தன. அசோகனது

மரணத்திற்குப்பின் அல்லது கி. மு. 236-ல் மௌரிய சாம்ராச்சியத்தின் சிதைவு தொடங்கியது. இது மாறுதல்களேற்படுவதற்கு ஏற்ற தருணமாயிருந்தது. உபகண்டத்தில் கண்டெடுக்கப் பெற்றுள்ள 'மெகாலிதிக்' பண்பாட்டை விளக்கும் சான்றுகளுக்கு, இதுவே காரணமாயிருக்கக் கூடுமென்னும் கருத்து, பெருமளவிற்குக் கற்பனையேயாகும். இச்சந்தர்ப்பத்தில் தெற்கு அரங்கில் புதிய மக்களினமொன்று தோன்றுகிறது. பல இரும்புக் கருவிகளையும், சக்கரத்தின் உதவியால் உருவாக்கப் பெறும் மட்கலங்களையும், கையாண்டு இவர்கள் வாழ்க்கை நடத்தியிருக்க வேண்டும். செத்தவுடல்களை வானவெளியிலிட்டு, அதனின்றும் ஆவியைப் பிரித்துப் பின் மெகாலிதிக் பானைகளில் இட்டு, ஒரு முனையில் சிறிய துவாரம் அல்லது சிறுகதவு பொருத்திப் பூமியில் புதைப்பது வழக்கம். வேறு பழக்கமுடைய முன்னோர்கள் ஒரு சிலரிருந்தனர், என்றாலும் 'மெகாலிதிக்' பண்பாட்டை வளர்ப்பவர்கள் மிகுந்திருந்தனர். கி.பி. முதல் அல்லது இரண்டாவது நூற்றாண்டில் சாதவாகன சாம்ராச்சியம் சீர்குலையும்வரையிலும் இம்மக்களின் செல்வாக்கு இப்பகுதியில் ஓங்கியிருந்ததெனலாம்.

இத்தகைய 'மெகாலிதிக்' கல்லறைகள் தனிரகமானவை. கற்குவியல்களாலான மேட்டின் கூரையில் பெருங்கற்கள் உண்டு. இவ்விடுகாட்டு மேட்டைச் சுற்றிலும் வட்டவடிவில் கற்கள் அமைக்கப் பெற்றிருக்கும். இத்தகைய கல்லறைகள், உபகண்டத்தின் தென்பகுதியில், குறிப்பாக ஹைதராபாத்திற்குத் தெற்கில், ஏராளமாகக் காணப்படுகின்றன. மெருகிடப் பெற்ற சிவப்பும், கறுப்புமான நிறங்களிலுள்ள தனிரகமான மட்கலங்களை இவர்கள் உபயோகித்தனரெனத் தெரியவரும். இவர்களால் உபயோகிக்கப்பெற்ற இரும்புக் கருவிகளில், கத்திகள், வாள்கள், அம்புமுனைகள், அரிவாள்கள், ஆப்புகள், உளிகள், ஈட்டிகள், ஆறு அங்குலங்களுக்கு மேற்பட்ட நீளமுடைய வேல்கம்புகள் ஆகிய பல ரகங்கள் காணப்படுகின்றன. இப்பண்பாடு எவ்வாறு தோன்றி வளர்ந்தது என்பதைப் பற்றிய விவரங்கள் குறைவாகவே கிடைக்கின்றன. பிரமகிரியை வந்தடையும்போது இப்பண்பாடு நன்கு உரம் பெற்றிருந்ததென்பதை மட்டிலும் உறுதியாகக் கூறலாம். இதனின்றும் இப்பண்பாடு வடக்கு அல்லது வடமேற்குத் திக்கிலிருந்துபிரமகிரியை அடைந்திருக்க வேண்டுமென்றும் ஒருவாறு கூறலாம். கிழக்குப் பகுதியில் இத்தகைய பண்பாட்டுக்குரிய அறிகுறிகள் எதுவுமில்லை. மேற்கு ஆசியா, வட ஆப்பிரிக்கா, ஐரோப்பா ஆகிய தொலைவிலுள்ள வடமேற்குப் பகுதிகளில், இதுபோன்ற கல்லறைகள் காணப்படுகின்றன. அவையாவும், பொதுவில் மிகப்

பழமையானவைகளாகக் காணப்படுகின்றன. அவைகளுக்கும் இந்திய நாட்டிலுள்ளவைகளுக்குமிடையே உள்ள தொடர்பின் தன்மையைக் குறித்து நாம் எவ்விதமுடிவையும் அறிவிப்பதற்கில்லை. சராச்சிக்கு அருகிலும்'மெகாலிதிக்'கல்லறைகள் காணப்படுகின்றன. ஆனல், இக்கல்லறைகளில் 'ஒளித்துவாரங்கள்' (porthole) இல்லை. இதன் காரணமாக, மேலை, கீழை நாடுகளில் காணப்படும். கல்லறைகளின் இடைக்கால நிலையை இவை குறிப்பதாகக் கொள்வதற்கும் வழியுண்டு. தென்னிந்திய வகை மேலைநாடுகளிலிருந்து வந்ததென்னும் கருத்தை உறுதிப்படுத்துவதற்கு, ஆசியாவின் பலபகுதிகளிலும், ஆப்பிரிக்காவின் ஒரு சில பகுதிகளிலேனும் புதைபொருள் ஆராய்ச்சியை மேற்கொள்ளுவது அவசியம். தற்போதுள்ள நிலையில், சிவப்பும், கறுப்பும் கலந்த மட்கலப் பண்பு கங்கைச் சமவெளியில் காணப்படவில்லை. நர்மதைப் பள்ளத்தாக்கிலும், குறைந்த பட்சம் வடநாட்டுக் கருநிறக்கலப் பண்பாட்டின் சமகாலத்தவையாக விந்தியப் பகுதியிலும், வளர்ந்து, பின் தெற்கு நோக்கி உபகண்ட முழுவதும் பரவியிருக்கவேண்டும்.

## 'சவக்குழிகள்' (Urnfields)

நாம் மேற்குறித்த கல்லறைகளுடன் சமகாலத்தவையாகச் சவக்குழிகள் பல தென் இந்தியாவில் காணப்படுகின்றன. நூறு ஏக்கர்களுக்கும் மேலான பரப்பில் இவை கண்டெடுக்கப் பெற்றிருப்பதால், பரவலான மக்களினத்தையோ, அல்லது பன்னெட்களாக வாழ்ந்து வந்த மக்களினத்தையோ இவை சார்ந்திருக்கலாகும். திருநெல்வேலி மாவட்டத்தில், பொருநையாற்றின் கரையில் கண்டெடுக்கப்பட்டிருப்பவை, மிக்க பிரசித்தமானவைகளாக விளங்குகின்றன. மற்றும் பல, சென்னை, பாண்டிச்சேரி ஆகிய நகரங்களுக்கருகிலும், வேறு சில இடங்களிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. செத்தவுடல்கள் பெரும்பாலும் கூனுருளை வடிவமான பானைகளில் அடக்கம் செய்யப் பெற்றிருக்கின்றன. சென்னைக் கருகிலுள்ள வகைகளில், களி மண்ணினலான புனித பாதங்களின் மேல் அவை வைக்கப் பெற்றிருக்கின்றன. பிற்கூறிய வகைகள், இயற்கையிலமைந்த கற் கூரைகளுடன் கூடிய சமாதிகளிலோ அல்லது கல்லறைகளிலோ அடக்கம் செய்யப் பெற்றிருக்கின்றன. 'மெகாலிதிக்' வகை போன்ற மேலும் பல சவக்குழிகளை நன்கு ஆராயும் முயற்சிகளை மேற்கொள்ளல் வேண்டும். ஆராய்ச்சியின் பலன் கிடைக்கும் வரை, பிரச்சினையின் சிக்கலான தன்மைகளை உணர்வதோடு நாம் திருப்தியடைய வேண்டும். சவக்குழிகளின் உரிமையாளர் உண்மையில் எங்கு

வசித்தனர் என்பது இன்னும் அறியக்கூடாத புதிராகவே இருந்து வருகிறது. ஆனல், சற்று அதிகமான முயற்சியால் இதைக் குறுகிய காலத்தில் நாம் அறிந்துகொள்ளலாம்.

**கிரேக்கரும் சகரும் (The Greeks and the Sakas)**

இக்காலத்து வட இந்திய வரலாறு சற்றுத் தெளிவுடன் காணப்படுகிறது. கி.மு. 326–ல் கிரேக்க வீரன் மகா அலெக்சாந்தர் இந்தியாவின் மீது படையெடுத்தான். அதன் விளைவாகப் பஞ்சாபிலும் வடமேற்கு எல்லையிலும், கிரேக்க அல்லது அவருடன் நெருங்கிய தொடர்புடைய மக்கள் குடியேறினர். பாக்திரியப் பேரரசும் அப்பகுதிகளில் தழைத் தோங்கியிருந்ததால் கி.மு. 246–லிருந்து கி. பி. 50ஆம் ஆண்டு வரையிலும், கிரேக்கரது பண்பாடு அங்குப் பரவும் வகையேற் பட்டது. இதையடுத்துப் பெரிய அளவில் குடியேறிய சகரைப்பற்றிய விவரமான செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. இது, கி மு. இரண்டாவது அல்லது முதல் நூற்றாண்டில் நடைபெற்ற செய்தியாகும். 'சகர்' என்னும் சொல், இனம் அல்லது குடி ஆகிய பாகுபாடுகளை மனத்தில் கொள்ளாது கணவாய்களுக்கு அப்பாலிருந்து இந்நாட்டில் குடியேறிய அன்னியர் யாவரையும் சுட்டுவதற்கு இந்தியரால் உபயோகிக்கப் பெற்றது. நாடோடிகளாகப் புகுந்த, இடுங்கிய கண்களையுடைய மங்கோலியரையும், அழகிலும் உடல் கட்டிலும் ஆரியருக்கு ஒப்பாக விளங்கிய துருக்கியரையும், ஒரு சேர 'சகர்' என்னும் சொல் குறித்தது. கத்யவார் தீபகற்பம், மதுரா, பஞ்சாப் ஆகிய பகுதிகளில் 'சகர்கள்' இராச்சியங்களை அமைத்துக்கொண்டனர்.

**'யூ–ச்சி' வகுப்பினர் (The Yuch-chi)**

கிருஸ்துவிற்குப் பின்னுள்ள முதல் நூற்றாண்டில் மத்திய ஆசியாவைச் சார்ந்த 'நாடோடி' வகுப்பினரான யூ–ச்சி என்பார் வடக்குச் சம வெளிகளில் குடியேறினர். அவரினத்தில் பிரசித்தி வாய்ந்த 'குஷானியர்', மாபெரும் சாம்ராச்சியமொன்றை ஏற்படுத்தினர். அது, தெற்கில் நர்மதை ஆறு வரையிலும் பரவியிருந்தது. பருத்த உடலும் அழகிய நிறமும் கொண்ட குஷானியரைத் துருக்கியரின் மரபினராகவோ, இரேனிய அல்லது பாரசீக ஆரிய வகுப்பினராகவோ கருத இடமுண்டு. சகர், யூ-ச்சியினர் ஆகியோரின் படையெடுப்பினல் இந்திய மக்களினக் கூறு பெரு அளவில் மாறியிருக்கவேண்டும். அன்னியரின் எண்ணிக்கை பெருகியது எனக் கூறலாம். கிறிஸ்து சாகப்தத்தின் மூன்ருவது நூற்ருண்டில், இந்தியாவின்மீது இரேனியர் படையெடுத்திருக்க வேண்டும் என்பதற்கான அறிகுறிகள் காணப்படு

கின்றன. ஆனால் இச் செய்தி பற்றிய உண்மையை அறிவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படவில்லை.

**ஹூணர்கள் (Hunas or Huns)**

ஐந்து ஆறுவது நூற்றாண்டுகளில், மத்திய ஆசியச் சமவெளியிலிருந்து கடுமை கொண்ட தோளினரான வகுப்பினர் பெருங்கூட்டமாக இந்தியாவின் மீதும் பாரசீகத்தின் மீதும் போர்தொடுத்து ஆக்கிரமித்தனர் என்பதில் ஐயமெதுவும் இல்லை. அவர்களை, இந்தியர், 'ஹூணர்' என்னும் பொதுப் பெயரிட்டு அழைக்கின்றனர். 'சகர்' என, நாம் முன்னர் குறித்த பொதுப் பெயரைப் போலவே இச் சொல்லும் பல்வேறு இனத்தினரைக் குறிப்பதாயமைகிறது.[1] ஐரோப்பிய நாடுகளின்மீது போர் தொடுத்த பிற ஹூணர்கள், மங்கோலிய இனத்தைச் சார்ந்த கடுமையான மலைச் சாதியினர் என நாம் அறிகிறோம். இந்திய நாட்டில் புகுந்தோரை 'எப்தலைட்டுகள்' (Ephthalities) அல்லது 'வெள்ளை ஹூணர்கள்' என்ற தனி வகுப்பினராகக் கருதுகிறோம். இதிலிருந்து, துருக்கியரைப் போன்று அவர்கள் அழகானவர்கள்எனநாம் அறியவுங்கூடும். ரஜபுத்திர வகுப்பினர் அல்லது மரபினர் பலரும், 'ஜாது' (Jats) வினரும், கூஜரரும் மற்றும் சில வகுப்பினரும், ஹூணர்களின் சந்ததியாராகவோ அல்லது அவர்களுடன் நெருங்கிய தொடர்புடைய பிறரின் வழித் தோன்றல்களாகவோ இருக்கக்கூடும். தற்போதுள்ளவரின் தோற்றத்திலிருந்து அவர்தம் முன்னோரின் உருவச் சிறப்புகளை ஓரளவு அறியலாகும். அவரது அன்னிய மூதாதையர் உயரமான, வனப்புடைய உடற்கட்டைப் பெற்றிருந்திருக்கக்கூடும். பஞ்சாப், மற்றும் ஐக்கிய மாகாணப் பகுதிவாழ் மக்களினத்தில், மங்கோலியக் கலப்பு அதிகமாகத் தென்படுவதில்லை. இமாலயப் பகுதிகளிலும், சுற்றுப்புறங்களிலும் மங்கோலிய உறவு ஓரளவு காணப்படுகிறது.

'ஹூணரின் படையெடுப்பு' வட இந்திய வரலாற்றின் முக்கியமானதொரு செய்தியாக விளங்குகிறது. இது ஒரு தனி வகையான சகாப்தத்தைத் தொடங்குவது எவ்வாறு என்பதைப் பின்னர் விரித்துரைப்போம். மக்களினத்தின் சிறப்பிற்குப் 'படையெடுப்பு' பலவகையில் காரணமாயிருந்த தென்பதை விளக்குவதற்காகவே, இங்கு அச் செய்தியைக் குறிப்பிட வேண்டியதாயிற்று.

[1] கி.பி. 1600ஆம் ஆண்டில் பிராமண நூலாசிரியர் ஒருவர், போர்த்துகீசியரையும் இப்பெயரால் அழைத்தார். 18 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சீனிவாச கவி, பாண்டிச்சேரியைச் சார்ந்த பிரெஞ்சுக்காரரையும் பிராம்சு ஹூணர்' என்ற பெயரிட்டு அழைத்தார்.

**குடியேறிய இஸ்லாமியரின் கூறுகள் (Type of Muslim Settlers)**

இந்திய மக்களினத்தில் பெருமாறுதலேற்படுத்திய இறுதி முயற்சியாக, இஸ்லாமியரின் குடியேற்றத்தை நாம் கருதலாம். எட்டாவது நூற்றூண்டில் அராபியர் புகத்தொடங்கிய காலம் முதல் பதினாறுவது நூற்றூண்டில் முகலாய சாம்ராச்சியம் சமைக்கப் பெற்ற காலம் வரை இம்முயற்சி வியாபித்திருந்தது. அதற்குப் பிறகு, இஸ்லாமியரின் குடியேற்றம் மிகச் சிறிய அளவிலேயே நடைபெற்றது. இஸ்லாமிய படையெடுப்பாளரும், குடியேற்றக்காரரும் ஆசியாவின் பல்வேறு இனத்தைச் சார்ந்தவர்கள். அவர்களில் சிலர் இடுங்கிய கண்ணும், மஞ்சள் நிறமும், தாடி மீசையற்ற வழவழப்பான முகமும் உடையவர்கள். அவர்களில் பெரும்பாலனவர். பல்வேறு நாடுகளையும், இனங்களையும் சார்ந்தவர்களாக விளங்கினர். உயர்ந்து, வனப்புமிக்க உடலுடனும், தாடியுடன் கூடிய முகத்துடனும், பார்வைக்கு அழகாக இவர்கள் விளங்கினர். இந்தோ-ஆரியருக்கொப்பான இரேனியப் பாரசீகரும், துருக்கரும், பல்வகையான ஆப்கானியரும், மற்றும் பல கலப்பு சாதியினரும் இக்கூட்டத்திலடங்குவார்கள். தற்கால முஸ்லீம்களிடையில் மங்கோலியக் கூறுகள் குறைவாகத் தென்படுவதற்குப் பிற கூறுகள், காலப்போக்கில் மங்கோலிய அடிப்படையைவிடக் கூடுதலாகச் சேர்ந்ததே காரணமாகும். எனவே, குடியேற்றத்தின் விளைவை மொத்தமாகக் கணக்கிடும்போது, நாட்டுமக்களிடையில், உயரமான வனப்புமிக்க மக்கள் கலப்பதற்கு அன்னியரின் குடியேற்றம் பெருஅளவில் காரணமாயிருந்ததெனலாம். இஸ்லாமிய குடியேற்றக்காரரின் அங்க அமைப்புகள், இந்தோ-ஆரியப் பிராமணரின் வகையை அதிகமாக ஒத்திருந்ததேயன்றி, நாட்டின் ஆதிவாசிகளான குடிகளையொட்டியதாக இல்லை.

**அதிவிரைவில் பரவிய இஸ்லாமிய மதம்**

நபிநாயகம் அருளிய இஸ்லாமியச் சமயம் பரவிய வேகமும், அச் சமயத்தைச் சார்ந்தவர்கள் அதிவிரைவில் அரசியலாதிக்கம் பெற்று எழுந்ததும் வியப்பூட்டும் நிகழ்ச்சிகளின் வரிசையில் எண்ணத் தக்கவையாக விளங்குகின்றன. அவைகளை வரலாற்று 'மகேந்திர ஜாலங்'களென்றே கருதலாம். அதிசயிக்கத்தக்க, இத்தகைய நிகழ்ச்சிகளை விளக்குவதற்கு மேற்கொள்ளப்படும் நேரிடை விளக்கங்கள், போதிய அளவு தெளிவாக இல்லை. இது போன்ற எண்ணற்ற அதிசய நிழகழ்ச்சிகள் வரலாற்றில் காணப்படுகின்றன. கடந்த காலத்திலும் நிகழ் காலத்திலும் நடைபெறும் இவை மனித அறிவிற்கு அப்பாற்பட்டவைகளாக விளங்கி

வருகின்றன. அவைகளை அவ்வாறே ஏற்பதுடன் நாம் மகிழ்ச்சியடைய வேண்டும்.

கணிசமானதொரு வெற்றியடையும்போது, மெக்காவைச் சார்ந்த 'மகம்மது' என்னும் தீர்க்கதரிசி ஐம்பது ஆண்டுகளைக் கடந்திருந்தார். சொந்த நாட்டு மக்களிடை நிலவிய புராதன சமயம், மற்றும் யூத, கிறித்துவ சமயங்களை வென்றிடும் வல்லமையுள்ளதொரு சிறந்த வழியொன்றை மக்களுக்கு ஓதும் பணிக்கென்றே தெய்விகமான தன் பிறப்பு உரியது என அவர் எண்ணினார். மெக்கா நகர மாந்தர் இவரிடம் காட்டிய வெறுப்பின் விளைவாக கி. பி. 622-ல் பிறந்த நாட்டை விட்டு ஓடி மெதினா (Medina) நகரத்தில் தஞ்சம் புகவேண்டிய நிலை இவருக்கு ஏற்பட்டது. நாடு விட்டோடிய இந் நிகழ்ச்சி 'ஹிஜிரா' எனப் பெயர் பெறும். இஸ்லாமியரின் 'ஹிஜிரா' சகாப்தத்தின் தொடக்கமும் இதுவேயாகும். இதைச் சற்று ஏளனமாக 'ஹெஜிரா' என்றழைப்பதும் உண்டு.[1] எஞ்சிய பத்து ஆண்டுகள், அரேபியாவில் அவர் அரசியலாதிக்கம் பெறுவதற்கும், இந்நாட்டின் தீர்க்கதரிசி என அவரை மக்கள் ஏற்பதற்கும் பிடித்தன. கி. பி. 632-ல் அவர் மரணமடைந்தார். அவரது சந்ததியார்களாக ஆதி 'காலிபுக்கள்' (Caliphs) பாரசீக, பைசாந்தியப் (Byzantine) பேரரசுகளின் எதிர்ப்புகளுக்கு ஈடு கொடுக்கவேண்டிய நிலையிலிருந்தனர். பாலைவனப் பகுதிகளிலிருந்து வீறுகொண்டெழுந்த அராபியரின் ஆர்வத்திற்குமுன் நிற்கவியலாது பழம்பெரும் சாம்ராச்சியங்கள் வலிவிழந்து வீழ்ந்தன.

நபிநாயகம் மறைந்த எட்டு ஆண்டுகளுக்குள், அவரது சீடர்களான அராபியர், தங்கள் நாடு நீங்கலாகப் பாரசீகம், சிரியா, மேற்குத் துருக்கிஸ்தானம், சிந்து, எகிப்து, ஸ்பெயின் நாட்டின் தென் பகுதி ஆகியவிடங்களில் அரசியலாதிக்கம் பெற்றனர். அடிமைப் படுத்திய மக்களை இஸ்லாமிய சமயத்தை ஏற்குமாறு வாள் முனையில் வற்புறுத்தினர். ஏற்க மறுப்பவருக்கு, அதற்கீடாகப் பெருஞ் செல்வத்தைப் பணயமாக விதித்துப் பெரும் பொருள் ஈட்டினர்.

[1] இஸ்லாமியச் செய்திகளை விளக்கும் நாட்களை ஹி. பி. (ஹிஜிராவிற்குப் பின்—அன்னோ ஹிஜிரே) எனக் குறிப்பதுண்டு. உதாரணமாக ஹி. பி. 1335: கி.பி. 1916-17, (அக்டோபர் மாதம் முதல் அக்டோபர் மாதம் வரை.) சந்திரனது மாறுதல்களை அடிப்படையாகக் கொண்ட ஹிஜிரி ஆண்டிற்கு 354 நாட்கள் உண்டு. அதனால் சூரியனது மாறுதல்களைக் கொண்டு கணக்கிடப்படும் ஆண்டிலிருந்து சுமார் 11 நாட்கள் குறைவுடையனவாகும்.

**எல்லை நாடுகளில் இஸ்லாமிய சமயம் பரவுதல்**

இந்திய நாட்டின் சுற்றுப் புறங்கள் அதிவிரைவில் காலிபு களின் கவனத்தைக் கவர்ந்தன. கி. பி. 643ஆம் ஆண்டிலேயே, அராபியர் மக்ரான் கரையை வந்தடைந்தனர். கி. பி. 712-ல் முகம்மது இபின் காசிம் என்பவன் சிந்து நாட்டின்மீது போர் தொடுத்து வெற்றி கண்டான். அதிலிருந்து சிந்து அராபியரின் வசமேயிருந்துவந்தது. சிறிது காலத்திற்குள்ளாகக் காபூலும், ஓர் அடிமை நாடாகவோ அல்லது திறை செலுத்து நாடாகவோ ஏற்கப்பட்டது. எட்டாவது நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து அராபியர், சிந்துவிலும் சுற்றியுள்ள பகுதிகளிலும் அதிகமாகக் குடியேறி வாழத்தொடங்கியதால், அப் பகுதிவாழ் மக்களினத் தின் கூறு மாறுபடத் தொடங்கியது. ஆனால் இந்திய நாட்டின் பெரும்பகுதியில் எவ்வித மாறுதலுமேற்படவில்லை. அராபிய வணிகர் சிலர் அவ்வப்போது வாணிபத்திற்கென மேலை இராச்சி யங்களுக்கு வந்து போவதுண்டு. சிந்துவைச் சேர்ந்த அராபிய வீரரும் ஓரிரு சமயங்களில் இந்து இராச்சியங்களைச் சூறையாடி யும் வந்தனர். சிந்துவிற்கும், இந்து இராச்சியத்திற்கும், அக் காலங்களில் ஹக்ரா ஆறு எல்லைக்கோடாக விளங்கி வந்தது. அந்நதிக்கு மேற்கில் நடைபெற்றுவரும் மாறுதல்களைக் குறித்து இந்து மன்னர்கள் எவ்விதக் கவலையும் கொண்டிருக்கவில்லை.[1]

**இஸ்லாமிய சமயமும் இந்தியாவும்**

கி.பி. 1020-ல் பஞ்சாப் பகுதியை கஜினிகளின் சாம்ராச்சி யத்துடன் சுல்தான் முகம்மது இணைத்தான். இதனால் அப்பகுதி யில் அநேக அன்னிய முஸ்லீம்கள் குடிபுகுந்தனர். பிற்பகுதிகளில் முஸ்லீம்களின் குடியேற்றம் அதிகமாக நடைபெறவில்லை. பன்னி ரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து, முகம்மதுகோரி இந்தி யாவைப் படிப்படியாகக் கைப்பற்றத் தொடங்கினான். தொடர்ந்து இஸ்லாமிய வெள்ளம்புகத் தொடங்கியது. சுல்தானி யராட்சி டில்லியில் வேரூன்றி நடை பெற்றபோது மேலும் பலர் தடையின்றி உட்புகலாயினர். 1340ஆம் ஆண்டிலிருந்து 1526ஆம் ஆண்டு வரையிலும் சுல்தானியராட்சி சிதைவுற்று வந்தபோது குடியேற்றமும் குறைந்திருக்க வேண்டும். பிற்காலத்தில், பாபரின் வெற்றிக்குப்பின் மீண்டும்இஸ்லாமியரின் குடியேற்றம் தொடங்கி யது. தொடர்ந்து, இரு நூற்றாண்டுகளுக்கு, எல்லைக்கப்பாலிருந்த முஸ்லிம்கள் பலர் இங்குத் தக்க புகலிடம் பெற்றனர்.

[1] பகவல்பூர் இராச்சியத்தில் ஓடிக்கொண்டிருந்த ஹக்ரா ஆறு 18ஆம் நூற்றாண்டில் முற்றிலும் வரண்டுபோயிற்று. இப்பொழுது இது சிந்துப் பாலை நிலமாகவுளது.

இவர்களின் எண்ணிக்கை அதிகமெனக்கூறுவதற்கில்லை. ஊர்ச்சிதமான குடியேற்றங்களின் எண்ணிக்கை பெருகிற்று. பல்லாயிரக்கணக்கான இந்துக்கள் இஸ்லாமிய சமயத்தைத் தழுவ வேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டது. ஆதியில் குடியேறியிருந்த இஸ்லாமியருக்கும், புதிதாகக் குடியேறியவர்களுக்கு மிடையே திருமண உறவுகள் உண்டாயின. இஸ்லாமிய இனம் பெருகிப் பரவும் தன்மையுடையது. இவ்வகையில், இந்து இனத்தைவிட, அது வளமிக்கதெனலாம். சகர், ஹூணர் போன்ற முன்னோடிகள் காலப்போக்கில் இந்நாட்டுடன் இரண்டறக் கலந்துவிட்டனர். அவர்களைப் போலன்றி, குடியேறிய இஸ்லாமியர், இந்நாட்டின் பழக்க வழக்கங்கள் பலவற்றை மேற்கொண்டனரெனினும், தங்களுக்கே உரிய குணதியங்களை மாற்றிக்கொள்ளவில்லை. இதற்கான, திட்டவட்டமான காரணங்களும் உண்டு. அவர்தம் சமய நூல்கள் எழுந்த காலம் அறிவிற்கெட்டியதாக விருக்கிறது. கடவுளின் ஒருமைக் குணம், நபிநாயகத்தின் தெய்விகப்பணி ஆகிய இரண்டு சிறந்த கொள்கைகளே இச்சமயத்தின் அடிப்படைகளாக விளங்குவது மற்றுமோர் காரணம். எளிமை நிறைந்த இச்சமயக் கோட்பாடு அளவு கடந்த பக்தியை ஏற்படுத்துவதுடன், இந்து சமயம் அளிக்கும் சுவை மிக்க கருத்துகளையெல்லாம் ஒதுக்குவதற்குரிய மனத் திண்மையும் அளித்துவந்தது. இந்து முஸ்லிம் சமூக உறவோ எனில் சூழ்நிலையால் பெரிதும் மாற்றியமைக்கப்பெற்றுவந்தது. மத்திய ஆசியாவினின்று குடிபெயர்ந்து வந்த ஆதி முஸ்லீம்களின் திடமற்ற சலன பக்தி, நுண்ணறிவோடு கூடிய இந்து சமயக் கோட்பாடுகளுக்கு, சரிசமமாக ஈடு கொடுக்க இயலவில்லை என்பதும் உண்மையேயாகும். நாடோடிகளான ஆதிமுஸ்லீம்களின் 'ஷாமானிச'க் கொள்கை[1] ஆதி திராவிட மக்களின் சமயக் கோட்பாடுகளைப் போன்றதாக இருந்தது. சக்திவாய்ந்த இந்து சமயக்கோட்பாட்டிற்கு எதிராக நிலைத்து நிற்க இயலாமல் அவை வலிவிழந்தன. காலப்போக்கில் அலை அலையாகக் குடியேறிய அன்னிய முஸ்லீம்கள் யாவரும் 'சாதிமுறை' என்ற பெருங்கடலில் அதிவிரைவில் சங்கமமாயினர்.

**மற்றும் சிறிய அன்னிய குடிகள்**

பதினைந்தாம் நூற்றாண்டு முதல் இந்தோ-ஐரோப்பிய வகையொன்று இந்திய மக்களினத்தில், அதிலும் குறிப்பாக,

[1] ஷாமானிசக் கொள்கை:—வடக்கு ஆசியாவிலுள்ள சமயக் கோட்பாடு. யந்திர தந்திரங்களில் அதிக நம்பிக்கையுடன் கூடிய கோட்பாடாக இது விளங்கியது.

பம்பாயைச் சேர்ந்த கொங்கணம், ஹிமாலயப் பகுதி அடிவாரங்களில் பெருகிவருவதை உணரலாகும். போர்ச்சுகல், இங்கிலாந்து மற்றும் மேலை நாடுகளிலிருந்து குடியேறிய ஐரோப்பியர், இந்தியப் பெண்களை மணந்து வாழ்க்கை நடத்தியதின் விளைவாக இது ஏற்பட்டது.

யூதர், பார்சிகள், ஆர்மீனியர் போன்ற இனத்தினர் இன்றும் தனித்து வாழ்ந்துவருவதால் இந்நாட்டு மக்கள் வகையைப் பெருக்குவதில் அவர்களுக்கு எவ்விதப்பங்கும் இல்லை.

**இனத்தை உறுதிப்படுத்துவதில் 'மொழிக்கு'த் தொடர்பில்லை**

வடமொழியும் அதனுடன் தொடர்புகொண்ட புராதனப் பாரசீகமொழி, அல்லது "செந்ந்" (Zend), கிரேக்க மொழி, இலத்தீன், ஜர்மானிய மொழி, ஆங்கிலம் மற்றும் மேனாட்டு மொழிகளில் பல ஒருமிக்க ஓரினமாகக் கருதப்பட்டு, 'இந்தோ ஜெர்மானிய' அல்லது 'ஆரிய' மொழிக்குடும்பமாக விளங்கி வருகின்றன. ஆரியமொழி பேசிவரும் மக்கள் யாவரும் ஆரிய இனத்தைச் சார்ந்தவர்களே எனப் பெரும்பாலான நூலாசிரியர்கள் கருதுவர். இம்மொழிகளைப் பேசிவரும் மக்களிடையில் இனத் தொடர்பு உண்டு எனக் கருதவும் அவர்கள் துணிவர். அத்தகைய 'ஊகம்' முறையானதன்று; தேவையற்றதும்கூட எனக் கூறலாம். மொழித் தொகுப்பை இனத்தை விளக்கும் சான்றாக என்றுமே கருத முடியாது. நாம் ஏற்கெனவே கண்டதுபோல இந்திய மக்களினம் பல்வகையான மக்களின் கூட்டுச்சேர்க்கையாக விளங்குகிறது. பல்வேறு மொழிகள் பேசி வந்த மக்கள் அதிலடங்குவர். சகர், ஹூணர் யூ-ச்சிகள் ஆகியோரடங்கிய, மத்திய ஆசிய மொழிகள் பேசிவந்த மக்கள் வட இந்தியாவில் குடியியேறிருந்த போதிலும் அம்மொழியெதுவும் தற்போது வழக்கிலில்லை என்பது குறிப்பிடத்தக்கது! அம் மக்களின் வழிவந்த வடஇந்தியர், சமஸ்கிருத மொழியுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட இந்தி போன்ற மொழிகளையே பேசிவருகின்றனர். உலகெங்கிலும் இத்தகைய நிலையே இருந்துவருவது தெளிவாக விளங்கும். மொழிகள் சில காலப்போக்கில் மறைந்துவிடுகின்றன. பிற மொழிகள் அவைகளின் மேல் ஆதிக்கம் பெற்று வளரத் தொடங்குகின்றன. இதற்கு மொழி பேசிவரும் மக்களின் ஏற்றமே காரணமாக விளங்குகிறது. உதாரணமாக, பிரிட்டனில் 'கார்ன்' (Corn) பகுதியில் வழங்கி வந்த மொழி அநேகமாக வழக்கொழிந்துவிட்டது. அப்பகுதி மக்கள் ஆங்கில

இனத்தைச் சார்ந்தவரல்லரெனினும், தற்போது ஆங்கிலத்தைத் தவிர வேறு மொழி பேசுவதில்லை.

ஆரியரது கருத்துகளும், நிறுவனங்களும், இந்திய நாட்டின் பல பகுதிகளிலும் மக்களின் உள்ளங்களை அதிகமாகக் கவர்ந்திருக்கின்றன. மக்கள் தொகையில் ஆரியரினத்தைச் சேர்ந்தவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருப்பதோடு சில பகுதிகளில் மக்களினத்தில் ஆரியக் கலப்பே இல்லை என்றும் கூறலாம்.

**மொழிகள்**

வடக்கு மற்றும் மேற்கு இந்தியாவில் வழக்கிலிருந்து வரும் இந்தி, வங்காளம், மராத்தி, குஜராத்தி மற்றும் பல மொழிகள் இந்திய மொழிகளின் முக்கியப் பிரிவான இந்தோ-ஆரிய மொழி இனத்தைச் சார்ந்தவைகளாக விளங்குகின்றன. ஆதியில் வழக்கிலிருந்த மொழி அல்லது 'பிராகிருத மொழி'யிலிருந்து இவை தோன்றியிருக்கக்கூடும். வேத காலத்தில் வழங்கிய சம்ஸ்கிருதம், பிற்காலத்தில் வழக்கிலிருந்த சம்ஸ்கிருதம் ஆகியவைகளோடு இம்மொழிகள் நெருங்கிய தொடர்புடையவைகளாக விளங்குகின்றன.

திராவிட மொழி இனம், மொழிகளின் மற்றுமோர் முக்கியப் பிரிவாக விளங்குகிறது. தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு மற்றும் சில மொழிகள் இப்பிரிவில் அடங்குகின்றன. தமிழிலும், தெலுங்கிலும் இலக்கிய வளம் அதிகமாக உண்டு. தமிழ்மொழி இவை யாவற்றிலும் முக்கியமானதாகவும் பழமையானதாகவும் விளங்கிவருகிறது. திராவிட மொழி வகுப்பின் இலக்கணமும் உருவ அமைப்பும் வடமொழியினின்றும் முற்றிலும் மாறுபட்டது. தொன்மையான தமிழிலக்கியம் கிறிஸ்து சகாப்தத்தின் முதல் நூற்றாண்டுகளில் அல்லது அதற்கும் முன்பாக உருவாகியிருக்கக் கூடும். திராவிட மொழிப் பிரிவின் குணாதிசயங்களைக்கொண்ட அம்மொழி சம்ஸ்கிருத வகையிலிருந்து மாறுபட்டு விளங்குகிறது. இம்மொழிகள் யாவற்றிலும் எழுந்த பிற்கால இலக்கியங்களில் பிராமணக் கருத்துகளும், வசன முறையும் காணப்படுகின்றன. 'திராவிடம்' என்பது தென்கோடியிலுள்ள தமிழகத்தின் புராதன பெயராதலால் இம்மொழி இனங்களுக்கு 'திராவிட மொழிகள்' என்னும் பொதுப்பெயர் வழங்கலாயிற்று. உண்மையில் திராவிடமென்பதும் தமிழுக்கு அடை மொழியாகவே விளங்கிவருகிறது. இவை தவிர, முண்டா (Munda), மான் – கெமர் (Mon – Khmer), சீன – திபெத்திய மொழி என்ற

மற்றும் மூன்று மொழிவகைகளும் உண்டு. ஆனால், இவ்விந்திய மொழிகளில் இலக்கியங்கள் மிகக் குறைவாக உள்ளன. அநாகரிகமான காட்டுமிராண்டிகளே இம்மொழிகளை அதிகமாகப் பேசிவருகின்றனர், அம்மொழிகளின் குணாதிசயங்களை அதிகமாக ஆராய்வதில் பயனில்லை. இம்மொழிகள் பேசிவரும் மக்கள் இந்திய வரலாற்றுடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கவில்லை.

**இந்திய – ஆரியர் பரவுதல்**

இந்தோ - ஆரியர் பஞ்சாபில் புகுந்த பின்னர், தென் கிழக்கு முகமாகப் பரவத்தொடங்கினர் எனப் பொதுவாகக் கூறலாம். 'ஐந்து நதி பாயும் பூமி' என்றும், பிற்காலங்களில் 'ஏழு நதிகள் பாயும் பூமி' என்றும் பஞ்சாப் வர்ணிக்கப்படுகிறது. ஏதோ ஒரு காரணம் பற்றித் தென் பகுதியைத் 'தக்ஷிணம்' அல்லது 'வலக்கை' எனப் பெயரிட்டனர். ஆங்கிலத்தில் இது 'டெக்கான்' என அழைக்கப்படுகிறது. ஆரிய வகுப்பினரில் பெரும்பாலானவர், பஞ்சாபைக் கடந்து கங்கை, யமுனை நதியோரமாகச் சென்றனர். அதற்கும் முன்பாகவே மற்றும் சிலர் சிந்துநதியின் போக்கிலேயே சென்றனர். மற்றும் சிலர், இதற்குப் பிற்காலங்களில் மலையடியோரமாகச் சென்று மிதிலை அல்லது 'திர்கூட்' (Tirhut) பகுதிகளில் குடியேறியிருக்கவேண்டும். பஞ்சாபில் வாழ்ந்தபோது இவ்வன்னியர் இந்துக்களாக மாறிவிடவில்லை; அச்சமயத்தைக் கடைப்பிடிக்க முயன்று வந்தனர் போலும். டெல்லிக்கு வடக்கில் ஸட்லஜ் ஆற்றைக் கடந்தபிறகே தனிவகையான பிராமண சமயம் உருவாகியிருக்கவேண்டுமெனத் தோன்றுகிறது. 'சரஸ்வதி'— 'த்ருஷத்வதி' ஆகிய ஆறுகளுக்கு மத்தியில் சிறியதொரு நிலப்பகுதியுண்டு. இப்பொழுது இப்பகுதியைத் தெளிவாக அடையாளங்கண்டுகொள்வது மிகக் கடினம். இப்பகுதியை 'பிரம்மவர்த்தம்' (Brahmavartha) 'கடவுளர் நாடு' என பயபக்தியுடன் 'மனு' வர்ணித்திருக்கிறார். தானேஸ்வரம் போன்று பரந்த பிரமவர்த்தம் அல்லது குருக்ஷேத்திரம் மற்றும் மத்ஸ்யம் அல்லது கிழக்கு இராஜஸ்தானம், பாஞ்சாலம், அல்லது கங்கைக்கும் யமுனைக்கும் இடையுள்ள வெளி, மதுரா மாவட்டம் அல்லது சூரசேனம் ஆகியவைகளடங்கிய பெரும் நிலப்பகுதியை மிகச்சாதாரணமாக எளிமை மிக்க 'பிரமரிஷி தேசம்' அல்லது 'தெய்விக முனிவர் வாழ்நாடு' என்ற பெயராலேயே அழைக்கிறார்.[1]

[1] வட இந்திய நதிகளான சிராவஸ்தி, த்ருஷத்வதி ஆகிய ஆறுகள் அடிக்கடி தங்கள் போக்கை மாற்றிக்கொண்டுள்ளன. இதனால், அவை

கி. பி. 200 அல்லது அதற்குச் சற்று முந்திய காலத்தில் மனு எழுதிய நீதிநூல் முழுமை பெற்றதெனலாம், அப்போது இமாலயத்திலிருந்து, விந்தியமலைவரையுள்ள, கடல்களை எல்லையாகக்கொண்ட நிலப்பரப்பு 'ஆரியவர்த்தம்' அல்லது 'ஆரிய ராச்சியம்' என வழங்கப்பெற்றது. ஆரியர் சிறுகச் சிறுகப் பரவியிருக்கவேண்டும். எனவே பரவுவதற்கு அதிகக் காலமும் பிடித்திருக்கக்கூடும். அன்னியரால் முறியடிக்கப்பெற்ற கருமை நிறங்கொண்ட நாட்டு மக்கள் தஸ்யுக்கள் என்றும், பிற பெயர்களாலும் அழைக்கப்பெற்றனர். சமவெளிகளில் வசித்துவரும் ஒரு சில தாழ்ந்த சாதியினரும், மலைப்பகுதி வாழ் குடிகளில் ஒரு சிலரும், அவரது மரபினராகக் கருதப் படுகின்றனர்.

**ஆரியர் தென் இந்தியாவில் பரவுதல்**

இந்தோ – ஆரிய நாடோடிகள் கிறிஸ்துவ சகாப்தம் தொடங்குவதற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னதாக, அமைதியான முறையிலே தக்காணத்தினுட் புகுந்தனர் எனக் கொள்ளலாகும். நர்மதை ஆற்றின் ஓரமாகச் செழித்தோங்கி வளர்ந்திருந்த காடுகளிருந்தமையாலும், சத்பூர, விந்திய மலைத் தொடர்கள் தக்காண எல்லையில் அரண் போன்று அமைந்திருந்ததாலும், பெரும்பாலான ஆரியர் கூட்டமாக உப கண்டத்தில் குடிபெயர்ந்தனர் எனக் கொள்வதற்கான ஆதாரமில்லை. வேதகால முனிவன் அகத்தியன் அல்லது அவனது பெயர் பூண்ட ஒருவன் ஆரிய நிறுவனங்களையும், கருத்துகளையும் திராவிடத் தென்னகத்தில் புகுத்தினன் எனப் பரம்பரைச் செய்திகள் கூறுகின்றன. தென் கடற்கரையோரமாகவே இத்தொடர்பு ஏற்பட்டிருக்கவேண்டும். புதிய கருத்துகளை விளம்பரம் செய்வதில் பிராமணர்கள் முயற்சி மேற்கொண்டிருக்கவேண்டும். சாதிமுறைபோன்ற பிற ஆரியக் கோட்பாடுகள் காலப் போக்கில் தென்னகத்தே பரவிய வகைகளை விரித்துரைக்கும் தெளிவற்ற கதைகள் நன்கு ஆராயப் பெறவில்லை. அவைகளை இங்கு விவாதிப்பதும் இயலாது.

---

களைத் தற்போது சரியாக அடையாளம் கண்டுகொள்வது சற்றுக்கடினமாக உள்ளது. வரைப்படங்கள் குழப்பத்தை விளைவிக்கின்றன. இஸ்லாமியர் படையெடுத்து வந்த காலத்திற்கு முன்பிருந்த இந்திய நதிகளின் போக்கை வருணித்து வரைப்படம் எழுதுவது மிகவும் கடினம். கவனமுள்ள மாணவர்களின் உபயோகத்திற்குக் கீழ்க்காணும் கருத்துத் தரப் படுகிறது. வரலாற்று அறிவிற்கு எட்டியவரை, சிராவஸ்தி, காகர் ஆகிய நதிகளுடன் சட்லஜ் இணைந்து ஹக்ரா என்னும் பெருநதியாயிற்று. ஒரு காலத்தில் அது பகவல்பூர் வழியாக ஓடி, சிந்து நதியில் கலந்தது. அப்போது பிரம்மவர்த்தம், கங்கை, யமுனை ஆற்றிடை வெளிபோன்ற ஓர் பகுதியாக இருந்தது. (பியர்ஸன், 'அலெக்சாந்தர், போரஸ், பஞ்சாப்' இந்தியன் ஆண்டிக்வேரி' வால்யூம் XXXIV 1905, பக்கம் 254.)

**தனிவகைத் திராவிட நாகரிகம்**

ஆந்திரர், சேரர், சோழர், பாண்டியர் ஆகியோரடங்கிய தீபகற்பத்தில் பிராமணர் முயன்று புகுந்தபோது அங்கு அநாகரிகமான குடிகளுடன் பண்பட்ட மக்கள் வாழ்ந்து வந்ததைக் யும் கண்டனர். திராவிடரது சமயக் கோட்பாடுகளும் சமூக வாழ்க்கை முறைகளும், வட இந்திய மக்களிடை வழக்கிலிருந்தவைகளினின்றும் மாறுபட்டிருந்ததைக் கண்டனர். தற்காலத்தில் பர்மாவில் இருப்பதுபோன்று சாதிமுறை வழக்கிலிருந்தது. ஆவேச மொழிகளை உரக்கப் பேசி, வெறியாட்டமாடி வரும்பொருளுரைப்பதை நம்பி, பல்வகையான சாமி பூதங்களில் நம்பிக்கைகொண்டு அவர்கள் வாழ்ந்திருந்தனர். இத்தகைய கடவுளர் யாவரிலும் மலைவாழ் முருகனே முக்கியமாக விளங்கினன். இக்கடவுளரைப் பிராமணர் தாங்கள் வழிபட்டுவந்த தெய்வ வரிசையில் சேர்த்து, புதிய பெயர்களிட்டு புராதன ஆண், பெண் தெய்வங்களோடு உறவு கூட்டிக்கொண்டாடத் தொடங்கினர். மனித இனத்தைப் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு வருணங்களாக எண்ணும் இந்து சமயக் கொள்கை தென்னிந்தியருக்கு முற்றிலும் புதியதாக உள்ளது. க்ஷத்திரிய, வைசிய வகுப்பினர் இன்று வரையில் அவர்களிடையில் இல்லை.[1] திருமண விதிகளும் வாரிசு முறைகளும் பிராமணரின் வழிமுறைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டவையாக இருந்தன. இன்று, இந்து சமயத்தின் திட்டவட்டமான சாதிமுறைகளும், மற்றும் விதிகளும் அதிக ஏற்றம் பெற்று விளங்குகின்றன. இருந்தும், முற்றிலும் வேறான, பழமை வாய்ந்த திராவிடரின் கருத்துகளும் ஆயிரக்கணக்கான வகையில் நடைமுறையிலிருந்து வருவதை இன்றும், காணலாம். 'வட்டெழுத்து' என்னும் பழங்காலத் திராவிடரின் எழுத்து முறை யூதர் வகையை (Semitic)ச் சார்ந்தது; வட இந்தியாவில் வழக்கிலிருந்து வரும் எழுத்து முறைகளினின்றும் மாறுபட்டது. தொன்மை வாய்ந்த தமிழ் இலக்கியங்களின் வாயிலாகக் கிடைக்கும் பரம்பரைச் செய்திகளிலிருந்து செல்வ மிக்க நகரங்கள் தென் திசையில் செழித்தோங்கி யிருந்தனவென்றும் தெரியவரும். நாகரிக வாழ்வின் சுகபோகங்கள் அங்கு நிறைந்திருந்தன. பொன், முத்து, சங்கு, மிளகு, பவழம், உயர் ரகப் பருத்தி ஆடை முதலியவைகளைத் தவப்பயனால் தமிழ்நாடு பெற்றிருந்தது. மிகப் பழங் காலத்தொட்டு இப்பொருள்கள் அன்னிய

[1] ஒரு சில வகுப்பினர், தங்களை க்ஷத்திரியர் எனக் கூறிக்கொள்ளும் முயற்சியிலீடுபட்டுள்ளனர். நாம் குறிப்பிடும் உண்மையில் இதனால் மாறுதலெதுவுமில்லை.

நாட்டு வணிகரைக் கவர்ந்திழுத்தன.[1] நாகரிக வாழ்க்கைக்குத் தேவையான பொருளை வாணிபம் கொடுத்தது. திராவிடருக்குக் கடற்பிரயாணம் மேற்கொள்வதில் அச்சமெதுவுமில்லை, திராவிட மொழிகளையும், தொடர்புடைய செய்திகளையும் நன்கு கற்ற, திறமைசாலியான ஆசிரியனொருவன் திராவிட நாகரிகத்தின் சிறந்த வரலாற்றை ஒரு காலத்தில் எழுதக்கூடும். தற்போது நமக்குக் கிடைக்கும் இலக்கியங்கள் சிதறுண்டு, குறைபாடு நிறைந்தவையாகவும், மாறுபட்ட கருத்துகளுக்கு அதிக இடமளிப்பவைகளாகவுமிருக்கின்றன. அவைகளிலிருந்து செய்திகளைக் கோவையாகச் சுருக்கி அளிப்பது சாத்தியமில்லை. ஆரியக் கலப்பற்ற தென்னிந்திய நிறுவனங்களை ஆராய்ந்து முடிவு கிடைக்கும் வரை, இந்தியாவின் ஆதிவரலாறு முழுமை பெறாததொன்றாகவும், உண்மை நோக்கற்றதாகவுமே விளங்கும். இந்தியாவின் ஆதிவரலாறு எழுதிய ஆசிரியர் பெரும்பாலோர், தென்னிந்தியா என்ற பகுதியொன்று இருந்ததென்ற நினைவின்றியே நூலெழுதியுள்ளனர்.

## மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

### வரலாற்றிற்கு முந்திய கால இந்தியா

வி. ஏ. ஸ்மித் 'ஆதிவரலாற்றுப் பழம் பொருள்கள்' அதிகாரம் iv. வால்யூம் II. ஐ. ஜி. 1908. பொறுக்கியெடுக்கப்பெற்ற மேற்கோள்களுடன், விஷயத்தைப் பொது நோக்காக எடுத்துரைக்கும் முதல் நூல். இத்தகைய பொது நூல்கள் யாவையும் பின் தங்கச் செய்வது—ஸ்டுவர்ட் பிக்காட் என்பவரின் 'கி. மு. 1000 வரையுள்ள ஆதி இந்தியாவின் வரலாறு' (லண்டன், பெலிகன் சீரிஸ் 1950). அண்மையில் கண்டெடுக்கப் பெற்ற புதை பொருள்களைப் பற்றி அறிந்து கொள்வதற்குப் புது டெல்லியிலிருந்து புதை பொருளாராய்ச்சி இலாகாவினர் வெளியிடும் 'புராதன இந்தியா' என்னும் சஞ்சிகையைப் பார்க்கவும். மார்டிமர் வீலர் எழுதியுள்ள சிந்து நாகரிகம் (கேம்பிரிட்ஜ் 1953) என்ற நூலையும் பார்க்கவும்.

1 தற்போது தமிழ்மொழி பேசிவரும் மக்கள் வாழ் பகுதியைக் காட்டிலும் பண்டைய தமிழ்நாடு மிகப் பரந்திருந்தது. கன்னடம், மலையாளம், துளு ஆகிய மொழி பேசிவந்த மக்களையும் அது உள்ளடக்கியிருந்தது. சிங்களத் தீவிற்கும், தமிழர் வாழ்ந்துவந்த தென் பகுதிகளுக்கும் நெருங்கிய தொடர்புமிருந்தது. அத்தீவில் கிடைத்துவந்த அணிகளையும் வாசனைத் திரவியங்களையும் தமிழ்நாட்டைப் பிறர் நாடி வருவதற்குரிய பொருள்களின் பட்டியலோடு சேர்த்துக்கொள்ளலாகும். தெலுங்கர் வாழ்ந்த பகுதிகளில் தங்கச் சுரங்கங்களும், பருத்தி ஆடை நெசவும் அதிகமாக இருந்தன.

**மொழிகள் :**

சர். ஜி. கிரியர்சன் (1) அத்தியாயம் vii-வால்யூம் 1-ல் ஐ. ஜி. 1907, அநேக மேற்கோள்களுடன் (2) 'இந்திய மொழிகள்', கல்கத்தா 1903, மக்கள் தொகைப் பட்டியல், இந்தியா 1901 லிருந்து மறுபதிப்பு. (3) மொழியடிப்படைக் கணக்கெடுப்பு (கல்கத்தா 1903–28), மிக விரிவாக இருபது பெரிய குவார்ட்டோ வால்யூம்கள் கொண்டது.

**திராவிட நாகரிகம்**

புராதனத் திராவிடப் பண்பாட்டை விளக்கும் நூல்கள் பல உண்டு. நம்புதற்குரியதும், விரிவானதும், புலமை மிக்கதுமான நூல் குறைவு. சிறந்தவையெனக் கருதக் கூடியவைகளில்—பி. டி. எஸ். அய்யங்காரின் 'தமிழர் வரலாறு கி.பி. 600' (சென்னை 1929)-முதல் சில அத்தியாயங்கள் பயனற்றவை. மற்றும் வி. ஆர். இராமச்சந்திர தீக்ஷிதரின், 'தமிழிலக்கிய வரலாற்று ஆராய்ச்சி' (சென்னை 1936). திராவிட சமயத்தைக் குறித்த செய்திகளுக்கு ஒயிட் ஹெட் எழுதிய 'தென்னிந்தியக் கிராமியக் கடவுளர்' ஆக்ஸ்போர்டு யுனிவர்சிடி பிரஸ் 1916; எல்மோர் எழுதிய 'தற்கால இந்து சமயத்தில் காணப்படும் திராவிடக் கடவுளர்', என் ஓய். ஹாமில்டன் 1915 (நெப்ராஸ்கா சர்வகலா சாலை ஆராய்ச்சி ஏடுகளிலிருந்து கிடைக்கும் மறுபதிப்பு—1915).

## 2. வேத இதிகாச கால இலக்கியமும் நாகரிகமும் புராணங்கள், சாதிமுறை

### தொல் இலக்கியங்களின் தனிமை

வேத கால இந்தோ-ஆரியரின் முன்னேற்றத்தைப் பரவலாகக் கூறுவதே சாத்தியமாகிறது. அச்செய்திகளும் இலக்கிய வாயிலாக நமக்குக் கிடைக்கின்றன. அவைகள் முழுவதும் அல்லது பெரும் பகுதி மிகப் பழமையானவை. சமகால இலக்கிய வாயிலாகவோ அல்லது பிற சான்றுகளின் உதவியுடனோ நாம் ஆரியர் வரலாற்றை விளக்க இயலாது. இந்தோ-ஐரோப்பிய அல்லது ஆரிய மொழியிலக்கியங்களில், ரிக்வேதச் செய்யுள்களைப் போன்று பழமை வாய்ந்தவைகள் இல்லை. ரிக்வேதச் செய்யுள்கள் 'தன்னிகரில்லாது பழம் பெருமை என்னும் சிகரமேறி, தனித்து நின்று விளங்குகின்றன'. எகிப்து அல்லது பாபிலோனியாவிலுள்ள குடிகள் கையாண்டு வந்த ஒரு சில மொழி இலக்கியங்கள், மிகப் பழமை வாய்ந்தவைகளே என்றாலும் வேத நூல்களைக் கற்றுணர்வதற்கு அவை அதிகமாகப் பயன்படுவதில்லை. சிந்துவெளி நகரங்களின் சிதைவுக்குப் பின்னுள்ள காலத்தைச் சார்ந்த கட்டடம் எதுவும் இந்தியாவில் தற்போது இல்லை. சமகாலச் சான்றுகளும் இல்லை. நாம் முன்னர்க் குறித்தபடி ஒரு சில செப்புக்கருவிகளும், ஆயுதங்களும் வட இந்தியாவில் கிடைத்துள்ளன. இவை, வேத காலத்தின் முற்பகுதியைச் சார்ந்தவைகள் என ஒருவாறு துணிந்து கூறலாகும். தொன்மை வாய்ந்த இந்தோ-ஆரிய இலக்கியத்தை அதன் துணைகொண்டே கற்றறியலாகும். இந்தோ-ஆரியரைப் பற்றி நாம் அவைகளினின்றும் கற்றறியக்கூடிய செய்திகளோடு திருப்தியடைய வேண்டும். அச்சமுதாயத்தைச் சார்ந்த முனிவர்கள், அவ்விலக்கியத்தை அருளினார்கள். இதையொட்டிய பிற செய்திகள் இல்லையென்றே கூறவேண்டும். பண்டைய இரேனியர் அல்லது பாரசீகரின் சமய இலக்கியம், 'அவெஸ்தா' (Avesta) என்று பெயர் பெறும்) வேதங்களைப் போல், அவை அத்துணைப் பழமை வாய்ந்தவைகளில்லையென்றாலும், பயனுள்ள விளக்கச் செய்திகளைத் தருகின்றன.

### வேதம்-சமயச் சார்பும், குறிக்கோளும்

இந்தோ ஆரியரின் பழம் பெரு இலக்கியங்கள் யாவையும் ஒன்று கூட்டப் பெற்று, வேதம், என அழைக்கப்படுகின்றன.

'வேதம்' என்பது தோராயமாக, 'அறிவு' எனப் பொருள்படும். அத்தகைய 'அறிவே' இந்துக்களின் தலைசிறந்த பொக்கிஷமாகக் கருதப்படுகிறது. பன்மையில் இவை, 'வேதங்கள்' 'மூன்று வேதங்கள்' அல்லது 'நான்கு வேதங்கள்' என்ற பல பெயர்களில் வழங்கி வருகின்றன. இந்து சமயத்தில் தீவிரப் பற்றுள்ளவர்கள் வேதங்கள் யாவற்றையும் பரந்த இலக்கியமாகவும், சக்தி வாய்ந்த ஆதர்ச வாயிலாகவும் (சுருதி) கருதுவர். வாழையடி வாழையாகப் பெற்ற அறிவுச் செய்திகளடங்கிய வந்தனத்திற்குரிய பிற்கால இலக்கியங்கள் (ஸ்மிருதிகள்) வேதங்களினின்றும் வேறுபட்டவை. ஆரிய சமாஜத்தினரும், மற்றும் சில கொள்கைகளைப் பின்பற்றுவோரும், ரிக்வேத துதிபாடல்களுக்கு மட்டிலுமே ஆதர்ச சக்தி உண்டெனக் கூறுவர். வேத இலக்கியத்தின் பிற்பகுதிகளுக்கு அவ்விதச் சிறப்பு இல்லை என அவர்கள் கருத்தறிவிக்கின்றனர். வேதங்கள் தாமாகவே பிறந்தவை; அவைகளைத் தோற்றுவிப்பதிலும் வளர்ப்பதிலும் பிறருக்கு எவ்விதத் தொடர்பும் இல்லை என்ற கருத்து பெரும்பாலானவர்களிடையில் நிலவி வருகிறது.[1] விஞ்ஞான முறையில் வேதங்களை ஆராய்ந்து, அதன் பயனாகப் பெறும் முடிவுகளையே மேற்குறித்த கருத்தை வலுப்படுத்துவதற்குப் பயன்படுத்துவது மனித அறிவிற்கு அப்பாற்பட்டதன்று என்று கூறவேண்டும். 'ஞான ஊற்று'க் கொள்கைகளைப் பற்றிய விவாதங்களை இந்நூலில் மேலும் நீடிப்பதற்கில்லை. விருப்பு வெறுப்புகளின்றி வேத இலக்கியம் ஆராயப்படும். ஆண், பெண் கவிகள், பல்வேறு காலங்களில் இச்செய்யுள்களை இயற்றியுள்ளனர். இலக்கியத்தின் தன்மையில் பல வேறுபாடுகள் உண்டு என்பதிலிருந்து ஒவ்வொரு செய்யுளும் வெவ்வேறு காலத்திலியற்றப்பட்டது என்பதும் தெளிவாகிறது.

மிகப் பழமையான இலக்கியம் என்ற வகையில், மானிட இயல் மாணவர்கள், வேதங்களை மிகுந்த பயபக்தியுடன் கையாள வேண்டும். அதன் தனித் தன்மையும், இந்திய நாட்டைப் பொறுத்த அளவிலேனும், அது மனித சமுதாயத்தின் படிப்படியான வளர்ச்சியை விளக்குவதாலும், ஏற்றம் மிகுந்து சிறப்புடையதாக இருக்கிறது. விட்நே (Whitney) என்பவர் கூறுவதுபோல, 'இந்திய சமயம் மற்றும் அரசியல் ஆகியவற்றின் பிற்கால வளர்ச்சி முழுவதிற்கும் ரிக்வேதத்தில் விதைகள் விதைக்கப் பெற்றுள்ளன' என்பது உண்மையே யாகும்.

1 ந ஹி சந்தாம்ஸி க்ரியந்தே, நித்ராணி சந்தாம்ஸி: வேதச் செய்யுள்களை எவரும் இயற்றவில்லை, அவை என்றும் அழிவற்றவை.

**வேதம்—விளக்கம்**

'வேதம்' என்பதின் விளக்கத்தைக் குறித்த கருத்து வேறுபாடுகள் பல உண்டு. கி. மு. நான்காம் நூற்றுண்டைச் சார்ந்தவரெனக் கருதப்பெறும் கௌதில்யர், 'அர்த்த சாத்திரம்' என்னும் தமது நூலில் கீழ் வருமாறு கூறுகின்ருர்: 'சாமம், ரிக், யஜுர் ஆகிய மூன்று பகுதிகளும் முப்பெரு வேதங்களாகும். இவை மூன்றும், அதர்வண வேதம், மற்றும் இதிஹாஸ வேதம் ஆகிய பகுதிகளுடன் சேர்ந்து 'வேதங்கள்' எனப் பெயர்பெறுகின்றன. 'புராணம்', 'இதிவ்ருத்தம்' (வரலாறு), 'அக்யாயிகம்' (கதைகள்), 'உதாஹரணம்' (விளக்கக்கதைகள்), தர்ம சாஸ்திரம், அர்த்த சாஸ்திரம், (இரண்டுமாகச் சேர்ந்து) ஆகியவை அடங்கியது 'இதிகாசம்' என்ற பெயர் பெறும்.[1]

நடைமுறையிலுள்ள விளக்கங்களைக் காட்டிலும், கௌதில்யர் கூறும் விளக்கம் மிக விரிவானது. தர்ம சாஸ்திரத்தை அவர் பொருட்படுத்தவில்லையெனினும், அவரால் தொகுக்கப் பெற்ற ஆதி இலக்கியம் 'இதிகாசம்' என்ற பொதுப்பெயரிலேயே வழங்கி வருகிறது. சாதாரணமாகச் 'சதுர் வேதங்கள்' எனப்படும். நான்கு வகைகளே பேசப்படுகின்றன. அவை முறையே (1) ரிக்வேதம்[2] (2) சாமவேதம் (3) யஜுர்வேதம் (4) அதர்வண வேதம் எனப் பெயர் பெறும்.

வேதங்களில் ஒன்ருக வைத்து எண்ணப்படுவதற்கு, நாம் மேலே குறித்துள்ள அதர்வண வேதத்திற்குரிய தகுதி முழுதும் ஏற்கப்படுவதில்லை. சமீப காலம் வரையிலும், 'செல்வாக்குமிக்க தென்னிந்தியப் பிராமணர் நான்காவது வேதத்தை ஏற்பதில்லை. அவ்வேதத்தின் தெய்விகத் தன்மையையும், அவர்கள் மறுக்கிருர்கள்.

பெரும்பாலான மக்கள் வேதங்களின் எண்ணிக்கை நான்கு என்பதையே ஏற்கின்றனர். அவ்வாறு விவரிப்பதே பொருத்தமுடையது எனக் கூறலாம்.

1 அர்த்த சாஸ்திரம் — ஆர். சாமா சாஸ்திரி அவர்களின் மொழிபெயர்ப்பின் மறுபதிப்பு (3ஆம் பதிப்பு—மைசூர் 1929) நூல் 1:அதிகாரங்கள் 3, 5. கௌதில்யன் சாமவேதத்தை முதலாவதாக வைத்து எண்ணுகிருர் என்பது குறிப்பிடத்தக்கது.

2 ரிக் வேதம் என்னும் சொற்றொடர், 'ரிச்', 'வேதம்' என்னும் இரு சொற்களால் ஆகியது. இலக்கண விதிகளின்படி 'க்' என்பது 'க்' என்று மாறுபடுகிறது. 'ரிச்' என்னும் சொல்லுக்குக் 'கடவுள் ஒருவரைக் குறித்த துதிபாடல்' என்பது பொருள். பொதுவில் இவை செய்யுள்களாக இருக்கின்றன. இலக்கண விதிகளுக்கேற்ப, சத்தத்துடன் கூடிய வேத இலக்கியத்தின் எப்பகுதிக்கும் இது பொருந்துகிறது. இலக்கிய

வேதங்கள்: பொருளடக்கம்

'சம்ஹிதைகள்' என்பவை, நாம் மேற்குறித்துள்ள நான்கு வேதங்களுள் ஒவ்வொரு வேதத்தின் அடிப்படைகளாக விளங்குகின்றன. சத்தத்துடன் கூடிய பாடல்கள், துதிபாடல்கள், மந்திரங்கள், வசிய மந்திரங்கள் ஆகியவைகளோடு, சில சமயங்களில் வசன நடைப் பகுதிகளும் சேர்ந்த தொகுதி 'சம்ஹிதை' என்ற பெயரில் வழங்கி வருகிறது. வசன நடையில் தரப்பட்டுள்ள விளக்கக் குறிப்புகள், 'பிராமணங்கள்' என்றும் 'உபநிடதங்கள்' என்றும் அழைக்கப்படுகின்றன. 'பிராமணங்களில்' வேதாந்தக் கருத்துகளையும், வழிபாட்டுக்குரிய சடங்கு முறைகளின் வர்ணனைகளையும், மற்றும் சம்ஹிதைகளுக்குரிய விளக்க உரைகளையும் காணலாம். வேதச் செயயுள்களுக்குப் பிற்காலத்திலேயே இவை தோன்றியிருக்க வேண்டுமெனினும், பிராமணங்களும் மிகப் பழமையானவைகள் என்பதில் ஐயமில்லை. அதில் பயன்படுத்தப்பட்டுள்ள மொழி உச்சரிப்புகள், வெகு காலத்திற்கு முன்பே வழக்கொழிந்தனவாகக் காணப்படுகின்றன. உள்ளுணர்வு குறித்த சில விளக்கங்களும் பிராமணங்களில் காணப்படுகின்றன. காடுகளின் மத்தியில் தனித்திருந்து அவைகளைக் கற்றுக்கொள்ள வேண்டும், அல்லது அவை கற்றுக் கொடுக்கப்படல் வேண்டும் என்பதால் இந்நூல்களுக்கு 'அரண்யகங்கள்' அல்லது 'காட்டு-இலக்கியங்கள்' என்னும் பெயர்கள் வழங்கி வருகின்றன. நூற்றிற்கும் மேற்பட்ட 'உபநிடதங்கள்' வேதாந்தக் கருத்துகளடங்கிய தொகுதிகளாகவோ அல்லது நூல்களாகவோ இருக்கின்றன. பிராமண இலக்கிய வளர்ச்சி நிலையின் இறுதிக் கட்டத்தை விளக்குபவையாக அவை இருந்து வருகின்றன. வேதங்களின் பகுதிகளாக விளங்கிவருகின்ற உபநிடதங்களைத் தற்கால இந்துக்கள் நன்கறிவார்கள். பிற்காலங்களில் முறையாக நிலைபெற்ற வேதாந்தத் தத்துவத்தின் அடிப்படைகளே இவை என்ற உண்மையும் அவர்களுக்கு நன்கு தெரியும்.

### சூத்திரங்கள்

வேத சடங்கு முறைகளின் சுருக்க உரைகளையும் மற்றும் நடைமுறையிலுள்ள விதிகளையும் 'சூத்திரங்கள்' என்ற பொதுப் பெயரால் குறிப்பது வழக்கம். இவற்றை வழிமுறை அறிவு

---

சாரம் முழுவதையும் கொண்ட வியாசரின் தொகுதிகளில் தலையாய பகுதி 'ரிக் வேதம்' என்ற பெயர் பெறுகிறது. — 'அத்தகைய இலக்கியங்கள் அதில் மிகுதியாக இருப்பதால்' (கோல்ப்ரூக்)

அல்லது 'ஸ்மிருதி' எனக் கருதுவது மரபாக இருந்து வருகிறது. இவைகளும் வேதங்களின் பகுதிகளாகவே கருதப்படுகின்றன. சுருக்கி எழுதுவதில் மிக்க பிரயாசை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. ஓரிரு சமயங்களில், இவை கணித சூத்திரங்கள் போலத் தெளிவற்ற அளவுக்குச் சுருக்கமாக எடுத்துரைக்கப்படுகின்றன. அவைகளை, நன்கு புரிந்துகொள்வதற்கு முறையான விளக்கங்களும் தேவைப்படுகின்றன. சுருக்கவுரைகளுக்குத் தேவைக்கதிகமான மதிப்பு வழங்கப்பட்டிருந்ததென்பதும் தெளிவாகவே உள்ளது. சுருங்க உரைப்பதில் ஓர் உயிரெழுத்தை மீதப்படுத்துவதிலுள்ள உவகை, ஓர் ஆண் மகன் பிறந்ததால் ஏற்படக்கூடிய அளவு உவகைக் கொப்பாகக் கருதப்பட்டு வந்தது. சூத்திரங்களில், 'ச்ரௌதம்', 'கிருஹ்யம்', 'தர்மம்' ஆகிய பகுதிகள் அடங்கியுள்ளன. 'ச்ரௌதம் என்னும் பகுதியில் யாகங்களைப் பற்றிய விதிமுறைகளடங்கியுள்ளன. 'கிருஹ்ய' சூத்திரங்களில் குடும்ப வாழ்க்கையிலுள்ளோர் ஈடுபடக்கூடிய சடங்குகளின் விதி முறைகள் கூறப்படுகின்றன. சமுதாய விதிகளையும், சட்ட முறைகளையும், 'தர்ம சூத்திரம்' எடுத்தியம்புகிறது. இதில் மூன்றும் பகுதி வரலாற்றாசிரியனுக்கு மிகவும் பயனுள்ளதாக விளங்கி வருகிறது. தர்ம நூல்கள் யாவற்றிற்கும் அடிப்படையான 'மனுவின் நீதிகள்' இதிலடங்கியுள்ளன.

### சாம—யஜுர் வேதங்கள்

'வேதங்கள்' என்னும் தொகுதியில் சாதாரணமாக இணைக்கப்பட்டுள்ள பகுதிகள் பலவற்றையும் நாம் எடுத்துரைத்தோம். சந்தத்துடன் கூடிய 'சம்ஹிதைகளை' நாம் கவனிப்போம். அவைகளே, உண்மையில் வேதங்களாகும். குறிப்பாக, அவைகளுள் இரண்டில் அதிக கவனம் செலுத்தவேண்டியவர்களாக இருக்கிறோம். சாம, யஜுர் வேதங்களை நாம் அதிகமாகப் பாராட்ட வேண்டுவதில்லை. சாம வேதமென்பது பாடல்களடங்கியது. தனிமுறையில் அதற்கு எவ்விதக் கௌரவமும் இல்லை. அதிலடங்கிய செய்யுள்களில் எழுபத்தைந்து நீங்கலாகப் பிற யாவும் ரிகவேதத்திலுள்ளவைகளேயாகும். சோம யாகத்தில் பயன்படுத்தப் பெறும் ரிக்வேதச் செய்யுள்கள் யாவும், சாம வேதத்தில் முறையாக அமைக்கப் பெற்றுள்ளன. யஜுர் வேதமும், ரிக்வேதத்திற்குக் கடன்பாடுடையதாக விளங்குகிறது. பல்வகைகளாகக் கிடைக்கப் பெறும் இந்நூலில், வேள்விகளில் பயன்படுத்தப் பெறும் துதிபாடல்களும், வசன நடையிலுள்ள சூத்திரங்கள் ஒருசிலவும் அடங்கியுள்ளன.

**ரிக்வேத சம்ஹிதை**

வேத இலக்கியங்களில், ரிக்வேதமே மிகப் பழமை வாய்ந்த ஆதி இலக்கியம் என்பதில் ஐயமெதுவுமில்லை. 'இலக்கியம்' என்ற முறையிலும், வேதங்கள் யாவற்றிலும் அது சிறந்துவிளங்குகிறது. 1,017 துதிபாடல்கள் இந்த 'சம்ஹிதையில் அடங்கியுள்ளன (சிலர் 1028 என கணக்கிடுவதுமுண்டு). பத்துப் பகுதிகளைக்கொண்ட இச் சம்ஹிதையில் பத்தாவது பகுதியிலுள்ள பாடல்கள் காலத்தால் பிற்பட்டவை. 'இலியட்', 'ஒடிசி' என்ற கிரேக்க நூல்கள் இரண்டும் சேர்ந்த பரிமாணமுள்ளதாக இந்நூல் விளங்குகிறது. II–VII வரையிலுள்ள பகுதிகள் 'குடும்ப நூல்கள்' எனப்பெறும். அதற்குச் சில குடும்பங்களின் உரிமைகளாக அவை பாராட்டப் படுவதே காரணமாயிருக்கக்கூடும். இவைகளை, ரிக்வேதத்தின் கரு எனக் கருதலாம். மற்றப்பகுதிகள், காலப்போக்கில் இவைகளுடன் படிப்படியாக இணைக்கப் பட்டன.

**வேதச் செய்யுள்களைப் பற்றிய பிரச்சினைகள்**

மாணவனுக்கு இச் செய்யுள்களைப்பற்றிய பிரச்சினைகள் பல உண்டு. நடையும், இலக்கணமும் வழக்கிலுள்ள சம்ஸ்கிருதத்தினின்றும் முற்றிலும் மாறுபட்டுள்ளன. மூலச் செய்யுள்களில் அடங்கியுள்ள கருத்துகளைக் கற்றுத் தேர்ந்து, நூலை முறையாக அமைப்பதற்கு அனுபவமிக்க, ஆழ்ந்த ஆராய்ச்சி தேவைப்படுகிறது. இலக்கணப் பிழையற்ற ஆங்கில மொழியில் ரிக்வேதம் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதென்றாலும், சில சொற்களுக்கு உரிய பொருளை விளக்குவதில் மிகுந்த குழப்பமிருந்து வருகிறது. சில சமயங்களில், மொழி பெயர்ப்பாளரின் அறிவிற்கு அப்பாற்பட்டவைகளாகவும் அவை விளங்கி வருகின்றன. முனிவரின் கருத்துகள், தற்கால மனிதரின் கருத்துகளினின்றும் மிக மிக மாறுபட்டவைகளாக உள்ளன. இந்திய அல்லது அன்னிய நாட்டைச் சேர்ந்த, கற்றறிந்த வடமொழிப் புலவனாலும்கூட அக்கருத்துகளைச் சரிவர உணர இயலாது. கருத்துகளை விளக்குவதில் வேற்றுமைகள் பல காணப்படுகின்றன. மனித முயற்சியில் உள்ள யாவும் பயன்படுத்தப்பட்ட பின்பும், பெரும்பகுதி விளங்காத புதிராகவே இருந்து வருகிறது. இத்தன்மைய இடர்கள் நிறைந்திருந்தபோதும், இந்நூலில் அக்கருத்துகளை விரித்துரைக்கும் வாய்ப்பு மிகக் குறைவாகவே உள்ளதெனினும், ரிக்வேத–அதர்வண வேதச் செய்யுள்களில் அடங்கியுள்ள கருத்துகளை ஒருவாறு எடுத்துரைப்பதற்கும், கவியின் சமயக் கருத்துகளைச் சுட்டிக் காட்டுவதற்கும், இந்தோ-ஆரியரின் சமுதாய நிலையை

ஒருவாறு விளக்குவதற்குமான முயற்சிகள் மேற்கொள்ளப்படு கின்றன.

**வேதத்தின் கவிதைச் சுவை**

'ரிக்வேதத்திலுள்ள கவிதைகள் பெரும்பாலும் சமயச் சார் புடையவைகளாயிருக்கின்றன. பத்தாவது பகுதியில் (காலத்தால் பிற்பட்டது) சமயச் சார்பற்ற செய்யுள்கள் சில உள்ளன. வளர்ச்சி பெருத செல்வாக்கு மிக்க நாடோடிப் பாடல்களின் தொகுப்பாக, ரிக்வேதத்தைக் கருத இயலாது. சமயப்பணிகளில் ஈடுபட்டிருந்த திறமைமிக்க ஒரு வகுப்பினரால் அவை மிகவும் அழகாக இயற்றப்பட்டுள்ளன. சமயச் சடங்குகளில் பயன்படு வதற்கென அவை இயற்றப்பெற்றன. ஒரு காலத்தில், சிலர் நினைத்ததைப்போல, அவை அத்துணை எளிமையானவை அல்ல' எனப் பேராசிரியர் மாக்டனல்டு வரிசைப்படுத்தியிருப்பதிலும், சந்தத்திலுமிருந்து, அவை மிகச் செயற்கையானவை என்பது நன்கு விளங்கும். திறமை மிக்க பண்டிதர்களின் முயற்சியால் இவை உருவாகியிருக்கவேண்டுமென்பதும் எளிதில் விளங்கும். பண்டிதர்களென்ருலும் எழுத்துக்கலையில் வல்லமையற்றவர்கள் என்பதும் புலனுகிறது. இத்தகைய குறைபாடுகளால் சுவை குன் றிக் காணப்படுகிறதெனக் கூறும் இலக்கிய ஆய்வாளர், நடை தெளிவாகவும் எளிமையானதாக்வும் இருக்கிறதென்பதையும், கருத்துகள் நேர்மையாக எடுத்துரைக்கப்படுகின்றன வென்பதை யும், உரிய சூழ்நிலைகள் உயர்வாகவும் அழகாகவும் சித்திரிக்கப் படுகின்றன என்பதையும் ஒப்புக்கொள்கிருர். இலக்கியம் என்ற முறையில் இவைகள் வெவ்வேறு வகையானவை, பல்வேறு கவி களால் வெவ்வேறு கால இடைவெளிகளில் இவை இயற்றப்பட் டமையே அதற்குரிய காரணமாக விளங்குகிறது. மிகச் சிறந்த வைகளை அனுபூதிப் பாடல்கள் என்று கொள்ளலாம். தரங் குறைந்தவைகளைச் சாதாரண நாடோடி வகையைச் சார்ந்தவை எனக் கருதலாகும்.

**கருத்துகள்**

இயற்கைச் சக்திகளைக் கடவுளராக உருவகப் படுத்தி அவர்களைத் துதிக்கும் பாக்களாக, ரிக்வேதச் செய்யுள்கள் அமைகின்றன. 'அக்கினி' அல்லது நெருப்புக் கடவுளும், முக்கிய மாக மழைக் கடவுளாகவும் பின் போர்க் கடவுளாகவும் விளங் கிய இந்திரனும், இக்கடவுளர் வரிசையில் அதிகச் சிறப்புப் பெற்றிருந்தனர். அக்கினி வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டு இச்சமயம் எழுந்தது என்று கருதுவதில் தவறில்லை. கடவுளர் மிக உயர்ந்தவர்களென்றும், சக்தி வாய்ந்தவர்கள்

என்றும் சித்திரிக்கப்பட்டிருப்பதோடு, வழிபடுவோருக்கு நன்மையே செய்பவர்கள் என்றும், தீய சக்திகளை எதிர்ப்பதில் எப்பொழுதும் முனைந்திருப்பவர்கள் என்றும் பொதுக் கருத்துகள் அறிவிக்கப்படுகின்றன. உலகியல் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களைக் கோரி இக்கடவுளரைக் கவிகள் துதித்திருக்கின்றனர். பலிகளை வழங்கியும், பாக்கள் இயற்றியும் கடவுளரின் அருள் நோக்கைப் பெறுவதற்கு அவர்கள் முயற்சித்துள்ளனர் என்றும் தெரியவரும். இத்தகைய பூசனைகளுக்கு உதவியாக உருவங்கள் எதுவுமிருந்ததாகத் தெரியவில்லை. ஆகாயம் அல்லது மேகத்தை வருணனாக வர்ணிக்கும் அற்புதப் பாடல்கள் பல காணப்படுகின்றன. ஒளிக் கடவுளைச் சூரியனை விவரித்துரைக்கும் பல பாடல்கள் தரத்தில் உயர்ந்தவையாக விளங்குகின்றன.

ரிக்வேத கால முனிவர்களின் சமயப் பற்றையும், கவித்திறனையும் நன்கு உணர்ந்து போற்றுவதற்கு உதவியாக இரு உதாரணங்கள் கீழே தரப்படுகின்றன.

**'விடிவெள்ளி'யைத் துதிக்கும் செய்யுள்**

முதலாவது செய்யுள், 'உஷத்' காலத்தைச் சித்திரிக்கும் ரிக்வேதச் செய்யுளின் ஓர் பகுதியாகும். 'உஷத்' கன்னியை 'வேத காவியத்தின் அழகு மிக்க படைப்பு' எனப் பேராசிரியர் மாக்டொனால்டு கூறுவர். செய்யுள் வருமாறு.—

**விடிவெள்ளிக்கு**

[ரி. வெ. i. 113; வடமொழி இலக்கிய வரலாறு (1900), ப. 83)

அதோ! ஆகாயத்தின் மகள் நம்முன் தோன்றியுள்ளாள்;
வனப்புமிக்க ஆடைகளணிந்து பூரித்து நிற்பவள் அந்நங்கை.
புவிச்செல்வங்கள் யாவற்றிலும் தலையாய நீ,
புனித விடிவெள்ளியே! இன்று எங்களைக் கடைக்கண்ணால் [பார்.

பரந்தவானெனும் திரையிலே, சிறப்பாக அவள் ஒளிவீசி [நின்றாள்;
இருளெனும் ஆடையகற்றி நிற்கிறாள் அப்புனிதவதி;
சிவப்பொளி வீசும் குதிரை பூட்டிய, நல்லதொரு [இரதமேறி
உலகை விழிக்கச் செய்து, விடிவெள்ளி நங்கை வருகிறாள்.

கணக்கற்ற கருணை மழை பொழிந்து வரும் அவள்
நிகரற்ற தன்னொளியை, உலகெங்கும் பரப்பி வருவாள்.
கடந்த காலங்கள் யாவற்றிற்கும் இறுதியான காலையாகவும்
எதிர்நோக்கியிருக்கும் ஒளிமிக்க காலத்திற்குக் கட்டியம்
[கூறவும் அவள் எழுந்தாள்.

விழியுங்கள், பேச்சும், மூச்சும் மீண்டும் நம்மையடைகின்றன;
இருள் மறைந்தது; ஒளிவீசி வருகின்றது.
ஒளிப்பிழம்புடனே ஒருவுவதற்கோர் வகை அவள் செய்கின்றாள்.
நீடித்து உய்யும் வகையை நாமறியும் நாளும் கிட்டியுள்ளது.

**பத்தாவது பகுதி**

ரிக் வேதத்திலுள்ள உதாரணக் கதைகளின் உண்மை அறிவைக் குறித்த கருத்து வேற்றுமைகள் உரையாசிரியர்களிடம் மிகவும் மலிந்திருக்கின்றன. கடவுளரைக் கூட்டாக விளிப்பதைப் பலர் ஒப்புக்கொள்வதில்லை. ஒவ்வொருவரும் தனித்தனியான அந்தஸ்து பெற்றவர் என்று அவர்கள் கருதி வருகின்றனர். அது எவ்வாறாயினும், காலத்தால் பிற்பட்ட இறுதிப்பகுதியின் சமயநோக்கில் சற்று முற்போக்கான கருத்துகள் காணப்படுகின்றன. உபநிடதங்களிலும் வேதாந்த சாரங்களிலுமுள்ள முற்போக்கான கருத்துகளுக்கு இது வழிகோலுவதாக அமைகின்றது. படைப்பை விளக்குகின்ற செய்யுள் ஒன்று 'ஆரிய வேதாந்த விசார முயற்சிகளில்' முதன்மையாகக் கருதப்படுகிறது. இச் செய்யுளைப்பற்றிய பாட பேதங்களும் பல உண்டு. மாக்ஸ்முல்லர் தம் நண்பரொருவரின் உதவியோடு மொழிபெயர்த்திருக்கும் இச்செய்யுளை நான் ஓர் உதாரணமாகத் தேர்ந்தெடுக்கிறேன்.

**படைப்புத் தொழிலை விளக்கும் செய்யுள்**

(ரி. வே. X. 129; 'ஜெர்மானியனின் உலையிலிருந்து சிதறும் பொறிகள்' (1869) வால்யூம் i, பக். 78)

எங்கிருந்து இப்படைப்பு விநோதம் எழுந்தது?—யாரே
[அறிவர்?
உலகம் யாவையும் தாமுளவாக்கினனே, 'அவன்'-
அவனது திருவுள்ளம் படைத்ததோ, அல்லது
[வாளாவிருந்ததோ?
ஞானக்குன்றின் உச்சியில் இருக்கும் அறிவுக் கடல்,

அவனறிவான்—அல்லது அவனும் அறிந்திலன் போலும்.
இல்லையென்பதுமில்லை, இருந்ததென்பதுமில்லை; அங்குள்ள
ஒளிமிக்க வானம் இருந்ததில்லை—ஆகாயமென்ற பரந்த
ஆடை மேலே பரவியிருக்கவுமில்லை.
யாவற்றையும் மறைத்தது எது? தங்குமிடமளித்தது எது?
[மறைத்தது எது?
ஆழங்காண வியலாத ஆழ் கடலோ அது?
சாவென்பதும் அங்கில்லை — சிரஞ்சீவிகளும் அங்கிருந்த
[தில்லை.
இரவு பகலென்ற வேற்றுமைகளும் இல்லை —
அழிவற்ற பொருள் ஒன்று மட்டிலும் ஜீவித்து வந்தது.
அதைத் தவிர வேறெதுவுமே அங்கிருந்ததில்லை.
இருள் மூடிக்கிடந்தது அங்கு — ஆதியில் அங்கிருந்த யாவும்
சோகக்கடலால் திரையிடப்பட்டிருந்தன—கலங்கரைவிளக்க
[மற்ற கடலாக—
உமியால் மூடப்பட்டிருந்த 'ஒளி மணி'
இயற்கையில் சூழ்ந்திருந்த நல்உஷ்ணத்தால் வெளிப்பட்டது.
மனத்தின்[1] புதிய வெளியீடாக எழுந்தது 'பற்று';
படைப்பிற்கும் இயற்கைக்கும் இடையேயுள்ள
கவித் திறனுக்கும் எட்டாத இப்பிணைப்பு,
ஊடுருவிப் பரந்து நிற்கும் இச்சுடர், புவியினின்றும்
[எழுந்ததோ? வானிலிருந்தோ?
விதைகளிடப்பட்டன, — பெருஞ்சக்திகள் முளைத்தன —
இயற்கை அடித்தளமாகியது — செயலும் கருத்தும்
[கூரைவேய்ந்தன.
இத்தத்துவத்தை யாரே அறிவர்? இங்குப் பறைசாற்றியவர்
[ஏவர்?
எங்கிருந்து, எங்கிருந்து இப்பரந்த படைப்பு முளைத்தது?

**அதர்வ வேதம்**

'அதர்வ' அல்லது 'அதர்வண' வேதமென்பது பலவிதமான மந்திரங்களின் தொகுப்பு......சாதாரண மக்களிடையே மிகுதியான செல்வாக்குப் பெற்றிருந்த மந்திரங்களின் பட்டியல் எனப் பொதுவில் வர்ணிக்கப்படுகிறது. இதனால், ஆதிமக்களின் சமுதாய வாழ்க்கை மரபை யொட்டியது என்றும் கருதப்படுகிறது. அதில் காணப்படும் சூத்திரங்கள் சில, இரேனியக் கூட்டத்திலிருந்து இந்தோ ஆரியர் கிளை உற்பத்தியாவதற்கு முந்திய பண்டைக்

[1] மாக்டுனலின் மொழிபெயர்ப்பு மேலும் சிறந்ததாக அமைகிறது.
'பற்று' ஆதியில் அதனுள்ளே எழுந்தது,
'பற்று' — ஊக்கத்தின் முதல் வித்தாக—

காலத்திலேயே தோன்றியிருக்கக் கூடும். அத்தகைய பழமையான செய்திகளை அது உள்ளடக்கியிருக்கிறது என்ற காரணத்தால், அது மிகச் சுவையானதாகவும், ரிக்வேதத்தைக் காட்டிலும் வரலாற்றாசிரியனுக்குப் பயனுள்ளதாகவும் விளங்குகிறது. ஆனால் இலக்கியம் என்ற வகையில் தரம் குறைந்ததாகவே விளங்குகிறது. 'வைட்னி' என்பவரால் வெளியிடப்பட்டும், 'லான்மென்' என்பவரால் மீண்டும் பதிப்பிக்கப்பெற்றுமுள்ள அதர்வண வேத நூலை நாம் கற்று பயனடையலாம். ஒவ்வொரு சொல்லையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருப்பது, பல இடங்களில் தெளிவு குன்றிக் குழப்பமுண்டாக்குகிறது.

**எடுத்துக் காட்டாக ஒரு சூத்திரம்.**

அதர்வண வேத மந்திர சூத்திரங்களின் தன்மையை விளக்குவதற்கென, எடுத்துக் காட்டாகச் சூத்திரமொன்று தரப்படுகிறது. சுருக்கமாகவும், நுணுக்கமான கருத்துடையதாகவுமிருப்பதால் இச்சூத்திரம் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

**பாம்பின் விஷத்தை அழிப்பதற்கு**

(அ.வே. vi. 12; வைட்னி–லான்மென், வால்யூம் i, பக்கம் 289)

1. இரவானது, அன்னம் நீங்கலாகப் பிற உயிரினங்களைத் தேடிச் செல்வது போலவும், சூரியன் வேகத்தில் சஞ்சரிப்பது போலவும், நான் பாம்பினங்களை நாடிச் சென்றிருக்கிறேன்—அதனால், உன் உடலிலுள்ள விஷத்தைப் போக்குகிறேன்.

2. ஆசாரியர்களும், தீர்க்க தரிசிகளும், தெய்வங்களும், எதைப் புராதனமானதென்று அறிவார்களோ, எது நிகழவேண்டுமோ, அதற்கு 'வாய்' ஒன்றுண்டு—அதைக்கொண்டு விஷத்தைப் போக்குவேன்.

3. தேனொடு தெளிநீரை நான் சேர்க்கிறேன்; தேனென்பது கரடுமுரடான மலைகளே; தேனென்பது பருஷினியே (ஓர் ஆறு); சிபாலனே; உனது வாய்க்கு நலமுண்டாவதாகுக, உன் இருதயத்திற்கு நலமுண்டாவதாகுக.

இவைபோன்ற வரிகள், பயித்தியக்காரனின் பொருளற்ற பிதற்றல்களாக நமக்குத் தோன்றுகின்றன. இயற்றியவன் இதன் பொருளை நன்கு அறிந்திருக்க வேண்டும். முயன்றால், நாம் பொருளை அறிந்துகொள்ளலாம், ஆனால், அதில் புதைந்து கிடக்கும் கருத்துகளை அறிவது எளிதல்ல. நாம் மேலே கொடுத்

திருக்கும் சூத்திரம், தொகுதியின் மொழி பெயர்ப்பிலிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட நல்லதொரு உதாரணமாகும்.

**கவர்ச்சியானதொரு செய்யுள்**

அதர்வணவேதச் செய்யுள்களில் சில மிகச் சிறந்தவை. ஆனால், லான்மென் கூறுவதுபோல அவை மிகச் சொற்பமாக உள்ளன. அத்துணைச் சிறப்பு வாய்ந்த செய்யுள்களில், வருணனை மறைபொருளாகக் கற்பனை செய்து, அதன் அளவிலா அறிவுத் திறனை விளக்கும் செய்யுளொன்று குறிப்பிடத்தக்கது. இதில் காணப்படும் கருத்துகளும் உரைநடையும் யூதர்களின் காவிய மான 'பழைய ஏற்பாட்டு'ச் செய்யுள்களை ஒத்தவையாக இருக் கின்றன.

**வருணனின் அளவற்ற அறிவாற்றல்**

(அ. வே. iv. 16. 1–5; மியூருக்குப்பின்; கேகியில், பக். 65)

இரட்சகனாக, உலகத்தலைவன்
பொருள்யாவையும் அண்டையிலிருப்பதுபோலக்
[கண்டுணருகிறான்.
பிறரறியாது எதற்காக அவை உருப்பெற்றனவோ
அவையாவற்றையும் தெய்வங்கள் நன்கறிவர்.

நடந்தாலும், நின்றாலும், ஓசையின்றி ஊர்ந்து சென்றாலும்,
மறைவிடம் தேடிப் புகுந்தாலும்—அல்லது சடுதியில்
[வெளிப்பட்டாலும்
தனிமையில் இருவர் கூடித் திட்டமிட்டாலும்
மூன்றாமவனாக, அரசன் வருணனும் அதை அறிவான்.

இப்புவி யாவையும் கொண்டவன் அரசன் வருணன்;
அதற்கெல்லையான தொலைவிலுள்ள வானும்,
இரு கடல்களும் அவனுள் அடங்கும்.[1]
இருந்தும் சிறு துளி நீரும் அவன் உறைவிடமேயாம்.

பாய்ந்தோடித் தொலைவிலுள்ள வானில் புகுந்தபோதும்
அம்மன்னனின் பார்வையினின்று நான் தப்புவதென்பதரிது;
வானிலிருந்து அவனது ஒற்றர் விரைந்து வருவர்; இங்கு
ஆயிரம் கண்களுடைய அவர்கள் உலகம் யாவையும்
[அளக்கவல்லவரேயாவர்

1 'இரு கடல்களும் வருணனின் பெரு வயிறே' (லான்மென்)
'இரு கடல்களும் வருணனின் இடுப்புகளாம்' (மாக்டொனல்)

புலிக்கும் வானுக்கு மிடையில் எது இருப்பினும்,
அவையிரண்டிற்கு மப்பாலும், வருணன் செல்வத்தாகும்.

உயிரினங்களின் கண் துடிப்பு யாவையும் அவன்
[கணக்கிடுவான்.
சொக்கட்டான் ஆட்டக்காரன்போல, அகிலமெல்லாம்
[அவன் ஆட்டிவைப்பான்.

**இந்தோ–ஆரியக் குடிகள்**

நெடுங்காலமாகச் சிறுகச் சிறுக இந்தோ ஆரியரின் குடியேற்றம் நடைபெற்றிருக்க வேண்டுமென்பது தெளிவாகிறது. ஐந்து அல்லது அதற்கும் மேற்பட்ட குடிகள், இரேனியர் செய்ததுபோலத் தங்களை 'ஆரியர்' எனக் கூறிக்கொண்டிருக்க வேண்டும். இவர்கள் ஒருவரோடொருவர் உறவுகொண்டவர்களாகவும் இருந்திருக்கக்கூடும்.[1] 'ஆரியன்' என்ற சொல்லிற்கு ஆதியில் 'உறவினன்' என்ற பொருளே வழங்கி வந்ததாகத் தெரிய வருகிறது. காலப்போக்கில் இச்சொல்லிற்குப் பிறப்பினால் உயர்ந்தவன் அல்லது 'பிரபு' என்ற பொருள் கற்பிக்கப்பட்டது. 'அநாரியன்' அல்லது இழிகுலத்தவன் என்ற சொல்லும், இதற்கு எதிரிடைச் சொல்லாக வழங்கப்பெற்றது. சிந்து நதியின் மேற்கில் குடியேறி வாழ்ந்த இனத்தினர் ஆடுமாடுகளை மேய்த்தும், உழவுத் தொழிலில் ஈடுபட்டும் வாழ்க்கை நடத்தி வந்தனர். பசுக்களின் எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்டு அவர்கள் செல்வத்தை மதிப்பிட்டு வந்தனர். ஆசிரியர்களில் சிலர், 'இந்தோ–ஆரியரை' நாடோடிகள் என வர்ணித்துள்ளனர். தோத்திரப் பாடல்களில் காணப்படும் கருத்திற்கு இது முரண்பட்டதாக இருக்கிறது. ரிக்வேதத்தின் முற்பகுதியிலும் பிற்பகுதியிலும் காணப்படும் பல செய்யுள்களிலிருந்து 'யவம்' என்னுமொருவகைத் தானியம் பயிரிடப்பட்டு வந்ததெனலாம். 'யவம்' என்பதற்கு, 'பார்லி' என்பதே பொருளென்றாலும், கோதுமையையும் அச்சொல் குறிப்பதாகக் கொள்வதில் தவறெதுவுமில்லை. கோதுமையைக் குறித்த தனிக் குறிப்புகள் எவையுமில்லை.[2]

1 கிரீஸ் நாட்டில் கிரேக்கர் பரவிய வரலாற்றை ஒப்பு நோக்குக (ப்யூரி—அதிகாரம் 1, பகுதி 4).

2 உ-ம். ரி. வே. X 134. 2, 'பழுத்துக் குலுங்கும் கழனிகளிலுள்ள பார்லியை வரிசையாக மக்கள் அறுவடை செய்யுங்கால்' மேலும் vii. 67. 10, 'அறுவடைக்குப்பின் மூட்டையாகக் கட்டப்பட்டிருக்கும் பார்லி' (கிரிபித்), வடமேற்கு இந்தியாவிலும், ஆப்கானிஸ்தானத்திலும், 14,000 அடி உயரமுள்ள இமாலயப் பள்ளத்தாக்குகளிலும் 'பார்லி' பயிரிடப்படுகிறது. ரிக்வேதங்களில் அரிசியைப் பற்றிய குறிப்பெதுவுமில்லை. அதர்வணவேதத்தில் அது குறிப்பிடப்படுகிறது. உ-ம் iv- 34, 35. இந்தியர் ஆதியில்

இந்திய நாட்டின் உட்பகுதிகளில் குடியேறிய கூட்டத்தினர் ஆடுமாடு மேய்ப்பதைவிட உழவுத் தொழிலை விரைவாக மேற்கொண்டிருக்கக்கூடும். 'கூஜர்களையும்', பிற்காலத்தைச் சார்ந்த 'அஹிர்களையும்', இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். பூரு, சேடி[1] போன்ற இனப் பெயர்கள், புராண காலத்திலும் வழங்கி வந்தன; மற்றும் பல வழக்கொழிந்துவிட்டன. ஒவ்வொரு இனமும் பல குடும்பங்களைக் கொண்டது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் தகப்பனே தலைவனவான். இனம் முழுவதிற்கும் 'அரசன்' தலைவனாக விளங்கினன். இனத்தினர் அடங்கிய குழுவொன்றினல் விவரிக்கவொண்ணாத வகையில் அரசனின் அதிகார எல்லை வரையறுக்கப்பட்டது. பாதுகாப்புடைய கிராமங்களில் கூட்டத்தினர் வசித்து வந்தனர். ஆனல் நகரங்கள் இல்லை. தற்காலங்களில் ஆப்கானிஸ்தானத்தில் வசித்து வரும் மக்கள் நிலை துப்பாக்கிகளின் உபயோக காலத்திற்குமுன்[2] எவ்வாறு இருந்ததோ அதைப்போன்ற வாழ்க்கையையே ஆரியரும் கடைப்பிடித்தனர் எனச் சான்றுகள் வாயிலாக நாமறிவோம்.

**அமைதியும், போரும்**

வில்லும் அம்பும் முக்கிய ஆயுதங்களாகப் பயன்படுத்தப் பெற்றன. ஈட்டிகளும், போர்க் கோடரிகளும் வழக்கத்திலிருந்தன. போரில் பயன்படுத்தப் பெற்ற இரதம் ஒவ்வொன்றிலும் போர்வீரன் ஒருவனும், தேரோட்டி ஒருவனுமிருந்தான். இயந்திரங்கள் அமைப்பதில் நல்ல முன்னேற்றமேற்பட்டிருந்ததென்பதை இது தெளிவுபடுத்துகிறது. கவசங்களை அணிந்து போரிடுவதும் வழக்கமாயிருந்தது. ஆடைகள் நெய்வதும், தோல் பதனிடுவதும், உலோகங்களை வார்ப்பதும், ரிக்வேத இந்தோ ஆரியர்கள் கடைப்பிடித்த தொழில்களேயாம். இரும்பின் உபயோகத்தை அவர்கள் அறிந்திருக்கவில்லை. கங்கை ஆற்றின் முகத்துவாரத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ள வெண்கலச் செப்புக் கருவிகள் வேத காலத்தைச் சார்ந்தவைகளேயாகும் என்பதை உறுதியாகக் கூறலாம். 'தங்கம்' என்னும் உலோக

'நாடோடிகளாக' இருந்தனர் என்னும் கருத்தை மெகாஸ்தனீஸ் வலியுறுத்துவர். 'சித்தியர்களைப் போன்று ஆதியில் இந்தியரும் நாடோடிகளாக இருந்தனர். நிலத்தில் பயிரிடும் வழக்கம் அவர்களிடமில்லை. தங்கள் உடைமைகளைச் சுமந்து அவர்கள் செல்வது வழக்கம். முதலிய (ஆரையன் - இண்டிகா - அதிகாரம் 7.)

[1] பூரு என்பது கிரேக்க நூலாசிரியர்களின் 'போரோஸ்' எனக் கருதலாம்.

[2] 'ஆரியர் எங்கிருந்து வந்தனர்' என்ற விவாதம் தேவையற்றதென்றே ஒதுக்கப்பட்டுள்ளது.

மும் அதை ஆபரணங்களாகச் செய்து அணிந்து கொள்ளலா மென்பதையும் ஆரியர் நன்கறிவர். வெவ்வேறு இனத்தினரும் தங்களுக்குள் சண்டையிட்டுகொள்வது வழக்கமாயிருந்தது. என்றாலும், கருந்தோலுடைய ஆதிவாசிகளுடன் போரிடுவதில் யாவரும் ஒன்று கூடி விடுவதுமுண்டு. ஆதிவாசிகளை வெறுத்த தோடு ஆரியர் அவர்களது நாடுகளையும் கவர்ந்து வந்தனர்.

### உணவு

பண்டைய இரேனியரைப் போல இந்தோ ஆரியரும் பசுவைத் தெய்வமெனப் போற்றி வந்தனர். காளைகளையும் பசுக்களையும் திருமணங்களிலும், பிறசடங்குகளின் போதும் பலியிடுவதில் அவர்கள் சற்றும் அருவருப்புக் கொள்ளவில்லை. சடங்குகளில் பங்கு கொண்ட ஆரியர் பலியிடப்பெற்ற மிருகங்களின் மாமிசங் களையும் உண்டு வந்தனர். பலியிடப்பெற்ற மிருகங்கள் காளை களாயினும், பசுக்களாயினும், அல்லது குதிரைகளாகயிருப்பி னும் அவர்கள் பாராட்டியதில்லை. புலால் உண்பது ஒரு சில சந் தர்ப்பங்களிலேயே கடைப்பிடிக்கப்பட்டது. 'பால்' உணவுப் பொருள்களில் மிக முக்கியமானதாக விளங்கியது. 'பார்லி' அல்லது 'கோதுமை' (யவம்) யால் செய்யப்பட்ட அப்பத்தையும் மற்றும் காய்களையும் கனிகளையும் அவர்கள் உண்டு வந்தனர்.

### போதை தரும் பானங்கள்

'சோம', 'சுரா' என்னும் போதை தரும் இருவகைப் பானங் களை அவர்கள் தாராளமாக உபயோகித்தனர். பாரசீகத்தி லுள்ள 'யஸ்ட்','கிர்மான்'என்னுமிடங்களில் வசித்துவரும் பார்சி களும், மற்றும் இந்திய நாட்டில் தக்காணம், பம்பாய் ஆகிய இடங்களிலுள்ள பார்சிகளும் ஒரொரு சமயங்களில் 'சோமம்' என்னும் வேள்வி நடத்துவதுண்டு. 'சோம' என்னும் செடி 'அஸ்கிளீபியஸ்' அல்லது 'சர்காஸ்டெம்மா' என் னும் தாவர வகையைச் சேர்ந்ததென கூறப்படுகிறது. அவ் வகையைச் சேர்ந்த செடியில் பால் போன்ற ஒரு வகைத் திரவம் உண்டு. அதை அருவருக்கத்தக்கதொரு பானமாக மாற்றிவிட லாகும். ஆரியர் அறிந்திருந்த 'சோம' என்னும் செடி மற்றொன் றாக இருந்திருக்கவும் கூடும். அதைக் குறித்த விவரங்களை இன் னும் நாம் தெளிவாக அறிந்துகொள்ளும் வாய்ப்புக்கிட்டவில்லை.[1] சுராபானம் என்பது 'பீர்' என்னும் போதை தரும் பானவகை

1 'பிராமணருக்குச் "சோமம்" என்னும் தாவரங்கள் நிறைந்த காடு கள் பரிசளிக்கப்படும்' என கௌதில்யர் விதிவகுக்கிறார் (அர்த்த சாஸ்திரம், பகுதி II, அதிகாரம் 2)—ஜாதகங்கள் (இலக்கியம்) பார்க்கவும் நீர் 525-ம் 537-ம்.

போன்றதாக இருக்கக்கூடும். சோமரசத்தைத் தெய்வங்கள் மிகவும் விரும்பி ஏற்றனர் என்ற நம்பிக்கையிருந்தது. விரிவான சடங்கு முறைகளை மேற்கொண்டு தெய்வங்களுக்கு இப்பானம் வழங்கப்பட்டது. இத்தகைய சடங்குகள் நடைபெறும்போது கையாளுவதற்கான மந்திரங்கள் 'சாமவேதத்தில்' கூறப்பட்டுள்ளன.

### நேரப் போக்கிற்கான விளையாட்டுகள்

நாட்டியம், இசை, தேரோட்டப் பந்தயம், சூதாட்டம் ஆகிய கேளிக்கைகளில் ஆரியர் ஈடுபட்டிருந்தனர். ரிக்வேதத்திலும், மற்றும் பிற்கால இலக்கியங்களிலும் சொக்கட்டான் காய்களைக் கொண்டு சூதாடும் வழக்கம் குறிப்பிடப்பட்டிருப்பதால், சூதாடும் வழக்கமிருந்தது என்பதில் ஐயம் சிறிதுமில்லை. சூதாடு பவனின் புலம்பல்' என்னும் பகுதியிலிருந்து ஒரு சில வரிகளை (ரி.வே. X 34, கெய்கியில் பக்கம் 84) இங்கு எடுத்துக் கூறுவது பொருந்தும்.

மனையாள் மறுக்கிறாள் மாமியார் வெறுக்கிறாள்
சூதாடியின் கஷ்டங்களுக்கு நிவாரணம் ஏது?
மூப்பெய்தி ஓய்ந்து விட்ட விலைபெற்றகுதிரையைப்போன்ற
சூதாடியால் எவ்வித பயனும் என்னால் காண இயலவில்லை.

### செய்திகளின் தெளிவற்ற தன்மை

ஆரிய வாழ்க்கையின் இயல்புகளை ஒருவாறு எடுத்துக் கூறுவதற்கு முயற்சி மேற்கொள்ளப்பட்டிருப்பினும், ரிக்வேத கால இந்தோ ஆரியரின் வாழ்க்கை முறைகளைப் பொறுத்த குறிப்புகள், தெளிவற்றவையாகவும், உண்மைக்கு முரணானவைகளாகவும் இருக்கின்றன என்பதை ஒப்புக்கொள்வதைத் தவிர்க்க இயலாது. செய்யுள்கள் எக்காலத்தில் இயற்றப்பெற்றன என்பதைக் கூற இயலவில்லை. அவ்விலக்கிய வாயிலாக நமக்குக் கிடைக்கும் வாழ்க்கை முறை எக்காலத்தைச் சார்ந்ததென்பதையும் நம்மால் கூறுவதற்கு இயலவில்லை. ஆராய்ச்சியாளரின் அறிவிற்குட்பட்ட வரலாற்று நிகழ்ச்சிகளுடன் எவ்வகையிலும் ஆரியரைப் பொருத்துவதென்பதும் இயலவில்லை. இக்காரணங்களால் இந்தோ ஆரியர் நட்டாற்றில் விடப்பட்டிருக்கின்றனர் என்று கூறுவது முற்றிலும் பொருத்தமுடையதாகவே தோன்றுகிறது. செய்யுள்களில் நாம் காணும் மொழிச்சிறப்பும், நூதனமான சொற்களின் உபயோகமும், பழமை நிறைந்த கருத்துகளும், யாருக்காக, எப்போது இவ்விலக்கியங்கள் உருப்பெற்

றெழுந்தன என்பதை நம்மால் அறுதியிட்டுக் கூற இயலாத வகை செய்கின்றன. அதர்வண வேதத்தில் நிறைந்துள்ள கருத்துகள் சில, நாம் முன்னர்க் குறித்ததுபோல ரிக்வேதக் கருத்துகளைக் காட்டிலும் பழமையானவையாகத் தோன்றுகின்றன. இதனால் அதர்வண வேதம் ரிக்வேதத்தைக் காட்டிலும் வரலாற்றுக்கு முந்திய காலத் தொடர்புகொண்டது என்ற எண்ணமும் எழக் கூடும். ஆனால், உண்மையில் ரிக்வேதம் உருப்பெற்ற சில காலத்திற்குப் பின்னரே அதர்வண வேதம் எழுந்துள்ளது.

### வேதகால ஆரியரும் இந்து சமயமும்

வேதகால இந்தோ–ஆரியரின் வாழ்க்கை வரலாறு ஒளி மங்கியதாக விளங்கியபோதும், அவர் தம் சமயக்கோட்பாடுகளும், வாழ்க்கை முறைகளும் தற்கால இந்துக்கள், அல்லது வரலாற்றுத் தெளிவுபெற்ற முற்கால இந்துக்களுடைய மதம், வாழ்க்கை முறை ஆகியவைகளிலிருந்தது வேறுபட்டு விளங்கின. பசுவதையில் வெறுப்பு, மாட்டிறைச்சி உண்பதில் அருவருப்பு ஆகிய இரு வழக்கங்கள், இந்து சமயப்புறத் தோற்றங்களில் முக்கியமானவைகளாக விளங்குகின்றன. இவை சுமார் இரண்டாயிரமாண்டுகளாக வழக்கிலிருந்து வருகின்றன. இந்தோ–ஆரியரிடம் இத்தகைய கூறுபாடுகள் இருந்ததில்லை. காளைகளையும் பசுக்களையும் வேள்விகளில் பலியிட்டுவந்தனர் என்பதையும் குதிரை மாமிசம், இறைச்சி ஆகியவைகளைச் சடங்குகள் நடத்தும் காலங்களில் உண்டு வந்தனர் என்பதையும் ஐயமின்றி எடுத்துரைக்கலாகும். இருந்தபோதிலும், இந்து சமய வளர்ச்சிக்கு ரிக்வேத காலத்தில் அல்லது அதற்கு முன்பாகவே சிந்து சமவெளி ஹரப்பாவிலேயே விதையிடப்பட்டது என்பதும் உண்மையான செய்தியேயாகும். பொது நோக்கில், கடவுளர் பட்டியலைப் பார்க்கும்போது, இந்து சமயக் கடவுளரைப்போல அக்கடவுளர் இல்லையெனினும், பிற்காலக் கடவுளர் சிலரது வளர்ச்சி அக்காலங்களிலேயே தொடங்கி விட்டது எனக்கூறலாம். இப்பொழுதும் வேதக்காலக் கடவுளருக்கு மதிப்பிருந்து வருகிறது. தென்னிந்தியாவில் மலபாரைச் சேர்ந்த நம்பூதிரிப் பிராமணர்[1] அவர்களது அறிவிற்கெட்டியவரை வேதச்சடங்கு முறைகளைப் பின்பற்றுவதில் தங்கள் வாழ்நாளைக் கழித்து வருகின்றனர். பிராமணரது செல்வாக்கு, ரிக்வேதம் உருப்பெற்றதும் தொடங்கி விட்டது. சாதி முறைக்கு இவ்வாறு வித்திடப்பட்டது. இந்து சமயத்திற்கும் ரிக்வேதத்திற்குமுள்ள இடைவெளியை யஜுர் வேதம் ஒருவாறு ஈடு செய்கிறது. இதற்கும், ஸட்லஜ் யமுனை

[1] இவர்களை 'நம்பூத்ரி' என்றும், 'நம்பூரி' என்றும் அழைப்பதுண்டு.

ஆறுகளுக்கும் அதிகத் தொடர்பிருக்கிறது.¹ சிந்துவெளிக்கும் யஜுர் வேதத்திற்கும் அத்துணைத் தொடர்பிருப்பதாகத் தெரிய வில்லை. 'சிவன் என்னும் கடவுள் அப்பெயர் தாங்கி முதன் முறையாக அறிமுகமாகிறார். ஆயினும் 'விஷ்ணு' என்ற கடவுளருக்கு முற்கால இலக்கியங்களிலுள்ளதைவிட அதிக கௌரவம் வழங்கப்பட்டிருக்கிறது. எளிய இயற்கை வழிபாடு வழக் கொழிந்து பின்சென்றுவிட்டது. விரிவான சடங்குகளும். அவைகளை முறையாக நடத்தி வைப்பதற்குத் தேர்ச்சி பெற்ற புரோகிதரும் கொண்ட செயற்கையான சமயமொன்று வர்ணிக் கப்பட்டது.

### வேதகால அரசியல் வரலாறு

ரிக்வேத செய்யுள்களில் அடங்கியுள்ள மன்னர்கள், அரசுகள், மற்றும் இனங்கள் ஆகிய விவரங்களைக் கொண்டு, அரசியல் வரலாற்றை ஒருவாறு தீர்மானிக்கலாம். போர்களையும் பிற செய்திகளையும் அவை விவரிக்கின்றன. இத்தகைய செய்திகள் இயற்கையாகவும் ஆர்வமுடனும் கூறப்பட்டவையாக இருப்ப தால், உண்மையாக நடைபெற்ற செய்திகளை இவை உள்ள படியே எடுத்துரைக்கின்றன என்பதில் ஐயமில்லை. செய் யுள்கள் இயற்றப் பெற்ற காலத்தையோ அல்லது அவை குறிப் பிடுகின்ற செய்திகள் நிகழ்ந்த காலங்களையோ ஓரளவிலேனும் உறுதிப்படுத்துவதென்பது கூடா முயற்சியாக இருப்பதால், கிடைக்கும் குறிப்புகள், வரலாறு சமைப்பதற்கு ஒரு சிறிதும் பயன்படாதிருக்கின்றன. புராணங்களிலும், பிற இலக்கியங் களிலும் காணப்படும் வமிசாவளி அட்டவணைகளின் உதவியோடு வேத காலத்தில் வழங்கிய பெயர்களுடன் இந்து சமய வரலாற் றைத் தொடர்பு படுத்துவதற்கென மேற்கொள்ளப் பெற்ற முயற்சிகள் கணிசமான பலன் கொடுக்கத் தவறிவிட்டன. செய் யுள்களில் காணப்படும் பரதன், சுதஸ், ஜனமேஜயன் மற்றும் மன்னர்கள் உண்மையில் அக்காலத்தில் வாழ்ந்து வந்தவர்களே எனினும், வரலாற்றாசிரியனின் தொண்டிற்கு அதிகப் பயனுள்ள செய்திகளாக அவை இல்லை.

### வரலாற்று நோக்கில் புவிஇயல்

செய்யுள்களில் காணப்படும் புவி இயல் விவரங்களின் ஆராய்ச்சி, அதிகப் பயனுள்ளதாக விளங்குகிறது. இந்தோ-ஆரியக் குடியேற்றத்தின் வெவ்வேறு நிலைகளையும் இந்து சமயத் தொடக்கத்தையும் நன்கு அறிந்து கொள்வதற்கு இவ்விவரங்கள் வழி காட்டுகின்றன. மத்திய ஆசியாவிலிருந்து இந்தோ-ஆரியர்

குடி பெயர்ந்து வந்தனர் என்னும் உறுதிபெற்ற கருத்திற்கு, ரிக், யஜுர் வேதங்களிலுள்ள புவி இயல் குறிப்புகளே அடிப்படைச் சான்றுகளாக அமைந்துள்ளன. உறுதி பெற்றுவிட்ட கருத்திற்கான நேரிடைச் சான்றுகள் இல்லை. எல்லைக்கப்பால் ஏதேனும் உறைவிடமிருந்தது என்ற பழங்காலக் கருத்துகளை உறுதிப் படுத்துவதற்குள்ள சான்றுகளும் இல்லை. நாட்டின் புவி இயலைப் பற்றிய விவரங்கள் இலக்கியங்களில் ஏராளமாகக் காணக் கிடைக்கின்றன. பிரயாணங்களை மேற்கொண்டு பல பகுதிகளையும் நேரில் கண்ட பிறகே அத்தகைய குறிப்புகளை எழுதியிருக்க வேண்டும். பத்தாவது பகுதியில் (X 75) ஆறுகளின் பெருமையை எடுத்துக் கூறும் செய்யுளைப் (நதி-ஸ்துதி) புவி இயல் விவரங்களை எடுத்தியம்பும் இலக்கியத்திற்கு நல்லதோர் உதாரணமாகக் கூறலாம். 'சிந்து' அல்லது 'இந்து' நதியை வர்ணிப்பதில் தம் முழுக்கவனத்தையும் செலுத்தியிருக்கும் ஆசிரியர், கங்கை நதியுட்பட சுமார் பத்தொன்பது ஆறுகளைப் பற்றியும் கூறியுள்ளனர்.

செய்யுளின் ஐந்தாவது பாராவில் கிழக்கிலிருந்து மேற்கு வரையிலுமுள்ள, பெரியதும் சிறியதுமான பத்து நதிகளடங்கிய பட்டியல் கிடைத்திருப்பது மிகவும் வியப்பைத் தருகிறது.

> எனது புகழ்மாலையை செவிமடுப்பாயாக; ஓ, கங்கையே,
> யமுனையே, சரஸ்வதியே, சுதுத்ரியே, பருஷிணியே,
> உடனுள்ள அஸ்கினியே, ஓ, மருத்வ்ருத, உடனிருக்கும்
> விதஸ்த, ஓ, அர்ஜிக்கிய; சுஷோமாவுடன் சேர்ந்து கேள்!

கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய பெயர்கள் எவ்வித மாறுதலுக்கு முட்படவில்லை. நதியின் போக்கில், திசைகள் பல மாறியிருந்தபோதும், தற்காலத்தில் சட்லஜ் என்று வழங்கப்பெறும் நதியே அக்காலங்களில் சுதுத்ரி என்ற பெயருடைத்தாயிருக்க வேண்டும். பருஷிணி என்பது தற்கால 'ராவி' என்னும் நதியே என நம்பப்படுகிறது. அஸ்கினி, விதஸ்தா ஆகிய நதிகள் முறையே 'அகினசன்ஸ்' அல்லது சீனப், 'வயத்' அல்லது ஜீலம் என்பதில் ஐயமெதுவும் இல்லை. காஷ்மீர், ஜம்மு பிரதேசங்களிலுள்ள 'மரு'ப் பள்ளத்தாக்கின் வழியே வடக்கிலிருந்து தெற்காக ஓடி, கஷ்டவாரின் வடசரையில் 'சீனபு'டன் இணையும் மருவர்த்தன் என்பதே 'மருத்வ்ருத' நதியாகும். ராவல்பிண்டி மாவட்டத்திலுள்ள 'ஸோஹன்' நதியே 'சுஷோமா' என்றும், அதே மாவட்டத்திலுள்ள 'கான்ஷி' என்ற நதியே அர்ஜிக்கிய என்றும் நம்பப்படுகிறது.

'மருத்வ்ருதம்' நதியைக் குறித்திருப்பது மிகவும் வியப்பூட்டுவதாக உள்ளது. உயரமான மலைகளின் நடுவில், எளிதினில் சென்றடைய முடியாததொரு பள்ளத்தாக்கில் மறைந்திருக்கும் 'மருத்வ்ருதம்' எவ்வாறு ஆசிரியனின் பார்வையில் பட்டுள்ளது என்பதை அறிந்துகொள்வது மிகக் கடினமாக உள்ளது. இப்பட்டியல், விநோதமான பல ஊகங்களுக்கு இடமளிப்பதாகவுமிருக்கிறது.[1]

**நதியின் போக்கில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள்**

இந்திய வரலாற்றில் பழங்காலத்தை ஆராயும் மாணவர்களும், வேதங்கள், மற்றும் அதுபோன்ற பண்டை இலக்கியங்களை விளக்க விரும்பும் அறிவாளிகளும், பனியுருகிப் பாயும் வடவிந்திய ஆறுகளில், வரலாற்றுத் தெளிவு பெறும் காலத்திலேயே பல மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன என்பதை மனத்தில் கொள்ளவேண்டும். இது மிகவும் தேவையானது என்பதை நாம் முன்னரே குறித்துள்ளோம். சமவெளிகளிலும் மலைப்பாங்கான இடங்களிலும் சிந்து நதியின் போக்கில் வியப்பு மிக்க பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. பூகம்பங்களும், நில எழுச்சிகளும், குழிவுகளும், சரிவுகளும் ஆற்றின் போக்கில் உற்பத்தியாகுமிடங்களிலேயே பல மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளன. வண்டல் நிறைந்த சமவெளிகளிலும் பிரம்மாண்டமான பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன, ஏற்பட்டுக்கொண்டுமிருக்கின்றன. சிந்துவிற்கும் இந்துஸ்தானத்திற்கும் எல்லைக் கோடாக விளங்கிய ஹக்ரா அல்லது வஹிந்தா போன்ற ஆறுகள் தற்போது இல்லை. மேற்கிலுள்ள 'குர்ரம்', கிழக்கிலுள்ள 'சரஸ்வதி' போன்ற ஆறுகள், ஒரு காலத்தில் வெள்ளப் பெருக்கால் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தன. காலப் போக்கில், அவை சிறப்புக்குன்றிய சிறு வாய்க்கால்களாகவே விளங்கி வருகின்றன. சிந்து, கங்கை ஆறுகளிலுள்ள கூடல்களும் பல மைல்களுக்கப்பால் மாறி, அமைந்துள்ளன. தற்போது சிந்து நதியில் காணப்படும் 'டெல்டா'ப் பிரதேசம் மகா அலெக்சாந்தர் காலத்திலிருந்து வழக்கிலிருந்து வருவதாகக் கொள்ளலாம். சட்லஜ் நதியுடன் தொடர்புள்ள அல்லது இணைந்துள்ள ஆறுகள் யாவும், பன்முறை மாற்றங்கள் பல கண்டிருக்கின்றன. சட்லஜ் ஆறும் எண்பத்தைந்து அடிகளுக்கும் மேற்பட்ட அகலமுடைய கரை

1 மாக்ஸ் முல்லர் பார்க்க, 'இந்தியா, அது நமக்கு அறிவுறுத்துவது யாது ?' (1883) பக். 163-75; ஸ்டீன்—ஜே. ஆர் - ஏ. எஸ்; 1917 பக். 91; கிரிபித் மற்றும் பலரது மொழி பெயர்ப்புக்களைக் காணவும்-அர்ஜிக்கிய என்பது கான்ஷி ஆறாகவே இருக்கவேண்டும்; ஸ்டீன் குறிப்பது போலல்ல என்பது எனது கருத்து.

வழியே வளைந்து வளைந்து பாய்ந்தோடியிருக்கிறது. இக்கருத்தை விளக்குவதற்கான, கணக்கற்ற எடுத்துக்காட்டுகள் கூறலாம். பண்டைய இலக்கியத்தை விளக்குவதிலும், அதில் கூறப்பட்டிருக்கும் இடங்களை அடையாளங் கொள்வதிலும் மிகவும் எச்சரிக்கை தேவை என்பதை விளக்குவதற்கு நாம் எடுத்துக் கூறியிருக்கும் உதாரணம் ஒன்றே போதுமானது எனக் கருதுகிறேன்.[1]

### வேத அங்கங்களும் உப-வேதங்களும்

வேத இலக்கியங்களுக்குத் துணையாக விளங்கி வருகிற இரு பகுதிகள் முறையே 'வேதாங்கங்கள்' (வேதங்களின் குடும்பங்கள்) என்றும் 'உபவேதங்கள்' (துணை வேதங்கள்) என்றும் வழங்கி வருகின்றன. அவைகளைப் பற்றி ஒரு சிறிது கூறுவோம்.

வேதாங்கங்கள் என்பன ஆராய்ச்சியுரைகளடங்கிய ஆறு பகுதிகளைக் கொண்டவை. ஒவ்வொரு பகுதியும் பல சூத்திரங்களைக் கொண்டவை வேத இலக்கியங்களை விரித்துரைப்பதும் சடங்கு முறைகளை வர்ணிப்பதுமாகிய கருத்துகள், இச்சூத்திரங்களில் அடங்கியுள்ளன. விவாதத்திற்குரிய பொருள்கள் வருமாறு (1) 'உச்சரிப்புக்கலை' அல்லது மொழிகளின் ஒலி (சிக்ஷை), (2) சந்தம் (சந்தஸ்), (3) இலக்கணம் (வியாகரணம்). (4) மொழிகளின் உற்பத்தி குறித்த ஆராய்ச்சி (நிருக்தி அல்லது நிருக்தம்), (5) சமய ஒழுக்கம் (கல்பம்), (6) வானசாத்திரம் அல்லது சோதிடம் (ஜோதிஷம்)

'உபவேதங்களில்' இகவாழ்விற்குரிய பல விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. அவை முறையே (1) மருத்துவம் (ஆயுர்வேதம்),

1 நூலில் கூறப்பட்டுள்ள கருத்தின் சாரத்தை நன்கு தெரிந்து உணர்வதற்கு, ராவர்டி என்பவரின் சிக்கல் நிறைந்த 'சிந்துப் பெருநதியும் அதன் கிளைகளும்' என்ற நூலையும், ஜெ. ஏ. எஸ். பி. வால்யூம் L xi, பகுதி 1, 1892 உள்ள புவி இயல் வரலாற்று ஆராய்ச்சி என்ற கட்டுரையையும், நன்கு படித்து, குறித்து, ஜீரணிக்க வேண்டும்: ஏராளமான குறிப்புகள் நன்முறையில் வரிசைப்படுத்தபடவில்லை என்பது வருந்தத் தக்கது. இதன் விளைவாக, நூலைக் கற்றுணர்வது மிகக் கடினமான முயற்சியேயாகிறது. முக்கியமாக அது சிந்து நதியை வர்ணிக்கிறது, பக். 297-317; ஹிடாஸ்பஸ் அல்லது விதஸ்த பக். 318-336, சீனுப் பக். 336-52, ராவி 352-71, பியஸ் 372-90, சட்லஜ் 391-418: ஹக்ரா 418-22 மற்றும் 454-66 விளைவுகளைப் பற்றிய விவாதம் 469-508ஆம பக்கங்களில் காணப்படுகிறது. ஆராய்ச்சியை மீண்டும் மீண்டும் படித்து நான் மிக்க தெளிவு பெற்றிருக்கிறேன். தென் கோடியிலுள்ள நதிகளின் போக்கில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை அறிந்து கொள்வதற்கு 'ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு தமிழர்' 1904, பக்கம் 236 என்ற, கே. எஸ். பிள்ளை அவர்களின் நூலைக் காண்க.

(2) போர் அல்லது வில்வித்தை (தனுர்வேதம்), (3) இசை (காந்தர்வ வேதம்), கட்டடக்கலையும் மற்றும் பொதுக்கலை (சில்ப சாஸ்திரம்)[1]

**வேதாந்தம்**

உபநிடதங்களில் அடங்கியுள்ள தத்துவங்களைக் குறிப்பதற்கு 'வேதாந்தம்' (வேதத்தின் முடிவு) என்ற சொல் பயன் படுத்தப் படுகிறது. அவ்வாறு பயன்படும்போது 'வேதத்தின் இறுதிக் கட்டம்' என்ற பொருளையே நாம் கொள்ள நேரிடுகிறது. வேதங்களைக் குறிப்பிட்டுப் பேசும் மக்கள் பலர், அவ்வாறு பேசும்போது உபநிடதங்களையே குறிப்பிடுகின்றனர். வேதாந்தத்தை அவர்கள் 'அறிவின் இறுதி எல்லையாக'க் கருதுகின்றனர். சாதாரணமாகக் குறிப்பிடும்போது 'பிராமணங்களோடு' இணைக்கப்பட்டிருக்கும் இலக்கியங்களையே அச்'சொல்' குறிக்கும், 'தது த்வம் அஸி', 'நீயே அதாக இருக்கிறாய்' என்னும் சொற்றொடர் குறைவற்ற நிறை பொருளைக் குறிக்கும் வேதாந்தத்தின் சாரமாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

**வீரகாவியங்கள் (The epics)**

செய்யுளிலக்கியங்களான வேதத்தை விடுத்து வடமொழி இலக்கியங்களான வீரகாவியங்களில் கருத்தைச் செலுத்த முயலும்போது, முற்றிலும் புதியதோர் உலகில் காலடி எடுத்து வைக்கிறோம். இலக்கியத்தில் கையாளப்பட்டிருக்கும் இலக்கண விதிகளும், சொற்களும், சந்தமும், நடையும் முற்றிலும் மாறுபட்டிருப்பதோடு, அவைகளில் சித்திரிக்கப்பட்டிருக்கும் சமுதாய வாழ்க்கையும் சமயக்கோட்பாடுகளும் முற்றிலும் மாறுபட்டவையாகவுமிருக்கின்றன. அத்தகைய மாறுதல்கள் யாவையும் விரிவாக ஆராயப் புகுவதற்குமுன், வீரகாவியங்களின் இலக்கியச் சிறப்பை நன்கு ஆராய்வது அவசியமாகின்றது.

ஆயிரக்கணக்கான செய்யுள்களைக் கொண்ட இராமாயணம் மகாபாரதம் ஆகிய நூல்கள் வீரகாவியங்களென மதிக்கப் படுகின்றன.

1 உபவேதங்களில் நான்காவதற்கு ஸ்தபத்ய-வேதம் என்ற பெயரும் உண்டு. 'அர்த்த சாஸ்திரம்' என டாக்டர் ஸ்மித் முந்திய நூல்களில் குறித்திருப்பது 'வீபன்' என்பவரைப் பின்பற்றியே யாகும் (இந்திய இலக்கிய வரலாறு) 1882, பக் 271, 273). இச்சந்தர்ப்பத்தில் அது பொருந்தாது.

**இராமாயணம்**

வால்மீகி என்ற ஆசிரியரொருவரால் தொகுக்கப் பெற்ற நீண்ட இலக்கியமாகவும், 'இராமன்' என்னும் தலைவனது ஆற்றல் மிகுந்த செயல்களை, செய்யுளிலக்கண விதிகளைக் கடைப் பிடித்துக் கூறப்பட்டிருப்பதாலும், இராமாயணத்தை வீரகாவிய மெனக் கருதுவது மிகவும் பொருத்தமுடையதாக விளங்குகிறது. வடமொழி இலக்கியத்தில், செய்திகளைச் செயற்கையிலமைந்த செய்யுள் வாயிலாக எடுத்துக் கூறுவது அல்லது 'வீரகாவியம்' என்ற இலக்கிய வகைக்கு முதல் எடுத்துக் காட்டாக இராமா யணம் விளங்கி வருகிறது. சொற்களின் உதவிகொண்டு செப்பிடு வித்தை காட்டுவதும், அசாதாரணமான கருத்துகளை அள்ளி வீசுவதும் பிற்கால இலக்கியங்களில் அதிகமாகக் காணப்படு கின்றன. இராமாயண காவியமோ, அவ்வாறின்றி எளிதில் புரிந்துகொள்ளக் கூடிய கருத்துகளை, எளிமையான நடையில் எடுத்துக் கூறியபோதிலும் அதன் இலக்கியச் சிறப்புக் குன்றி விடவில்லை. வால்மீகியின் கருத்திற்கிணங்க, ஏழு பகுதிகளை யுடைய இக்காவியத்தில், ஐந்து பகுதிகள் வீரகாவியத்தை உருவாக்குகின்றன. முதல் பகுதியும் இறுதிப் பகுதியும் பிற் காலத்தில் உருப்பெற்றவையென இலக்கிய விமர்சகர் எண்ணி வருகின்றனர். மூலக்கதையுடன் தொடர்பற்ற உபகதைகள் ஒரு சில காணப்படுகின்றன. கையாளப்பட்டுள்ள இலக்கணமும் மொழியழகும், வேதகால மொழி இலக்கணங்களிலிருந்து மிகவும் மாறுபட்டிருப்பவையாகவும், சுத்தமான வடமொழி இலக் கியத்தை ஒட்டியவையாகவு மிருக்கின்றன. இரண்டு அல்லது மூன்று மறுபதிப்புகள் வெளியிடப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிய வருகிறது. பதிப்புகளில் காணப்படும் ஒருசில மாறுதல் களுக்கு, இச்செய்யுள்களைப் பாடுவதையே தொழிலாகக் கொண் டிருந்தவர்களே காரணமென்றும் கூறலாம். மறுபதிப்புகளில், உண்மையில் வால்மீகி கூறியவற்றை எது உள்ளடக்கியிருக் கிறது எனக் கூறுவது மிக கடினம். பம்பாயிலிருந்து வெளி யாகியிருக்கும் பதிப்பு, பெரிதும் ஆதிகாவியத்தை ஒட்டியே அமைந்துள்ளது. வர்ணனைகளை உள்ளடக்கியுள்ள செய்யுள் களைப் பாடுவதில், வேதங்களை ஓதுவது போன்று அத்துணைக் கவனம் தேவைப்படவில்லை போலும். செய்யுள்களை அத்துணைப் புனிதம் வாய்ந்தவைகளாக எண்ணாததொன்றே இதற்குக்காரண மாயிருந்திருக்கவேண்டும். ஏழு பகுதிகளிலும், மொத்தமாக 24,000 சுலோகங்கள் அல்லது 48,000 அடிகள் அடங்கியுள்ளன.

**இராமாயணத்தின் மூலக் கருத்து**

அயோத்தி மன்னன் தயரதன், அவனது அரசி கௌசல்யை ஆகியோரது மகனான இளவல் இராமனது வாழ்க்கை, இராமாயணத்தின் மூலகருத்தாக உள்ளது. இரண்டாவது அரசியான கைகேகியியின் பொறாமையால் இராமன் நாடுவிட்டுச் செல்ல வேண்டியதாயிற்று. அரசைத் தன் மகன் பரதனுக்குப் பெற அவள் முயன்றாள். மூன்றும் இளவலான இலக்குமணன் தன் சகோதரன் இராமன் அவனுடைய பிரிய மனைவி சீதை ஆகியோரைப் பின்பற்றி நாடுவிட்டுச் செல்வதற்குத் தானாகவே முன் வந்தான். நாடு கடத்தப்பெற்ற இளவலின் தீரச் செயல்களும், இலங்கையின் அரக்க மன்னன் இராவணன் சீதையைக் கவர்ந்ததும், வானரத் தலைவன் ஹனுமன் இராமனுக்கு அளித்த உதவியும், தனது கற்புக்கு நேர்ந்த அநியாயமான களங்கத்தைச் சீதை காத்துக் கொண்டதும், மற்றும் இந்திய நாட்டின் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்து வரும் ஒவ்வொரு இந்துவும் அறிந்த பல்வேறு செய்திகளும்—காவியத்திலடங்கியுள்ளன. ஐரோப்பிய கிறிஸ்தவர்களுக்கு, சமய நூலான பைபிளில் உள்ள கதைகள் எவ்வாறு அறிமுகமானவைகளோ, அதைப்போல இராமாயண காவியங்களிலுள்ள செய்திகளை இந்துக்கள் அறிவார்கள். காவியம் இன்பகரமாக இறுதியில் முடிவடைகிறது. நாடாளும் பொறுப்பை, இராமன் பரதனுடைய துணையுடன் நடத்தி வருகிறான்.

வீர ரசத்தை அடிப்படையாகக் கொண்ட இக்கதையை, 'விஷ்ணு' என்ற கடவுளின் புனிதத்தன்மைக்கு ஏற்றம் கொடுப்பதென்ற நோக்கமுடன், வழிபாட்டிற்குரிய ஒரு நூலாக மாற்றுவதற்குப் பிராமணர்கள் முயன்றுள்ளனர். 'இராமன்' என்னும் அக்காவியத்தலைவன் விஷ்ணுவின் ஓர் அவதாரமாகக் கருதப்படலானான். பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் அவனை மனிதருள் மாணிக்கமென்றும், மனிதகுலத்தைக் காக்கும் கடவுளென்றும் எண்ணலாயினர். அவர்கள் 'ராம், ராம்' என அவனது பெயரை புனித மந்திரமாக இடைவிடாது உச்சரித்தும் வருகின்றனர். மனிதருள் மாணிக்கமாக அவன் பூஜிக்கப்படுவதோடு, அவன் மனைவியான சீதையும் பெண்மைக்கோர் இலக்கணமெனவும் வழிபாட்டிற்குரியவளாகவும் கருதப்படுகிறாள். பிறதேச மொழிகளிலும் இராமாயணம் இயற்றப்பட்டுள்ளது. வடமொழி அறியாத இந்துக்கள், பிறதேச மொழிகளிலுள்ள நூல்கள் வாயிலாக 'ராம–சரிதை என்னும் புனிதத் தடாகத்தில்' குளிக்கும் வாய்ப்பைப் பெற்றுள்ளனர். அக்பரது ஆட்சி காலத்தில் துளசிதாஸ்

என்பவரால் இயற்றப்பட்ட 'ராம-சரிதமானசம்' என்னும் புனித கவிதை இத்தகைய நூல்களில் மிகச் சிறந்து விளங்குகிறது. இராமாயண காவியத்தில் அடங்கியுள்ள நல்லுரைகள், அந் நூலிற்கு, வழிபடத் தகுந்த புனிதத் தன்மையை அளிக்கிறது. குறிப்பாகத் துளசிதாசின் இராமாயண காவியம் முழுவதும், நற் செய்கைகளேயும் நற்குணங்களேயுமே வர்ணிக்கிறது.

**மகாபாரதம்**

மகாபாரதத்தின் இரு பதிப்புகள்: ஒன்று வடக்கிலிருந்தும், மற்றொன்று தெற்கிலிருந்தும் நமக்குக் கிடைக்கின்றன. பாரதத்தை முற்றிலும் ஓர் 'வீரகாவியம்' என அழைப்பதற்கில்லே. பல நூற்றுண்டுகளுக்கும் மேலாகப் பரவிக்கிடக்கும் ஆசிரியர்கள் பலரால் இயற்றப்பட்டிருக்கும் செய்யுள்களின் பெருந்தொகுப்பாக அது விளங்குகிறது. பதினெட்டுப் பகுதிகள் அல்லது 'பர்வங்களாக' அமைக்கப்பட்டிருப்பதோடு, அச்செய்யுள்கள் ஹரிவம்சம் என்ற துணைப்பகுதியையும் கொண்டுள்ளது. இத் துணைப்பகுதியைப் பத்தொன்பதாவது பர்வமாகவும் எண்ணலாகும். சுலோகங்களின் எண்ணிக்கை 100,000-க்கும் மேலாகவே இருக்கக்கூடும். அதனல் 200,000-க்கும் மேற்பட்ட அடிகள் இருக்கின்றன. 'ஹரிவம்சத்தில்' 16,000-சுலோகங்களுக்குமேல் காணப்படுகின்றன. கருவாக விளங்கும் மூலக்கருத்துடன் ஓரளவேனும் தொடர்பு கொண்ட உபகதைகள் சிக்கல் நிறைந்த இலக்கியத்தில் ஐந்தில் நான்கு பகுதிகளாக உள்ளன. பிராமணரால் தயாரிக்கப் பெற்ற 'நன்னெறிகளே விளக்கும் ஓர் அறநூல்' போல அவை காட்சியளிக்கின்றன.

**வீரகாவியப் பகுதி**

திருதராஷ்டிரனின் நூறு பிள்ளேகளும் துரியோதனனேத் தலைவனைக் கொண்டவர்களுமான கௌரவருக்கும், திருதராஷ்டிரனின் சகோதரனை பாண்டுவின் பிள்ளேகளும் யுதிஷ்டிரனேத் தலைவனைக் கொண்டவர்களுமான பாண்டவருக்கும் இடையே நிகழ்ந்த பெரும் போர், மகாபாரத இலக்கியத்தின் வீரகாவியப் பகுதியாக விளங்குகிறது. இப்போர் நிகழ்வதற்குக் காரணமாயிருந்த பல நிகழ்ச்சிகளேயும் ஆதியில் கவிஞர் தொகுத்துக் கூறுகிறார். பண்டைய இந்திரப் பிரஸ்தத்திற்கும், தற்கால டெல்லிக்கும் வடக்கிலும், தானேஸ்வரத்திற்கு அருகிலுமுள்ள குருக்ஷேத்திரம் என்னும் பரந்த வெளியில், பதினெட்டு நாட்களாக இடைவிடாது நடைபெற்ற கோரமான சண்டையைப் பின்னர் வர்ணித்துள்ளார். இமாலயத்திலிருந்து தென்கோடி வரையிலு

முள்ள எல்லா இனத்தினரும், குடியினரும் வலிமிக்க இரு அரச குடும்பங்களிடையே நிகழ்ந்த இப்போரில் பங்குபெற்றனர் எனக் கூறப்படுகிறது. தற்கால உத்திரப் பிரதேசம், மேற்கு பீஹார், கிழக்கு ராஜபுதனம், ஆகிய பகுதிகள், மேற்கில் குஜரத்தி லிருந்தும் தென்கோடியில் திராவிடநாடுகளிலிருந்தும் பெற்ற போர்வீரர்களுடனும் யுத்த சாதனங்களுடனும் பாண்ட வருக்குத் துணையாக நின்று போரிட்டன. அதைப்போலக் கிழக்கு பீஹார், வங்காளம், இமாலயம், பஞ்சாப் பகுதிகள் கௌரவருக்குத் துணை நின்றன. இருதரப்பிலும், போரில் கலந்து கொண்டவர்களில் பெரும்பாலானவர் அழிந்தனர். திருதராஷ்டிரனும் பாண்டவர்களும் மட்டிலுமே எஞ்சி நின்றனர். மிகச் சொற்பமாக எஞ்சியிருந்தவர்கள் யாவருங் கூடிச் சமரசமானதொரு முடிவுக்கு வந்தனர். பாண்டவரின் தலைவனை யுதிஷ்டிரன் கங்கைக் கரையிலுள்ள அஸ்தினபுரத்தின் தலைவனாக ஏற்றுக்கொள்ளப் பட்டான். இறுதியில், பாண்டுவின் ஐந்து புதல்வர்களும் அவர்களுடைய பிரிய மனைவியான திரௌபதியுடனும், நன்றி மிக்க நாயொன்றுடனும், தங்கள் அரண்மனையைத் துறந்து, மேருமலையை நோக்கிப் பிரயாணம் செய்து இந்திரனது சுவர்க்க பூமியில் அனுமதிக்கப் பட்டனர்.

திருப்தியற்ற முறையில் நாம் கூறியிருக்கும் கதையைக் கொண்ட இவ்விலக்கியம் ஆதியில் 8,800 சுலோகங்களைக் கொண்டிருந்து, பிற்காலங்களில் 20,000 சுலோகங்களடங்கியதாக இருந்தது. இக்காவியத்தை இசைப்பதையே தொழிலாகக் கொண்டவர்களும், வெவ்வேறு காலங்களில் வாழ்ந்த கவிகளும், பிராமண பதிப்பாசிரியர்களும், இக்காவியத்தைக் கையாண்டு பன்முறை சீர்திருத்தியும் மாற்றியும் வெளியிட்டிருக்க வேண்டுமென்பது, எவ்வித ஐயத்திற்கும் இடமின்றித் தெளிவாக விளங்குகிறது. இடைக்காலத்திலெழுந்த 'சந்த்-ரெய்ஸா' என்ற இந்தி மொழியிலுள்ள வீர காவியம், இதைப் போலவே, பலரால் பன்முறை கையாளப்பட்டு 5,000த்திலிருந்து 125,000 செய்யுள்களைக் கொண்டதாக வளர்ந்து விட்டது. ஆதியில் எழுந்த இவ்விலக்கியத்தின் பதிப்பு இன்றும் கிடைப்பதாகக் கூறப்படுகிறது.

### பகவத்-கீதை முதலியன

பகவத்-கீதை என்னும் இலக்கியப் பகுதியை ஆங்கிலத்தில் 'பிரபுவின் இசை' என்றும், அல்லது எட்வின் ஆர்னல்டு என்பவரின் மொழியில் 'தெய்விக இசை' என்றும் மொழி பெயர்த்துக்

கூறலாம். ஆத்மிகக் கருத்துகள் நிறைந்த அவ்விலக்கியம், பதினெட்டு அதிகாரங்கள் அல்லது வாசகப் பகுதிகளைக் கொண்டது. மகாபாரத காவியத்தின் ஆறாவது பகுதியில் அது புகுத்தப்பெற்றுள்ளது. கவர்ச்சி மிக்க நள—தமயந்தியின் கதை காளிதாச மகாகவியின் நாடகத்திற்கு வித்தாக விளங்கும் சகுந்தலையின் கதை, இந்துக்களுக்குக் கற்பின் இலக்கணமாக விளங்கும் சாவித்திரியின் கதை—இவளை இந்துக்களின் 'ஆல்செஸ்டிஸ்'[1] எனக் குறிக்கலாம்—இவை போன்ற சில கதைகளும், இடைச்செருகல்களான சில செய்யுள்களும், இக்காவியத்திலடங்கியுள்ளன.

**வீரகாவியங்கள் உருப்பெற்ற காலம்**

மகாபாரதத்திலும் இராமாயணத்திலும் அடங்கியுள்ள தனித்தனிக் கதைகள் மிகப் பழமையானவையாக இருக்கின்றன. இருகாவியங்களையும், தற்போதுள்ள நிலையில், வேதச் செய்யுள்களுக்குப் பல காலத்திற்குப் பின் எழுந்தவையாகவும், 'பிராமணங்கள்' யாவற்றிற்கும், காலத்தால் பிற்பட்டவையாகவுமே கருதவேண்டும். 'ஹாப்கின்ஸ்' என்பவர் விரிவாக வலியுறுத்தியிருப்பது போல ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடையவை. அவைகளிலடங்கிய செய்யுள்களிலும் மிக நெருங்கிய ஒற்றுமைகள் காணப்படுகின்றன. சம்ஸ்கிருத மொழி வரலாற்றில் உள்ள, ஒரே கால வரையறையிலேயே இருகாவியங்களிலும் கையாளப்பட்டிருக்கின்ற மொழி வகை எழுந்திருக்க வேண்டும். தற்போது நமக்குக் கிடைக்கும் மகாபாரத காவியத்தின் பெரும் பகுதி கி.பி. 200ஆம் ஆண்டிலேயே உருவாகியிருக்க வேண்டும். ஆனால், காவிய முழுவதும் எந்த ஒரு சகாப்தத்தைச் சேர்ந்ததென உறுதியாகக் கூற இயலாது. வால்மீகி இயற்றியுள்ள ஆதி காவியம், அதாவது II—VI வரையுள்ள இராமாயணப் பகுதிகள், மகாபாரத காவியத்தின் மூலக்கருத்து உருப்பெற்று எழுவதற்கு முன்னரே உருப்பெற்றிருக்க வேண்டுமெனப் பேராசிரியர் மாக்டொனல் நம்புகிறார்.

**இராமாயணம் வரலாற்றுச் சார்புள்ளதன்று**

இந்துக்களில் பெரும்பாலனவர் காவியத்தில் கூறப்பட்டிருப்பவைகளை வரலாற்றுண்மைகளாகவே நம்பிவிடுகின்றனர். கிறித்துவின் சீடர்கள் எடுத்துரைக்கும் செய்திகளைப் பற்றிய நுணுக்கமான ஆராய்ச்சிக் குறிப்புகளைக் கல்வியறிவற்ற கிறிஸ்த

1 இவள் கிரேக்கப் புராணக் கதையில் வரும் பெண்மணி; நாயகனுக்காகத் தன்னுயிரைக் கொடுத்தவள்.

வன் ஒருவன் எவ்வாறு அதிகமாகப் பொருட்படுத்துவதில்லையோ அதைப் போலவே குறுகிய நோக்கமுடைய இராமாயண விமர்சனங்களை இந்துக்கள் செவிமடுப்பதில்லை.[1] ஆனால் ஆராய்ச்சியாளர்கள் கவிஞரின் கதைகளை வேறு கண்ணோடு காண்பர். பேராசிரியர்களான யாகபி, மாக்டொனல் போன்றவர்கள், இராமாயணத்தை வரலாற்றுச் சார்புள்ளதாகவோ அல்லது உட்கருத்தைக் கொண்டதோர் விளக்கக் கதையாகவோ கருதுவதில்லை. அவர்கள் அதைப் புராணக் கருத்தையுடைய செய்யுள் இலக்கியமாகக் கருதுகின்றனர். இக்கருத்தினடிப்படையில் நோக்கும் போது 'சீதையை' (உழுசால்)ப் புவியன்னையாகவும், இராமனை இந்திரனுக்கு நேராகவும் கருத இட மேற்படுகிறது. இத்தகைய கற்பனைகளை ஏற்றுக்கொள்ளவும் அல்லது தள்ளிவிடவும் கூடும்.* என் அறிவிற்கு எட்டிய வரையில் 'அயோத்தியைப் பற்றியோ அல்லது தீபகற்பத்தைப் பற்றியோ உள்ள உண்மையான வரலாற்றுச் செய்திகளை, அதிகமாக இராமாயணத்தில் காண இயலவில்லை. அயோத்தியைத் தலைநகராகக் கொண்ட கோசல நாட்டு மரபுகளை ஒருவாறு நினைவில் கொண்டு இயற்றப் பெற்ற கற்பனைக் காவியமாகவே அது தோன்றுகிறது. 'புராணங்களில்' சூரியகுல அரசர்களின் நீண்ட வமிசாவளி அட்டவணையொன்று காணப்படுகிறது. தசரதன், இராமன் என இராமாயணத்தில் கூறப்பட்டிருக்கும் கோசல மன்னர்களின் பெயர்கள் இப் புராணச் செய்தியை ஒட்டியனவல்ல எனக் கொள்ளலாம். புகழ் பெற்றதொரு ஆராய்ச்சியாளர், இவ்வமிசாவளிகளைத் தெரிந்து கொள்வதற்கு அரும்பாடுபட்டு உழைத்தும், கணிசமான பலன் கிடைக்கவில்லை. வீரகாவியச் செய்திகளில் கற்பனையில் பிறந்த கட்டுகதைகளுடனும், உண்மை வரலாறும் நெருக்கமாகப் பின்னி கிடப்பதால், வரலாற்றுண்மைகளை மட்டிலும் பிரித்தெடுப்பதென்பது இயலாததாக உள்ளது. இராமனது சாதனைகளுக்குப் பல யூகங்களின் அடிப்படையில் தோராயமாக ஒரு காலவரையறையைக் குறிக்க முயல்வது என் மனத்திற்குத் திருப்தியளிக்கவில்லை.

### பெரும் போர்

கி.மு. 3102 ஆம் ஆண்டு, யுதிஷ்டிர சகாப்தத்திலேயே மகாபாரதப் போர் நடைபெற்றதென்ற பரம்பரைச் செய்தி வேருன்

1 ஐரோப்பியர் எந்தக் கதைகளைப் 'புராணக் கதைகள்' எனக் குறிக்கின்றனரோ, அவைகளை வரலாற்றுண்மைகளாகவே இந்துக்கள் கருதி வருகின்றனர். (கெட்கர்—வால்யூம் ii, பக். 477)

* கருத்துகள் மூலநூலைச் சார்ந்தவை.

றியுள்ளது. நுணுக்கமான ஆராய்ச்சி விமரிசனத்தின் முன் இச் செய்தி பயனற்றுவிடும். 'ட்ராய்' நகர முற்றுகையைப் பற்றிய நினைவுகொண்டு, 'இலியட்' என்ற நூலின் ஆசிரியர் கற்பனை செய்தது போலவே, உண்மையில் நிகழ்ந்ததொரு போரின் அடிப்படையிலேயே பாரதப் போரையும் மூல ஆசிரியர் கற்பனை செய்திருக்க வேண்டுமெனப் பெரும்பாலான புலவர்கள் கருதுகின்றனர். கதைப் போக்கில் நன்னெறிகளைப் புகுத்தியும், தங்கள் மனத்திற்குப் பட்டதை மாற்றியமைத்தும் அவ்வப்போது பதிப்பாசிரியர்கள் பல மாறுதல்களைச் செய்துள்ளனர். இம்மாறுதல்கள் காலப் போக்கிலேயே ஏற்பட்டவையாதலின், தொடர்ச்சியானதொரு மூலக்கருத்து நமக்குக் கிடைப்பதில்லை. பிரதேசங்களில் வழங்கி வந்த கர்ண பரம்பரைச் செய்திகள் கௌரவரின் தலைநகரமான கங்கைக் கரையிலுள்ள அஸ்தினபுரத்தையும், பாண்டவரால் நிர்மாணிக்கப்பெற்ற யமுனைக் கரையிலுள்ள புதிய நகரமான இந்திரப்பிரஸ்தத்தையும் நினைவுறுத்தி வந்தன. மீரட் மாவட்டத்திலுள்ள கங்கைக் கரையிலமைந்திருக்கும் அஸ்தினபுரம் என்ற பெயர் கொண்ட சிற்றூர் தற்போதுள்ள இடத்தில் பண்டைத் தலைநகரமான அஸ்தினபுரம் இருந்திருக்க வேண்டுமென நம்பப்படுகிறது. அண்மையில் அங்கு மேற்கொள்ளப்பெற்ற தொல் பொருளாராய்ச்சியின் விளைவாக, புத்தர் காலத்திற்கு முன்பாகவே அங்கொரு பெரு நகரம் இருந்திருக்கவேண்டுமென்றும் தெரியவருகிறது. ஷாஜஹான் ஆண்டு வந்த டெல்லிக்கும், ஹுமாயூனின் கல்லறைக்கும் இடைப்பட்டு யமுனை ஆற்றின் கரையில் 'புராணகுவிலா' என்னும் வேலியிடப்பெற்ற பகுதியில் பண்டைய இந்திரப்பிரஸ்த நகரின் ஒரு பகுதி இருந்ததென அங்குச் செல்லும் ஒவ்வொரு யாத்திரிகனும் அறிவான். 'நிகம் போத் காட்' என்ற ஸ்நானக் கட்டமும், அதற்கும் வடக்கில் சாலி மார்க்கிற்கு அருகிலுள்ள 'நீலிசத்ரி' கோவிலும், பண்டைய நகரத்தினுள் அடங்கியிருந்தது என நம்பப்படுகிறது. தற்கால நகரத்தின் மையத்தில் வடகிழக்குக் கோடியிலுள்ள 'தரிபா' என்னும் தெரு பண்டைய நகரத்தின் வடக்கெல்லையாக இருந்திருக்கக் கூடும்.[1] ஊகித்தறியப்படும் இவ்வெல்லைக்கோட்டை உறுதிப்படுத்துவதற்குரிய சான்று எதுவும் இதுவரை கண்டெடுக்கப்படவில்லை. இருதலைநகரங்களின் இருப்பிடங்களையும் உறுதிப்படுத்திக் கூறும் கர்ண பரம்பரைச் செய்தியை நாம் ஏற்கலாம். இந்திரப்பிரஸ்தம், அஸ்தினபுரம் ஆகிய இரு நகரங்களின் தலைவர்களுக்கிடையில். வட இந்தியாவிலிருந்த பல்வேறு குடியினரின்

1 கார்ஸ்டீபன்—'டெல்லியில் புதைபொருளாராய்ச்சியும், நினைவுச் சின்னங்களும்'—ஆசிரியரும் - கல்கத்தா 1876 பக். 5.

துணையோடு, பிரசித்தி பெற்றதோர் உள்நாட்டுப் போர் பல் லாண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்திருக்கக் கூடும் என்ற செய்தி யையும் நாம் நம்பலாம். மேலும் அதிகமாக நம்புவதற்கு இட மில்லை. பாண்டவர்கள் இக்கூட்டுறவில் அடங்காத புதிய மரபி னர் என்றும், அவர்களுக்கும் கௌரவருக்கு மிடையில் உறவு முறை எதுவுமில்லையென்றும், ஹாப்கின்ஸ் கூறுகின்ற மேலும் பல கருத்துகள் மிகப் புரட்சிகரமானவை. அவை கதைப் போக்கின் கருவையே அழித்து விடுகின்றன. என் அறிவிற்கு எட்டுகின்ற வரையில், பாண்டவர் ஆரியரல்லாத மலைச்சாதியினராக இருக் கவும் கூடும். அவ்வாறு கொள்வோமாயின் கவிஞர்களும், பதிப் பாசிரியர்களும், அவரது சாதனைகளை மிகவும் திரித்துக் கூறி வர லாற்றுண்மை எதுவும் நில்க்காத வகை தேடி விட்டனர்.

தீபகற்பத்தின் தென் கோடியிலுள்ள பாண்டியருட்பட இந்திய நாட்டின் கண்ணுள்ள அரசர்கள் யாவரும் போரில்பங்கு கொண்டனர் என்பது முற்றிலும் நம்பத்தகாததொன்றாக இருக் கிறது.[1] மரபையொட்டி கி.மு. 3000 ஆண்டில் போர் நடை பெற்றதென்று கொண்டாலும், அல்லது சந்தர்ப்பங்களையொட்டி இரண்டாயிரமாண்டுகளுக்குப் பிறகு நடைபெற்றது என்று ஏற் றுக்கொண்டாலும், டெல்லி எனத் தற்போது வழங்கிவரும் ஒரு நகரத்தின் அண்மையில் வசித்து வந்த கௌரவர்—பாண்டவர் என்ற இரு அரச குடும்பத்தினரிடையில் நடைபெற்றதொரு சண் டையில், தென் கோடியில் உள்ள பாண்டியர் அல்லது அஸ்ஸாம் பகுதியின் அரசன் (ப்ரக்ஜ்யோதிஷன்) அக்கறை கொண்டிருந் தான் என்பதை ஒருகாலும் ஏற்பதற்கில்லை. எனவே, காவியத் தின் மூலக் கருத்து நம்பத் தகாததாகவும், வரலாற்றிற்குப் புறம் பானதாகவுமிருக்கிறது. பாரதப் போர் நிகழ்ந்த காலத்திற்கு முன்னும் பின்னும் ஆட்சி புரிந்து வந்த அரச குலவமிசாவளிகள், புராணங்களில் விரிவாகவும் வீரகாவியங்களில் சுருக்கமாகவும் கூறப்பட்டுள்ளன. அவை யாவும் கற்பனைகளே எனக் கூறிவிட முடியாது. பட்டியல்கள் வரிசைக் கிரமமாகச் சற்றேறக்குறைய உண்மையான செய்திகளையே கூறுகின்றன எனக்கொண்டாலும் மற்றும் அவை அரச குலத்தவர்களிடையே நிலவிய உறவு முறை களையும், சண்டை சச்சரவுகளையும் எடுத்தியம்புகின்றன என

1 'இலியட்' என்னும் கவிதையில் இடைச்செருகலாக விளங்கும் 'கப்பல்களின் பட்டியல்' என்ற பகுதியுடன் ஒப்புநோக்குக. ட்ரோஜன் போர், மஹாகவி ஹோமரால் மிக்க புகழ்பெற்றபின், அப்போருடன் உறவு கொண்டாட வேண்டுமெனக் கிரேக்க நாடு முழுவதும் விரும்பி யது போல, இந்திய நாடு முழுவதும் பாரதப்போரில் பங்குபெற விரும்பியது.

ஏற்றுக் கொண்டாலும் அறிவு செறிந்த வரலாற்றுச் செய்திகளிடமிருந்து நாம் தொலை தூரத்திலிருந்து வருகிறோம் என்பதே உண்மையாக விளங்குகிறது. கிடைக்கும் குறிப்புகளின் உதவியோடு, தெளிவும் தொடர்ச்சியுமுள்ள வரலாற்றை உருவாக்குவதற்குப் பல ஊகங்களும் அனுமானங்களும் தேவைப்படுகின்றன. இதனால், நற்பயனளிக்கவல்ல விளைவொன்றும் ஏற்பட்டு விடாது. இராமாயணம், மகாபாரதம் ஆகிய வீர காவியங்களிலிருந்து, அரசியல் வரலாறு என்ற பெயரில் அழைக்கக் கூடிய எதையும் என்னால் எடுத்தியம்ப இயலாது என்பதை ஒப்புக்கொள்கிறேன்.

**சமுதாய நிலை**

இருவீர காவியங்களும் ஒரே வகையான, சமுதாய வாழ்க்கை முறையையே வர்ணிக்கின்றன எனப் பொதுவாகக் கொள்ளலாம். பசுவதை, நரபலி போன்ற பண்டைய பழக்கவழக்கங்கள் சில மகாபாரத முற் பகுதிகள் சிலவற்றில் கூறப்பட்டுள்ளன; காவியத்தின் பிற்பகுதிகளில் அவையாவும் அருவருக்கத் தக்கவையென்ற கருத்து ஏற்றம் பெற்று விளங்குகிறது.[1] இது நாம் ஆதியில் குறிப்பிட்ட பொது நோக்கத்திற்குச் சற்றுப் புறம்பானதாக விளங்கும். ஆரியரிடம் வழக்கிலில்லாத பிற கூறுகளும் வர்ணிக்கப்பட்டுள்ளன. குறிப்பாகத் திரௌபதி என்ற ஒரு பெண், பாண்டவர் ஐவருக்கும் பத்தினியாக இருந்த செய்தி, தற்போது ஹிமாலயப் பகுதிகளிலும் திபேத்திலுமுள்ள மக்களின் பழக்க வழக்கங்களை நினைவூட்டுகிறது. பாண்டவர் என்ற சொல்லுக்கு 'வெளுப்பேறிய முகம்' என்ற பொருளுண்டு. பாண்டுவின் பிள்ளைகள், ஒரு பெண்ணைப் பலர் மணந்து கொள்ளும் வழக்கமுடைய, ஹிமாலயப் பகுதியைச் சார்ந்த மஞ்சள் நிறமுடைய கூட்டத்தினரின் பிரதிநிதிகளாக இருக்கலாம் என்ற ஊகமும் முறையான தொன்றே எனத் தெரிகிறது. இந்தக் கருத்தை ஏற்கும் போது, பாண்டவருக்கும் கௌரவருக்குமிடையுள்ள தொடர்பும், அறநெறி பலவற்றைப் புகுத்திப் பழங்கதைகளையும் ஆரிய இலக்கிய எல்லைக் கோட்டினுள் அடக்க முயன்ற பிராமணப் பதிப்பாசிரியர்களின் கற்பனையே (இக் கருத்தை உறுதிப்படுத்தும் வேறு சான்றுகளும் உண்டு) என்ற மற்றுமொரு ஊகத்திற்கும் இடமளிக்கப்படுகிறது. அனுமானத்திற்கு இவ்விவாதம் அதிக இடமளிப்பதாக இருப்பதால், இது இம்மட்டோடு நிறுத்தப்படுகிறது.

1 விவரங்களுக்கும் மற்றும் குறிப்புகளுக்கும், வித்யா, பக். 118, ஹாப்கின்ஸ், பக். 378 ஆகியவைகளைப் பார்க்கவும்.

வீரகாவியங்கள் தற்போதுள்ள நிலையை, கி.பி. 200 ஆம் ஆண்டிலோ அல்லது வேறு காலத்திலோ அடைந்தன என்று கொண்டாலும், அவை அவ்வாறு மறு உருப்பெற்ற காலத்தில், அகிம்சை அல்லது உயிரினங்களுக்குத் தீங்கிழையாமை என்ற கொள்கை வலுப்பெற்று விளங்கியது என்பது உண்மை என விளங்கும். இக்கொள்கை செய்யுள்கள் பலவற்றில் வலியுறுத்தப் பெற்றுள்ளது. நாம் முன்பு குறித்தது போலப் பண்டைக் காலப் பழக்க வழக்கங்களின் நினைவும் முற்றிலும் துறக்கப்படவில்லை.

வேதகாலங்களில் நிலவிய இயற்கைவழிபாடு வழக்கொழிந்து பிரம்மன், விஷ்ணு, சிவன், ஆகிய கடவுளரின் வழிபாடு ஏற்றம் பெறுகிறது. கணேசன், பார்வதி போன்று, வேதங்களில் குறிக்கப் பெறாத புதிய கடவுளரும் எழுகின்றனர். இந்திரன் ஒருவன் நீங்கலாக, வேதக் கடவுளர் பலர் நிலைதாழ்ந்து காணப்படுகின்றனர். சுவர்க்கத்தின் ஆட்சியாளனாகிய இந்திரன் உயர்ந்து நின்றான்—சிறந்த இந்திர பதவியை அடைவதற்குப் போர் வீரர்கள் ஆர்வமிக்கவராயிருந்தனர். ஜீவன், கூடு விட்டுக் கூடு மாறுகிறதென்று சாதாரணமாகக் கூறப்படும் 'மறு பிறவி' என்னும் விதிமுறை, பொதுவில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. விஷ்ணுவின் அவதாரங்களிலும் ஒரு நம்பிக்கை ஏற்படுத்தப்பட்டது. 'பகவத் கீதை' என்னும் பகுதி, பரம் பொருளைத் தேரோட்டியின் உடையணிந்த கிருஷ்ணனைச் சித்திரிக்கிறது. இந்நூல் உருப்பெற்றெழுந்த காலத்தை நிர்ணயிக்கக் கூடவில்லை. நான்கு வருணங்களையும் சேர்ந்த மானிடர், அவரவருக்குரிய கடமைகளை எவ்வாறு செய்து முடிக்க வேண்டும் என்னும் தருமத்தைச் 'சிறந்த மொழி வாயிலாக ஐயத்திற்கிடமின்றி' எடுத்துக் கூறுகிறது. வேத காலத்தில் நாம் கண்ட இனவாழ்க்கை சிறுகச் சிறுக மறைந்து விட்டது. பரந்த நிலப் பகுதிகளை உள்ளடக்கிய பேரரசுகள் எழுகின்றன. அயோத்தியிலுள்ள அரசவை வாழ்வு இராமாயணத்தில் வருணிக்கப்பட்டிருப்பதைப் போலவே, தற்காலங்களிலுள்ள, பழைய மரபையொட்டி இந்து இராச்சியங்களின் அரசவை வாழ்வு அமைந்திருக்கிறது என்பது கவனத்திற்குரியது. சாதி முறை ஏற்கெனவே வழக்கிலிருந்தது. நடைமுறையிலிருந்து வரும் இந்து சமயச் சூழ்நிலையே, வீரகாவியமெழுந்த காலங்களிலும் இருந்து வந்ததென்பதை உறுதியாக எடுத்துக் கூறலாம். மகாபாரத காவியத்தில் நாம் காணும் ஒரு சில குறிப்புகள் நீங்கலாகப் பொதுவில் இந்நிலையே நீடித்து வந்ததெனக் கூறலாம். அளவில் சிறியவையெனினும் ஏராளமான நாடுகள் குறிப்பிடப்படுகின்றன. சிறந்த பேரரசு ஒன்று இருந்த

தென்பதற்கான குறிப்பு எதுவும் எங்கும் காணப்படவில்லை. வீர காவியங்களில் சித்திரிக்கப்பட்டிருக்கும் அரசியல் சூழ்நிலையும், சமுதாய வாழ்க்கை முறையும், குறிப்பிட்ட எந்த ஒரு காலவரையையும் சார்ந்ததெனக் கூற இயலாது. இலக்கியப் படைப்புகளாகக் கருதும் போது, இரு காவியங்களும் கி. மு. 400-லிருந்து கி. பி. 200 ஆண்டு வரையுள்ள இடைவெளியில் எழுந்திருக்கக் கூடும். 'இராமாயணம்' என்ற ஆதிகாவியத்தை, வால்மீகி என்பவர் கி. மு. ஆறுவது நூற்றுண்டின் முற்பகுதியில் உருவாக்கியிருக்கவும் கூடும். சற்றேறக் குறைய, தற்போது கிடைக்கும் மகாபாரதப் பதிப்புப் போன்ற ஆதிகாவியத்தின் மறுபதிப்பு, அதே நூற்றுண்டின் பிற்பகுதியில் எழுந்திருக்கக் கூடும். காவியச் செய்யுள்கள் எழுந்த காலத்தை எவ்வகையிலேனும் கண்டறிந்தாலும், இராமன், அருச்சுனன் போன்ற காவிய நாயகர்களைப் பற்றிய வரலாற்றுண்மைகள் எவையும் புலனகப் போவதில்லை, எங்கோ, பழங்காலத்தில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் செய்திகளின் நினைவை ஒருவாறு கொண்டு கற்பனை செய்து இவர்களைக் கவி உருவாக்கியிருக்க வேண்டும். அறிவுக்கெட்டிய எந்த ஒரு காலத்திலும் இச் செய்திகள் உண்மையில் நடைபெற்றவை என ஒரு போதும் நாம் நம்புவதற்கில்லை. சுருங்கக் கூறுமளவில் என் அறிவுக்கெட்டிய வரையில், இந்திய வீர காவிய நாயகர்களை, ஆங்கில நாட்டுக் கட்டுக்கதைகளில் வரும் 'வட்டமேசை வீரர்களுக்கு' ஒப்பிட்டுக் கூறலாம். பிரிட்டனின் ஆதி வரலாற்றை. 'மார்ட்-டி-ஆர்தர்' அல்லது தற்காலத்தில் வழங்கி வரும் 'அரச, சித்திர வரலாறு' போன்ற நூல்களின் உதவியுடன் தொகுக்க எவ்வாறு இயலாதோ, அது போன்று இராமாயணம், மகாபாரதம் ஆகிய காவியங்களிலிருந்து, அக்கால அரசியல்,சமுதாய வரலாறுகளைப் பிரித்து வடிக்க முயலுவது வீண் முயற்சியேயாகும் என* நான் கருதுகிறேன்.

### புராணங்கள்

'புராணங்கள்' என்ற பெயரில் நாம் குறித்துள்ள நூல்களைப் பற்றிய விளக்கம் சிறிது தேவைப்படுகிறது. சாதாரணமாக வட இந்தியாவில் பதினெட்டு வகைப் புராணங்கள் வழக்கிலிருந்து வருகின்றன. தென் பகுதியில் வழக்கிலிருந்து வரும் மேலும் பல புராணங்களுடன் ஐரோப்பியப் புலவர்களுக்குத் தொடர்பில்லை. 'விஷ்ணு புராணம்', புராண இலக்கியங்களுக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக கூறப்படும். ஆதி சிருஷ்டி (படைப்பு),

* கருத்துகள் மூலநூலைச் சார்ந்தவை.
'மனுவின் நீதிகள்'—எஸ். பி. இ. வால்யூம் XXV, பக். xci.

இரண்டாம் சிருஷ்டி (படைப்பு), கடவுளர் மற்றும் கணங்களின் வமிசாவளி, மனுக்களின் (தர்ம நூல் வல்லுநர்) ஆட்சி முறைகள், பண்டைய அரச குலத்தினரின் வரலாறு, ஆகிய ஐவகை அறிவுத் துறைகளைத் தாங்கிப் புராணம் விளங்கும். புராணங்களின் விரிவுரைகள் ஏராளமாக உள்ளன. அவற்றில் கட்டுக் கதைகளும், பிற விஷயங்களும் மலிந்து காணப்படும். அவைகளைக் 'கட்டுக் கதைகள், தத்துவம், வரலாறு, புனித நீதி ஆகியவையடங்கிய நூலென்றும், குறிப்பிட்டதொரு வகுப்பினர் அதை இயற்றின ரென்றும், வர்ணாசிரம முறைச் சமுதாயத்திலுள்ள எழுத்தறிவற்ற சூத்திரருள் உயர்ந்தோருக்குத் தற்போது பயன்படுத்தப் படுவதைப் போலப் போதிப்பதற்கென, அவை எழுந்தவை என்றும் 'பூஹ்லர்' என்பவர் அழகாகச் சித்திரித்துள்ளார். 'புராணம்' என்ற வடமொழிச் சொல்லுக்குப் 'பழமை' என்பதே பொருள். எனவே, இவ்விலக்கியத்தில் கூறப்பட்டிருப்பவை, மிகப் பழங் காலத்தைச் சார்ந்தவையாகவும், ஒவ்வொரு பகுதியும் வெவ் வேறு கால வரையறையில் எழுந்ததாகவும் தெரிய வருகிறது. இவைகளுள் பழமை வாய்ந்தவைகளில் ஒன்றாகக் காணப்படும் 'வாயு புராணம்' கி. பி. நான்காவது நூற்றாண்டில் இறுதியாக பதிப்பிக்கப் பெற்றிருக்க வேண்டும். மகாபாரத காவியத்தின் தொடர்ச்சியாக 'ஹரிவம்சம்' என்ற பகுதியொன்றுண்டு என நாம் முன்னர்க் குறித்தோம். அதற்கும், இவ்வாயு புராணத்திற்கும் நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது. 'புராணங்களில்' கூறப்பட்டுள்ள வரலாற்றுக்கு முந்திய கால அரச குலங்களின் வமிசாவளிகள், அத்துணைப் பயனுள்ளவைகளாகத் தெரியவில்லை. கி.மு. 600ஆம் ஆண்டு முதல் தொடங்கும் கலியுகம் என்ற வரலாற்றுக் காலத்தைக் குறித்த வமிசாவளிகள் மிகப் பயனுள்ளவையாக விளங்குகின்றன. மிகக் கடின முயற்சியாகிய ஆதி கால இந்திய அரசியல் வரலாற்றைத் தொகுத்துக் கூறுவதற்கு இவை மிகவும் உதவுகின்றன. வெவ்வேறு நிலையில், ஆதிபரம் பொருளைத் தொழுவதற்கென்றே சற்றேறக் குறைய ஒவ்வொரு புராணமும் உருபெற்றிருக்கின்றது.

**சாதி**

இந்திய நாட்டிற்கே உரியதாக நூதன சாதி முறை விளங்கி வருகிறது. இந்து சமயத்தின் இன்றியமையாதகோட்பாடாகவும், இந்தியச் சமுதாய வாழ்க்கை, நடைமுறைகள், நன்னெறிகள், சிந்தனை ஆகிய யாவற்றையும் கவருவதாகவும் இந்நூதன முறை காணப்படுகிறது. இந்து சமயத்தைச் சார்ந்த மனித இனத்தைச் சுமார் 3000 பகுதிகளாகத் தலைமுறை தலைமுறையாக இது பிரித்து வருகிறது. இப்பகுதிகள் யாவையும் சடங்குகளினால் பரி

சுத்தமாக்குவது என்ற ஒரு கயிற்றால் இணைத்தும், பல்வேறு சட்ட திட்டங்களால், புறத்தில் பிரித்தும் வைக்கிறது. சாதிப் பிரிவினை' என்ற இந்நூதன முறை மிக நுணுக்கமானது. அதை விளக்குவதும் மிகக் கடினம். இது இயங்கிவரும் முறைகளைப் பற்றித் தற்போதுள்ள கருத்துகள் மிகத் தெளிவாகவும் ஐயத்திற்கிடமின்றிச் சுருக்கமாகவும் உள்ளன.

**சாதி முறை – விளக்கம்**

புனிதமான சில நியமங்களைக் கடைப்பிடிப்பதற்காக, அதிலும் குறிப்பாக உணவு, திருமணம் ஆகியவகைகளில் விசித்திரமான சில விதிமுறைகளைக் கையாண்டு குடும்பங்கள் பல ஒன்று சேர்ந்த கூட்டத்திற்குச் 'சாதி' என்று பெயர். பிறசாதிகளிலிருந்து வேலியிட்டுக் காத்துக்கொள்ளவும் ஒரு சாதியினரால் கடைபிடிக்கப்படும் விதிமுறைகள் துணை செய்கின்றன. ஒவ்வொரு சாதிக்கும் அதற்கென்ற தனி விதி முறைகள் உண்டு. நெடுங்காலமாகவே வேரூன்றி விட்ட ஒரு சாதியில் இடம் பெறுவதற்குப் பிறப்பினாலன்றி வேறு வகையில் இயலாது. ஒரு சாதியை விட்டு, வேறு சாதிக்கு மாறுவது ஒருகாலத்தில் அனுமதிக்கப்பட்டிருந்த போதிலும் தற்போது இயலாது. எல்லைப் புறங்களிலுள்ள மணிப்பூர் போன்ற இடங்களில் சாதிமாற்றம் ஒருவாறு அனுமதிக்கப்படுகிறது. ஒரு சாதியாக இணைந்து விட்ட பல்வேறு குடும்பங்கள் ஒரே முன்னோர்களைச் சார்ந்தவர்களாக இருக்க வேண்டுவதில்லை. உண்மையில், அவர்கள் ஒரே இனத்தைச் சார்ந்தவர்களாகவும் இருக்க வேண்டுவதில்லை. இரத்த பாசத்தைக்குறிக்கும் இனத்திற்கும், 'சாதிக்கும்' எவ்விதத் தொடர்பும் இல்லை. தென்னிந்தியாவில் நிலை எவ்வாறு இருப்பினும், வடஇந்தியாவில் இந்நிலையே நிலவிவருகின்றதென உறுதியாகக் கூறலாம். குறிப்பிட்டதோர் சாதியைச்சார்ந்த நபர்கள், ஒரே வகையான தொழில்களையோ அல்லது தொழிலையோ கைக்கொண்டவர்களாக இருக்க வேண்டுமென்பது மில்லை. ஒரு சாதியைச்சார்ந்தவர்கள், தனிப்பட்டதோர் சமயக்கொள்கையையோ அல்லது தத்துவத்தையோ ஏற்கவேண்டுமென்ற கட்டுபாடுமில்லை. சாதியினர் கடைபிடித்துவரும் ஸ்வதர்மத்தைக் கைவிடுவது அல்லது கட்டுப்பாட்டை மீறுவதால் சாதிக்கு ஒருவன் தவறு இழைத்தவனாவான். மனித இனத்தின் பொது 'தர்மங்கள்' என இந்து சமயத்தினர் ஏற்கும் நன்னெறிகளோடு ஒவ்வொரு சாதிக்கும் அதற்கென்ற தனித்த 'ஸ்வதர்மங்கள்' உண்டு. பிராமணருக்கு மரியாதை செலுத்துவது, தரத்திற்கேற்றவாறு சீவராசிகளின் புனித உயிரைக் காப்பது, குறிப்பாக, கொம்புடன் கூடிய கால்நடைகளை, அதிலும் முக்கியமாகப்

பசுவைப் பூசிப்பது ஆகியவை பொதுவான இந்து சமய தர்மங்களில் ஒரு சில வாகும். ஒவ்வொரு சாதியைச் சார்ந்தவனும் தனது தர்மங்களைக் கடைப்பிடிப்பதுடன், மற்றுமுள்ள சாதியினரையும் அவரது கோட்பாடுகளையும் மதித்து நடக்கவேண்டும். தமது சாதியினரின் பழக்க வழக்கங்களை குறிப்பாக உணவு, மணம் ஆகிய துறைகளில் தவறாது கடைப்பிடித் தொழுகுவது ஒவ்வொரு சாதியின் உறுப்பினனது தலையாய கடமையாகும்.[1] விதிகளை மீறும் உறுப்பினன், அவனது செய்கை வெளியானதும், அருவருக்கத்தக்கதும், துக்கம் விளைவிக்கக் கூடியதுமான துன்பங்களை அனுபவிக்க நேரிடும். சில சமயங்களில் அவன் சாதியிலிருந்து நீக்கப்படுவதுமுண்டு. சாதியிலிருந்து நீக்கப்படுவதால் சொல்லொணுத் துயரங்களையும் சமுதாயத்தினரின் தூற்றுதல்களையும் ஏற்க நேரிடும்.

சாதிமுறையைத் தனிப்பட்டதொரு பெயரிட்டு இந்துக்கள் அழைப்பதில்லை. அவர்களுக்கு அது இயற்கையோடு ஒட்டியதாகவே விளங்கிவருகிறது. இந்து சமய மனித இனத்தினருள், ஒரு தனிப்பட்ட சாதியைச் சார்ந்தவன் என்ற அடிப்படையிலன்றி வேறு எவ்வகையிலும் ஒரு இந்து தன்னைக் கற்பனை செய்து கொள்வதென்பது இயலாது. உலகியலில் மிகச்சிறந்த பதவிவகிப்பவனுயினும், அல்லது செல்வத்தில் சிறந்து விளங்குபவனுயினும், இந்து தர்மத்தைப் புறக்கணிப்பவன் ஒவ்வொருவனும் 'வெளியுலகத்தைச் சேர்ந்த காட்டு மிராண்டியாக' (மிலேச்சன்) மதிக்கப்படுவான். வடமொழியிலும் மற்றும் பிரதேசமொழிகளிலும் இப்பிரிவு 'சாதி', 'வகையினர்' என்ற பெயரால் வழங்கப்படுறகிது. ஆயினும் நாம் முன்பு கூறியதுபோல, ஒரு பிரிவைச் சேர்ந்த உறுப்பினர் ஒரே பரம்பரையினராக இருக்க வேண்டுவதில்லை. உண்மையில், அவ்வாற்றிருப்பவர்கள் மிகவும் சொற்பமாகவே காணப்படுவர். அவரது முன்னோர்கள் யாராயிருப்பினும் அவரது,சாதிமுறைகள் அவர்களை ஒரு தனி வகையினராகவே செய்துவிடுகின்றன.

**நான்கு வகையான மூலப்பிரிவுகளைக் குறித்த கட்டுக்கதை**

பிராமணர், க்ஷத்திரியர் அல்லது ராஜன்யர், வைசியர், சூத்திரர் என ஆதியில் நான்கு சாதிகள் இருந்ததாகக் கூறுவது பொய் என்றே தோன்றுகிறது பண்டைய இந்து சமயப்புலவர்கள் மனித இனத்தை நான்கு 'வருணங்களாக' அல்லது பிரிவுகளாக,

1 உணவு, மணம் ஆகியவைகளைப் பொறுத்தவரையில் சமுதாயத்தில் தனித்து நின்றெழுகுவது 'சாதி' எனப்படும்—பிறப்பும், சடங்குகளும் மிக முக்கியமானவைகளல்ல (சாமா. சாஸ்திரி — "சாதிமுறை உருப்பெறுதல்." பக். 13)

அவர்களது தொழிலை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தினர். அடிப்படைகளாக விளங்கிய தொழில்களாவன: (1) எண்ணும் எழுத்தும் கற்றுத்தெளிந்த சமய குரவர்களான பிராமணர் (2)போர்த்திறனும், ஆட்சித் திறனும் மிக்க க்ஷத்திரியரும், ராஜன்யரும், ஓர் வருணமாகக் கருதப்பட்டனர். இனத்தைப்பற்றியும், அவர் தம் முன்னோரைப் பற்றியும் இதில் குறிப்பிடப்படுவதில்லை. (3) உழவுத் தொழிலையும், வாணிபத்தையும் மேற்கொண்டிருந்த வைசியர் (4) தினக்கூலிக்காரரும், சாதாரண எளிமை மிகுந்தவர்களும், தன்னிலும் உயர்ந்த பிறருக்கு உழைப்பதையே தொழிலாகக் கொண்டவர்களுமடங்கிய ஒரு பிரிவு — என நான்கு வகைப்பட்டவை. இந்து தர்மத்தைக் கடைப்பிடித்து வந்த ஒவ்வொரு குடும்பமும் சாதியும், மேலே கண்ட ஒரு வருணப் பிரிவினுள் அடங்கும். அநாகரிக வாழ்க்கை முறைகளை முற்றிலும் கைவிடாத சில குடியினரும், நகரங்களைச் சுத்தம் செய்வது போன்ற ஈனத் தொழில்களைக் கடைபிடித்து வந்தவர்களும், இந்த நான்கு வருணப் பிரிவுகளுக்கும் புறம்பானவர் என்று கருதப்பட்டனர். அசுத்தமானவர் என ஒதுக்கப் பெற்ற இனத்தினரும், பிற இந்து சமயத்தினரைப் பின் பற்றித் தங்களுக்குள் சில சாதிப்பிரிவினைகளை ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். இப்பிரிவினைகளுக்கு 'இழிகுலத்தவரின் சாதி முறை' என்ற விசித்திரப் பெயரே பொருந்துவதாகிறது. 'மனுதர்ம சாத்திரம்' என்னும் நூல், ஆதியிலிருந்து நான்கு சாதிகள் இருந்தன எனக் கூறுகிறது. இத்தவறான கருத்து மிக வேரூன்றிவிட்டது. இக்கருத்தைச் சிறிது அகற்றி விட்டுத் தூய்மையான மனத்தோடு அணுகினாலன்றி சாதிமுறையின் கூறுகளை அறிந்துகொள்ள இயலாது. இத்தகைய மூலப்பிரிவினை எந்தக் காலத்திலும் எந்தஇடத்திலும் இருந்ததில்லை. நடைமுறையிலிருந்து வரும் சாதிகளை வகைப்படுத்துவதில் க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற தலைப்புகளால் எவ்விதப் பயனுமில்லை. வடஇந்தியாவைப் பொறுத்த மட்டில், நூல்களிலும், சாதியின் பெயரால், ஏற்றம் பெறவிரும்புபவர்களின் பூசல்களிலும் மட்டிலுமே வைசியர், சூத்திரர் என்ற தலைப்புகள் பயன்படுத்தப் படுகின்றன. தென்னிந்தியாவில், பிராமணரல்லாத இந்துக்கள் யாவரும் 'சூத்திரர்' என்றே அழைக்கப்படுகின்றனர். 'க்ஷத்திரியர்', 'வைசியர்' என்ற தலைப்புகளுக்குத் தென்னிந்தியாவில் அதிக உபயோகமிருப்பதாகக் கூற இயலாது.[1]

1 சென்னை மாகாணத்து 1901ஆம் ஆண்டு சென்ஸஸ் விபரப்படி பிராமணர் 3·4% சூத்திரர் 94·3: 97·7%. எஞ்சியுள்ள சிறுபகுதியில் தங்களை க்ஷத்திரியர் அல்லது வைசியர் எனக் கூறிக்கொள்ளும் ஒரு சில தெலுங்கரும் கன்னடக்காரரும் அடங்குவர் (ரிச்சர்ட்ஸ் — திராவிடப் பிரச்சனை, பக். 31)

**புருஷசூக்தச் செய்யுள்**

ரிக்வேதத்தின் இறுதிப் பதிப்பில் (X 90) புகழ் பெற்ற புருஷ சூக்தச் செய்யுளொன்று சேர்க்கப்பட்டுள்ளது. நான்கு சாதிகளையும் எடுத்துக் கூறும் ஒரே வேதச் செய்யுளாக இதைக் கருதுவோரும் உண்டு. உண்மையில் இதற்கும் சாதிக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. 'சிருஷ்டி விநோதம்' அல்லது படைப்பின் தத்துவத்தை இச் செய்யுள் சித்திரிக்க முயலுகிறது. 'புருஷம்' என்பதை வருத்தியும், வேரறுத்தும், சிருஷ்டி தொடங்குகிறதென இச் செய்யுள் வலியுறுத்த முயல்கிறது. மனிதனை ஜீவனாக அல்லது உள்ளடங்கிய சக்தியாக உருவகப்படுத்தி, அண்டத்தின் மூலகாரணமாக அது வருணிக்கிறது. அதுவே உயிரினங்களுக்கு உயிர் வழங்கும் ஆதி சக்தியாகக் கூறப்படுகிறது. வேதங்கள், குதிரைகள், கால் நடைகள், வெள்ளாடுகள், மறியாடுகள், ஆகாயத்தில் வாழும் உயிரினங்கள், வனவிலங்குகள் மற்றும் பழக்கப்பட்ட மிருகங்கள் ஆகிய யாவும், 'அப்பெருந் தியாகத்தின்' விளைவுகளேயாம். இதையடுத்து மனித இனம் சிருஷ்டிக்கப்படுவதைக் கவி சித்திரிக்கிறார். இறுதியாக, சூரியன் சந்திரன், மற்றும் கணங்களின் உற்பத்தி எடுத்துரைக்கப்படுகிறது. நான் 'கோல்ப்ருக்' என்பவரது கூற்றையே இங்கு எடுத்துரைக்கிறேன். பிற மொழிபெயர்ப்பாளர்கள், மனு, மற்றும், அவரைப் பின்பற்றுவர்களின் கருத்தை யொட்டி மூலசாதிகள் நான்கையும் மூலத்தில் குறிப்பிட்டுள்ளதாகவே கொண்டுள்ளனர். கோல்ப்ருக்கின் மொழிபெயர்ப்பில் அத்தகைய குறைபாடுகள் இல்லை.[1]

10. தியாகம் செய்த இப்பொருளை அவர்கள் எவ்வகையாகப் பங்கிட்டனர்? அவன் வாய் என்னவாயிற்று? அவன் புஜங்கள் எவை? தொடைகள் எவை? பாதங்கள் எவ்வாறு அழைக்கப்படுகின்றன?

11. 'வாய்' புரோகிதனாயிற்று (பிராமணன்); அவனது புஜங்கள் போர் வீரர்களாக மாற்றப்பட்டன (ராஜன்யா); தொடை வணிகனாக உருமாற்றப் பெற்றது (வைசியன்); அவனது பாதத்திலிருந்து சேவகன் பிறந்தான் (சூத்திரன்),

12. சந்திரன் அவனது இருதயத்திலிருந்து உருவானான்; கண்ணிலிருந்து சூரியன் உதித்தான். காற்றும், மூச்சும் காதிலிருந்து வெளிப்பட்டன. வாயினின்று அக்னி எழுந்தது.

1 கோல்ப்ருக் — பல்விதக் கட்டுரைகள். 1873 வால்யூம் i, பக். 184.

13. கொப்பூழிலிருந்து புகை போன்ற பொருள் வெளிப்பட்டது. தலையினின்று வானம் எழுந்தது; பூமி கால்களிலிருந்து எழுந்தது; ஆகாயவெளி காதிலிருந்து உண்டாயிற்று; இவ்வாறே அகிலங்களை அவன் படைத்தான்........

கருத்து மாற்றங்கள் நாம் மேற்குறித்துள்ள வாசகங்களிலிருந்து புலனாகும். மறைமுகமாகவும், கற்பனைச் செறிவுடனும், படைப்பின் விசித்திரத்தைச் செய்யுள்கள் எடுத்தியம்புகின்றன. சேவகன் அல்லது சூத்திரனும்; அதனுடன் பூமியும் 'புருஷன்' பாதத்திலிருந்து புறப்பட்டது போல, பிராமணனும், அக்னியும் அவன் வாயிலிருந்து புறப்பட்டன என்று சொல்லப்பட்டுள்ளது. சாதிக் கூட்டங்கள் இருந்தன என்பதைப் பற்றிய குறிப்பெதுவும் கொடுக்கப்படவில்லை. தொழிலை அடிப்படையாகக் கொண்டு நான்கு தலைப்புகளில் மனித இனம் முழுவதும் சுருக்கமாகவும் பரவலாகவும் வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. அதில் சற்றுக் கௌரவமான தொழில்கள் உருவகத்தில் சற்றுச் சிறந்த பகுதிகளிலிருந்து வெளியாயிற்று என்றும் கூறப்பட்டுள்ளது. சிலேடையாக உள்ள செய்யுளொன்றின் உட்கருத்தைக் கலப்பற்ற உண்மைகள் எனக் கொள்வது பொருந்தாது.

**'வருணம்', சாதி ஆகியவைகளிடையுள்ள பாகுபாடு**

இப்பொருளைக் குறித்த தவறான கருத்துகள் யாவற்றிற்கும் மனுவின் ஆதி நூலில் உள்ள 'வருணம்' என்ற சொல்லை, 'சாதி' என்று மொழிபெயர்த்திருப்பதே காரணம் எனக் கூறலாம். இத் தவறு தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளது. 'இனம்' அல்லது 'வரிசை' அல்லது இதுபோன்ற பிற சொற்களே பொருத்தமுடையன எனலாம்.

மனுதர்ம சாத்திர நூலைத் தொகுத்த பதிப்பாசியருக்கு 'சாதி', வருணம் ஆகியவற்றிற்கிடையுள்ள பொருள் வேற்றுமை நன்கு தெரியும். ஐம்பதிற்கு மேற்பட்ட வரிசைகளைப் பற்றிப் பேசும் அவர், நான்கு வருணங்களே உள்ளன என்னும் கருத்தை வலியுறுத்துவதில் அதிகக்கவனம் செலுத்தியுள்ளார். ஒரே ஒரு சந்தர்ப்பத்தில் மட்டிலும் (× 31) இரு சொற்றொடர்களையும் பிணைத்துக் குழப்பமேற்பட்டிருக்கிறது. வேறு பகுதிகளில் இத்தகைய ஐயத்திற்கே இடமில்லை; வெவ்வேறான இனங்கள் பண்டை நாட்கள் முதலே இருந்துவந்தன. செயற்கையாகத் தொழிலை அடிப்படையாகக் கொண்டு அவை நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்த போதும் அல்லது பிரிக்கப்படாது

போயினும் அவைகளுக்குள் ஒன்றோடொன்றுள்ள தொடர்பு என்றுமே மாறியதில்லை.

**நடைமுறையில் இருந்துவரும் கணக்கற்ற இனப்பிரிவுகள்**

சற்றேறக்குறைய இன்று 3000-க்கும் அதிகமான இனப்பிரிவுகள் இருக்கின்றன என நான் கூறியது கேட்கர் என்பவரது மதிப்பீட்டின் அடிப்படையிலேயே ஆகும். தொகையை 2000, 3000 அல்லது 4000 என்று கொண்டாலும் தவறில்லை. ஆயிரக் கணக்கில் இருக்கிறது என்பது மட்டிலும் உண்மை. நடைமுறையிலுள்ள இனப்பிரிவுகளின் பட்டியலை நான் தயாரிக்காது விடுவதற்குக் காரணங்கள் பல உண்டு. அவைகளை முழுவதும் எடுத்துரைப்பதென்பது சிரம சாத்தியமான வேலை. புதிய பல பிரிவுகள் அவ்வப்போது தோன்றின, தோன்றியும் வருகின்றன என்பதை மட்டிலும் கூறுவது போதுமானது. 'சாதிப்பிரிவு', இயங்கிவரும் விசித்திரமான முறைகளை நன்கு தெரிந்துகொள்வதற்கு, அதற்கென எழுந்துள்ள ஆராய்ச்சிக்கட்டுரைகளை நன்கு கற்றுத் தெளிய வேண்டும். அவைகள் யாவற்றையும் இங்கு எடுத்துரைப்பதென்பது இயலாது.

**இந்நிறுவனத்தின் தொன்மை**

சாதிமுறையின் பல கூறுகளையும் கிரேக்க ஆசிரியர்கள் கவனித்துள்ளனர். இக்கிரேக்க நூலாசிரியர் வாழ்ந்த காலங்களை நாம் நன்கறிவோம். சடங்குகளின் புனிதத்தன்மையைக் காப்பாற்றுவதற்காகக் கடின விதிகளால் சமுதாயம் தற்போதுள்ளதைப்போலப் பல பிரிவுகளாகப் பிளவுபட்டிருந்ததெனவும், அப்பிளவுகள் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தோன்றியிருக்க வேண்டும் எனவும் கொள்ளலாம். இதனால், கி. மு. 300-க்கு முன்னதாகவே இம்முறை வழக்கிலிருந்திருக்க வேண்டும் என நாமறிவோம். ரிக்வேத காலத்திலேயே இம்முறை வழக்கிலிருந்தது எனக் கூறத்தக்க சான்றுகளெதுவும் எனக்குப் புலனாகவில்லை. மிகப் பழமையான அக்காலத்திலேயே, சடங்குகளை நடத்திவைப்பதில் பிராமணருக்கு மிக முக்கிய பங்கிருந்தது. பிற்காலத்தில் தோன்றிய சாதிமுறைக்கு இது அடிகோலியது எனக் கொள்ளலாம். ரிக்வேத கால மக்களை, இந்துக்கள் என நாம் கருதவியலாது.

ஆத்மிகத்திலும் அறிவாற்றலிலும் சிறந்து விளங்கிய இந்தோ ஆரியர் காலப்போக்கில் பிராமணர் என அழைக்கப்படலாயினர். விரும்பத்தகாத திருமண உறவுகளாலும், புனித

மற்ற உணவு வகைகளை உண்பதாலும், தங்கள் சடங்குகளின் புனிதத்தன்மை குறைந்துவிடக்கூடாது என்று கருதிய பிராமணர், தங்களினத்தின் தனித்தன்மையைப் பாதுகாப்பதின் பொருட்டு, கடினமான விதிகளைக் காலப்போக்கில் இயற்றிக் கடைப்பிடிக்கலாயினர். தாங்களியற்றிய விதிகளைக் கௌரவமிக்க இந்தோ-ஆரியரே, கருத்துடன் கடைப்பிடித்தொழுகியதைக் கொண்டு, உலகில் பற்றுமிக்க பிறர் அதிசயத்தோடு, அவர்தம் அடிச்சுவடடைப் பின்பற்றவும் முற்பட்டனர். பல கட்டுப்பாடுகளைத் தாங்களாகவே தங்கள் மீது சுமத்திக் கொண்டனர். சாதாரணப் போர் வீரரும், வியாபாரிகளும் குடியானவரும், வேலையாட்களும் கருத்துடன் விரதங்களைக் கடைப்பிடிப்பதென்பதோ அல்லது பிராமணரைப்போலப் புனித விதிகளைப் போற்றுவதென்பதோ இயலாததாயிற்று என்பது தெளிவாக அறியக்கூடிய தொன்றாகும். சமுதாயப் பிரிவு ஒவ்வொன்றிற்கும், அப்பிரிவுக்குகந்தவகையில் தனித்தனியான விதிமுறைகள் காலப்போக்கில் தோன்றின. உதாரணமாக, மக்களால் செய்து முடிக்கஇயலாததும், தீமையானதென்று கருதப்படுவது மாகிய சிலவற்றை மன்னர்களால் செய்து முடிக்க இயலுமென்பதோடல்லாமல், அது அவர்களுடைய கடமை என்றும் கூறலாம். நாட்டின் ஆதிகுடிகளோடு தொடங்கிய போர்கள் முடிவடைவதற்கு நெடுங்காலம் பிடித்தது. ஆதிவாசிகளின் வாழ்க்கை முறைகள் முற்றிலும் மாறுபட்டவைகளாயிருந்தன. இதனால் பிராமணரும் அவரது அடிச்சுவட்டைப் பின்பற்றிய பிறரும் தங்கள் தங்கள் சிறப்பியல்புகளை உறுதிப்படுத்திக்கொள்வதில் மிகஆர்வம்கொள்ளலாயினர். இதனால் உணவு, மணம் ஆகியவைகளில் பல கடுமையான கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக் கொண்டு, தனித்தனியே பிரிந்து வாழ்க்கை நடத்தலாயினர். இத்தகைய கட்டுப்பாடுகள் நாளுக்கு நாள் அதிகமாயின.

**சாதிமுறையின் இயற்கையான வளர்ச்சி**

இந்திய உபகண்டத்தின் உள்நாட்டுப் பகுதிகள் இயற்கையாகவே தனிமையை உருவாக்கி ஊக்குவிப்பதால், அங்கு விசித்திரமான தனியானதோர் சமுதாயப்பண்பு வளரலாயிற்று. ரிக் வேதத்தை மட்டிலும் கற்றுணரும், வரலாற்று வாசனையற்ற மாணவன் ஒருவன், குடியேறியவர்கள் ஆதியில் சிந்துநதியின் கரையிலேயே வசிக்கத் தொடங்கியதால், அப்பகுதியே இந்து சமயத்தின் புனிதபூமி என்று இயற்கையாகக் கருதுவான். மிகப் பெரிய சிந்து நதியையும் அதன் கிளைகளையும் புகழ்ந்து போற்றுவதில் முனிவர்கள் என்றுமே சளைத்ததில்லை. ஆனால், சிந்துநதி

யின் முகத்துவாரமும், சட்லஜ் ஆற்றிற்கு அப்பாலுள்ள பஞ்சாப் பகுதியும், வெகு காலத்திற்கு முன்னரே, உள்நாட்டில் வாழ்ந்த பிராமணரால் அசுத்த பூமி எனக் கருதப்பட்டமையே மிக ஆச்சரியமாக விளங்குகிறது.[1] சனாதன இந்துக்கள் இன்றும் சிந்துநதியைக் கடப்பதற்கு விரும்ப மாட்டார்கள். அவ்வாற்றிற்கும் சட்லஜ் ஆற்றிற்கும் இடையுள்ள நிலப்பகுதி புனிதமற்றதென்றும், தருமத்தை அணுவளவும் பிசகாது கடைப்பிடிப்பவர்கள் அங்கு வசிக்கலாகாது என்ற கருத்துகள் நிலவுகின்றன. மத்திய ஆசியாவிலிருந்து கூட்டங்கூட்டமாக அன்னியமக்கள் வடமேற்கிலுள்ள நிலப்பகுதிகளில் புகுந்து வசித்து வந்ததையே இதற்குக் காரணமாகக் கொள்ளவேண்டும். இக் கூட்டத்தினர் பிராமணரை மதிக்காது தங்கள் இச்சைப்படி வாழ்ந்தனரென்று தெரியவருகிறது. இவ்விந்தியரின் ஆக்கிரமிப்பு, வடமேற்குத் திசையில் இந்தோ ஆரியர் புகுந்த வரலாற்றையே திரையிட்டு மறைத்து விட்டது. இன்றும் நடைமுறையிலுள்ள இலக்கியங்களிலோ, அல்லது கர்ணபரம்பரைச் செய்திகளிலோ, இதற்குரிய குறிப்புகளைக் காண இயலவில்லை. சிராவஸ்தி, சட்லஜ் ஆகிய ஆறுகளுக்குக் கிழக்கில், இத்தகைய இடர்ப்பாடுகளின்றித் தங்கள் விதிமுறைகளைக் கடைப்பிடித்துப் பிராமணர் சமுதாய வாழ்க்கை நடத்தி வந்தனர். அவ்வாறு தடையற்ற சமுதாய வாழ்க்கை நடத்திய அவர்கள், சாதிமுறையை உள்ளடக்கிய இந்து சமயத்தை உருவாக்கினர். சற்று உள்ளடங்கிய பகுதிகளில் எண்ணற்ற சிறு இராச்சியங்கள் தோன்றின. ஒவ்வொன்றிலும் தனித்தனியான வாழ்க்கை முறைகள் தோன்றி வளர்ந்தன. பிற பகுதிகளிலுள்ள வாழ்க்கை முறைகளுடன் அதிகத் தொடர்பின்றி இவை இருந்தன.

### அஹிம்சைக் கொள்கையும் சாதிமுறையும்

பிராணிகளின் ஜீவிய உரிமையை மதித்து நடக்கின்றபாங்கு அஹிம்சைக் கொள்கை என்ற பெயரடைந்தது. இக்கொள்கையின் விளைவாக, மக்களின் நடையுடைகளைக் கட்டுப்படுத்தும் ஏராளமான விதிகள் எழுந்தன. தோராயமாக, கி. மு. 500 ஆம் ஆண்டுமுதல் சமணரும், பௌத்தரும், கொல்லாமைக் கோட்பாட்டை மிகவும் வலியுறுத்தி வந்தனரெனினும், அதற்குப்

1 வடமேற்கு பஞ்சாபிலுள்ள தட்சசிலம், கி.மு. நான்காவது நூற்றுண்டிலேயே வேதப் பயிற்சி பெறும் முக்கிய அறிவுக்கூடமாக விளங்கியது என்று ஜாதகக் கதைகளிலிருந்தும், கிரேக்க நூலாசிரியர் வாயிலாகவும் அறிகிறோம். இம்மாறுதலுக்கு, கி.பி. முதல் இருநூற்றுண்டுகளிலும் இந்தோ-சித்தியரின் ஆட்சி நிலவியதே காரணமாயிருக்கலாம்.

பல நாட்களுக்கு முன்னதாகவே, இக்கருத்து மக்களின் சிந்தனையில் இடம் பெற்றிருக்கக் கூடும். இவ்வஹிம்சைக்கோட்பாட்டை வலியுறுத்தும் போது, சனாதன சமயவாதிகளோடு கருத்து வேற்றுமைகளும், பசுவதை, புலால் உண்ணுதல், இரத்தவெறி கொண்ட பலிகள் ஆகிய பழக்கங்களில் நம்பிக்கை கொண்டவருடன் முரண்பாடுகளும் ஏற்பட்டன. வேரூன்றி விட்ட பழக்க வழக்கங்களை வெறுத்தவர்களும், அறநெறிக்குப் புறம்பானவை என அவைகளை வன்மையாகக் கண்டித்தவர்களும், அவைகளில் நம்பிக்கை கொண்டு கடைப்பிடித்தொழுகிவந்த தமது சகோதரர்களிடமிருந்து பிரிந்து வெவ்வேறு சாதிகளாக வாழத் தொடங்கினார்கள். புதிய கோட்பாடுகளை உள்ளடக்கிய புதுப்பிரிவுகள் ஏற்பட்டன.

பழங்கருத்துகளை நீக்கிப் புதிய கருத்துகளைக் கடைப்பிடித்துவரும் முயற்சி ஏற்பட்ட இடைக்கால நிலையை எதிரொலிக்கின்ற வகையில் மகாபாரதத்தில் ஒன்றுக்கொன்றுமுரணான கருத்துடைய பல செய்யுள்கள் காணப்படுகின்றன. கருத்துக்களிலும், அவைகளைக் கடைப்பிடித்து வருவதிலும் இன்றும் பல முரண்பாடுகள் இருந்து வருகின்றன. இதைத் தென்னிந்திய, வட இந்தியப் பகுதிகளில் இன்றும் காணலாகும். தொன்மையான இச்சமுதாய வளர்ச்சிக்கதையில் கி. மு. 256-ல் அசோகன் வெளியிட்ட முதல் குகைக்கல் வெட்டுஒன்று முக்கியமான செய்தியொன்றை விளக்குகிறது. புத்த சமயங்களின் பிரசாரத்தால், பல நூற்றாண்டுகளுக்குமுன் மக்கள் உள்ளத்திலேற்றப்பட்ட ஒரு மாறுதலை, இக்கல்வெட்டுச் செய்தி கூறுகிறது.

கறிசமைப்பதற்காக ஆயிரக்கணக்கான உயிரினங்கள் நாள்தோறும், புனிதரான, தயை நிறைந்த ராஜாதி ராஜனின் சமயலறையில் கொல்லப்பட்டன. தற்போது, இந்தக் கல்வெட்டுப் பொறிக்கப்படும்போது, கறி சமைப்பதற்கென மூன்றே பிராணிகள் கொல்லப்படுகின்றன. விவரமாகச் சொல்லப் புகுந்தால், இரண்டு மயில்களும், ஒரு புள்ளிமானும்;- அதிலும் அநேகமாகப் புள்ளிமான் கொல்லப்படுவதில்லை-அந்த மூன்று பிராணிகளையும், இது முதல் கொல்வது கூடாது.

நவீன இந்தியப் பழக்க வழக்கங்களை நன்கறிந்தவர்களுக்கு, மீன் அல்லது புலால் உண்ணும் பழக்க முடையவர்களை, மரக்கறி உண்ணும் அவரது சகோதரர்கள் வேறு இனத்தவராகக் கருதிவரும் நடைமுறையிலுள்ள பழக்கத்தைப்பற்றி நான்கூறவேண்டுமென்பதே இல்லை.

**இஸ்லாமியர் ஆட்சியால் விளைந்தவை**

இவ்விஷயத்தை ஆராய்வதென்பது மிகக் கடினமான முயற்சியாக இருக்கிறது. முடிவற்ற கிளை ஆராய்ச்சிகளில் அது நம்மை இழுத்துச் சென்று விடுகிறது. இந்நிலையில் மற்றுமொரு முக்கியமான செய்தியையும் நாம் நினைவு கொள்ளுவோம். முகம்மது கஜனி முதலாகப் பல இஸ்லாமியர் இந்திய நாட்டின்மீது படையெடுத்து ஆட்சி செலுத்தத் தொடங்கியதால் சாதி முறை மிக வலுவடைந்தது. இஸ்லாமியரைப் போர்க்களத்தில் எதிர்த்துப் போராடும் வல்லமை இந்துக்களுக்கு இல்லை. ஆயினும், சாத்துவிக முறையில் சாதிமுறைக் கட்டுப்பாடுகளை வலுப்படுத்திக் கொண்டு இந்துக்கள் தங்களைத் தற்காத்துக் கொண்டனர். சாதி முறையால் சகோதர மனப்பாங்கை வளர்த்துக் கொண்ட முயற்சியால் இந்துக்களும் இந்து சமயமும், பல நூற்றாண்டுகளாக நடைபெற்ற இஸ்லாமியரின் ஆட்சியின் போது காப்பாற்றப்பட்டன. வெளிநாடுகளிலிருந்து வந்த பிறர் க்ஷத்திரியரில் நிலை தாழ்ந்தவர் என்ற அதிகார பூர்வமான பண்டைய கருத்தைத் தற்கால இந்து சமயத்தினர் ஏற்பதற்கில்லை. மனுதர்ம சாத்திரத்தைத் தொகுத்த போது, பாரசீகர்கள்; டார்டுகள் இன்னும் சில அன்னிய நாட்டினரைப் புனித விதிகளைக் கடைப்பிடிக்காது நெறி தவறி விட்டதாலும், பிராமணரை மதித்து நடக்கத் தவறி விட்டதாலும் நிலை தாழ்ந்துவிட்ட க்ஷத்திரியர் என்று எண்ணும் வழக்கம் இயற்கையாகவே இருந்தது (X 44). இந்துக்களுக்கு அன்னியரைப் பற்றிய கருத்து மாற்றம் ஏற்படுவதற்கு இஸ்லாமியப் படையெடுப்பே பெரிதும் காரணமாயிருந்ததெனலாம். தற்போது சமுதாயத்திலுள்ள சாதி நிறுவனங்கள் கிறிஸ்து சகாப்தத்தின் பதினொன்று, பன்னிரண்டாம் நூற்றாண்டுகளிலேயே இந்நிலையை அடைந்து விட்டன என்று நாம் துணிவுடன் கூறலாம். மேலெழுந்தவாரியாக ஒரு சில சிறுமாறுதல் ஆங்கொன்று மிங்கொன்றுமாக ஏற்பட்டு வருகின்றன என்பதை இங்கு நாம் அதிகமாகப் பாராட்டவில்லை. நிறுவனத்தின் அடிப்படைகள், எதிர்ப்புகளின்றி, எவ்வித மாறுதல்களையும் அடையவில்லை என்ற பொதுவான கருத்தைத் துணிந்து கூறலாம்.

**சாதி முறையின் குறைபாடுகள்[1]**

நூதனமான இவ்விந்து சமய நிறுவனத்தின் குறைபாடுகள் கூறுமலே விளங்குகின்றன. அன்னியன் ஒருவனுடன் தாராள

1 இப்பகுதியும் அடுத்து வரும் பகுதியும் டாக்டர் ஸ்மித் அவர்கள் எழுதியவாறே தரப்படுகின்றன. சென்ற முப்பதாண்டுகளாக, அதிலும் குறிப்பாக நகர வாழ்க்கையில் சாதிமுறைக் கட்டுப்பாட்டு விதிகள் மிகவும் தளர்ந்து விட்டன என்று கூறத் தேவையில்லை [பதிப்பாசிரியர்]

மாகப் பழகுவதென்பது இயலாது என்பதை எவனும் உணர்ந்து கொள்ளலாம் இதனல் இந்தியனுக்கு அன்னியரை நன்கு அறிந்து கொள்ளும் வாய்ப்பும், அன்னியனும் இந்தியனை நன்கு புரிந்து கொள்ளும் வாய்ப்பும் இல்லாமெ நாழிந்து விடுகின்றன. சாதியற்ற பர்மாக்காரனுடன் ஐரோப்பியனுக்கு எளிதில் நட்பு ஏற்பட்டு விடுவதோடு அவனிடம் கருணையும் பிறந்துவிடுகிறது. சித்பவான் அல்லது நம்பூதிரி பிராமணனிடம், அவர்களது உட்கருத்தை மறைக்கும் திரையை விலக்குவதற்கு ஐரோப்பியனல் இயல வில்லை. அறிவுத் துறையிலும், இந்தியர் பெற்றுள்ள அறிவுச் செல்வம் குறிப்பிட்ட சில சிறு கூட்டத்தினருள்ளே விளங்காத மாயமாக இருப்பதற்கும், சாதி முறையே காரணமாக விளங்கு கிறதென்று கூறலாம். எத்துணைச் சிறப்புப் பெற்றவனுக இருந்த போதிலும் ஓர் ஆங்கிலேயன் அல்லது பிரெஞ்சுக்காரன் தனது கையாடலால் ஒரு பொருள் அசுத்தமாகி விடுகிறது என உயர்குல இந்து நண்பன் எண்ணுகிருன் என்பதை அறிந்து மிக வும் மனம் வருந்துவான். இருந்தும், இதுவே மறுக்க முடியாத உண்மையாக இருக்கிறது. இந்திய நாட்டில், இம்முறை சமு தாயத்தை ஆயிரக்கணக்கான சிறு பிரிவுகளாகச் சிதறடித்து விடு கிறது. இப்பிரிவினர் ஒருவரோடொருவர் பொருமை கொண் டும், சண்டையிட்டும், வாழ்ந்து வருகின்றனர். சமுதாய, அரசி யல், சமயத் துறைகளில் கூட்டு முயற்சி ஏற்படாதவாறு இம் முறை தடுத்து விடுகிறது. சீர்திருத்தவாதிகள் யாவரும் தங்களை எதிர்நோக்கியிருக்கும் கடுமையான இப்பிரச்சினையை அறிவார் கள். தனிமனிதன் ஒவ்வொருவனும், தனது சுய உரிமை பல வேறு வகைகளில் தடைசெய்யப்பட்டிருப்பதைஅறிவான். இதைப் போல வேறு நாடுகளில் கிடையாது என்பதும் அவனுக்குத் தெரியும். சாதி முறையின் கட்டுப்பாட்டு விதிகள் நாகரிக வாழ் விற்கு மிகவும் முரணனவை; முடிவற்ற கஷ்டங்களை அவை தோற் றுவிக்கின்றன. இந்நிறுவனம் ஒரு பரம்பரைச் சொத்து; இருப தாம் நூற்ருண்டில் இதற்கு அதிகப் பயனில்லை. தீவிர பிராமண ரும், நடைமுறையில் சில சௌகரியங்களை முன்னிட்டு, சாதி முறைகளைத் தளர்த்திக்கொள்ளுகின்றனர். உதாரணமாக, ரெயில் பிரயாணத்தின் போதும், குழாய்களில் தண்ணீர் அருந் தும் போதும் விதிவிலக்குச் செய்ய நேரிடுகிறது. ஆனல், இவ் விதி விலக்கு மனமொப்பிச் செய்யப்படுவதில்லை. இருதயத்தில் மிகவும் வேரூன்றிவிட்ட சாதி மனப்பாங்கு, முழு வலிமையுடன் இருந்து வருகிறது. பழக்க வழக்கங்களில் ஏற்பட்டுள்ள தளர் வினல் அதன் வேகம் அணுவளவும் குறைந்ததாகக் காணப்பட வில்லை. சாதிமுறை விதிகளுக்கும் தற்கால நாகரிக வாழ்க்கைக்கு முள்ள முரண்பாடுகள் வெள்ளிடைமலை. எனினும், சாதிமுறை

மறைந்துவிடவில்லை. இந்நிறுவனத்தால் எல்லையற்ற இனவெறியும் தற்பெருமையும் வளர்ந்து விடுவதால், மனிதரிடையே நிலவ வேண்டிய சகோதர மனப்பான்மைக்கு அதிக சேதம் விளைகிறது. இருபது அடி எல்லைக்குள் ஈன சாதியைச் சார்ந்தவன் ஒருவன் வருவானேயாகில், தனது புனிதத் தன்மைக்கு ஊறு விளைந்து விட்டதாகக் கருதும் மலபார் பிராமணன், அவ்விழிகுலத்தவன் நன்மையில் அக்கறையுள்ளவனாக இருக்க முடியாது. இதே போன்ற மனப்பான்மை இந்து சமயப் பிரிவினர் ஒவ்வொருவரிடமும் இருந்து வருகிறது. அதன் வெவ்வேறு நிலைகளிலேயே ஒரு சில மாறுதல்கள் காணப்படுகின்றன. சமய நிறுவனங்களுக்கு எதிராக எழுப்பப் பெறும் மறுப்புகளும், மேலும் வளர்ந்து வரும் பல எதிர்ப்புகளும், இந்திய இலக்கியங்களிலும் அன்னியரது நூல்களிலும் இம்முறையை வன்மையாகக் கண்டித்து எழுதப் பெற்றுள்ள கருத்துகளின் நியாய உணர்ச்சியை ஆதரிப்பவையாக உள்ளன. வேமனன் என்ற தெலுங்கு கவியின் செய்யுளொன்றிலிருந்து தரப்படும் நான்கு பாராக்கள், இவ்விஷயத்தைக் குறித்து இந்தியர் பலர் கொண்டிருக்கும் வெறுப்புணர்ச்சியைப் புலப்படுத்துகின்றன.

சாதி

அகிலமெங்கும் நாம் தேடினும்
பிறப்பால், மனிதர் யாவரும் சமமே என்றறியலாம்
சகோதரத்துவம் என்ற நோக்கில்
இறைவன் முன் சமமாகவே விளங்குவர்.

உணவும், சாதியும், பிறந்த இடமும்
மனிதத் தன்மையை அழித்துவிடமாட்டா.
சாதிக்கேன் இந்த ஏற்றம்?
ஓடிமறையும் மடமையின் கிளையே இது...

சாதிச் சண்டைக்குப் பொருளேது?
சாதி முறைகள் யாவற்றிற்கும் பிறப்பிடம் ஒன்றே.
யாரைப் புகழ்வது, யாரை இகழ்வது?
புவியிலுள்ள யாரால் முடிவு கூற இயலும்?

பறையனை ஏனோ நாம் இகழவேண்டும்?
அவனது சதையும் இரத்தமும்
நம்மில் மாறுபட்டதோ? நாம் பார்க்குமிடமெல்லாம்
துலங்கும் 'அவன்' எக்குலத்தைச் சார்ந்தவன்?[1]

1 தென்னிந்திய நாடோடிப் பாடல்கள்-கோவர்-லண்டன், ட்ரூப்னர் 1872 பக்கம் 275—விளங்க உரைக்கும் அருமையான நூல்.

புகழ்பெற்ற சட்ட மேதை சர் ஹென்றிமெயின், 'குலமென்பது மனிதனால் உருவாக்கப் பெற்ற நிறுவனங்களில், மிகவும் கேடு விளைவிக்கக் கூடியதும், அறிவு கெட்டதுமாகும்' என்று கூறுகிறார். ஐரோப்பிய நூலாசிரியர்களின் கடுமையான நிந்தனைக்குச் சான்றாக, இக்கருத்து ஒன்றே போதுமானது.

**சாதி முறையின் நன்மைகள்**

வெறுப்புணர்ச்சி கொண்ட நூலாசிரியர்கள் உண்மை முழுவதையும் அறியவில்லை. இம்முறையின் நன்மைகளைப் பற்றியும் எடுத்துரைத்தல் வேண்டும். ஆயிரமாயிரமாண்டுகளாக நிலை பெற்றிருக்கும் இந்நிறுவனம், எதிர்ப்புகளைப் பொருட்படுத்தாது குமரி முனை வரையிலும் பரவி மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது.* இந்திய எல்லைக்குள் எங்கும் பரவி, நிலை பெற்றுவிட்ட இம்முறை ஒரு சில சிறப்புகளை உடையது என்பது உண்மை. சாதி முறையின் சிறப்புகளை மிக்க ஆர்வமுடன் ஏற்றிப் பேசுபவர்கள், பிற நாடுகளில் அதன் பயனின்மையை ஏற்றுத்தாகுக வேண்டும். 'நல்லாராய்ச்சியுள்ள' சர் மாதவராவ் போன்றவர்கள் கூறுவது போல 'நாம் விழிப்புடனிருக்க வேண்டும். பரந்ததும், நுண்ணிய அமைப்பை உடையதுமான இச்சமுதாய நிறுவனம் அளவிடற்கரிய அனுபவ வாயிலாகக் கிடைத்துள்ளது. இதைக் காட்டிலும் கெடுதி மிக்க மற்றுமொரு வகையிலோ, அல்லது தகுந்த மாற்றுத் திட்டமின்றியோ, இச்சமுதாய அமைப்பிற்குக் கேடுவிளைவிப்பதும் அல்லது அதை அழித்து விடுவதும் முறையாகாது.' சாதி நிறுவன முறையை மட்டிலும் தனியாகப் பிரித்து ஆராய்வதிலும் பயனில்லை. இந்து சமயத்தின் துணைப் பகுதியில் இதுவுமொன்று; இந்து சமயப் பொருளாதார சமுதாயத் திட்டப் பகுதி என்று கூறலாம். கெட்கர் பிழையின்றிக் கூறுவது போல, 'பிறப்பு' அல்லது 'கர்ம வினை'க் கொள்கையுடனும், 'முக்குணங்களை' விவரிப்பது போன்ற இந்து சமயத் தத்துவக் கருத்துகளுடனும், சாதி முறை பிணைக்கப்பட்டிருக்கிறது. அது போன்ற அறிவிற்குச் சுலபத்தில் புலப்படாத கொள்கைகளை இங்குத் தருவது இயலவில்லை. ஆசிரியர் பலர் கூறியிருப்பது போல வர

* பண்டைய திராவிடருக்கும் ஆரியருக்குமிடையில் நிலவிய வெறுப்பு குரிச்சான்களால் (மலபாரிலுள்ள மலைச் சாதியினர், தமிழ்க் குறவர்களைப் போன்றவர்) இன்றும் பாராட்டப்படுகிறது. பிராமணர் அடியெடுத்து வைப்பதால் ஏற்படும் அசுத்தத்தை நீக்குவதற்குப் பசுவின் சாணத்தால் மெழுகும் வழக்கமிருக்கிறது (தமிழக ஆராய்ச்சி, பக். 90).

திருவிதாங்கூரிலுள்ள குறவர்கள் மிகத் தாழ்ந்தவராவர். செத்த வுடல்களை அவர்கள் புதைத்துவிடுகின்றனர் (திருவிதாங்கூர் மாகாண மான்யுவெல் வால்யூம் ii, பக். 229).

லாற்று நோக்கில் சாதி முறையின் முக்கியச் சிறப்பு, அது நிலை பெற்றிருப்பதேயாகும். சாதி விதி முறைகள் நன்கு வேரூன்றி விட்ட பழக்கங்களேயாம். இந்துக்கள் பழமையில் மிக நம்பிக் கையுடையவர்களாக இருக்கின்றனர். அத்தகைய நிலைபெற்ற தன்மையே, சமயம், அறம், கலை மற்றும் நுணுக்கமான திறன் ஆகியவைகளுக்கு இந்து சமயத்தில் அழியாத் தன்மையை அளிப் பதற்கு முழுதும் காரணமாயிருந்தது எனக் கூற இயலவில்லை யென்றாலும், பெரிதும் காரணமாயிருந்தது எனக் கூறலாம். சமு தாய அமைதிக்கு இந்நிறுவனம் ஆற்றும் அரிய தொண்டு 'அப்பி ட்யூபாயை' வெகுவாகக் கவர்ந்திருக்கிறது. மோனியர் வில்லி யம்ஸ் சுருக்கமாக உரைப்பது வருமாறு: 'சாதி முறை தியாக உணர்ச்சியை வளர்ப்பதற்கும், ஒரு நிறுவனத்திற்குக் கீழ்ப் படிந்து கட்டுபாட்டு உணர்ச்சியோடு நடந்து கொள்ளும் மனப் பாங்கையும், தீய ஒழுக்கங்களை மட்டுப்படுத்துவதற்கும் வறுமை ஏற்படாதவாறு அரண் செய்வதற்கும், பெரிதும் உதவு கிறது. இதுபோன்ற மேற்கோள்கள் ஏராளமாக உண்டு.[1]

### சாதி முறையின் எதிர்காலம்

சற்றேறக்குறைய 3000 ஆண்டுகளுக்கு மேலாக வேரூன்றி, இந்தியப் பண்பாட்டோடு ஒன்றி விட்ட வருணம், குலம் ஆகிய நிறுவனங்கள், இன்றும் இந்திய நாகரிகத்தின் முக்கிய கூறுகளில் ஒன்றாக விளங்கி வருகிறதெனினும், விரைவாக வலிவிழந்து வரு கிறதென்று கூறலாம். வளர்ந்துவரும் சமுதாயக் கடமை யுணர்ச்சியாலும், நிலைதாழ்த்த வருணத்தவர் ஒன்று சேர்ந்து முயற்சி செய்வதாலும், தீண்டாமை என்ற கொடுமையான வழக் கம் நீக்கப்பட்டு வருகிறது. ஆனல் மக்களில் ஒரு சாராரிடம், குறிப்பாகக் கிராமப்பகுதிகளில் சாதிக் கொடுமையின் ஒரு சில கூறுகள் பல தலைமுறைகளுக்கு வழக்கிலிருந்து கொண்டிருக் கலாம். 'இந்து சமயம்' என்ற ஆழமான கடலைச் சுலபத்தில் கடைந்து விடமுடியாது. நீர்ப்பரப்பில் எழும் குமிழிகள் ஆழ் கடலை அசைப்பதில்லை.

### மனுவின் நீதிகள்

சாதாரணமாக 'சட்டங்கள்' அல்லது 'சட்டத் தொகுப்புகள்' அல்லது 'மனுவின் அறநெறிகள்' (வட மொழியிலுள்ள மானவ-தர்மசாத்திரம்) என்றழைக்கப்படும் பிரசித்தி பெற்ற சட்டநூலை நன்கு ஆராய வேண்டும். இவ்வாராய்ச்சி சாதி முறையின்

1 சிலமேற்கோள்கள் 'திருவிதாங்கூர் சமஸ்தானக் குறிப்புகள் 1906, வால்யூம் ii, பக்கம் 229 என்ற நூலிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளன.

வளர்ச்சியை நன்கு புலப்படுத்தக் கூடும். இந்நூல், சரளமான வடமொழியில் வீரகாவிய முறையில் எழுதப்பட்டுள்ளது. 2,684 ஈரடிச் செய்யுள்களைக் கொண்ட பன்னிரண்டு அதிகாரங்களைக்




புராதன இந்தியா

கொண்டது. சந்தத்தைக் கடைப்பிடித்து எழுதப் பெற்ற ஆதிச் சட்ட-நூல் இதுவேயாகும். முன்னோர்கள் விட்டுச் சென்றுள்ள நூல்களின் துணைகொண்டு பிருகு என்ற முனிவரொருவர் இந்

நூலை இயற்றினரென்று கூறப்படுகிறது. கி.மு. 200-க்கும் கி.பி. 200-க்கும் இடைப்பட்ட காலத்தில் இந்நூல் எழுந்திருக்கலாம். செய்யுள்களில் பத்தில் ஒரு பகுதி மகாபாரத காவியத்திலும் காணப்படுகின்றன.

'இந்து சட்டத்தொகுதி' என்ற பெயரால் இந்திய உயர்நீதி மன்றங்களில் வழக்கிலிருந்து வரும் சட்டமுறை, மானவ தர்ம சாத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப் பெற்றதாக உள்ளது. ஒன்றுக்கொன்று முரணானபல சட்டங்களின் கவனமற்ற தொகுப்பாக அச்சட்டத்தொகுதி காட்சியளிக்கின்றது. 'ஆதி வருணங்கள் நான்கிருந்தன' என்னும் கண்டனத்திற்குரிய கருத்து, இந்நூலைத்திரித்துக் கூறியதின் விளைவென்று முன்னரே குறிப்பிட்டோம். நூலாசிரியர் வருணங்களைப் பற்றிக் கூறியுள்ளவைகளுக்குக் கற்பனையான பல விளக்கங்கள் எழுந்துள்ளன. பண்டை வடமொழிப்புலவர்கள் இந்நூலுக்கு அதிக மதிப்புக் கொடுத்து வந்தனர். உண்மையில் அந்நூலில் காணப்படும் சட்டங்கள் மானிடனால் எழுதப்பெற்றவையல்ல என்றும், அசைக்கவொண்ணு நியதிகள் அவை என்றும் அவை நடைமுறையில் அவ்வாறே இருந்து வருகின்றன என்றும் கூறப்பட்டது. தீவிர ஆராய்ச்சிக்குப்பின் தற்போது அந்நூலின் நியாயமான உண்மையான மதிப்பு நன்கு வெளிப்படுகிறது. எனினும், பண்டைய நாட்களில் எழுந்த தவறான கருத்துகளின் ஆதிக்கம் பல துறைகளிலும் குறைந்த பாடில்லை.

### மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

பண்டைய இந்திய இலக்கியங்களைப் பற்றிய விவரங்களுக்கு: 'வடமொழி இலக்கிய வரலாறு'– ஏ. ஏ. மாக்டுனல் (லண்டன் 1900) பரந்த விஷயத்தை மிக அற்புதமாகச் சுருக்கி அளிக்கிறது.

இந்திய இலக்கிய வரலாறு – எம். விண்டர்கிட்ஸ் (மொழி பெயர்ப்பு. திருமதி. எஸ். கேட்கர், கல்கத்தா 1927) மிக விரிவானது.

ஏ. பி. கீத் என்பவரின் 'வடமொழி இலக்கிய வரலாறு' (ஆக்ஸ்போர்டு 1928)

'சம்ஸ்கிருத நாடகங்கள்' (ஆக்ஸ்போர்டு 1924) ஆகிய அருமையான நூல்கள் காப்பிய கால இலக்கியங்களையே ஆராய்கின்றன.

அதைப் போலவே எஸ். என். தாஸ்குப்தா, எஸ். கே. டே ஆகியோரது 'வடமொழி இலக்கிய வரலாறும்' அமைந்துள்ளன (வால்யூம், கல்கத்தா 1947).

வேத காலத்தைப் பற்றி, கீத் என்பவரின் 'வேத, உபநிடதங்களின் தத்துவமும் சமயமும்' (கேம்பிரிட்ஜ் 1925) என்னும் நூல் மிகப் பயனுள்ளது.

'வேதங்களின் பட்டியல்', கீத், மக்டூனல் ஆகியோர் தயாரித்தது. (2 வால்யூம்கள், லண்டன் 1912) ஒப்புநோக்கு நூல்களாக மிகவும் பயனுள்ளவை.

கிரிப்பித்ஸ் என்பவரின் சந்தத்தோடு கூடிய 'ரிக்வேத செய்யுள்கள்' (2 வால்யூம், இரண்டாம் பதிப்பு. பனாரஸ் 1896) ஆங்கிலத்தில் கிடைக்கக் கூடிய ஒரே நூல்.

'வேத காலம்' இந்திய அறிஞர் பலரால் எழுதப் பெற்றது. (பதிப்பு. ஆர். சி. மஜும்தார், லண்டன் 1951. 21 ஆம் பக்கம் பார்க்கவும்) பலதரப்பட்டது.

கே. இ. வ. அதிகாரங்கள் ivம், vம், கீத் என்பவரின் நூலில் வால்யூம் 1ம், சுருக்கமான வரலாறு இன்னும் பயனுள்ளதாக இருக்கிறது.

'வீர காவிய காலத்திற்கு' ஹாப்கின்ஸ் என்பவரின் 'இந்தியாவின் சிறந்த வீர காவியம்' (நியூயார்க்; லண்டன் 1901) என்ற நூல் இன்னும் பயனுள்ளது.

அதே ஆசிரியரின் கட்டுரைகள் கே. இ. வ. முதல் வால்யூமில் உள்ளன.

புராணங்களிலடங்கியுள்ள அரசர் பட்டியலிலிருந்து மிக்க பிரயாசையுடன் சீரிய வரலாறு தொகுக்கும், எப். இ. பார்கைட்டரின் சீரிய முயற்சியை 'கலி சகாப்தத்தின் அரச குலங்கள்' (ஆக்ஸ்போர்டு 1913) என்ற நூலிலும் 'பண்டைய இந்திய வரலாற்று மரபுகள்' (லண்டன் 1922) என்ற நூலிலும் காணலாம்.

எச். சி. ராய்சௌதுரி, தெளிவற்ற மகாபாரதப் போருக்கும் புத்தனின் காலத்திற்கும் இடையேயுள்ள காலத்து அரசியல் வரலாற்றை மிகக் கவனமாகத் தொகுத்துக் கூறுவதற்கு முயன்றுள்ளார். அதை, 'புராதன இந்திய அரசியல் வரலாறு' பகுதி Iல் காணலாம்.

சாதி முறையைப் பற்றிய நூல்களில் எஸ். வி. கெட்கரின், 'இந்திய சாதி முறையின் வரலாறு' (இதாகா, என். ஒய் 1909).

இ. செனார்ட், 'இந்திய சாதி முறை' (மொழிபெயர்ப்பு சர். இ. டெனிசன்ராஸ், லண்டன் 1930)

என். கே. டட், 'இந்தியாவில் சாதி முறையின் தோற்றமும், வளர்ச்சியும்' (கல்கத்தா 1931);

ஜே. எச். ஹட்டன், 'இந்தியாவில் சாதி' (கேம்பிரிட்ஜ் 1946) ஆகியவை மிகச் சிறந்தவை.

பேராசிரியர் ஹட்டனின் நூல் உடற்கூறு சாத்திர ஆராய்ச்சியில் சிறந்து விளங்குகிறது. புராதன இந்தியக் குடிகளின் பண்பில் இன ஆராய்ச்சி செய்து, ஆரியருக்கு முற்பட்டகால முதலே இம் முறையின் கூறுகள் தென்படுவதை விளக்கியுள்ளார்.

மனுநீதி நூலின் மொழி பெயர்ப்புகளில், பூலர் என்பவரது மொழி பெயர்ப்பே இன்றும் ஏற்கக் கூடியதாக இருக்கிறது. (மனுவின் நெறிகள், கீழை நாடுகளின் புனித நூல்கள், வால்யூம் XXV, ஆக்ஸ்போர்டு 1886)

மேலும் மேலும் பல நூலாசிரியரின் மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. நீண்டதொரு புத்தகப் பட்டியலையும் கொடுக்கலாம்.

## 3. மௌரியராட்சிக்கு முன்புள்ள இராச்சியங்கள்; சமண பௌத்த சமயங்களின் எழுச்சி; மகா அலெக்சாந்தரின் படையெடுப்பு; கி. மு. நான்காம் நூற்றாண்டில் இந்திய நிலை.

### இந்தியப் பண்பாடு தொடர்ந்து வளருதல்

சீன நீங்கலாக இந்தியாவிற்கொப்பான தொன்மை, மிகுந்த தடையற்ற நாகரிக வளர்ச்சியையுடைய வேறு ஒரு நாட்டை உலகின் எப்பகுதியிலும் காண இயலாது. எகிப்திலும், பாபிலோனியாவிலும் நாகரிக வாழ்க்கை, பல்லாண்டுகளுக்கு முன்னரே தொடங்கியிருக்கக் கூடும். அப்பகுதிகளில் இன்று நிலவி வரும் நாகரிகத்தையும், ஆதியில் அங்குத் தோன்றிய நாகரிகப்பாங்கையும் இணைக்கும் சக்திகள் பன்னெடுங்காலத்திற்கு முன்னரே மறைந்துவிட்டன. சுமேரியர் கடைப்பிடித்த வாழ்க்கை முறைகளையோ, அல்லது எகிப்திய 'பரோவாக்கள்' ஆட்சியிலிருந்த வாழ்க்கை முறைகளையோ நினைவுறுத்தும் சான்றுகள் இன்று ஜீவித்திருக்கவில்லை. இந்திய நாட்டிலோ எனில், வேத காலக்கருத்துகள் இன்றும் மக்கள் வாழ்க்கையைக் கட்டுப்படுத்தி வருகின்றன. முனிவர்கள், கையாண்டு வந்த சடங்கு முறைகளும் இன்றும் முழுவதும் வழக்கொழிந்து விடவில்லை. எகிப்திலும், பாபிலோனியாவிலும் உள்ளது போல காலத்தால் அழிந்து விடாத சான்றுகள் அதிகமாக இந்திய நாட்டிலில்லை. அந்நாட்டு வரலாறுகளைத் தொகுத்து எழுதும் வாய்ப்புகளுக்கு இணையாக இந்திய நாட்டின் பண்டைய வரலாற்றைச் சீரிய முறையில் எடுத்துக் கூறும் வாய்ப்புகள் நமக்கில்லை. சமீப காலம் நீங்கலாக, இந்திய வரலாற்றின் பெரும் பகுதியைக் கர்ண பரம்பரைச் செய்திகளின் துணையுடனேயே வரலாற்றாசிரியன் கூறவேண்டியிருக்கிறது. இதனால் அவை தெளிவற்றவையாயும், அரைகுறையாகவும் இருப்பதோடு காலவரன் முறைப்படியும் அமையாது காணப்படுகிறது.

### கி. மு. ஏழாவது நூற்றாண்டிலேயே காலவரன் முறை தெளிவு பெறுகிறது

கி. மு. ஏழாவது நூற்றாண்டிற்கு முன்னுள்ள வரலாற்றுச் செய்திகளை ஓரளவிலேனும் காலவரன் முறையை ஒட்டியமைப்பதென்பது இயலாது. கி. மு. 326-ஆம் ஆண்டில் மகா அலெக்

சாந்தர் இந்திய நாட்டின்மீது படையெடுத்து வந்த செய்தி ஒன்றே வரலாற்றுக் குறிப்பாக நமக்குத் தெளிவாகக் கிடைக்கிறது. இவ்வரலாற்றுக் குறிப்பையும், சற்றேறக் குறைய அதனுடன் ஒட்டிய மௌரியராட்சியிலுள்ள குறிப்புகள் சிலவற்றையும், இலக்கியங்கள் வாயிலாகக் கிடைக்கும் வரலாற்றுச் சார்புள்ள செய்திகள் சிலவற்றையும் ஒப்புநோக்கி, ஏழாவது நூற்றாண்டில் வட இந்தியாவில் தழைத்து வந்த நாடுகளைப் பற்றிய ஒரு சில உண்மை விவரங்களை மிகப் பிரயாசையுடன் கண்டறியலாகும். கி. மு. 300 ஆம் ஆண்டிற்கு முன்னதாகத் தீபகற்ப இந்தியாவிலோ அல்லது வங்காளத்திலோ ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப்பற்றி விவரமாக நம்மால் ஏதும் கூற இயலாது. சமய நோக்குடன் எழுந்த பல நூல்களைத் துருவி ஆராய்ந்து வட இந்திய இராச்சியங்களிலுள்ள நிகழ்ச்சிகளை, குறைபாடுள்ளதே யாயினும் ஓரளவு பிரித்தெடுத்துத் தொகுக்க இயலும். பிராமண, சமண, பௌத்த சமய நூல்களான இவை, சமயப்பணி எந்த எந்த நாடுகளில் அதிகமாக நடைபெற்றனவோ அந்நாடுகளைப் பற்றியே பேசுகின்றன. இப்பரம்பரை வரலாறுகள் ஒன்றோடொன்று தொடர்பற்றவையாவும், நூலாசிரியனின் சமயக் கருத்துகளை மிகுதியாக அடிப்படையாகக் கொண்டவைகளாகவும் காணப்படுகின்றன.

### கி. மு. ஏழாவது நூற்றாண்டில் இந்தியா

கி. மு. ஏழாவது நூற்றாண்டில் இந்தியாவின் பல பகுதிகளிலும் அடர்த்தியான காடுகள் நிறைந்திருந்தன. இக்காடுகளில், மிருகங்களும், அவ்வினங்களைப் பெரிதும் ஒத்திருந்த காட்டுமிராண்டிகளும் நிறைந்திருந்தனர். அதனுடன் சிந்து, கங்கை நதிகளின் பரந்த சமவெளிகளில், பண்டைய நாட்கள் முதலாக நாகரிகம் முதிர்ந்த குடியேற்றங்களுமிருந்தன.

விந்தியப் பகுதியிலுள்ள உஜ்ஜயின் என்னும் நகரத்தின் பெரும்பகுதி இன்றும் அப்பழம் பெயரையே தாங்கி நிற்கிறது. இந்தியாவின் புனிதமான ஏழு நகரங்களில் ஒன்றாக அது கருதப்படுகிறது.[1] இந்துக்களின் நன் மதிப்பைப் பெற்றிருப்பதில் காசிமா நகரத்துடன் இது போட்டியிடுகிறது. ஏழாவது நூற்றாண்டில் அவந்தி இராச்சியத்தின் தலைநகரமாக அது விளங்கியது. பிற்காலத்தில் மாளவம் என்ற பெயரடைந்த அவந்தி இராச்சியம், இந்திய இராச்சியங்களில் சிறந்த ஒன்றாகப்

1 ஏழு புனித நகரங்களாவன: (காசி) பனாரஸ், ஹரித்வார் (மாயா), காஞ்சி (காஞ்சிபுரம்), அயோத்தியா (ஔட்), த்வாரவதி (த்வாரிகா), மதுரா மற்றும் உஜ்ஜயின் அல்லது அவந்திகா.

பன்னெடுங்காலம் விளங்கிப் பின் மகத சாம்ராச்சியத்தோடு இணைந்தது. தற்போது சாகேத்-மாகேத் எனவழங்கும் பகுதியிலமைந்திருந்த ரப்தி ஆற்றின் கரையிலுள்ள சிராவஸ்தியைத் தலைநகராகக் கொண்ட, 'கோசலம்' அல்லது 'வடக்கு ஔட்', ஆரியாவர்த்தத்தின் தலைமைப் பதவி எய்துவதற்கு, மகத சாம்ராச்சியத்துடன் போட்டியிட்டது.

**மகதம்**

மகத வமிசத்தினரின் இருப்பிடமாக விளங்கிய மகதம் அல்லது தெற்கு பீஹார், கி. மு. நான்காவது நூற்றாண்டில் தங்கு தடையின்றி மிகச் சிறப்பெய்தி இருந்தது. அதற்குப் பல காலத்திற்கு முன்னரே சமணமும், பௌத்தமும் இவ்விராச்சியத்தோடு நெருங்கிய தொடர்புகொண்டு வளர்ந்து வந்தன என்ற வரலாற்றுச் சார்புள்ள செய்திகள் கிடைக்கின்றன. வடஇந்திய இலக்கிய மரபுகள் பல, பெரும்பாலும் மகதத்தைப் பற்றியே பேசுகின்றன. மகதம், இந்திய வரலாற்றை விளக்குகின்ற ஒரு சிறந்த பணியை ஏற்றுள்ளது. அதைக் காட்டிலும் சிறப்புக் குன்றிய பிற இராச்சியங்களைப் பற்றிய குறிப்புகள் இல்லாமையால், மகதத்திற்கு அவ்வரிய வாய்ப்புக் கிடைத்துள்ளது.

**பிம்பிசார மன்னன்**

மகதத்தின் தொடர்ச்சியான வரலாறு சிசுநாகவமிச ஆட்சியிலிருந்து தொடங்குகிறது. பனாரஸைச் சார்ந்த சிசுநாகன் (சைசுநாகன்) என்ற ஒருதலைவனால், கி. மு. 600க்குமேல், ஒருவேளை கி. மு. 642 ஆம் ஆண்டிலேயே தோற்றுவிக்கப்பட்டது எனலாம். கயா மாவட்டத்திலுள்ள மலைப்பாங்கான பகுதியில் 'கிரிவ்ரஜம்' அல்லது பண்டைய இராசகிருகத்தை அவன் தலைநகராகக் கொண்டான்.[1]

இவ்வமிசத்தில் 'பிம்பிசாரன் அல்லது ச்ரீனிகன்' என்ற பெயருடைய ஐந்தாவது அரசனைப்பற்றியே ஒரு சில செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. தற்காலத்திய, பகல்பூர், மாங்கீர் மாவட்டப் பகுதிகளடங்கிய அங்க நாட்டை வென்று, வாரிசாகப் பெற்ற சாம்ராச்சியத்துடன் இணைத்துக் கொண்டான். 'புதிய ராஜகிருகம்' (ராஜ்கீர்) என்னும் நகரத்தை, இவன் நிர்மாணித்தான். மகத இராச்சியத்தின் சிறப்பிற்கு அடிகோலியவன்

1 ஜாக்சனின் 'பண்டைய இராசகிருகத்தைப் பற்றிய குறிப்புகள்' என்னும் நூலைப் பார்க்க-வருடாந்திர அறிக்கை-புதை பொருளாராய்ச்சி இலாகா-இந்தியா-1913 - 14 (1917) பக். 265 - 71 - பிளேட் LXXI.

என்று இவனைக் கருதலாம். சமணரும், பௌத்தரும், பிற்காலங்களில் இம்மன்னனைத் தங்கள் தங்கள் சமயத்தைப் பேணி வளர்த்தவனென்று உறவு கொண்டாடுகின்றனர். புராணச் செய்திவாயிலாக, இவன் இருபத்து எட்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தானென்றும், சிங்கள நாட்டு மரபுச் செய்தியடிப்படையில் ஐம்பத்திரண்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தானென்றும் கூறப்படுகிறது. புத்த பிரானின் பரிநிர்வாணத்திற்கு ஏழாண்டுகளுக்கு முன்னர் இவன் இறந்திருக்க வேண்டும். இந்நூலில், நாம் கடைப்பிடித்து வரும் காலவரன் முறைப்படி கி. மு. 487-ல் புத்தபிரானின் மறைவு ஏற்பட்டிருக்கவேண்டும். எனவே கி. மு. 494 ஆம் ஆண்டில், பிம்பிசாரன் இறந்திருக்க வேண்டும் எனக் கொள்ளலாம்.

**சிந்து சம வெளியில் பாரசீகரின் ஆக்கிரமிப்பு**

கி. மு. 521 முதல் 485 வரை, பாரசீகத்தை ஹிஸ்டாஸ்பெஸ் என்பவரின் மகனை டரையசு என்பவன் மிகத் திறமையாக ஆண்டு வந்தான். அவனது ஆட்சியில் கி. மு. 516-க்குப் பின், காரியாவிலுள்ள 'காரியாந்தா, நாட்டைச் சார்ந்த 'ஸ்கைலாக்ஸ்' என்பவரின் தலைமையில் கடற்படை யொன்றை இந்தியாவுக்கு அனுப்பி வைத்தான். சிந்து நதியின் முகத்துவாரத்திலிருந்து பாரசீகத்திற்குச் செல்லுவதற்கான கடல் மார்க்கமொன்றைக் கண்டு பிடிக்கவேண்டுமென அவனுக்கு ஆணையிடப்பெற்றிருந்தது. பஞ்சாப் ஆறுகளின் மேற்பகுதியில் காந்தார நாட்டிலிருந்து கடற்படை யொன்றை 'ஸ்கைலாக்ஸ்' தயாரித்தான். கரைரோமாகப் பிரயாணம் செய்த அவன், பதின்மூன்றும் மாதத்தில் கடலைச் சென்றடைந்தான். சிந்து சமவெளியைத் தன் நாட்டுடன் இணைத்துச் கொள்வதற்கும், இந்து மகா சமுத்திரத்திற்கு ஒரு கடற்படையை அனுப்புவதற்கும் டரையசுக்கு நல்ல வாய்ப்புகள் கிடைத்தன. டரையசின் மகன் செர்க்கஸ், கி. மு. 479-ல் கிரேக்க நாட்டுடன் போரிட்டபோது இந்திய நாட்டு வில் வீரர்கள் அவனது படையில் பணிபுரிந்தனர். கிரேக்க நாட்டிலுள்ள பலேட்டியாப் போரில், மார்டோனியசுக்கு ஏற்பட்ட தோல்வியில் இவர்களுக்கும் பங்குண்டு. சிந்துவில், தான் கைப்பற்றிய பகுதியைத் தனது பாரசீக சாம்ராச்சியத்தின் இருபதாவது பகுதியாக டரையசு அமைத்துக் கொண்டான். பாரசீக சாம்ராச்சியத்தின் வளமிக்க, பிரசித்திபெற்ற பகுதியாக அது விளங்கியது. இப்பகுதி 360 ரூபோயிக் பொற்காசுகளைத் திறையாகச் செலுத்தி வந்தது. ஆசிய மாகாணங்களிலிருந்து வரியாகப் பெறப்பட்ட தொகையில், இது மூன்றில் ஒரு

பங்காக இருந்தது. ஒரு மில்லியன் ஸ்டெர்லிங்கிற்குச் சமமான மதிப்பை இது உடையதாக இருந்தது. ஆரையா(ஹீரட்), அரக் கோசியா (காண்டஹார்), காந்தூரியா (தக்ஷசீலம் அதன் வடமேற் குப்பகுதி) ஆகியவைகளிலிருந்து வேறுபட்ட இப்பகுதி சால்ட் ரேஞ்சிலிருந்து கடல் வரை பரவியிருந்திருக்கக் கூடும். சிந்து நதியின் கிழக்கிலுள்ள பஞ்சாபின் ஒரு பகுதியும், இதனுள் அடங்கியிருந்த தெனலாம். அக்காலங்களில் இருந்த ஆறுகளின் போக்கும், தற்போது அவை ஓடிவரும் பகுதிகளும் வெவ் வேறானவை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். தற்போது பாலைவனங்களாகக் காட்சியளிக்கும் பல பகுதிகள் ஒரு காலத் தில் வளமிக்க விளை நிலங்களாகவும், அதிகமான மக்கள் வாழ்ந்த பிரதேசங்களாகவும் விளங்கி வந்தன என்று எண்ணு வதற்கான சான்றுகள் பல உண்டு. புகழ்ச்சிக்குரிய காரணங்கள் இவ்வாறு விளக்கப்பட்டுள்ளன.

சிந்து நதிக்கரையிலுள்ள, பாரசீக மாகாணத்திற்கும், வளர்ந்தோங்கி வந்த மகத சாம்ராச்சியத்திற்கும் இடையில் கி.மு. ஐந்தாவது நூற்றாண்டில் போக்குவரவு இருந்தது என் பதை நிரூபிக்கக்கூடிய திட்டவட்டமான சான்று எதுவுமில்லை. இருப்பினும், தொடர்பெதுவுமில்லை என்ற அவசர முடிவெய்து வது மிகவும் கண்மூடித்தனமான ஒரு செயலாகும். இருபதாவது மாகாணத்தின்மீது பாரசீகத்திற்குள்ள ஆதிக்கம் எக்காலத்தில் மறைந்தது என உறுதியாக எதுவும் கூறுவதற்கில்லை. மகா அலெக்சாந்தர் படையெடுத்து வந்த காலத்திலும், சிந்து நதியே, பாரசீக இந்தியப்பகுதிகளின் அதிகார பூர்வமான எல்லைக் கோடாக விளங்கியது. ஆற்றின் கரையோரமாகப் பாரசீக அதிகாரிகள் இருந்தனர் என்பதை ஆசிரியர்கள் எவரும் குறிப்ப தில்லை. ஆற்றின் கரைகளில் சிறு நாடுகள் ஏராளமாக இருந்தன வென்றும், அவைகளின் தலைவர்கள் சுதந்திரமாக ஆண்டு வந்தனரென்றும் தெரிய வரும்.

கரோஷ்டி வரிவடிவங்கள், அராமிக் மொழிவடிவங்களிலி ருந்து பிறந்தவையாக விளங்குகின்றன. இடமிருந்து வலமாக அவை எழுதப்பட்டிருக்கின்றன. வடமேற்கு எல்லையில் கிறிஸ்து சாகாப்தத்தின் நான்காம் நூற்றாண்டு வரை அவை வழக்கிலிருந் தன. இது பாரசீகரால் புகுத்தப்பெற்றது என்ற கருத்தை ஏற் போமாகில், அகாமினியன் சாம்ராச்சியத்தின் ஒரு பகுதியாகச் சிந்து சமவெளி இருந்ததென்பதற்கு, இதையே ஒரு நினைவுச் சின்னமாகக் கருதலாம்.

**அஜாதசத்ரு**

கி. மு. 494ஆம் ஆண்டில் பிம்பிசாரனை அடுத்து அவனது மகனை 'அஜாதசத்ரு அல்லது குனிகன்' என்பவன் அரசு கட்டில் ஏறினன் என்றும், சுமார் இருபத்தேழு ஆண்டுகள் அவன் ஆட்சி செலுத்தினன் என்றும் கொள்ளலாம். 'சான்' ஆற்றின் கரையில் 'பதாலி' என்னும் கோட்டையை அவன் கட்டி முடித்தான். பிற்காலங்களில் இது பிரசித்தி பெற்ற பாடலிபுத்திரம் என்னும் தலைநகரமாக வளர்ந்தது. அவனது தாயார் புகழ்பெற்ற லிச்சாவி இனத்தைச் சார்ந்தவள். கோசலத்தைச் சார்ந்த இளவரசியொருத்தியைஅவன் மணந்தான். லிச்சாவிகளின் மீதும், தன்மனைவியின் நாடான கோசலத்தின் மீதும் போர் தொடுத்து அவன் வெற்றியும் கண்டான். கோலசத்தின் பெயர் இது முதல் வரலாற்றில் தனியாக இடம் பெறுவதில்லை. அது மதப்பேரரசுடன் இணைந்திருக்க வேண்டும்.

**லிச்சாவிகள்**

லிச்சாவி மரபினர், கூட்டத்தினர் அல்லது இனத்தினர் இந்திய வரலாற்றிலும், பிற கதை இலக்கியங்களிலும் முக்கியப் பங்கு கொண்டவர்களாக விளங்குகின்றனர். ஆயிரமாண்டுகளுக்கும் மேலாகவே புகழ் எய்தியிருந்த அவர்களைப்பற்றி ஒரு சில வார்த்தைகளேனும் கூறுவது அவசியமாகும்[1]. கங்கையாற்றின் வடக்கில், பீகார் மாகாணத்தைச் சேர்ந்த முசாபர்பூர் மாவட்டமெனத் தற்போது வழங்கிவருவதும், 'விரிஜிகளின்' நாடெனப் பண்டைய நாட்களில் விளங்கியதுமான பகுதியில் லிச்சாவிகள் வசித்து வந்தனர். பத்து அல்லது பன்னிரண்டு மைல்கள் சுற்றளவுள்ள 'வைசாலி' என்னும் கம்பீரமான நகரம் அந்நாட்டின் தலைநகரமாக விளங்கியது. ஆற்றின் வடகரையில், பாடலிபுத்திரத்திலிருந்து (பாட்ன) தோராயமாக வரையப்படும் நேர்க்கோட்டில் சுமார் இருபத்தேழு மைல்களுக்கப்பாலும்,ஹாஜீபூருக்கு இருபது மைல்கள் வடக்கிலும், பாஸ்ராவிற்கு அருகில் தற்போது சிதைந்து கிடக்கும் சில கிராமங்கள் இருக்குமிடத்திலேயே, ஒரு காலத்தில் வைசாலி என்னும் நகரமிருந்திருக்க வேண்டும். சில பிரபுக்களைக் கொண்ட குழுவொன்று அரசுநடத்தியது. தேர்ந்தெடுக்கப்பெற்ற தலைவன் ஒருவன் அக்குழுவிற்குத் தலைமை தாங்கினன். திபெத்தியர்களைப்போல, மங்கோலியச் சார்புள்ள ஒருவகை மலைச்சாதியினராக லிச்சாவிகளைக் கருதுவதற்குப் போதிய சான்றுகள் உண்டு. செத்தவுடல்களை

1 பெயரைப் பலவகையாக எழுதுவதுண்டு.

வெளியில் எறிந்து விடும் அருவருக்கத்தக்க பழக்கங்களை இவர்களும் கடைப்பிடித்தனர். சில சமயங்களில், பிரேதங்களை மரக்கிளைகளில் கட்டித்தூக்கி விடுவதுமுண்டு. கிரிமினல் வழக்குகளில் இவர்கள் கடைப்பிடித்த நீதி விசாரணைமுறை, திபேத்தியமுறைகளை ஒத்திருந்தது. திபேத்தின் முதல் அரசன் லிச்சாவி மரபைச் சார்ந்த சாக்கிய குடும்பத்தினன் என்று கூறப்படுகிறது. லிச்சாவி மரபைச் சார்ந்த மற்றுமோர் சாக்கியக் கிளையினனை கௌதமன் என்னும் முனிவனுக்கு இவன் உறவினன் என்றும் சொல்லப்படுகிறது. இத்தகைய மரபுச்செய்திகள் தரும் குறிப்பையும், மறுப்பதற்குச் சிறிதும் இடந்தராத கி. மு. 200–லிருந்தே தோன்றியிருக்கக்கூடிய பார்ஹுட், சாஞ்சி ஆகிய இடங்களிலுள்ள சிற்பங்களையும் நான் மேலும் தொடர்ந்து ஆராயும்போது, கிறிஸ்து சகாப்தத்தை யடுத்துள்ள நூற்றாண்டுகளில், மங்கோலியர் அல்லது மலைவாழ்சாதியினர், வடஇந்திய மக்களினத்தில் மிக அதிமாக இருந்திருக்கவேண்டும் என்ற கருத்துவலுப்பெறுகிறது. சாக்கியமரபினரின் மாமுனிவரும், வரலாற்றுச்சிறப்பெய்தியுள்ள பௌத்தசமயத்தைத் தோற்றுவித்த வருமான கௌதமபுத்தரென்பவர், மங்கோலியராகவே இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. மங்கோலியர் என்னும்போது, கூர்க்காவைப் போன்று மங்கோலியக் கூறுகளையுடையவரும் திபெத்தியருடன் தொடர்புடையவரும் என்ற கருத்தாலேயே கூறுகிறேன். இது போன்ற கருத்துகள் முன்னரே பீயல், பெர்க்குஸன் என்பவர்களால் வெளியிடப்பட்டுள்ளன. அவர்கள் சித்திக் அல்லது துரேனியன் என்ற சொற்களை மங்கோலியன் என்று பொருள்பட நான் பயன் படுத்தியது போலவே உபயோகித்திருக்கிறார்கள்[1]

பல நூற்றாண்டுகளாக லிச்சாவிகளின் ஆதிக்கம் வலுப்பெற்று ஓங்கியிருந்தது. கி. பி. மூன்றாவது நூற்றாண்டின் இறுதியில், முதலாம் சந்திரகுப்தன் லிச்சாவி இளவரசியை மணந்தது, குப்தப் பேரரசின் சிறப்பிற்கு அஸ்திவாரமிட்டது. நேபாளப் பள்ளத்தாக்கில் ஏழாவது நூற்றாண்டுவரையிலும் இவ்வினத்தைச் சேர்ந்த மன்னர்களே அரசு செலுத்திவந்தனர்.

பண்டைய நாட்களில் குசிநகரம், பாவா ஆகியவிடங்களில் வாழ்ந்து வந்த மல்லர்கள், லிச்சாவிகளின் நெருங்கிய உறவினர்களாக இருக்கக் கூடும். பௌத்த இலக்கியக்கதைகளில் மல்லர்களைப் பற்றிய குறிப்புகளைக் காணலாம்.

1 இந்தக்கருத்தைப் பல இந்திய ஆசிரியர்கள் வன்மையாகக் கண்டித்துள்ளனர். பதிப்பாசிரியரும் இக்கருத்தை ஏற்கிறார்.

இதுபோலவே, வரலாற்றுச் சார்புள்ள சமண சமயத்தை உருவாக்கிய மகாவீரனும், மங்கோலிய மலைச்சாதியினராக இருக்கக் கூடும். லிச்சாவிகளை, க்ஷத்திரிய வகுப்பில் தாழ்ந்தவர் எனப் பிராமண நூலாசிரியர்கள் கூறுவர். இதை ஆதாரமற்ற பொய்க் கூற்று எனத் தள்ளிவிடலாம்.

### உதயனும், தர்சகனும்

தோராயமாக கி. மு. 467-ல் அஜாதசத்ருவின் மகன் தர்சகன் பட்டமெய்தினன் எனக் கூறலாம். 1910 ஆம் ஆண்டில் கண்டெடுக்கப்பட்ட வடமொழி இலக்கிய நாடகமொன்றில், இவனைப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இந்நாடகம் 'பாசன்' என்ற மஹாகவி யொருவனால் இயற்றப்பெற்றது. தர்சகனையடுத்து கி. மு. 443-ல் அவனது மகன் உதயன் பட்டமேறினன். சோன் நதியின் மீது அமைந்துள்ள பாடலிபுத்திரத்திலிருந்து சில மைல்களுக்கப்பால் கங்கை நதிக்கரையில் அவன் 'குஸுமபுரம்' என்னும் நகரைக் கட்டிமுடித்தான். இவ்விரு நகரங்களையும் ஒவ்வோரமயங்களில் ஒன்றாகவே கருதிவிடுவதுமுண்டு. சோன், கங்கை ஆகிய இருஆறுகளும் கூடுகின்ற கூடல்பகுதியும், பாடலிபுத்திரத்தையடுத்து இவ்விரு ஆறுகளின் போக்கிலும், உதயன் காலத்திலிருந்து பல மாறுதல்களை அடைந்துள்ளன.

### தந்தையைக் கொன்ற கதை

பல நூல்களின் வாயிலாகப் பெறப்படும் புத்தபரம்பரைச் செய்திகள், ஒரே முகமாகப் பொறுமையிழந்த அஜாதசத்ரு தகப்பனைக் கொன்றான் என வலியுறுத்துகின்றன. பௌத்தரின் ஒன்று விட்ட சகோதரனான தேவதத்தன் அஜாதசத்ருவை இக் கொலையைச் செய்யத் தூண்டினன் என்றும் சொல்லப்படுகிறது. சமணர், அஜாதசத்ருவைத் தங்கள் சமயத்தை விடாது கடைப்பிடித்தவரெனக் கொண்டாடுவர். தந்தையின் வழிபற்றி, எண்பதாண்டு காலம் அரசு செலுத்தினர் என்றும், அவர் அரசை அடாத முறையில் கைப்பற்றினரென்றும் ஒப்புக்கொள்ளுவர். ஆனால், பிம்பிசாரன் சிறைக்கூடத்தில் தற்கொலை புரிந்து கொண்டான் என அவர்கள் அறிவிக்கின்றனர். இவ்விரு வகைச் செய்திகளும் பெரிதும் ஒத்திருப்பதால், அரசைத் தகாத முறையில் கைப்பற்றினர் என்ற வரையில் ஐயமெதுவும் தேவையில்லை. அஜாதசத்ருவிடம் சமணர் அதிக மதிப்புக் கொண்டிருந்தனர் என்பது தெளிவாகத் தெரிகிறது. இதனால், அஜாதசத்ருவின் அடாத செயலை மறைப்பதற்கென, பிம்பிசாரன் தற்கொலை

செய்து கொண்டான் என அவர்கள் புனைந்துரைத்திருக்கவும் கூடும்.[1]

### மன்னர்களும், தீர்க்கதரிசிகளும்

புத்த, சமண சமயங்களைத் தோற்றுவித்த கௌதம புத்தர், வர்த்தமான மஹாவீர தீர்த்தங்கரர் போன்றவர்களுடன், பிம்பிசாரன், அவன் மகன் ஆகிய இருவரும் கொண்டிருந்த உறவுமுறை இவ்விருவரின் ஆட்சிக் காலத்தை மிகச் சிறப்புள்ளதாகச் செய்கிறது. இவ்விரு மன்னர்களும் சமயத் துறவிகளுடன் கொண்டிருந்த நட்புறவைப் பற்றிய பரம்பரைச் செய்திகள் பல வகையில் முரண்பட்டவைகளாக இருக்கின்றன. அம்முரண்பாடுகளையெல்லாம் தற்போது நாம் எடுத்து ஆராய வேண்டுவதில்லை. ஆயினும், பிம்பிசாரன், மகாவீரனின் உறவினனென்பதும், கௌதம புத்தன், மகாவீரன், பிம்பிசாரன் ஆகிய மூவரும் சமகாலத்தவர்கள் என்பதும் உண்மையே என்பதில் சந்தேகமில்லை.

இரு ஆசான்களையும் அஜாதசத்ரு சென்று வணங்கினான் என்றும், அவனது ஆட்சிக் காலத்தில் கௌதம புத்தன் இறந்தான் என்றும் நம்புதற்குரிய சான்றுகள் உள்ளன. நவீன சிங்களக் கணக்கு முறைகளின்படி தோராயமாக கி. மு. 543-ல் புத்தன் மரணமடைந்திருக்க வேண்டும். ஆனால், அதற்கு அறுபது ஆண்டுகளுக்குப் பின்னரே அம்மரணம் சம்பவித்ததென்று, சற்றேறக்குறைய எல்லா ஆசிரியரும் ஒரு முகமாக எண்ணி வருகின்றனர். இங்குக் கையாளப்பட்டிருக்கும் கி.மு. 487 என்னும் குறிப்பு, அசோகன் பட்டமேற்பதற்கு 218 ஆண்டுகளுக்கு முன்னரே புத்தன் இறந்தான் என்ற சிங்கள மரபுச் செய்தியை ஒட்டியே அமைந்துள்ளது. சீனாவிலுள்ள மற்றுமொரு புத்த சமயப் பரம்பரைச் செய்தி, இக்கருத்தை உறுதிப்படுத்துகிறது.

### கி. மு. ஆறாவது நூற்றாண்டில் சமய நிலை

கி. மு. ஆறாவது நூற்றாண்டில் உலகமெங்கிலும், சமயம், மோட்சம் போன்ற கருத்துகள் மக்கள் மனத்தில் மிகத் தீவிரமான எண்ண அலைகளை எழுப்பியுள்ளன. இந்திய நாட்டிலும், அத்தகைய புரட்சி மகதத்திலும் அதையடுத்துள்ள பகுதிகளிலும்

1 சென்ற பதிப்புகளில் கூறியிருப்பது போலவே, அஜாதசத்ரு தந்தையைக் கொலை செய்தவன் என்ற புத்த சமயக் கருத்தை முழுவதும் தள்ளிவிடுவது முறையன்று எனத்தோன்றுகிறது. 'நிரயாவளிகாசூத்ரம்' என்ற சமண நூலில் காணப்படும் விருத்தாந்தம் டாக்டர் ஸ்மித் அவர்களின் கவனத்திற்கு வரவில்லை என்பது தெளிவு.

நடைபெற்றது. அங்கு மக்களின் இந்து சமய மாற்றம் முற்றுப் பெறவில்லை என்பதோடு இனப்பிரிவினைகளும் மிக அதிகமாக வழக்கிலிருந்தன. ஆட்சியாளருள் அறிவு மிகுந்த ஒரு சிலரை மேற்கிலிருந்து வந்த பிராமணர் க்ஷத்திரியர் எனக் கருதி வந்தனர். அவ்வாட்சியாளர் தங்களை, தங்கள் ஆத்மிக வளர்ச்சியை போதித்து வரும் ஆசான்களைக் காட்டிலும் உயர்ந்தோராகக் கருதிவந்தனர். அவ்வாசான்களும் கர்வமிக்கவராக இருந்தமையால் அவர்களுக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது. நான் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி, சிசுநாகரும், லிச்சாவிகளும், மற்றும் மகதத்தையும் அதைச் சுற்றிலுமுள்ள பகுதிகளையும் ஆண்டு வந்த பல அரச குடும்பங்களும், இந்தோ-ஆரியரல்லர் என்னும் என் கருத்து மேலும் வலுப் பெறுகிறது. திபெத்தியர், கூர்க்கர், பூதியர், மற்றும் தற்காலத்தில் உள்ள பல ஹிமாலய மலைச் சாதியினரைப் போல அவர்களும் மங்கோலிய வகையைச் சார்ந்த மலைச்சாதியினரேயாவர். பிராமணருக்கும் அவர்களது சீடர்களுக்குமிடையேயிருந்த இனவேற்றுமை, தத்துவம், சமயம் ஆகியவைகளைக் குறித்துப் பல புதிய கருத்துகளைச் சிந்தித்து வெளியிடுவதற்குத் துணையாயிற்று. அறிவு பெற்று, சமுதாயத்தில் உயர் நிலையிலிருந்தவர்கள் க்ஷத்திரியர் எனப் பிராமணரால் அழைக்கப்பட்டனர். உயர்ந்த அறிவும், மோட்ச சாம்ராச்சியத்தை அடையும் வகையும், தங்களுக்கே உரியன எனப் பிராமணர் கொண்டாடியதை, இப்புது வகுப்பினர் வெறுத்தனர்.

ஆத்மா, இறைவன் ஆகியவைகளின் சூனுதிசயங்களை விளக்குவதன் பொருட்டுப் பல வகையான விளக்கங்கள், பல்வேறு இனத்தினரால் வெளியிடப் பெற்றன. இவர்கள், மனிதனுக்கும் இறைவனுக்குமிடையுள்ள தொடர்பையும், மோட்ச சாம்ராச்சியத்திற்குரிய சிறந்த வகையையும் குறித்துப் பேசினர்கள். 'சாந்தி' அல்லது 'விடுதலை' (மோட்சம்) என்பதற்குப் பிறவிப் பெருங்கடலிலிருந்து ஜீவன் விடுதலை பெறுவதே பொருள் என இந்தியத் தத்துவ ஆராய்ச்சியாளருள் பெரும்பாலானவர் கருதினர். அக்காலத்தில் பிராமணரால் விரும்பிக் கடைப்பிடிக்கப்பட்ட சமயக் கோட்பாடுகள், 'பிராமணங்கள்' என்னும் இலக்கியங்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அச்சமய நெறிகள், செயற்கைமிகுந்து, உயிரற்று ஏராளமான சடங்குகளை உள்ளடக்கியவைகளாக விளங்கின. தொல்லை மிக்க சடங்குகளைச் செய்து முடிப்பதற்கான விரிவான விதிமுறைகளைக் கண்டு, மக்கள் பலர் மருண்டனர். உயிர்ப்பலி அளிப்பதிலடங்கிய குரூரப்பாங்கு பல

ருக்கு அருவருப்பை உண்டாக்கின. எனவே, மோட்ச சாம்ராச்சியத்தை அடைவதற்குப் பலரும் விரும்பி ஏற்கக் கூடிய, புதியதொரு வழியைத் தேடுவதில் மக்கள் முனைந்தனர். எல்லையற்ற அறிவினால், குறிக்கோளை அடைந்து விடலாம் என்றெண்ணிய சிலர் புதுவகையான தத்துவங்களை ஆராய்ந்தறிவதற்கு முயன்றனர். உடலைத் தாழ்த்தி, ஜீவனை விடுவித்து விடலாகும் என்றெண்ணிய சிலர் மிகப் புனிதமான விரதங்களை விரும்பி ஏற்கவும், கொடூரமான வழிகளில் உடலை வருத்தவும் முற்பட்டனர்.

**சமணமும் பௌத்தமும்**

இவ்வாறு எழுந்த அல்லது தழைத்து வந்த பல வகையான வேதாந்தக் கருத்துகளும், சமயப் பிரிவுகளும், காலப்போக்கில் மறைந்தன. இரண்டு மட்டிலும் தலைதூக்கி நின்றன. எஞ்சி நின்ற இவ்விரு சமயப் பிரிவுகளின் கோட்பாடுகளும் தற்போது சமணம், பௌத்தம் என்ற பெயரில் வழங்கி வருகின்றன. இவ்விரு சமயங்களையும் நிலை நிறுத்திய பெருமை இரு மடாலயங்கள் அல்லது சமயச் சார்புள்ள நிறுவனங்களையே சாரும். இச்சமயக் கோட்பாடுகள், இன்றும் மக்களின் சிந்தனைக்குரியவைகளாக விளங்குகின்றன.

பிறப்பிடமான இந்திய நாட்டிலிருந்து புத்த சமயம் ஒருவாறு மறைந்து விட்டதெனலாம். ஆனால், இன்றும், உலகில் ஆத்மிகத் துறையில் சிறந்ததொரு சக்தியாக விளங்கி வருகிறது. இலங்கை பர்மா, சயாம், திபெத், மங்கோலியா, சீனா, ஜப்பான் ஆகிய நாடுகளில் வெவ்வேறு வகையான புத்தமதக் கோட்பாடுகள் வழக்கிலிருந்து வருகின்றன. அத்துணை விரிவாகப் பரவுவதற்குச் சமணம் என்றுமே விழைந்ததில்லை. இந்திய நாட்டின் மேற்குப் பகுதியில், குறிப்பாக ராஜஸ்தானத்தில், ஒரு சிலர் இன்னும் அதைக் கடைப்பிடித்து வருகின்றனர். அச்சமயத்தைப் பின்பற்றுபவர்களின் எண்ணிக்கை குறைவாக இருந்த போதும், அச்சமயத்தின் கருத்துகளைப் பெரும்பாலானோர் இன்றும் மதித்து நடக்கின்றனர். பண்டைய நாட்களில், இந்திய நாட்டுச் சாம்ராச்சிய மன்னர்கள், அச்சமயத்தை மிக்க விருப்புடன் ஏற்றுப் போற்றி வந்தனர்.

வரலாற்றுச் சார்புள்ள சமயங்களாக, சமணமும் பௌத்தமும், மகதம் அல்லது அதையடுத்துள்ள இராச்சியப் பகுதிகளில் எழுந்தன. பிம்பிசாரன், அவனது மகன் அஜாதசத்ரு ஆகியோரின் ஆட்சி காலங்களில் இவை எழுந்தன என்று கூறலாம். இவ்

விரு சமயங்களின் கோட்பாடுகளும், பண்டைய சமயக் கருத்து களுடன் தொடர்பின்றி, முற்றிலும் புதியவையாக எழுந்தவை அல்ல என்பது கூறாமலே விளங்கும். சமண மகாவீரன், கௌதம புத்தன் ஆகியோர் அறிவித்த அறநெறிகள், காலத் தால் அவர்களுக்கும் முற்பட்ட தீர்க்கதரிசிகளின் அடி பற்றியே எழுந்தவை என்பது தெளிவு. மகாவீரனின் சமயத் தொண்டு, அவனுக்கு இரண்டரை நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த பார்சவநாதன் என்பவரால் நிறுவப்பெற்ற சமய நிறுவ னத்தின் அங்கத்தினனாகத் தொடங்கியது. கௌதமனின் ஒன்று விட்ட சகோதரன் தேவதத்தனைத் தலைவனாகக் கொண்ட 'முன் னோடிகளான ஞானிகளின்' அடிபற்றியே, கௌதம புத்தனின் சமயக் கோட்பாடுகள் அமைந்தன. சமணம், பௌத்தம் ஆகிய சமயங்களின் முன்னோடிகளைப்பற்றி நாம் அதிகமாக கவலைப்பட வேண்டியதில்லை. பழமையைத்தேடி ஆராய்ந்தவர்களின்பொறுப் பில் அவ்வேலையை விட்டுவிடுவோம். மகாவீரனும் கௌதம னும் தோற்றுவித்த வரலாற்றுச் சார்புள்ள சமயங்களைக் குறித்தே இந்திய வரலாற்றை அமைக்கும் நாம் அதிக கவனம் செலுத்த வேண்டும். கற்பனைச் செய்திகளும், கட்டுக்கதை களும் இவ்விரு மதபோதகர்களின் வாழ்க்கைவரலாற்றைத் திரை யிட்டு மறைக்கின்றன. எனினும் தக்க சான்றுகளுடன் ஒரு சில உண்மைகள் புலப்படுகின்றன. காலத்தால் முற்பட்டது என்று கருதக் கூடியதும், நிலையில் சற்றுத் தாழ்ந்ததுமான சமணத்தை முதலில் ஆராய முற்படுவோம்.

**மகாவீரனின் வாழ்க்கை**

சமயத்துறையில் தான் பெற்ற பிருதுவான 'மஹாவீரன்' என்ற பெயரால் நன்கு அறிமுகமான வர்த்தமானன் என்றபெய ருடையவன், வைசாலி நகர லிச்சாவி இனத்தைச் சார்ந்த பிரபு ஒருவனின் மகனாவான். தனது கௌரவங்கள் யாவையும் துறந்து, பார்சுவநாதனால் நிறுவப்பெற்ற சமயக்கூட்டமொன்றின் அங்கத்தினனாகச் சேர்ந்து அங்குச் சிலகாலம் வாழ்ந்துவந்தான். அங்குள்ள விதிமுறைகள் அவனுக்கு மனஅமைதி அளிக்கவில்லை. சுமார் நாற்பது வயதையடைந்திருந்த அவன், தன்னைத்தானே ஒரு சமயத்தலைவன் எனப் பிரகடனப் படுத்திக் கொண்டான் எஞ்சிய வாழ் நாட்களில் முப்பதாண்டுகளுக்கும் மேலாக, தனது சமய நெறிகளை மக்களுக்குப் போதிப்பதில் அவன் கழித்தான். மகதம் அல்லது தெற்கு பீஹார், மிதிலை என்றும் திர்குட் என்றும் அழைக்கப் படுகிற விதேகம், அங்கம் அல்லது பகல்பூர் ஆகிய பகுதிகளில் அவன் சுற்றித் திரிந்து மதபோதனை செய்தான். சம

யத் தொண்டைமேற் கொண்டகாலத்தில், புதிய சமயப்பிரி வொன்றை நிறுவினன்: அதிலொரு பகுதியில் சமயத் தொண் டையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்ட ஆண் பெண் பாலரும் மற்றுமோர் பகுதியில், பிற தொழில்களைக் கடைப்பிடித் தொழுகி உலகியலில் உழன்றும் இச்சமயக் கருத்துகளை ஏற்ற ஆண் பெண்பாலரும் இருந்தனர். பாட்னா மாவட்டத்திலுள்ள 'பாவா' என்னுமிடத்தில் அவன் இறந்தபோது, அவனது சீடர்களின் எண்ணிக்கை 14,000-க்கும் மேற்பட்டிருந்ததென்றுகூறப்படுகிறது. தாய்வழியில், விதேகம், மகதம், அங்கம் ஆகிய நாடுகளை ஆண்டு வந்த மன்னர்கள் இவனுக்கு உறவினர்களாக இருந்தமையால், அவ்விடங்களில் தன் மதபோதனைகளுக்கு மன்னர்களின் ஆதர வையும் இவன்பெற்றான். பிம்பிசாரன், அஜாதசத்ரு ஆகிய இரு வருடனும் இவன் தொடர்பு கொண்டிருந்தான் என்பதை விளக்க வல்ல குறிப்புகள் உண்டு. இவன் மரணமடைந்த நாளைக்குறித்த பரம்பரைச் செய்திகளில் பலமுரண்பாடுகள் காணப்படுகின்றன. எனவே, அதைப்பற்றி உறுதியாக எதுவும் கூறுவதற்கில்லை. சமணர்கள் கி. மு. 527-ல் இவன் மரணமடைந்ததாக நம்பி வருகி றார்கள். அஜாதசத்ரு, லிச்சாவிகளுடன் பொருதபோது, இவன் அஜாத சத்ருவைச் சந்தித்தான் என்பதும் மறுக்கவியலாத உண் மையாக இருக்கிறது. மரணத்தைக் குறித்த சமணரின் தெய் தியை ஏற்பது பொருந்துவதாக இல்லை. பேராசிரியர் யாகபி யின் கருத்திற்கிணங்கத் தோராயமாக கி. மு. 467-ல் மகாவீரர் மரணமடைந்திருக்கக் கூடும்.

**புத்தரின் வாழ்க்கை வரலாறு**

சாக்கியரின் முனிவனான கௌதமனின் (சாக்கியமுனி) வாழ்க் கையும் சற்றேறக்குறைய மகாவீரனின் வாழ்க்கையைப் போன்றே இருக்கிறது. அவனுக்குப் 'புத்தன்' என்றும், 'ஞானி' என்றும் பலவகையானபெயர்கள்வழங்கிவந்தன. ஞானமார்க்கத் தின் (போதி) எல்லையை அவன் அடைந்து விட்டதால் அவனுக்கு அப் பெயர் ஏற்பட்ட தென்று கூறப்படுகிறது. கௌதமனும், அவனுடன் போட்டியிட்ட தீர்க்கதரிசியைப் போல சாக்கியரின் உயர் குலமொன்றில் உதித்தவன். கோசல சாம்ராச்சியத்தின் சிற்றரசும், நேபாள தாரையில் அமைந்திருந்ததுமான கபில வாஸ்து என்னும் நாட்டரசனின் மகனாவான் என்றும் கூறப்படு கிறது. அவனை க்ஷத்திரிய குலத்தைச் சேர்ந்தவனாகப் பிராமணர் கருதினர். கௌதமனைக்குறித்துப் பல கற்பனைக்கதைகள் வழக்கி லிருந்து வருகின்றன. சுருங்கக் கூறுமளவில், அரண்மனையின் போக வாழ்க்கை அவனுக்கு எவ்வாறு வெறுப்பூட்டியதென்றும்,

இவ்வகையான வெறுப்புணர்ச்சிகள் இறுதியில் அவன் பெருந் துறவுமேற்கொள்வதற்கு எவ்வாறு வழி அமைத்தன என்றும் இக் கதைகள் விரித்துரைக்கின்றன. வீட்டைத் துறந்த அவன் 'கயை' என்னுமிடத்தை யடைந்து, மோட்சசாம்ராச்சியத்தை அடையும் பொருட்டு உடலை வருத்திக் கொடுந்தவமியற்றினன். இத்தகைய தவத்தினால் எவ்விதப் பயனுமில்லை என்பதை அவன் விரைவி லேயே உணர்ந்தான், தான் கண்டறிந்த உண்மையைப் பிறருக் குப் போதிப்பதிலேயே எஞ்சிய வாழ்நாட்களைக் கழிப்பதென்று முடிவுசெய்தான். காசியினருகில் சாரநாத் என்னுமிடத்திலுள்ள 'மான் பூங்காவை' அவன் சென்றடைந்ததும், அவனைப் பின்பற்று வதற்கு ஐவர் முன்வந்தனர். இவ்வாறு சிறு அளவில் தொடங் கிய கூட்டுறவு, பிற்காலத்தில் பிரசித்திபெற்ற பௌத்த சங்க மாக வளர்ந்தது. மேலும் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குத் தன் சமயக்கருத்துகளை மக்களுக்கு எடுத்தோதுவதில் கழித்து, எண் பதாவது வயதில் குசிநகரம் என்னுமிடத்தில் மரணமடைந்தான். ப்வேசர் மலைத் தொடருக்கு அருகில், சிறு ரப்தி, கண்டக் ஆகிய வைகளின் கூடலில், நேபாள அரசெல்லைக்குள் குசிநகரம் இருந் திருக்கக் கூடும். கோரக்பூர் மாவட்டத்திலுள்ள பிரசித்தி பெற்ற 'காசியா' பாழ்ச் சின்னங்கள் வேதாடிபா என்னும் பௌத்த மடாலயத்தின் அழிவுச்சின்னங்களாக இருக்கக்கூடும். வேதாடிபா மடாலயம், குசிநகர மடாலயத்தின் ஆதிக்கத்தில் இருந்திருக்க வேண்டும். பௌத்தனின் மரணத்துடன் தொடர் புள்ளவைகளாதலால் இவைகள் 'பரிநிர்வாண மடாலயங்கள்' என அழைக்கப் பெறுகின்றன.[1] மகாவீரன், மரணமெய்திய நாளைப் போல, புத்தன் மரணமடைந்த நாளையும்,நாம் எளிதில் தீர்மானிக்க இயலவில்லை. மகாவீரன், புத்தன் ஆகிய இருவரை யுமே, மன்னர்களான பிம்பிசாரன் அஜாதசத்ரு ஆகியவர்களின் சமகாலத்தவர்களாகக் கருதவேண்டியிருக்கிறது. இருவருமே, அஜாதசத்ருவின் ஆட்சிகாலத்திலேயே மரணமடைந் திருக்க வேண்டுமென்று எண்ணுவதற்கும் இடமிருக்கிறது.

**சமணமும் பௌத்தமும் — ஒப்புநோக்குதல்**

இவ்விரு சமயவாதிகளின் வாழ்க்கை வரலாற்றிலுள்ள ஒற் றுமையையும், இச்சமயக் கோட்பாடுகளில் மேலெழுந்த வாரி

[1] ஆசிரியரின் 'குசிநகரம்' என்னும் கட்டுரையை, ஹேஸ்டிங்ஸ் 'சமயம், நன்னெறி களஞ்சியத்தில்' காண்க. 'காசியா' பண்டை நாட் களில் குசிநகரமாக இருந்திருக்க முடியாது. குசிநகரம் சீனயர்த்திரிகர் விஜயம்செய்த காலத்திலேயே பாழடைந்து விட்டது. காசியாவிலுள்ள கட்டடங்கள் குப்தர் காலத்திலும், அதற்குப் பின்னும் நிலைத்திருந்தன.

யாகக் காணப்படும் ஒரு சில ஒருமைப்பாடுகளையும் கொண்டு, பண்டை நாட் புலவர் சிலர் சமணத்தைப் பௌத்த சமயத்தின் ஒரு பிரிவாகவே எண்ணி வந்தனர். அக்கருத்து மிகவும் தவறானது எனத் தற்போது உணரப்படுகிறது. இருபுது முறைகளையும் சமயநோக்குடன் ஆராய்ந்தாலும் அல்லது தத்துவங்கள் எனக் கருதி ஆய்ந்தாலும், அவையிரண்டும் வெவ்வேறானவை என்பதும் புலனாகும். சமண பௌத்தக் கோட்பாடுகள் இரண்டையும் 'சமயப்பிரிவுகள்' என்று கூறுவதே மிகவும் பொருத்தமுடையது. ஏனெனில் மகாவீரன், பௌத்தன் ஆகிய இருவரையும் முதற்கண் இந்து சமயச் சீர்திருத்தவாதிகள் என்றே கருத வேண்டும். தங்கள் வாழ்நாட்களில் வேரூன்றிவிட்ட இந்து சமுதாயத்தின்சாதிமுறை என்ற அடித்தளத்தை நேரடியாகப்பெயர்த்து எறிந்து விடுவதற்கு இருவருமே முயலவில்லை. ஆயினும் இருவரும் வேத நூல்களின் சீரமைப்பை ஒதுக்கியும், உயிரினங்களை பலியிடும் வழக்கத்தைக் கண்டித்தும் வந்தனர். மகாவீரர், கௌதமர் ஆகிய இருவரையும் பின்பற்றியவர்கள், இந்து சமயக் கடவுளரிடம் கொண்டிருந்த பக்தியையும் நம்பிக்கையையும் இழந்துவிட வேண்டுமென்று என்றுமே வற்புறுத்தப்படவில்லை. சமணரும் பௌத்தரும் உண்மையில் இந்து சமயம் சார்ந்த கடவுளரை வழிபட்டு வந்தனர். இந்திரன், பிரமன் போன்ற கடவுளர்கள் பௌத்தரின் கதைகளிலும், சிந்தனையிலும் சீரிய இடம் பெற்றிருந்தனர். சிவன், விஷ்ணு ஆகிய கடவுளரைப் பௌத்தனின் துணையாட்களாக எண்ணி இலங்கையிலுள்ள பௌத்தர்கள் வழிபட்டனர். தங்கள் முன்னோர்களின் வழிபற்றி இன்னும் சமணர்கள்,பிராமணர்களை, பிறப்புஇறப்பு ஆகியவைகளையொட்டிச் சடங்குகளை நடத்தி வைப்பதற்கு, ஆசான்களாக ஏற்கின்றனர். சில சமயங்களில், ஆலய வழிபாட்டிற்கும் கூட அவ்வாறு செய்வதாக நம்பப்படுகிறது. இந்து சமயத்துடன் தான் கொண்ட தொடர்பைச் சமணம் என்றுமே வேரறுத்துக்கொண்டதில்லை. சமணரில் சிலர் தங்களை இந்துக்களாகவே கருதுகின்றனர். மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் போதும், தங்களை அவ்வாறே கருத வேண்டுமெனக் கோருகிறார்கள். பிராமணக் கோட்பாடு செறிந்த இந்து சமயத்திற்கும் சமணத்திற்கும் உள்ள தொடர்ச்சியான உறவை சமணம் இந்திய எல்லைக்கு அப்பால் பரவாமல் நின்றமைக்கு ஒரு முக்கிய காரணமாகக் கூறலாம்.

பௌத்த சமயம் தனது தனித்தன்மையைப் பல வகைகளிலும் வளர்த்துக் கொண்டதெனக் கூறலாம். தத்துவம் என்ற அடிப்படையிலும், சமயம் என்ற முறையிலும், அன்னியரின்

தேவையைப் பூர்த்தி செய்கின்ற வகையில் அது வளர்ந்தது. இதனல், காலப் போக்கில் அன்னிய நாடுகளில் அது புத்துயிர் பெற்று விளங்கிற்று எனினும், இந்திய நாட்டில் அநேகமாக வழக்கொழிந்து போயிற்று. கொள்கைகளைப் புறத்தே ஏற்போருக்கும் சமணம் அதிக கௌரவமளிக்கிறது. பௌத்தமதமோ எனில், புத்தனின் போதனைகளைக் கடைப்பிடித்து அணுவளவும் பிசகாது பாதுகாக்கும் துறவிகளைக் கொண்ட மடாலயங்களையே பெரிதும் போற்றி மதித்தது. துறவிகளைக் கொண்ட பௌத்த மடாலயங்களே, புத்த சமயக் கொள்கைகளைப் பரப்புவதில் மிகவும் பயனுள்ள ஒரு கருவியாக விளங்கியது. தீவிர புத்த சமயவாதி ஒருவன், எந்நாட்டைச் சார்ந்தவனுக இருப்பினும், தன்னை ஓர் இந்து எனக் கருதுவதற்குக் கனவிலும் இடமளிக்க விரும்புவதில்லை.[1] சமணம், பௌத்தம் ஆகிய இரு சமயக் கோட்பாடுகளில் அடங்கியுள்ள, வேதாந்த, அறநெறி, தத்துவக் கருத்துகளையும், இரண்டிற்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும், இரு சமயங்களையும் சார்ந்த மடாலயங்களின் விதி முறைகளையும் ஐயமற அறிந்து கொள்ளும் விருப்பமுடைய வாசகர்கள், தற்போது கிடைக்கின்ற ஏராளமான பிற நூல்கள் யாவற்றையும், அல்லது ஒரு சில நூல்களையேனும் கற்பது அவசியமாகிறது. சில குறிப்புகளையே இங்கு நாம் காண இயலும்.

### சமணசமயக் கோட்பாடுகள்

மனிதனின் 'முழுமைக்குணம்', இகம், பரம் ஆகிய இருவகையான சிந்தனைகளை உள்ளடக்கியது என்னும் கொள்கை, சமண சமயக் கோட்பாடுகளின் கருவாக விளங்குகிறது. 'ஜீவனின் ஒருமைப்பாடு' என்னும் வேதாந்தக் கருத்தைச் சமணம் ஏற்பதில்லை. பிராணிகள், மானிடர் ஆகிய உயிரினங்களோடு தாவரங்களுக்கும், வளரும் தன்மையுடைய தாதுப் பொருள்களுக்கும், ஆகாயம், காற்று, அக்கினி ஆகியவைகளுக்கும், ஜீவனுண்டு (ஜீவா) எனச்சமணர் நம்பி வருகிருர்கள். இவ்வெவ்வேறு ஜீவன்களின் உள்ளுணர்வு பலதரப்பட்டது என்று அவர்களது சித்தாந்தம் கூறும்.[2] ஒருகல்லிற்கும், நீருக்கும், காற்றிற்கும் கூடத்தீங்கி

[1] சூளுரைக்காத, திரைமறைவான, அரைகுறையான இந்திய பௌத்தர்களைக் குறித்த விவரங்களுக்கு. எம். எம். ஹெச். பி. சாஸ்திரி என்பவரின் புலமைமிக்க முகவுரையுடன் கூடிய, நாகேந்திரநாத் வாசு என்பவரின் 'தற்கால பௌத்த சமயமும், ஒரிசாவில் அதைப் பின்பற்றுவோரும்' (ஹாரேபிரஸ், கல்கத்தா 1911) என்னும் நூலைப் பார்க்கவும்.

[2] வோர்டுஸ்வொர்த் என்னும் ஆங்கிலக்கவி இயற்றியுள்ள 'ப்ரிலூயூட்' (முகவுரை) என்னும் கவிதையிலுள்ள வரிகளுடன் ஒப்புநோக்குக:- (பதிப்பு 2.1851) பகுதி III. பக். 49.

ழைப்பது சாத்தியமாகும் என அவர்கள் கருதுகிறார்கள். அகில உலகையும் படைத்த ஆதிக்கடவுள் ஒருவன் உண்டென்பதையும் சமணம் தீவிரமாக மறுக்கிறது. 'மனித ஜீவனுள் பதுங்கிக் கிடக்கும் உயர்ந்த, புனிதமான சக்திகளில் முழுமை பெற்ற விளக்கமே' பரம்பொருள் எனச் சமணம் கூறுகிறது. இவ்வடிப்படையில் காம்டே என்பவன் பிற்காலத்தில் தோற்றுவித்த 'மானிட இனச்சமய' வாதத்திற்குச் சமணம் முன்னோடியாக விளங்குகிறது எனக் கூறலாம்.

'அஹிம்சை (கொல்லாமை), எத்தகைய பரிணாம நிலையிலிருந்தாலும், ஜீவராசிகளில் ஒரு துரும்பிற்கும் தீங்கிழையாமை' என்பதே தர்மம் அல்லது அறநெறித்துறையில் சமண சமயத்தின் முக்கிய குறிக்கோளாகக் கூறப்படுகிறது. பிராமண, புத்த மதங்கள் அஹிம்சைக்கொள்கைக்கு அளிக்கும் விளக்கங்களை விட சமணரின் விளக்கம் மேலும் விரிவானது. சாதாரணமாக அஃறிணையாக எண்ணப் படுபவைகளுக்கும் 'ஜீவன்கள்' உண்டு என்ற விநோதமனப்பாங்கு, சமணரின் நோக்கில் அஹிம்சைக் கொள்கையை மேலும் விரிவடையச் செய்கிறது.

விலங்கினமொன்றைக் கொன்று விட்டதாகக் குற்றம் சாட்டப் பெறும் கைதி ஒருவனுக்கு, ஓர் அரசன் மரண தண்டனை விதித்தான் என்ற இது போன்ற செய்திகளைக் கேள்வியுறும் போது, இது அரச தர்மத்திற்கு மிகவும் முரண்பாடுள்ளதாயிற்றே என்ற ஐயமும் குழப்பமும் இந்திய வரலாற்று வாசகர்களுக்கு ஏற்படுவதுண்டு. அகிம்சைக் கொள்கையைப் புறக்கணிக்கும் ஒவ்வொரு குடிமகனுக்கும், பன்னிரண்டாவது நூற்றாண்டில் குஜரத்தையாண்டு வந்த குமார பாலன் மரணதண்டனை வழங்கினான். பொருளற்றதாக விளங்கும் அவனது செய்கையை நேர்மையானதென்று பின்வரும் சான்று தெளிவாக்கும்:

---

'கல். கனி, பூ போன்ற இயற்கையின் பரிணாமம் ஒவ்வொன்றிற்கும்
பெருஞ்சாலையில் பரவிக்கிடக்கும் தனிக்கல் ஒவ்வொன்றிற்கும்
நான் நெறியான வாழ்வளித்தேன்: அவைகள் உணர்ச்சியுள்ளவை
[என நான் கண்டேன்.
அல்லது ஏதோ ஓர் உணர்ச்சிவகையுடன் பொருத்தினேன்; பரந்த
[இவ்வுலகு
அதிக உணர்ச்சியுள்ள ஜீவனைத் தன்னுள் கொண்டுள்ளது; என்
கண்ணில் படுகின்றயாவும் உள்ளுணர்வோடு, பெரு மூச்சு விடு
[கின்றன.

கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் இளங்கலை வகுப்பில் பயிலும் போது, இத்தகைய சிந்தனைகள் கவியின் உள்ளத்தில் எழுந்துள்ளன.

'ஆண், பெண் அல்லது குழந்தையேயாயினும், பிறரது உள்ளத்தைப் புண்படுத்துகின்ற செய்கை யொன்றிலும் உண்மையான சமணன் ஈடுபடமாட்டான். சமண சமய நெறிகளையும் அவன் புறக்கணிக்கமாட்டான். மன்னராயினும், போர் வீரராயினும், வணிகராயினும், தொழிலாளராயினும், உழவராயினும், வெவ்வேறு வாழ்க்கையைக் கடைப்பிடித்தொழுகும் ஆண், பெண் ஒவ்வொருவருக்கும் ஜீவனின் அறநெறிகள் பொதுவானவையாக விளங்குகின்றன...... ..................................................

........"கடமையைச் செய். முடிந்த அளவில் மனிதப் பாங்குடன் கடமையைச் செய்து முடிப்பாயாக"—சுருங்கச் சொல்லின், இதுவே சமணத்தின் முக்கியக் குறிக்கோளாகும். கொல்லாமை ஒருவனது கடமையை நிறைவேற்றுவதில் இடையூறு விளைவிக்காது. கொலையாளியைத் தூக்கிலிடுவது அரசன் அல்லது நீதிபதியின் கடமையாகும். கொலையாளியின் செய்கையால், கொலையுண்டவனின் உரிமை பறிக்கப்பட்டது. நீதிபதி அல்லது அரசனின் ஆணை அத்துமீறிய இச் செய்கைக்கு மாறுக விளங்குகிறது. சமணம் அதைக் கடைமையெனத் தீர்ப்பளிக்கிறது. போர்க் களத்தில் பகைவனைக் கொல்லும் போர் வீரனின் செயலும் இது போன்றதேயாகும். சமணம் கட்டுப்பாடுகள் மிகுந்த ஓர் சமயமாக விளங்குகிறது. பல்வகைகளில் புலனடக்கத்தையும், மிகக் கடுமையான நெறிகளையும் கொண்டது. பரவலாக அது சாதி முறையைக் கண்டிக்கிறதெனினும், நடைமுறையில் நிகழ் காலச் சமணன் அவனது இந்து சகோதரனைப் போலவே சாதிமுறை என்ற இரும்புத் தளையில் சிக்கி உழலுகிறுன்.'

வெள்ளை ஆடை அணிந்தவர் அல்லது சுவேதாம்பரர், ஆகாயத்தையே ஆடையாகக் கொள்பவர் அல்லது திகம்பரர் அல்லது ஆடையற்றவர் என்ற இரு பிரிவுகள் சமணரிடையே காணப்படுகின்றன. இப்பிரிவினை கி.பி. 2 ஆம் நூற்றுண்டிலேயே தோன்றியிருக்கக் கூடும். ஒவ்வொரு பிரிவினருக்கும் தனித்தனியான அறநூல்கள் உண்டு. சுவேதாம்பர வகுப்பிலிருந்து அண்மையில் பிரிந்த ஸ்தனகவாசிகள் என்னும் கிளையினர் உருவ வழிபாட்டை நீக்கி விட்டனர்.

'பட்டினிச் சாவு' என்னும் தற்கொலையைச் சமணர் விரும்பி ஏற்பர். புத்தர்கள் இம்முறையில் மிக்க அருவருப்புக்கொண்டு ஒதுக்கித் தள்ளினர். மேல் நோக்காக இதைக் கருதுபவர்களுக்கு, இது அகிம்சை நெறிக்கு முரணனதென்று தோன்றும்.

ஆனால் சமண தத்துவத்தில் இதற்குள்ள விளக்கம் திருமதி ஸ்டீவன்ஸனின் நூலில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

**புத்தனின் போதனைகள்**

மகாவீரன், மற்றும் இந்நாட்டிலுள்ள சமயவாதிகளைப்போல கௌதம புத்தனும், வழக்கிலிருந்து வரும் தத்துவக் கருத்துகளை ஏற்றான். 'பிறப்பு', 'கர்மா' இவை போன்றவைகளுக்கு ஆதாரம் எதுவும் தேவையில்லை என்றும், இவ்வியற்கை விதிகளை விவாதமின்றி ஏற்பதே முறையாகும் என்றும் இந்திய சமய தத்துவ ஞானிகள் கருதுவர். ஒரு மனிதனின் பூர்வ ஜன்ம புண்ணிய பாபங்கள், அவனது நிகழ்கால வாழ்கையை அமைக்கின்றன என கர்ம விதிக் கோட்பாடு கூறுகின்றது. பிறப்பென்பதே தீமை, மறுபிறப்பிலிருந்து விடுதலை பெறுவது மிகச் சிறந்த வரமாகும்; நற்பண்புகளே பிறப்பு இறப்பிலிருந்து மனிதனை விடுவிக்கக் கூடியவை. நற்பண்புகளை வளர்ப்பதற்குக் குற்றமற்ற அறவாழ்வு மிகவும் தேவையானது என்ற கொள்கைகளைப் புத்தன் வகுத்தான். மனம், வாக்கு, சிந்தனை ஆகியவற்றாலும் பரிசுத்தமெய்துவதைக் குறிக்கோளாகக் கொள்ளவேண்டுமென்று தன் சீடர்களை வற்புறுத்தினான். உயிரினங்களை வதைக்கவோ, கொல்லவோ கூடாது; திருடுவது கூடாது; துறவறத்தை மேற்கொள்ள வேண்டும்; பொய் பேசுவதையும் புறங்கூறுவதையும் அகற்ற வேண்டும்; போதை தரும் பொருள்களை நீக்க வேண்டும்; நடுப்பகலுக்குமேல் உணவருந்தக் கூடாது; ஆடல், பாடல் மற்றும் களியாட்டங்களில் மனத்தைச் செலுத்துவது கூடாது; பூமாலைகள், வாசனைத் திரவியங்கள், ஆபரணங்கள் ஆகியவைகளை உபயோகிக்கக் கூடாது;ஆடம்பரமிக்க உயர்ந்த படுக்கைகளைப் பயன்படுத்தக் கூடாது; விலையுயர்ந்த பொருள்களையோ, அல்லது பணத்தையோ வெகுமதியாகப் பெறக் கூடாது-என்னும் பத்துக் கட்டளைகளையும் சீடர்கள் கடைப்பிடித்தொழுக வேண்டுமெனப் புத்தன் விரும்பினான். சாதாரணமாக, உலகியல் வாழ்க்கையிலுள்ள சீடர்கள் முதல் ஐந்து கட்டளைகளைக் கடைப்பிடிப்பதே போதுமானது. விதிமுறைகளுக்கேற்பத் திருமணம் செய்துகொள்வதற்கும் அவர்களுக்கு அனுமதியுண்டு. உண்மை பேசுதல், பெரியோரை மதித்து வணங்குதல், பிராணிகளிடத்தில் அன்பு செலுத்துதல் போன்ற சீரிய ஒழுக்கங்களில் அவர்கள் மிக்க கவனம் செலுத்த வேண்டுமென வற்புறுத்தப்பட்டது.

'புனித விதிகள்' என அவன் கருதிய எட்டு விதிகள் வருமாறு: நன்னம்பிக்கை, நற்சிந்தனை, நல்வாக்கு, நன்னடத்தை, நல்வாழ்வு, நன்முயற்சி, நேர்மையான நினைவு, சீரிய தியானம் என்பனவாம். இவ்விதிகளை மானிடர் கடைபிடித்தொழுக வேண்டுமென அவன் விரும்பினன். இவன் வகுத்த வழி 'நடுநிலையான முயற்சி' எனக் கூறப்பட்டது. இது, போக விதிகளுக்கும், புலனடக்க முறைகளுக்கும் இடைப்பட்டதொரு மார்க்கமாக அமைந்தமையால் அப்பெயர் பொருத்தமுடையதாகவே விளங்குகிறது. புனித வழியில் பிரயாணத்தைத் தொடங்கும் சாதாரண ஆண் பெண் பாலரும் போற்றுதற்குரிய வெற்றி பெறலாகும். ஆனல் முழுப் பயன்பெற விரும்புபவர்கள், துறவிகளின் சங்கம் அல்லது மடாலயத்தில் அங்கத்தினராவதே நலமென்று கருதப்பட்டது. பெண்களும் துறவறத்தை மேற்கொள்வதற்கு அனுமதிக்கப்பட்டனரெனினும் பௌத்த சமயத்தில் பெண் துறவிகளுக்கு அதிகப் பங்கில்லை என்றே கூற வேண்டும். புத்த துறவிகளின் சங்கம் நன்முறையில் அமைக்கப்பட்டிருந்தது. நாளடைவில் அது செல்வச் சிறப்பும், சகோதர மனப்பாங்கும் கொண்ட சிறந்த நிறுவனமாக வளர்ந்து, ஆசியாக் கண்ட முழுவதும் புத்த சமயக் கோட்பாடுகளைப் பரப்புவதில் நற்பணி புரிந்தது.

**விருப்புடன் ஏற்கப்பட்ட பௌத்த சமயம்**

புதியதொரு சமயத்தை ஏற்படுத்த வேண்டுமென புத்தன் அதிகமாக விரும்பினன் எனக் கூறவியலாது. நூதனமான, மனேதத்துவ நியதியொன்றை அவன் போதித்தான். அனைவரும் கடைப்பிடித்தொழுக வேண்டுமென்பதற்காக அவன் சில அறநெறிகளை வகுத்தான். அதற்கு அடிப்படையாக அவனது மனேதத்துவ நியதி பயன்பட்டது. ஜீவன் மற்றும் பரமாத்மாவின் உண்மைநிலை, அளவிடற்கரிய அகிலத்தின் தன்மை, இதுபோன்ற விவாதங்களில் ஈடுபடுவதற்கு அவன் விரும்பவில்லை. அத்தகைய விவாதங்கள் பயனற்றவை என்பது அவனது கருத்தாக இருந்தது. ஆக்கத் தொழிலை மேற்கொண்டிருந்த பரம்பொருள் ஒருவனுண்டு என்பதை அவன் வெளிப்படையாக மறுக்கவில்லை. ஆனல் அப்பரம்பொருளுக்கு அவன் அதிக மதிப்புக் கொடுக்கவில்லை. வேதங்கள் அப்பழுக்கற்ற நீதிகளைப் போதிக்கின்றன என்பதை அவன் ஏற்கவில்லை. ஆனல் நடைமுறையில் இந்து சமயம் சார்ந்த தெய்வங்களின் மீது மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையையும் மற்றும் அவர்களிடம் மலிந்திருந்த ஏராளமான மூடப் பழக்க வழக்கங்களையும் குறித்து அவன் கவலைப்படவே இல்லை. உண்மையில், மக்கள் கடைப்பிடித்தொழுகிய புத்த சம

யத்திற்கும், சமய ஏடுகளில் காணப்படும் 'தீவிர சமய வாதத்திற்கும், பண்டை நாட்களிலிருந்தே கருத்து வேற்றுமைகள் நிறைந்திருந்தன. பண்டைய புத்த இந்தியா எவ்வாறிருந்தது என்பதை விளக்குவதற்கு பர்மா ஒன்றே சிறந்த சான்றாக விளங்குகிறது. பௌத்த சன்னியாசிகளின் பழமைக் கொள்கைகளைத் தடையின்றி அவர்கள் ஏற்ற போதிலும், பேய், பிசாசு போன்றவைகளையும் மறைந்தோரின் ஆவிகளையும் அவர்கள் வழிபட்டு வந்தனர். இவை சிற்ப வடிவில் சித்திரிக்கப்பட்டுள்ளன. வெகு நாட்களுக்கு முன்னரே, தற்போது பர்மாவில் உள்ளதைப் போல, இந்திய நாட்டில் புத்த சமயம் ஊக்கமளிக்கவல்ல சமயமாகவே விளங்கி வந்தது.

**புத்த சமயக் கோட்பாடு மாறுதலடைதல்**

புத்தனின் உருவம், அவன் உயிருடனிருக்கும் போதே, சீடர்களின் உள்ளத்தை மிகவும் கவர்ந்தது. அவன்பால் சீடர்களுக்கு மிகுந்த பற்றேற்பட்டு விட்டது. குறிப்பாக அவனது மரணத்திற்குப் பின்னும், புத்தனின் உருவமும் அன்பும் சீடர்களின் உள்ளங்களில் நிலையாக இடம் பெற்றுவிட்டன. அவனைச் சாதாரண மானிடரிலும் உயர்ந்த புனிதப் பிறவியாக அவர்கள் கருதலாயினர். கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில், அல்லது ஒரு வேளை அதற்கும் முன்பாகவே, புத்தனை ஒரு தெய்வமாக எண்ணி அவனுக்குப் பூசை செய்யும் வழக்கமும் தோன்றிவிட்டது. புராதன சமயக் கோட்பாட்டின்படி, புத்தன் ஒரு தெய்வமாக மதிக்கப்படவில்லை. அத்தகைய சமயம், 'ஹீன அயனம்' என்ற பெயரால் அழைக்கப்படலாயிற்று. 'ஹீன அயனம்' என்பதற்கு, மோட்சத்தை அடைவதற்குரிய தாழ்ந்த முறை என்ற பொருள் கூறப்பட்டது. அழிவற்ற புனித உடலுள்ள ஒரு தெய்விகப் பிறவியாகப் புத்தனைக் கருதியும், தோத்திர வழிபாடுகளால் அவனைத் திருப்தி செய்ய முயன்றும் வந்த புதிய சமயக் கருத்துகளுக்கு 'மஹா அயனம்' என்ற பெயர் ஏற்பட்டது. இதுவே மோட்சமடைவதற்குள்ள உயர்ந்த முறை என்றும் சொல்லப்பட்டது.

ஹீனஅயனம் என்று வழங்கிய, காலத்தால் முற்பட்ட பௌத்த சமயம், உயர்ந்த அறநெறிகளடங்கிய ஆத்மிகத் தத்துவ முறைகளை உள்ளடக்கியிருந்தது. கிரேக்க, ரோமானியரிடையே வழங்கி வந்த 'ஸ்டோயிக்' தத்துவத்தை இது ஒத்திருந்தது எனக் கூறலாம். பிற்காலத்தில் தோன்றிய புத்த சமயக்கொள்கைகள் சற்றேறக் குறையக் கிறிஸ்துவ சமயக் கோட்பாடுகளை ஒத்திருந்தன எனக் கூறலாம். அத்தகைய பெயர் அதற்குச் சூட்

டப் பெறவில்லை. மற்றுமொரு வகையாகக் கூறுவதெனில் பிற் காலத்தில் தோன்றிய பௌத்த சமயம், இந்து சமயத்திலிருந்து அதிக மாறுதலையுடையதாக இல்லை.

**'புத்த சகாப்தம்' என்பதில்லை**

இந்து சமயம் சார்ந்த பிராமணச் சமயம் முழுவதும் வழக் கொழிந்து விடவில்லை என்பதை நினைவில் கொள்ளவேண்டும். கடந்த காலம் முழுவதிலும், அச்சமயத்தைப் பின்பற்றியவர்கள் ஏராளமாக இருந்தனர். இந்திய நாடெங்கிலும் புத்த சமயம் ஒரே காலத்தில் பரவியிருந்ததென்று வர்ணிப்பது, ஏற்கக்கூடிய வாதமா? என்பதும் இயற்கையானதொரு வினாவாகவே விளங்கு கிறது. 'புத்த சகாப்தம்' என்ற தலைப்புச் சில நூல்களில் காணப் படுகிறது. இது பொய்யாகவும், குழப்பம் விளைவிக்கக்கூடியதாக வுமிருக்கிறது. ஒரு புத்த சகாப்தமோ அல்லது சமண சகாப் தமோ என்றுமே வழக்கிலிருந்ததாகத் தெரியவில்லை. ஒரு குறிப்பிட்ட பேரரசின் எல்லைக்குள் அவ்வப்போது சமணம் அல்லது பௌத்தம் அதிகச் சலுகைகளை பெற்று, ஏராளமான சீடர்களையும் கவர்ந்து மிகப் பிரபலமாக விளங்கியது என் பதன்றி, பிராமண இந்து சமயத்தைவிட அதிகச் சிறப் பெய்தியிருந்ததென்ற செய்தி நம் காதுகளுக்கு எட்டியதே இல்லை. நாம் முன்னரே கூறியவாறு, மரணமடையும் போது, மகாவீரனுக்கு 14,000 சீடர்கள் இருந்தனர். இந்திய நாட்டி லுள்ள மக்கள் தொகையை எண்ணிப் பார்க்கும் போது, இது மிகச் சிறிய பகுதியென்பது தெளிவாக விளங்கும். பிற்காலங்க ளில், மன்னர் சிலரது ஆதரவினால் சமணம் மேலும் வளர்ந்தது. ஒரு சில சமயங்களில் சமணம், பேரரசர்களின் ஒப்புதல் பெற்ற சமயமாக விளங்கியது. இதனால், அரச குலத்தவர் சிலரும், அவரது குடிமக்களும், அச்சமயக் கொள்கைகளைப் பின்பற்றி ஒழுகி வந்தனர். பின்பற்றி வந்த சமயக் கொள்கைகளை அடிக்கடி மாற்றிக்கொண்ட அரசர்களின் எண்ணிக்கை மிகவுண்டு. பல நாட்கள் வரையிலும், அதிக விளம்பரமற்ற ஒரு சமயமாகப் புத்த மதம் மகதத்திலும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் மட்டிலுமே வழக்கிலிருந்தது. புத்தர் இறந்த இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின், அசோகனின் பேராதரவு அச்சமயத்திற்குக் கிடைத்தது. புத்த சமயத்தின் பெரு வளர்ச்சிக்கு, அசோகனது முயற்சியே அடிப்படையான காரணமாக விளங்கியதென்றாலும், அவனும் தன்நாட்டு மக்கள் யாவரும் புத்த சமயத்தையே கடைப்பிடிக்க வேண்டுமென்று வற்புறுத்தவில்லை. அரசாங்கக் கட்டளைகளுக் கிணங்க, உணவைப் பொறுத்தும், மற்றும் சில விதிகளையும் மக்

கள் கடைப்பிடிக்க வேண்டுமென்று அசோகன் வற்புறுத்தினன். ஆனல் புத்தனது அறநெறிகளையே யாவரும் பின்பற்றி நடக்க வேண்டுமென்று மக்களை வலியுறுத்தவில்லை. சமயத் துறையில் மக்களுக்குள்ள நம்பிக்கைகளில் அவன் தலையிடவில்லை. பதினே ருவது நூற்றுண்டில், இத்தகையதொரு முறையையே அக்பரும் கடைப்பிடித்தான். அசோகனது ஆட்சியிலும், பல மாகாணங்க ளிலுள்ள குடிமக்கள் பிராமண சமயத்தையே கடைப்பிடித்து வந் தனர் என்று எண்ணுவதற்கு இடமுண்டு. புராதன பிராமண சமயவாதிகளுக்கும், புத்த சமயவாதிகளுக்கும், இடையுள்ள விகி தாசாரம், பல மாகாணங்களிலும் மிகவும் வேறுபட்டிருந்தது. கிறிஸ்துவிற்குப்பின் ஐந்து, ஏழாவது நூற்றுண்டுகளில், இந்திய நாட்டிற்கு விஜயம் செய்த சீன யாத்திரிகர்களின் குறிப்புகளிலி ருந்து, இவ்விஷயத்தைப் பற்றிய பல குறிப்புகள் நமக்குக் கிடைக் கின்றன. பல்வேறு இந்திய சமயங்களைச் சார்ந்தவர்களிடையே இத்தகைய உறவு முறைகள் பல நூற்றுண்டுகளுக்கு முன்பும் நிலவியிருந்திருக்கவேண்டும் என்று நாம் ஊகிப்பதிலும் எவ்வித தவறும் இல்லை.

பிராமண சமயமும் எவ்வித மாறுதலுக்குமுட்படாது பழைய நிலையிலேயே இருந்து விடவில்லை. கி.மு. ஆறுவது நூற்றுண்டில் தோன்றிய மகாவீரன், புத்தன் மற்றும் பல சமயவாதிகள், பிராமண சமயத்திலுள்ள விரிவான சடங்குகளையும் இரத்தவெறி கொண்ட பலிகளையும் வன்மையாகக் கண்டித்தனர். சமணம், புத்தம் போன்ற புதிய மதங்கள் இதன் விளைவாக எழுந்தவை என்பதோடு, வேதக் கோட்பாடுகளையும் பிராமண ஆசான்களை யும் பின்பற்றி ஒழுகிய, இந்து மதத்தினரிடையிலும், இப்புதிய கருத்துகள் பரவியதால், அவர்களது சிந்தனையைத் தூண்டுவன வாயின. விலங்கினங்களுக்குத் தீங்கிழையாமை என்ற அகிம்சைக் கொள்கை பலரைக் கவர்ந்தது. இதனல், பழைய இந்து சமயச் சடங்கு முறைகளில் உள்ளடங்கிய அருவருப்பூட்டும் கொள்கை கள் பல நாளடைவில் வழக்கொழிந்தன. இத்தகைய மனமாற் றத்தைச் சித்திரிக்கும் பல செய்யுள்களை நாம் ஏற்கெனவே குறிப் பிட்டுள்ளவாறு மகாபாரத காவியத்தில் காணலாம். இன்றும், இரத்த வெறியுடன் கூடிய பலியிடும் வழக்கத்தைப் பெரும் பாலான மக்கள் கடைப்பிடித்து வருகின்றனர் ஆனல், சென்ற இரண்டாயிரமாண்டுகளாக அவை முறையற்றதென நிரூபிக்கும் முயற்சிகளே அதிகமாக மேற்கொள்ளப்பட்டுள்ளன. அதை நிறைவேற்றும் குறிக்கோளுடைய இயக்கம் இன்றுமிருந்து வரு கிறது. குறிப்பாகத் தீபகற்ப இந்தியாவில் இவ்வியக்கம் ஆத ரவு மிகப் பெற்றுள்ளது. திடுக்கிடச் செய்யும் வகையில், ஏரான

மான மிருகங்கள், தெலுங்கு தேசங்களில் இன்றும் பலியிடப்படுகின்றன. உதாரணமாகக் 'கிஸ்ட்ண' (கிருஷ்ண) மாவட்டத்திலுள்ள எல்லூர் என்னுமிடத்தில், திருவிழாவொன்றில் ஆயிரம் மிருகங்களுக்குமேல் ஒரே நாளில் பலியிடப்படுகின்றன. அதிலிருந்து பாய்ந்தோடும் குருதி பெரு வெள்ளமாக ஓடவேண்டுமென்பதே குறிக்கோளாக விளங்குகிறது. தமிழ் நாட்டிலோ எனில், 'கண்யமும், காருண்யமும் மிக்கதெய்வங்களுக்கு, உயிர்ப்பலி அருவருப்பையே உண்டாக்குகிறதென்ற கருத்து அதிகமாகப் பரவியுள்ளது.' இதனல் அத்தகைய பழக்கம் ஒருவாறு வழக்கொழிந்து வருகிறதெனலாம்.[1]

### பிராமண சமயங்கள்

நாத்திக வாதத்தை யொட்டிய சமண, புத்தக் கொள்கைகளும், விரிவான விதிமுறைகளைக் கொண்ட சடங்குகளின் பளுவும், இந்து சமயம் சார்ந்த பிராமணரிடையில் 'பக்தி' என்ற புதிய தொரு இயக்கத்தைத் தோற்றுவித்தது. தந்தையைப் போன்ற தெய்வ மொன்றைத் தனது உடைமையாகப் பாவித்து அத்தெய்வத்தினிடம் தளராத நம்பிக்கை கொள்வதே பக்திநெறியின் முக்கியக் குறிக்கோளாக விளங்கியது. இவ்வியக்கம் எப்போது தொடங்கிற்று என்று கூறவியலாது. 'வசுதேவன்' என்ற ஒரு தேவனுக்குச் சொந்த முறையில் அன்பு செலுத்தி வழிபடுவதென்ற ஒரு வழக்கம், பிரசித்தி பெற்ற இலக்கண நூலாசிரியன் பாணினி[2] கால முதற்கொண்டே இருந்துவந்ததென பண்டார்கர் கூறுகிறர். மற்றும் சில சான்றுகளிலிருந்து, கிறிஸ்து சகாப்தத்திற்கு முந்திய இரண்டு நூற்றுண்டுகளிலும் வசுதேவனை வழிபடும் வழக்கமிருந்து வந்ததாகத் தெரிகிறது. கண்ணியம் மிகுந்த பகவத்கீதை எப்போது உருவாயிற்று என்பதைக்கூறுவது இயலவில்லை. பக்தி முறையை விளக்கும் ஆதிசான்ருக அது விளங்கி வருகிறது. 'கிருஷ்ணன்' என்ற பெயருடைய கடவுளுக்கு அங்கு பக்தி செலுத்தப்படுகிறது.

மதுரா, டெல்லி ஆகியவைகளை அடுத்துள்ள பிரமரிஷிப்பிரதேசத்தில், பக்தி இயக்கம் தோன்றியதாகக் கருதப்படுகிறது. பழமையான வரலாற்றைக் கொண்ட விஷ்ணுவின் அம்சமாக வசு

1 'தென்னிந்தியக் கிராமக்கடவுள்கள்' (1916) ஒயிட் ஹெட்: பக். 66, 94, டாக்டர். ஸ்மித் நூலியற்றிய காலத்திற்குப் பின் தோன்றிய சீர்திருத்த இயக்கங்கள் தற்போது, உயிர்ப்பலியிடும் வழக்கத்தைப் பெருமளவில் குறைத்து விட்டன. என்ருலும் அது கடைப்பிடிக்கப்பட்டுவருகிறது. (ப-ர்)

2 பெரும்பாலும் கி. மு. நான்காவது நூற்ருண்டாக இருக்கலாகும்.

தேவனும், கிருஷ்ணனும் கருதப்பட்டனர். குறிப்பாகத் தென் திசையில், இதைப்போலவே சிவன்மற்றும் பலவகையான தெய்வங்களின் உருவங்கள் தோன்றி வளர்ந்தன. சமயச்சார்புள்ள இவைகளின் தோற்றம், வளர்ச்சி ஆகியவைகளைப் பொதுவான வரலாற்று நூலொன்றில் விரித்துரைக்க இயலாது. ஆனால், பௌத்தமும், சமணமும் தோன்றி, வெளிநாடுகளிலும் துணிகரமான பிரயாணங்களைத் தொடங்கியபோது, இந்துசமயம் சார்ந்த பிராமணப் பிரிவினுள் இத்தகைய பெருமாறுதல்கள் ஏற்பட்டு வந்தன என்பதை மட்டிலும் நினைவில் கொள்ளவேண்டும்.

**'ஒன்பது நந்தர்கள்'**

தொன்மைவாய்ந்த 'புராணங்கள்' வாயிலாகக்கிடைக்கும் வமிசாவளிக் குறிப்புகளிலிருந்து, சைசுநாக வமிசத்தில் பத்து அரசர்கள் இருந்தனரென்று அறிகிறோம். இறுதியாகக் குறிப்பிடப்பெறும் மன்னர்களின்பெயர்கள் முறையே நந்திவர்த்தனன் என்றும் மகாநந்தின் என்றும் தெரியவருகின்றன. அவர்கள் எண்பத்து மூன்று ஆண்டுகளாக ஆட்சி செலுத்தினர் என்றும் தெரிகிறது. சிங்கள நாட்டுப் பரம்பரைச் செய்திகளில் இம்மன்னர்கள் பெயர்களைக் காணவில்லை. அவரது ஆட்சிகாலம் மிகவும் நீடித்திருக்க வேண்டும். எனினும், இரு மூல நூல்களும் அவர்களது சந்ததிகளைப் பொறுத்தமட்டில் ஒரே முகமான கருத்துகளை அறிவிக்கின்றன. மகாபத்மனும் அவனது எட்டுப்பிள்ளைகளும் 'ஒன்பது' நந்தர்கள் அல்லது 'புதிய' நந்தர்கள் என்றழைக்கப்படுகின்றனர். அவரது ஆட்சிகாலங்கள் முறையே 100, 40, அல்லது 22 ஆண்டுகளுக்கு நீடித்திருந்ததாகச் சொல்லப்படுகிறது.[1] ஏதோ ஒருவகையில் வரலாற்றில் தவறு புகுத்தப்பட்டிருப்பதென்பது தெளிவாகையால் காலவரன் முறையைப்பற்றி எதுவும் சரியாகச் சொல்வதற்கில்லை. புராணங்களில் குறிக்கப்பெற்றுள்ள நந்தர்களைப்பற்றிய கர்ணபரம்பரைச்செய்தியும், ஒரு சில சமணபுத்த நூல்கள் வாயிலாகக் கிடைக்கும் செய்திகளும், கி. பி. நான்கு அல்லது ஐந்தாவது நூற்றுண்டில் இயற்றப்பெற்றதாகக் கருதப்படும் 'முத்ரா ராக்ஷசம்' என்ற வடமொழி நாடக வயிலாகக் கிடைக்கும் செய்திகளும், கிரேக்க நூலாசிரியர் தரும் குறிப்புகளும் ஒன்றுக்கொன்றுமுரணனவைகளாகக்காணப்படுகின்றன. இருப்பினும், சாணக்கியன் அல்லது கௌதில்யன் அல்லது விஷ்ணுகோபன் என்ற பெயரையுடைய பிராமண

1 'நவநந்தர்' என்பதைப் 'புதிய' அல்லது 'பிந்திய' என்று பொருளுரைப்பதற்கு பீஹார் ஒரிசா ஆராய்ச்சி சங்கத்தின் சஞ்சிகை-வால்-iv-பக். 91-95.

அமைச்சனின் உதவி கொண்டு சந்திரகுப்த மௌரியனால் வீழ்த்தப்பெற்ற மன்னன் ஒரு 'நந்தன்' என்பதில் சிறிதும் ஐயமில்லை. நந்தவமிசத்தைச் சார்ந்த அம்மன்னன் இழிகுலத்தவனென்றும், பிராமணரிடம் க்ஷத்திரியரிடமும் பகைமை பாராட்டிய நாத்திகனென்றும், செல்வமும் செல்வாக்கும் பொருந்திய அரசனென்றும் கூறப்படுகிறது. கிரேக்கரிடமிருந்து கிடைக்கும் செய்திகளின்படி 20,000 குதிரைகளும், 200,000 காலாட்களும், 2000 ரதங்களும், 3000 அல்லது 4000 யானைகளும் அவர்களிடமிருந்தன என்று தெரிய வருகிறது. காரவேளனின் 'ஹதிகும்பா' கல்வெட்டு, ஒருகாலத்தில் ஒரிசா நந்தர்கள் வசமிருந்ததெனக்குறிக்கிறது. அவர்களது செல்வாக்கு, தக்காணத்திலும் பரவியிருந்ததென அரைகுறையான கர்ணபரம்பரைச் செய்திகள் நிலவுகின்றன. மக்கள் அவர்களை அதிகமாக விரும்பவில்லையெனினும் மகத சாம்ராச்சியத்தின் செல்வாக்கை அவர்கள் அதிகமாக வளர்த்தனர் என்றே தோன்றுகிறது. முரண்பாடு மிக்க இத்தகைய செய்திகளை ஒருவாறு ஆராய்ந்து தெளிவுபெறுவதற்கும் ஒருவாறு ஏற்கக் கூடிய காலவரன் முறை அமைப்பதற்குமான முயற்சிகள் பல மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன. இக்குழப்பத்தை நீக்கிவிட்டதாக நான் நடிக்கவிரும்பவில்லை. சந்திரகுப்த மௌரியனால் முறியடிக்கப்பெற்றவன் ஒரு நந்தவமிச அரசன் என்பதில் சந்தேமில்லை. அவனை இந்துக்கள் ஒரு நாத்திகனென்று கருதியதும் உண்மையென்றே கூறவேண்டும். ஏனெனில் கௌதில்யன் இயற்றிய அர்த்த சாஸ்திரத்தின் இறுதிச் செய்யுள் வருமாறு உரைக்கிறது: 'கொடுமையிலிருந்து (கொடுங்கோலாட்சி) புனித ஏடுகளையும் (சாஸ்திரம்), ஆயுதங்களைப் பற்றிய நூல்களையும் (சாஸ்திரம்) நந்தரின் வசமாகிவிட்ட பூமியையும் எவன் காப்பாற்றினனோ அவனால் இந்த சாத்திரம் (புனித நூல்) இயற்றப் பட்டுள்ளது.[1]

இதிலிருந்து நந்த மன்னன் ஒருசமணனாகவோ, புத்தனாகவோ இருந்திருக்க வேண்டுமென்றும், சனாதன நூலாசிரியர்கள் அவனை முறையான அரசன் என்று ஏற்க விரும்பவில்லை என்றும் கருத இடமுண்டு. சமண நூலிலக்கியங்கள் 'நந்தரை' நன்முறையிலேயே ஏற்று ஓரளவு போற்றுகின்றன. நந்தமன்னன் மகாவீரனின் அடிப்பற்றியவன் என்ற கருத்தை இது வலுப்படுத்துவதாக உள்ளது. சமண நூலாகிய 'பகவத்சூத்திரத்திலுள்ள' தெளிவு குன்றிய செய்யுளொன்று, நந்தமன்னன் அஜீவகப்பிரிவைச் சேர்ந்தவனாக இருக்கக் கூடுமென உரைக்கிறது.

1 சாமா சாஸ்திரி பதிப்பித்துள்ள அர்த்த சாஸ்திர நூலிலிருந்து எடுக்கப்பட்ட வாசகம்

**மகா அலெக்சாந்தரின் படையெடுப்பு**

கி. மு. 326ஆம் ஆண்டு மாசிடோனியாவைச் சேர்ந்த மகா அலெக்சாந்தர், இந்தியாவின்மீது படையெடுத்தான். நந்தர்கள் மகதத்தை ஆண்டு வந்த போது நடைபெற்ற இந் நிகழ்ச்சி, ஐரோப்பிய வாசகர்களுக்குப் பண்டைய இந்திய வரலாற்றிலுள்ள எந்த நிகழ்ச்சியையும் விட அதிகச்சுவையுள்ளதாக விளங்குகிறது. இந்நாட்டு மக்களின் உள்ளங்களை அது அதிகமாகக் கவர்ந்து விடவில்லை. பண்டைய இந்திய இலக்கியம் எதிலும் இதைப்பற்றிய நேரடிக் குறிப்புகள் இல்லை. இந்நிகழ்ச்சியைப் பற்றி நாமறியும் குறிப்புகள் யாவும் கிரேக்க நூலாசிரியர் வாயிலாகவே கிடைக்கின்றன.[1] சிக்கந்தர் அல்லது அலெக்சாந்தர் என்னும் பெயர் பஞ்சாபில் வாழும் மக்களின் நினைவில் எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கிறது. ஆனால், மாசிடோனியப் படையெடுப்பைப்பற்றிய உண்மை வரலாறு, எவ்வளவில் அங்கு நிலவுகிறது என்பது மிகவும் ஐயத்திற்கிடமளிக்கிறது. நிகழ் காலப் புதைபொருளாய்வாளரின் அறிக்கைகளாலும்,ஆராய்ச்சியாலும், தெளிவற்ற பண்டை நினைவுகளாலும் நம்பத்தகாத பரம்பரைச் செய்திகள் பல உற்பத்தியாகின்றன. சாதாரணமாக நிலவிவரும் நினைவுச் செய்திகள் மாசிடோனியாவைச் சார்ந்த சிக்கந்தரை அதே பெயரையுடைய டெல்லியை ஆண்ட லோடி சுல்தானுடனும் (1489-1517), சிலைகளை உடைத்தெறியும் காஷ்மீர் சுல்தானுடனும் (1394-1420) குழப்பி வருகிறார்கள். பிலிப்பின் மகனை அலெக்சாந்தரைப் பற்றிய உண்மை வரலாறு சிந்து அல்லது ஆக்ஸஸ் நதியைச் சுற்றிலுமுள்ள சுமார் எட்டுக் குறுநில மன்னர் குடும்பங்களில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அவர்கள் யாவரும் தங்களை அலெக்சாந்தரின் வழித்தோன்றல்களெனக் கூறிக் கொள்கிறார்கள். இக் கூற்றை ஓரளவு நாம் அனுமதிக்கலாம். 'அசாக்கினய்' என்னுமிடத்தின் அரசி கிளியோபிஸ், அலெக்சாந்தரின் உறவால் ஆண் மகவொன்றைப் பெற்றெடுத்தாள் என வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர்.[2] 1835 ஆம் ஆண்டில் 'யார்க்கண்ட்' பிரிவைச் சேர்ந்த, துங்காணிப் போர்

1 புதைபொருள் சான்றுகள், குறிப்பாக நாணயச் சான்றுகள், கிரேக்கரின் குறிப்புகளை ஓரளவு ஒத்திருக்கின்றன.

2 இங்குக் குறிப்பிடப் பட்டுள்ள குறுநில மன்னன் வருமாறு: (1) முற்காலத்து பதாக்ஷான் மீர்கள், 1822-ல் இவர்கள் பதவி இழந்தனர்; (2-5) தார்வாஸ், குலாப்ஷிக்நான், வாகன் ஆகிய இடங்களின் தலைவர்கள் (6-8) சித்ரல், கில்ஜி , இஸ்கார்டோ ஆகியபகுதிகளின் தலைவர் (பர்ன்ஸ் என்பவரின் பொகாராவில் பிரயாணங்கள், என்ற இதுபோன்ற நூல்கள்- இரண்டாம் பதிப்பு 1835 வால்யூம் iii, பக்கம் 186-90).

வீரரும், இந்நாட்டில் பின்தங்கிவிட்ட அலெக்சாந்தரின் மாசிடோனியப் போர்வீரர்களின் சந்ததிகளெனக் கூறிக்கொண்டார்கள்.

ஆக்சஸ் ஆற்றின் தென் பகுதியிலுள்ள பாக்திரியாவை அலெக்சாந்தர் வென்றான். பிரசித்தி பெற்ற தனது முன்னோனை ஹிராகின்ஸ் என்பவனைப் பற்றிய கதைகளையும், செமிராமிஸ் என்ற அசிரிய இராணியைப் பற்றிய கதைகளையும், பாரசீக மன்னனை சைரசைப் பற்றியும் புனித டயோனிசாசைப் பற்றியும் அலெக்சாந்தர் நன்கு செவியுற்றிருந்தான். இந்தியாவின்மீது படையெடுத்து வெற்றி கண்டு அவர்கள் யாவரையும் மிஞ்சிவிட வேண்டுமென்று அவன் நெடுங்காலமாகக் கொண்டிருந்த ஆசையை ஈடேற்றுவதற்குத் துணிந்தான். துணிகரமான பணியை மேற்கொண்ட போது, எந்தெந்தப் பகுதிகளைத் தான் வெல்ல வேண்டுமென்று குறிப்பிட்ட நுணுக்கமான திட்டமொன்றும் அவனிடமில்லை. இந்தியா என்ற புனித நாட்டில் இதற்கு முன் எந்த ஐரோப்பியனும் காலடி வைத்ததில்லை. நம் காதுகளுக்கு எட்டிய வரை மேலை நாட்டிலிருந்து எந்த யாத்திரிகனும் இந்நாட்டிற்கு அதற்கு முன் விஜயம் செய்ததில்லை. சிந்து நதிக்கப்பாலுள்ள அற்புதங்களைப் பற்றிய கற்பனைக் கதைகள் மிகுந்திருந்தன. நம்பிக்கையுள்ள திட்டவட்டமான செய்தியொன்றுமிருந்ததாகத் தெரியவில்லை. துணிவுள்ளவர்கள் தேவையான அனுபவங்களைப் பிரயாணத்தின் போதே பெறவேண்டியவர்களாக இருந்தனர்.

துணிவுள்ளவன் என்றாலும் அலெக்சாந்தர் விவேகமுடையவனாகவுமிருந்தான். ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள மாசிடானுடன் தொடர்பு கொள்ளாது அவன் முன்னேறுவதே இல்லை. ஆபத்தினின்று தன் படைகளைக் காப்பதற்குரிய ஏற்பாடுகளை அவன் மேற்கொண்டிருந்தான். ஒவ்வொரு முயற்சியிலும் வெற்றி பெறுவதற்குரிய முன்னெச்சரிக்கைகளை, திறமையான ஒற்றர் வாயிலாகச் செய்தி அறிந்து, அவன் கடைப்பிடித்து வந்தான்.

**மலைப் பகுதியில் மேற்கொண்ட போர்கள்**

கி.மு. 327 ஆம் ஆண்டு மே மாதம் அலெக்சாந்தர் இந்துகுஷ் மலைத்தொடரைக் கடந்தான். காபூலிலோ அல்லது அதற்கு அருகிலோ படைத் தளமொன்றை நிறுவிக்கொண்டு எஞ்சியுள்ள மாதங்களை முர்க்கமான மலைச் சாதியினரை ஒடுக்குவதில் கழித்தான். 'சுவாத்'(ச்வாத்) பஜார் பள்ளத்தாக்குகளில் இன்றுபோல்

அன்றும் மூர்க்கமான சில மலைச்சாதியினர் வசித்து வந்தனர். ஆப்கானியர், முகலாயர், அல்லது ஆங்கிலேயர் ஆகியோரன்றிப் பிறரிடம் அவர் கண்டறியாத வகையில், இச்சாதியினருக்கு அலெக்சாந்தர் நல்ல பாடம் கற்பித்தான். எந்த ஐரோப்பியனும் மேற்கொள்ளாத, கடினமான பிரயாணமொன்றை அடர்ந்த கானகத்தின் வழியே தொடங்கினான். மலைச்சாதியினரை அவன் தலையெடுக்கவொட்டாது ஒடுக்கிவிட்டான். இவனது போக்கு வரவு, செய்தி இலகாவின் வேலைகளில் இம்மலைச் சாதியினர் மீண்டும் தலையிடுவதற்குத் துணியவில்லை.

**சிந்து நதியைக் கடத்தல்**

பாரசீகத்தின் எல்லையென அப்போது கருதப்பட்ட சிந்து ஆற்றை, அட்டாக்கிற்குச் சற்று மேலுள்ள 'உந்த்' அல்லது 'ஒகிந்த்' என்னுமிடத்தில், தோணிகளால் பாலமொன்றை அமைத்து, கி.மு. 326 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் வசந்த காலத் தொடக்கத்தில் கடந்தான். அதன் பிறகு அவன் 'தட்சசீலம்' அல்லது 'தாக்சீலம்' என்னுமிடத்தை நோக்கி முன்னேறினான். சிந்து நதிக்கும், 'ஹிடாஸ்பஸ்' அல்லது 'ஜிஹ்லம்' (ஜீலம்) நதிக்கும் இடையிலுள்ள பகுதியை ஆண்டு வந்த ஆம்பியின் தலைநகராக விளங்கிய அது 'பெரிய சிறந்த' நகரமாக விளங்கியது. அண்டையிலுள்ள இராச்சியத் தலைவர்களுடன் அம்பி சண்டையிட்டு வந்தான். படையெடுத்து வந்தவனைத் தலைநகருக்கு வரவேற்று, உபசரணைகள் செய்தான். இந்திய மன்னன் அளித்த விலையுயர்ந்த அன்பளிப்புகளும், அவன் காட்டிய பரிவும், தாராள உள்ளமும், பண்புமிக்க விருந்தாளியின் உள்ளத்தில் பத்து மடங்கு வியப்பை விளைவித்தது. ஆம்பி அளித்த பொருள்களில் 'மூவாயிரம் எருதுகள், உணவிற்கென மிக்கவளமாக ஊட்டி வளர்க்கப்பட்டவை'களும் இருந்தன என்பது கவனத்திற்குரிய செய்தியாக விளங்குகிறது. இதைத் தவிர, பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட ஆடுகளும் இருந்தனவாம். மிகச் சாதாரணச் செய்தியாகவே அளிக்கப்படுகிற இக்குறிப்பு கி.மு. 326 ஆம் ஆண்டிலும் தட்சசீல மக்கள் உணவு வகைக்காக ஆடுமாடுகளைப் போஷிப்பதும், வேத காலத்தைப் போல மதிப்பிற்குரிய விருந்தினரை உபசரிப்பதுமான வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர் என்பதை அறிந்துகொள்வதற்கு உதவுகிறது.

**தட்சசீலம்**

இரம்மியமானதொரு பள்ளத்தாக்கில் தட்சசீலம் இருந்தது. மத்திய ஆசியாவிலிருந்து இந்திய நாட்டிற்குள் செல்லும் இராஜ

பாட்டையில், மிக்க பாதுகாப்புடையதாகவும், நீர்வளமிக்கதாகவும் ஒரு பெரு நகரமாக விளங்குவதற்குரிய சிறப்புகள் யாவையும் பெற்று அமைந்திருந்தது. இப்புராதனத் தலைநகரின் நினைவுச் சின்னங்கள் அல்லது அடுத்தடுத்து தலைநகர்களாக விளங்கியவைகளின் நினைவுச் சின்னங்கள், தெற்கிலிருந்து வடக்கு முகமாகப் பரவி யிருந்தன. 'ஹாசன் அப்தல்' என்ற இடத்தில் குறைந்தது பன்னிரண்டு சதுர மைல்கள் விஸ்தீரணத்திற்குள் இவை அடங்கியுள்ளன. ராவல்பிண்டிக்கு இருபது மைல்கள் வடமேற்கில் அடங்கியிருந்த மற்றும் பல கிராமங்களையும் இது உள்ளடக்கியிருந்தது. 'ஹாசன் அப்தல்' தட்சசீலத்தின் முக்கிய கேந்திரமாக விளங்கியிருக்கக் கூடும். பண்டைய நாட்களில், மக்கள் பின் பற்றி வந்த போக்குவரவுப் பாட்டைகளை அடிப்படையாகக் கொண்டு 'கிராண்ட் ட்ரங்' பெருவழியும், வடமேற்கு ரெயில்வே பெருவழியும் அமைக்கப் பெற்றுள்ளன.

அலெக்சாந்தரின் காலத்தில், பஞ்சாப் பல சிறு நாடுகளாக பிரிக்கப்பட்டிருந்தது. சிந்து நதிக்கும் ஹிடாஸ்பஸ்ஸிற்கும் இடையுள்ள பகுதிக்கு மட்டிலும் தட்சசீலம் தலைநகராக இருந்தது. தற்காலத்திலுள்ளதைக் காட்டிலும்,இராணுவ தளம் என்ற வகையில் அதன் முக்கியத்துவம் குறைந்தே இருந்தது. படையெடுப்பாளனை விருந்தினனாக உள்நாட்டரசன் ஏற்றதால், தட்சசீலத்தின் அண்டையில் போர் எதுவும் நடைபெறவில்லை. அதன் தற்காப்பு முறைகளைப் பற்றிய செய்திக் குறிப்புகளும், நமக்குக் கிடைப்பதில்லை. அலெக்சாந்தருக்கு உதவியாக ஐயாயிர வீரர்களடங்கிய படையொன்றையும் ஆம்பி அளித்தான்.

புத்தசமய 'ஜாதகக் கதைகள்' அல்லது பிறப்பையொட்டிய மரபுக் கதைகள், எக்காலத்தில் தோன்றியவையெனத் தெரியவில்லை. ஆனல் அலெக்சாந்தர் காலத்தைச் சார்ந்தவை என எண்ணுவதற்கு சான்றுகளுண்டு. இந்து சமயக் கோட்பாடுகளை போதிக்கும் அறிவுக் கூடமாகத் தட்சசீலம் விளங்கியதென்று விளக்குவதற்கு அக்கதை இலக்கியங்களில் மேற்கோள்கள் காணப்படுகின்றன. பல பகுதிகளிலிருந்தும் அங்குக் கூடிய ஏராளமான மாணவர்களுக்கு 'மூன்று வேதங்களும் பதினெட்டு சாத்திரங்களும்' போதிக்கப்பட்டன. பதினறு வயதடைந்த இளவரசர்களையும், பொருள் வசதியுள்ள பிராமணரின் பிள்ளைகளையும், முழுதும் கற்றுணர்வதற்கெனத் தட்சசீலத்திற்கு அனுப்புவது வழக்கம். தட்சசீலத்தை ஒரு கலாசாலை நகரம் எனச் சித்திரிப்பது மிகவும் பொருந்தும். அங்குள்ள மருத்துவப் பள்ளி மிகவும் புகழ் பெற்றிருந்தது. ஆனல் எல்லாக் கலைகளை

யும், விஞ்ஞானப் பாடங்களையும் புகழ் வாய்ந்த பேராசிரியர்களிடம் கற்கும் வசதிகளுமிருந்தன.

**தட்சசீல மக்களின் நூதனப் பழக்க வழக்கங்கள்**

3,000 எருதுகளை இறைச்சிக்கென மனமுவந்து அளித்த செய்கை, தட்சசீல மக்களின் சமுதாய ஒழுக்கத்தின் குறிப்பிடத்தக்க அம்சங்களில் ஒன்று என்பதை நாம் முன்னரே குறித்துள்ளோம். நூதனமான பழக்க வழக்கங்கள் அவர்களிடம் நிறைந்திருந்தன. கிரேக்க ஆசிரியர்களுக்கு இவை 'விசித்திரமானவைகளாகவும் புதுமையானவைகளாகவும்' விளங்கின. எடுத்துக் கூறப்பட்டிருக்கும் பழக்க வழக்கங்கள் பேராச்சரியம் விளைவிக்கக்கூடியவையாதலால் ஸ்டிராபோவின் வாசகங்களையே இங்குக் கூறுவது நலமென்று எண்ணுகிறேன். அலெக்சாந்தரின் நண்பனும், மதிப்பிற்குரிய சிறந்த நூலாசிரியனாகவும் விளங்கிய அரிஸ்டோடௌலசின் குறிப்புகளையே ஸ்டிராபோ மீண்டும் கூறியுள்ளான்.

நடைமுறையிலிருந்த புதுமையும் விசித்திரமுமான பல பழக்கவழக்கங்களை அவன் எடுத்துக் கூறியுள்ளான். வறுமையின் காரணமாகத் தமது புதல்வியரை மணமுடிக்க இயலாதவர்கள், அவர்கள் பருவமெய்தியதும் சந்தையில் விலைப்பொருள்களாக வைக்கிறார்கள். சங்கம், முரசு ஆகியவைகளை ஒலித்துப் பெருங்கூட்டமொன்றையும் கூட்டுவார்கள். இத்தகைய ஒலி போர்க் காலங்களிலும் எழுப்பப்படுவது வழக்கம். யாராவது ஒருவன் முன்வரும்போது, பெண்ணின் முதுகிலுள்ள ஆடையை நீக்கி, தோள்கள் வரையுள்ள முதுகுப் பகுதி அவ்வாடவனின் பார்வைக்கு வைக்கப்படும். அதன் பிறகு. முன்பகுதியையும் அவன் அதைப் போலவே ஆராய்ந்து கொள்ளலாம். இதனால் ஆடவனுக்குத் திருப்தியேற்பட்டால், அவனது சம்மதமும் பெறப்படுமாயின் ஒரு ஒப்பந்தம் ஏற்படுத்திக்கொண்டு, அவ்வொப்பந்த விதிகளுக்கிணங்க இருவரும் கணவனும் மனைவியும் போல வாழ்க்கை நடத்துவார்கள். செத்தவுடல்களைக் கழுகுகளுக்கு உணவாக எறிந்து விடுவது வழக்கமாயிருந்தது. பல மனைவியரைக் கொள்வது இங்கு வழக்கமாகக் காணப்படுகிறது; இப்பழக்கம் பிற இனத்தினரிடமும் இருந்து வருவதாகத் தெரியவருகிறது. இறந்துவிட்ட கணவன்மார்களைத் தொடர்ந்து மகிழ்வுடன் மனைவியர் உடன்கட்டை யேறும் வழக்கமும், அவ்வாறு செய்யத் தவறுகின்ற பெண்மக்களைப் பழித்துக் கூறும் வழக்கமும் இருந்து

வந்ததெனத் தான் கேள்விப்பட்டிருப்பதாகவும் அவர் கூறுகிறார் இது போன்ற குறிப்புகளைப் பிற நூலாசிரியரும் தருகின்றனர்.[1]

திருமணச் சந்தையைப் பற்றி நமக்குக் கிடைக்கும் குறிப்புகள், பாபிலோனிய எல்லைக்குள்ளிருந்த இது போன்ற நிறுவனங்களுடன் ஒப்பு நோக்குவதற்கு வாய்ப்பளிக்கின்றன. அத்தகைய நிறுவனங்களை வர்ணிப்பதோடு ஹீரோடோடசு (I. 196) அவைகளை ஏற்கவும் செய்கிறார். ஒவ்வொரு கிராமத்திலும் ஆண்டிற்கொருமுறை இத்தகைய வியாபாரம் நடைபெற்றதாக அவர் கூறுவர். இலீரியாவிலுள்ள வெனிஷிய மக்களிடம் இத்தகைய வழக்கமிருந்ததாக அவர் கேள்வியுற்றதுண்டு. ஸொராஸ்ட்ரிய இரேனியரிடமும், திபேத்தியரிடமும், செத்த உடல்களைக் கழுகுகளுக்கு இரையாக்கும் வழக்கமிருந்து வந்ததெனத் தெரிய வருகிறது. விதவைகளை எரிப்பது அல்லது 'சதி' என்ற வழக்கம் மிகப் பழங்காலத்திலேயே இருந்ததென்பது மிகத் தெளிவாகக் கூறப்பட்டிருப்பது உண்மையிலேயே சுவைமிக்கதொரு செய்தியாகவே இருக்கிறது. கிழக்குப் பஞ்சாபிலுள்ள 'கதாய்' குடியினரிடம் 'கணவருடன் விதவையையும் உடன் எரித்துவிடும் வழக்கமிருந்தது. தட்சசீலத்திலுள்ள சமுதாய நிறுவனங்களின் அமைப்பைப் பற்றிய ஒரு சில குறிப்புகளிலிருந்து அம்மக்களின் பண்பாடு, பாபிலோனிய, இரேனிய, சித்திய, வேத நாகரிகங்களின் கூறுகளை உள்ளடக்கியதாக விளங்கியது எனத் தெரிய வரும். 'சதி' என்னும் பழக்கம் சித்தியரிடமிருந்தது. மத்திய ஆசியாவிலிருந்து இவ்வழக்கம் இந்தியாவினுள் புகுத்தப்பட்டிருக்கக்கூடும். வேத காலத்திற்கு முந்திய கால ஆரியர்கள், இந்திய நாட்டினுள் புகுவதற்கு முன்னதாகவே இவ்வழக்கத்தை கடைபிடித்திருந்தனர் என்பதற்குரிய குறிப்புகள் சில உண்டு.

**சமயமும் நாகரிகமும்**

பிற்காலங்களில் பஞ்சாப், புனிதமற்ற, ஆரியர் வசிப்பதற்குப் பயனற்ற நாடாகக் கருதப்பட்டது. உண்மையேயாம். ஆனால், புத்த ஜாதக இலக்கியங்கள், தட்சசீலத்தை மூன்று வேதங்களையும் இந்து சாத்திரங்களின் பல்வேறு அறிவுத்துறைகளையும் பயிற்றுவிக்கும் அறிவுக் கூடமாகச் சித்திரிக்கின்றன. அலெக்சாந்தர் படையெடுத்து வந்தபோது பஞ்சாபின் மக்கட்

1 ஸ்டிராபோ. பகுதி xv, அத். 1: பிரிவு 62; மக்கிரிண்டிலின் மொழி பெயர்ப்பு நூல் 'மரபிலக்கியங்களில் சித்திரிக்கப்பட்டுள்ள புராதன இந்தியா' (கான்ஸ்டபிள் 1901) பக். 69, 28 ஆம் பிரிவில் தட்சசிலத்தில் கல்லாட்சி நிலவியதென ஸ்டிராபோ குறித்துள்ளார்.

செல்வத்தில் பல இனத்தினர் காணப்பட்டனர்: அரிஸ்டோ பௌலசையும், ஒன்சிகிரிட்டோசையும் அடிப்படையாகக் கொண்டு, ஸ்டிராபோ என்னும் நூலாசிரியர் (பகுதி XV. அதி காரம் 1- துணைப்பகுதிகள் 61, 63. 68) தட்சசீலத்திலுள்ள பிரா மண துறவிகளைச் சுவையாகச் சித்திரித்துள்ளார். விசித்திரமான பழக்க வழக்கங்களும், 'ஸொராஸ்டிரிய' அல்லது 'மாகிய' அக்கினி-வழிபாட்டு முறைபோன்ற அன்னிய வழிபாட்டு முறை களும் அங்குக் காணப் பட்டன எனினும், பிராமணசமயம் அங்கு நன்ருக நிறுவப் பெற்றிருந்தது என்பதில் ஐயமெதுவுமில்லை. வாழ்க்கை வசதிகள் நிரம்பிய நாகரிக வாழ்க்கை நன்குவளர்ந்து விட்டது என்பது தெளிவு. பண்பும் செல்வமும் மிகுந்த ஒரு நகரத்தில் உள்ள கலைகளும் தொழில்களும் அங்குக் கடைப்பிடிக் கப்பட்டன என்பதும் மிக உண்மையாக விளங்குகிறது. கி. மு. நான்காவது நூற்ருண்டில், மகா அலெக்சாந்தரின் அலுவலர்கள் நமக்கு அளிக்கும் குறிப்புகளை நோக்கும்போது, அக்காலத்தி லேயே இந்திய நாகரிகம் மிகவும் முன்னேறிவிட்டது என்ற கருத்து வலுப்பெறும். எழுத்துக்கலை எப்பொழுது தோன்றி யது, வேதஇலக்கியத்தின்காலவரன் முறை என்ற இதுபோன்ற ஆராய்ச்சிகளில் நான்காம் நூற்ருண்டிலேயே அவர் ஈடுபட்டி ருந்தனர் எனத் தெரியவரும்.

### போரசை எதிர்த்து முன்னேறுதல்

பரிவு நிரம்பிய தட்சசீலத்தில், தனது படைவீரருக்குஅலெக் சாந்தர் அற்புதமான ஓய்வளித்தான். 'ஹிடாஸ்பஸ்' (ஜீலம்), 'அகிசைன்ஸ்' (சீனுப்) ஆகிய ஆறுகளின் இடைப்பகுதியை ஆண்டுவந்த 'போரஸ்' அல்லது 'பூரு' என்ற மன்னன் படையெ டுத்துவரும் வீரனை எதிர்க்கத் துணிவு கொண்டிருந்தமையால், அவனை எதிர்த்துப் போரிடும் நோக்கமோடு கிழக்கு முகமாகச் சென்ருன். பஞ்சாப் மக்களின் சீரிய உருவத் தோற்றத்தால் கிரேக்கர் மிகவும் கவரப்பட்டனர். 'ஆசியாவில் அக்காலத்திலி ருந்த பிற தேசத்தினரைக் காட்டிலும் அவர்கள் போரில் மிகவும் வல்லவர்கள்' எனக் கிரேக்கர் ஒப்புக்கொள்ளுகின்றனர். எனவே உறுதிமிக்க போரசின் எதிர்ப்பை நாம் குறைகூறுவதற்கில்லை. ஜூன் மாத இறுதி அல்லது ஜூலை மாதத் தொடக்கத்தில் ஹிடாஸ்பஸ் ஆற்றில் பெருவெள்ளம் ஓடிக்கொண்டிருந்தது. அதன் கரைகளும் மிக நன்கு பாதுகாக்கப்பட்டிருந்தமையால், அவ்வாற்றைக்கடப்பது மிகவும் கடினமாக இருந்தது. ஆற்றின் மறுகரையிலுள்ள யானைகளைக்கண்டு அவனது குதிரைகள் மருண் டன. பலவாரங்கள் கடந்தபின், தனது முகாமிலிருந்து பதினறு

மைல்கள் முன்னேறி வசதியான தீவு ஒன்றின் உதவியோடு அலெக்சாந்தர் ஆற்றைக் கடந்தான். இருதரப் படைகளும் 'காரிச்'சமவெளியில் ஒன்றையொன்று சந்தித்தன. 'சிர்வால்' 'பாக்ரல்' கிராமங்கள் தற்போதுள்ள இடங்களில் போர்க்களம் அமைத்திருக்க வேண்டும்.

**ஹிடாஸ்பஸ் போர்**

30,000 காலாட்படைகளையும், 4,000 குதிரைவீரரையும், 300 தேர்களையும், வலிமிக்க 200போர் யானைகளையும் கொண்ட போரசின் படை கடுமையான போருக்குபின் தோற்கடிக்கப்பட்டு, அழிக்கப்பெற்றுது. யானைகள் கொல்லப்பட்டன அல்லது சிறைப்பட்டன; தேர்கள் அழிக்கப்பட்டன; 12,000 போர் வீரர் கொல்லப் பட்டனர், 9,000 போர் வீரர் சிறையிடப்பட்டனர். மாசிடோனியர் தரப்பில்ஆயிரத்திற்கு அதிகமான சேதமில்லை. உகலவரலாறு கண்ட படைத்தலைவர்களில் மிகவும் சிறந்துவிளங்கிய அலெக்சாந்தரின் போர்த்திறனும் தலைமையும், கிரேக்கரின் வெற்றிக்கு முக்கிய காரணமாக இருந்தது. 6½அடி உயரமும் கம்பீரமும் வாய்ந்த போரஸ் மிகத்திறமையாக இறுதிவரையில் போரிட்டான். கைதியாகப்பிடிபடுமுன் அவனது உடலில் ஒன்பது காயங்கள் ஏற்பட்டன. வெற்றிகண்ட அலெக்சாந்தர் தன்னை அரசனுக மதிக்கவேண்டும் என்ற பகைவனின் தீரமிக்க பதிலை ஏற்று, போரசின் விருப்பப்படியே நடந்து கொண்டான். சமயோசிதமான, தாராள மனப்பான்மையால் இந்திய மன்னனின் நட்பைப் பெற்றுன்.

யானைப்படையையே போரஸ் பெரிதும் நம்பியிருந்தான். போர்க்களத்தில், அவைகளைச் சரிவரச்செலுத்துவது மிகக்கடினமாயிற்று. விரோதிகளைவிட நண்பர்களுக்கே, அது மிகவும் சேதம் விளைவித்தது. தேரின் மீதமர்ந்து போரிட்ட இந்திய வில்வீரர், குதிரைகளை ஆரோகணித்துப் போரிட்ட கிரேக்க வில்லாளிகளின் முன், தரங்குறைந்தவர்களாகவே காணப்பட்டனர். இந்தியகாலாட்படையினர், நீண்டவிற்களைத் தரையில் ஊன்றி, இடக்காலால் ஓர் முனையை அழுத்திக் கொண்டு, வில்லைவளைத்து அம்பு எய்யும் வழக்கமுடையவர். தரைசதுப்பு நிலமாக வழுக்கும் தன்மையுடையதாக இருந்ததால் வில்லாளிகளால் தங்கள் கருவிகளைப் பயன்படுத்த இயலவில்லை; இருகைப்பிடியுடைய கனமான வாளொன்று அவர்களது இடத்தோளிலிருந்து தொடங்க விடப்பட்டிருந்தது. பதனிடப்படாத எருமைத்தோல் உறையொன்றும், வில்விற்குப்பதிலாகக் கவண்களையும் இந்திய காலாட் படையினர் சுமந்து சென்றனர்.

### ஹைபேசிஸை நோக்கி முன்னேறுதல்

கடுமையான மழையையும் பொருட்படுத்தாது கிழக்கு நோக்கி அலெக்சாந்தர் முன்னேறினன். 'கிளொசாய்' அல்லது 'கிளொகானிகாய்' என்ற கூட்டத்தினரை முறியடித்து அகிசைன்ஸ் (சீனப்), ஹைடைரோட்ஸ் (ராவி) ஆகிய ஆறுகளைக் கடந்தான். 'கைதாய்' என்ற கூட்டத்தினரின் கேந்திரமாக விளங்கிய சங்காலாவை முற்றுகையிட்டு, ராவியின் மறுகரையில் வசித்து வந்த 'க்ஷுத்திரகர்' (ஆக்சிடிரகாய்) என்பவர்களைப் பயமுறுத்தினன். தொடர்ந்து ஹைபேசிஸ் அல்லது பியஸ் வரை முன்னேறிய மன்னனை அவனது படைவீரர் தடுத்து நிறுத்தினர். வலிமை பொருந்தியவர்கள் வசித்துவந்த, முன்பின் கண்டும் கேட்டுமறியாத பகுதிகளில், மேலும் கண்மூடித்தனமாக அடியெடுத்து வைக்க இயலாதென அவர்கள் மறுத்து விட்டனர். கிரேக்க வீரரின் முன்னேற்ற எல்லையைக் குறிப்பதாகப் பன்னிரண்டு கல் தூண்கள், பியஸ் ஆற்றின் வடகரையில் எழுப்பப் பெற்றன. குன்றுகளின் அடிவாரத்திற்கு அருகில், குர்தாஸ்பூர் மாவட்டத்திலுள்ள மிர்தாலுக்கும், காங்கிராவிலுள்ள இந்தௌராவிற்குமிடையில் உள்ள இவ்விடத்தல் பியஸ் கிழக்கு மேற்காக ஓடுகிறது. வடகரையில். சுமார் ஐந்து மைல்களுக்கு வெள்ளம் அரித்து விட்டது; அதனுடன் மிகப் பெரிய நினைவுச் சின்னங்களையும் அடித்துச் சென்று விட்டது.

### வீடு திரும்புதலும் ஆற்றுப் பிரயாணமும்

எதிர்பாராது நேர்ந்த எதிர்ப்பினல் மனம் நொந்து அலெக்சாந்தர் தான் வந்த வழியாகவே திரும்பவேண்டியதாயிற்று. ஹைபேசிஸ்ஸிற்கும், ஹிடாஸ்பஸ்ஸிற்கும் இடைப்பட்ட பகுதியை ஆண்டு வந்த ஏழு மரபினரையும் கவனித்து வரும் பொறுப்பைப் போரசின் வசம் விடுத்து, அவனை வைசிராயாக அமர்த்தினன். பஞ்சாப் நதிகளின் போக்கிலேயே தன் படைகளை நடத்திச் சென்று, கடலை அடையும் மகத்தான பொறுப்பை ஏற்பதற்குச் சித்தமானன். பல ரகமான 2000 படகுகள் கொண்ட ஒரு கடற்படை ஹிடாஸ்பசின் மேல் கரையில் அவனது அலுவலரால் தயாரிக்கப்பட்டது. கி. மு. 326 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் யாவும் தயாரிக்கப்பட்டபின் பிரயாணம் தொடங்கியது. படகுகளுக்குக் காவலாக, ஆற்றின் இரு கரைகளிலும் 1,20,000 போர் வீரர்கள் அணிவகுத்துச் சென்றனர். சிந்துவிலும், பஞ்சாபிலும் பாய்ந்தோடும் ஆறுகளின் போக்கில் பல மாறுதல்களேற்பட்டன என முன்னர்ப் பலமுறை எடுத்துக்கூறினேம். இதனல் அலெக்சாந்தரின் முன்னேற்றத்தைத் தெளி

வாக எடுத்துக் கூற இயலவில்லை. ஆனால் தற்போது ஜாங் மாவட்டத்திலுள்ள சிபி நாட்டின் வழியாக அவன் சென்றான் என்பது உறுதியாகத் தெரிய வருகிறது. தோலாடையுடுத்திக் கைகளில் கதைகளை ஏந்திய முரட்டுக் குணம் படைத்த ஒரு கூட்டத்தினர் அங்கு வாழ்ந்தனர். எதிர்ப்பின்றி அடிபணிந்தமையால் அவர்களை அலெக்சாந்தர் மன்னித்தான். ஏழு நூற்றாண்டுகளுக்குப்பின் சிபிகள் நாகரிகமடைந்தபின் சிவிபுரம் அல்லது ஷோர்காட்[1], அவர்கள் தலைநகரமாயிற்று. கிரேக்கரால் அகலாசாய் என்றழைக்கப்படும், அண்டையிலுள்ள கூட்டத்தினர் படையெடுத்து வந்தோரை எதிர்க்கத் துணிந்ததால் மிகவும் அவதியுற்றனர். 20,000 க்கும் மேற்பட்ட ஒரு நகர மாந்தர் தங்கள் உறைவிடங்களுக்கு நெருப்பிட்டு, மனைவியருடனும் குழந்தைகளுடனும் தீயில் குதித்தனர். இஸ்லாமியராட்சிக் காலங்களில் குறிக்கப் பெற்றிருக்கும் 'ஜாஹர்' என்னும் வழக்கின் முதல் சுவடாக இதைக் கருதலாம்.

ராவி, மற்றும் பியஸ் ஆறுகளின் கரையோரங்களில் வசித்த மாளவர் (மல்லாய்), ஷுத்ரகர்கள் (ஆக்சிடிரசாய்) மற்றும் சில குடியினரடங்கிய கூட்டமொன்று கிரேக்கரைக் கடுமையாகத் தாக்கிற்று. இவர்களின் படையில் 80,000 அல்லது 90,000 ஆயுதம் தாங்கிய காலட்களும், 10,000 குதிரை வீரரும், 700 அல்லது 800 ரதங்களும் அடங்கியிருந்தன. இப்படைபலம் மாசிடோனியரை அழிப்பதற்குப் போதுமானதாயிருந்தது. வழக்கம் போல் திறமைமிக்க அலெக்சாந்தரின் தலைமையால் கிரேக்கருக்கே வெற்றி கிட்டியது. எஞ்சியிருந்த மாளவர் அடிபணிந்தனர். ஷுத்ரகர் அதிர்ஷ்டவசமாகச் சின்னாட்களுக்குப் பின்னரே போரில் கலந்து கொண்டனர். அதனால், நேசக் கட்சியினருக்கு நேர்ந்த கொடுமையினின்றும் அவர்கள் தப்பிப் பிழைத்தனர்.

**மாளவரின் செல்வம்**

மாளவரும் அவரது நேசக் கட்சியினரும் அலெக்சாந்தருக்கு அளித்த வெகுமதிகளிலிருந்து அக்குடியினரின் செல்வச் சிறப்பையும், சீரிய நாகரிகப் பண்பையும் ஒருவாறு அறியலாம். 1030 (மற்றொரு குறிப்பிற்கிணங்க 500) நான்கு குதிரைகள் பூட்டிய இரதங்களும், 1000 கேடயங்களும், ஏராளமான பருத்தி ஆடைகளும், 100 'வெள்ளை இரும்பு'த் துண்டுகளும், அல்லது உருக்காக

1 ஷோர்காட்டிலிருந்து கண்டெடுக்கப்பட்ட 83 (ஜி. இ) = கி. பி. 402-3 ம் ஆண்டைச்சேர்ந்த புத்த சமயக் கல்வெட்டொன்றில் சிபிபுரம் என்னும் பெயர் காணப்படுகிறது (வோகல்-ஜே. பி. எச். எல். வால் i, பக்கம் 174).

வும் கொள்ளலாம், முதலைத் தோல்களும் (மிகப் பெரிய பல்லிகள்), ஆமையோடுகள் பலவும், பழக்கப்பட்ட மிகப் பெரிய சிங்கம் புலிகளும், வெகுமதிகளாக அளிக்கப் பெற்றன.

**படாலா**

சிந்துவின் மேல் பகுதியில் பல இனத்தினரைப் போரில் வென்றபின், அக்காலத்தில் வண்டல் பகுதியின் முனையிலிருந்த படாலாவை அடைந்தான். மான்சூரியாவால் பின்னர் அழிக்கப் பெற்ற புராதன நகரமான பாமனுபாடிற்கு அருகில் படாலா இருந்தது. இப்பகுதிகளின் எல்லைகளைத் தவறின்றி வரையறுப்பது ஏற்கெனவே நாம் குறித்துள்ள காரணங்களால் இயலாததொரு முயற்சியாக உள்ளது. படாலாவில் வலிமை மிக்க கடற்படைத் தளமொன்றை நிறுவுவதற்கு அலெக்சாந்தர் ஏற்பாடு செய்தான்.

**நியார்க்கஸ், அலெக்சாந்தர் ஆகியோரது பிரயாணங்கள்**

பலூசிஸ்தானத்தைக் கடந்து முல்லாக் கணவாய் மார்க்கமாகப் பாரசீகத்தைச் சென்றடையுமாறு கிரேடிராஸ் என்பவரின் வசம் யானைகளையும் மற்றும் கனமான தளவாடங்களையும் ஒப்புவித்தான். பின் சிந்துவின் முகத்துவாரத்தை நோக்கி முன்னேறினன். அக்காலங்களில் இப்பகுதி முற்றிலும் மாறுபட்ட புவிஇயலைப் பெற்றிருந்தது. அக்காலங்களில் இப்பகுதியிலுள்ள ரான், ஒரு வளைகுடாவாக இருந்தது. சிந்துவின் கிளையொன்று அதில் கலந்தது. தற்போதுள்ள டெல்டா பகுதி, காலப் போக்கில் உருவாகியது.

தோராயமாகப் பத்து மாதங்களுக்கு ஆற்றுப் போக்கில் பிரயாணம் செய்த பிறகு, கி.மு. 325 ஆம் ஆண்டு அக்டோபர் மாத முற்பகுதியில் தற்காலங்களில் கராச்சி என வழங்கிவரும் பகுதியிலிருந்து எஞ்சிய போர் வீரருடன் பிரயாணத்தை மேலும் தொடர்ந்தான்; இந்திய-ஜிட்ரோசியப் பிரதேசங்களின் எல்லைக் கோடாக விளங்கிய அராபிஸ் அல்லது ஹாப் ஆற்றைக் கடந்தான்.[1] முன்பின் கண்டும் கேட்டுமறியாத பகுதிகளின் வழியாகப் பாரசீகத்தை நோக்கிப் பிரயாணத்தைத் தொடர்ந்தான். உஷ்ணத்தாலும், தாகத்தாலும் படை வீரர்கள் அவதியுற்றனர். ஏராளமான வீரர் உயிரிழந்தனர். எஞ்சியிருந்த படைவீரர்

1 இ. எச். ஐ. 4 (1923) பக். 106.

பிப்ரவரி மாதத்தில் கார்மேனியாவைச் சென்றடைந்தனர். அக்டோபர்மாத இறுதியில் புறப்பட்டு அட்மிரல் நியார்க்கஸின் தலைமையில் கடலைச் சுற்றிப் பிரயாணம் செய்து வந்த கடற்படையை அங்குச் சந்தித்தனர். அலெக்சாந்தர், நியார்க்கஸ் ஆகியோரின் தீரமான பிரயாண வரலாறுகள் மிகவும் சுவையானவை. மிக விரிவாக விளங்கும் அவைகளை இங்குப் புகுத்த இயலவில்லை. வர்ணனைகளிலேயே அதன் சுவை அடங்கியுள்ளது. கி.மு. 324 ஆம் ஆண்டு மே மாதம், பாரசீகத்திலுள்ள சூசாவைச் சென்றடைந்தான். மூன்று ஆண்டுகளுக்கும் சற்றுக் குறைவாக அவன் இந்தியப் படையெடுப்பில் காலங் கழித்தான். தற்கால பாக்தாதையடுத்துள்ள பாபிலோனில், கி. மு. 323 ஆம் ஆண்டு ஜூன் மாதம் தனது முப்பத்து மூன்றும் ஆண்டில் அவன் மரணமடைந்தான். 'பல ஜன்மங்களெடுத்துப் பெறவேண்டிய சக்திகள் யாவும், பதின்மூன்றே யாண்டுகளில் அவனிடம் அடங்கியிருந்தன.'

**கிரேக்கரின் ஆதிக்கம் மறைதல்**

சிந்து நதியின் முகத்துவாரத்திலுள்ள இந்தியப் பகுதிகள் யாவையும் நிலையாகத் தனது பேரரசுடன் இணைத்துக் கிரேக்க நாட்டிலிருந்து ஆசியாக் கண்டம் வரையிலும், தனது பேரரசின் எல்லையைப் பெருக்க வேண்டுமென அலெக்சாந்தர் மனப்பூர்வமாக எண்ணினன். தான் கொண்ட எண்ணத்தை ஈடேற்றுவதற்கு, அவன் மேற்கொண்ட முயற்சிகள் பொருத்தமுடையவையாகவும், போதுமானவையாகவும் இருந்தன. ஆனல், அவனது அகால மரணம் திட்டங்களைப் பயனற்றவையாகச் செய்தன. கி.மு. 321 ஆம் ஆண்டில் ரைபாராடீசாஸ் என்னுமிடத்தில், பேரரசின் இரண்டாம் பிரிவினையை மேற்கொண்டபோது, ஆண்டிபேடர் என்பவன், சிந்து சமவெளி, பஞ்சாப் ஆகிய பகுதிகளிலுள்ள கிரேக்க நாடுகளை, போரஸ், ஆம்பி ஆகியோரது கண்காணிப்பில் வைத்தான். பொறுப்பைச் சரிவர நிறைவேற்றுதற்குத் தேவையான அதிகாரங்கள் அவர்களுக்கு வழங்கப்பெறவில்லை. தெளிவாக கி.மு. 317 ஆம் ஆண்டிற்குள் இந்திய நாட்டிலுள்ள மாசிடோனிய ஆதிக்கம் முழுவதும் மறைந்துவிட்டது.

**படையெடுப்பினுல் இந்திய நாட்டிலேற்பட்ட விளைவுகள்**

அலெக்சாந்தரின் படையெடுப்பின் நேரடி விளைவுகள் மிகச் சொற்பமானவையாகத் தென்பட்டாலும், இந்நாட்டு வரலாற்றில் அதன் விளைவு கணிசமானதாகத் தென்படுகிறது. மேலை, கீழை நாடுகளிடையே போக்குவரவு நடைபெறுவதற்கான

மூன்று தரை மார்க்கங்களும், கடல் மார்க்கமொன்றும். உலகினருக்குத் தெளிவாயின. இரு கண்டங்களையும் பிரித்திருந்த அரண் தகர்த்தெறியப்பட்டது. பயனுள்ளவை என அவன் உலகினருக்கு எடுத்துக் காட்டிய தரைமார்க்கம் காபூல், பலூசிஸ்தானத்திலுள்ள முல்லா கணவாய், ஜிட்ரோசிய ஆகிய இடங்களின் வழியாக அமைந்தது. மெக்ரான் கரை வழியாக மேற்கொள்ளப்படும் கடற்பிரயாணம் அத்துணைக் கடினமானதல்ல என நியார்க்கஸ் நிரூபித்தான். தேவையான விவரங்களை அவன் முன்னெச்சரிக்கையாகச் சேகரிக்காததால் அவனுக்கு ஒரு சில கஷ்டங்கள் நேர்ந்தன. வடமேற்கு ஆசியாவில் உடனடியாகப் பல கிரேக்க நாடுகள் நிறுவப்பெற்றன. இதனால் இந்தியாவிற்கும் மேலை நாடுகளுக்குமிடையே கருத்துப் பரிவர்த்தனைகள் நடைபெறலாயின. கி மு. மூன்றாவது நூற்றாண்டின் இடைப்பகுதியில் கிரேக்க—பாக்திரிய அரசு நிறுவப் பெற்றது. இதன் விளைவாக கிரேக்க மன்னர் சிலர், இந்தியப் பகுதிகளை அடிமைப் படுத்தினர். கலைத் துறையில் கிரேக்கரின் ஆதிக்கம் கிறிஸ்து சகாப்தத்தின் முதல் நூற்றாண்டிலிருந்தே பரவத் தொடங்கி விட்டது என்பது, காந்தாரக் கலை வாயிலாக மிகத் தெளிவாக விளங்குகிறது. ஆனால் பிற துறைகளில் இவ்வாதிக்கம் அதிகமாகப் பரவவில்லை என்றும் தெரியவரும். கிரேக்க தெய்வங்களைப் பற்றிய அறிவு வளர்ந்ததும, புத்த சமயப் போதனைகள் பலவித மாறுதல்களை அடைந்தன என நம்புவதற்கு இடமுண்டு. புத்த சமயக் கோட்பாடுகளில் உருவ வழிபாடு ஏற்படுவதற்குக் கிரேக்கரின் தொடர்பு முக்கியமானதோர் காரணமாக இருந்தது.[1] வான சாத்திரத் துறையில் கிரேக்கரின் ஆதிக்கத்தை மறுப்பதற்கில்லை. அத்துறையில் வழங்கப்பெறும் சொற்கள் பல கிரேக்கரிடமிருந்து கிடைத்தவை இந்தியப் பண்பாட்டில், இன்று நாம் காணும் கிரேக்கச் சுவடுகள் யாவற்றிற்கும். அலெக்சாந்தரின் படையெடுப்பே மறைமுகமான காரணம் என்பதை மிக எளிதில் கண்டறியலாம். கிரேக்க ஆதிக்கம் இந்திய சமுதாயத்தில் ஆழமாக ஊடுருவிப் பரவவில்லை. அரசு முறைகளும், சாதி முறையை அடிப்படையாகக் கொண்ட சமுதாய அமைப்பும் உடனடியாக மாறி விடவில்லை. போர் முறைகளிலும், அலெக்சாந்தரின் வன்மையான வாள் வலிமையின் உண்மையான தன்மைகளை இந்தியர் அவரிடமிருந்து கற்றுக்கொள்ளவில்லை. கவைக்

[1] பிக்கானிரில் கண்டெடுத்த ஆயுதக் குவியலில். கிரேக்க நாட்டு ஆட்டுத் தலையும் ஒன்றாகும். இதில் கிரேக்கக் கலையின் சிறு நிழல் தென்படுவதாக ஹெர்வே (குறிப்பட்டியலில் ஒரு சில லால்யூம் 1, பக்கம் 209) கூறுவர். இந்துகுஷ் மலையிலுள்ள காபிர்களினிடையில், கிரேக்கப் பழக்க வழக்கங்கள் நீடித்து வருவதாகத் தெரிய வருகிறது:

குதவாத காலாட் படையினரின் பெருங் கூட்டத்துடன், யானைகளையும் தேர்களையும் நம்பிப் போரிடும் பழங்கால முறைகளையே இந்திய மன்னர்கள் மேலும் வழக்கமாகக் கைப்பிடித்து வந்தனர். அலெக்சாந்தரின் குதிரை வீரர் கையாண்ட 'திடீர்த் தாக்குதல்' முறைகளை இந்தியர் உணரவில்லை. பதினாறும் நூற்றாண்டில் மீண்டும் இவ்வுபாயத்தைக் கையாண்ட பாபர் பெரு வெற்றி கண்டான்.

### ஐரோப்பாவில் இந்தியரின் செல்வாக்கு பரவுதல்

அலெக்சாந்தரின் துணிகரமான முயற்சியால், மேலை நாட்டினருக்கு இந்திய நாட்டுடன் தொடர்பு கொள்ளும் பெருவாய்ப்புக் கிடைத்தது. இத் தொடர்பினால் ஏற்பட்ட விளைவுகள் அங்கொன்று மிங்கொன்றுமாகவும், தெளிவற்றும் நமக்குக் கிடைக்கின்றன. எனவே உறுதியாக எதையும் நாம் கூறுவதற்கில்லை. ஆதிகால கிறிஸ்துவ சமய வளர்ச்சியில், புத்த சமயக் கோட்பாடுகளின் செல்வாக்கு ஓரளவு காணப்படுகிறது. இதைத் தவிர வேறு சான்றுகள் இல்லையென்றே சொல்லலாம். இந்திய தத்துவ, சமயக் கருத்துகள் அலெக்சாந்தர் ஏற்படுத்திய கால்வாய்களின் வழியே பாய்ந்தோடி, வடிகாலின் வழியாக ரோமானிய சாம்ராச்சியத்தில் புகுந்தன.

அலெக்சாந்தரின் அறிவு முதிர்ந்த திட்டங்களால், கிரேக்க அலுவலர்கள் இந்திய நாட்டைப் பற்றிய அருமையான தகவல்களைச் சேகரித்தனர். பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதி வரையில் இதனால் கணிசமான பலனொன்றும் கிட்டவில்லை. அந் நூற்றாண்டில் வாஸ்கோ–டி-காமா என்பவன், ஐரோப்பாவை இந்தியாவினின்றும், இந்தியாவை ஐரோப்பாவினின்றும் பிரித்து மறைத்த திரையைக் கிழித்தெறிந்தான்.

### கி.மு. நான்காம் நூற்றாண்டு இந்தியா

கி.மு. நான்காவது நூற்றாண்டு இந்திய நாடுகளின் வரலாற்றை ஐயமின்றி எடுத்துரைப்பது இயலாத ஒரு காரியமே. மகதத்தின் வரலாற்றை ஒருவாறு கூறலாம். இருந்த போதும் அரசியல், சமுதாய, பொருளாதாரச் சமயத் துறைகளைப்பற்றிய விவரங்கள் ஓரளவு நமக்குக் கிடைக்கின்றன. பேரரசாகத் திகழ்ந்த ஒரு நாடு இல்லை என்பது தெளிவாகத் தெரிய வருகிறது. அலெக்சாந்தர் விஜயம் செய்த பஞ்சாப், சிந்து ஆகிய இரு மாகாணங்களிலும் தனித்தனியான சுதந்திர நாடுகள் பல இருந்தன. ஹிடாஸ்பசிற்கும், ஹைபேசிசிற்கும் இடைப் பகுதியில்

மட்டிலும் ஏழு தேசங்கள் அல்லது இனங்கள் இருந்தன. தட்ச சீலம், பேரரசின் நாடு போன்ற இடங்களில் முடிமன்னராட்சி நிலவியது. க்ஷுத்ரகர் (மல்லாய், ஆக்சிடிரகாய்), மாளவர் போன்ற இனத்தினர் வசித்த பகுதிகளில் குடியாட்சி முறை வழக்கிலிருந்தது. இப் பகுதிகளில், செல்வமிக்க பிரபுக்களின் ஆட்சி நடைபெற்றிருக்க வேண்டும். சமாதானப் பேச்சுக்காகச் சிறந்த 150 குடி மக்களை க்ஷுத்ரகர் தேர்ந்தெடுத்து அனுப்பினர். ஆதி நாள் முதல், சுய ஆட்சியில் தங்களுக்குள்ள பற்றையும், சுதந்திர வாழ்வில் தாம் கொண்டிருந்த இச்சையையும், அவர்கள் எடுத்துரைத்து வாது செய்தனர். பண்டைய இந்தியாவில் வழக்கிலிருந்த இக் குடியாட்சிகள் பல எவ்வாறு இயங்கின என்பதைப் பற்றிய குறிப்புகள் துரதிர்ஷ்டவசமாகப் போதிய அளவில் நமக்குக் கிடைக்கவில்லை. அர்த்த சாத்திரம், மற்றும் சமண, பௌத்த நூல்கள், அத்தகைய குடியரசுகள் இருந்தமைக்குச் சான்று பகருகின்றன. மகாபாரத காவியத்தில் ஒரு பகுதி முழுவதும், அக்குடியரசுகளின் தன்மையை விரித்துரைக்கின்றன.[1]

அலெக்சாந்தரின் படையெடுப்பிற்குச் சுமார் இருபதாண்டுகளுக்குப்பின், 118 தனி நாடுகள் அல்லது இனத்தினர், இந்திய நாடெங்கிலும் வசித்து வந்தனர் என, மெகாஸ்தனீஸ் கூறியுள்ளான். இதனால் பஞ்சாப், சிந்து மாகாணங்களில் பல அரசுகள் இருந்தன என்பது வியப்பிற்குரிய செய்தியல்ல. அத்தகைய நாடுகள் எப்போதும் ஒன்றோடொன்று சண்டையிட்டு வந்தன. இதனால் அந்த நாடுகளின் கௌரவமும் எல்லையும் அடிக்கடி மாறி வந்தன. பஞ்சாப் மன்னர்களிடையில் நிலவிய இவ்வொற்றுமையின்மை, அலெக்சாந்தருக்கு மிகவும் சாதகமாக இருந்தது. அர்த்த சாத்திரம் ஒளிவு மறைவின்றிப் பின்வரும் நுணுக்கங்களை எடுத்துக் கூறுகிறது.

சக்தி மிகுந்தவர் போர் தொடுக்கலாகும் செல்வாக்குப் பெற்று எழுபவர்கள் சமாதான உடன்படிக்கையை புறக்கணிக்கலாம்.

1 ‘சாந்திபர்வம்’ பக். 109, பிரதியும், மொழி பெயர்ப்பும் கே. பி. ஜயஸ்வால். ‘மகாபாரத காவியத்தில் குறிக்கப் பெறும் குடியரசுகள்’ (எப்.பி.ஓ. ஆராய்ச்சிக் குழு வால்யூம் i, (1915)(பக். 173) புராதன இந்தியாவின் கூட்டு வாழ்வு, பகுதி iii, கல்கத்தா 1918 என்னும் நூலில் ஆர். சி. மஜூம்தார் அவர்கள் இவ்விஷயத்தைப் பண்பட்ட முறையில் மிக நுணுக்கமாக ஆராய்ந்துள்ளார்.

போரில் வெற்றிகண்டு வருபவனின் எல்லைப்புறத்திலுள்ள ஒவ்வோர் அரசனும் விரோதியாகவே கருதப்படுகிறான். இத்தகையபொதுவழக்குகள் ஓய்விலாத போர்களின் விளைவேயன்றி வேறல்ல.

**வாணிபப் பெருக்கம்**

கிரேக்கர்கள் அளிக்கும் தகவல்களிலிருந்தும் அர்த்த சாத்திரத்தில் காணப்படும் குறிப்புகளிலிருந்தும் கி.மு. நான்காம் நூற்றாண்டில் இந்தியர் மிகச் சிறந்த நாகரிக வாழ்வு பெற்று விளங்கினர் என்பது நன்கு விளங்கும். உள்நாட்டு மற்றும் வெளிநாட்டு வாணிபம் மிகவும் வளர்ந்தோங்கியிருந்தது. வாழ்க்கைக்குரிய போகப் பொருள்கள் யாவையும் அவர்கள் பெற்றிருந்தனர் என்பதும் தெளிவாக விளங்குகிறது. தென் கோடியிலுள்ள சில பகுதிகளைப் பற்றி, வடக்குத் திசையில் வாழ்ந்திருந்தோர் நன்கு அறிந்திருந்தனர் என்பதும் தெரிய வரும். சுறுசுறுப்பான அலுவல்களின் விளைவான தொடர்பு இந்திய நாட்டுப் பகுதிகள் பலவற்றையும் ஒன்றுசேரப் பிணைத்தது. இக்கருத்தை உறுதிப் படுத்துகின்ற தகவல்கள் சில உண்டு.

சிறந்த யானைகள் கிழக்குப் பகுதிகளிலிருந்தே வந்தன. அங்கம் (பகல்பூர், மாங்கீர்), கலிங்கம் (ஒரிசா), மற்றும் கரூஸா (ஷாஹபாத்) ஆகிய பகுதிகள் விசேஷமாகக் குறிப்பிடப்படுகின்றன. இவற்றுள் மிகவும் மட்ட ரகமானவை சௌராஷ்டிரம் (கதியவார்), பஞ்ச ஜனம் (குஜராத்திலுள்ள பஞ்சமகல்களாக இருக்கலாம்) ஆகிய பகுதிகளிலிருந்து கிடைத்தன. நடுத்தர ரகமானவை பண்டுல்கண்டிலுள்ள தாசன் ஆற்றுக் கரைகளிலிருந்தும், மேலும் மேற்கிலிருந்தும் கிடைத்தன வென்று தெரிய வருகிறது.

தென் பகுதிகளுடன் பிறநாடுகள் கொண்டிருந்த வாணிபத் தொடர்பு, வட பகுதிகளுடன் நடைபெற்ற வாணிபத்தைவிட மிகவும் போற்றுதற்குரியது என அர்த்த சாத்திரம் குறிக்கிறது. விலையுயர்ந்த பொருள்கள் தீபகற்ப இந்தியாவிலிருந்து கிடைத்தன. போர்வைகள், தோல் வகைகள், குதிரைகள் போன்றவையே வட இந்தியப் பொருள்களாக விளங்கின. பொன், வைரம், முத்துகள் மற்றும் பல் வகையான இரத்தினங்களும், சங்கு மற்றும் சிப்பிகளும் தென் இந்தியப் பகுதிகளின் விசேஷப் பொருள்களாக இருந்தன. திருநெல்வேலியிலுள்ள பொருநை ஆறும், பாண்டிய நாடான மதுரையும், சிங்களமும் குறிக்கப்படுகின்றன. அன்னிய நாடுகளுடன் நடைபெற்ற தரை மற்றும் கடல்

மார்க்க வாணிபங்களைக் கட்டுப்படுத்துவதற்கு விதிகள் பல இருந்தன. இந்திய நாட்டிற்குள் வருவோருக்கும், நாட்டை விட்டு வெளியே செல்வோருக்கும், அனுமதிச் சீட்டுகளும் அடையாளச் சீட்டுகளும் வழங்கப் பெற்றிருந்தன.[1] நாணய முறை மிகத் தொடக்க நிலையிலேயே இருந்தது. 'முத்திரையிடப் பெற்றிருந்த' நாணயங்களே மிக அதிகமாக வழக்கிலிருந்தன. நாணயங்களின் இரு புறங்களிலும் வெவ்வேறு சமயங்களில் தனித் தனியான குறிகள் இடப் பெற்றிருந்ததோடு, பல்வேறு முத்திரைகளும் காணப்படுகின்றன. நாகவெள்ளியாலான அத்தகைய நாணயங்கள் இந்திய நாடு முழுவதும் காணக் கிடைக்கின்றன. அபூர்வமாக, ஒரு சில செப்பு நாணயங்களும் கிடைக்கின்றன. பெரும்பாலானவை, தகட்டிலிருந்து வெட்டியெடுக்கப் பெற்ற சதுரவடிவமான அல்லது நீண்ட சதுரமான உலோகத் துண்டுகளாகும். வட்ட வடிவமானவை கிடைப்பது அரிது. பயிற்சியில்லாத சிலரால் வார்த்து எடுக்கப் பெற்ற நாணயங்கள் ஒரு சில பகுதிகளில் காணக் கிடைக்கின்றன. அவை மிகப் பழமையானவையாகும்.

**சமயம்**

சமயங்களின் வரலாறுகள் பற்றிய ஒரு சில குறிப்புகளைத் தட்சசீலத்தைப் பற்றி விவாதிக்கும் போது குறித்தோம். நான் குறிப்பிட விரும்பும் மற்றும் சில கருத்துகள் இங்குப்பொருத்தமானவைகளாகவே விளங்குமென எண்ணுகிறேன். கங்கை ஆறு[2] மதுராசூர சேனர்களால் வழிபட்டுவந்ததாகக் கூறப்படும் இந்திய ஹிராகிள்ஸ், (இவரைக் கிருஷ்ணனாகவோ அல்லது அவரது சகோதரர் பலராமனாகவோ எண்ணலாம்), சீயஸ் ஆம்பிரியஸ்—மழைக் கடவுள் (இது இந்திரனைக் குறிப்பதாகக் கொள்ளலாம்) ஆகிய கடவுளர் குறிப்பிடத் தக்கவர்களாவர். கிருஷ்ணன் வழிபாடு தொடங்கியதும், கங்கை ஆற்றிற்கு அளிக்கப்பட்டிருந்த கௌரவமும் கவனத்திற்குரியவையாக இருக்கின்றன.

பிராமணர்களின் செல்வாக்கு, மதிப்பிற்குரியதாக வேரூன்றியிருந்தது. மாளவர் இராச்சியத்தின் நகரமொன்றில் அவர்கள் வாழ்ந்தனர். அப்பகுதி அவர்களுக்கே உரிமையாக, சாசனத்தின் மூலம் வழங்கப்பட்டிருந்தது. எங்கும் அரசர்களுக்கு,

[1] அர்த்த சாத்திரம் நூல் ii, அதிகாரங்கள் 2, 11, 16, 28, 34; நூல் vii. அதி-12.

[2] ஸ்டிராபோ நூல் xv, அதிகாரம் i, பிரிவுகள் 59, 69. ஆரையன் இண்டிகே, அதிகாரம் 8.

நீதியை எடுத்துரைப்பது அவர்களது வேலையாகவும் காணப்படு கிறது. சிந்துவில் படையெடுத்து வந்தவனை எதிர்த்து நிற்க வேண்டுமென, குறுநில மன்னர்களுக்கு அவர்கள் தங்கள் செல் வாக்கைப் பயன்படுத்தி எடுத்துரைத்தனர். இப்புத்திமதிக் காக அவர்கள் தங்கள் உயிரையே பணயம் வைத்திழக்கவேண் டியதாயிற்று.[1]

தாவர இனங்களை வழிபடும் பண்பை குவின்டஸ் கர்டியஸ் குறிக்கிறார். புனித மரங்களைப் புறக்கணிப்பதால், மரண தண்டனை விதிக்கப்பெறும் என்று அவர் உறுதியாகக் கூறுவர். பிராமண ரிடம் புலால் உண்ணும் வழக்கமிருந்ததெனினும், தங்கள் முயற்சி களில் துணை செய்யும் பிராணிகளின் இறைச்சியை அவர்கள் உண்பதில்லை. இக்கருத்து, கொம்புள்ள பிராணிகளிடத்தில் பிராமணருக்குள்ள மதிப்பை எடுத்து விளக்குவதாக இருக்கிறது. பிற வகுப்பினரிடம் இறைச்சியுண்ணும் வழக்கம் இருந்ததென அறிகிறோம்.

[1] ஆரையன், அனுப், நூல் vi, அதிகாரங்கள் 7, 17

**சிசுநாக, நந்த வமிசத்தினரின் தோராயமான காலவரன் முறை**

| வரிசை எண் | மத்ஸ்ய புராண மன்னர் பட்டியல் | அரசேற்ற தோராயமான காலம் கி. மு. | குறிப்புகள் |
|---|---|---|---|
| | சிசுநாகர்கள் | | |
| 1. | சிசுநாகன் | 650 | பூர்வ காசி அல்லது பனாரஸ் மன்னர்கள். செய்தி எதுவும் குறிக்கப் பெறவில்லை. |
| 2. | காகவர்ணன் | | |
| 3. | க்ஷேமதர்மன் | | |
| 4. | க்ஷேமஜிதன் அல்லது க்ஷத்ரௌஜன் | | |
| 5. | பிம்பிசாரன் அல்லது ஸ்ரீநிகன் | 522 | புதிய இராஜ கிருகரத்தை நிர்மாணித்தான். அங்கத்தை வெற்றிகண்டான். புத்தர், மகாவீரர் ஆகியவரின் சம காலத்தவன்; சமணன் எனப் புகழ் எய்தியவன், |
| 6. | அஜாதசத்ரு அல்லது குனிகன் | 494 | பாடலி புத்ரக் கோட்டை எழுப்பியவன் வைசாலி, கோசல மன்னரைப் புறங் கண்டவன்: புத்தர், மகாவீரர் ஆகியோர் மரணம். |
| 7. | தர்சகன் | 467 | பாசனின், 'ஸ்வப்னவாசவதத்தம்' என்னும் நாடகம் குறிக்கிறது. |
| 8. | உதாசின் அல்லது உதயன் | 443 | சோன் நதிக்கரையிலுள்ள பாடலிபுத்ரத்தின் அருகில், கங்கை நதிக் கரையில் குஸுமபுரத்தைக் கட்டியவன். |
| 9. | நந்திவர்த்தனன் | 410 | செய்தி எதுவும் குறிக்கப் பெறவில்லை. |
| 10. | மகாநந்தி | | |
| | ஒன்பது நந்தர்கள் | | |
| 11. 12. | மகாபத்மனும் அவனது 8 பிள்ளைகளும் இரு தலைமுறைகள் | 362 | இழிகுல நாத்திகர்; க்ஷத்திரியரையும், பிராமணரையும் வெறுப்பவர்; சந்திரகுப்தன், கௌடில்யன் ஆகியோரால் அழிக்கப் பெற்றவர். |
| | மௌரியர் | | |
| 13. | சந்திரகுப்தன் | 322 | ஆட்சி காலம் பெரும்பாலும் சரியான தேயாகும். |

இந்த அட்டவணையைப் பரிசீலித்துப் பிரசுரிப்பதில், டாக்டர் ஸ்மித் அளித்துள்ள மத்ஸ்ய புராணப் பட்டியலையே மீண்டும் கொடுத்திருக்கிறேன்: எனக்கு இதில் பல ஐயப்பாடுகள் உண்டு. புராணங்கள் வாயி

**கால வரன்முறை**

(மகா அலெக்சாந்தர்)

(தெய்திகளைப் பற்றிய ஐயப்பாடுகள் இல்லை)

கி.மு.

334 அலெக்சாந்தர் பாரசீகத்திற்கு எதிராகப் போர் தொடுத்தல்—கிரேனிகஸ்—தார்ஜிலியன் போர்.

333 இசுஸ் போர்

332 எகிப்தைக் கைப்பற்றுதல்

331 எகிப்தில் அலெக்சாந்திரியாவிற்கு அடிகோலுதல்—கௌகமேலாப் போர் (ஆர்பேலா)

330 பாரசீகத்தில் அலெக்சாந்தர்—டரையசின் மரணம்

328–7 பாக்திரியாவில் அலெக்சாந்தர்.

இந்தியப் படையெடுப்பு (முக்கிய தகவல்கள் மட்டிலும்)

327 மே மாதம். இந்துகுஷ் மலைத் தொடரைக் கடத்தல்

---

லாக நாம் பெறும் காலவரன்முறை தவறானது என்றும், மகாவம்சத்தையே பின்பற்றுவது முறையென்பதையும் வற்புறுத்தி, பேராசிரியர் எச். சி. ராய் சௌதிரி அவர்கள் (புராதன இந்திய அரசியல் வரலாறு, பக்கம் 115 ff) பல காரணங்களை வன்மையாக எடுத்துக் கூறியுள்ளார். சிங்கள மரபை, டாக்டர் ஸ்மித் என்றுமே நம்பியதில்லை. இன்றும் நம்ப மாட்டார் என்பது எனது துணிபு. புராண அரச மரபும் தவறென்று உறுதியாக எவரும் கூறவில்லை. நான் மாற்றியமைத்திருக்கும் ஒரு சில நாட்கள், புத்தரின் பரிநிர்வாணச் செய்தியை அடிப்படையாகக் கொண்டேயாகும். இதை டாக்டர் ஸ்மித் அவர்கள் (புராதன இந்திய வரலாறு பக். 48) முன்னரே ஏற்றிருப்பதோடு. மற்றும் பலரும் ஏற்கின்றனர். டாக்டர் ஸ்மித் அவர்களுக்கு நம்பிக்கையில்லை என்றாலும், நிர்வாணம் அஜாத சத்ருவின் ஆட்சியின் எட்டாவது ஆண்டில் நிகழ்ந்திருக்க வேண்டும் என்ற சிங்கள மரபுக் கருத்தை நான் ஏற்றிருக்கிறேன். சிங்கள ஏடுகளில் கிடைக்கும் மகத மன்னர்களின் பட்டியல் நம்பத்தகாததெனினும், இக்கால ஒற்றுமை, பாலி இலக்கிய வாயிலாக நமக்குக் கிடைக்கும் புத்தரின் வாழ்க்கைக் குறிப்புகளோடு ஒத்து வருகின்றது. எனவே, இது முறையானதென்றே எனக்குத் தோன்றுகிறது. புராண வாயிலாகக் கிடைக்கும் ஆட்சி காலங்களை அடிப்படையாகக் கொண்டு அரசேற்ற தெய்திகள் தோராயமாகக் கூறப்பட்டுள்ளன. மகாபத்மனும் அவனது எட்டு மக்களும் நாற்பது ஆண்டுகள் அரசாண்டனர் என்னும் வாயு புராணச் செய்தியை நான் ஏற்றிருக்கிறேன். நந்திவர்த்தனன், மஹாநந்தின் ஆகியோரது ஆட்சி காலம் எண்பது ஆண்டுகளுக்கும் சற்று அதிகமெனப் புராண வாயிலாக அறியக் கிடக்கிறது சந்திரகுப்தன், நிர்வாணம் ஆகிய நிகழ்ச்சிகளைப் பற்றிய தெளிவான குறிப்புகள் கிடைப்பதால், அவைகளுடன் ஒத்து வருவதற்காக, இக்கால அளவு மிகவும் குறைக்கப்பட்டுள்ளது. (ப-ர்.)

327 ஜூன்—டிசம்பர். பஜௌர், சுவாத் (ஸ்வாட்) மலைப் பகுதிகளில் முற்றுகை

326 பிப்ரவரி சிந்து நதியைக் கடத்தல்

326 ஜூலைத்தொடக்கம். ஹிடாஸ்பஸ் போர்

326 செப்டெம்பர். ஹைபேசிசிற்கு வருகை, கற்றூண்கள் நிறுவுதல், திரும்ப வேண்டிய சூழ்நிலை

326 அக்டோபர் இறுதி. ஆற்றுப்போக்கில் வீடு திரும்பும் பிரயாணம்

325 ஜனவரி. மாளவரை (மல்லாய்) முறியடித்தல்

325 அக்டோபர் தொடக்கம். ஜிட்ரோஷியாவின் யாத்திரையை அலெக்சாந்தர் தொடங்குதல்

325 அக்டோபர் இறுதி. பாரசீக வளைகுடாவிற்குக் கரை வழியாக நியார்க்கஸ் பிரயாணம் தொடங்குதல்

324 பிப்ரவரி. அலெக்சாந்தரும், எஞ்சிய வீரரும் கார்மேனியா வந்தடைதல்

324 மே. அலெக்சாந்தர் பாரசீகத்தில் சூசாவைச் சென்றடைதல்

323 ஜூன். பாபிலோனில் அலெக்சாந்தர் மரணம்.

### மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

புராதன இந்திய வரலாற்றிலும், இந்நூலின் அதிகாரங்களிலுள்ள குறிப்புகளிலும் மேற்கோள் நூல்களும் தரப்பட்டுள்ளன. இப்பட்டியல் மேலும் சில நூல்களை அறிமுகப்படுத்துகின்றன.

தட்சசீலம். சர். ஜே. மார்ஷலின் சிறந்த நூல் தட்சசீலம் (3 வால்யூம். கேம்பிரிட்ஜ் 1951)

புத்தர் கால வரலாற்றிற்கு டி. டபிள்யூ. ரிஸ்டேவிட்ஸின் ‘புத்த இந்தியா’ (லண்டன் 1903) மிகப் பயனுள்ளது.

அதைப் போலவே ‘கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றின்’ (வால், 1) அதிகாரங்கள் vii, viii மிகப் பயனுள்ளவை.

ஹீன அயன புத்த சமயத்தைக் குறித்துப் பேராசிரியர் ரிஸ் டேவிட்ஸின் நூல்கள் இன்றும் மிகச் சிறந்தவையாக விளங்கு கின்றன.

திருமதி சி. எ. ரிஸ்டேவிட்ஸின் நூல்களும் அவ்வாறே பய னுள்ளவை.

நாம் இது வரை எண்ணுவதைப் போலன்றி, புத்தரின் ஆதி சமயக் கொள்கைகள், உபநிடதக் கருத்துகளை உள்ளடக்கியிருந் தன என ரிட்ஸ் டேவிட்ஸ் அம்மையார் கூறுவர். பகுதி ii, அதி காரம் 3–ன் இறுதியிலுள்ள மேலும் கற்பதற்குரிய நூல்கள் பட் டியலைப் பார்க்கவும்.

சமணத்தைப் பொறுத்த வரையில், ஆங்கில நூல்களில் திருமதி ஸ்டீவன்சனின் 'சமணத்தின் இருதயம்' (ஆக்ஸ்போர்டு 1915) என்னும் நூல் மிகவும் பயனுள்ளது.

'ஷுபிரிங்' (Die Lehre der Jainas, Grundriss, iii. 7, Berlin 1935)

கிளேசநாப் (Der Jainismus, Berlin, 1925)

'குவிரிநாட்'(La Religion Djaina, Paris 1926) ஆகியவர்களின் முக்கிய நூல்கள் துரதிஷ்டவசமாக மொழிபெயர்க்கப்பட வில்லை.

'குருன்டிரிஸ்' (ஸ்டிராஸ்பர்க், 1913)ல் உள்ள, சர். ஆர். ஜி. பந்தர்க்கரின், வைஷ்ணவ சமயத்தைக் குறித்த கட்டுரை மிகவும் முக்கியமானது.

அதைப் போலவே, 'வைணவப் பிரிவின் பண்டைய வரலாற் றைக் கற்பதற்கான சான்றுகள்' (கல்கத்தா, 1920) என்ற எச். சி. ரேசௌதுரியின் நூலும் பயனுள்ளதே.

அர்த்த சாத்திரத்தைப் பொறுத்த வரையில் அடுத்துள்ள அதிகாரத்தின் இறுதியில் தரப்பட்டுள்ள நூலடைவைப் பார்க்க வும்

ஆசியாவில், அலெக்சாந்தர் மேற்கொண்ட படையெடுப்பை, டபிள்யூ. டபிள்யூ. டார்ன் என்பவரின் 'மகா அலெக்சாந்தர்' (2 வால்யூம்கள், கேம்பிரிட்ஜ் 1948) என்னும் நூல் மிக விரிவாகக் கூறுகிறது.

இந்தியப் படையெடுப்பைப் பற்றிய விரிவான தகவல்கள் 'இ. ஆ. வ.'வில் தரப்பட்டுள்ளன.

'மகா அலெக்சாந்தரின் இந்தியப் படையெடுப்பு. (இரண்டாம் பதிப்பு, வெஸ்ட்மின்ஸ்டர் 1896) என்னும் நூலில் ஜே. டபிள்யூ. மெக்கிரிண்டில் அவர்கள் இலக்கியச் சான்றுகளை மொழிபெயர்த்து அளித்திருக்கிறார்.

'இந்திய மக்களின் வரலாறும் பண்பும்' என்ற தொடர் நூலின் இரண்டாம் பகுதி 'பேரரசின் கீழ் உதித்த ஒருமைப்பாட்டு யுகம்' என்ற தலைப்பில் வெளிவந்துள்ளது, (பார். ஆர்.சி. மஜூம்தார், பாம்பே, 1951)

இதுவரை நாம் கூறியுள்ள வரலாறும், அடுத்து வரும் மூன்று அதிகாரங்களில் உள்ள வரலாறும் மிகத் தெளிவாக இன்றுவரை கிடைக்கும் தகவல்களுடன் வெளிவந்துள்ளன.

# பகுதி II

# இந்து இந்தியா

## கி.மு. 322 ஆம் ஆண்டில் மௌரியகுல ஆட்சி தொடங்கியது முதல் கி.பி. ஏழாவது நூற்றாண்டு வரை

## 1. சந்திரகுப்த மௌரியன், வரலாறு கண்ட முதல் இந்தியப் பேரரசன், அவனது நிறுவனங்கள்; பிந்துசாரன்

### இருளில் ஒளி

மௌரியராட்சித் தொடக்கமுதல் இருளில் தடுமாறும் வரலாற்று அறிஞனுக்குச்சிறிது ஒளி கிடைக்கிறது. காலவரன் முறை திடீரென உறுதி பெறுவதோடு தெளிவும் பெறுகிறது. பெரியசாம்ராச்சியமொன்று உருப்பெற்று நிலைபெறுகிறது; சிதறிக்கிடக்கும் சிறு நாடுகள் யாவும் ஒன்று சேருகின்றன. பேரரசர்கள் என உரிமையோடு நாமழைக்கக் கூடியவர்கள், பெரும் புகழ் படைத்திருந்தனர். மிக்க புகழ்படைத்தவர்களின் குணாதிசயங்களும் காலப்போக்கில் ஒளி மங்கி, ஓரளவே நமக்குப் புலனாயின. உலகம்முழுவதும் பரவியிருந்த மாபெரும் திட்டங்கள் தொடங்கப் பெற்றன. அவைகளின் ஆதிக்கம் இன்றும் நிலைபெற்றிருக்கின்றன. தனித்தியங்கிவந்த இந்திய நாட்டிற்கு, வெளியுலகத்துடன் தொடர்புகொள்ளும் வாய்ப்பும் கிடைத்தது.

### மௌரியர் ஆட்சியை விளக்கும் சான்றுகள்

இக்காலத்தைக் குறித்த தெளிவான குறிப்புகளுக்கு நாம் மூன்று வகைச்சான்றுகளைப் பயன் படுத்தலாம்; அவை முறையே அலெக்சாந்தர், மற்றும் அவருக்கு ஒருதலைமுறைக்குப்பின்

இந்திய நாட்டிற்கு விஜயம் செய்த கிரேக்கரின் வரலாற்றுக் குறிப்புகள், குகைகளிலும் தூண்களிலும் பொறிக்கப் பெற்றுள்ள அசோகரின் கல்வெட்டுகள், சந்திரகுப்தமௌரியனின் திறமை மிக்க அமைச்சரும், விஷ்ணுகுப்தன், கௌதில்யன் (கொதல்யன்) அல்லது சாணக்கியன் என்பவரால் எழுதப்பட்டதாகக்கூறப் படும் அரசதந்திர நூலான அர்த்தசாத்திரம், ஆகியவையாகும். பின்னர்க் குறிக்கப்பெற்றுள்ள சான்று மிகவும் பயனுள்ளதே எனினும்,மிகவும் குழப்பமுடையதாதலால், மௌரியராட்சியைப் பொறுத்த வரையில் அதை அதிகமாக நம்புவதற்கில்லை. தற்போது நம் கைக்குக்கிடப்பவை சந்திரகுப்தனுக்குப் பல நூற்றுண்டுகளுக்குப்பின் எழுந்தவையாகும். இதை விளக்கும் குறிப்புகள் பல உண்டு. உதாரணமாக, இவை குறிப்பிடும் மக்கள் பலரை அக்கால இந்தியர் அறிந்திருக்க முடியாது.[1] பேரரசு ஒன்றிருந்ததாக ஒப்புக்கொள்ளப்படுகிறதெனினும் ஆட்சி அளவையைச் சிறு நாடாகவே கருதுகிறது*. முன்னோடியாக விளங்கிய நூலாசிரியர் சிலர் கருதுவதுபோல மௌரியப்பேரரசருக்கும், அவரது அரசவையினருக்கும், ஆட்சியை விளக்கும் கையேடாக அது விளங்க வில்லை. பொருத்த முடைய தர்மசாத்திரப் பகுதிகளைப்போல, இந்நூலும், எவ்வாறு நல்லாட்சி நடத்துவது என்பதைக் குறித்த நூலாசிரியரின் கருத்துகளை வெளியிடுகிறதேயன்றி, அக்காலத்தில் இயங்கி வந்த அரசின் நிலையை விரித்துரைக்க வில்லை. அர்த்தசாத்திரத்தில் இத்தகைய குறைகள் உண்டெனினும், மௌரியராட்சி முறையை விளக்கும் குறிப்புப் புத்தகமாக அதைக்கருதலாம். மொரியராட்சி காலத்திற்குப்பின் நூல் உருப்பெற்றதென்றாலும், குப்தராட்சிக்கு முன்னதாகவே வெளிவந்திருக்க வேண்டும். நூலில் காணப்படும் அரசுமுறையை ஊன்றிப் பார்க்கும் போது பிற்கால முறைகளைக்காட்டிலும், மௌரியராட்சி முறையையே அது அதிகமாக வர்ணிக்கிறதெனத்

[1] சீனர்கள் விஷயத்தில் இது மிகவும் உண்மையாகத் தெரிகிறது. கி.மு. மூன்றும் நூற்றுண்டின் இடைக்காலத்தில் சின் வமிச ஆட்சி ஏற்பட்ட பிறகே அப்பெயர் வழங்கலாயிற்று. அர்த்த சாத்திரத்தில் குறிப்பிடப்பிடும் சீனு, 'சின்' ஆண்டு வங்க ஒரு சிறு பகுதியைக் குறிக்கிறதென்றும், இப் பெயர் சீன தேசம் முழுவதிற்கும் காளடைவில் ஏற்பட்டதென்றும் கூறப்படும் வாதத்தை நாம் ஏற்பதற்கில்லை. இதைப் போலவே, அர்த்த சாத்திரத்தில் குறிக்கப்பட்டுள்ள 'சீனர்களை' தறகால மலைச் சாதியினரின் முன்னோர்களாகக் (ஹிமாலய ஷினுஸ் அல்லது பர்மீய சின்ஸ்) கூறுவதும் பொருந்துவதாக இல்லை,

* மௌரிய சாம்ராச்சியம் சமைப்பதற்கு முன் கௌதில்யனின் அர்த்த சாத்திரம் தொகுக்கப் பெற்றதென்பதால், சிறிய அரச அவையை அவன் மேற்கொண்டான் என்ற வாதத்தை ஏற்பதற்கில்லை. நந்தரின் அவையில் கௌதில்யன் பணியாற்றி வந்தான். அந்நந்தரின் சாம்ராச்சியம் பஞ்சாப் நீங்கலாக உள்ள வட இந்தியா முழுவதையும் உள்வடக்கியிருந்தது.

தெரியவரும். அரசாங்கத்தின் பல பிரிவுகளையும் எவ்வாறு நிறுவுவது என நூல் தெளிவாக எடுத்துக் கூறுகிறது. இதை நோக்கும்போது, பொதுவிதிகளை எடுத்துக் கூறுபவராகவே நூலாசிரியர் இருந்த போதும், மௌரியர் காலத்தில் வாழ்ந்திருந்த அனுபவமிகுந்த ஓர் அரசியலதிகாரி அவருக்குத் துணை செய்திருக்க வேண்டுமென்பது தெளிவேயாகும். அவ்வனுபவசாலி சந்திரகுப்தனின் அமைச்சனுகவோ அல்லது வேறு ஒருவனுகவோ இருந்திருக்கக்கூடும்.

இம்மூன்று சான்றுகள் நீங்கலாகப் பல்வகையான இந்திய மரபுச் செய்திகளும் உண்டு. ஒரு சில சின்னங்கள், சீறிப்பாயும், காலமென்னும் விலங்கின் கோரப்பற்களுக்கு இலக்காகாது இன்றும் நிலைத்திருக்கின்றன. அவைகளை நுணுகி ஆராய்வதால் கிடைக்கும் குறிப்புகளும், மரபுச்செய்திகளும், மேற்குறித்த சான்றுகளிலிருந்து நமக்குக்கிடைக்கும் வரலாற்றின் குறைபாடுகளைப்பூர்த்தி செய்வதற்கு மிகவும் பயனுள்ளவைகளாக விளங்குகின்றன. வெளிப்புற அரசியல் விஷயங்கள் பல, நூலில் காணப்படுகின்றன. அவைகளைக்காட்டிலும் உள் நாட்டு அரசியல், மற்றும் நிர்வாகத்தைக் குறித்த செய்திகளே மிகத்தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

**மகதத்தில் புரட்சி**

நந்தர்களின் வீழ்ச்சியையும், அதன் பிறகு மௌரியர் அரசு கட்டிலேறிய வகையையும், ஐயத்திற்கிடமின்றித் தெளிவாகச் சித்திரிக்கும் குறிப்பெதுவுமில்லை. மகதப்புரட்சியுடன் தொடர்புடைய பல செய்திகள் பழமையான, ‘இராட்சசனின் முத்திரை’ (முத்ராராட்சசம்) என்னும் அரசியல் நாடகமொன்றில் கூறப்பட்டுள்ளன. கிறிஸ்துவிற்குப்பின் ஐந்து நூற்ருண்டுகளில் இந்நூல் இயற்றப்பெற்றிருக்க வேண்டும். ஏழு நூற்ருண்டுகளுக்குப்பின் நாடகவடிவில் தரப்படுகிற கற்பனை நூலொன்றின் உதவியோடு, உண்மையான வரலாறு ஒன்றைத் தொகுப்பதென்பது மிக்க தவருன முயற்சியாகும். பிற இலக்கியங்களிலிருந்து பெறப்படும் செய்திகள் மிகவும் குறைவென்பதோடன்றி முரண்பாடுள்ளவைகளாகவு முள்ளன. கி.மு. 326 அல்லது 325-ல் மிகச்சிறு வயதிலேயே சந்திரகுப்தனை அலெக்சாந்தர் சந்தித்திருக்கிருன். ஒரு சில செய்திகளுக்கிணங்க, அவன் நந்தவமிசத்தினனென்றும், இறுதியான நந்தமன்னனுக்கும் கடைச்சாதி மாது ஒருத்திக்கும் பிறந்தவனென்றும் கூறப்படுகிறது. புத்த இலக்கியங்கள், அவனைப் பிப்பாலிவனத்

தைச்சார்ந்த 'மோரியர்' (மௌரியர் என்பதின் பாலிமொழி வழக்கு) இனத்தைச் சார்ந்தவன் எனக் கூறுகின்றன. அவ் வமிசத்தினரே புத்தரின் சாம்பலை முதலில் பெற்றவர்கள் என்றும் சொல்லப்படுகிறது. நிகரற்ற விஷ்ணுகுப்தன் என்னும் பிராமண குருவின் அறிவுரைகளுக்கிணங்க, மகதத்தினின்றும் நாடு கடத்தப்பெற்றிருந்த சந்திரகுப்தன், அலெக்சாந்தர் இறந்தபின், சிந்து ஆற்றுப்படுகையில், மாசிடோனிய அலுவலர் வசமிருந்த நாடுகளைத் தாக்கினன். இவ்விஷ்ணுகுப்தனுக்குச் சாணக்கியன் என்ற அபிமானப்பெயரும் கௌதில்யன் அல்லது கௌதல்யன் என்ற துணைப்பெயரும் வழங்கிவந்தன. வடபகுதிவாழ் மக்களின் துணையால் கிரேக்க நாடுகளை இவன் கைப்பற்றினன். அதே நேரத்தில், இளமை மிக்க தீரனுகிய இவனும், கூரிய அறிவு படைத்த இவனுடைய ஆலோசகனும் மகத நாட்டின் தலை நகரான 'பாடலிபுத்ரத்தில்' (பாட்னு) புரட்சியொன்றையும் தொடங்கினர், 'நந்தகுலம்' பூண்டுடன் அழிக்கப்பெற்றது. மாசி டோனியப்பகுதிகளைக் கைப்பற்றுவதற்கு முன்பு புரட்சி யேற் பட்டதா அல்லது அதையடுத்துப்புரட்சி ஏற்பட்டதா என்பதைத் தெளிவாகக்கூற இயலவில்லை. அது எவ்வாறிருப்பினும், பாடலி புத்திர அரசைச் சந்திரகுப்தன் கைப்பற்றினன். பகைவரிட மிருந்து அதைப்பாதுகாத்து நிலையை உறுதி செய்துகொண்டு, மாபெரும் அரசு ஒன்றையும் நிறுவினன். வரலாற்று விதிமுறை களுக்கிணங்க இந்தியாவின் பேரரசன் எனக் கூறத்தகுந்தவர் களில் இவன் முதல்வனுக விளங்குகிருன்.

### காலவான் முறை

கி.மு. 323ஆம் ஆண்டு ஜூன் மாதம் அலெக்சாந்தர் மரண மடைந்த செய்தி, ஓரிரண்டு மாதங்கள் சென்ற பிறகே பஞ்சாபை எட்டியிருக்கவேண்டும். அன்னிய இராணுவ கேந்திரங்களின் மீது 323-லிருந்து 322 வரையுள்ள இடைப்பட்ட குளிர் காலத்தில் சந்திரகுப்தன் படையெடுத்தான் என நாம் கருதுவதில் அதிகத் தவறு இல்லை. கி.மு. 322–ல் சந்திரகுப்தன் அரசெய்தினன் எனக்கொள்வதும் தவருகாது.மகதப்புரட்சி தோன்றிமுடிவதற்கு ஓராண்டுகாலம் பிடித்திருக்கக்கூடும்.[1] அலெக்சாந்தரின் மரணத் திற்கு முன்னரே இது நடைபெற்றிருக்கக்கூடும் என்று எண்ண

[1] மலை மன்னனின் மகன் மலையகேது கீழ்வருமாறு உரைக்கிருன்:
என் தந்தை மரணமெய்திய நாளிலிருந்து
ஒன்பதாண்டுகள் ஓடி மறைந்து விட்டன.
[முத்ராராட்சசம், அங்கம் iv]

வும் இடமுண்டு. அவ்வாறு கொள்வோமாகில் வமிசமாற்றம் கி.மு. 325–லேயே ஏற்பட்டிருக்கவேண்டும். சரியான நாள் 325–க்கும் 320–க்கும் இடைப்பட்ட காலத்திலுள்ளது என்பதில் ஐயமில்லை. இத்துணை உறுதி நமது தேவையைப் பெரிதும் பூர்த்தி செய்கிறது.[1]

**செல்யூகஸுடன் போரும் சமாதானமும்**

அலெக்சாந்தருக்குப் பின் செங்கோல் செலுத்துவதற்கு வாரிசு இல்லாமையால், அவனது சாம்ராச்சியம் இராணுவத் தலைவர்களிடையே பங்கிடப்பெற்றது. ஆசியாவின் அரசுரிமையைக் குறித்து ஆன்டிகோனஸ், செல்யூகஸ் ஆகியோரிடையில் போட்டி ஏற்பட்டது. பல நாட்கள் சண்டையிட்ட பின் 312–ல் செல்யூகஸ் பாபிலோனைக் கைப்பற்றி, ஆறு ஆண்டுகளுக்குப் பின் அரசனென முடிசூட்டிக் கொண்டான். வரலாறு, அவனை வெற்றிவீரன் செல்யூகஸ் நிகேதார் என்றும் சிரியாவின் மன்னன் என்றும் வர்ணிக்கிறது. உண்மையில், அவனை மேற்கு ஆசியாவின் மன்னன் என்று கூறுவது மிகவும் பொருத்தமுடையதாக உள்ளது. அலெக்சாந்தருக்குச் சொந்தமான இந்தியப் பகுதிகளை மீட்பதற்கெனச் சிந்து நதியைக்கடந்து, ஆட்சி புரிந்துவந்த இந்திய மன்னன் சந்திரகுப்த மன்னனை எதிர்ப்பதற்கு ஆயத்தமானன். பஞ்சாப்பின் எல்லைக்குள் எங்கோ ஓரிடத்தில் முறியடிக்கப்பெற்று எல்லைக்கப்பால் விரட்டப்பெற்ருன். சமாதான உடன்படிக்கை ஏற்பட்டது. அதனடிப்படையில், சந்திரகுப்தனுக்கு பாரோப்பனிசதாய், ஆரிய, அரக்கோசியா ஆகிய பகுதிகளை செல்யூகஸ் விட்டுக்கொடுக்க வேண்டியதாயிற்று. காபூல் ஹீரட், காண்டஹார், ஜிட்ரோஷியா ஆகிய, தலைநகரங்களும் தற்கால பலூசிஸ்தானமும் சந்திரகுப்தன் வசமாயின. இதற்குப் பதிலாக 500 யானைகளைச் சந்திரகுப்தன் அளித்தான். மேற்குத் திசையிலுள்ள பகைவருடன் போரிடுவதற்குச் செல்யூகஸிற்கு இவை தேவையாயிருந்தன. சந்திரகுப்தன் அளித்த பரிசு மிகச் சொற்பமானதென்பதைக் கூற வேண்டியதில்லை. திருமண ஒப்பந்தம் ஒன்றும் ஏற்பட்டது. செல்யூகஸின் மகளைச் சந்திரகுப்தன் மணந்தான் என்று கூறுவதோடு, இரு மன்னர்களின் குடிமக்களிடையே திருமண உறவு ஏற்படும் வழக்கத்தை இது ஆதரிப்பதாகவும் கொள்ளலாம்.

1 சமண மரபையொட்டி கி.மு. 313 ஆம் ஆண்டில் சந்திரகுப்தன் அரசெய்தினன் என உறுதிப்படுத்தும் முயற்சி அண்மையில் இந்தியாவிலும் பிரான்சிலும் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

### மெகாஸ்தனீஸ்

சிரியாவிற்கும் இந்தியாவிற்குமிடையே ஏற்பட்ட சமாதான உடன்படிக்கை அமலாக்கப்பெற்றது. கி. மு. 302ஆம் ஆண்டு அல்லது அதையொட்டி பாடலிபுத்திர அவைக்கு செல்யூகஸ் தனது பிரதிநிதியாக மெகாஸ்தனீஸ் என்பவனை அனுப்பி வைத்தான். மெகாஸ்தனீஸ் அரக்கோசியாவில் (காண்டஹார்) முன்னரே பணியாற்றி வந்தான். தனக்குக் கிடைத்த ஓய்வு நேரங்களில், இந்தியநாட்டுப்புவிஇயல், விளைபொருள்கள், நிறுவனங்கள் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளை அவன் சேகரித்துத் தொகுத்தான். பத்தொன்பதாவது நூற்றாண்டு வரையிலும், புராதன இந்தியாவைப் பற்றிய தன்னம்பிக்கையுள்ள நூலாக இது விளங்கியது. துரதிருஷ்டவசமாக அந்நூல் முழுவதும் நமக்குக் கிடைப்பதில்லை. அதில் பெரும் பகுதியை வெவ்வேறு நூலாசிரியர்கள் குறித்து வைத்திருப்பதால், நமக்குப் பெரியதொரு நன்மையாக அது விளங்குகிறது. தான் நேரில் கண்டவைகளை அவன் உண்மையாக எடுத்துரைப்பதால் அவனது கூற்றுகள் மிகவும் நம்பத்தகுந்தவையாக இருக்கின்றன. காதால் செவியுற்ற நம்பத்தகாத வித்தைககள் சிலவற்றை அவன் மிகைப்படக் கூறியுள்ளான். இதனால், அந்நூல் முழுவதும் நம்பத்தகாததென சிலர் கூறி வந்தனர்.

### சந்திரகுப்தனின் பேரரசு

சந்திரகுப்தனின் ஆட்சி இருபத்து நான்கு ஆண்டுகள் வரை நீடித்திருந்தது. அவ்வாட்சியில் நடைபெற்ற அரசியல் சம்பவங்களைப் பற்றி நாம் கூறியிருப்பதற்கு மேல் அறியக்கூடவில்லை. தற்போது ஆப்கானிஸ்தானம் என்று வழங்கும் பகுதி, இந்துகுஷ்வரை பரவியிருந்த பண்டைய ஏரியானா, பஞ்சாப், தற்போது உத்திரப்பிரதேசம் என அழைக்கப்படும் பகுதிகள் (பண்டைக்கால ஐக்கிய மாகணங்கள்) பீஹார், மேற்கு திசையில் உள்ள கத்தியவார் தீபகற்பம் ஆகியவை சந்திரகுப்தனின் ஆட்சியில் அடங்கியிருந்தன. வங்காளமும் ஒருவேளை அதிலடங்கியிருக்கக்கூடும். கி. மு. 298-ல் அவனது ஆட்சிகாலம் முடிவடையும்போது, நர்மதை ஆற்றிற்கு வடக்கிலுள்ள பகுதி முழுவதும், ஆப்கானிஸ்தானம் வரை அவன் ஆண்டுவந்தான் என உறுதியாகக் கூறலாம். தக்காணத்திலும் அவனது அரசியலாதிக்கம் பரவியிருந்ததெனக் கூறுவதற்குரிய சான்றுகள் தற்போது இல்லை. எனினும், அவன் நர்மதையாற்றையும் கடந்து வெற்றி கண்டிருக்கக்கூடுமென்று சொல்வதும் தவறாகாது.

மைசூர்ப் பகுதியில் வழங்கிவரும் மரபுச் செய்திகள், நந்தப் பேரரசு அதுவரையிலும் பரவியிருந்ததெனக் கூறுகின்றன.

**சந்திரகுப்தனின் கடுமை**

அலெக்சாந்தர் இறந்தபின் இந்திய விடுதலைக்குச் சந்திர குப்தன் காரணமாக இருந்தான் என ரோமானிய வரலாற்ருசிரி யன் ஜஸ்டின் என்பவன் கூறுகிருன். ஆனல் அவன் தொடர்ந்து கூறுவதாவது. சந்திரகுப்தன் வெற்றி பெற்று அரசுகட்டிலேறிய பின்னர் பெயரளவில் கிடைத்த உரிமையை, அடிமை வாழ்க்கை யாக மாற்றி விட்டான். அன்னியராட்சியிலிருந்து தான் மீட்ட மக்களின் மீது அடிமைச் சுமையை ஏற்றி நிலை தாழ்த்தி விட்டான்.

சந்திரகுப்தனுடைய அரசு முறைகளைப் பற்றிய குறிப்பு களிலிருந்து அவன் கண்டிப்பு மிகுந்த ஒரு கொடுங்கோலன் என்பது தெரியவருகிறது. கட்டுப்பாடான தான் தோன்றி ஆட்சியொன்றை நிறுவி மிகக்கடுமையான தண்டனைகளை விதித்து அரசாண்டு வந்த அவன் தன் உயிருக்கு நேரக்கூடிய ஆபத்தை எண்ணியே காலங் கடத்தி வந்தான். மிக திறமைசாலியான அவனது பிராமண அமைச்சனே, அரசுக் கப்பலைச் சரிவர செலுத்தவல்ல மாலுமியாக விளங்கினுன் எனப் பரம்பரைச் செய்திகள் யாவும் ஒருமுகமாக ஒப்புக் கொள்கின்றன. அர சாங்க அலுவல்களில், நன்னெறிக் கோட்பாடுகளுக்கு அவன் இடமளிக்கவே இல்லை. அரசியல் அரங்கிலிருந்து இவ்வமைச் சன் எவ்வாறு எப்பொழுது வெளியேறினுன் என்பதைப் பற்றிய விவரங்களை அறியக்கூடவில்லை. திபெத் நாட்டைச் சார்ந்த தாரநாத் என்னும் நூலாசிரியன் பதினேழாம் நூற்ருண் டில் உலவிய ஒரு சில செய்திகளைத் தொகுத்தளிக்கிருன். சாணக்கியன், சந்திரகுப்தனின் வாரிசான பிந்துசாரன் காலத் திலும், அரசனுக்குத் துணையாக இருந்தான் எனக் கூறப்படு கிறது. இக்கூற்று உண்மையாக இருக்கவும் கூடும்[1].

[1] கெடுமதியுள்ள அமைச்சன் தன் செய்கைகளை எண்ணி வருந்தி, 'நெர்புத்த ஆறறுக்கரையில். ப்ரோச் என்னுமிடத்திற்கருகிலுள்ள ஷுகுல் டீர்த்' என்ற இடத்தை அடைந்து உயிர் நீத்தான் என வில் போர்டு என்பவர் கதையொன்றை அச்சிட்டு வெளியிட்டார். சந்திர குப்தனும் சாணக்கியனைத் தொடர்ந்தான் என கூறப்படுகிறது. (ஏஸ். ரெஸ்- வால்யூ ix, பக். 96) கதையின் ஒரு பகுதி அக்கினி புராணத்தை ஒட்டி அமைந்ததென்றும், மறு பகுதி வில்போர்டின் ஆசிரியர் கூறிய மரபுச் செய்திகளை யொட்டியதென்றும் கூறப்படும், 'ராஸ்மாலா' வால்.1, பக். 69 என் பார்க்கவும்.)

**சந்திரகுப்தனின் தலைவிதி**

சுவைமிக்க சந்திரகுப்தனின் ஆட்சி எவ்வாறு முடிவுற்ற தென்பதை விளக்கவல்ல நேரடிச் சான்று சமணச்செவிவழிச் செய்தி ஒன்றேயாகும். பிம்பிசாரனைப் போல் இப்பெரு மன்ன னும்சமணத்தை தழுவியவன் எனச் சமணர் கூறுவர். ஆட்சியின் இறுதிக் காலத்தில் ஒரு வேளை சமணத்தை அவன் தழுவியிருக் கக்கூடும். பிற்கால சிசுநாகர், நந்தர், மௌரியர் ஆகியோரின் ஆட்சி காலங்களில், மகதத்தில் சமணசமயம் மிகச் சிறப்பெய்தி யிருந்தது. கற்றுத் தெளித்த பிராமணன் ஒருவனின் உதவி யுடன் சந்திரகுப்தன் அரசைக் கைப்பற்றினான் என்ற செய்தியை சமணம் அரசனின் ஆதரவு பெற்ற சமயமாக இருந்தது என்ற செய்திக்கு முரணுள்ளதாக நாம் கொள்ளவேண்டியதில்லை. வீடுகளில் சடங்குகளை நிறைவேற்றி வைப்பதற்குச் சமணர் பிராமணரின் உதவியையே நாடினர். மேற்கோளாக நாம் குறித்துள்ள நாடகத்திலும், சமணத் துறவியொருவன் அமைச் சர் ராட்சசனின் நெருங்கிய நண்பன் என்றும், ஆதியில் நந்தனிட மும் பிறகு புதிய மன்னனிடமும் பணியாற்றினான் என்றும் கூறப்பட்டுள்ளது.

சந்திரகுப்தன் சமணன் என்றோ, அல்லது பிற்காலத்தில் சமணசமயத்தை ஏற்றானென்றோ நாம் கருதும் போது, அவன் ஆட்சியைத் துறந்து, சமண விதி முறைகளுக்கிணங்க, உணவை வெறுத்துப் பட்டினியால் நாளடைவில் உயிர்த் துறந்தான் என்ற செய்தியையும் உண்மையென்றே ஏற்க வேண்டியவர் களாகிறோம். சமணத் துறவியான பத்ரபாஹு, வட இந்தியா வில் கொடும் பஞ்சமொன்று ஏற்படுமென்றும், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு அது நீடித்திருக்குமென்றும் கூறினான். அவன் கூறியவாறே பஞ்சமேற்படவும், துறவி 12,000 சமணர்களுடன் மேலும் சிறந்த விளை நிலங்களை நாடித் தெற்கு நோக்கிச் சென்றான். சந்திரகுப்தனும் அரசைத் துறந்து, வெளியேறு பவர்களைத் தொடர்ந்தான். அவர்கள் மைசூரிலுள்ள 'சிரவண பெல் கோலத்தை' அடைந்ததும் (சமணரின் வெள்ளைத்தடாகம்) அங்கு பத்ரபாஹு இறந்தான். அவன் இறந்த பிறகும் உயிர் வாழ வேண்டிய நிலையிலிருந்த சந்திரகுப்தமன்னன், மேலும் பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்து பட்டினியால் இறுதியில் இறந்தான். சிரவணபெல்கோலத்திலுள்ள சில கட்டடங்களின் பெயர்களும், கிறிஸ்துவிற்குப் பின் ஏழாவது நூற்றாண்டைச் சார்ந்த சில கல்வெட்டுகளும், பத்தாவது நூற்றாண்டைச் சேர்ந்த இலக்கிய நூலொன்றும் இம்மரபுச் செய்தியை உறுதிப்படுத்து

கின்றன. சான்றுகள் சந்தேகத்திற்கப்பாற்பட்டவை எனக் கூற இயலாது. நீண்ட ஆலோசனைக்குப் பின் மரபுச் செய்திகளை ஏற்பதில் திருப்தி ஏற்படுகிறது. கி.மு. 322ஆம் ஆண்டிலோ, அல்லது அதற்குச் சற்று முன் பின்னுகவோ சந்திரகுப்தன் அரசேற்றபோது, சந்திரகுப்தன் அனுபவம் குறைந்தவனுகவும், சிறு வயதினனுகவும் இருந்திருக்கவேண்டுமென்பது உறுதி. இருபத்துநான்கு ஆண்டுகளுக்குப் பின் அவனது ஆட்சி முடிவுற்ற போது அவன் ஐம்பதிற்கும் குறைந்த வயதினனுகவே இருந்திருக்க வேண்டும். மிகச் சிறு வயதினனுக அவன் மறைந்ததை, அவன் முடி துறந்த செய்தி நன்கு விளக்குகிறது. பெருமன்னர்கள் இதுபோன்று முடிதுறந்த செய்திகள் ஏராளமாக உண்டு. பன்னிரண்டு ஆண்டுகள் பஞ்சமிருந்ததென்பதும் நம்பத்தகாத செய்தியன்று. சுருங்கக் கூறுமளவில் சமண பரம்பரைச் செய்தி ஏற்றமுடையதாக விளங்குகிறது. அதற்கு மாற்றுன வேறு செய்திகள் இல்லை.

**பிந்துசார மன்னன்**

சந்திர குப்தனைத் தொடர்ந்து அவனது மகன் பிந்துசாரன் அரசெய்தினன். 'அமித்ரகாதன்' அல்லது 'பகைவரைக் கொன்று முடிப்பவன்' என்ற அவனது பிருதுவிலிருந்து போரில் விருப்பமுடையவன் என ஒருவாறு ஊகித்தறியலாம். அவனைப் பற்றிய தெளிவான குறிப்பெதுவும் கிடைப்பதில்லை என்பது மிகவும் வருந்தத்தக்கதே. 'ஆன்டியோகஸ் சோட்டர்' என்பவனுடன் அவன் உறவு பூண்டிருந்தான் என்பதைக் குறித்த ஒரு சிறு செய்தி மட்டிலும் கிடைக்கிறது. மெகாஸ்தனீஸுக்குப் பதிலாக, டீமாக்கஸ் என்பவனை ஆன்டியோகஸ் அரச தூதுவனுக நியமித்திருந்தான். எகிப்திய மன்னன் டாலமி பிலடெல்பாஸ் (கி.மு. 285—247) என்பான் பாடலிபுத்திர அவைக்கு அனுப்பிவைத்த டயோனிசியாஸ்என்னும் தூதுவன் தனதுஅலுவல்பத்திரங்களைப் பிந்துசாரனிடமோ அல்லது அவனது மகன் அசோகனிடமோ அளித்திருக்க வேண்டும். மேலே, கீழைக்கடல்களுக்கு இடைப்பட்ட பகுதியைப் பிந்துசாரன் வென்றுன் எனத் தாரநாத் என்னும் நூலாசிரியனுல் செய்தியொன்று குறிப்பிடப்படுகிறது. கலிங்கப் போரன்றி, வேறு போர்களில் பங்கு கொள்ளாத அசோகனின் பேரரசு பரந்து கிடந்தது என்பதால். இம்மரபுச் செய்திக்குத் தகுந்த ஆதாரமுண்டு எனத்துணியலாம். தீபகற்ப இந்தியாவில் அசோகனின் பேரரசு, மைசூரின் வடதிக்கிலுள்ள மாவட்டங்களை உள்ளடக்கியிருந்தது. தக்காணப் பகுதியைப் பிந்துசாரனே வென்றிருக்க வேண்டுமென்பது தெளிவாகிறது.

**மௌரியரின் அரசியலமைப்பு**

நிகழ்ந்த அரசியல் மாறுதல்கள் யாவையும் நாம் இதுவரை கூறிவந்தோம். மேலே நாம் கூறியுள்ள நூலாசிரியர்களின் குறிப்புகளைக் கொண்டு மௌரிய சாம்ராச்சிய நிறுவனங்களை முறையாக ஒருவாறு எடுத்துரைப்போம். சந்திரகுப்த மௌரியன் நிறுவிய வழக்குகள் யாவும் அவனது மகன், பேரன் ஆகியோர் ஆட்சியிலும் நிலைபெற்றிருந்தன. அசோகன் புகுத்திய ஒரு சில மாறுதல்களைப் பின்னர் விரித்துக் கூறுவோம். மகதத்தில், நந்தர் ஏற்படுத்திய அரசு வலுப்பெற்றதாயும், செல்வத்தில் சிறந்தும், மிகப்பரந்துமிருந்தது. அர்த்தசாத்திரம் என்னும் நூலில் விரித்துரைக்கப்பெற்றிருக்கும் வகையிலேயே மகதத்தின் ஆட்சி நடைபெற்று வந்ததென்பதையும், மகதத்தைப் பாதுகாப்பதற்குப் பெருஞ்சேனை ஒன்று இருந்ததென்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும். ஒருநாடு, பேரரசாக மாறிவிட்டதென்பதால், அதன் அரசியல் நிர்வாக முறைகளும் முழுவதும் மாறிவிட வேண்டுமென்பதில்லை. சந்திரகுப்தனும் அவனது அமைச்சரும் ஆட்சி முறையில் பல மாறுதல்களை ஏற்படுத்தி, ஆட்சிமுறையை மேலும் சீராக அமைத்தனர். இதற்குரிய புகழ் அவர்களையே சாரும். நிர்வாகப் பொறுப்புகளைச் சரிவர ஏற்று நடத்துவதற்கென, பல குழுக்கள் அமைக்கப்பெற்றிருந்ததோடு, அலுவலர்கள் பலரும் நியமிக்கப்பட்டிருந்தனர். ஒவ்வொரு குழுவின் பொறுப்புகளும், தெளிவாக எடுத்துரைக்கப்பட்டிருந்தன. அலுவலர்களின் அதிகார எல்லைகளும் வரையறுக்கப் பெற்றிருந்தன. நிர்வாக முறைகளைக் கவனமுடன் படிக்கும்போது, அபுல் பாசலின் குறிப்புகளில் காணப்படும் அக்பர் காலத்தில் முகலாயப் பேரரசின் நிர்வாகத்தைக் காட்டிலும் இது சிறந்திருந்ததென்ற எண்ணமே எனக்குத் தோன்றுகிறது. நீதித்துறையைச் சார்ந்த ஒரு சிலர் நீங்கலாக அக்பரின் அலுவலர்கள் யாவரும், இராணுவ அதிகாரிகளைப் போலவே கருதப்பட்டனர். அரண்மனைச் சமயலறையில் எடுபிடி வேலைகள் செய்து வந்த வேலையாட்களும், காலாட்படையினரைப் போலவே ஊதியம் பெற்று வந்தனர். நிரந்தரமான படையினரின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந்தது. படையின் பெரும் பகுதி, கீழ்ப்படிந்துள்ள சிற்றரசர்களால் அவ்வப்போது அனுப்பப்படும் வீரர்களையும், பிரதேச அதிகாரிகள் அனுப்பிவைக்கும் போர் வீரர்களையும் கொண்டதாக இருந்தது. இதற்கு மாறாக, மௌரியராட்சியில் நாட்டு நிர்வாகம் திறமையாக நடைபெற்றதோடு, மன்னரிடம் நேரில் ஊதியம் பெற்று வந்த போர்வீரர்களடங்கிய பெரும்படை நிலையாக இருந்தது. திறமைமிக்கப் இப்பெரும் படை செல்யூகஸ் நிகேடரைப்

போரில் புறங்கண்டது. அக்பரின் படையோ எனில் சிறிய போர்த்துக்கீசியப் படையொன்றை எதிர்க்க வலிமையற்றுத் தோற்றது. எல்லைப்புற மாகாணங்களையும், மற்றும் அரசாங்க அலுவலர்களையும், மௌரியர் சிறந்த முறையில் கண்காணித்து வந்தனர். தனது முன்னோராட்சியிலிருந்த திறமைமிக்க ஒற்றர் படையையும், அக்பர் இழந்திருந்தார். சுருங்கக்கூறுமளவில், மௌரிய அரசியல் முறை நன்கு அமைக்கப்பெற்ற திறமைவாய்ந்த வல்லரசாக இருந்தது. ஆட்சி பீடத்தில் அமரும் மன்னனது தனித்திறமையைப் பொறுத்தே, இம்முறையின் சிறப்பு அமையும். அக்பரது சாம்ராச்சியத்தினும் பரந்ததொரு பேரரசாயினும் வல்லமையுள்ள மன்னனொருவன் மௌரிய முறையைக் கடைப் பிடித்து நல்லாட்சி நிறுவ முடியும். மூன்று தலைமுறைகளாக அரசாண்ட மௌரிய மன்னர் திறமைசாலிகளாக விளங்கினர். பிந்துசாரனைப் பற்றித் தெளிவாக அறியக்கூடவில்லை. அவன் மேற்கொண்ட முயற்சிகளையும் நம்மால் அறிந்துகொள்ள இயல வில்லை. பொதுவில் அவன் திறமைசாலியாகவே இருந்திருக்க வேண்டும். அங்ஙனமில்லாதிருப்பின், அவன் கால் நூற்றாண்டு காலம் ஆட்சி செய்திருக்க முடியாதென்பதோடு, தன் தந்தை யான சந்திரகுப்தனால் உருவாக்கப்பெற்று, வாரிசாகத் தான் பெற்ற பரந்த பேரரசை அவன் காப்பாற்றி அசோகனுக்கு அளித்திருக்கவும் இயலாது. ஒருவேளை, தான் பெற்ற பேரரசு டன், தென்னிந்தியப்பகுதிகளையும் வென்று இணைத்திருக்கக் கூடும்.

**தலைநகர் பாடலிபுத்ரம்**

சந்திரகுப்தனின் தலைநகரமான பாடலிபுத்ரம் சிறந்த பெரு நகரமாக விளங்கியது. 'சோன்' நதியின் வடகரையில் ஒன்பது மைல் நீளமுள்ளதாகவும், இரண்டு மைல்களுக்குக் குறையாத அகலமுள்ளதாகவும் இது அமைந்திருந்தது. பாட்னா, பங்கிப்பூர், மற்றும் சில சிறு கிராமங்கள், தற்போது இப்பகுதியில் அமைந் துள்ளன. பழமை வாய்ந்த குஸுமபுரம் கங்கை ஆற்றின் கரையில் இருந்தது. இரு பெயர்களும் ஒரே பகுதியைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டிருப்பதால், நாளடைவில் குஸுமபுரம், பாடலி புத்ரத்தினுடன் இணைந்திருக்க வேண்டும். மௌரியரின் இந் நகரம், சோன் கங்கை ஆகிய இரு ஆறுகளும் சேருமிடத்திலுள்ள இடைப்பகுதியில் அமைந்துள்ளது. இத்தகையதொரு பிரதேசம் பாதுகாப்பிற்குச் சிறந்ததெனப் பண்டைய நூல்களில் வர்ணித் திருக்கப் பெற்றிருப்பதோடு, பண்டைய இந்தியர் நடைமுறை யிலும் அத்தகைய பகுதிகளில் நகர் எழுப்பி வந்தனர். எனத்

தெரிய வருகிறது. நவீன பாட்னா நகருக்கு அத்தகைய பாது காப்பு இல்லை. தற்போது, இரு ஆறுகளும் பாட்னாவிற்கு இருபது மைல்கள் முன்பாக, தினப்பூர் என்னுமிடத்திலேயே ஒன்றுகூடி விடுகின்றன. ஆற்றின் பண்டைய படுகைகளும், கரைகள் அல்லது மேடுகளும் இன்றும் காணக்கிடைக்கின்றன. மரத்தினா லான கனமான மதிலொன்று நகரைச் சுற்றிலுமிருந்து, நகருக் குப் பாதுகாவலாக இருந்தது என்பதற்கான சான்றுகள் பல இடங்களில் கண்டெடுக்கப் பெற்றுள்ளன. 64 வாயில்களும் 570 கோபுரங்களும் மதிலின் மீதிருந்தன என்றும் அறியலாகும். மதிலைச் சுற்றிலும் அழகான அகழ் ஒன்றிருந்தது. சோன் ஆற்றின் தண்ணீரால் இவ்வகழி நிரப்பப்பட்டிருந்தது.

**அரண்மனை**

தற்காலத்திலுள்ள கும்ரஹார் கிராமத்திற்கு அருகில் மன்னரின் அரண்மனை இருந்திருக்கக்கூடும். பர்மாவிலுள்ள அழகுமிக்க மாண்டலே ரீகல் சின்னங்களைப்போல, இம்மாளிகை பெரும்பாலும் மரத்தால் கட்டப்பட்டிருந்தது. அரண்மனையின் வனப்புமிக்க தூண்கள் கலையழகு மிக்கவையாக விளங்கின. அடர்ந்த மரங்கள் மற்றும் செடிகளைப் பின்னணியாகக் கொண்டும் மீன்களுடன் கூடிய தடாகமொன்றை உடைய வனப்புமிக்க பூங்காவும் இத்தூண்களில் சித்திரிக்கப்பட்டுள்ளன. இப்பகுதியில் மேற்கொள்ளப்பட்ட புதை பொருளாராய்சி, பாரசீகத் திலுள்ள பெர்சிபாலிஸ் அரண்மனை போன்று மௌரிய அரசனின் மாளிகை அமைந்திருந்ததென்பதை எடுத்துக்காட்டுகிறது.[1]

சந்திரகுப்தனின் மாளிகை, சூசா, எக்பதானா ஆகியவிடங்களி லுள்ள மாளிகைகளைக் காட்டிலும், செல்வத்தில் சிறந்து விளங்கிய தென கிரேக்க நூலாசிரியர் குறிக்கின்றனர். இக்கூற்றைப் பற்றிய ஐயப்பாடு எதுவும் கொள்வதற்குக் காரணமில்லை. படடோபமான அவையும், ஆடம்பரமிக்க சேவைகளும் அங்கிருந் தன. ஆறடி குறுக்களவுள்ள தங்கப்பாத்திரங்கள் உபயோகிக் கப் பெற்று வந்தன எனத் தெரியவருகிறது. அரசன் அரண் மனையைவிட்டு வெளிவரும்போது அவனைத் தங்கப்பல்லக்கில் அமர்த்திச் சுமந்து வருவது வழக்கம். அல்லது அழகாக அலங்கரிக் கப்பட்ட யானை மீதமர்ந்து அவன் வெளிவருவது வழக்கம். பொன்னும் மணியுமிழைத்த மெல்லிய மஸ்லின் ஆடையையே அவன் அணிவான். ஆசிய நாட்டிலுள்ள போகப் பொருள்கள்

1 வருடாந்தர அறிக்கை ஏ. எஸ், ஐ. கிழக்குவட்டம் 1912-13, 1913-14, 1914-15.

யாவையும் அவன் எளிதில் பெறுவான். விசாலமான கூடங்களைக் கொண்ட பரந்த அரண்மனையில் மன்னனைப் பாதுகாப்பதற்கென, ஆயுதங்களேந்திய பெண்பாலர் மெய்காவலராக அமர்த்தப்பெற்றிருந்தனர். காலையில் துயிலெழுந்தவுடன்; வில்லேந்திய பெண்பாலரை அரசன் சந்திப்பது நல்லதொரு அறிகுறியெனக் கருதப்பெற்றது. அந்தப்புரம் அல்லது பெண்கள் வசிப்பதற்குரிய மாடங்கள் விசாலமாக அமைக்கப் பெற்றிருந்தன. அவைகளைச் சுற்றிலும் கட்டுக்காவல்களுமிருந்தன. அரண்மனைக்குள் கொண்டு செல்லப்படும் பொருள்களும், அரண்மனையிலிருந்து வெளியே எடுத்துச் செல்லப்படும் பொருள்களும், தீவிரமாகக் கண்காணிக்கப்பட்டு வந்தன.

### மன்னரின் நேரப்போக்கிற்கான கேளிக்கைகள்

வேட்டையாடும் வழக்கத்தைப் பண்டைய பிராமணர் மிகவும் கடுமையாகப் பழிக்கின்ற போதும், சூதாட்டம் பாபம் மிகுந்ததா அல்லது இப்பழக்கம் அதனினும் கொடியதா என்ற விவாதங்கள் பல இருந்தும், முற்கால மன்னர்கள் அப்பழக்கத்தை மிகவும் விரும்பிக் கடைப்பிடித்தனர். மன்னர்கள் வேட்டையாடி மகிழ்வதற்கென்றே பல காடுகள் வேலியிடப் பெற்றிருந்தன. இவ்விடங்களில் அத்து மீறிப் பிரவேசித்து மன்னரின் மகிழ்ச்சிக்கு ஊறு விளைவிப்பவர்களுக்கு மரணதண்டனை போன்ற கடுமையான தண்டனை விதிக்கப்பெற்றது. மன்னர் வேட்டையாடுமிடம் புனிதத் தன்மை வாய்ந்ததென்ற மரபு, பலகாலம் வழக்கிலிருந்தது. பதினேழாவது நூற்றூண்டிலும், துரதிஷ்டவசமாகச் சிலர் ஜஹாங்கீர் என்ற மன்னனால் தண்டிக்கப்பட்டனர். கொழுத்த எருமையொன்றை அவன் வேட்டையாடிக் கொல்வதற்கு முயன்றபோது, இடையிட்டதாக ஒரு சிலருடைய அவயவங்களைத் துண்டித்தான் அல்லது அவர்களுக்கு மரணதண்டனை விதித்தான் எனக் கூறப்படுகிறது. இங்கிலாந்திலும், நார்மானிய குல மன்னர்கள், வேட்டையாடுவதில் தங்களுக்குள்ள உரிமைகளை மிக்க விருப்புடன் செலுத்தி வந்தனர். அசோகனிடமும் பல்லாண்டு காலம் வேட்டையாடும் பழக்கம் இருந்தது. புத்த மதக் கோட்பாடுகளை ஏற்ற பின்னரே இவ்வழக்கத்தை அவன் கைவிட்டான். இதைப்பற்றிப்பின்னர்க் கூறுவோம். தன் ஆட்சிக் கால இறுதியில், மெகாஸ்தனீசைத் தனது அவையில் ஏற்றுக் கொண்ட பிறகும், சந்திரகுப்த மன்னன் வேட்டையாடும் பழக்கத்தைத் கைவிடவில்லை. அவன் சமண சமயத்தைக் கடைப்பிடித்தான் என்று கூறப்படுகிறது. ஆட்சி புரியும் மன்னனொருவன், இரத்தம் சிந்துவதை அறவே நீக்கிவிட வேண்டுமெனச்

சமணம் வற்புறுத்துவதில்லை. இதற்கு உதாரணமாக காரவேலனைக் (பின்னர் கூறப்பட்டுள்ளது) கூறலாம். ஒருவேளை, சிவனை வழிபடும் பிராமண சமயத்தைச் சந்திரகுப்தன் பலகாலம் கடைப்பிடித்திருக்கக்கூடும். அவ்வாறிருந்த சந்திரகுப்தனை அவனது ஆட்சியின் இறுதியிலேயே பத்ரபாஹு சமணத்தை ஏற்குமாறு தூண்டியிருக்க வேண்டும்.[1] வனவிலங்குகளுடன் மனிதனைச் போரிடச் செய்வதும், வனவிலங்குகளை ஒன்றோடொன்று போரிடச் செய்வதும், மன்னர்களின் நேரப் போக்கிற்கான கேளிக்கைகளில் இடம்பெறுகின்றன. இத்தகைய கேளிக்கைகள் சமீபகாலம் வரை சுதேசமன்னர்களால் அனுமதிக்கப்பட்டிருந்தன. அக்பர் போன்ற மன்னரும் இவைகளைத் கண்டு களித்திருந்தனர் எனக் கூறப்படும். தேரோட்டப்பந்தயங்களும் வழக்கிலிருந்தன. ஒவ்வொரு தேரிலும், குதிரைகளும் எருதுகளும் பொருத்தப்பெற்றிருந்தன. மையத்தில் குதிரைகளையும் இருமருங்கிலும் எருதுகளையும் பொருத்துவது வழக்கமாக இருந்தது.[2] இது ஒரு விநோத நேரப்போக்காகவே விளங்கியது. எனக்குத் தெரிந்த வரை இத்தகைய பந்தயங்களை இந்திய

1 அர்த்த 'சாத்திரம் (பகுதி II-அதிகாரம் 4) தலைநகரின் மையமான தோர் இடத்தில், அச்வினிகள் அபராஜிதன், அப்பிரதிஹதன், ஜயந்தன், வைஜயந்தன், சிவன், வைசிரவணன் (குபேரன்) ஆகியோருக்கு ஆலயம் எழுப்ப வேண்டுமென விதிக்கிறது. முதல் நால்வரும் சமணக் கடவுளராவர்.

2 எருதுகளின் ஓட்டப் பந்தயம் சிங்களத்தீவில் இன்றும் நிலவுகிறதென்றும், நேரப்போக்கிற்கான கேளிக்கைகளில் அதுவுமொன்றென்றும் டாக்டர் குமாரசாமி கூறுவர். அதிகப்பளுவில்லாத 'ரேக்ளாவண்டிகளில்' எருதுகள் பூட்டப்பெறுகின்றன. 1679-ல் டாக்டர் பிரையர் சூரத்திலிருந்தபோது, எருது ஓட்டப்பந்தயங்கள் வழக்கிலிருந்தன. அதை அவர் தமது வழக்கமான முறையில் எடுத்துரைக்கிறார்-'வண்டிகள் பிரயாணத்திற்குரியவை. வியாபாரிகள் நகரங்களில் உபயோகிப்பவைகளைக் காட்டிலும் உறுதியானவை. இவைகளில் பூட்டப்பெற்றிருக்கும் எருதுகளுடன், அவர்கள் திறந்தவெளிகளில் சந்திக்கும் நேரங்களிலெல்லாம், பந்தயங்களில் ஈடுபட்டு வெற்றிமாலை சூட்டிக் கொள்வதற்குப் போட்டியிடுவர். வெற்றி மாலையைப் பெறுவதற்கு இடும் போட்டி,-ஒலிம்பிக் பரிசைப் பெறுவதற்கான முயற்சியைப் போன்றேதேயாகும். 'பசுமாடு பந்தயம் ஓடுவது' என நாம் பொதுவழக்காக நகையாடுவது போல உண்மையிலும் அக்காட்சி நகைப்பூட்டுவதாகும். ஆனால் எருதுகள், பயந்து கால்களை எட்டவைப்பதோடு, குதிரையைப் போல ஓடுவதற்கும் கற்பிக்கப்படுகின்றன. அவர்கள், அதன் மீதேறிச் செல்வதுமுண்டு. (பிரையர், புதிய விருத்தாந்தம், முதலியன-பதிப்பு .க்ரூக், ஹாக்லியுட். சாக். 1915, வால் iii பக்கம் 157, 158). எருதுகளும் குதிரைகளுமடங்கிய ஒரு குழுவை நான் எங்கும் கண்டதில்லை. சூதாட்டத்திற்கான சில விதிகளை அர்த்த சாத்திரம் கூறுகிறது (பகுதி iv. அதிகாரம் 20). பணயம், மற்றும் சூதாட்ட விடுதிகளின் மேற்பார்வையாளர், கட்டணம் வசூலிப்பதோடு, வெற்றிப் பணத்தில் ஐந்து சதவிகிதத்தையும், பயன் படுத்திய கருவிகளின் கூலி, விடுதிக்கான வாடகை, மற்றும் தண்ணீர் வசதி போன்ற சேவைகளுக் கெனவும், பணம் வசூலித்து வந்தனர். இந்திய நாட்டில் நடைபெற்ற எருது ஓட்டப்பந்தயங்களைக் குறித்த விவரங்களுக்கு, டபிள்யூ. க்ரூக் என்பவரின் 'நாடோடிக்கதை' என்ற கட்டுரையைக் காண்க. (வால் XXVIII, பக். 141. எப். எப்.)

நாட்டில் காண்பதரிது. ஆனால் நன்றாகப் பாய்ந்தோடக்கூடிய எருதுகள் இன்றும் இருக்கின்றன. பந்தய அரங்கம் 6000 கஜ விஸ்தீரணமுள்ளதென்றும், பந்தயங்களின் போது பணயம் வைக்கும் வழக்கமுமிருந்ததென்றும் தெரியவருகிறது:

**அரச சேவகிகள்**

தேர்ச்சி பெற்ற நாட்டியப் பெண்களுக்கு அரசவையில் நன் மதிப்பிருந்ததோடு, உரிமைகள் சிலவும் வழங்கப் பெற்றிருந்தன. சமீப காலம் வரையிலும் சுதேச மன்னர்கள் விரும்பத்தகாத இவ்வழக்கத்தை அனுமதித்து வந்தனர். ஒரு சிலரிடம் இன்று வரை இவ்வழக்கம் நீடித்துள்ளது. அத்தகைய பெண்கள், வீட்டு வேலைகளுக்கெனவும், தைலமிடுவதற்கெனவும், மலர் மாலை தொடுப்பதற்கெனவும் அமர்த்தப்பெற்றிருந்தனர். மன்னருக்குத் தண்ணீர், வாசனைத்திரவியங்கள், மலர்மாலைகள் ஆகியவைகளை அளிப்பதற்கு அவர்களுக்கு உரிமை உண்டு. கொற்றவனுக்குக் குடை பிடிக்கவும், சாமரம் வீசவும், பொற்கிண்ணம் ஏந்தவும் அவர்கள் உரிமை பெற்றிருந்தனர். அவையில் அரியாசனத்தில் வீற்றிருக்கும் போதும், தேரிலோ அல்லது சேணத்திலோ அமர்ந்து பவனிவரும் போதும், பெண்மணிகள் அவனுக்குப் பணி விடை செய்து வருவர்; இவர்களின் மீது, அரசாங்கத்தின் பலத்த கண்காணிப்பு இருந்து வந்தது. தொழிலில் ஈடுபட்டி ருந்தவர்கள் அரசாங்கக் கருவூலத்தில் அனுமதிக் கட்டணம் செலுத்தி வந்தனர். தெற்கிலுள்ள விஜயநகரசாம்ராச்சியத்தில், பதினாறுவது நூற்றாண்டில், இத்தகைய பழக்கங்கள் இருந்தன வென்று குறிப்புகள் கிடைக்கின்றன. விலைமகளிர் வாயிலாகக் கிடைக்கும் இரகசியச் செய்திகளைப் பயன் படுத்துவதையும் அரசாங்க ஒற்றர் படை இழிவாகக் கொள்ளவில்லை.

**இரேலியரின் செல்வாக்கு**

அலெக்சாந்தரின் படையெடுப்புக் காலம் வரையிலும், சிந்து நதியே பாரசீக சாம்ராச்சியத்தின் 'பாம்பரை எல்லையாகக் கருதப்பட்டுவந்தது. ஹிஸ்டாஸ்பசின் மகன் டரையசு, இந்தியப் பகுதியைக் கைப்பற்றி இருந்தானெனினும், நாம் குறிப்பிடும் காலத்தில் இந்திய மாகாணத்தின் மீது பாரசீக மன்னனின் செல்வாக்கு அமலிலிருந்து வந்ததென்று தெரியவில்லை. ஒரு நூற்றாண்டு அல்லது அதற்கும் மேலாகவே, பஞ்சாப், பாரசீகப் பகுதியின் அருகிலிருந்து வரும் வாய்ப்பினைப் பெற்றிருந்தது. அகேமீனியன் அரசிற்கும் இந்திய நாடுகளுக்கும் இடையிலிருந்த நீடிய இத்தொடர்பு, ஏடுகளில் குறிக்கப்பெற்றிருக்கவில்லை

என்றாலும், பாரசீக நிறுவனங்களை இந்தியர் நன்கு அறிந்து கொள்வதற்கு வழி கோலியது என்பதை மறுக்க வியலாது. பிற் காலங்களில் எல்லைப்புற மாகாணங்களில், 'கரோஷ்டி' என்னும் ஓர் அராமிக் எழுத்து வகை வழக்கிலிருந்தது. சற்றுப் பிந்திய காலமே எனினும், நெடுங்காலமாகப் பாரசீகத்தின் செல்வாக்கு ஐயத்திற்கிடமின்றி இந்திய நாட்டில் உலவிவந்ததென்பதை உறுதிப்படுத்துகிறது. 'சத்ரப்' என்ற பாரசீகச் சொல் நெடுங் காலமாக வழக்கிலிருந்து வருவதும், அசோகரின் கல்வெட்டு களும் கட்டடக்கலை நுணுக்கங்கள் சிலவும், பாரசீகரின் செல் வாக்கை மேலும் உறுதிப்படுத்துகின்றன. ஒரு சில தகவல்கள் குறிக்கப்பெற்றுள்ளன. முதல் மௌரிய மன்னரின் ஆட்சியில், அவையில் நிலவிய பழக்க வழக்கங்களில், இரேனியரின் செல் வாக்கு மிகுந்திருந்தது என்பதை அறிவிப்பதற்கு அக்குறிப்புகளே போதிய சான்றுகளாக விளங்குகின்றன. முனிவரையும், வைத்தியரையும், 'புனித அக்கினி வைக்கப்பட்டிருக்கும் தனி அறையிலேயே', மன்னன் கலந்தாலோசிக்க வேண்டுமென அர்த்த சாத்திரம் விதிக்கிறது. மாகியரின் சடங்கு முறைகள், மௌரியரின் அவையில் வழக்கிலிருந்ததென்பதற்கு, இது வொன்றே போதிய சான்றாக விளங்குகிறது. மகுடம் சூடு வதற்கு முன் கையாளப்படும் அபிஷேகச் சடங்கு சிறந்த ஒரு திருநாளாகக் கொண்டாடப் பெற்றது. அப்போது மன்னருக் குப் பல பரிசுகள் வழங்கப்பெற்றன. பிறந்த நாளன்று, பாரசீக மன்னனுக்கு அபிஷேகம் செய்யப்படுவதுண்டு. நெடுங்கால மாகப் பரவியிருந்த இப்பழைய விதி அல்லது கட்டுப்பாடு, ஹீரோடோடஸ் என்பவனால் சித்திரிக்கப்படுகிறது. மௌரிய ராட்சியில் கடைப்பிடிக்கப்பெற்ற பழக்கம், இப்பாரசீக வழக் கத்தை நினைவுபடுத்துகிறது. வேத சமயத்திற்கும், இரேனிய சமயத்திற்குமிடையிலுள்ள, ஐயமற்ற நெருங்கிய தொடர்பை நாம் மனத்தில் கொள்ள வேண்டும். பெரிஷ்டா போன்ற நூலா சிரியர்கள், பாரசீகத்திற்கும் இந்தியாவிற்குமிடையில் பன் னெடுங்காலமாக நிலவுகின்ற உறவுமுறைக் கதைகளைத் தங்கள் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர். இந்திய-இரேனிய உறவைப் பற்றிய பல்வித ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பெற்று, அறிஞர் களின் ஆய்ந்த முடிவு எங்ஙனமிருப்பினும், இரேனியப் பழக்க வழக்கங்களும் கருத்துகளும் ஓரளவு இந்தியாவை ஆட்கொண் டிருந்தன என்பதில் ஐயம் ஒரு சிறிதும் இல்லை.[1]

[1] தக்ஷசிலத்தின் சர்காப் பகுதியிலுள்ள கிரேக்க (அயோனிய) ஜான் டியாலாக்கோவில், தீக்கடவுளுக்கென எழுந்தது (எப். பி. எச். எஸ்.

**தன்னாட்சி**

இந்திய மன்னன் ஒருவனின் அரசு முறை, தன்னாட்சி அல்லது கொடுங்கோலாட்சியாகவே இருந்து வந்தது.[1] அரசனின் இச்சையை வரையறுக்கும் சட்டமெதுவும் இருக்கவில்லை. பிராமணருக்கு வழக்கமாகச் செலுத்தபட்டு வந்த மரியாதை, தன்னிச்சையாக ஆட்சி செலுத்த விரும்பும் ஒரு மன்னனை எவ்வகையிலும் கட்டுப்படுத்த இயலாததாக இருந்தது. கொலையுட்படக் கோரமான குற்றத்தைச் செய்துள்ள பிராமணனைத் துன்புறுத்துவது கூடாதெனஅர்த்த சாத்திரம் விதிக்கின்றது. அத்தகைய ஒருவனை நாடு கடத்துவதோ அல்லது ஆயுட்கால முழுவதும் சுரங்க வேலையிலீடுபடச் செய்வதோ, முறையான தண்டனையாகுமென்றும் அந்நூல் தெளிவுபடுத்துகின்றது. அரசத் துரோகக் குற்றமிழைக்கும் பிராமணனை, மூழ்கடித்துக் கொன்று விடுவதை அந்நூல் அனுமதிக்கிறது. அத்தகைய பிற குற்றவாளிகளை உயிருடன் எரித்து விடும் வழக்கமே கடைபிடிக்கப்பட்டு வந்தது. சந்திரகுப்தனைப் போன்ற வலிமைமிக்க கொடுங்கோலன் ஒருவன், பிராமணரின் உரிமைகள் என்றதொரு காரணத்தால், தன்னிச்சைக்கு ஊறு விளைவதை என்றும் அனுமதித்திருக்கமாட்டான். எவனொருவனையும், கலந்தாலோசிக்க வேண்டுமென்ற விதி அரசனுக்கில்லை. நடைமுறையில் தன்னிச்சை மிகுந்த கொடுங்கோல் மன்னனும தனது அமைச்சர்களின் உதவியை எதிர்நோக்கியிருந்தான். ‘இறைமை’ என்பது துணையுடனேயே எய்தலாகும். ‘சக்கரமொன்று தானாக இயங்காது. எனவே அவன் [மன்னன்] அமைச்சர்களை அமர்த்தி அவரது கருத்துகளை அறிய வேண்டும்.[2] மௌரிய மன்னனுக்குத் தன் அந்தரங்க ஆலோசனைக் குழுவின் அங்கத்தினர் எண்ணிக்கையை வரையறுத்துக் கொள்ள வேண்டிய கட்டுப்பாடில்லை. அர்த்த சாத்திரமும் அவ்வாறே குறிக்கிறது. ‘பேரரசின் அலுவல்களைச் சரிவரக் கவனித்துக் கொள்வதற்குத் தேவையான அங்கத்தினர்களை அக்குழு கொண்டிருக்கவேண்டும். குறிப்பிட்டதொரு பிரச்சினைக்கு, நான்கு அமைச்சர்களின் ஆலோசனையோடு மன்னன் திருப்தியடையலாம். முடிவு, அரசனைப் பொறுத்த விஷயமாகும்.

---

வால் iii, பக். 77, வருடாந்திர அறிக்கை ஏ, எஸ், இந்தியா 1912-13, பக். 35, XXXIV, b). கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில் இது எழுந்ததாகத் தெரியவருகிறது.

[1] நூல், முடியாட்சி ஒன்றையே குறிக்கிறது. சில இனத்தவர்களிடையில் குடியாட்சி முறைகளும், பிரபுக்களாட்சி முறைகளும் வழக்கிலிருந்தன. உ-ம் மாளவர், க்ஷுத்ரகர், லிச்சாவிகள், யௌதேயர்

2 அர்த்த சாத்திரம், நூல் I, அதிகாரம் 7.

தனது அமைச்சர்களைப் பொறுத்த வரையில் பதினாறும் நூற்றாண்டில் அக்பரும் இதற்கைய கொள்கைகளையே பின்பற்றினான். சாணக்கியனைப் பற்றியும் அவன் எழுதிய நூலைப் பற்றியும் அக்பர் அறிந்திருந்தார் எனக் கூறவியலாது.

**ஓர் உண்மையான கட்டுப்பாடு**

எந்த நிமிடத்திலும் உயிரிழக்கக்கூடும் என்ற திகிலும், எந்த நேரத்திலும் அரசியல் புரட்சி ஏற்படக் கூடும் என்ற அச்சமும் அரசனது அதிகாரங்களை வரையறுத்தன. மரபுகளை நசுக்கி. அதிகாரத்தை வரம்பின்றிப் பயன்படுத்தும் மன்னனொருவனுக்கு அகால மரணம் ஏற்படுவது உறுதி. தனது முன்னோடிகளின் குலத்தை வேரறுத்து, ஒரு புரட்சியின் விளைவாகவே சந்திரகுப்தன் அரசெய்தினான். வாழ்நாள் முழுவதும் அச்சத்துடனேயே கழிக்க நேர்ந்ததால், சதித் திட்டம் எதுவும் உருவாகாது பாதுகாப்பாக மிகக் கடின விதிகளை அவன் ஏற்படுத்த வேண்டியிருந்தது. பகல் நேரங்களில் தூங்குவதும் ஒரே அறையில் தொடர்ச்சியாக இரு இரவுகள் தூங்குவதும் மன்னரது உயிருக்குப் பேராபத்தாக இருந்ததென்றும், அவ்வாறு செய்வதற்கு மன்னன் துணிவதில்லை என்றும் மெகாஸ்தனீஸ் குறிக்கிறான். பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் பர்மிய அரசன் ஒருவன், அத்தகைய வழிகளைக் கடைப்பிடித்தான் எனத் தெரிய வருகிறது. நாம் முன்னர் குறித்த கதாசிரியன், நந்தர்களை அரசு கட்டிலிலிருந்து வீழ்த்திய புரட்சியை விரிவாக எடுத்துரைப்பான். அம்மரபுச் செய்தியைக் கூறும் போது, அரசைக் கைப்பற்றிய புதிய இளவலை, நந்தர்களின் வழி பற்றியவர்கள், அழிப்பதற்கு எவ்வாறு முயன்றனர் என்பதையும், அம்முயற்சிகளில் எவ்வாறு தோல்வியுற்றன ரென்பதையும் கூறி, ஏமாற்றமடைந்த மாஜி அமைச்சர் கீழ்வருமாறு உரைத்தனர் என்று கூறுவர்:

“எப்போதும் இந்நிலையேயாம்—அதிர்ஷ்டம் எந்நேரமும்
கொடுங்கோலன் சந்திரகுப்தன் பங்கிலேயே உள்ளது—
[நான்
தவிர்க்க வியலாத கூற்றுவனையே, அவனைக் கொல்லுமாறு
[பணித்த போதும்
அதிர்ஷ்ட தேவதை எதிரிக்கு எதிராக ஆயுதமேந்துகிறாள்.
நான் பணித்த கொலைகாரன், அவனது சாம்ராச்சியத்தில்
[பாதியை அழித்திருக்க வேண்டும்
போர் வலியும், விஷ மருந்துகளும், என் திட்டங்களும்
[அவனுக்கே

நன்மை பயந்து என் நண்பர்களுக்கும், கையாட்களுக்கும்
[எதிராகப் பயன்படுகின்றன.
அவனது செல்வாக்கிற்கு எதிராக நான் தீட்டும் சதியாவும்,
அவனுக்கு எதிர்பாராத நலனையே விளைவிக்கப் பயன்
[படுகின்றன.

நாட்டைக் கைப்பற்றியவனின் வலிமை வாய்ந்த போர்ப் படையின் வலிமை இப்போது விரித்துரைக்கப்படும். அபாயகரமான நிலையிலும் அவனது அரசு நிலைபெற்று விளங்கியமைக்கு அதுவே காரணமாக இருந்தது.

**பொதுவழக்கிலுள்ள இந்தியப்படை**

இந்தியப்படை, தொன்று தொட்டு வழங்கி வரும் வழக்காறுகளினடிப்படையில் நான்கு அங்கங்களை உடையதாக இருந்தது. அவை வருமாறு: யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை. போர் யானைகள், இன்றியமையாதவையாகக் கருதப்படுகின்றன. பேருருவம் படைத்த யானைகள், எதிரிகளின் படையணிவகுப்பை மட்டுமன்றி, அவரது கோட்டைகளையும் கூடாரம் மற்றும், பாசறைகளையும் அழிப்பதோடன்றி, உயிருக்குச் சேதம் விளைவிக்கக்கூடிய பல வேலைகளுக்கும் பயனுள்ளவையாக இருந்தன. இதனால், மன்னர்களின் வெற்றி, யானைகளைப் பொறுத்தே இருந்தது என்னும் கருத்து வேரூன்றியது. இந்தியப் போர் முறைகளை மனத்தில் கொண்டு பார்க்கும் போது யானைகளின் இன்றியமையாமை ஒப்புக்கொள்ளக் கூடியதேயாகும். ஆனால், அலெக்சாந்தரைப் போன்று பேராற்றல் மிக்கதொரு படைத்தலைவன், புதியமுறைகளைக் கையாண்டு இந்தியப் போர் முறையைத் தகர்த்தெறிந்தபோது யானைகளும் பயனற்றுப் போயின.

ரிக்வேதகாலங்களில் பயனுள்ளவைகளாக விளங்கிய ரதங்களும், பல நூற்றாண்டுகளாக இந்தியப் போர்களில் பயன்படுத்தப் பெற்றன. ஏன் அவை வழக்கொழிந்து போயின அல்லது எப்போது அவை வழக்கொழிந்தன என்பதை உறுதியாகக் கூறவியலாது. ஹுயூன்சாங் என்னும் சீன யாத்ரிகன், கி. பி. ஏழாவது நூற்றாண்டின் இடைக்காலத்தில் எழுதியதன் நூலில், இந்தியாவைப் பற்றிப் பொதுவாக வர்ணித்துள்ளான். அதில், நாம் மேலே குறித்தது போன்று படையின் நான்கு அங்கங்களையும் குறிப்பிட்டிருப்பதோடு, அரசாங்க அலுவலர் தேரில் செல்வது வழக்கம் என்றும் குறிப்பிட்டுள்ளான்.

“காலாள் வீரரும், குதிரைப் படையினரும், தேர்ப்படையும், யானை வீரரும் படையில் உண்டு. போர் யானைக்குக் கவசமுண்டு. அதன் தந்தங்களுக்குக் கூரிய முனையுள்ள கூடுகள் உண்டு. அதன் மேல் படைத்தலைவன் அமர்ந்திருப்பான். யானையைக் கொண்டு செல்வதற்கு இரு மருங்கிலும் வீரர் உண்டு. அரசாங்க அலுவலர் அமர்ந்திருக்கும் தேரை நான்கு குதிரைகள் இழுத்துச் செல்வது வழக்கம்.[1] இத்தேரின் இரு புறங்களிலும் காலாட் படையினர் காவல் காத்து வருவது வழக்கம்.

அக்காலத்தில், இரதங்கள் உயர் அலுவலர்களாலேயே பயன்படுத்தப்பெற்றன போலும்.

அந் நூலாசிரியன், சமகாலத்தவனான கானோஜ் நாட்டு ஹர்ஷனது படையை வர்ணிக்கும்போது, வலிமை மிக்க அம் மன்னன் 5,000 யானைகளையும், 20, 000 குதிரைப் படையினரையும், 50,000 காலாட் படையினரையும் கொண்ட பெரும் படையை வைத்திருந்தான் எனக் கூறுகிறான். சின்னாட்களுக்குப் பின் போர் யானைகளின் எண்ணிக்கையை அவன் 60,000 மாகவும் குதிரைப்படையை 100,000[2] ஆகவும் உயர்த்தினான். தேர்களைப் பற்றிய எவ்விதக் குறிப்புமில்லை. யாத்திரிகளின் காலத்தில் தேர்கள் வழக்கொழிந்து போயின என ஊகிக்கலாகும். ஏழாவது நூற்றாண்டு வரையிலும் அவை வழக்கிலில்லை. இக்காலத்திற்குப் பின், அவை போர்களில் உபயோகிக்கப்பட்டு வந்தன என்பதற்கான குறிப்புகள் வேறெங்குமிருப்பதாக என் அறிவிற்கு எட்டியவரை இல்லை.

பிற்காலங்களில் நாம் கேள்விப்படும் ரஜபுத்திரக் குதிரை வீரர்கள் தங்கள் நெஞ்சுறுதிக்கும் கட்டுப்பாடற்ற போர் வெறிக்கும்மிகப் புகழ் வாய்ந்தவர்கள். பண்டைக் காலங்களில் போர்க்களங்களில் குதிரைப் படையின் உபயோகத்தைக் கிரேக்க நூல்களே குறிக்கின்றன. ஹிடாஸ்பஸ் போரில் எவ்வாறு அப்படை

[1] யுவாங்-சுவாங்கைப்பற்றிய நூலில்-வாட்டர்ஸ், வால். i. பக் i 171. பியல் என்பவரின் மொழிபெயர்ப்பு (ஏடுகள் வால். i, பக். 83) மிகவும் மாறுபட்டதாகவும் பிழையுள்ளதாகவும் காணப்படுகிறது.

[2] விவரங்களை ஒதுக்கிவிட்டு வாட்டர்ஸ், வாசகத்தைச் சுருக்கி உரைக்கிறான். ஹர்ஷனின் காலாட்படை ஆதியில் 2,000 மாக இருந்ததென பியல் கூறுவான் (வால். i, பக். 213), மொத்த எண்ணிக்கை 20,000 என்ற ஜூலியனின் கூற்றுச்சரியெனத் தோன்றுகிறது; யானை, குதிரைப் படைகளின் மொத்த எண்ணிக்கை, மிகைப்படுத்திக் கூறப்படுவதாகத் தெரிகிறது. பண்டைய இந்திய அரசர்களின் படையிலுள்ள இவ்வெவ்வேறு அங்கங்கள் எண்ணிக்கையில் குறைவாக இருந்தனவென்பதை, பிற சான்றுகள் தரும் நம்பிக்கையுள்ள எண்ணிக்கைகளிலிருந்து அறியலாம்.

பயன்படுத்தப்பெற்றதென்பதை அந் நூல்கள் பெரிதும் விரித்துரைக்கின்றன. பேரரசின் குதிரை வீரர் தங்கள் முழுத் திறனுடன் போரிட்டனர். ஆனால் மாசிடோனியக் குதிரைப் படையை அவர்களால் எதிர்த்து நிற்க இயலவில்லை. இந்தியர் அனேகமாக அழிக்கப்பெற்றனர். ஏராளமான காலாட்படையினரைக் கூலிக்கு அமர்த்துவது இந்தியரின் தொன்மை வாய்ந்த வழக்கமாயிருந்தது. பயிற்சி பெற்ற படைவீரருக்கும், கூலிப்படையினருக்கு மிடையிலுள்ள வேற்றுமை மிகக் குறைவாக இருந்தமையால் காலாட்படையின் போர் மதிப்பு மிகக் குறைவாக இருந்தது.

**மௌரியப்படை**

மரபையொட்டி நான்கு பகுதிகளையுடைய படை சந்திரகுப்தனிடமிருந்தது. போர்ப்படையின் அமைப்பில் கிரேக்கரை அவன் பின்பற்றினன் என்பதற்கான அறிகுறி எதுவுமில்லை. நந்த வமிசத்தில், இறுதியாக ஆண்ட மன்னனிடம் ஏராளமான படைபலமிருந்தது. அதில் 80,000 குதிரைகளும், 200,000 காலாட்படையினரும், 8,000 தேர்களும், 6,000 போர் யானைகளும் இருந்தன என்று மதிப்பிடப்படுகிறது. காலாட் படையினரின் எண்ணிக்கையை 600,000 மாகவும், யானைகளின் எண்ணிக்கையை 9,000 மாகவும், மௌரியன் அதிகரித்தான். ஆனால், அவனிடம் 30,000 குதிரை வீரர்களே இருந்தனர் எனத் தெரிய வருகிறது. தேர்களின் எண்ணிக்கை குறிப்பிடப்படவில்லை. முன்னையின் காலத்தைப்போலவே இருந்ததென்று கொண்டாலும், ஒவ்வொரு தேருக்கு மூன்று வீதமும், ஒவ்வொருயானைக்கும் நான்கு நபர்கள் வீதமும், அதன் மொத்த எண்ணிக்கை 690,000 அல்லது 700,000 நபர்களைக் கொண்டிருந்திருக்க வேண்டும். போர் வீரருக்குத் தேவையான ஆயுதங்களை அளித்து, ஊதியமும் அரசாங்கமேஅளித்ததென்று,ஐயத்திற்கிடமின்றி மெகாஸ்தனீஸ் கூறுகிறன். தேவைப்படும் போது கூட்டப்பெறும் கூலிப்பட்டாளமாக அது இல்லை. புளுட்டார்க் அழுத்தமாகக் கூறுவது போல அத்தகைய வலிமை மிக்கதொரு படை, இந்திய நாடெங்கிலும் வென்று தன்னடிப்படுத்தியதோடன்றி செல்யூகஸ் நிகேதாரின் படையையும் வென்றதென்பதில் வியப்பில்லை. நிகேதாரின் படையின் எண்ணிக்கை குறைவாகவே இருந்திருக்க வேண்டும். பத்து நபர்களைக் கொண்ட சிறு குழுவாகவும், நூறு ஆட்களைக் கொண்ட நடுத்தரப் பகுதிகளாகவும், ஆயிரமாட்களைக் கொண்ட பெரும்பகுதியாகவும், படையினர் வகுக்கப் பெற்றிருந்தனர் என்பதை அர்த்தசாத்திரத்திலிருந்து அறியலாம். இந்த

முறையையே சந்திரகுப்தனும் பின்பற்றியிருக்கக்கூடும். அந் நூலாசிரியன் இயற்கையாகவே, இந்தியநாடு பல சிறு பகுதிகளாகப் பிரிந்திருந்ததென்ற கருத்தைக் கொண்டிருந்தானேயன்றி ஒரு பேரரசாக இருந்ததென்ற எண்ணத்தை வலியுறுத்தவில்லை. எனவே, மன்னனை ஒரு படைத்தளபதியாகவே அவன் கருதுவான். போரில் பயன்படுவதற்கென்றே அமைக்கப் பெற்றிருந்த எந்த ஒரு நிறுவனத்தைப் பற்றியும், ஓரளவிலேனும் எங்குமே அவன் பேசுவதில்லை. சந்திரகுப்தனின் பெரும்படையைக் கட்டுப்படுத்துவதற்கும் நிர்வகிப்பதற்கும், போர்க்காரியாலயம் ஒன்று மிக விரிவான முறையில் அமைக்கப்பெற்றிருந்ததென்று, மெகாஸ்தனீஸ் கூறுவார். முப்பது அங்கத்தினரடங்கிய இக்குழு, தலையொன்றுக்கு ஐந்து நபர்களடங்கிய ஆறு பிரிவுகளாகப் (பஞ்சாயத்) பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொன்றும் ஒரு பகுதிக்கான பொறுப்பை ஏற்றிருந்தது. அவை முறையே வருமாறு: போர்டு நிர் I (அட்மிரலின் உதவியோடு) கப்பற் படை; போர்டு நிர் II போக்குவரவு, தளவாடங்கள், மற்றும் உணவு உடை, படையினர் சேவை; போர்டு நிர் IIIகாலாட்படை; போர்டு நிர் IV குதிரைப்படை; போர்டு நிர் V போர் ரதங்கள்; போர்டு நிர்VI யானைகள்.இதுபோன்றதோர் ஏற்பாடு வேறெங்குமிருந்ததாகத் தெரியவில்லை. இத்தகையதொரு திறமைமிக்க ஏற்பாட்டைச் செய்து முடித்த பெருமை, சந்திரகுப்தமௌரியனையும் மிக்க புத்தி கூர்மையுள்ள அவனது அமைச்சனையுமே சாரும்.

**படைக்கலன்கள்**

படைக்குத் தேவையான அளவில் நன்கு பயன்படக்கூடிய படைக்கலன்கள் அளிக்கப்பெற்றிருந்தன.. போர் யானை ஒன்று பாகன் நீங்கலாக குறைந்தது மூன்று வில்லாளிகளைச் சுமந்து செல்லும். பொதுவில், இரதமொன்றுக்கு நான்கு குதிரைகள் பூட்டப்பெற்றிருந்தன. இரண்டு குதிரைகள் பூட்டிய இரதமும் வழக்கிலிருந்தது. ஒவ்வொரு தேரிலும் சாரதியைத்தவிர, குறைந்த அளவில் இரு போர் வீரர்கள் இருந்தனர். ஹிடாஸ்பஸ் போரில், பேரரசினல் பயன்படுத்தப்பெற்ற தேர்களில் நான்கு குதிரைகள் பூட்டப்பெற்றிருந்ததோடு, தேர் ஒவ்வொன்றிலும் ஆறு படைவீரர் இருந்தனர். ஒவ்வொரு குதிரை வீரனும் கிரேக்க 'சௌனியனை'ப் போல இரண்டு ஈட்டிகளை ஏந்திச் சென்றதோடு, சிறு கவசமொன்றையும் அணிந்திருந்தான். காலாட் படையினர், அகன்றதொரு வாளை முக்கிய ஆயுதமாகப் பயன்படுத்தினர். அது தோள்பட்டையிலிருந்து ஒரு 'பெல்டி'ன்

உதவியால் தொங்கவிடப்பட்டிருந்தது.[1] ஆயுதங்களில், குத்தூ ஈட்டிகளும், வில் அம்புகளும் பயன்படுத்தப்பெற்றன. வில்லின் முனையைத் தரையில் ஊன்றி, இடக்கால் கட்டை விரலால் அழுத்திக்கொண்டு, அம்பை எய்வது வழக்கம். கேடயங்களோ அல்லது கவசங்களோ அம்பின் வேகத்தை எதிர்த்து நிற்க இயலாது. பூமி மிகவும் வழவழப்பாக இருந்ததால் இந்திய வில்லாளிகளின் திறன் பயன்படாது போயிற்று. வில்லின் முனையைப் பலமாகத் தரையில் ஊன்றிக்கொள்ள இயலவில்லை.

மனிதர், யானைகள், குதிரைகள் ஆகியோருக்குத் தற்காப்பிற்கான கவசம் வழங்கப்பெற்றது. குதிரைகள், எருதுகள், கோவேறு கழுதைகள் ஆகியவை, தளவாடங்களைக் கொண்டு செல்வதற்குப் பயன்பட்டன.

போர் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது ஆம்புலன்ஸ் பகுதியொன்று பின்னணியில் இருந்ததென்று அர்த்தசாத்திரம் கூறுகின்றது. சிகிச்சைக்கான ஆயுதங்கள், பஞ்சு மற்றும் மருந்துகளோடு ரணவைத்தியர்களும், உணவு, பான வகைகளைத் தயாராக வைத்திருக்கும் பெண்டிரும், அங்கிருந்தனர் எனக் கூறப்படுகிறது. (பகுதி X, அதிகாரம் 3)

சந்திரகுப்தனல் சீர்திருத்தியமைக்கப்பெற்ற படை வெல்வதற்கரியதாய் விளங்கியதென்பது இதனின்றும் தெரிய வரும்.

**மதியூகமும் படைவலியும்**

படை வலியை மட்டிலும் மௌரியன் நம்பியிருக்கவில்லை. படைவலியைக் காட்டிலும், மதியூகத்தில் இந்திய அரசியலறிஞர்களுக்கு எப்பொழுதும் அதிக ஆர்வமிருந்து வந்தது. 'சதி, ஒற்றர்கள், எதிரியின் ஆட்களைவயப்படுத்துதல், முற்றுகை, தாக்குதல்' ஆகிய ஐந்து உபாயங்களும் ஒரு கோட்டையைக் கைப்பற்றுவதில் இன்றியமையாதவை என அர்த்தசாத்திரம் எடுத்துக்கூறும். இவை புதுமையாக இருப்பதோடு மௌரிய சாம்ராச்சியத்தைச் அமைப்பதில் கையாளப்பெற்ற பிற உபாயங்களையும் எடுத்துரைக்கிறது. பல நூற்றுண்டுகளுக்குப் பின்னர் அசிகார் கோட்டையைப் பிடிப்பதற்கு அக்பர் ஏராளமான பொருளை இலஞ்சமாக வழங்கித் திருப்தியடைந்தான். அவனது படை

1 ரஜபுத்திரர் பலர், தற்காலங்களில் அவ்வாறு ஆயுதமேந்திச் செல்லுகிறார்கள் என கர்னல் ஹெண்டலே குறிப்பிட்டுள்ளார். (இந்தியக்கலை, தொழில் சஞ்சிகை நிர் 130, 1915, பக். 8).

வலி அவனுக்கு உதவவில்லை. மராட்டியரின் கோட்டைகள் யாவையும் அத்தகைய இழிவான முறையிலேயே அவுரங்கசீப் கைப்பற்றினன். நூலாசிரியர்கள், படைவலி, மதியூகம் ஆகிய இரண்டின் ஏற்றத்தாழ்வுகளை விவாதித்திருக்கின்றனர். 'சதித் திட்டம் தீட்டுவதில் (மதியூகத்தில்) தேர்ச்சி மிகவும் சிறந்தது' என அர்த்தசாத்திர நூலாசிரியர் தயக்கமின்றிக் குறிப்பிடுவர். மதியூகமுடைய சதிகாரர், செல்வாக்கிலும், போர்த் திறனிலும் தன்னிலும் சிறந்த மன்னரை எளிதில் முறியடிக்கக்கூடும் என்பதே அதற்குரிய விளக்கமாகக் கூறப்பட்டது (பகுதி ix, அதிகாரம் 1).

'குள்ளநரியின் அடிச்சுவட்டைப் பின்பற்றும் அரசன் எளிதில் வெற்றியடைவான்' என்பதைத் தகுந்த உதாரணங்களோடு மாக்கியவல்லி நிரூபிக்கச் சித்தமாயிருந்தான்.[1] அர்த்த சாத்திரத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ள அரசியல் முறை, 'இளவல்' என்னும் நூலிலுள்ள கருத்துடன் ஒப்பு நோக்கக்கூடியதாக அமைந்துள்ளது.

### "கௌதில்யன்' அல்லது 'சாணக்கியனைப்' பற்றிப் பாணனின் ஆராய்ச்சி

'பாரபட்சமுள்ள நியாயத்திற்கு வழிவகுப்பதாக' அர்த்த சாத்திரத்தின் விநோத வார்த்தை ஒரு முகமாக யாவரும் ஒப்புக் கொள்வதில்லை. ஏழாவது நூற்றாண்டில் வாழ்ந்த ஹர்ஷசக்கரவர்த்தியின் உற்ற நண்பனை 'பாணன்' அவைகளை வெறுத்தான்: "நேர்மையுள்ள ஒருவனுக்கு, உகந்ததாகக் கருணையற்ற கொள்கைகளுக்கும் நிறைந்த கொடுமைகளுக்கும் மேற்கோள் நூலாக விளங்கும், கௌதில்யனின் சாத்திரத்தில் ஏதேனுமுளதாஎன அவன் வினவுகிறான் (அறை கூவல்). அதைக் கற்றுத்தருபவர்களும், போதிப்பவரும், சித்து வேலைகளைக் கடைபிடிக்கும் கடின இதயமுடையவராவர். பிறரைஏமாற்றுவதையே தொழிலாகக்கொண்ட அமைச்சர்களே அவர்களுக்கு மதியுரைக்கின்றனர். மன்னர் பலரால் துறக்கப்பட்ட செல்வப்பெருக்கமென்ற தேவதையே அவர்களது சிந்தனையில் எந்நேரமும் குடிகொண்டிருப்பவள். நாசவேலைகளில் ஈடுபட்டு நல்ல அனுபவம் வாய்ந்தவர்கள். இயற்கையான தூய அன்பு கொண்ட சோதரரையும் கொலை செய்வதற்குத் தயங்கமாட்டார்கள்.'

1 'இளவல்' - மொழி பெயர்ப்பு-யூனிவர்சல் லைபிரரி பதிப்பு-ரௌட்லெட்ஜ் 1893. பக். 110.

இவ்வாறு பழிக்கப்படுகின்ற நூல் 'மௌரியனின் நன்மைக்காகவே' எழுந்தது. பாணன் எடுத்துக் கூறும் நெறிகளைச் சந்திரகுப்தன் பின்பற்றவில்லை என்பது மிகவும் தெளிவாக விளங்கும். 'ஜஸ்டின்' என்பவர் எடுத்துரைப்பது போல அவன் தனது குருவின் அடிகளையே பின்பற்றினான். முதல் மௌரிய மன்னன் சிறிது காலத்திற்குப்பின் கருணை நிறைந்த சமண மதத்தைத் தழுவினான் என்பது உண்மையெனில் (நான் அதை உண்மையென எண்ணுகிறேன்), அதர்வண பிராமணத்தின் வெறுப்புப் போதனைகளுக்கு எதிரொலியாக நிகழ்ந்திருக்க வேண்டுமென்று நாம் கொள்ளலாம்.[1]

**அரசுமுறையின் கடுமை**

சந்திரகுப்தனின் கொள்கைகளைக் குறித்து நாம் எத்தகைய எண்ணம் கொண்டபோதும், திறமைமிக்க அவனது ஆட்சி, மிக நன்றாக இயங்கி வந்தது. ஆட்சிக் கலையைத் 'தண்ட நீதி' அல்லது தண்டனை வழங்குவதில் உள்ள கலை' என்ற நூல்கள் வர்ணிக்கின்றன. கிடைக்கும் குறிப்புகளிலிருந்து சந்திரகுப்தன் இக்கருத்தை மிகவும் ஏற்றிருந்தான் எனத் தெரியவரும். தயக்கமின்றி நடைமுறையிலும் அவன் அதைக் கடைப்பிடிதான். கருவூலத்தை நிரப்புவதன் பொருட்டு, வரிவிதிப்பதிலும், வசூலிப்பதிலும் சிறிதளவு கருணையும் காட்டப்படுவதில்லை என்ற எண்ணமே அர்த்த சாத்திரம் மற்றும் கிரேக்க ஆசிரியர்களின் நூல்களிலிருந்து ஏற்படுகின்றது. குற்றங்களை அடக்குவதிலும் இத்தகைய கடுமை இருந்ததென்பதும் தெளிவாகத் தெரிகிறது. 400,000-க்கும் சற்று அதிகமான ஜனத்தொகையுள்ள பகுதியொன்றில் மன்னனுடன் தான் தங்கியிருந்ததாகவும், அங்குத் தினமொன்றுக்கு, 200 டிராக்மாக்களுக்கு மேல் மதிப்புள்ள பொருள்கள் திருடுபோவதில்லை; இது பவுண்டு 8 ஸ்டர்லிங்கிற்கு அதிகமில்லை என மெகாஸ்தனீஸ் குறிப்பெழுதிருக்கிறான். மிகவும் கடுமையான சட்டங்களை அமல் நடத்துவதின் மூலமே சொத்துகளுக்கு அத்தகைய பாதுகாப்பளிப்பது சாத்தியமாயிருந்தது. 'மாபெரும் முனிவர்களின் புனித ஏடுகளை' அடிப்படையாகக் கொண்டு இவ்விதிமுறைகள் அமைக்கப்பெற்றுள்ளன என்று சாணக்கியன் கூறுவான். பதினாறுவது நூற்றாண்டில், தனி இந்து சாம்ராச்சியமாக விளங்கிய விஜய

[1] அர்த்த சாத்திரத்தின் வரிகள் பல, நூலாசிரியருக்கு அதர்வவேதத்திலிருந்த பற்றுதலை வெளிப்படுத்துகின்றன. அதர்வவேதமென்பது மந்திரங்களும், மாயாஜாலங்களும் நிறைந்தது. 'இரகசிய முறைகள்' என்ற தலைப்பில் பகுதி XIV-ல், விரோதியைச் சுற்றிவளைத்து அழிப்பதற்கேற்ற மந்திர சக்திகளைக் காணலாம்.

நகரத்திலும், தனியார் சொத்துரிமைகளைப் பாதுகாப்பதில், சிறு களவுகளுக்கும், மிகக் கொடிய தண்டனைகள் விதிக்கப் பெற்று வந்தன.

**சித்திரவதை செய்தல்**

மௌரிய சாம்ராச்சிய எல்லைக்குள் திருட்டுக் குற்றம் சாற்றப்படுவோன், அக்குற்றத்தைச் செய்தபின் மூன்று தினங்களுள் கைது செய்யப்படுவான். சாதாரணமாக (ஒருசிலரைத் தவிர) குற்றவாளியிடமிருந்து வாக்குமூலம் பெறுவதற்காக அவனைச் சித்திரவதை செய்வது வழக்கம். இதைத் தவிர்ப்பதற்கு, அவன் தன்மீது பகையின் காரணமாகக் குற்றம் சாட்டப் பட்டிருக்கிறதென்றோ, அல்லது குற்றம் நேர்ந்தபோது தான் வேறோரிடத்தில் இருந்ததையோ மெய்பிக்க வேண்டும். கொடுமைப் படுத்தித் தவறான வாக்குமூலங்களை வரவழைப்பதிலுள்ள ஆபத்துகளை, அர்த்தசாத்திர நூலாசிரியர் நன்கு அறிவார். எனவே குற்றங்களை ஐயமற மெய்ப்பிக்கும், ஆதாரங்களை அளிக்க வேண்டுமென அவர் வற்புறுத்துகிறார். என்றாலும், சித்திரவதை செய்வதையே தங்கள் முக்கிய ஆயுதமாகப் போலீசார் உபயோகித்திருக்க வேண்டும். 'குற்றமிழைத்தது உண்மையாக இருக்கும்போது குற்றவாளியைச் சித்திரவதை செய்யலாம்' என்று பொது விதி கூறப்பட்டிருக்கிறது. சுருக்கமான, இத்தகைய பொது விதியொன்று இருக்கும்போது, விதிவிலக்குகளுக்கு அதிகமான மதிப்பிருக்க முடியாது. குற்றவாளியிடமிருந்து வாக்குமூலம் பெறுவதற்குச் சித்திரவதையைக் கடைப்பிடித்தல் என்னும் மரபு இந்திய போலீஸ் அதிகாரிகளின் மனத்தில் மிகவும் வேரூன்றியிருக்கிறது என்பதையும், நவீனகாலச் சூழ்நிலைகளிலும் அதை மாற்றுவதற்கு இயலாதென்பதையும் என்போன்ற அனுபவமிக்க மாஜிஸ்ரேட்டுகள் நன்கறிவார்கள். அத்தகைய வாக்குமூலம் உண்மையானதாகவோ அல்லது பொய்யாகவோ இருக்கலாம். அர்த்த சாத்திர நூலில் பயங்கரமான பதினெட்டுவகையான கொடுமைகள் கொடுக்கப் பட்டுள்ளன. பட்டியலைக் கொடுத்துவிட்டு மிகவும் அமைதியாக, 'ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கொடுமையைக் கையாளலாம்' என்றும் தேவையான சந்தர்ப்பங்களில், தனி ஆணையின் பேரில் குற்றவாளியை 'ஒரு முறையோ அல்லது பல முறையாகவோ, மேற்குறித்துள்ள கொடுமைகளுக்கு ஆளாக்கலாம்' என்றும் கூறியுள்ளார்.

குற்றம் மெய்ப்பிக்கப்படும்போது, அபராதம், அவயங்களைத் துண்டித்தல், சித்திரவதையுடன் கூடிய அல்லது தனியான பல வகை மரணம் ஆகிய தண்டனைகளை விதிக்கலாம்.

அதிகமான பொருளை அபராதமாகச் செலுத்தி, கை கால் துண்டிக்கப்படுவதினின்றும், காப்பாற்றிக் கொள்ளலாம். குற்றவாளியின் சாதி, சமுதாயச் செல்வாக்கு ஆகியவைகளைக் கருத்தில் கொள்வதுண்டு. பிராமணனைச் சித்திரவதை செய்யலாகாது. ஆனால் அவனுக்குக் காய்ச்சிய இரும்பினால் சூடு போடுவது, நாடு கடத்துவது, ஆயுட்காலம் முழுவதும் சுரங்க வேலை செய்வதற்கு அனுப்புவது ஆகியவை கடைப்பிடிக்கப் பெற்றன. குற்றவாளிகள் சாதாரண மக்களா அல்லது அரச குடும்பத்தினரா, மற்றும் அவர்கள் சமுதாயச் செல்வாக்கு எத்தன்மையது' என்பன போன்ற விபரங்களைக் கவனித்துக் கொள்ள வேண்டுமென்று அதிகாரிகளுக்கு ஆணை பிறப்பிக்கப் பெற்றது.

நாற்பது அல்லது ஐம்பது வெள்ளிப் பணங்களின் மதிப்புள்ள திருட்டுக்கு மரணதண்டனை அளிக்கலாம். கொலை, கன்னம்வைத்தல், ஏரிகளின் கரைகளை உடைத்தல், அரசனது சொத்துரிமைகளைச் சேதப்படுத்துதல், மற்றும் அநேக குற்றங்களுக்கு மரணதண்டனை விதிக்கப் பெற்றது. அரசாங்க அலுவலில் அமர்ந்திருக்கும் பணியாள் ஒருவனுக்குத் தீங்கிழைத்தாலும் மரண தண்டனை விதிக்கப்படுமென்று மெகாஸ்தனீஸ் குறிப்பிடுகிறான். விற்பனை செய்யப்படும் பொருள்களுக்கு முனிசிபல் வரி செலுத்தத் தவறினாலும் அத்தகையதொரு கடுமையான தண்டனையே விதிக்கப்படும்.

கிரிமினல் சட்டவிதிகளின் கடுமை புத்த சமயம் சார்ந்த அசோகனது ஆட்சியில் குறிப்பிடத்தக்க வகையில் மாற்றியமைக்கப்பட்டதெனச் சொல்வதற்கில்லை, மரண தண்டனை விதிக்கப் பெற்றிருக்கும் குற்றவாளிகளையும், நியாயமற்ற வகையில் சிறைப்பட்டிருப்போர் மற்றும் கசையடி பெறுபவர்களையும் பாதுகாப்பதற்கெனத் தணிக்கையாளர் அமர்த்தப் பெற்றிருந்தனர்.

அகாரணமாகக் கைதியைச் சித்திரவதை செய்யும் ஜெயில் அதிகாரிக்கு 48 பணங்களை அபராதமாக விதிக்கலாமென அர்த்தசாத்திரம் கூறுகிறது. ஒரு கைதியை அவன் அடித்துக் கொன்றுவிடினும் 1000 பணங்களே அபராதமாக விதிக்கப் பெற்றன. அசோகனால் அமர்த்தப் பெற்றிருந்த தணிக்கை

யாளர் அத்தகைய தண்டனைகளைத் தணிக்கை செய்வதின் மூலம் நிவாரணமளித்தனர் எனக் கொள்ளலாம். அவனது பாட்டனார் காலத்தைக் காட்டிலும், நிலைமை ஓரளவு சீர்திருந்தியிருந்த தெனலாம். அலுவலரின் குற்றங்களைக் கண்டு தண்டனையளிப்ப தென்பது எப்பொழுதுமே சிரம சாத்தியமானதாக இருந்தது.

**நகரக் காவலனும் மக்கள் தொகைக் கணக்கெடுப்பும்**

சாதாரணச் சிறிய இராச்சியமொன்று நான்கு மாகாணங் களாகப் பிரிக்கப்பட்டு, மாகாணம் ஒவ்வொன்றும் ஒரு கவர்ன ரின் ஆட்சியின் கீழ் இருக்க வேண்டுமென அர்த்தசாத்திர ஆசிரியர் குறிப்பிடுகிறார். அதே முறையில் தலைநகரம், மற்றும் பெருநகரங்களின் ஆட்சி அமைக்கப்பட வேண்டுமென்பதும் அவரது நோக்கமாக உள்ளது. தலைநகரமானது நான்கு பகுதி கள் அல்லது வார்டுகளாகப் பிரிக்கப்பட்டு; ஒவ்வொன்றும் ஒரு உப-காவலன் (ஸ்தானிகன்) வசமிருந்தது. அவனது துணை அலுவலர்கள் (கோபர்) ஒவ்வொருவரும் பத்திலிருந்து நாற்பது குடும்பங்களின் நலன்களைக் கவனித்து வந்தனர். நகராட்சி முழுவதும் ஒரு காவலனின் (நாகரகா) வசமிருந்தது. பிற்காலக் கொத்தவால்களைப் போன்று நகரகன் பணியாற்றிவந் தான்.

தங்கள் எல்லைவாசிகள் ஒவ்வொருவரையும் நகரகர்கள்நன்கு தெரிந்து வைத்திருக்க வேண்டுமென்பதோடு, நகரத்தினுள் வருவோரையும், வெளியே செல்வோரையும் நன்கு கண்காணிக்க வேண்டும். மக்கள் தொகையைக் கணக்கெடுப்பது பணியாள ரின் அலுவல்களில் முக்கியமான தொண்டாக இருந்தது. தனது வார்டில் உள்ள வீடுகளில் வசித்து வரும் ஆண், பெண் பாலர் களின், சாதி, கோத்திரம் (சாதி-உபபிரிவினை) பெயர், தொழில் வரவு – செலவு ஆகிய விபரங்களைக் சோபன்' என்னும் அலு வலன் சேகரித்து வைக்க வேண்டியிருந்தது. அவ்வாறு துருவி ஆராய்ந்து பதியப்படும் ரிக்கார்டுகள், வரி விதிப்பதற்கு மற்றைப் பொது விஷயங்களுக்கும் மத்திய அரசினருக்கு மிகவும் பயனுள்ளதாக இருந்தது.

தீ விபத்திற்குப் பாதுகாப்பாகச் சிலஏற்பாடுகளும் மற்றும் சுகாதாரவிதிகளும் அமல் நடத்தப் பெற்றன. ஒரு வீட்டிற்குக் காரணமின்றித் தீ வைப்பவனை, அத்தீயில் இடும் வழக்கமிருந் தது. குப்பை கூளங்களைத் தெருவில் எறிவோருக்கு அபராதம் விதிக்கப் பெற்றது. தடையுத்தரவு தீவிரமாக அமல் செய்யப்

பட்டது. அதை மீறுவோருக்கு அபராதம் விதிக்கப் பெறும். குற்றங்கள் நிகழாவண்ணம் தடுப்பதற்காகவே இவ்வேற்பாடுகள் மேற்கொள்ளப்படுகின்றன என்று தெரிய வருகிறது.

**மௌரியராட்சியில் முனிசிபல் கமிஷன்**

மாபெரும் தலைநகரின் ஆட்சிக்கென்று சந்திரகுப்தன் வகுத்த முறை மேலும் சிக்கல் நிறைந்தது. போர்ப்படை நிர்வாகத்திற்கு ஏற்படுத்தியது போல, நகர ஆட்சிக்கென முப்பது அங்கத்தினர்கள் கொண்ட குழுவொன்றைச் சந்திரகுப்தன் அமைத்தான் என்றும், அக்குழு மேலும் ஆறு பிரிவுகள் அல்லது கமிட்டிகளாக அமர்ந்து செயற்பட்டு வந்ததென்றும் மெகாஸ்தனீஸின் குறிப்புகளிலிருந்து நன்கறியலாம். தங்கள் தனி இலாகாவின் அலுவல்களைக் கவனித்து வந்ததுடன் பொது மக்களின் நலனுக்கென அமைந்த சாதனங்களைச் சீர்ப்படுத்துதல், சந்தைகள், துறைமுகங்கள், ஆலயங்கள் ஆகியவைகளைச் சுத்தமாக வைத்திருத்தல், விலைவாசிகளைக் கட்டுப்படுத்துதல் ஆகிய பொது வேலைகளிலும் குழுவின் அங்கத்தினர் அக்கறை காட்டி வந்தனர். ஆறு பிரிவு அல்லது கமிட்டியினரின் இலாகா சம்மந்தமான அலுவல்கள் பின்வருமாறு அமைந்திருந்தன: (1) தொழிற்கலைகள், (2) அன்னியரைப் பராமரிப்பது, (3) ஜனன மரணக் கணக்குகளைப் பதிவு செய்வது, (4)சில்லரை வியாபாரம், பண்டமாற்றுதல், —நிறை, மற்றும் அவைகளைக் கண்காணித்தல், விற்பனையாகும் பொருள்களுக்கு முத்திரையிடுதல், (5) உற்பத்திப் பொருள்களைக் கண்காணித்தலும், அப்பொருளை முத்திரையிட்டு விற்றலும், (6) விற்பனை செய்யப்படும் பொருள்களின் மீது வரிவிதித்தல், வசூலித்தல்.

நாம் மேலெழுந்தவாரியாகக் கூறி வரும்போதே இத்தகைய ஏற்பாடுகளின் திறன் நமக்கு மிகவும் வியப்பை அளிக்கிறது. ஒவ்வொரு இலாக்காவின் அலுவல்களை மேலும் விரிவாக ஆராயும்போது கி. மு. 300ஆம் ஆண்டிலேயே, இத்தகைய திட்டமும், சீரிய நடை முறையிலிருந்ததென்பது எனத் தெரிய வரும்போது நம் வியப்பு அதிகரிக்கிறது. இத்தகைய நிறுவனம் அக்பர் காலத்திலுமில்லை. பண்டைய கிரேக்க நகரங்களிலும், மேலும் சிறந்த ஆட்சிமுறை இருந்ததா என்பதும் மிகவும் ஐயத்திற்குரியதேயாகும்

**போர்டு நிர் 1. கலைகள்**

அரசனது சேவைக்கென, தொழிலாளிகள் தனிமுறையில் கட்டுப்பட்டிருந்தனர். அவர்களது அவயவங்களுக்கோ அல்லது கண்களுக்கோ ஊனம் விளைவிப்பவர்களுக்கு மரணதண்டனை விதிக்கப்பெற்றது. ஊதியத்தை நிர்ணயிப்பதும், நல்ல, உண்மையான பொருள்களைப் பயன்படுத்த வேண்டுமென்று கட்டுப்படுத்துவதும், ஊதியத்திற்கேற்ப நியாயமான வேலைவாங்குவதும் போர்டுநிர் 1-ன் முக்கிய அலுவல்களாக விளங்கின. இலாகாவைச் சார்ந்த அலுவலர்களின் வேலைகளை அர்த்த சாத்திரம் விரித்துரைக்கின்றது. இந்நூலின் உதவியுடனும், பிற்காலத்தில் நடைமுறையிலிருந்த பழக்க வழக்கங்களிலிருந்தும், இவ்விஷயத்தை விளக்குவதற்கு மேலும் விரிவான மேற்கோள்கள் கொடுக்கலாம். ஆனால் இந்நூலில், அவைகளை விரித்துரைப்பது இயலாது.

**போர்டு நிர் 2: அன்னியர்**

தற்காலங்களில் கான்சல்களும் (தூதுவர்) பண்டையகிரேக்க நாடுகளில் 'புரோக்சிநோய்' என்ற அலுவலரும் கவனித்து வந்த அலுவல்களை இக் குழு கவனித்து வந்தது. இக்குழுவின் அங்கத்தினர் அன்னியருக்கு வசதியான தங்குமிடங்கள் தேடித்தர வேண்டும். மேலும், அவர்களைக் கண்காணித்து வருவதோடு, நாட்டெல்லைக்கு வெளியில் அவர்களுக்குத் துணையாகச் செல்வதும், நோயுற்றால் வைத்திய வசதி அளிப்பதும், இறந்துபட்டால் அடக்கம் செய்வதற்குரிய ஏற்பாடுகள் செய்வதும், அவர்களது உடைமைகளைப் பாதுகாத்துக் கணக்குவைத்துக் கொள்வதுமான அலுவல்களையும் அவர்கள் கவனித்து வந்தனர். இத்தகைய கட்டுப்பாட்டு விதிகளும், தனியான அலுவலர்களும் இருந்ததை நோக்கும்போது, மௌரியப்பேரரசு அன்னிய நாடுகளுடன் விடாது தொடர்பு கொண்டிருந்ததென்பது உறுதியாகின்றது. முக்கிய அலுவலின் பேரில் அன்னியர் பலர் தலைநகரத்திற்கு விஜயம் செய்தனர் என்பதும் தெளிவாகின்றது.

**போர்டு நிர் 3: ஜனன மரணக் கணக்குகள்**

வரி விதிப்பதற்கு வசதியாகவே ஜனன மரணக்கணக்கு பதிவு செய்யப்பட்டிருந்தது. தலைவரி விதிக்கப்பட்டிருந்ததென எண்ணுவதற்கு இடமுண்டு. அரசாங்கத்தினரின் வசதிக்கெனவும், இம்முறை கையாளப்பட்டிருக்கக் கூடும். அர்த்த சாத்திர நூலில் நிலையான மக்கள் தொகைக் கணக்கெடுப்பு

வற்புறுத்தப்படுகிறது. அதன் விளைவாகவே இப் பதிவுமுறை யும் ஏற்பட்டிருக்கக் கூடும். நிர்வாகத்திறன் மிக்க சந்திரகுப் தனின் அரசாங்கம், முன்னோர்களின் காலத்தில் வழக்கிலிருந்த வைகளைக் காட்டிலும் மேலும் பல சீர்திருத்தங்களைச் செய்தது.

**போர்டுகள் 4-6; வாணிபம்-சுங்கவரிகள்**

தனியாரின் வாணிபத்தை மிகநுணுக்கமாகக் கவனிப்பது இந் திய மன்னர்களின் நெடுங்காலப் பழக்கமாக இருந்தது. விற்பனை யாகும் பொருள்களின் மீது வரிவிதிப்பதும், அரசினருக்குச்சேர வேண்டிய பணத்தை உறுதிபடுத்துவதற்கென்று பொருள்களின் மீது முத்திரை குத்துவதும் வழக்கம். உற்பத்தியாளரையும் இவ் வகையான விதிகள் கட்டுப்படுத்தின. இத்தகைய விஷயங் களில் கையாளப் பெற்ற நெறிகள், ஒவ்வொரு சகாப்தத்திலும் அதிகமாக மாறிவிடவில்லை என மெகாஸ்தனீஸ் கூறுவார். டாவர்னியர் என்னும் பிரஞ்சு நாட்டு நகைவியாபாரி, வியாபார நிமித்தமாக ஏழாவது நூற்றாண்டில் இந்தியாவில் பிரயாணம் செய்தார். அவரது குறிப்புகள் மெகாஸ்தனீஸின் கூற்றை உறு திப்படுத்துகின்றனவாக அமைகின்றன. அவர் கூறுவதாவது: 'பனாரசில், இருகிட்டங்கிகளில் பருத்தி, சில்க்ஆடைகளும், பிற பொருள்களும் விற்பனைசெய்யப்பெற்றன. பொருள்களை விற்பனை செய்வோரில் பெரும்பாலானவர் அவைகளை உற்பத்தி செய்த தொழிலாளரேயாவர். இதனால், அன்னியர் பொருள்களை நேரடி யாகப் பெறலாம். பொருளை விலை கூறுவதற்குமுன், குத்தகைக் காரனிடம் (விற்பனை வரிவசூலிக்கும்) தொழிலாளிகள் அரசனின் முத்திரையைப் பருத்தி அல்லது சில்க் துணியின் மீது பொறித் துக் கொள்வதற்காகச் செல்ல வேண்டும். அவ்வாறு செய்யத் தவறுகின்றவர்களுக்கு அபராதம் விதிக்கப் பெறும். அல்லது கசையடி கொடுக்கப்படும்.

முத்திரை குத்துவதற்கு நல்ல சிவப்பு நிறத்திலுள்ள மை உபயோகிக்கப்பட்டது. அர்த்த சாத்திரம் அதை, 'அடையாள முத்திரை' (அபிஞான முத்திரை) என அழைக்கிறது. கிரேக்க நூலாசிரியர்கள் அதை 'சசிமோன்' என்று அழைக்கின்றனர்.[1] இறக்குமதி செய்பவர்களோ அல்லது வாணிகரோ, தவறான புள்ளிவிவரங்களளித்தால், அச்செய்கை திருட்டைப் போன்ற குற்றமாகும். அபராதம், அங்கங்களைக் குறைத்தல் அல்லது

1 " a'πo'ovoonuov " என்ற வார்த்தைகளை 'விளம்பர மூலம்' என்று தவறாக மக்ரிண்டில் பல முறைகள் மொழி பெயர்த்திருக்கின்றார்.

மரண தண்டனையும் அதற்கு விதிக்கப்படலாம். ஆறுவது போர்டினல் வசூலிக்கப்பெறும் முனிசிபல் வரியைச்செலுத்தாது ஏமாற்றுபவர்களுக்கு, முன்னர் குறித்ததுபோல மரணதண்டனையும் விதிக்கலாம்.

உற்பத்தியாகும் பொருள்களின் மீதும், விற்பனையாகும் பொருள்களின் மீதும் விதிக்கப்படும் வரிகள் எவ்வாறு வசூலிக்கப்பட்டன என்பதை அர்த்தசாத்திரப் விரித்துரைக்கிறது. நந்த குல மன்னர் வரலாற்றில், கி. மு. நாலாவது நூற்றாண்டில் நிலவிய வாணிப நிலையைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

**வைசிராய்கள்**

அர்த்தசாத்திர நூலின் கருத்துக்கிணங்கச்சாதாரணப் பேரரசு ஒன்றுநான்கு மாகாணங்களாகப்பிரிக்கப் பெற்று,ஒவ்வொன்றும் ஒரு வைசிராயின் (ஸ்தானிகர்) ஆட்சியில் அடங்கவேண்டுமென்று முன்பு குறித்தோம். 'இந்துகுஷ்' தொடரிலிருந்து குறைந்த அளவில் நர்மதை ஆறு வரையிலும் பரந்திருந்த சந்திரகுப்தனின் சாம்ராச்சியத்தைப்பிரித்து ஆள்வதற்குத்தேவையான வைசிராய்களின் எண்ணிக்கையைக்கணக்கிட இயலாது. மேலும் பரந்திருந்த அசோகனின் சாம்ராச்சியத்தை ஆள்வதற்கு நான்கு வைசிராய்களே இருந்தனர் என்பது கவனத்திற்குரியது. அவனது ஆட்சிவரலாற்றை விரித்துரைக்கும் போது இதைப்பற்றிய மேலும் சில விவரங்களைக் கூறுவோம்.

**இலாகாக்கள்**

சட்டதிட்டங்களுக்கிணங்கி இயங்கிய இந்து சாம்ராச்சியமொன்றில், இலாகாக்களின் தலைவர்களின் பல்வேறு அலுவல்களை அர்த்தசாத்திரம் விரிவாகக் கூறுகின்றது. முப்பது இலாகாக்கள் இருந்தனவென்று அந்நூல் கூறுகின்றது. இவ்விலாகாப்பிரிவினை, மற்றும் அவைகளுக்குத் தகுந்த வேலையளிப்பது ஆகிய யாவும் சந்திரகுப்தனல் நேரில் கவனிக்கப் பெற்றன என கிரேக்க நூல்கள் அறிவிக்கின்றன. சந்தைகள், ஆறுகள் பராமரிப்பு, வாய்க்கால் பாசனம், பொது நலப்பணி, மற்றும் வரவு, செலவுக் கணக்கு ஆகியவேலைகளைக்கவனிப்பதற்கு அலுவலர்கள் அமர்த்தப் பட்டிருந்தனர். இவர்கள் நீங்கலாக வேடர்களின் மேற்பார்வையாளர், மற்றும் மரம்அறுப்போர், கொல்லர்,தச்சர், சுரங்க வேலைசெய்வோர் ஆகியவர்களின் தலைவர்களுமிருந்தனர். அர்த்தசாத்திர நூலிலிருந்து கணக்கிலடங்காத குறிப்புகள் பெற

லாம். இங்கு அவகாசமில்லாமையில் ஒரு சில தலைப்புகளையே குறிப்பிட்டுள்ளோம்.

**அதிகாரிகளிடையே இலஞ்சம்**

தண்டனைவிதித்தொகுப்புகள் மிகவும் கடுமையாக இருந்த போதிலும், அலுவல்களுக்குக்கடுமையான தண்டனைகள் அவ்வப் போது விதிக்கப் பெற்ற போதிலும், பொதுப்பணித் துறையில் இலஞ்ச ஊழல் இருந்தது. அர்த்தசாத்திர நூலாசிரியர் தம் கருத்தைக் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்:

'நாக்கின் நுனியில் இடம் பெறும் தேன் சொட்டு அல்லது விஷத்துளியைச் சுவைக்காமல் விடுவது எத்துணை கஷ்டமோ, அதைப்போலவே அரசாங்க அலுவலனுக்கு மன்னனின் வருமானத்தில் ஒரு சிறு பகுதியாவது திருடுவதென்பது தவிர்க்க முடியாதது. நீரினடியில் நீந்திச் செல்லும் மீன், தண்ணீர் குடிக்கின்றதா இல்லையா என்பதைக் கண்டறிவது எத்துணைக் கஷ்டமோ அதைப்பேலேவே, நாட்டின் வேலைகளில் ஈடுபடும் அரசாங்க ஊழியர் எப்போது பணத்தைக் கையாளுகின்றனர் எனத்தீர்மானிப்பதும் மிகக்கடினமான வேலையாகும். 'ஆகாயத்'தில், உயரப்பறக்கும் பறவைகளின் மார்க்கத்தைக் கண்டுகொள்வது சுலபமான வேலையாகும்; ஆனால், அரசாங்க அலுவலரின் இரசியங்களைக்காணுவது மிகவும் கடினமான வேலையே யாகும்.'

அதே நூலாசிரியர் மேலும் குறிப்பதாவது, பணத்தைக் கையாளுவதில் தோராயமாக நாற்பது முறைகள் இருக்கின்றன; முன்னதாகப் பெரும் தொகையை, சில காலத்திற்குப்பின் வரவு வைப்பது, பின்னால் பெறப்போவதை முன்கூட்டியே எழுதிவைப்பது, வசூலிக்க வேண்டியவற்றை வசூலிக்காமல் விடுவது' என்ற இது போன்ற முழுப்பட்டியல் தரப்பட்டுள்ளது.

கையாடல்களைக் கண்டு அறிவிப்பவர்களுக்குத்தகுந்த வெகுமதிகள் அளிக்கப்படுமென அறிவிக்கப்பட்டது. தகவல் கூறுபவன், தான் கூறுபவற்றை நிரூபிக்கத் தவறினால், கடுமையான தண்டனை அனுபவிக்க நேரிடும். அவனுக்கு மரணதண்டனையும் விதிக்கப்படலாம்.

**ஒற்றர்படை**

படைபலம் நீங்கலாக இரகசிய ஒற்றர்படையின் துணை அரசாங்கத்தின் இன்றியமையாத ஊன்று கோலாக இருந்தது. இர

கசிய ஒற்றர்களையும் துப்பறிவோர்களையும் அரசன் அமர்த்தியி ருந்தான். மாறுவேடங்களணிந்து அவர்கள் நாடெங்கிலும் சுற் றித் திரிவது வழக்கம். இவர்களைக் கட்டுப்படுத்து வதற்கென்று இரகசிய போலீஸ் இலாகாவொன்று இருந்தது. சங்கேத எழுத்துமுறை கடைபிடிக்கப்பட்டது. செய்தி எடுத்துச் செல் லும் புருக்களும் உபயோகப்படுத்தப் பெற்றன. அரசாங்க இலாகா ஒவ்வொன்றிற்கும் இரகசிய ஒற்றர்படையின் உதவி தேவை என்பது அர்த்தசாத்திர நூல் முழுவதும் வற்புறுத்தப் பட்டிருக்கிறது. நேர்மையற்ற நெறிகளையும் இதற்கெனக் கையாள லாம்-அரசினரின் தன்மைக்கென கடைப்பிடிக்கப்படும் போது, அவைகள் சீரிய நெறிகளாகவே மாறிவிடுகின்றன. சாணக்கிய னின் நூல்களில் கிடைக்கும் குறிப்புகளைக் கிரேக்க நூலாசிரி யரும் உறுதிப்படுத்துகின்றனர். மாகாணத் தலைநகரங்களிலுள்ள செய்தி நிருபர்கள், அவ்வப்போது இரகசிய உளவுச் செய்திகளை அரசினருக்குஅறிவித்து வந்தனர். தாசிகளிடமிருந்து கிடைக்கும் செய்திகளையும் உபயோகமற்றது எனத் தள்ளிவிடுவதில்லை. அமைச்சர்களின் செயல்களைக் கவனிப்பதற்கு இரகசிய ஒற்றர் களை ஏற்பாடுசெய்தபின் நகரமாந்தர் மற்றும்கிராமவாசிகளையும் கண்காணிப்பதற்கு மன்னன் செல்லவேண்டுமென நமக்கு அறி விக்கப்படுகிறது. நாம் பல தடவைகளில் குறிப்பிட்டுள்ள நாடக நூல், இரகசியப்படை நிறுவனம் இயங்கிய வழியை நன்கு எடுத் துக் காட்டுகிறது. இவ்விலாகா, அரசியல் காரணங்களுக்காக மட் டிலும் அமைந்த ஒரு நிறுவன மல்ல. கிரிமினல் குற்றங்களில் துப்புத் துலக்குகின்ற பணியையும் அது புரிந்து வந்தது. மன் னரது புகழையும் சிறப்பையும் விளக்கும் செய்திகளை மக்களிடை யில் பரப்புவதும் அரசனிடத்தில் மக்களுக்கு அதிக விசுவாசம் ஏற்படுமாறு செய்வதும் இவை மேற்கொண்ட பணிகளேயாம்.

### நிலச் சொத்துரிமை

பண்டைய இந்தியாவில் தனியாருக்கு நிலம் வைத்துக் கொள்ளும் உரிமை இருந்ததா? என்னும் கேள்வி விவாதத் திற்கு இடமுள்ளதாக இருந்து வருகிறது. 'சொத்து' என்னும் சொல்லிற்குச் சரியான பொருள் விளங்காமையால் இக்கேள் விக்கு உற்ற விடை கிடைப்பதில்லை. தனியாரிடம் நிலமிருந்து வந்தது என்னும் கருத்தை வற்புறுத்தும் சாரார், இச்சொல்லை ஒரு குறிப்பிட்ட பொருள்பட உபயோகித்து வருகின்றனர். அக் கருத்தை மறுப்பவர் மாறுபட்ட பொருளுரைக்கின்றனர். நாயர் களின் தாய்நாடான மலபாரிலும், குடகுப் பகுதியிலும், துளுப் பிரதேசத்திலும் நிலத்தில் சொத்துரிமை இருந்து வந்ததெனக்

தெளிவாகத் தெரிய வருகிறது. இந்நிலக்கிழார்களை சற்றேறக்குறைய இங்கிலாந்து நாட்டு நிலச் சொந்தக்காரருடன் ஒப்பிடலாகும். மேலைக் கடற்கரையின் ஆதிகுடிகளாக இவர்களை 'டுபாய்' என்பவர் கருதுகின்ருர். இந்தியாவிலுள்ள மாகாணங்களில் மலபாரில் மட்டிலுமே இன்றுவரை நிலஉரிமை காப்பாற்றப்பட்டு வருவதாக அவர் கருத்தறிவிக்கிருர். மற்றெங்கிலும் நிலம் மன்னர்க்கே சொந்தமாகும். அதைப் பயிரிடுபவன் ஒரு தொழிலாளி என்ற நிலையே இருந்தது.

இவ்வாறு கூறுவதுடன் தனது கருத்தை மேலும் விரிவாக விளக்குவதற்கு அவர் முற்படுகிருர்.[1]

'எங்கும் நிலம் மன்னனுக்கே உரிமையானது' என்னும் டுபாயின் பொதுவிதி, வடக்கு, மேற்கு இந்தியாவில் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. பேடன் பவல் நற்சான்று வழங்குவதைப்போல, சுதேச சமஸ்தானங்களிலும் சமீபகாலம் வரை இப்பழக்கமிருந்து வந்தது.

அர்த்த சாத்திர நூலின் உரையாசிரியருக்கு இவ்விஷயத்தைப்பற்றி ஐயம் எதுவும் கூறுவதில்லை. (பகுதி II, அதிகாரம் 24) 'சாத்திர அறிவு பெற்ற யாவருக்கும், நிலத்திற்கும் நீருக்கும் மன்னரே சொந்தக் காரர்' என்பது நன்ருகத் தெரியும். 'இவ்விரண்டும் நீங்கலாக மற்றப்பொருள்களை மக்கள் உடைமையாக்கிக் கொள்ளலாம்' என்று அவ்வுரையாசிரியர் அறிவிக்கின்ருர். பொதுவில், நூலாசிரியர் இக் கருத்தை ஏற்கிருர். பயிரிடுவதற்கான நிலத்தை வரி செலுத்துவோருக்கு (கரதர்) அவரது ஆயுட்காலம் வரை (ஏகபுருஷிகானி) வைத்திருப்பதற்கு உரிமையளிக்கலாம்; 'பயிரிடத்தவறுபவர்களை நீக்கிவிட்டுப் பிறருக்கு அந்நிலத்தை வழங்கலாம்' என்ற இதுபோன்ற அறிவுரைகளைப் பகுதி II அதிகாரம் 1-ல் நாம் காணலாம். எல்லாவகை நிலங்களும் அரசாங்கத்திற்கே சொந்தமானவை என்ற கருத்தை நூலாசிரியன் கொண்டிருக்கவேண்டு மென்பது உறுதியாகின்றது. இஸ்லாமிய அரசகுலத்தினர் உட்பட பல இந்திய அரசாங்கங்கள், நிலவரி மற்றும் தீர்வைஎன்ற பெயர்களில் விளைபொருள்களில் பெரும் பகுதியை உழவனிடமிருந்து பெற்றுக்கொண்டு, உழவனுக்குத் தேவையான உணவுப் பொருள்களை

1 ஹிந்துக்களின் பழக்கவழக்கங்கள், முதலியன, பதிப்பு போசாம்ப்– மூன்ருவது பதிப்பு (1906) பக். 56-திருவிதாங்கூர் சமஸ்தான சஞ்சிகை, திருவனந்தபுரம் 1906- மலபாரில் வழங்கிவரும் சொத்துகளைப் பற்றிய பிறப்புரிமை-அடிப்படைகளுக்கும் விதிகளுக்கும் அந் நூலைப் பார்க்க.

மட்டிலும் அவனுக்கு அளித்து வந்திருக்கின்றன. ஏழ்மையே உருவான உழவனுக்கும் அரசாங்கத்திற்கும் மத்தியில்எந்தவகை யான இடையீடும் இருந்ததில்லை. அரசாங்க வரிகள் முழுவதை யும் தடையின்றிச் செலுத்துகின்ற உழவனின் வழக்கமான நில உடைமை பொதுவில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.ஆனால் நிலத்தின் மீது அவனுக்குள்ள உரிமை வறையறுத்துக் கூறப்படவில்லை. அதைப் பாதுகாப்பதற்கென்று தனிச்சட்டங்களும் இல்லை. எனவே, நிலத்தின் மீதுள்ள சொத்துரிமையிலிருந்து மாறுபட்ட நிலையே இருந்துவந்தது. இன்றும் பம்பாய் மாகாணத்தில் நிலத்தைப் பயிரிடுபவன் அல்லது 'உழவனுக்கும்' அரசினருக்கு மிடையே நேரடியான தொடர்பிருந்து வருகிறது. நிலத்தின் மீது அரசினருக்குள்ள உரிமை அங்குச் சட்ட பூர்வமாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

வங்காளம், உத்திரப்பிரதேசம் ஆகிய பகுதிகளில் வரிகளை வசூலித்துக் கொள்ளும் உரிமையுடன் கூடிய ஒரு வகுப்பினரைப் பிரிட்டிஷ் ஆட்சியாளர் உற்பத்தி செய்தனர். அவர்களுக்களிக் கப்பட்டுள்ள சலுகைகள் உண்மையில் அவர்களை நில உரிமை யாளராக்குகின்றன. இவ்விஷயத்தில் பிரிட்டிஷ் ஆட்சியாளர் சிறிது எல்லை மீறிச் சென்றுள்ளனர். நிலவரியைக் கெடுத் தவறாது செலுத்த வேண்டுமெனக் கட்டாயப்படுத்துவதற்கு, நிலத்தின்மீது அரசினருக்குள்ள உரிமை என்றுமே துணைப்பல மாக இருந்து வந்திருக்கிறது. பழங்கால முதல் விளைபொருள் களுக்குப் பதிலாகச் சமமதிப்புள்ள பணத்தைப்பெற்றுக்கொள் ளும் உரிமை இந்திய அரசினர் ஒவ்வொருவருக்கும் இருந்து வந்திருக்கிறது. 'நில உரிமை' எனப்படுவது, பழங்காலத்திலும் தற்போதும், குத்தகை உரிமை என்று பொருள் படவும் உழவரை அமர்த்திப் பயிரிட்டுக்கொள்ளும் உரிமை என்று பொருள் படவும் வழங்கி வருகிறது. இத்தகைய உரிமைகள் சட்டபூர்வ மாக எடுத்துரைக்கப் படவில்லையென்றாலும் நிரந்தரமானவை. பத்தொன்பதாவது நூற்றாண்டின் இடைக்காலம் வரையிலும் இவைகள் தீவிரமாக உறுதிபெறவில்லை.

**நிலவரி**

இந்திய அரசாங்கங்கள் பெற்று வந்த வருமானத்தில் பெரும் பகுதி நிலவரியின் மூலமாகவே கிடைத்து வந்திருக்கிறது. நில உரிமை அரசினரைச் சார்ந்தது என்ற முறையில் இவ்வருமா னத்தை நிலத்தின் உபயோகத்திற்கான குத்தகைப்பணம் என்று

கருதலாகுமேயன்றி, வரிப்பணம் என்று கருதுவது முற்றிலும் பொருத்தமுடையதன்று. விளைபொருள்களில் நான்கில் ஒரு பகுதியை இவ்வாறு பெறலாகுமென்று அர்த்தசாத்திர நூல் ஒப்புக்கொள்கிறது. ஆறில் ஒரு பகுதியே அரசினரைச் சேர்ந்த தென்றும்; தரங் குறைந்த நிலங்களுக்கு மேலும் சலுகை அளிக்க வேண்டுமென்றும் சாத்திரநூல்கள் எடுத்துரைக்கின்றன. மூன்றில் ஒரு பங்கை அக்பரும், விளைபொருளில் சரிபாதியைக் காச்மீர சுல்தான்களும் பெற்றுவந்தனர். விளைபொருளில் அரசாங்கம் வரியாகப் பெற்ற சதவிகிதத்தை அதிகமாகப் பாராட்ட வேண்டுவதில்லை. வருமானத்தில் துண்டு விழும் காலங்களிலெல்லாம் பல வகையான செஸ் (மேல்வரி) களையும் அவ்வப்போது மக்களை வற்புறுத்திக் கட்டாய நன்கொடைகளை யும் பெற்று அரசாங்கம் ஈடுசெய்து கொள்ளும். தன் வயிற்றை யும் தனது குடும்பத்தினரின் வயிற்றையும் கழுவுவதற்கும், தேவையான விதை முதலியவைகளை வாங்குவதற்கும் போது மான வருமானம் கிடைத்தால் அதைத் தனது பெரும் பாக்கிய மென்று உழவன் கருதிக்கொள்ள வேண்டிய நிலைமையிருந்தது. தனிப்பட்ட முறையிலுள்ள நிலக்கிழாருக்கு, குத்தகைப் பணம் செலுத்துவதற்கும் வருமானம் கிடைப்பது அரிதாயிருந்தது.

ஆங்கிலோ இந்திய அரசியல் அகராதியில்'செட்டில்மெண்ட்' என்று வழங்கிய சொல், பாரசீக மொழியில் 'பந்தோ பஸ்த்' என்று வழங்கிய சொல்லின் மொழிபெயர்ப்பேயாகும். அரசின ருக்குச் சேர வேண்டிய நிலவரி அல்லது குத்தகைப் பணத்தை மதிப்பீடு செய்யும் முறை முழுவதும் இச்சொல் ஒன்று குறித்தது. இப் பணியை நிறைவேற்றுகின்ற அதிகாரியும் 'செட்டில்மெண்ட் ஆபீசர்' என அழைக்கப்படலாயினர். மௌரியர் ஆட்சியில் வழக்கிலிருந்த செட்டில்மெண்டுகளின் தன்மையைச் சான்றுகள் விளக்கமாகக் கூறவில்லை. அரசினருக்குரிமையான தொகை நிரந்தரமாக மதிப்பீடு செய்யப்பெற்றிருந்ததா அல்லது ஆண்டு தோறும் மாறுதலடைந்து வந்ததா என்ற செய்திகளை நாம் அறியக்கூடவில்லை.

**நீர்ப்பாசனம்**

இந்தியாவின் பல பகுதிகளிலும் நன்முறையில் விவசாயம் நடைபெறுவதற்கு நீர்ப்பாசன வசதி மிகவும் தேவையாகும். அரசாங்கத்தினரின் வருமானமும் இதைப் பொறுத்தேயுள்ளது. எனவே, இவ்வடிப்படைத் தேவையை நன்கு கவனித்துக்கொள் வதற்கென்று பல அலுவலர்களைக் கொண்ட தனிப்பட்ட இலாகா

ஒன்று இயங்கி வந்தது. வாய்க்கால்கள் திட்டமிட்டு வெட்டப் பெற்று, அவைகளின் வழியாகப் பாசனத்திற்குத் தேவையான நீர் மதகுகளின் மூலம் அளிக்கப்பட்டு வந்தது. தற்போதுள்ளதைப் போலப் பல வகையான நீர்ப்பாசன வரிகள் விதிக்கப் பெற்றிருந்தன.

**சாலைகள்**

நெடுஞ்சாலைகளைச் செவ்வனே வைப்பதற்கென்ற இலாகா ஒன்றிருந்தது. அவைகளில் மைல்களைக் குறிப்பதற்கென்று கல்கள் நாட்டப்பட்டிருந்தன. முகலாயர்களால் 'காஸ்மினர்கள்' என்றழைக்கப்பட்ட இவை, பத்து 'ஸ்ததியங்களுக்கு' ஒன்று வீதம் நாட்டப் பெற்றிருந்தன. பத்து 'ஸ்ததியம்' (Stadia) என்பது ஆங்கில அளவு முறைப்படி $2,022\frac{1}{2}$ கஜங்களும், இந்திய அளவு முறைப்படி அரை கோஸும் ஆகும். முகலாய மன்னர்கள் கோஸுக்கு ஒரு கல் வீதம் அமைப்பதுடன் திருப்தியடைந்தனர். தக்ஷசீலம், வடமேற்கு எல்லை ஆகிய பகுதிகளைத் தலைநகரமான பாடலிபுரத்துடன் இணைக்கும் பெரு வழியொன்றிருந்தது. அது தற்காலத்தில் டல்ஹௌசியால் அமைக்கப் பெற்ற 'கிராண்ட் டிரங் ரோட்' என்ற பெயரில் வழங்கி வருகிறது. சீரான பெரு வழிகளை அமைப்பது மன்னரின் கடமைகளில் ஒன்றாகும் என அர்த்த சாத்திர நூல் கூறுகிறது. ஒவ்வொரு நெடுஞ்சாலைக்கும் உரிய தேவையான அளவுகளை அர்த்த சாத்திர நூல் கூறுகிறது.

**மது வகைகள்**

மது அருந்துவதும், பான வகைகளில் வியாபாரமும், அரசாங்கத்திற்கு வருமானம் தேடித் தருவதாக மிகவும் வளர்க்கப் பட்டன. வாணிபம் முழுவதையும் தணிக்கை செய்வதற்கு மேற்பார்வையாளர் ஒருவர் இருந்தார். வாணிகத்தைத் தணிக்கை செய்வது, தேவையான லைசென்சுகளை வழங்குவது, அரசினருக்குரிய வரிகளை வசூலிப்பது ஆகியவை இவர் ஏற்ற பணிகளில் மிக முக்கியமானவையாகும். பொதுநல விடுதிகள் அல்லது கள்ளுக் கடைகள் அடுத்தடுத்து அமைக்கப்படவில்லை. விடுதிகளில் அருந்தினாலும் அல்லது வெளியே எடுத்துச் சென்று அருந்தினாலும், மதுவின் அளவு கட்டுப்பாட்டிற்கு அடங்கியதாக இருந்தது. கால நிலைகளுக்கேற்ப, ஆசனங்கள், படுக்கைகள், வாசனைத் திரவியங்கள், பூமாலைகள், தண்ணீர் ஆகியவைகளை அளித்து, நிலையங்கள் கவர்ச்சி மிக்கவையாக அமைக்கப் பெற்றிருந்தன. முக்கியமாக ஆறு வகையான பானங்களை அர்த்தசாத்திரம் குறிக்கிறது. திருவிழாக்கள், சந்தைகள், புனித யாத்திரைகள் ஆகிய

வைகள் நிகழும் போது, மது வகைகளைத் தயாரிப்பதற்கென நான்கு நாட்களுக்கு விசேஷ லைசென்சுகள் வழங்கப்பட்டன.

**பொதுவான சில கருத்துகள்**

சந்திரகுப்த மௌரியன், மற்றும் அவனது முன்னோர்கள், ஆகியோரமைத்த நிறுவனங்களைக் குறித்த முழு விவரங்களையும் இச்சிறு நூலில் எடுத்துரைப்பதென்பது இயலாத காரியம். கி.மு. நான்காவது நூற்றாண்டின் இறுதியில் வட இந்தியாவில் வழங்கிய நாகரிகத்தின் தன்மையை தற்கால மாணவன் ஒருவன் அறிந்து கொள்வதற்கு நாம் மேலே கூறியிருக்கும் சான்றுகள் போதுமானவையாக இருக்கலாம். மிகப் பழமையான அக்காலத்திலேயே, இத்துணைச் சிறப்பு வாய்ந்த அரசியல் நிறுவனம் இருந்ததென்பதை அறிந்து வாசகர்கள் பலர் வியப்பெய்தலாம். அவைகள் தற்கால நிறுவனங்களுக்கு முன்னோடிகளாக விளங்குகின்றன. அரசியலைப் பற்றி அர்த்த சாத்திர நூலில் கண்டிருக்கும் கபடமான கருத்துகள், வெறுப்பிற்குரிய ஒற்றர் படை ஆகியவை, அரசியலமைப்பின் பிற்போக்கு சக்திகளாக விளங்குகின்றன. நூல்களின் குறுகிய மனப்பான்மையின் காரணமாகவே இவை எழுந்தன. மௌரிய அரசியலின் சிறப்பைக் குன்றச் செய்யும் கரும்புள்ளிகளாகவும் இவை இருந்து வருகின்றன. அத்தகைய ஈவிரக்கமற்ற அமைச்சன் ஒருவனை உருவாக்க வேண்டுமென்பது அர்த்த சாத்திர நூலாசிரியன் கௌதில்யன் அல்லது சாணக்கியனின் நோக்கமன்று. அவனது காலத்திற்கு முன்பாகவே வழக்கிலிருந்த பல நூல்கள் இக் கருத்துகளையே வலியுறுத்தியிருக்கின்றன. அர்த்த சாத்திர நூலாசிரியனும், பழமையான நூல்களிலுள்ள கருத்துகளையே கையாண்டிருக்கிறான். ஒருசில விளக்கங்களில் அவன் முன்னோடிகளிடமிருந்து மாறுபட்டிருப்பினும், பொதுவில் அக் கருத்துகளையே அவனும் ஏற்றுள்ளான் என்பது தெளிவாகும். அர்த்த சாத்திர நூலாசிரியனின் கொள்கைகள் வழக்கொழிந்தன என்பதை கிறிஸ்துவிக்குப் பின் ஏழாவது நூற்றாண்டில் பாணன் என்னும் நாடகாசிரியன் அழுத்தமாக எடுத்துரைக்கிறான். அவன் நீங்கலாக அக் கருத்தை வலியுறுத்தும் மற்றும் பல ஆசிரியரும் உண்டு. பிற ஆசிரியர்களின் நூல்களிலிருந்து ஒரே கருத்துடைய பல வாசகங்களை எடுத்தளிப்பது சற்றுக் கடினமான முயற்சியாக உள்ளது. அர்த்த சாத்திர நூலைப்போலன்றி, தர்ம சாத்திரங்களின் கருத்துகள் மனித உள்ளப்பாங்குடன் அமைந்திருக்கின்றன. வடமொழியிலாயினும் அல்லது இந்தியில் ஆயினும் எடுத்துரைக்கப்படும் ராம கதை, உயர்ந்த உள்ளங் கொண்ட இளவ

லொருவனைப் பற்றியதேயாகும். அர்த்த சாத்திர நூலாசிரியனைக் காமந்தகன் 'பிரமனைப் போன்ற (கடவுள்) மதியுடையவன்' என்றும், தண்டின் (Dandin) என்பவன் அவனை 'மதிப்பிற்குரிய ஆசிரியன்' என்றும் சித்திரித்துள்ளனர்.

அர்த்த சாத்திரம் போன்ற நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள குறுமதியுடைய கொள்கைகள் எவ்வாறு உருப்பெற்றுப் பிரபலமடைந்தன? அவ்வமைச்சன் தான் மூன்று வேதங்களையும் போற்றுவதாகவும், ஆரியரின் பழக்க வழக்கங்களை ஒட்டியே எழுதுவதாகவும் குறிப்பிடுகின்றான். அனுபவபூர்வமான அவனது மதியுரைகளுக்கு, வேத அடிப்படை காணவேண்டுமெனில், நான்காவது தொகுதியான அதர்வ வேதம் ஒன்றிலேயே காணலாகும். இவ்வேதம் மந்திரங்களுக்கும் தந்திரங்களுக்கும் மிகவும் பெயர் பெற்றது. நான் எழுப்பியிருக்கின்ற கேள்வி பல் வகையான விநோத யூகங்களுக்கு இடமளிக்கின்றது.[1]

### மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

அர்த்த சாத்திர நூலின் ஒரே ஆங்கில மொழிபெயர்ப்பு ஆர். சாமா சாஸ்திரி (மூன்றும் பதிப்பு, மைசூர், 1929) என்பவரால் வெளியிடப்பட்டிருக்கிறது.

ஜே. ஜே. மேயர் என்னும் ஜெர்மானியரின் முழு விளக்கத்துடன் கூடிய மொழி பெயர்ப்பு (ஹனோவர் 1926) மிகச் சிறந்தது.

ஓ. ஸ்டீன் (மெகாஸ்தனீசும் — கௌதில்யனும் – வியன்னா, 1922). மற்றும்,

பி. பிரிலோயர் (கௌதில்ய ஸ்டூடியன் 3 வால்யூம்கள், பான் 1927–34) ஆகியோரின் பயன் மிக்க நூல்களின் ஆங்கில மொழி

[1] 'மூன்று வேதங்கள்' என்பதில் சாமம், ரிக், யஜுர் ஆகியவை அடங்குகின்றன. வரிசைப் படுத்திக் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. 'நான்குகலைகள்' என்று வற்புறுத்திப்பேசும் போது, 'அன்விக்ஷாகி' அல்லது தத்துவத்தை முதன்மையாக வைத்தே நூலாசிரியர் பேசுகின்றார். (இதில் சாங்கியம், யோகம், லோகாயதம் ஆகிய மூன்றும் அடங்குகின்றன). 'மூன்று வேதங்கள்' என்ற தொகுதிக்கு இரண்டாவது இடம் வழங்கப் பட்டிருக்கிறது. 'வர்த்தம்' என்ற மூன்றாவது கலை, உழவு, கால்நடைப் பராமரிப்பு, வாணிபம் ஆகிய நடைமுறைகளைக் கூறுகின்றது. 'அர்த்த சாத்திரம் அல்லது 'தண்டநீதி' எனப்படும் நான்காவது அவனது நூலின் பொது விஷயமாக இருக்கிறது. 'அர்த்தசாத்திரம்' என்ற இந் நூலில், 'புவியை அடைவதற்கும், பரிபாலிப்பதற்கும் தேவையான, புராதன குருமார்களின் போதனைகள் யாவும், அத்தகைய அர்த்தசாத்திர நூல்களில் காணப்படும் கருத்துகள் யாவும் தொகுத்து வெளியிடப் பெற்றுள்ளன.' பகுதி I, அதிகாரங்கள் 1-4, இறுதி அதிகாரத்தையும் பார்க்கவும்.

பெயர்ப்பு இல்லாதது நம் துரதிர்ஷ்டமேயாகும். அந் நூல் வெளியான பின்பு இந்திய நூலாசிரியர் சிலர் அது கௌதில்ய ரால் எழுதப் பெற்றதேயாகும் என்பதை மெய்ப்பிக்க, மிகவும் முயற்சி செய்து வருகின்றனர். இம் முயற்சி போதிய பலனளிக்க வில்லை. ஐரோப்பாவில் இக்கருத்தை முற்றிலும் மறுக்கின்றனர்

சிக்கல் நிறைந்த இக்கேள்விக்கு விடை காண்பதற்கு 'பண்டைய இந்தியாவில் அரசு' (அலகபாத் 1928) என்னும் பெனி பிரசாத் எழுதியுள்ள நூலில் காணப்படும் நூலடைவையும், பக். 251 n-1. அதனுடன்,

'ஆஷ்தோஷ் முகர்ஜி நினைவு மலர்' (Pt. I, பாட்னு 1926) பக். 8–22 லுள்ள கீத் என்பவரின் கட்டுரையையும் பார்க்க.

'மெகாஸ்தனீஸ், ஆரையன் ஆகியோர் வர்ணிக்கும் பண்டைய இந்தியா' ஆக்கம் ஜே. டபிள்யூ. மக்ரிண்டல் (லண்டன் 1877)—மெகாஸ்தனீசின் கருத்துகள் சிலவற்றைச் சேகரித்து மொழிபெயர்த்துள்ளார்.

சந்திரகுப்தன், மற்றும் மௌரியரின் ஆட்சியைத் தெரிந்து கொள்வதற்குத் துணையாக ஆர். கே. முகர்ஜியின் 'சந்திரகுப்த மௌரியனும் அவனது ஆட்சிக் காலமும்' (சென்னை 1943). மற்றும்,

வி. ஆர். ஆர். தீக்ஷிதரவர்களின் 'மௌரிய அரசியல்' (சென்னை, 1932) என்ற நூல்கள் துணை புரிகின்றன.

அர்த்த சாத்திர நூலைக் குறித்து நாம் எழுப்பியுள்ள ஐயங்களைக் கருத்தில் கொண்டு இம் மேற்கோள் நூல்களைச் சற்று எச்சரிக்கையுடன் கையாள வேண்டும்.

பண்டைய இந்திய அரசியல் நிறுவனங்கள் மற்றும் கருத்துகளைப் பற்றிப் பல நூல்கள் எழுதப் பெற்றுள்ளன. அவைகளில், பெனி பிரசாத் என்பவரால் எழுதப் பெற்ற நூலொன்றை நாம் மேலே குறித்துள்ளோம். 'பண்டைய இந்தியரின் அரசைப் பற்றிய கருத்து' (அலகாபாத் 1927) என்ற சிறந்த நூலொன்றையும் அவர் எழுதியுள்ளார்.

யு. என். கோஷல் என்பவரின் நூல்கள்:

'இந்திய அரசியல் கருத்துகளின் வரலாறு', லண்டன் 1923.

'இந்து இராச்சியங்களின் வரவு செலவுத் திட்டம்', கல்கத்தா 1929.

'பண்டைய இந்தியக் குடியானவர் முறை' கல்கத்தா 1930.

'இந்துக்களின் பொது வாழ்க்கை வரலாறு'- வால்யூம் 1, கல்கத்தா 1943 & மற்றவை. மிகவும் கவனமாகவும் விரிவாகவும் எழுதப் பெற்றுள்ளன.

இதுவரை வெளியாகியுள்ள நூல்களில் அதீந்திரநாத்போஸ் என்பவர் எழுதியுள்ள 'வட இந்தியாவின் கிராமிய சமுதாயப் பொருளாதாரம்' (கி.மு. 600—கி.பி. 200) என்ற நூல் பொருளா தார நிலையை நன்கு விவரிக்கிறது.

'இந்தியாவின் ஆதி வரலாறு' (1923) என்ற நூலில் தரப்பட்டுள்ள மேற்கோள் நூலடைவு இன்றும் பயனுள்ளதாகக் காணப் படும்.

## 2. அசோக மௌரியனும் அவனது நிறுவனங்களும்; பௌத்த சமயம் பரவுதல்; மௌரிய வமிசம் முடிவுறுதல்; மௌரியரின் பின் வந்தவர்கள்.

### அசோகன் அரசேற்றல்

கி. மு. 273ஆம் ஆண்டில் பிந்துசாரனின் ஆட்சி முடிந்ததும் அவனது பிள்ளைகளில் ஒருவனான 'அசோக வர்த்தனன்' தொடர்ந்து அரசுகட்டிலேறினான். அசோகன் என்றே இவனை யாவரும் அறிவர். தகப்பனால் அரசேற்பதற்கென இவன் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்க வேண்டும். சிறிது காலம் அரசு செலுத்துவதில் இவன் துணை செய்திருக்கலாம், அல்லது 'உபராஜன்' என்ற முறையிலும் பணியாற்றியிருக்கக்கூடும். வடமேற்கிலுள்ள தட்சசீலத்திலும், பின் மாளவப் பகுதியிலுள்ள உஜ்ஜயினியிலும் சிறிது காலம் வைசிராயாக இவன் பணியாற்றினான் என மரபுச் செய்திகள் உரைக்கின்றன. இவனது முடிசூட்டுவிழா, ஒரு நான்கு ஆண்டு காலத்திற்குப் பின்னரே, அதாவது கி. மு. 269 ஆம் ஆண்டிலேயே நடைபெற்றது. இவன் அரசுரிமை ஏற்பதில் எதிர்ப்பிருந்ததென்னும் மரபுச் செய்தியை இச்சம்பவம் உறுதிப்படுத்துவதாக அமைகிறது. 'அசோகன்' என்ற பெயரில் கற்பனைக் கதைகள் ஏராளமாக உண்டு. அவைகளில் ஒன்று கூறுவதைப்போல, அசோகனை அவனது மூத்த சகோதரனான 'சுசீமன்' என்பவனே எதிர்த்திருக்கக் கூடும். 'அசோகன்' அரசேற்பதற்கு முன்னதாக, தொண்ணூற்றெட்டு அல்லது தொண்ணூற்றொன்பது சகோதரர்களைக் கொன்றான் என சிங்களத்திலுள்ள சமயத் துறவிகள் கூறுவர். இக்கூற்று ஆதாரமற்றதும், பொய்யானதுமாகும். அரசேற்ற பின்னரும் பன்னெடுங்காலம், சகோதரர்களையும், சகோதரிகளையும், அசோகன் மிகவும் பேணிவந்தான் எனக் கல்வெட்டுகள் ஐயமற உணர்த்துகின்றன. அசோகனின் அசாதாரணக் கொடுமைகளை எடுத்துக்கூறும் கற்பனைக் கதைகள் வடக்கிலும் தெற்கிலும் ஏராளமாக உலவிவருகின்றன. பௌத்தசமயத்தைத் தழுவுவதற்கு முன் அவன் அவ்வாறிருந்தான் என்பதே பொது வழக்காக இருக்கிறது. எங்கு வழங்கிவருவன ஆயினும், அவை உண்மைக்குப் புறம்பானவை, சமயத்திற்கு ஏற்றம் தேடும் நோக்குடையவை என்பதே மெய்யாக விளங்குகிறது.

**மேற்கோள்கள்**

மிகச் சிறந்த பௌத்தப் பேரரசனின் உண்மையான வரலாற்றை நன்கு தொகுத்தளிப்பதற்கு, துறவிகள் கூறும் கட்டுக்கதைகள், அவை சிங்கள தேசத்தைச் சார்ந்தவையாயினும், பிற இடங்களில் வழங்குபவையாயினும் பயன்படுவதில்லை. சிங்கள நாட்டிலிருந்து கிடைக்கும் நாட்குறிப்புகள் பல சரியானவையே என்றாலும், இது போன்ற பிற தகவல்கள் தவறானவையாகவே உள்ளன. அவனது வரலாற்றைச் சமைப்பதற்கு அற்புதமான அவனது கல்வெட்டுகள் மிகவும் பயன்படுகின்றன. இக்கல்வெட்டுகள் உலகின்கண்ணுள்ள கல்வெட்டுகளிலேயே மிகச் சிறந்தவையென ஒருவாறு உறுதியாகவே கூறலாம். சில வெட்டெழுத்துச் சாசனங்களும் பலவகையான பன்மொழி இலக்கியச் சான்றுகளும், கல்வெட்டுச் செய்திகளை உறுதிப்படுத்துவதற்குத் துணை செய்கின்றன. நினைவுச் சின்னங்களையும், அவை பரவலாக அமைந்திருக்கும் முறையையும் ஆய்வதால் மேலும் பயனடையலாம். அசோகனது காலத்து நாணயங்களால் வரலாற்றாசிரியனுக்கு எவ்விதப் பயனுமில்லை. அந்நாணயங்களில் அவனது பெயர்களோ, பிற விருதுகளோ இல்லை. அர்த்த சாத்திரமும் பிற மொழி நூல்களும் நாம் எடுத்துரைக்கும் வரலாற்றுச் செய்திகளை உறுதிப்படுத்தும் வகையில் மேற்கோள்களை அளித்து உதவுகின்றன.

**சொற்பமான அரசியல் நடவடிக்கைகள்**

ஆட்சிக்காலத்தில் பெரும்பகுதியைச் சமாதானத்தில் மனமுடைய அசோகன் மிக அமைதியாகவே கழித்தான். குறிப்பிடத்தக்க அரசியல் நிகழ்ச்சிகள் மிகக் குறைவாக இருப்பதோடு, அவனது படைபலத்தைக் குறித்த விவரமெதுவும் நமக்குக் கிடைப்பதில்லை. அவன் தோற்றுவித்த இயக்கமே, வரலாற்றின் சுவைமிக்க பகுதியாக விளங்குகிறது. இவ்வியக்கம், உள்நாட்டுப் பௌத்த சமயத்தை, உலக மகா சமயங்களில் ஒன்றாகச் செய்ததோடு, படிப்படியாக மன்னரின் ஆத்மீக வளர்ச்சிக்கும் கொள்கைக்கும் உதவிசெய்தது. அவன் விடுத்துச் சென்றுள்ள சாசனங்கள் அழிவற்றவை. அவனது சுயசரிதையை விளக்கும் அவைகளை அவனே உருவகப்படுத்தியிருக்க வேண்டும்.

செய்தி கிடைக்கின்ற அளவில் அசோகன் தொடுத்த போர் ஒன்றேயாகும். வங்காளக்குடாக்கடலின் கரைமீதிருந்த கலிங்

கத்தைக் கவருவதற்கென அப்போர் தொடுக்கப்பெற்றது. அவனது பேரரசு, இந்துகுஷ் தொடரிலிருந்து, மைசூரின் வட பகுதி மாவட்டங்கள் வரையில் பரவியிருந்தது. கலிங்கம் நீங்க லாக உள்ள இப்பேரரசைத் தன் தந்தையிடமிருந்து வழி முறைச் சொத்தாக அவன் பெற்றிருக்க வேண்டும். பிந்துசாரன் அல்லது சந்திரகுப்தன் அல்லது இருவருமாக இப்பேரரசை நிறுவியிருக்கக்கூடும்.

### கால வரன்முறை

அசோகனது கல்வெட்டுகள், ஆட்சி தொடங்கிய நாளி லிருந்து கணக்கெடுத்துச் செய்திகளைக் கூறுகின்றன. அவனது மகுடாபிஷேகம் அல்லது முடிசூட்டு விழா கி. மு. 269-ல் நடை பெற்றது. அச்சடங்கு நடைபெற்ற மாதத்தைச் சரிவர அறிய முடிவதில்லை. எனவே, ஆட்சிகால அடிப்படையிலுள்ள கால வரன்முறையைக் கிறிஸ்து சகாப்த வரன்முறையுடன் பொருத்துவதென்பதும் இயலவில்லை. கிறிஸ்துவிற்கு முன் உள்ள செய்திக் குறிப்புகளையும், அனுவளவும் பிசகின்றி வரை யறுத்துக் கூறுவதும், பலவேறு காரணங்களால் நடைமுறை யில் கூறுவதும் கடினமாகிறது. சௌகரியத்தை முன்னிட்டு இவ்வதிகாரத்தில் கூறப்பட்டுள்ள நாட்கள் யாவற்றையும் சரி யானவையென்றே ஏற்போம். ஆனல், அவை சிறிது மாறுதல் களுக்குட்பட்டவை என்பதை மட்டிலும் வாசகர்கள் நினை விலிருத்திக் கொள்ளவேண்டும். அத்தகைய மாறுதல்கள் இரண்டு ஆண்டுகளுக்குட்பட்டவையாகவே இருக்க வேண்டும். அவனுடைய தகப்பன் மரணமடைந்த நாளிலிருந்து கணக்கிடும் போது, அசோகனின் ஆட்சி நாற்பது நாற்பத்தோர் ஆண்டுகள் நீடித்திருக்க வேண்டும். அவனது முடிசூட்டு விழாவிலிருந்து கணக் கிடும்போது முப்பத்தாறு அல்லது முப்பத்தேழு ஆண்டுகள் வரையிலும் நீடித்திருக்க வேண்டும். அவனது ஆட்சி தொடங் கிய ஒன்பதாவது ஆண்டிலிருந்து இருபத்தெட்டாம் ஆட்சி ஆண்டுவரையிலும் கல்வெட்டுகள் தெய்தியிடப்பெற்றிருக்கிறன. இது கி. மு. 261 லிருந்து கி. மு. 242 வரையிலுள்ள இடைவெளி யைக் குறிப்பாகத் தோராயமாகக் கொள்ளலாம். கி. மு. 273 லிருந்து நீடித்ததாகவும் 232 வரையிலும் ஆட்சி நீடித்ததாகவும் கொள்ளலாம்.

### அசோகனின் ஆட்சியின் தொடக்க காலங்கள்

அசோகனுட்சியின் தொடக்க காலங்களில் குறிப்பிடத்தகுந்த அரசியல் நிகழ்ச்சி எதுவுமிருந்ததென்று உறுதியாகக் கூறஇய

லாது. முன்னோர்களைப் போலவே அவனும் வாழ்ந்தான் என்பதை அவனது தனிப்பட்ட நினைவுச் செய்திகள் மெய்ப்பிக்கின்றன. தடையின்றிப் புலால் உண்பதும், வேட்டையில் அதிக திருப்தி கொள்வதும், திருவிழாக் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து, கூத்தும்குடியும் அமைப்பதுமாகபலவற்றிலும் முன்னோர்களின் வழியையே அவன் பின்பற்றினன். அவனது நடத்தையைக் குறிப்பாகப் பாவமென்றோ அல்லது கூடாவொழுக்கமென்றோ கொள்வதற்குரிய காரணமெதுவுமில்லை. அக்காலத்தில் அவன் உட்கொண்ட உணவுவகைகளும், அவன் ஈடுபட்ட சேளிக்கைகளும் சமணசமயத்தை ஆர்வமுடன் அவன் பின்பற்றியிருக்க முடியாதென்பதை ஐயமற மெய்ப்பிக்கின்றன. இந்து சமய்த்தைச் சார்ந்த பிராமணனாகவும் சிவனை வழிபடுபவனாகவுமிருந்தான் என ஒருவாறு கொள்ளலாம். கீழ்த்திசையிலுள்ள கலிங்க மக்களின் மீது கி. மு 261-ல் போர் தொடுத்து, அந்நாட்டை அசோகன் கைப்பற்றினன். அத்தேசமக்கள் தகுந்த முகாந்தரமின்றிச் சொல்லவொண்ணுத் துயரங்களை அனுபவிக்க வேண்டியதிருந்தது. இந்நிகழ்ச்சியே அவனது கொள்கைகளிலும், நடவடிக்கைகளிலும் மாறுதலேற்படுத்துவதற்குக் காரணமாயிருந்ததெனலாம்.

**கலிங்கப்போர்**

இவ்வாறு கலிங்கப்போர் அசோகனதுவாழ்வில் ஒருதிருப்பமுனையாயிற்று. உலக வரலாற்றை ஒரு முகமாக நிர்ணயிக்கும் சக்தியாகவும் விளங்கியது. போரினல் விளைந்த கஷ்டங்களையும், கைதிகளின் துன்பங்களையும், இறந்தவரைக்குறித்த பிரலாபங்களையும்; முறியடிக்கப்பட்ட மக்கள் எளிதில் மறந்தனர். ஆயிரக்கணக்கான போர்களில் வெற்றி பெற்றோர் அவைகளை அவ்வாறு மறந்து விடுவது வழக்கம். ஆனல், கலிங்கப்போர், வெற்றி பெற்றவரின் உள்ளத்திலேற்படுத்திய விளைவின் நினைவு இருபதாவது நூற்றுண்டிலும் நீங்காது நிலவுகின்றது.

தன் பேராசையால்விளைந்த துன்பங்கள் தன் உள்ளத்தை எவ்வாறு வாட்டிவதைத்தன என்பதை, அசோகன் தனது கல்வெட்டில் (No. XIII) வெகுவிரிவாக எடுத்துரைத்திருக்கிறுன். பக்தி அல்லது கர்மமார்க்கத்தில் சரண்புகவேண்டிய நிலை தனக்கு ஏற்பட்டதென்பதையும் அவன் கூறுகிறுன். இப் பக்தி மார்க்கமென்பது, புத்தரின் புனித விதிகளே என்பது அவனது கருத்து.

முடிசூடிய எட்டு ஆண்டுகளுக்குப் பின்(கி.மு. 261), புனிதரான அன்பு மிக்க பெருமன்னனால் கலிங்க தேசம் கைப்பிடிக்கப் பெற்றது. 150,000 மக்கள் கைதிகளாகப் பிடிக்கப்பட்டனர். 100,000 மக்கள் கொல்லப் பட்டனர். அதைப்போல் பன்மடங்கான மக்கள் இறந்தனர்.

புனிதப் பெருமன்னன், கலிங்கப்பகுதிகளைப் பேரரசுடன் இணைத்துக் கொண்டபிறகு, புனித மார்க்கத்தை ஆர்வமுடன் பாதுகாக்கவும், அம்மார்க்கத்தை நேசிக்கவும், அத்தர்மத்தை (முறை) வலியுறுத்தவும் தொடங்கினான். கலிங்கப்பகுதிகளை வெற்றி கண்டபிறகு புனிதப்பேரரசனுக்கு இவ்வாறு துக்கமுண்டாயிற்று. ஏனெனில் புதியதொரு நாட்டை வென்று கைப்பற்றும்போது, கொலையும், மரணமும், மக்களைக் கைதியாகப் பிடிப்பதும் தவிர்க்க முடியாது. புனிதப்பேரரசனுக்குத் துக்கம் விளைத்ததுடன், இச்செய்தி தன் செயலுக்காக அவனை வருத்தவும் செய்தது.

பொதுவான முறையில் கூறப்பட்டுள்ள இவ்வெண்ணங்களை பேரரசனை ஆசிரியன் மேலும் விரிவாகக்கீழ்வருமாறு எடுத்துக் கூறுவான்:

ஏனெனில் அப்போது கொல்லப்பட்ட மக்கள் யாவரிலும், குற்றுயிராக்கப்பெற்றவர்களிலும், அல்லது கைதியாகப்பிடிக்கப் பட்டவரிலும், நூறில் ஒரு பங்கு அல்லது ஆயிரத்தில் ஒருபகுதியினருக்கு அதேகதி ஏற்படுமாயின், அது புனிதசக்கரவர்த்திக்கு மிகவும் வருந்துவதற்கான விஷயமாகும். மேலும், எவனேனும் மன்னனுக்குத் தீங்கிழைப்பானேயாகில், அதையும் இயன்ற வரையில் புனிதப்பேரரசன் பொறுத்துக்கொள்வான். தன் சாம்ராச்சியத்திலுள்ள காட்டுவாசிகளிடமும் புனிதப் பேரரசர் அன்பாகவே நடந்துகொள்வதற்கு முயற்சி செய்வார். அவர்களையும் நன்முறையில் சிந்திக்க வைக்க வேண்டுமென்பது அவரது எண்ணம். அவ்வாறு செய்யத்தவறினால், புனிதப்பேரரசருக்குப் பின்னொருகால் வருந்த நேரிடும். தீய வழிகளைக் கைவிடுமாறு அவர்கள் கோரப்படுகின்றனர். இதனால், அவர்களைத் தண்டிப்பது குறையும். எல்லாஉயிரினங்களுக்கும், பாதுகாப்பும், தன்னடக்கமும், மனஅமைதியும், சந்தோஷமும் தேவையென்பது புனிதப் பேரரசரின் ஆசையாக இருக்கிறது.

**உண்மையான வெற்றி**

கடமை அல்லது அன்பு நெறியால் மக்களின் உள்ளங்களைக் கவருவதே உண்மையான வெற்றியாகும் என மேலும் அசோகன் விரித்துரைக்கிறான்.[1] தனது நாட்டில் மட்டிலுமன்றி 600 காத தூரத்திற்கு அப்பாலுள்ள, கிரேக்க மன்னன் ஆண்டியோகசின் அரசிலும், ஆண்டியோகஸ் நாட்டிற்கும் அப்பாலுள்ள (வடதிக்கிலுள்ள) டாலமி, ஆண்டிகோனஸ், மாகஸ், அலெக்சாந்தர் ஆகியவர் வசிக்கும் நாடுகளிலும்; தெற்கில் தாமிரபருணி வரையுள்ள[2] சோழபாண்டிய நாடுகளிலும்; பேரரசரின் ஆணைக்குட்பட்டிருந்த, யோனர், காம்போஜர், நாபக நாட்டு நாபபந்திகள், போஜர், பிதிகர் மற்றும் ஆந்திரர், டலிந்தர்[3] முதலிய மரபு மற்றும் குடியினரிடத்திலும், உண்மையில் 'எங்கும்' அத்தகைய உண்மையான வெற்றிகளைத் தான் ஏற்கெனவே பெற்றுவிட்டதாக மன்னர் கூறுவர். 'அறநெறியை அடிப்படையாகக் கொண்ட ஆணையையும், புனிதப் பேரரசரின் அந்நெறியைப் பற்றிய விளக்கத்தையும்கேட்போர் கடைப்பிடிக்கின்றனர், மேலும் சேட்போர் கடைப்பிடிப்பர்' என அவர் மேலும் கூறுகின்றார்.

அறநெறியால் கிட்டும் இத்தகைய உண்மை வெற்றி, முழுமையானது, நிரந்தரமான ஆனந்தத்தை அளிக்கவல்லது, கடின முயற்சியால் பெறப்படும் அரிய கனியாதலால் பரஉலகிலும் நன்மை பயக்கக்கூடியது என்றெல்லாம் பலவாறாக அதன் பெருமையை மன்னர் ஏற்றமாக உரைப்பர். உண்மையான் வெற்றி

1 மில்டன் என்ற ஆங்கிலக்கவி, இதைப்போலவே ஒத்த கருத்தொன்றை வியப்பளிக்கும் வகையில் அளித்திருக்கிறான்:

பரந்த பேரரசுகளைக் கீழ்ப்படியவைத்துக் கைப்பிடிப்பதைச்
சிறந்ததெனக் கருதுவோர் யாவரும் தவறு செய்கிறார்கள்.
பெருநாடுகளை அழிப்பதும், பெரும் போர்க்களங்களில் வெற்றி [காண்பதும்
பெருநகரங்களை முற்றுகையிடுவதும்..................................
இத்தன்மைய புகழில், நன்மை ஏதேனும் ஏற்படுவதாயின்,
முற்றிலும் மாறுபட்ட வழியிலேயே பெறத்தக்கதாகும்
பேராசை, போர். பலாத்காரம் ஆகியவைகளின்றி,
சாந்தமான செயல்களாலே, தெள்ளிய மதியாலே
பொறுமையாலே, சகிப்புத் தன்மையாலே..............................
(சுவர்க்கத்தை மீண்டும் பெறுதல் iii 71-92)

2 சிங்களநாட்டிற்கு வழங்கிய பொதுப்பெயர். ஆனால், இங்கு, தீபகற்ப இந்தியவின் தென்கோடியிலுள்ள ஒரு சிறு ஆற்றைக் குறிப்பதாக டாக்டர் ஸ்மித் கருதுவர் (பின்வரும் அதிகாரங்களைப் பார்க்கவும்). அவரது விவாதங்கள் முழுவதும் சமாதானமளிப்பவைகளாக இல்லை என்பது என் எண்ணம் [ப. ர்].

3 குகைக்கல் வெட்டு V-ல் மேலும் மகாராட்டிர ராஷ்ட்ரிகரும், வடமேற்கு எல்லையிலுள்ள காந்தாரரும் உடன் சேர்க்கப்பட்டுள்ளனர்.

யையே நாடவேண்டுமெனத் தனது பிள்ளைகளுக்கும் பேரப் பிள்ளைகளுக்கும் அவர் மதியுரைக்கிறார்.

ஒரு வேளை படைவலிமை கொண்டு போரிடவேண்டிய நிலை அவர்களுக்கு ஏற்படுமாயின் (அல்லது 'தன்னிச்சையால்', ஹல்டஷ் என்பவனைப்போல) உவப்போடு பொறுமையையும், அன்பையும்அவர்கள்கடைப்பிடிக்கவேண்டும்என்றும்,அத்தகைய ஆத்ம சாதனையால் இகத்திலும் பரத்திலும் கிடைக்க விருக்கும் எல்லையில்லா ஆனந்தத்தை அடையவேண்டுமென்றும் அவர்களுக்கு எடுத்துரைக்கின்றார்.

**குறிப்பிடத்தக்க கலிங்கச்சாசனங்கள்**

சண்டையில் தோல்வியுற்ற மாகாணங்களின் நன்மைக்காக, வெற்றியடைந்த சின்னாட்களுக்குப்பின் அசோகன் இரு தனிச் சாசனங்களை வெளியிட்டான். அவைகளில். தன் கருத்துகளை மேலும் விரிவாகக் கூறியிருக்கிறான். அவைகளில் ஒன்று 'சாமாபா'என்னும் பட்டணத்திலுள்ள அரசாங்க உயர் அலுவலர்களுக்கும், மற்று மொன்று 'தோசாலி' என்னும் பட்டணத்தினுள்ளவர்களுக்குமாக வெளியிடப் பெற்றிருக்கிறது. பிற்சேர்க்கை யொன்று தட்சசீலம், உஜ்ஜயினி ஆகிய விடங்களின் வைசிராய்களை விளிக்கிறது. அசோகன் ஒரு காலத்தில் இப்பதவிகளிலமர்ந்திருந்தான் என்பது நினைவுகூரத்தக்கது. பேரரசனின் கட்டளைகளை நடைமுறையில் மக்கள் கடைப்பிடிக்க வேண்டுமென்பதற்காக, சில விடுமுறை நாட்களில் பறைசாற்றுதல், மற்றும் அவ்வப்போது சுற்றுப்பிரயாணங்களை மேற்கொள்ளுதல் ஆகிய முயற்சிகளால் தன் கொள்கைகளை வலியுறுத்த வேண்டுமெனச் சாசனங்களில் மன்னன் பணிக்கிறான்.

'மக்கள் யாவரும் என் குழந்தைகளே' என்ற வாசகத்துடனேயே பேரரசன் தொடங்குகிறான். இம்முறை புத்தனைப் பிரதிபலிப்பது போன்றிருந்தது. அரசின் எல்லைப்புறங்களில் வாழ்ந்த மக்கள் இன்னும் கீழ்ப்படியவில்லை. அவரது நலன்களைப் பேணுவதற்கெனப் பயிற்சி மிக்க அலுவலர் அனுப்பப்படுவர் எனக்கூறி எல்லைப்புற மக்களின் நல்லன்பைப் பெறுவதற்கு மன்னன் முயற்சி செய்கிறான். தந்தைக் கொப்பான தனது அன்பைச்சரிவர அறிந்து கொள்ளாத அரசாங்க அலுவலர் சிலர் ஒவ்வோரமயங்களில் நியாயமற்ற முறையில் மக்களைச் சிறைப்படுத்தியும், கொடுமைப் படுத்தியும் வந்திருக்கின்றனர் என மன்னன் மிகவும் வருந்துகிறான். 'பொறாமை, பொறுமையிழத்தல்'

கொடுமை, ஆத்திரம், முற்சியின்மை, சோம்பல், அலட்சியம், ஆகிய கூடாவொழுக்கங்களுக்கு இடமளித்து விடக் கூடாதெனத் தனது அலுவலர்களை எச்சரிப்பதோடு, கடமையில் தவறுபவர் மன்னனின் வெறுப்பிற்கு ஆளாக நேரிடுமென்றும் பயமுறுத்துகிறான்.

அசோகனது ஆணைகள், இன்றும் நம்மால் சீர்திருத்துவதற்கு இயலாதவகையில் போற்றுதற்குரியனவாக விளங்குகின்றன. நாட்டாசையால் பிறந்த போர் ஒன்றின் விளைவால் அசோகனுள்ளத்தில் விளைந்த கருணை, எல்லைப்புறமாகாண ஆட்சியில் நடைமுறையில் எத்தகைய ஆச்சரியமான பலனை அளித்ததென்பதை நன்கு எடுத்துக்காட்டுகிறது.

**சமகால அரசுகள்**

கல்வெட்டுகளில் கூறப்பட்டுள்ள பிற மன்னர்களும், மரபினரும் தேசத்தினரும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவர்கள் என்பது கவனிக்கத்தகுந்தது. இதற்குச் சரியான முறையில் விளக்கம் கண்டால் ஆன்டியோகஸ் தியோசுடன் அசோகன் சமகாலத்தவன் என்பது விளங்கும். ஆன்டியோகஸ், செல்யூகஸ் நிகேதாரின் பேரனவான். அசோகனது பாட்டனுக்குச் செல்யூகஸ், முதலில் வைரியாகவும் பிறகு நண்பனாகவுமிருந்தான். மேலும் எகிப்து நாட்டு டாலமி பிலடெல்பஸ்,[1] எகிப்திற்கு மேற்கிலிருந்த சைரீன் நாட்டரசன் மாகசு, ஒருவேளை எபிரஸ் நாட்டு மன்னனாக இருந்த அலெக்சாந்தர் ஆகியோரும், சமகாலத்தவர்களே என்பதும் விளங்கும். காலவரன் முறைகளை ஆய்வதால், இந்நான்கு மன்னர்களும் ஒருங்கே ஆண்டு வந்த இறுதியாண்டு கி.மு. 258 எனத்தெரிய வருகிறது. எனவே, கல்வெட்டுச் செய்தி இதற்கு மிகவும் பிந்திய காலச் செய்தியாக இருக்க முடியாது. அசோகன் அரசேற்ற பதின்மூன்று அல்லது பதினன்கு ஆண்டுகளுக்குப்பின் அது உருப்பெற்றிருக்கவேண்டும். இவ்வடிப்படையில் கி. மு. 257 அல்லது 256 என்னும் ஆண்டு பெறப்படுகிறது. நாம் குறித்துள்ள கிரேக்க மன்னர்களுடன் இந்தியப் பேரரசர்கள் நட்புப் பூண்டிருந்தனர் என்னும் செய்தியையும் கல்வெட்டுகள் அறிவிக்கின்றன. அம் மன்னர்களின் நாடுகளில் பௌத்த மதக் கொள்கைகளைப்பரப்பவும், அவைகளுக்கு நல்

[1] டாலமி செல்வமும் செல்வாக்கும் படைத்த அரசனென்றும், இலக்கிய, விஞ்ஞான வளர்ச்சிக்கெனப் பெருஞ்செல்வத்தை வாரிவழங்கினன் என்றும் தெரியவருகிறது. அவனது காலத்தில் அலெக்சாந்திரியாவில் யூகினிட் வசித்தான். செங்கடல் கரைகளில் அவன் பல குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தினன்.

லாதரவு பெறவும் அவன் உரிமை பெற்றிருந்தான் என்பதும் தெரிய வருகிறது. மேலும், தமிழகப் பேரரசுகளான சோழரும் பாண்டியரும் அப்போதிருந்தனர் என்றும், மௌரியனின் தூதுவர்[1] திருநெல்வேலியிலுள்ள தாமிரபருணி ஆறுவரையிலும் சென்றனர் என்றும், தற்போது வழக்கொழிந்து நிற்கும் கொற்கைத்துறைமுகம் விலை பெற்ற முத்து, மற்றும் சிப்பிகளின் வாணிபத்திற்கு உறைவிடமாக இருந்ததென்றும் பலசெய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. மலபார் கடற்கரைப்பகுதியான கேரளபுத்ரம், பிற்கால மதுரை சாம்ராச்சியப்பகுதியான சத்திய மங்கலத்துடன் ஒப்பிடக்கூடிய சாதீயமங்கலம் ஆகிய இருதமிழகப் பகுதிகள் மற்றுமொரு கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளன. அம்மாகாணம் மேற்குத் தொடர்ச்சி மலையின் போக்கில், மைசூர், மலபார், கோயம்புத்தூர், மதுரை ஆகிய பகுதிகளின் எல்லையை ஒட்டியமைந்துள்ளது. இவ்வாருகக்குறிப்பிட்டதோர் காலத்தில் இந்திய நாட்டின் தென் கோடியிலுள்ள பகுதிகளின் வரலாற்றைப் பற்றிய குறிப்புகள் நமக்குக்கிடைக்கின்றன. முதன் முறையாகக்கிடைக்கும்இக்குறிப்பு, தமிழ்ப் பேரரசுகளின் வரலாற்றுக் காலவரன் முறைக்குச் சிறந்த தொரு ஊன்றுகோலாகும். இதைவிடத்தெளிவான குறிப்பு, பின்னும் பல ஆண்டுகளில் நமக்குக் கிட்டவே இல்லை.

அசோகனது பேரரசிற்குட்பட்ட அல்லது உட்படுத்தப்பட்ட பல சிறுசிறு குடியினரையும், மரபினரையும் பற்றிய பெயர்கள் நமக்கு ஏராளமாக அறிமுகப்படுத்தப்படுகின்றன.

செல்யூகஸ் நிகேதாருக்கும் சந்திரகுப்தனுக்கு மிடையேயுள்ள உறவு முறைகளைப்பற்றிக் கிரேக்கர் தரும் தகவல்களின் உண்மைகளை அசோகன் கல்வெட்டுகள் உறுதிப்படுத்துகின்றன. செல்யூகஸின் பேரன், சந்திரகுப்தனின் பேரனோடு கொண்டுள்ள நட்பை இக்கல்வெட்டுகள் நன்கு புலப்படுத்துகின்றன.[2]

### அன்னிய பௌத்த சங்கங்கள்

கி. மு. மூன்ருவது நூற்ருண்டின் இடைப்பகுதியில், பௌத்தத் துறவிகள் நெடுந்தூரத்திலுள்ள ஆசிய, ஆப்பிரிக்கக்

1 முன்பு கூறப்பட்டுள்ள கருத்தைப் பார்க்கவும்.

2 சாசனங்களின் வாசகம், 'அசோகன்' 3 ஆக்ஸ்போர்ட், 1920 என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன. வெற்றிகொள்ளப்பட்ட மாகாணத்தின் பெயர் சாசனத்தில் ஒருமையிலும் பன்மையிலும்கூறப்பட்டுள்ளன. அவைகளுக்கு 'மூன்று கலிங்கங்கள்'என்ற பெயரும் ஓரொரு சமயங்களில் வழக்கிலிருந்தது.

கண்டங்களிலுள்ள கிரேக்கக் குடியேற்ற நாடுகளுக்கும், ஒருகால் ஐரோப்பாவிற்கும் கூட அனுப்பப்பெற்றனர் என்னும் செய்தி மிக ஆச்சரியத்தை விளைவிக்கக்கூடியதே. மேலும், எதிரொலிப் பதாகவும், சிந்தனையைத் தூண்டுவதாகவும் இச்செய்தி விளங்கு கிறது.

அசோகனின் வரலாற்றிற்குரிய ஆதாரங்களில் அவனது கல்வெட்டுகள் முதலிடம் பெறுகின்றன. என்றாலும், பிறசான்று களிலிருந்தும், மேலும் பல துணைச் செய்திகள் கிடைக்கின்றன. 'மகாவம்சம்', 'தீபவம்சம்' என அழைக்கப்பெறும் சிங்களஏடுகள் துணைச் சான்றுகளாக நல்ல பயனளிக்கின்றன. இவைகளில் காலத்தால் முந்தியதாக விளங்கும் தீபவம்சம் கி.பி. நான்கு அல்லது ஐந்தாவது நூற்றாண்டில் எழுதப் பெற்றதாகத் தெரிய வருகிறது. மன்னரது பௌத்த சமயப் பிரசாரகர்களைப் பற்றிச் சாசனங்கள் கூறும் செய்திகளைச் சிங்கள ஏட்டு ஆசிரியர்கள் விரித்துரைக்கின்றனர். அவர்கள் குறிப்பிடும் ஒன்பது சமயங் களில் ஏழு, ஹிமாலயத்திற்கும் பெஷாவருக்கும் இடையிலுள்ள இந்திய நாட்டைச் சார்ந்தவைகளென்றும், மற்றுள்ளவை தெற் கிலுள்ள மகிஷமண்டலத்தைச் சார்ந்தவையென்றும் விரித்துரைக் கப்படுகின்றன. மகிஷமண்டலமென்பது மைசூர் நாட்டின் தெற் குப்பகுதி என்று கொள்ளப்படுகிறது. மேலும் இரண்டு குழு வினர் இந்திய நாட்டிற்கப்பாலுள்ள சுவர்ண பூமி அல்லது பர்மா வின் கீழ்ப்பகுதி, மற்றும் இலங்கை அல்லது சிங்களம் ஆகியநாடு களுக்கு அனுப்பிவைக்கப்பெற்றனர். அனுப்பிவைக்கப்பெற்றகுழு வினரின் பெயர்களை நூலாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். பீல்சா– தூபிகளிலுள்ள வெட்டெழுத்துகளிலும் சில பெயர்கள் பொறிக் கப்பட்டிருப்பதைக் காணலாம். பட்டியலைச் சரியானதென்றே ஏற்கலாம். ஆனால், பர்மாவின் கீழ்ப்பகுதிகளில் மேற்கொள்ளப் பெற்ற பிரசாரம் தகுந்த பலனை அளிக்கவில்லை என்று கூற வேண்டியிருக்கிறது. மகாஅயன வகையைச் சார்ந்த பௌத்தக் கொள்கைகளே அப்பகுதிகளில் முதலாவதாகப் பரவின என்று கிடைக்கும் சான்றுச் செய்திகளிலிருந்து தெரியவருகின்றது. அசோகன் கடைப்பிடித்த சமயநெறிகளிலிருந்து மாறுபட்ட இவ் வகையான பௌத்தம், வடஇந்தியப் பகுதிகளிலிருந்தே அங்குப் பரவியிருக்க வேண்டும்.

**சிங்களத்திற்குச் சென்ற தூதுகோஷ்டி**

பௌத்த சமயத்தைச் சிங்களத் தீவில் பரப்புவதற்கு எடுத் துக் கொண்ட முயற்சி நல்ல வெற்றி என்றே கூறவேண்டும். சிங்

16

களத்தீவுமுழுவதும் வியக்கத்தக்க முறையில் பௌத்தசமயத்தைக் கடைப்பிடித்து விட்டது என்று துறவிகளின் கட்டுக் கதைகளில் கண்டிருந்தபோதும்,அது முழுவதும் உண்மையன்று. வெகு விரைவில் முன்னேற்றமடைந்தது என்றாலும், வெற்றி, சிறுகச் சிறுகக் கிடைத்ததேயாம். இதற்கு அரசாங்கத்தின் பேராதரவும், பெரும் முயற்சியும், பொருளுதவியும் மிக மிக உதவி புரிந்தன.[1] சிங்கள ஆண்டு 251 அல்லது கி. மு. 250-ல் 'திச்சன்' என்னும் மன்னன் அரசேற்று அசோகனைப்போலவே நாற்பதாண்டுகள் அரசாண்டான் எனத் தெரிகிறது. சமயத்தூதுவரின் விஜயத்திற்கு அவன் முயற்சி எடுத்தான். அவனது ஆட்சியின் போது, பௌத்தசமயக்கொள்கைகளைப் பரப்புவதில் முழுமனத்துடன் ஈடுபட்டான். அப்பணிசரிவர நடைபெறுவதற்கெனவே நல்ல கட்டடங்களை எழுப்பினன். விஜயம்செய்த குரவரில் மகேந்திரன் அல்லது மஹிந்தன் என்பவன் குறிப்பிடத்தக்கவனாக விளங்குகிறான். தீவில் குடியேறிய அவன் அங்கேயே கி.மு.204-ல் மரணமடைந்ததாகத் தெரிகிறது. இவனை அசோகனது மகன் என்றும், சகோதரன் என்றும் கூறுவோர்கள் உண்டு. அவனது சாதனைகளை என்றும் நினைவு கூருகின்றவகையில் அவன் பெயரால் நினைவுச்சின்னங்கள் எழுப்பப்பெற்றிருக்கின்றன. அவனுக்குத் துணையாக அவனது சகோதரி சங்கமித்ரை என்பவர் மடாலயத்தின் நண்பர் அல்லது துறவிகளின் நண்பர், பணிபுரிந்தனர்எனக் கூறப்படுகிறது. ஆண்களிடத்தில் சமயத்தைப் பரப்புவதில் மகேந்திரன் பெற்ற வெற்றியைப்போல, பெண்களிடம் சங்கமித்ரை மிக்கவெற்றியடைந்தார் எனத்தெரியவரும். இந்திய மரபுச் செய்திகள் மகேந்திரனை அசோகனின் இளையசகோதரன் எனக்குறிப்பிடுகின்றன. இதுவே மிக்க நம்பிக்கையுள்ளதாக இருக்கிறது. சிங்களத்தீவுகளில் நிலவிவரும் கதைகள், அவனைச் சக்கரவர்த்தியின் மகனெனக் கூறுகின்றன.

திச்சனின் நெடுநாள் ஆட்சியில் சிங்களத்தில் பௌத்தசமயத்திற்கு நல்ல வெற்றி கிடைத்தது. அதன் செல்வாக்கு, தீவில் பொதுவில் நன்மைபயப்பதாக இருந்தது. அங்கிருந்து செல்வாக்கு மறையவில்லை. செய்திகளை நன்கறிந்த இரக்க சித்தமுள்ள ஆசிரியர் ஒருவர் கீழ் வருமாறு எழுதுகிறார்:

'அசோகனின்நல்லெண்ணத்தூதுகோஷ்டிகள்,நாகரிகவளர்ச்சிக்கு, உலகில் மேற்கொள்ளப்பெற்ற முயற்சிகளில் மிகச்

1 சமயகுரவர்கள், பாண்டிய நாட்டிலுள்ள மதுரை மஹேந்திர மடாலாயத்தைச் சார்ந்தவர்கள் என நான் எண்ணுகிறேன்.

சிறந்தவை. மூடநம்பிக்கைகளும் முரட்டுக்குணங்களும் நிறைந்த நாடுகளிலேயே இவை பரவின. மாயா ஜாலவித்தைகளில் நம்பிக்கை கொண்ட மக்களிடையில், நற்குணத்தை வளர்க்கும் ஒரு தூண்டுகோலெனப் பௌத்த சமயம் பரவிற்று.

சிங்களம், பர்மா, சயாம், ஜப்பான், திபெத் ஆகிய பகுதிகளின் வரலாறு, பௌத்தசமயம் அங்கு புகுந்தநாள் முதலே தொடங்குவதாகக் கூறலாம். இப்பகுதிகளில் அது வெகுவிரைவில் பரவியதோடல்லாமல் மக்களின் உள்ளத்தில் நன்கு பதிந்தது. பழம்பெரு நாகரிகமொன்றை உடைய சீன தேசத்தில் அது சற்று மெதுவாகவே முன்னேற முடிந்தது.

ஆப்பிரிக்கா, இந்தியா, தென்கடலிலுள்ள தீவுகள் ஆகிய பகுதிகளில் மூடநம்பிக்கைகள் நிரம்பப்பெற்ற மக்களிடையில்; இன்று கிறிஸ்துவ சமயம் வெகுவிரைவில் பரவி வருகிறது. அஞ்ஞானத்தையும் குழப்பத்தையும் நீக்கி, ஒரே தெய்வத்தினிடம் நம்பிக்கையையும், பாங்கான உலக அமைப்பில் விருப்பத்தையும் அது ஊட்டி வருகின்றது. அதைப்போலவே கீழைநாடுகளில் பௌத்தம் நல்ல விளைவுகளை ஏற்படுத்தி வருகின்றது; பைசாசங்கள் அல்லது காட்டுமிராண்டித் தெய்வங்களின் இச்சை என்ற மூடநம்பிக்கையை வேரறுத்து, கிரியை–விளைவு என்ற தத்துவமடங்கிய கர்மவிதிக் கோட்பாட்டினை வலியுறுத்தியும், அநாகரிகப் பழக்கவழக்கங்களையும் தடைகளையும் நீக்கி, மிகச் சிறந்த ஒழுக்க முறைகளையும் போதித்தது.

மேலும் பௌத்த சங்கத்தினர், தாய்நாட்டின் பண்பாடுகளையும் உடன் கொண்டுவந்தனர். கற்களில் செதுக்குகின்ற கலையையும் நீர்ப்பாசன முறைகளையும், மஹிந்தன் சிங்கள நாட்டிற்கு அறிமுகப்படுத்தினான் என்பது தெளிவாக விளங்குகிறது. இவைகளை அவன் தந்தை இந்தியநாட்டில் நல்ல முறையில்பயன்படுத்தியிருந்தான். தன் நாட்டுப் பண்டைய வரலாற்றிற்குச் சிறப்பளிக்கின்ற ஆக்க சக்திகளில் சமயம் மிக முக்கியமானதொன்றாகுமென சிங்களபௌத்தன் நன்றியுணர்வோடு எண்ணுகிறான்.

பாழடைந்து கிடக்கும் அனுராதபுரம் என்ற நகருக்கு அருகில், அடர்ந்த கானகங்களின் மத்தியில் அழகான ஒரு குன்று அமைந்திருக்கிறது. அங்கு அருங்குணங்களும் பெருமையும்உள்ள மகேந்திரனுக்குக் குகைக் கோவிலொன்று எடுக்கப்பட்டுள்ளது. இவன் கி. மு. 250ஆம் ஆண்டில் சிங்கள நாட்டிற்குப் பௌத்த

சமயத்தை அறிமுகப்படுத்தினன். அவனது சாதனைகளைக் கற்றுணர்வதற்கு இது ஒரு நல்ல சான்றாக விளங்கி வருகின்றது.

அன்றுமுதல் இன்றுவரை, பௌத்தசமயம், சிங்களத்தின் சிறந்த சமயமாக விளங்கி வருகிறது. அந்நாட்டு மன்னன் திச்சன் அசோகனோடு நட்புக்கொண்டு பௌத்தனின் சமயக் கோட்பாடுகளை வளர்ப்பதற்குத் தன்னாலியன்ற முயற்சிகள் யாவையும் மேற்கொண்டான். அவனும் அவனது சந்ததிகளும் மாபெரும் புனித அனுராதபுர நகரை நிறுவினர். அங்கு அகன்ற குன்றுகளையொத்த 'டகோபாக்களை' ஏராளமாகக் கட்டினர். அவை, செயின்ட்பால் மடாலயத்தைக் காட்டிலும் உயரமாகவும், அதிகப் பரப்புள்ளவைகளாகவும் விளங்குகின்றன. சங்கத்திற்கு மானியமாக வழங்கப் பெற்றுள்ள அரண்மனைகள், ஸ்நானக் கட்டடங்கள், வானளாவி உயர்ந்த அருமையான மரங்களையுடைய பூங்காக்கள், ஆகிய இவை யாவற்றிற்கும் மேலாக, டகோபாவின் கோபுரம் உயர்ந்து தலைநிமிர்ந்து நின்று காட்சியளிக்கிறது. இன்றும் இச்சமயத்திற்கு உயிரூட்டி வரும் 7,774 பிக்ஷுகள் (துறவிகள் அல்லது அடியார்கள்) பெருமைக்குரிய மகிந்தனின் வழி வந்தவர்களேயாவர். சங்கங்கள் எத்துணை நற்பயனளிக்கவல்லவை என்பதற்கு சிங்களநாட்டுப் புத்தசமய வரலாறு சான்று பகருகிறது.[1]

பௌத்த உலகின் ரோமாபுரியாக விளங்கும் அனுராதபுரம் உலகில் அசோகனுக்கு இருந்த செல்வாக்கை விளக்குவதாகவும் அவன் கண்ட வெற்றியின் அளவையாகவும் விளங்குகிறது.

**பாடலிபுத்திரத்திலுள்ள அவை**

சிங்களத்துறவிகளான நூலாசிரியர்கள் கூறும் தகவல்களை மிக்க ஆர்வமுடன் ஏற்று ஐரோப்பிய ஆசிரியர்கள் பலர் பௌத்த சமயத்தைக் குறித்த பல நூல்களை எழுதியுள்ளனர். இப்பௌத்தத் துறவிகள், பேரரசனின் சாதனைகளுக்கு மதிப்பளிக்கவே இல்லை. சிங்களத்தீவிலும், பிற நாடுகளிலும் பௌத்தசமயம் புகுந்தமைக்கு முனிவன் அல்லது 'திச்சா' என்ற பெயருடைய தேரன் ஒருவனே காரணமென்று அவர்கள்

1 கே. ஜே. சாண்டர்ஸ் 'பௌத்த சமயவரலாறு' ஆக்ஸ்போர்டு யூனிவர்சிடி பிரஸ் 1916-பக். 76-79 'இன்றைய ரோமாபுரி பொலிவிழந்து நிற்கிறது. அதன் அவை சிறுமை வாக்குவாதத்தின் சின்னமாக விளங்குகிறது.பரந்த, தனிமையான, அமைதியான, சாந்தமிக்க, முடிவற்ற அழிவை எதிர் நோக்கியுள்ள முழுமனச் சான்றுடன் விளங்கும் பரந்த, பெரும் புனித நகரத்துடன் ஒப்புநோக்கலாம், (பாரர், 'புராதன சிங்களம்' 1908. பக்கம் 346).

கூறுவர். இம்முனிவன் பாடலிபுத்திரத்தில் மடாலயப் பேரவை ஒன்று கூட்டினன் என்றும், அதையடுத்துச் சமயத் துறவிகளை அனுப்பிவைத்தான் என்றும் அவர்கள் கூறுகின்றனர். இத்தகைய சிங்களநாட்டுக் கதைகள் செய்தி நடந்தேறிய பல்லாண்டுகளுக்குப் பின் எழுந்தவை. அசோகனது வாசகங்களைக் காட்டிலும் இவைகளில் அதிக நம்பிக்கை கொள்ளவேண்டுமென்பதில்லை. சமயத்தைப் பரவச் செய்வதற்குத் தான் மேற்கொண்ட முயற்சிகள் யாவையும் குறிப்பிடும் அரசன், அம்முனிவனைப் பற்றியோ அல்லது அவன் கூட்டிய பேரவையைப் பற்றியோ எவ்விதத் தகவலும் அளிக்கவில்லை. நான் அசோகனது வார்த்தைகளையே நம்புகிறேன். இந்திய நாட்டு மரபுச் செய்திகளும் சிங்கள நாட்டுச் செய்திகளும் இந்நிகழ்ச்சியைக் குறிப்பதால் பேரவை யொன்று பாடலிபுத்திரத்தில் கூடியதென்பதை உண்மை யென்றே ஏற்கலாகும். ஆனால் நிகழ்ச்சி நடந்த தேதியைச் சமயக்குரவர்கள் தவறாகவே கூறுகின்றனர் என நான் எண்ணுகிறேன். அசோகனது ஆட்சியின் இறுதியில் முக்கியக் கல்வெட்டுகளான பதினான்கு குகைக் கல்வெட்டுகளும், ஏழு தூண் கல்வெட்டுகளும் வெளிவந்த பின்னரே இப்பேரவை கூட்டப்பட்டிருக்கவேண்டும். அவ்வமயம்' இறுதியாக நமக்குக் கிடைக்கும் 'சிறு தூண் ஆணைகள்' என்னும் பேரறிவிப்பை மன்னன் செய்திருக்கக்கூடும் இச்சான்றுகள் பேரவையை நேரடியாகக் குறிப்பதில்லை. பிளவினால் ஏற்படும் விளைவுகளையும் அது இழிவென்பதையுமே அவை குறிப்பிடுகின்றன.

**உபகுப்தனும் தேரா திச்சனும்**

சிங்கள சமய குரவர்களின் கதைகள் சமயநோக்கில் எழுந்தவைகளாதலால் உண்மைக்குப் புறம்பானவைகளாகும். அவைகளைக்காட்டிலும் வட இந்தியாவில் நிலவிவரும் செய்திகள் நம்பிக்கைக்குரியவைகளே. காசியைச் (Benares) சார்ந்த வாசனைத் திரவிய வியாபாரி குப்தா என்பவரின் மகனும், மதுரா நகரைச் சார்ந்தவனுமான உபகுப்தன் அசோகனுக்குப் பௌத்த சமயத்தைப் போதித்தான் என வடநாட்டு மரபுச் செய்திகள் கூறுகின்றன. அவனது பெயர் தாங்கிய மடாலயம் ஒன்று கி. பி. ஏழாவது நூற்றாண்டில் இருந்ததாகத் தெரிய வருகிறது. உபகுப்தன் என்றொருவன் வாழ்ந்திருந்தான் என்பதைப் பற்றி ஐயப்படுவதற்குக் காரணம் எதுவுமில்லை. அவன் புத்த மடாலயங்களின் நான்காவது தலைவனாக விளங்கி வந்தான். இவனது வாழ்க்கையை ஒட்டிய நிகழ்ச்சிகள் யாவை

யும் சிங்கள நிருபர்கள் மொக்காலியின் மகனை தேராதிச்சனுக்குச் சூட்டிவிடுகின்றனர். இவ்விரு பெயர்களும் ஒரே நபரைக் குறிக்கின்றன என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

### அசோகன் ஒரு துறவி

உபகுப்தனின் நல்லுரைகள், தூதுவரை அனுப்புவதற்குத் தூண்டுகோலாயமைந்ததுடன், வேறு பல நன்மைகளையும் விளைத்தன. அரசகுலத்துதித்த தன் மாணவனை, கி. மு. 249 ஆம் ஆண்டில், பௌத்தசமயத்துடன் தொடர்பு கொண்ட பலபுண்ணியத்தலங்களுக்கும் யாத்திரையாக அழைத்துச் சென்றான்.[1] தற்கால நேபாளதாரையிலுள்ள ருமிந்தை அல்லது பண்டை நாட்களிலுள்ள லும்பினித் தோட்டத்தில் தொடங்கியது. அங்கு எழுப்பப்பெற்றிருக்கும் தூண்கல்வெட்டு ஒன்று இன்றும் அசோகனது விஜயத்தை நினைவுறுத்தி வருகிறது. புலால் உண்பதையும், மிருகங்களை வேட்டையாடுவதையும் அசோகன் கைவிட்டான். இவையிரண்டையும் அவன் ஒரு காலத்தில் விரும்பியிருந்தான். அரண்மனைச் சமயலறையில் பிராணிகளைக் கொல்வது அறவே தடை செய்யப்பெற்றது. ஒரே ஒரு சமயத்தில் தற்காலிகமாக அசோகன் காவியுடை அணிந்திருக்க வேண்டும். பல காலத்திற்குப் பிறகு இந்திய நாட்டிற்கு விஜயம் செய்த இட்சிங் என்ற சீன யாத்திரிகன் அத்தகைய உடையணிந்த மன்னனின் சிற்பமொன்றைக் கண்டான். பௌத்த சங்க விதிகளை மாற்றுவதென்பது இயலாததாகையால் உலகியியலிலுள்ள ஒவ்வொருவனும், சொற்பகாலத்திற்குத் துறவி வாழ்க்கையை மேற்கொண்ட பின் மீண்டும் உலகியலுக்கே திரும்பிவிடலாகும். உண்மையில், பர்மிய நாட்டு ஆண்மகன் ஒவ்வொருவனும், சிறிது காலமோ அல்லது நெடு நாட்களோ மடாலயம் ஒன்றில் வாழ்ந்து வரவேண்டுமென்ற பழக்கமிருந்து வருகிறது.

### அரசன் மேற்கொண்ட கொள்கை மதிப்பீடு

கி. மு. 242-ல் அசோகன் பட்டமேற்று முப்பதாண்டுகள் கழிந்து விட்டன. கிழப்பருவமெய்திக் கொண்டிருந்த அசோகன், சமய வளர்ச்சிக்கும் நன்னடத்தைப் போதனைக்கும், மக்களின் நலனுக்கும், இதுகாறும் தான் மேற்கொண்டிருந்த திட்டங்களின்

1 சாஞ்சியின் கிழக்கு வாயிலிலுள்ள ஒரு சிற்பம். 'போத்கயா' என்னுமிடத்திலுள்ள புனித விருட்சத்திற்கு அசோகன் விஜயம் செய்ததைச் சித்திரிக்கின்றது என எம். பௌவ்சர் அவர்கள் மெய்ப்பித்திருக்கின்றார். (லா. போர்டே ஓரியன்டேல் டு ஸ்தூபா-டி-சாஞ்சி, பாரிஸ் 1910, பக் 30, 75).

பலனை மதிப்பீடு செய்யத் தொடங்கினன். தான் கண்டறிந்த உண்மைகளைப் பல கல் தூண்களில் பொறித்து வைத்தான். அவைகளை, ஏழு கற்றூண் சாசனங்கள் எனக்கருதுவது மரபாயிருந்து வருகிறது. அசோகன் விடுத்துள்ள பேரறிவிப்புகள் பல, முன்னரே கற்களில் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கற்றூண் சாசனங்களை அவைகளுக்குப் பிற்சேர்க்கைகளாகவோ, அல்லது துணைப்பட்டியலாகவோ கருதலாம். அயல்நாட்டிற்கனுப்பப்பட்ட தூதுகோஷ்டிகளைப் பற்றிய குறிப்பெதுவும் இல்லை. அவைகளை ஏன் குறிக்கவில்லை என்பது விளங்கவில்லை.

**அஹிம்சைக் கொள்கை**

'கொல்லாமை'க் கொள்கையைப்பற்றிய அசோகரின் தெளிந்த கருத்துகள் ஐந்தாவது தூண் கல்வெட்டில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. 'அஹிம்சை' என்பது உயிரினங்களைக் கொல்லா



பிராமி எழுத்துகள்

திருப்பதும், அவைகளுக்குத் தீங்கிழைக்காமலிருப்பதுமாகும். பிராணிகளை 'ஆண்மையிழக்கச் செய்வது' அல்லது இனவிருத்தி செய்ய இயலாது மாற்றுவது என்னும் பழக்கத்தை அவன் அனுமதிப்பதில்லை. உயிரினங்களைக் காப்பதற்கென அவன் பல விதிகளை ஏற்படுத்தியுள்ளான். மிருகங்களின் பட்டியல் ஒன்றை வெளியிட்டு அப்பட்டியலில் அடங்கிய மிருகங்களைக் கொல்லக் கூடாதென்று கட்டளையிட்டுள்ளான். கொம்புகளுடைய கால்

நடைகளை அதில் சேர்க்கவில்லை. எனினும் அர்த்த சாத்திரம் என்னும் நூல் பின் வருமாறு குறிக்கிறது. (பகுதி II அதிகாரம் 26) — 'கன்று, மாடு, மற்றும் கறவை மாடுகளைக் கொல்வது கூடாது.[1]



செப்பேட்டுச் சாசனம்

அலெக்சாந்தரின் உணவிற்கெனக் கொல்லப்படுவதற்கு ஆயிரக்கணக்கான கொழுத்த கால் நடைகளைக் கொடுப்பதற்கு தக்ஷசீல அரசாங்கம் மனமுவந்து முன் வந்ததென நாம் முன்னர் கூறினோம். அசோகன் அத்தகையதொரு தடையை முழுவதும் அமல் நடத்தவிரும்பவில்லை என்பதை இத்தட்சசீல மனப்பாங்கு ஒருவாறு விளக்குகிறது. வடமேற்கு எல்லையில் வாழ்ந்த பழங் கால மக்கள் அதை உடனடியாகக் கைவிடமாட்டார்கள் என்பது அசோகனுக்கு நன்கு தெரியும். மாசிடோனிய வீரன் நகருக்கு விஜயம் செய்து எழுபத்துநான்கு ஆண்டுகளுக்குள்ளாக, தட்சசீல மக்களின் உணர்ச்சிகள் அதிகமாக மாறியிருக்க முடியாதென்பது திண்ணமாக விளங்கும். பசு, தற்காலத்திலும் இந்து சமயப்புறச் சின்னங்களில் முக்கியமானதொன்ருக விளங்கி வருகிறது. பசு விற்கு இத்தகைய புனிதத் தன்மை ஏற்படுத்துவதற்குரிய காரணத்தை நாம் அளித்திருக்கும் குறிப்புகள் ஒருவாறு விளக்கு

[1] தற்போது கிடைக்கும் அர்த்த சாத்திரம் மௌரியர் காலத்திற்குப் பின் வந்தது என்பதற்கு மேலும் ஓர் ஆதாரம்.

கின்றன. தற்போது நடைமுறையிலிருந்து வரும் ஆர்வமிக்க உணர்ச்சி, அலெக்சாந்தர் காலத்திலோ அல்லது அக்பர் காலத்திலோ முழுவளர்ச்சியடையவில்லை என்பது உறுதியாகத் தெரிய வரும். பிராணிகளின் வதையைத் தடுத்துக் கூறும் ஐந்தாம் தூண் கல்வெட்டு விதிகள், அர்த்த சாத்திரத்தில் கூறப்பட்டிருப்பவைகளுடன் பெரும்பாலும் ஒத்திருக்கின்றன. கிளிகள் மற்றும் சிறு குருவிகள், 'பிராமணச்சார்புள்ள' வாத்துகள் ஆகியவைகளைக் கொல்லக்கூடாதென இரு சான்றுகளுமே உரைக்கின்றன.

**அசோகனின் இறுதிக்காலம்**

கி. மு. 242-ஆம் ஆண்டில் ஏழாவது தூண் கல்வெட்டு வெளியிடப்பெற்றது. அசோகனது ஆட்சியில் இறுதியான நிகழ்ச்சி என்பதை நாம் உறுதியுடன் கூறலாம். நாம் முன்னரே குறித்த



பாடலிபுத்திர கோட்டை—எஞ்சியுள்ள சான்றுகள்

படி இதற்குச் சிறிது காலத்திற்குப்பின், தோராயமாகக் கி. மு. 240 ஆம் ஆண்டில் பாடலிபுத்திர அவை கூடிற்று எனக் கொள்ளலாம். பிளவு மனப்பான்மையைப் பழித்துக் கூறும், சிறுகல்தூண் சாசனங்கள் அதே காலத்தவையாக இருக்க வேண்டுமென நான் எண்ணுகிறேன். நாத்திகத்தை அடக்குவதற்கென்றே அவை கூட்டப்பெற்றதாகத் தெரிகிறது. மடாலயத்தில் தோன்றி வரும் பிளவு மனப்பான்மைகளை அடக்குவதற்கென்று, தனிச் சாசனங்கள் வெளியிடப்பெற்றிருக்கின்றமையால், அவை

களில் நடந்த விவாதங்களின் விளைவாகவே, அவை எழுந்திருக்க வேண்டுமெனச் சற்று அழுத்தமாகக் கூறலாம். மூப்பெய்திய அசோகன் வசமிழந்த ஒரு சமயப்பித்தனக இருந்தான் என்றும் துறவிகளுக்கும் மடாலயங்களுக்கும் ஏராளமான செல்வத்தை



அ. சாரநாத்திலுள்ள அசோகஸ் தூபி ஒன்றின் முகப்பு



ஆ. லௌரியா நந்தன்காரிலுள்ள அசோகனின் கல்தூண்

வாரி வழங்கிப் பேரரசின் செல்வத்தைப் பாழாக்கினன் என்றும் மரபுச் செய்திகள் கூறுகின்றன. அவன் முடிதுறந்தான் என உறுதியாகக் கூறுவோரும் உண்டு. நம்புதற்குரிய அவனது குறிப்புகளில் இக்கருத்துகளுக்கோ அல்லது கதைகளுக்கோ ஆதாரமில்லை. ஆயிரமாண்டுகளுக்குப்பின் ஐரோப்பாவில் சார்லமேன் செய்ததைப் போல அரசியல் சமயத் துறைகளின் திறமை மிக்க தலைவனுக அவன் இறுதி வரை விளங்கினன் என்றே அவனது சான்றுகள் பகருகின்றன. சாவை எதிர்நோக்கியிருந்த காலத்தில் ஒருவேளை அசோகன் முடிதுறந்திருக்கக் கூடும். ஆனல், அவ்வாறே செய்தான் என்று உறுதிமொழியாக மெய்ப்பிக்கின்ற சான்றுகள் இல்லை.

**வெட்டெழுத்து வகைகள்**

இதுகாறும், நாம் பலவகையான வெட்டெழுத்துகளைப் பற்றிக் கூறிவந்தோம். அவைகளின் தன்மையையும் அவைகள் பரவியிருக்கின்ற வகைகளையும் நாம் இச்சந்தர்ப்பத்தில் விளக்குவது

அவசியமென எண்ணுகிறேன். குடைந்தெடுக்கப்பட்ட பாறைகள், அல்லது தனியான கற்பாறைகளில் பொறிக்கப்பட்டவை. சிற்பவேலைப்பாடுகளமைந்த ஒற்றைக் கல்களில் அல்லது கல் தூண்களில் செதுக்கப்பெற்றவை என அவை இரு வகைப்படும். காலத்தால் முந்திய குகை வெட்டெழுத்துகள், நெடுந்தூரத்திலுள்ள எல்லைப் பகுதிகளிலேயே, அமைந்திருக்கின்றன. தூபிகள் அல்லது தூண்கள், மாகாணத் தலைநகர்களிலேயே அமைந்தன. அங்கு அவைகளை அமைப்பதற்கேற்ற மிருதுவான கற்கள் கிடைத்து வந்தன.

இச் சான்றுகளில் சில முழுவதும் கிடைக்கின்றன. மற்றுள்ளவைகளில் பெரும் பகுதி கிடைக்கின்றன. காலவரன் முறை அடிப்படையில் எட்டுப் பகுதிகளாகப் பிரித்து, அவைகளைக் கீழ் வருமாறு வரிசைப்படுத்தலாம்:

(i) சிறு குகைக் கல்வெட்டுகள்: கி.மு. 258 அல்லது 257 என்ற நாட்குறிப்புகளைக் கொண்ட இரு கல்வெட்டுகள் கிடைக்கின்றன. 1 ஆம் நிர் சாசனத்தின் மறு பதிப்புகளாக, எட்டுத் திக்குகளினின்றும் கிடைக்கின்றன. நிர் 2 இரு இடங்களில் மட்டுமே கிடைக்கின்றன.

(ii) தற்போது கல்கத்தாவில் இருக்கும், தனிப் பாறையொன்றில் செதுக்கப் பெற்ற பாப்ரு கல்வெட்டு. இச்சான்றின் உபயோகம் போற்றுதற்குரியது. சிறு குகைக் கல்வெட்டுகள் நிறுவப்பெற்ற காலத்திலேயே இவைகளும் நிறுவப்பெற்றிருக்க வேண்டும்.

(iii) பதினான்கு குகைக் கல்வெட்டுகள், ஏழு அல்லது எட்டு முழுப் பகுதிகளாக அமைந்திருக்கின்றன. கி. மு. 257-க்கும் 256-க்குப் பின்பும் உள்ள காலத்தில் இவை உருவாயிருக்க வேண்டும்.

(iv) கலிங்க நாட்டுச் சாசனங்கள், இரு பகுதிகளாகக் கிடைக்கின்றன. நாம் மேலே குறித்திருக்கின்ற பதினான்கு கல்வெட்டுகளுக்குத் துணை செய்வதாக அமைந்த இவை, பெரிதும் கலிங்க நாட்டைப் பற்றியே பேசுகின்றன. கி.மு. 256-ல் இவை நிறுவப்பெற்றனவென்று கொள்ளலாம்.

(v) குகைக் கல்வெட்டுகள் எனப்படுபவை, கயாவிற்கு அருகிலுள்ள பராபர் குன்றுகளிலுள்ள மூன்று குகைகளைக்

குடைந்தெடுத்து, அதன் சுவர்களில் பொறிக்கப்பட்டுள்ளன. இவை பெரிதும் நினைவுச் சாசனங்களாக விளங்குகின்றன.

(vi) தாரைத்தூண் கல்வெட்டு - அடித்தளங்களையுடைய இரு பெரு நினைவுச் சின்னங்களாக கி.மு. 249 ஆம் ஆண்டில் நேபாளத்தாரையில் எழுப்பப்பெற்றவை.

(vii) கி.மு. 243-க்கும் 242-க்கும் இடைப்பட்ட காலத்தைச் சார்ந்த ஏழு தூண் சாசனங்கள் - ஆறு பகுதிகளாகக் கிடைக்கின்றன. (சாசனம் 7 நீங்கலாக - இது ஓரிடத்தில் மட்டிலுமே கிடைக்கிறது.)

(viii) சிறு தூண் கல்வெட்டுகளில் நான்கு கி. மு. 242-232-க்கு இடைப்பட்ட காலத்தில் எழுந்தவை. சாரநாத்திலுள்ள இரண்டும், சாஞ்சியிலுள்ள மற்றொன்றும், தனித் தனித் தூண்களில் செதுக்கப்பெற்றுள்ளன. மற்றவை அலகபாத்திலுள்ள தூண் வெட்டுகளுக்குத் துணையாகப் பின்னர் எழுந்தவை.

**கல்வெட்டுகள் பரவலாக அமைந்திருக்கும் முறை**

கல்வெட்டுகள் அமைக்கப் பெற்றிருக்கும் வெவ்வேறு இடங்களைப் பக்கத்திலுள்ள தேசப் படத்தில் காணலாம். சிறு பாறைக்கல்வெட்டுகளுட்பட பாறைக்கல்வெட்டுகளும், பாப்ரு கல்வெட்டுமற்றும் குகைக் கல்வெட்டுகளும், பஞ்சாபின் வடமேற்கு மூலையிலிருந்து, மைசூரின் வடபகுதி மாகாணங்கள் வரையிலும் ஆங்காங்கே பரவலாக அமைந்திருக்கின்றன.. அராபிக்கடல், வங்காளக்குடாக் கடல் ஆகிய இரு கடற்கரைகளிலும் அவைகளைக் காணலாம். 34° 20′ லிருந்து 14° 49′ வடக்கு அட்ச ரேகைக்கும், தோராயமாக 72° 15′ லிருந்து 85° 50′ கிழக்கு தீர்க்க ரேகைக்கும், அதாவது அட்ச ரேகையில் இருபது டிக்ரியும், தீர்க்கரேகையில் பதின்மூன்று டிக்ரியும் உட்பட்ட பகுதியில் அவை அமைந்திருக்கின்றன என்று கூறலாம். இப்போது கிடைத்திருப்பவை நீங்கலாக மேலும் புதியவைகள் கண்டெடுக்கப்பெற்று வருகின்றன. 1915 ஆம் ஆண்டுவரையில் நிஜாம் மாகாணங்களிலிலுள்ள மாஸ்கி வெட்டெழுத்துகள்கண்டெடுக்கப் படவில்லை. அது அசோகனது பெயரைக் குறிப்பிடுகின்ற இணையற்ற கல்வெட்டுகளில் ஒன்றாக விளங்குவதால் அது மிகச் சிறப்பு வாய்ந்தது[1]. பிறசாசனங்கள் அவனைப் பிருதுகளால் மட்டிலுமே சித்திரிக்கின்றன். தொடர்ச்சியாகச் சில சாசனங்

[1] தேவனும்பியாச அசோகச என்று தொடங்குகிறது.

கள் அண்மையில், சென்னையில் கர்நூல் மாவட்டத்திலுள்ள ஏற்றகுடியில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை முழுவதும் இன்னும் அச்சேறி வெளியிடப்படவில்லை. அராமிக் மொழியிலுள்ள தனிப்பட்ட கல்வெட்டுகளில் இரண்டு முறையே தட்சசீலம், லாக்மான் (ஜலாலி பாத்திற்கு அருகில், ஆப்கானிஸ்தானம்) ஆகிய இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவைகளும் அசோகனாலேயே வெளியிடப்பட்டிருக்க வேண்டும்.




அசோகன் ஆட்சிகால இந்தியா

பாறைக் கல்வெட்டுகள் அமைந்திருக்கின்ற சில இடங்கள் தற்போது பெருங்காடுகளாக இருக்கின்றன. ஆனால் அசோகனது ஆட்சி காலத்தில் இவை யாத்திரைத்தலங்களாகவோ அல்லது பிறவகைகளிலோ சிறப்புற்றிருந்திருக்கவேண்டும்.

முப்பதிற்கும் அதிகமான, ஒரே கல்லினலான அசோக தூபிகள் அல்லது தூண்கள் அமைந்திருந்த இடங்கள் கணக்கிடப் படுகின்றன. அவைகளில் பத்துக்கண்டெடுக்கப் பெற்றுள்ளன. இவைகளில் வெட்டெழுத்துகள் பொறிக்கப் பெற்றிருக்கின்றன. பாறைக்கல்வெட்டுகளைப் போல இவை மிகப்பரவலாக அமைந்திருக்கவில்லை. தேவைக்கேற்பப் பெரும் கற்பாறைகள் கிடையாமை இதற்குப் பெரிதும் காரணமாயிருந்திருக்கவேண் டும். பஞ்சாப் பகுதியிலுள்ள அம்பாலா மாவட்டத்தைச் சார்ந்த தாப்ரா என்னுமிடத்திலிருந்த ஒரு கல்வெட்டும், மீராத்தார் என்னுமிடத்திலுள்ள கல்வெட்டு ஒன்றும் தற்போது டெல்லியி லிருக்கின்றன. மத்திய இந்திய போபால் மாகாணத்திலுள்ள சாஞ்சியில், மற்றவைகளை இன்றும் காணலாம். இவ்விரு பிர தேசங்களும் தலைநகரான பாடலிபுத்திரத்திலிருந்து அதிக தூரத்திலுள்ளவை.

**சாம்ராச்சிய எல்லை**

அசோகனது சான்றுகள் பரவியிருக்கின்ற பாங்கிலிருந்தும் கல்வெட்டுகள் கூறும் குறிப்புகளிலிருந்தும், இலக்கிய வரலாற் றுச் செய்திகளிலிருந்தும் அவனது சாம்ராச்சிய எல்லையை ஓரள வில் அறிந்து கொள்ளலாம். இந்துகுஷ் வரையுள்ள, தற்காலத் தில் ஆப்கானிஸ்தானம் என்ற பெயரில் வழங்குகின்ற பகுதியும், பலூசிஸ்தானம், மாக்ரான் சிந்து, கட்ச் (காச்): ஸ்வாத் (சுவாத்) பள்ளத்தாக்கும், அண்டையிலுள்ள குடிகளின் பகுதிகளும், காஷ் மீர்; நேபாளம், இந்திய நாட்டின் பெரும்பகுதி, அஸ்ஸாம் நீங் கலாகவும், தெற்கில் மைசூரின் வட பகுதி மாவட்டங்களும், வட மேற்குச் சென்னையில் ஒரு பகுதியும் பேரரசில் அடங்கியிருந்தன. தென் கோடியிலிருந்த தமிழக நாடுகள் சுய ஆட்சி பெற்று விளங் கின. தற்போது சீன துருக்கிஸ்தானத்திலுள்ள கோட்டானி லும் பேரரசனின் ஆதிக்கம் பரவியிருக்கலாம். இது பெருவாரி யான ஊகமே அன்றி ஐயமற மெய்ப்பிக்கப்படவில்லை.

நாம் மேலே விவரித்திருக்கும் சாம்ராச்சிய முழுவதும் மன் னரின் நேரடி ஆட்சியில் இல்லை என்பதை வாசகர்கள் ஊகித் திருக்கக்கூடும். அதில், தன்னாட்சி நடத்தி வந்த பல பகுதிகளும் அடங்கியிருந்தன. அவை பேரரசிற்குக் கீழ்ப்படிந்து நடந்தன அல்லது ஒரு வகையாகத் திறை செலுத்திவந்தன என்று கூற லாம். காடு மலைகளில் வசித்து வந்த மூர்க்கமான அல்லது மிருக குணம் படைத்த பல இனத்தினரும் பேரரசில் அடங்கியிருந்த னர். அவர்கள் தங்களிச்சைப்படி தான்தோன்றி வாழ்க்கை

நடத்திவந்தனரேயன்றி, எந்த வகையான அரசையும் அவர்கள் பொருட் படுத்தியதாகத் தெரியவில்லை.

**வைசிராய்கள்**

அரசாங்க அதிகாரிகளால் ஆட்சி செய்யப்பட்டு வந்த பகுதிகள் ஏராளமாக இருந்தன. நான்கு வைசிராய்களைப் பற்றி நாம் கேள்விப்படுகிறோம். அது ஒரு திட்டமான விதியாக இல்லை எனினும் அவர்கள் நால்வரும் அரசகுலத்தைச் சார்ந்த இளவல்களேயாவர்.

வட மேற்கிலுள்ள வைசிராய் தட்சசீலத்தைத் தலைநகராகக் கொண்டிருந்தார். தற்காலத்தில் வழங்கி வரும் பெயர்களைக் குறிப்பிட்டுச் சொல்லும் போது,பஞ்சாப், சிந்து, பலூசிஸ்தானம் மக்ரான், ஆப்கானிஸ்தானம் ஆகிய பகுதிகளில் அவர் ஆட்சியிருந்ததாகக் கூறலாம்.

கிழக்குப் பகுதியிலுள்ள வைசிராய் ஒருவர் தோசாலி என்னும் பட்டினத்திலிருந்தார். அந்நகரம் ஒருவேளை கலிங்கத்துள் அடங்கியிருந்திருக்கக்கூடும். மேற்கு மாகாணங்கள் உஜ்ஜயியிலிருந்து ஆளப்பட்டுவந்தன. சுவர்ணகிரி (பொன்குன்று) தக்காணத்தின் தலைநகரமாக இருந்தது. பண்டைய பொன்விளையும் பூமியொன்றில் இது அமைந்திருக்கக்கூடும்.[1] இன்னும் பல வைசிராய்களும் இருந்திருக்கக்கூடும். எனினும் நால்வரின் பெயர்களே கூறப்பட்டுள்ளன. ஒரு பேரரசு நான்கு மாகாணங்களாகப் பிரிக்கப்படவேண்டுமென்ற அர்த்த சாத்திரக் குறிப்பு, வாசகரின் நினைவில் இருக்கக்கூடும்.

**தணிக்கையாளர்கள்**

அதிகாரவர்க்கத்தின் சலுகை மேலோங்கிய நல்லதொரு அரசியலை, அசோகன் தனது முன்னோர்களிடமிருந்து, வாரிசாகப் பெற்றான். 'உயர் அலுவலர்கள்' அல்லது அமைச்சர்களுக்கு மகாமாத்திரர் என்ற பெயர் வழங்கியது. அலுவலர்களுக்கு வரிசைக்கிரமான அந்தஸ்து வழங்கப்பட்டிருந்தது. பதினான்கு குகைக் கல்வெட்டுகளை வெளியிடும் போது பேரரசன் புதிய வகையான

[1] 1915 ஆம் ஆண்டில் 'மாஸ்கி' என்னுமிடத்தில் அசோகனது கல்வெட்டுகள் கண்டெடுக்கப்பட்டன. 'பல பண்டைய பொன்சுரங்கங்கள் உள்ள இடமொன்றில்' அது அமைந்திருக்கிறது. 'ஹட்டி' என்னுமிடத்திலுள்ள சுரங்கம் உலகிலேயே மிகவும் ஆழமானது (ஹைதராபாத் புதைபொருளாராய்ச்சித் தொடர் நூல் No 1, 1915) புதியகற்காலத்தின் இறுதியிலும், மாஸ்கி ஒரு முக்கிய குடியேற்றமாக விளங்கியது (புட். தொகுதி. வரலாற்றிற்கு முற்கால இந்தியா-குறிப்புகள் வால்யூம் பக். 31, 125, 126).

அலுவலர்களை அமர்த்தினன். 'தர்மமகாமாத்திகர்கள்' என்ற பெயர் அவர்களுக்கு வழங்கியது. அதற்கு ஒப்பாக நாம் அவர்களைத் தணிக்கையாளர் என அழைக்கலாம். அரசகுடும்பத்தின ருட்பட எல்லா மக்களிடையிலும், அவர் எந்த சமயத்தைச் சார்ந்தவராயினும் அல்லது அந்தஸ்து உடையவராயினும், புனித நெறி அல்லது பக்தியை (தர்மம்)ப்பரப்புவதற்கு இவ்வலுவலர் மன்னனின் உத்திரவு பெற்றிருந்தனர். தற்கால இந்து சாம்ராச்சியங்கள் சிலவற்றில் இத்தகைய அலுவலர்கள் இன்றும் அமர்த்தப்பட்டுள்ளனர்.[1]

சாசனங்களில் கூறப்பட்டுள்ள அறநெறிகளும், பிற நடைமுறை விதிகளும், புத்தசமயக் கோட்பாடுகளை ஒட்டியவை என்பது சில சான்றுகளிலிருந்து நன்கு தெரியவரும். ஆனல், எந்த சமயத்தைச் சார்ந்தவராயினும் பொதுவில் அந் நெறிகள் பொருந்துபவையாக விளங்குகின்றன. மிருகங்களைக் கொல்வதையும், அங்கஹீனம் செய்வதையும் தடுப்பதற்கென அசோகன் விதித்த தடைகள் நாட்கள் செல்லச்செல்ல மிகக்கடுமையாகி வந்தன. சில மக்களுக்கு இந்நிலை சற்று வருத்தத்தை அளித்தது. பேரரசனது சட்டங்கள், பலி கொடுத்து வேள்விகள் செய்யும் பழக்கமுடைய அந்தணரை நேரடியாக வருத்தியது. மீனவர், வேட்டுவர் மற்றும் சில எளிய மக்களுக்கும் இது துன்பத்தையே விளைவித்தது. அசோகனது மரணத்திற்குப்பின் சாம்ராச்சியம் சிதைவுற்றதற்கு,கடுமையான விதிகளால் மக்கள் கொண்டமனக் குறைவும் காரணமாக இருந்திருக்கவேண்டும். மன்னனது ஆணைகளை மக்கள் முறைப்படிகடைப்பிடித்து வருவதைக் கண்காணிப்பது தணிக்கையினரின் முக்கிய வேலைகளில் ஒன்ருகும். தண்டனை பெருது தப்புவதற்கென இலஞ்சமும், வஞ்சகமான வசைமொழிகள் ஆகியவைகளுக்கும், மக்களது தனிவாழ்வில் குறுக்கிடுவதற்குப் பல வாய்ப்புகளுக்கும் ஏராளமாக இடமிருந்திருக்கவேண்டுமென்பதைச் சுலபத்தில் ஊகித்து அறிந்துகொள்ளலாம். பிற்காலங்களில் இந்துசமயம் மற்றும் சமணசமயத்தைச் சார்ந்த மன்னர்களும் இத்தகைய முறைகளைக் கையாண்டு வந்தனர். பிற்காலத்தில் நிலவிய நிலையை அடிப்படையாகக் கொண்டு எண்ணும் போது, குற்றவாளிகளுக்கு மரண தண்டனையும் விதிக்கப்பெற்று வந்தது என்பது நன்கு புலனகும்.

[1] இஸ்லாமிய நெறியைப் புகுத்துவதற்கென ஔரங்கசீப்பினல் அமர்த்தப்பெற்ற முடாசிப்புகளும் இவ்வகையினரே யாவர்.

**அறநெறிகளின் முக்கியசாரம்**

இரண்டாவது துணைக்குகைக்கல்வெட்டில் அசோகனது அறநெறிகளின் சுருக்கத்தைத் தெளிவாகக்காணலாம். மாட்சிமை தங்கிய மன்னர் இவ்வாறு கூறுகிறார் :

'தந்தையையும், தாயையும் வணங்கி நடத்தல் வேண்டும்; அதைப்போலவேஜீவராசிகளிடம்மரியாதைசெலுத்துகின்ற பண்பையும் வற்புறுத்தவேண்டும். உண்மை பேசுதல் வேண்டும். கடமைநெறி (அல்லது பக்தி, தர்மம்)யின் சீரிய குணங்கள் இவை. இவைகளைக்கடைப்பிடித்தல் வேண்டும். ஆசிரியனை மாணவன் வணங்குதலும், உறவினருக்கு மரியாதை செலுத்துவதும் இது போன்றவைகளே யாகும்.

பண்டைய அறத்தின் (பக்தி) அளவு கோல் இதுவே யாகும். இவை வாழ்நாட்களை அதிகரிக்கச்செய்கின்றன. இதைக் கடைப்பிடித்தே மக்கள் வாழ்தல் வேண்டும்.[1]

'மரியாதை செலுத்துதல், ஜீவராசிகளை மதித்து வாழ்தல், உண்மை பேசுதல்' ஆகிய மூன்று கடமைகளையும் சாசனங்கள் மீண்டும் மீண்டும் வற்புறுத்துகின்றன. நாம் மேலே குறிப்பிட்டுள்ள கருத்துகளின் சுருக்க உரையில் 'அடக்கம்' முதன்மையானதாகப் பேசப்படுகிறது. ஆனால் போதனைகளின் உட்கருத்து உயிரினங்கள், மனிதர் அல்லது பிராணிகளின்மீது கருணை வேண்டுமென்பதையே அதிகமாக வற்புறுத்துகின்றது.

**சாசனங்களிலிருந்து ஒருசில வாசகங்கள்**

சாசனத்தின் உட்கருத்தை நன்கு அறிந்து கொள்வதற்கு அவ்வாசகங்களில் ஒரு சிலவற்றை அவ்வாறே கற்பது, அதற்கு விளக்கம் கூறுவதைக் காட்டிலும் நற்பயனளிக்குமென்பது துணிவு.

'கீழ்த்துறை அதிகாரிகளும், கமிஷனரும், மாவட்ட அதிகாரிகளும்-ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை தேசமெங்கிலும் சுற்றிவர வேண்டும். மாமூலான அவரது அலுவல்களைக்கவனித்து வருவதுடன், கர்மவழியை மக்களுக்குப் போதனை செய்வது (பக்தி) என்ற குறிப்பான அலுவலையும் கவனிக்க வேண்டும்—தந்தை

1 இதைத் திரு. யாஸ்டனி என்பவர், தைத்ரேய உபநிடதத்திலுள்ள சிக்ஷவல்லி என்னும் பகுதியுடன் ஒப்பிடுகிறார்-மொழி பெயர்ப்பு, 'கிழைநாட்டுப் புனித நூல்கள்' வால். XV, பகுதி ii-ஓரளவு ஒற்றுமை காணலாம்.

தாய் சொல்கேட்பது போற்றுதற்குரிய (சிறந்த) செயலாகும்; துறவிகள், பிராமணர், உறவினர்கள், நண்பர்கள், தெரிந்தவர்கள் ஆகியவர்களுக்கு வாரி வழங்குவது போற்றுதற்குரியது; உயிரினங்களைக் கொல்லாது இருப்பது நற்செயலாகும்; சிறு சேமிப்பும், சிக்கனமும் நன்மை தருபவை'' (குகைக்கல்வெட்டு III).

'கர்ம வழியைப் போதிப்பது, நட்புப்பாராட்டிக்கடனுற்றுவது, முழுமனத்துடன் செயற்படுவது, பணியாற்றுவதில் ஒத்துழைப்பது இவைகளைத்தவிர, தர்மம் வழங்குவது என்ற தனியானதொரு செயலில்லை..

இதை மேலும் விரித்துரைத்தால்—வேலையாட்களையும், அடிமைகளையும் அன்புடன் நடத்துவது, தந்தை தாய் சொல் பேணுவது ஆகியவைகளேயாம்' (குகைக்கல்வெட்டு XI).

'தனது இனத்திற்கு அளவுக்கு மீறி மரியாதை செலுத்துவதும், காரணமின்றிப் பிற இனங்களைப் பழிப்பதும் கூடாது. குறிப்பிட்ட காரணங்களுக்கு மட்டிலுமே குறைகூறுதல் அனுமதிக்கப்படும். பிற இனத்தினர் யாவருமே ஏதாகிலும் ஒரு காரணம் பற்றி வந்தனைக்குரியவ ராவார்கள்.

இவ்வாறு நடந்து கொள்வதால், மனிதன் தனது இனத்தையே உயர்த்திக்கொள்கிறன். அதே நேரத்தில் பிற இனத்தினருக்கும் தொண்டாற்றுகிறன். இதற்கு மாருக நடந்து கொள்வதால், ஒருவன் தன் இனத்திற்குக் குற்றமிழைக்கிறன். பிற இனத்தைச் சார்ந்த மக்களுக்கும் கேடுவிளைக்கிறன்' (குகைக்கல்வெட்டு XII). [1]

'இகத்திலும், பரத்திலும் இன்பமெய்துவது மிகக்கடினம். கர்ம வழியை (பக்திநெறி) ஆர்வமுடன் கடைப்பிடிப்பதாலும், தீவிர ஆத்ம சோதனையாலும், நிகரற்ற கீழ்ப்படியும் தன்மையாலும், அதிக அடக்கத்தாலும், முயற்சியாலுமே இன்பமெய்த இயலும்' (தூண்கல்வெட்டு I).

'கர்ம வழி மிகச் சிறந்ததே யாகும்.'

'ஆனல் அவ்வழி எது ? சிறிது அறிவு–சிறிது பக்திக்குறைவு, பல நற்செயல்கள், சிறிது இரக்கம், ஈகை, உண்மை, தூய்மை' (தூண்கல்வெட்டு II).

1 கொள்கைகளைத் தவருது கடைப்பிடிப்பவனை ஒவ்வோர் இனமும் போற்றுகிறது. உண்மையில் அவனை ஏற்றிப்புகழ வேண்டும் (அக்பரின் 'ஆனந்தவாக்குகள்' ஐன். வால். iii-மொழிபெயர்ப்பு-ஜாரட் பக். 391)

'எனது முன்னோர்களான மன்னர்கள் மனித இனத்திற்குப் பல தொண்டுகள் ஆற்றியுள்ளனர். நானும் அவ்வாறே செய்து வருகிறேன். கர்ம வழியை (பக்தி) மக்கள் கடைப்பிடிக்கவேண்டுமென்பது என் ஆசை. நான் எண்ணுவதுபோல அது நிறைவேறியுள்ளதா?' (தூண்கல் வெட்டு VII).

இன்று பௌத்தமதம் பரவியுள்ள நாடுகளில் வழக்கிலிருந்து வரும் பழக்க வழக்கங்களிலிருந்தும், பௌத்த சமய நூல்களிலிருந்தும், அசோகனது கருத்துகள் ஒவ்வொன்றிற்கும் ஆதாரம் கூறலாம். பொதுவாக எடுத்துரைக்கப் பெற்ற அறநெறிகளை எந்தச்சமயத்தைச் சார்ந்தவராயினும் ஏற்பர் என்பதைச் சமண், பிராமண நூல்களிலிருந்தும் மேற்கோள்கள் காட்டி விளக்கலாகும். 'கொல்லாமை' (அகிம்சை) என்ற குறிக்கோளைப் பௌத்தர்களைக் காட்டிலும் சமணரே மிகவும் தீவிரமாகப் பின்பற்றினர் என்பது தெளிவு. யாகம் முதலிய சடங்குகளைச் செய்வதற்கு 'மிருக பலி' இன்றியமையாததென்று நம்பிய பிராமணர் அரசனது கருத்துகளை முழுவதும் ஆதரிக்க இயலாத நிலையிலிருந்தனர். மிருக பலியைக் கையாளும் முறையின்மீது அருவருப்புத் தோன்றி வளர்ந்து வந்ததென்ற உண்மையை இதே நூலில் முன்னொரு பகுதியில் எடுத்துரைத்தோம். மிகச் சிறந்த பேரரசொன்றின் துணைகொண்டு அசோகன் மேற்கொண்ட முயற்சிகள் இக் கருத்தை மேலும் ஊன்றி வளரச் செய்வதாயிற்று. இவ்வாறு மக்களின் உள்ளத்தில் ஊன்றி விட்ட கருத்து மேலும் பல்லாண்டுகளுக்கு மக்கள் சிந்தனையில் பசுமையாக இருந்தது. 'எல்லோரும் இன்புற்றிருப்பது' என்ற கொள்கைக்குப் பிற சமயங்களைக் காட்டிலும் பௌத்தம் அதிக மதிப்பளித்திருந்தது. இதையே அறவாழ்க்கையின் முக்கியக் குறிக்கோளாக அது கொண்டிருந்தது. இகவாழ்வின் கேடுகளையும் பரலோகத்தின் பெருமைகளையுமே முக்கியமாகப் பேசி வளர்த்த பௌத்த சமயம், நடைமுறையில் மக்களின் இன்ப வாழ்விற்கு வழிவகுத்ததென்பது குறிப்பிடத்தக்கது. அப் புத்த சமயத்தைப் பின்பற்றிய பர்மா நாட்டு மக்களிடையில் இதை நாம் காணலாம்.

### அசோகன் ஆர்வமிக்கதோர் பௌத்தன்

நாட்டில் உள்ள எல்லாச் சமயங்களையும் அசோகன் சமமாக பாவித்தான். ஒவ்வொரு மதத்தையும் வளர்ப்பதற்கென அவன் பொருளுதவி செய்யவும் விருப்பமுடையவனாக இருந்தான். திகம்பரர் அல்லது நிர்வாண சமணரைப் போன்ற அஜீவகர் என்னும் சுயேச்சையான சமயப் பிரிவினருக்கு அவன் வழங்கிய விலையுயர்ந்த பரிசுகள் இதற்குச் சான்று கூறுகின்றன. ஆயினும்

அவன் பௌத்த மதத்தையே விரும்பி ஏற்றான். மிகப் பழமையான பாப்ரு சாசனத்தில் பௌத்த சமயக் கொள்கையைப் பரப்புவதில் தனக்குள்ள ஆர்வத்தை அழகாகக் கூறியுள்ளான். பௌத்த சங்கத்தினரின் கவனத்திற்கென வெளியிடப் பெற்ற இச்சாசனம், கிழக்கு ராஜஸ்தானத்தில் பெருங் கற்பாறை ஒன்றில் செதுக்கப் பெற்றுள்ளது.

சங்கத்தின் மீதும், புனிதக் கோட்பாட்டின் - மீதும், பௌத்தன் மீதும் அவனது நெறியின் மீதும் எனக்குள்ள ஆர்வமும் மதிப்பும் எத்தகையவென்பதை, புனிதர்களே, நீங்கள் நன்கு அறிவீர்கள்.

வந்தனத்திற்குரிய பௌத்தன் கூறியிருப்பவை யாவும், சாலச் சிறந்த வாக்குகள் என்பதையும், புனிதர்களே, நீங்கள் நன்கு அறிவீர்கள்.

மேலும் தொடர்ந்து, புனித சமய நூல்களிலிருந்து ஏழு பகுதிகள் அல்லது வாசகங்களை அசோகன் எடுத்துரைக்கிறான். பிக்ஷுகளும், பிக்குணிகளும் மற்றும் ஆண் பெண் பாலரடங்கிய சாதாரண பௌத்த சமயத்தினரும் இவைகளை நன்கு கற்றுணர வேண்டும் எனக் கூறுகிறான். இவ்வாசகங்கள், பௌத்த ஆகமங்களில் இருப்பவையென ஆராய்ந்து அறியப்படுகின்றன. புகழ் பெற்ற முதல் பேருரையில் இவை தொடங்கி, உண்மையையே பேச வேண்டிய அவசியத்தைத் தன் மகன் ராகுலனுக்குப் புத்தன் கூறியுள்ள அறிவுரை வரையிலுள்ளவை இதில் அடங்குகின்றன.[1]

பிளவு மனப்பான்மைக்கு, நாடு கடத்துதலே தகுந்த தண்டனையென்று வலியுறுத்தும் மூன்று துணைக் கல்வெட்டுகளிலும் (சாரநாத், சாஞ்சி, கௌசாம்பி) நேபாளத் தாரையிலுள்ள கல் தூண்களிலும் பௌத்த மணமே வீசுகின்றன.

### அசோகனின் கடுமையான உழைப்பு

அசோகன் கடுமையாக உழைத்தான்; மிகக் கடுமையாக உழைத்தான். 'மன்னனொருவன் உழைப்பாளியாக இருந்தால்

1 சாரநாத்திலுள்ள மான்பூங்காவில், தனது முதல் ஐந்து சீடர்களுக்கு, புத்தனளித்தபோதனையே பைரத்சாசனத்திலுள்ள, வினயசமுகேஸ் என்று கொள்வது ஐயத்திற்கிடமானது. மாற்றுக் கருத்துகள் பல கூறப்படுகின்றன. 'புத்தனின் போதனைகளில் மேலும் சில'(லண்டன் 1926-7 வால். i, பக். 300, வால். ii பக். 313) என்னும் நூலில், ராகுலனுக்குப் புத்தன் கூறிய மதியுரைகளின் மொழி பெயர்ப்புகள் இரண்டு அடங்கியுள்ளன.

[அர்த்தசாத்திர நூலாசிரியர் கூறுவர்] அவனது குடிகளும் அவனைப்போலவே உழைப்பாளிகளாவர்......அவையிலிருக்கும் போது, விண்ணப்பதாரர்களை அவன் வாயிலில் காத்திருக்குமாறு செய்வது கூடாது. ....தெய்வங்கள், நாத்திகர், வேதங்கற்றுணர்ந்த வேதியர், பூமி, புனிததலங்கள், சிறுவர், வயோதிகர், நலிவுற்றோர், கதியற்றவர், பெண்டிர் ஆகிய இவர்களது அலுவல்களை அவ்வப்போது நேரடியாகக் கவனித்தல் வேண்டும். இத்தகைய அலுவல்களின் தேவைக்கேற்பவும், அளவிற்கேற்பவும் வரிசைக் கிரமமாகக் கவனித்தல் வேண்டும்.

அவசரத்தேவைகளைத் தள்ளிவைக்காது உடனடியாகக் கவனிக்கவேண்டும். அவைகளைக்காலந்தள்ளிவைப்பதால் சிக்கல் அதிகரிப்பதோடு, நன்முறையில் கவனிக்கவும் இயலாது போய் விடுவதுமுண்டு. புனித சூளுரைப்பதென்பது ஒரு மன்னனுக்குப் பணிபுரிவதிலுள்ள ஆர்வத்தை வெளிப்படுத்துகிறது. திருப்திகரமாகக் கடமையை நிறைவேற்றுவது வேள்வியைப் போன்றதாகும். யாவரையும் சமமாகப்பாவித்துப் பணிபுரிவது அவனை மன்னனாக ஏற்றதற்குக் கூலியாகவும், புனித மகுடாபிஷேகச் சடங்கின் நற்பலனாகவும் விளங்கும்.

மக்கள் இன்புற்றிருத்தலிலேயே அவன் இன்பம் காண இயலும். அவர்கள் நலனைப் பேணுவதால் அவனும் நலன் பெறுவான். தனக்கு இன்பம் தருவதையே நல்லதென்று அவன் எண்ணலாகாது; மக்களுக்கு நலன் விளைவிக்கின்ற செயலையே அவன் நற்செயலாக எண்ணவேண்டும்.

எனவே, மன்னன் எப்பொழுதும் சுறுசுறுப்பாகத் தன் கடமையைச் செய்யவேண்டும். செல்வத்தின் ஆணிவேர் தளரா உழைப்பேயாகும்: இதற்கு நேர்மாறாக இருப்பது துன்பமேயாகும்.

**அரசபதவியைப் பற்றிய ஆசிய நாட்டுக் கருத்து**

தன்னிடத்தில் எடுத்துவரப்படும் வழக்குகளையும், முறையீடுகளையும் பெரும்பாலும் மன்னன் நேரிலேயே கவனிக்கவேண்டும். அவைகளுக்கு முடிவான நியாயம் தலத்திலேயே வழங்கவேண்டும். தீர்ப்பு, பல சட்டச்சிக்கல்களுக்கு இலக்காக இருக்கக் கூடாது. மிகவும் கீழ் நிலையிலுள்ள குடிமகனும், அரசனை நேரில் காணும் வாய்ப்புப் பெற்றிருக்கவேண்டும். இதனால் அரசனுக்குச் சிறிது துன்பம் நேருவதாயினும் பொருட்படுத்தலாகாது. ஆசிய நாட்டுக் கருத்துகளுக்கிணங்க இவைகளே நல்ல மன்ன

னுக்குரிய இலக்கணங்களாக விளங்குகின்றன. அசோகன் இறந்த பல ஆண்டுகளுக்குப்பின் தைமூர் வமிச மன்னர் இக் கருத்துகளினடிப் படையில் அரசு செலுத்தினர். நாள்தோறும் மக்களுக்குப் பேட்டியளிப்பது என்ற பழக்கத்தை முக்கியக் கடமையாகக் கொண்டிருந்தனர். ஜஹாங்கீர் என்பவன் பொது வாக அரசியல் பணிகளில் அதிகமாகக் கவனம் செலுத்தவில்லை. ஆனால், அவனும் தன் அறிவிற்கு எட்டிய வகையில் நியாயம் வழங்கவேண்டும் என விரும்பினன். இதற்காக நாள்தோறும் மூன்று வேளைகளில் மக்களுக்குப் பேட்டியளிக்கும் வழக்கமும் அவனிடமிருந்தது.

'நியாயம் வழங்குதும், நல்லாட்சி புரிவதும், மன்னர்களுக்குத் தெய்வ வழிபாட்டிற்கு ஒப்பானதாகும்' என அக்பர் கூறுவ துண்டு. அர்த்தசாத்திர நூலிலிருந்து நாம் கையாண்டுள்ள மேற்கோள் ஒன்றின் கருத்தை இது எதிரொலிக்கின்றது.

**அசோகன் தன்னைப்பற்றிக் கூறியது**

அசோகன் இவ்வாருன கருத்துகளை நன்கு இயன்ற அளவு வலியுறுத்தி எடுத்துக் கூறினன்:

கடந்த பல ஆண்டுகளாக எந்நேரமும் செய்தியனுப்புவதும், செய்திகளைப்பெறும் வேலையும் நடைபெறவில்லை. நான் உண வருந்திக்கொண்டிருந்தாலும், மாதர் அந்தப்புரத்திலிருந்தாலும், எனது தனி அறையிலிருந்தாலும், ஏகாந்தமாக இருந்தாலும் வாகனத்தில் (?) சென்று கொண்டிருந்தாலும் அல்லது அரண் மனைத் தோட்டங்களிலிருந்தாலும், செய்தி அறிவிக்கும் அலுவலர் கள் மக்களைப் பற்றிய செய்திகளை எனக்கு எப்போதும் அறிவிக்க வேண்டுமென நான் ஏற்பாடு செய்கிறேன். மக்களுக்கான அலுவல்களைக் கவனிப்பதற்கு நான் எப்பொழுதும் எங்கும் சித் தமாயிருக்கிறேன். எந்த விடத்திலும், எந்த நேரத்திலும் எனக் குச்செய்தி உடனே அறிவிக்கப்படவேண்டுமென்பது என் ஆணை யாகும். முயற்சிகளை மேற்கொள்வதிலும், தொண்டு புரிவதிலும் எனக்குப் பூரண திருப்தி என்றுமே ஏற்பட்டதில்லை. எல்லோரு டைய நலன்களையும் பேணுகின்ற கடமை எனக்கு உண்டு. அதன் அடிப்படை வேர்களாக விளங்குவது முயற்சியும் செயலாற்று வதுமே யாகும். நான் உழன்று வருவனவெல்லாம், உயிரினங் களுக்கு நான் பட்டுள்ள கடனைத் தீர்ப்பதற்கே யாகும். இதனல் ஒரு சில ஜீவன்களுக்கு என்னல் இக வாழ்வில் சுகமளிக்க முடி கிறது. அவை, மறு உலகில் பேரின்பத்தை அடையாலகும்... [குகைக்கல்வெட்டு VI சிறிதுமாறுதலுடைய வாசகம்].

ஐரோப்பிய நாட்டு அலுவலன் ஒருவனது, கண்கொண்டு பார்க்கும்போது, ஒழுங்கான முறையில் கடனிறுப்பதற்குக் குந்தகம் விளையுமென அசோகனது சட்டதிட்டங்களைக்குறை கூறுவது இயலும். அரசாங்க அலுவல்களைக் கவனிப்பதில் குறுக்கீடுகள் பல ஏற்படலாகும். ஆசியாவிலாயினும் அல்லது ஐரோப்பாவிலேயாயினும் இக்கூற்றுக்கு மதிப்பும் உண்டு. அரசாங்க அலுவல்களைத் தான் நேரடியாகக் கவனிக்கவேண்டுமென்று மன்னன் விரும்புவதும், மக்கள் மன்னனைச் சந்திக்கும் வாய்ப்பும் தேவையென்ற கொள்கையும் கீழை நாடுகளில் மிகவும் போற்றிக் கடைப்பிடிக்கப்பெற்றது. மக்களின் மனத்திற்குத் திருப்தியளிக்கின்ற இச்செயல்கள் மன்னனது செல்வாக்கை மிகவும் அதிகரிக்கின்றன. இதனல் ஒருசில அசௌகரியங்கள் நேருவதாயிருந்தபோதும் மன்னன் அதைப் பொருட்படுத்தவேண்டுவதில்லை. உண்மையில் அசோகன் வகுத்த முறைகளால் அத்தகைய அசௌகரியங்கள் பல உண்டாயின.

**மௌரியரின் கலை**

குப்தர்காலத்திய கலைகளைப் பற்றி எழுதும்போது நான் சில கருத்துகளைத் தெரிவித்துள்ளேன். அக் கருத்து மௌரியரின் கலைக்கும் பொருத்தமுடையதேயாகும். குறிப்பாக, அசோகனது ஆட்சிக்கு அது மிகவும் பொருந்துமாகையால், அதை இங்கும் எடுத்துரைப்பதால் சற்றுத்தெளிவு பிறக்குமென எண்ணுகிறேன். இதைவிடச் சிறந்த வாய்ப்பு எனக்குக் கிடைப்பதரிது.

இந்திய நாட்டில், வலிமை மிக்கதொரு குலம், பரந்த சாம்ராச்சியத்தை ஆண்டுவரும்போது, மக்களின் புத்திக்கும் கலைத்திறனுக்கும் நல்லதொரு ஊக்கம் பிறந்திருக்கிறது. நல்லாட்சி நடத்தியும், வாணிபத்தைப் பேணியும், பிற நாடுகளுடன் வாணிபம் மற்றும் அரசியல் தொடர்புகள் கொண்டும், பகட்டும் ஆடம்பரங்களும் மிக்க அவைகள் கூட்டியும், அவ்வரச குலங்கள் புகழ் பெற்றன. பெருஞ்சாதனைகள் புரிய வேண்டுமென்ற மனப்பாங்கு வளர்ந்ததோடு ஏராளமான பொருளுதவியும் செய்து வந்தமையால், நூலாசிரியரும் கலைஞரும் வாழ்வதற்கு நல்ல வசதியேற்பட்டது.[1]

நான் குறிப்பிட்டுள்ள மேலே கண்ட வாசகத்திலுள்ள சூழ்நிலை அசோகனது ஆட்சியில் நிலவியது. நற்கலைகளும், இலக்கியமும் வளர்வதற்குச் சாதகமான சூழ்நிலையிருந்தது.

1 ஆல்டா ஷியாடிஸ்ஷே - ஸீட்ஸ்ச்ரிப்ட், - ஏப்ரல். ஜூன் 1914 பக் 1

அவனது பாட்டனை சந்திரகுப்தன் ஆட்சியிலும், தகப்பனை பிந்துசாரன் ஆட்சியிலும், அசோகனது ஆட்சியைப் போலவே கலைகள் வளர்வதற்கு நல்வாய்ப்பு இருந்ததெனலாம். முதல் மௌரியப் பேரரசனின் ஆட்சியில் மிகச் சிறந்த கட்டடங்கள் கட்டப்பெற்றிருக்க வேண்டும் என நம்புவதற்கு இடமுண்டு. கட்டடக்கலையுடன் சிற்பம், வர்ணம் தீட்டுதல் மற்றும் அலங்கார வேலைப்பாடுகள் ஆகிய கலைகள் யாவும் வளர்ந்திருக்க வேண்டும். பாரசீக மன்னர்கள் வசித்த அரண்மனையைக் காட்டிலும் சந்திர குப்தனின் மாளிகை சிறந்திருந்ததென்பதைக் கிரேக்கர் கூறு கின்றனர். அரண்மனையிலுள்ள அலங்கார வேலைப்பாடுகள் சில வற்றையும் அவர்கள் குறித்திருக்கின்றனர். ஆனால் இவை யாவும் மறைந்துவிட்டன என்றே கொள்ளவேண்டும். ஆதி மௌரியர் கால மன்னர்களின் கலைப்பொருள்கள், தட்சசீலம் மற்றும் பாடலிபுத்திரம் ஆகியவிடங்களில் மேற்கொள்ளப் பட்ட புதைபொருளாராய்ச்சியால் கண்டெடுக்கப்படவில்லை. இதனால் அப்பொருள்களின் கலையழகை விமர்சனம் செய்யும் வாய்ப்பு இல்லாது போயிற்று. நமது அறிவிற்கு எட்டுகின்ற வகையில் அசோகனது முன்னோர்கள் உருவாக்கிய கலைப் பொருள்கள் காலப்போக்கில் அழிகின்ற மரத்தாலானவை என்பதே இந்நிலைக்குப் பெரிதும் காரணமாக இருந்திருக்க வேண்டும். சமீபகால பர்மா மன்னர்களும் இதைப் போலவே மாண்டலே என்னுமிடத்தில் பெருங்கலைக் கட்டடங்களை எழுப்பி யிருந்தனர். அஸ்திவாரமிடுவதற்கு மட்டிலுமே சந்திரகுப்த மௌரியன் காலத்திலும் அவனது மகன் காலத்திலும் செங்கல் லும் கருங்கல்லும் பயன்பட்டனவென்று தெரிய வருகிறது. மேல் கட்டடங்களும், தளங்களும் மரத்தினாலேயே அமைக்கப் பட்டன. அலங்கார வேலைப்பாடுகளும் மரத்தைப் போலவே எளிதில் நசிக்கக்கூடிய பொருள்களாலேயே செய்யப்பட்டிருந் தன. எதிர்பாராதவிதமாக, முற்கால மௌரிய சிற்பமொன்று கல்லிலோ அல்லது சுட்ட களிமண்ணிலோ புதை பொருளா ராய்ச்சியாளரின் முயற்சியால் கிடைத்தாலன்றி மௌரியர் கலைத்திறனைப் பற்றிய நமது அறிவு மேலும் ஒளிபெறுவதற்கு எவ்வித வழியுமில்லை. கட்டடம், சிற்பம் மற்றும் சித்திர வேலைப் பாடுகளுக்கு, கருங்கல்லை உபயோகிக்கும் வழக்கம் அசோகன் காலத்திலேயே தொடங்கியது எனலாம். பாரசீகர் அல்லது கிரேக்கரின் அடிச்சுவட்டை அசோகன் பின்பற்றியிருக்க வேண் டும். அசோகன் காலத்திற்கு முன்பு கற்களால் கட்டடம் எழுப்புவது வழக்கிலில்லை என்று வலியுறுத்துவதற்கோ அல்லது நம்புவதற்கோ நான் தயாராக இல்லை. கலைப்பொருள்கள் யாவும் அழிகின்ற பொருள்களாலேயே உருவாக்கப்பெற்றவை

என்ற கருத்தும் அத்தகையதேயாகும். ஆனால், உறுதியான சில சான்றுகளிலிருந்து, கட்டடம் கட்டுவதற்கும், சிற்ப வேலைகளுக்கும் கல்லின் உபயோகம் சிறிதளவே இருந்து வந்ததென்பது மட்டிலும் தெரியவருகின்றது. மெகாஸ்தனீஸ் பாடலிபுத்திரத்தில் வசித்து வந்தபோது அந்த நகரத்தைச் சுற்றிலும் மரத்தினாலான மதிற் சுவரே இருந்தது. மதில்கள், நகத்திலமைந்த கல் மாளிகை, மற்றும் பல புனிதச் சின்னங்களும் அசோகனால் எழுப்பப் பெற்றவையென்றே தெரிய வருகிறது.[1]

**அசோகன் காலத்திய சிற்பம்**

பில்ஸாவில் காணப்படும் சில ஸ்தூபிகள் அவனால் கட்டப்பெற்றவை என்று கொண்டாலொழிய அசோகன் காலத்திய கட்டடங்கள் இன்றுமிருப்பதாகக் கூறுவதற்கில்லை. புராதன ஸ்தூபி ஒன்று அரை வட்ட வடிவமான செங்கற் கட்டடமாகக் காட்சியளிக்கின்றது. கட்டடக் கலையைவிளக்குவதாக சிறப்புகள் எதுவும் அங்குக் காணப்படவில்லை. கட்டடங்களை ஆய்வதைவிடச் சிற்பங்களின் உதவியுடனேயே அசோகர் காலத்திய கலைச்சிறப்பை நாம் நன்கு அறியலாகும். சீரிய சிற்பங்கள் சில அக்காலத்திய கலைச் சிறப்பை நன்கு வெளிப்படுத்துகின்றன. சிறந்து விளங்கும் இக்கலை, படிப்படியாக அடைந்த வளர்ச்சியை மேலே குறிப்பிட்ட காரணங்களால் நாம் உணர முடிவதில்லை. தந்தம், மரம் ஆகிய பொருள்களில் முன்னோர்கள் சிற்பங்களை உருவாக்குவதில் கைப்பிடித்த உத்திகளையே, கல்லில் உருவாக்குவதிலும் கடைப்பிடித்திருக்க வேண்டும். தனக்கு எளிதில் கிடைக்கக்கூடிய மூலப்பொருளில் சிற்பம் தீட்டுவதையும் அதன் மூலமாகத் தனது திறமையை வெளிப்படுத்துவதையும் பண்டைய இந்தியர் மிகவும் போற்றி வந்தனர். உருவங்களமைந்த சிற்ப வேலைப்பாடுகளை என்றும் நிலைத்திருக்கக்கூடிய கல்லில் செதுக்கவேண்டுமென்று அசோகன் விரும்பினான். காலப்போக்கில் அழிகின்ற தன்மையையுடைய பொருள்களிலேயே சிற்பம் தீட்டிப் பழக்கமுற்ற சிற்பிகளின் திறனை, மூலப்பொருள் மாறியபோதும் பயன்படுத்தக்கூடிய வாய்ப்பு அசோகனுக்கு இருந்தது. இந்தியச் சிற்பிகள் தங்கள் திறனைக் கல்லில் செதுக்குவதிலும் பயன்படுத்தும் வல்லமை பெற்றிருந்தனர்.

1 நூல் அசோகனின் சாம்ராச்சியத்தை, அதிலும் குறிப்பாக வட இந்தியாவை மட்டிலுமே கூறுகின்றது. தமிழகத்தில் கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில் இந்துக்களின் கோவில்கள் மரம் அல்லது செங்கலால் கட்டப்பட்டன. ஆறாவது நூற்றாண்டின் இறுதிவரையில் கற்களால் கட்டுகின்ற வழக்கம் ஏற்படவில்லை. பல்லவர் ஆட்சியில் இது தொடங்கியது எனலாகும் (ஜோவோட்யூப்ராய் - (பல்லவ காலப் பழம் பொருள்கள், புரோப்ஸ் தெயின் லண்டன் 1916 பக். 74)

அசோகன் காலத்திய கலைப் படைப்புகளில் பாரசீக, கிரேக்க வாசனை வீசுகின்றபோதும், கற்பனையும், படைப்பும் முழுவதும் இந்தியப் பாணியிலேயே அமைந்திருந்தன. உதாரணமாகப் பிரசித்திபெற்ற சாரநாத் சிற்பத்தை எடுத்துக் கொள்வோம். தேசிய முத்திரையின் சின்னமாக அதை இன்று இந்தியக் குடியரசு கடைப்பிடித்திருக்கிறது. இதன் அமைப்புக்கான திட்டம் பாரசீகப் பாணியை அடிப்படையாகக் கொண்டது ஆனால், பரிவட்டத்தில் பொறிக்கப் பெற்றுள்ள சிங்கங்கள், உருவத்திலும் கலை அழகிலும், தோற்றத்திலும் பாரசீகக் கலையைக் காட்டிலும் மாறுபட்டவையாகவும் மேம்பட்டவையாகவும்விளங்குகின்றன. நான்குபக்கங்களிலும், கீழ்ப்பகுதியில் உள்ள பீடத்தில் துணையாகச் செதுக்கப்பட்டுள்ள பிராணிகளின் உருவங்கள், முற்றிலும் இந்தியரின் கலைப்படைப்புகளேயாகும். இந்தியப் பண்பாட்டில் நன்ருக ஊறித் திளைக்காத கலைஞன் ஒருவன் இவைகளைத் தோற்றுவித்திருக்க முடியாது. அவன் வேறு வகை மூலப்பொருள்களில் பயிற்சி பெற்று வந்தவன் என்பதைப் பற்றி நமக்கு அக்கறையில்லை.

### சீரான படைப்பு

அசோகன் அமைத்த ஸ்தூபிகளில் மிகச்சிறந்தவை சில கலையழகின் சிகரமாக விளங்குவது வியப்பாக இருக்கிறது. கிரேக்கர் கலையை ஆய்ந்து உரைப்பதில் மிக அனுபவம் வாய்ந்த சர் ஜான் மார்ஷல், சாரநாத்திலுள்ள கல்தூணைக் கீழ் வருமாறு புகழ்ந்து பேசுகிருர் :

'கல்தூணிற்கு அருகில் உடைந்த பகுதியொன்று கிடைத்தது. பிரசித்தி வாய்ந்த மணியைப் போன்ற அடித்தளத்தின் மேல் நான்கு சிங்கங்களின் உருவத்தையுடைய பெர்சிபாலிடன் வகையைச் சார்ந்த சிற்பத்தின் மேல் சகடையொன்ருக அது விளங்குகிறது. இவைகளின் மத்தியில் ஒரு வட்டம் அல்லது 'தர்மசக்கரமும்' பொறிக்கப் பட்டிருந்தது. சாரநாத்தில் பிரகடனம் செய்யப்பெற்ற தலையாய அறநெறியின் சின்னமாக இது விளங்கி வருகிறது. மணி, மற்றும் சிங்க உருவங்களுக்கு எவ்விதக்குறையு மேற்படவில்லை. கையாளப் பெற்றுள்ள உத்தியிலும், வேலைப்பாட்டிலும் நிகரற்றவைகளாக விளங்குகின்றன. இந்திய நாட்டில் இத்தகைய அழகுவாய்ந்த சிற்பங்கள் இன்றும் உருவாக்கப் பெறவில்லை. பண்டைய கலைப்பொருள்களில் கலையழகில் இவைகளை மிஞ்சுவதற்கு வேறு எதுவுமில்லை என்று நான் உறுதியாகக் கூறத்துணிகிறேன்.'

அதே அனுபவமிக்க கலாரசிகர் மற்றுமோர் இடத்தில்குறிப்பிடுவதாவது : 'போற்றுதற்குரிய கலை நுணுக்கமும் வேலைப்பாடும் மௌரியரின் கலைப்பொருள்களில் நாம் காணலாம். அதீனியாவில் எழுப்பப்பெற்ற மிகச்சிறந்த கட்டடங்களிலும், இதை மிஞ்சுவதற்குரிய கலைப்பொருள் இல்லை என்று நான் துணிந்து கூறுவேன்

கல்லில் உருவம் செதுக்கும்அக்காலச்சிற்பிக்கு இணை கூற இயலாது. மெருகிடப்பட்ட ஒரே பொறைக்கற்களாலான கல்தூண்களில் சில அடித்தளம் நீங்கலாக நாற்பது அடி உயரமுள்ளவை. வியப்பளிக்கும் இவை கலைத்திறனுக்கு உரியசான்றுகளாக இருக்கின்றன.கடினமான கற்களுக்குமெருகிடும் முறை தற்காலங்களில் வழங்கும் உத்திகளைக் காட்டிலும் மிகச்சிறந்தவை. தற்காலங்களில் அவை வழக்கிலுமில்லை; மறைந்து போயின. கரடுமுரடான 'க்னீஸ் வகைக் கற்களுக்கிடையில் தோண்டியெடுக்கப்பெற்ற பராபர் குகைகளின் பக்கச் சுவர்கள் பளிங்குகள் போல மெருகிடப்பெற்றுள்ளன. பிரோஸ் ஷாவின் மண்டபத்தைப் பளபளப்பாக்குவதற்கு தொப்ராவிலிருந்து அசோகனின் கல்தூண் கொண்டுவரப்பட்டது. தற்போது டில்லியிலுள்ள அதைப்பார்க்கும் மக்கள், அது உலோகத்தினலானது என்று எண்ணியே வியப்புறுகின்றனர். பதினேழாவது நூற்றூண்டில், குவெயின்ட்டாம் கார்யத், அக்கட்டடத்தை ஒரு 'செம்புத் தூண்' என்றே வர்ணித்தார்.பத்தொன்பதாம் நூற்றூண்டின் முற்பகுதியில் பிஷப் ஹீபருக்கும் கூட அது ஒரு 'வார்த்து எடுத்த கருந்தூண்' என்ற எண்ணமே மேலோங்கியிருந்தது. மற்றுள்ள எல்லாவகையிலும் அசோகன் காலத்திய கல்தூண் வேலைப்பாடுசிறப்புடையதாகவே விளங்கியது. கல்லில் செதுக்கப் பெற்றுள்ள எழுத்துகள் யாவும் மிக அழகாகப் பொறிக்கப்பட்டுள்ளன. கும்ரஹாரில் காணப்படும் சங்கேதமான மரத்திண்ணைகளிலும், தச்சுக்கலையின் பூரணத்திறன் காணப்படுகிறது என டாக்டர் ஸ்பூனர் குறிப்பெழுதியுள்ளார். ஒருகால், அவைகள் சந்திரகுப்த மௌரியனின் காலத்திலேயே உருப்பெற்றிருக்கக்கூடும்.

**எல்லாவகையான கலைகளிலும் திறமை**

மிகப்பெரிய ஒரே கல்லால் செய்யப்பெற்ற ஸ்தூபிகள் எடுத்துச் செல்லப் பெற்றிருப்பதைக் காணும்போது பொறியியல் துறையிலும் மற்றும் போக்குவரவிலும் மிகச் சிறந்த அறிவு இவர்களுக்கு இருந்திருக்கவேண்டும் என்பது மிகத்தெளிவு. இவைகளை நெடுந்தூரம்வரை அவர்கள் எடுத்துச்சென்றிருக்கின்றனர். கி. மு. மூன்று அல்லது நான்காவது நூற்றூண்டில், மௌரிய மன்

னர்கள் உபயோகித்த போகப் பொருள்களையும், கைத்திறனைக் கொண்ட வேலைகளிலுள்ள நுணுக்கமான திறனையும், சிற்பம் சித்திரம் ஆகிய சான்றுகளையும், அழிவில்லாத நினைவுச் சின்னங்களையும், நூல்கள் வாயிலாகக் கிடைக்கும் செய்திகளையும் சீர்தூக்கி ஒப்பு நோக்கும்போது. பல காலத்திற்குப்பின் கி. பி. பதினெட்டாவது நூற்றாண்டில் முகலாய மன்னர்கள் அனுபவித்தவைகளுக்கு எவ்வகையிலும் தரம் குறைந்தவை அல்ல என்பது தெளிவாகும். கி. மு. 250 ஆம் ஆண்டைச் சார்ந்த சில பொன் நகைகள் கிடைத்துள்ளன. டயோடோசின் பொற்காசுடனும், செலவாணியாகாது தடைசெய்யப்பெற்ற அச்சுப்பொறித்தவெள்ளிக்காசும், மிகப்பழமை வாய்ந்த தட்சசீலப்பகுதியின் பீஹார் மேட்டிலிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ளன.[1] பாக்ஹட் (பார்குட்)டிலும், சாஞ்சியிலும் உள்ள சிற்பக்கலைகள் சில அசோகனுக்குப் பின்னால் உருப்பெற்றவை. அவைகளைக்கற்களில் தீட்டப்பெற்ற சித்திரங்களெனக்கருதலாம். அவைகள் அக்காலத்திய வாழ்க்கைமுறைகளை மிகவும் விரிவாக வர்ணிக்கின்றன. ஆக்கவேலைகளும், நல் இயக்கங்களும் மிகுந்த சுறுசுறுப்பாப்பான இன்ப வாழ்க்கை நடத்திய ஒரு சமுதாயத்தினரை அவை சித்திரிக்கின்றன. அதை மனப்பூர்வமான உண்மையுணர்வுடன் சித்திரிப்பதில் கலைஞர்கள் மிகவும் ஆர்வம் கொண்டிருந்தனர். தங்கள் சித்திரங்களுக்கு நல் வேலைப்பாடுகளையும், வர்ணங்களை நற்சுவையோடு அவர்கள் கையாண்டு மேலும் அழகு பெறச் செய்தனர்.

**கல்வி**

'எல்லா வகையினருக்கும் எங்கிலையிலிருப்பவருக்கும்' பயன்படுமாறு பௌத்த சமயக்கோட்பாடுகளையும் அறநெறியையும் பற்றிய தன் கருத்துகளைத் தொடுத்து வெளியிடுவதற்குத் திட்டமிட்டான். இவ்வெளியீடுகள் பிரதேசமொழிகளிலேயே அமைந்ததுடன், இருகுறிப்பிட்ட வரிவடிவங்களிலேயே (லிபிகளிலேயே) எழுதப்பெற்றன. இதனால் அசோகனது சாம்ராச்சியத்தில் பெரு அளவில் கல்வி அறிவு பெருகியது. கல்வெட்டுகள், ஏதாவது காரணம் பற்றி மக்கள் கூடுமிடங்களில் அல்லது அடிக்கடி கடந்து செல்லும் மிகக்கவனமுடன் தேர்ந்தெடுக்கப்பட்ட முக்கியவிடங்களிலேயே நிறுவப்பெற்றன. என்றும் அழிவில்லாத முறையில் அமைந்த இவ்வெளியீடுகளுக்காக ஏராளமாகப் பொருள் செலவிடப்பெற்றது. மக்கள் அதைப்படித்துணராது இருந்திருப்

1 ஜே. பி. எச். எஸ். வால் iii, பக் 9-வருடாந்தர அறிக்கை ஏ. எஸ். இந்தியா 1912-13 பக். 41. பிளேட் xxxix

பின் இப்பொருட் செலவு வீண் விரயமென்றே கருதப்பட்டிருக்கப்படவேண்டும். ஏராளமான பௌத்த மடலாயங்கள், பள்ளிகளாகப் பணியாற்றியிருக்கக்கூடும். இன்றும், ஓரளவில் அவை பர்மாவில் அவ்வாறே செய்து வருகின்றன.* இதனால் தற்போதிருப்பதைக் காட்டிலும், கல்வி அறிவுற்ற மக்களின் சதவிகிதம் சற்று அதிகமாக இருந்தது. பெரும்பாலான சான்றுகளில் பிரமி வரிவடிவமே உபயோகிக்கப் பட்டுள்ளது. மேற்கிந்தியாவிலும், வட இந்தியாவிலும் வழக்கிலிருந்துவரும் பலமொழிகளுக்கும், சம்ஸ்கிருத மொழிக்கும் தாயாக இவ்வரிவடிவம் காணப்படுகிறது. வட மேற்கெல்லையிலுள்ள, பதினைன்கு குகைக்கல்வெட்டுகளில் இரு ஜதைகளில் 'கரோஷ்டி'—வரிவடிவம் காணப்படுகிறது. இது, அப்பகுதிகளில் வழக்கிலிருந்த அராமிக் வரிவடிவங்களின் வகையைச் சேர்ந்தது. ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஏற்றதாகச் சாசனங்களில் பன்மொழிகள் காணப்படுகின்றன.

**இலக்கியம்**

அசோகன் கல்வெட்டுகளில் கையாண்டுள்ள இலக்கிய நடையில் சொற்செறிவும் கம்பீரமும் நிறைந்துள்ளது. ஒரு சில இடங்களில் அவை உபநிடதங்களை நினைவூட்டுகின்றன. மிகச் சுவையானவை சில பெருமன்னனாலேயே தொகுக்கப் பெற்றிருக்கவேண்டும் என்பதற்கு ஐயமற்ற அகச்சான்றுகள் உண்டு. பண்டைய இந்திய வரலாற்றின் காலவரன் முறை மிகவும் தெளிவற்றது. இதனால், மௌரியர் காலத்தைச் சார்ந்தவையெனப் பிற இலக்கியங்கள் ஒரு சிலவற்றையும் தாம் குறிப்பிட இயலாது. பாலி மொழியிலுள்ள 'கதாவத்து' என்னும் பௌத்த சமய நூலொன்று, அசோகன் காலத்திலேயே உருப்பெற்றிக்க வேண்டுமெனப் பேராசிரியர் ரிஸ்டேவிட்ஸ் என்பவர் கருதுவர். இக்கருத்தைப் புலவர் ஒரு முகமாக ஏற்பதில்லை. தொண்ணூறு ஆண்டுகளுக்கும் மேலாக நீடித்திருந்த பெரு மன்னர்கள் மூவரின் ஆட்சியில் அமைந்த நிகரற்ற அவைகளையும், மிகவெற்றியுடன் போற்றி வளர்க்கப்பெற்ற கலைகளையும், செல்வ ஆடம்பரங்களையும் எண்ணிப்பார்க்கும்போது, இலக்கியத்துறையிலும் சிறந்த புலவர்களின் நூல்களும் உருவாகி அலங்கரித்திருக்கவேண்டும் என்ற நினைவே மேலோங்கி நிற்கும். கி. மு. நான்காவது நூற்றாண்டில், பலதலை முறைகளாக வளர்ச்சியுற்ற சிறந்த இலக்கியச்செல்வமும் இந்திய நாட்டிலிருந்தது. மூன்றாவது நூற்றாண்டில் இந்திய

* கருத்து மூல நூலைச் சார்ந்தது.

சாம்ராச்சியம் மிகப்பரந்தும், மேற்கு ஆசியா வடக்கு ஆப்பிரிக்க நாகரிகங்களுடன் தொடர்பு கொண்டும் விளங்கியபோது, இந்திய இலக்கிய வரலாற்றிற்கு எவ்வித குறைவும் ஏற்பட்டிருக்க முகாந்தரங்களில்லை.

### அசோகனும் அக்பரும்

மிகவும் கீர்த்தி வாய்த்த இந்தியப் பெருமன்னர்களின் நீண்டபட்டியலில், மிகவும் கவனத்திற்குரிய முக்கிய அரசர்களில் அசோகனும் அக்பரும் தலை சிறந்தவர்கள் என்பதை மறுக்கும் மனப்பாங்குடைய இந்திய வரலாற்று மாணவர்கள் இருக்க மாட்டார்கள். நாம் முன்னரே கூறியுள்ளவாறு, இவ்விருவர்களும் நமக்கு மற்றவர்களைவிட நன்கு அறிமுகமானவர்களே. அசோகனது திருஉருவத்தை வரைந்துகாட்டுவதென்பது மிகவும் கடினம். தனது இயல்பை அவன் சாசனங்களின் மூலமாக நன்கு வெளிப்படுத்தியுள்ளான். இவைகளைப்பல்லாண்டு ஆராய்ந்து தெளிந்த பின்னர், அசோகன் நமக்கு மிகவும் பரிச்சயமான எளியன் என்று தோன்றுகிறது. கலிங்கப்போருக்குப் பின் அவனுக்குப் பற்றிய துக்கத்தைக் கண்டிருந்தால் அக்பர் மிகவும் களித்திருப்பான். கிறித்துவப்பாதிரிகள் கூறுவதுபோல அக்பர் ஒரு 'புகழ் மோகமுடையவன்'. மிகவும் பேராசை கொண்ட மனிதர்களில் ஒருவனாகவும், போர் வீரனென்ற பெரும்பெயர் படைத்து வாழ வேண்டுமென்றும் அக்பர் விரும்பியது உண்மையே. தான் தொடுத்த பல போர்களால் மிகவும் துன்பமே விளைந்ததென்பதைக்குறித்து அக்பர் கவலை கொண்டதேயில்லை. இந்த முறையில் பேராசைகொண்ட மன்னர்களின் பட்டியலில் அவன் இடம் பெற்றான். அசோகனின் மனப்பாங்கு மிகவும் விசித்திரமானதும் உண்மையுடையதுமாகும். பௌத்தசமயக் கொள்கைகளை விரிவாகப் பரவச்செய்தது அவன் பெற்ற கைம்மாறாகும். பேருலகில் இது அவனது பெரும் சாதனையாக விளங்குகிறது. 'உண்மையான வெற்றி' என்று எதை அசோகன் கருதினானோ அதை அவன் அடைந்து விட்டான் என்றே கூறவேண்டும்.

சமயம் சார்ந்த விஷயங்களில் ஈடுபாடும் ஆர்வமும் எவ்வாறு கொண்டிருந்தானோ அதைப்போலவே அரசனென்ற முறையில் அசோகன் தன் கடமைகளைச் செய்து முடிப்பதிலும் மிக்க ஊக்கமுடையவனாக இருந்தான்; மிக்க பிரயாசையுடன் புனிதக் கொள்கைகளை மக்களிடம் பரவச் செய்யவேண்டுமென்று எதை விரும்பினானோ, அதைத் தான் கடைப்பிடிக்காது தழுவினான் என்று நாம் கூறுவதற்குரிய எந்த நிகழ்ச்சியும் அசோகன் வாழ்க்கையிலில்லை. அண்மையில் கைப்பற்றிய கலிங்கத்தில், அலுவலர்

களுக்கு அவன் பிறப்பித்துள்ள ஆணைகளைவிடச் சிறந்த சட்டங்களை நாம் எங்குமே காணமுடியாது. அவ்வாணைகளை இங்கு எடுத்துரைத்துள்ளோம்.

சர் ஜான் லாரன்சின் கட்டளைப்படி முதலிரண்டு சீக்கியப் போர்களின் இடைக்காலத்தில், திரு. ராபர்ட் கஸ்ட் என்பவர் 1848ஆம் ஆண்டில் விடுத்த பிரகடனம், ஆத்மானுபத்திலும் எடுத்துரைப்பதிலும் அசோகனது ஆணைகளைப் போலவே தோன்றுகின்றன.

உன் உறவினருள் ஒருவன் புட்சியாளருடன் சேர்ந்துவிட்டால் இரத்தம் சிந்தப்படுமுன் மீண்டும் வந்து விடுமாறு அவனைக் கேளுங்கள். அவ்வாறு அவர்கள் செய்தால், அவர்களது குற்றங்கள் மன்னிக்கப்படும்.........உங்களுக்கு நேரும் துக்கத்தை என்னுடையதென்றே பாவிக்கிறேன்.........உங்கள் மகிழ்ச்சியே எனக்கு இன்பம் தருவது. நான் சொன்னதை உங்கள் உறவினர்களுடன் கலந்தாலோசியுங்கள். குற்றமிழைக்கும் சிறுவர் தகப்பனிடம் திரும்புவது போல், புரட்சியில் சேர்ந்துவிட்ட உறவினர்களை மீண்டுவரச் செய்யுங்கள்.........அவர்தம் குற்றங்கள் மன்னிக்கப்படும். இரண்டே தினங்களில் உங்களால் எதிர்த்து நிற்கவியலாத அளவில் பெரும்படையுடன் வரவிருக்கிறேன்[1].

மிக்க திறமையும் பக்தியும் உள்ள அசோகன், இரும்புக்கரங்களில் வெல்வெட் துணி அணிந்ததுபோல ஆட்சி செலுத்தினன் என்று எண்ணுகிறேன். ஜான் லாரன்சும் அதைப் போலவே பக்தியுள்ளவனென்றாலும் ஆட்சி செலுத்துவதில் அனுபவமிக்கவன்

அசோகனாட்சியின் சிறப்பை எண்ணிப் பார்க்கும்போது, நல் வாசனையில் முகலாய மன்னன் அக்பருக்கு இவன் இளைத்தவனல்லன் என்பது நன்கு விளங்கும். பொருட்செலவையோ அல்லது சிரமத்தையோ அவன் பாராட்டியதில்லை. கலைஞர்களை வேலைக்கமர்த்துவதிலும் அவன் தேர்ந்திருந்தான். நல்ல பொருள்களை உபயோகித்து, நியாயமாக உழைப்பவர்களையே அவன் அமர்த்தியிருந்தான். சமாதானம் அல்லது போர்க் காலங்களிலும் மௌரிய அரசாங்கம் மிகச் சிறந்த முறையில் பணியாற்றி வந்ததென்று நான் கருதுகிறேன். 'போற்றுதற்குரிய நுணுக்கத்தையும் அளவு விகிதங்களையும் மௌரியர்கள்

[1] ஹோஷியர்பூர் மாவட்டத்தலைவனுக்கு ஜான் லாரன்ஸ் என்பவனின் விருப்பத்திற்கிணங்க அனுப்பப்பெற்றது (ஐட்கிஸன். லார்டு லாரன்ஸ் (இந்திய நாட்டை ஆண்டவர்கள்) 1905, பக். 45 n).

கற்கலைகளில் சர் ஜான் மார்ஷல் கண்டு போற்றுகிருர். மிகக் கருத்தான அரசியல் நிறுவன யந்திரத்தின் வெளித் தோற்றங்களே இவை என்று கருதலாம் மௌரிய மன்னர் களால் அமர்த்தப்பெற்ற பல ஒற்றர்களின் கூரிய கண்களுக்கு இலக்காக வாழ்வது, பயங்கரமாகவும் அருவருப்பை உண்டாக்கு வதாகவும் ஒரு சிலருக்கு இருந்திருக்கலாம். ஆனல், அர்த்த சாத்திர நூலில் கண்டுள்ள அடிப்படையில் அமைக்கப்பெற்ற ஒற்றர்படை, திறமையும் வலிமையும் பெற்ற மன்னனுக்கு நாட்டை ஆள்வதில் உறுதுணையாக இருந்தது. அசோகன் திறமையற்றவனுக இருந்திருந்தால் மிகப் பரந்த சாம்ராச்சி யத்தை வெற்றியுடன் நாற்பது ஆண்டுகளாக ஆண்டிருக்க இய லாது. இரண்டு மில்லினியம் ஆண்டுகளுக்குப் பின்னும் அவன் பெற்றுள்ள புகழ் மக்களுள்ளத்தில் இன்றும் பசுமையாகவே இருந்து வருகிறது.

### அசோகனின் மக்கள்

அரங்கில் மிகக் கடுமையாக உழைத்து வந்த அசோகன் எங்கு, எவ்வாறு மறைந்தான் என்பது தெரியவில்லை. திபெத் திய மரபுச் செய்தி ஒன்று அவன் தட்சசீலத்தில் மரணமடைந்த தாகக் கூறும். அசோகனுடைய பிள்ளைகள் என ஆயிரத்திற்கு மதிகமான பெயர்கள் காணப்படுகின்றன. திவாரா என்னும் ஒரு பெயரைக் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது. குணளன் என்றும் மற்றும் பல பெயர்களாலும் அழைக்கப்படும் ஒருவனைப் பற்றிய பல கட்டுக் கதைகள் நிலவி வருகின்றன. இவை நாடோடிக் கதை வகையைச் சார்ந்தவையே. காஷ்மீர வர லாற்று ஏடுகள் நீண்ட ஒரு குறிப்பில் ஜலௌகன் என்ற மூன்ற வது பெயரொன்றைக் குறிக்கின்றன. பல கட்டுக் கதைகள் அவனைப் பற்றிக் கூறப்படுகின்றன என்றாலும் அப்பெயர் உண்மையாக வாழ்ந்த ஒருவனையே குறிப்பிடுகிறது. இன்றும் அவனது வாழ்க்கையோடு தொடர்பு கொண்ட பகுதிகளை நாம் பார்க்கிறோம். தகப்பனைப்போல அவன் பௌத்த சமயத்தில் பற்றுக் கொள்ளவில்லை. சிவபெருமானிடமும் அவரது தேவி யான ஈசான தேவியிடமும் அவன் மிகுத்த பக்தி கொண்டிந் தான். காஷ்மீரப் பள்ளத்தாக்கிலிருந்து, ஊர் பெயரற்ற அன்னிய இந்துக்களை (மிலேச்சரை) அவன் விரட்டியதாகக் கூறப்படுகிறது. தகப்பனிடம் வைசிராயகப் பணியாற்றிய அவன் அசோகனின் மரணத்திற்குப்பின் சுயேச்சை பெற்றிருக்கவேண்டும். காஷ்மீர மன்னர்கள் பட்டியலில் அசோகன், ஜலௌகன் ஆகிய இருவரை யுமே காஷ்மீர வரலாற்று ஏடுகள் சேர்க்கின்றன.

**அசோகனின் பெயரர்கள்**

அசோகனையடுத்து அவனது சாம்ராச்சியத்தின் கீழ்ப்பகுதியில் தசரதன் என்னும் பெயரனும், மேற்கு மாகாணங்களில் குணாளனின் பிள்ளையான சாம்பிரதி என்ற மற்றொருவனும், ஆகிய இரு பெயரர்கள் பட்டமேற்றனர். அஜீவகத் துறவிகளுக்கு வழங்கப்பெற்றுள்ள குகைகளில் காணப்படும் கல்வெட்டுகள் முன்னவன் வாழ்ந்திருந்தமைக்குச் சான்று பகருகின்றன. அதே துறவிகளுக்கு அசோகன் வழங்கிய குகைகளுக்கு அருகிலேயே இவை அமைந்திருக்கின்றன. தசரதன் மகதத்தை ஆண்டுவந்தான் என்பதற்கு அவன் பட்டமேற்றவுடன் நிறுவப்பெற்ற கல்வெட்டுகள் சான்று பகருகின்றன.

பண்டைய கல்வெட்டுகளின் உதவியுடன் சாம்பிரதி என்ற மற்றுமொரு பெயரன் இருந்ததை இன்னும் ஒப்புநோக்க இயலவில்லை. பாட்டனரின் மரணத்திற்குப் பின் மேற்கு மாகாணங்களை அவன் அரசாண்டு வந்தான் என்னும் செய்தியைச் சந்தேகிப்பதற்கு எவ்வித முகாந்தரமுமில்லை. சமணர் அளிக்கும் செய்திகளின்படி உஜ்ஜயினி அவனது தலைநகரமாயிருந்ததென அறிகிறோம். ராஜஸ்தானத்திலுள்ள ஆஜ்மீரிலிருந்து, சௌராஷ்டிரத்திலுள்ள சத்ருஞ்சயம் வரையிலும் நிலவிவரும் பிரதேசக் கர்ண பரம்பரைச் செய்திகள் அவனது பெயரை மங்காது காத்து வருகின்றன. இப்பகுதிகளில் பழமை வாய்ந்த பல சமணக் கோவில்களை அவன் கட்டியுள்ளான் என்று கூறப்படுகிறது. ஜோட்பூரிலுள்ள 'நாத்லே' என்னுமிடத்திலும் அவன் ஒரு கோயிலைக் கட்டினன் என்று கூறப்படுகிறது. அதே இடத்தில் நவீனக் கட்டடமொன்று தற்போது காணப்படும். மேவாரிலிருந்து புந்திவரையிலுமுள்ள கணவாயைக் காத்துவரும் ஜாஸ்பூர் கோட்டையின் அடித்தளமும் அங்கே காணப்படும். கௌதமனின் சமயத்தைப் பரப்புவதில் அசோகன் கொண்டிருந்த ஆர்வத்தைப் போலவே, சமண சமயத்தைப் பரப்புவதில் அவன் மிக்க ஆர்வம் கொண்டிருந்தான் என்று புகழ்ந்து பேசப்படுகிறது.[1]

அசோகனது சாம்ராச்சியம் இரண்டு பெயரர்களுக்கிடையில் ஆதியில் பகிர்ந்தளிக்கப்பட்டது எனக்கொள்வது முறையென்றே தோன்றுகிறது. இந்தக் கருத்தை உறுதிப்படுத்து

[1] டோட், 'மேவாரைப் பற்றிய செய்திகள்' - அதிகாரம் iv (புழக்கத்திலுள்ள பதிப்பு - வால் i, பக். 201n) போர்ப்ஸ் 'ராஸ்மாலா' (1856) வால். i - பக். 7 - ராஜபுதன அறிக்கை (சிம்லா 1880) வால். iii, பக். 52 பாம்பே அறிக்கை (1896) வால். i - பகுதி 1, பக். 15.

கின்ற சான்றுகளெதுவும் கண்டெடுக்கப்படவில்லை. சாம்பிரதி, தசரதன் ஆகியவர்களின் வரலாறுகளை மேலும் தொடர்வதற்கான சான்றுகளும் இல்லை.

### இறுதியாக ஆண்ட மௌரியன்

புராணங்கள் வாயிலாக அசோகனது சந்ததியார்கள் பலரிருந்தனர் என அறிகிறோம். புராணங்களில் காணப்படும் பாட பேதங்களைப் பற்றி நாம் இங்கு எடுத்துரைக்கத் தேவையில்லை. அவைகளில் குறிப்பிடப்படும் இளவல்களின் பெயரையன்றி வேறு எவ்விதத் தகவல்களும் நமக்குக் கிடைப்பதில்லை. பிற்கால மௌரியர் ஆண்டுவந்த சாம்ராச்சியத்தின் எல்லைகளையும் நம்மால் வரையறுத்துக் கூற இயலவில்லை. கி. மு. 185 ஆம் ஆண்டில் அக் குலத்தைச் சார்ந்த இறுதியாக அரசாண்ட பிருகத்ரதன், புஷ்யமித்திரசுங்கன் (புஷ்பமித்திரன்) என்னும் படைத் தலைவனால் கொல்லப்பட்டான்.

### சுங்கர் குலம்

அரசைக் கைப்பற்றியவன் சுங்கர் குலம் என்றதொரு புதிய குலத்தைத் தொடங்கினான். கி. மு. 73 வரை சுமார் 112 ஆண்டுகள் அக்குலமிருந்ததாகத் தெரிய வருகிறது. தெற்கு முகமாக நர்மதை ஆறுவரையிலும் பரந்திருந்த சில மாகாணங்களையும், மகதத்தையும் அவர்கள் ஆண்டுவந்திருக்கக் கூடும். குலத்தைத் தோற்றுவித்தவனின் பெயரும், அவனது வழித்தோன்றல்கள் சிலரது பெயர்களும், மித்திரன் என்று முடிகின்றன. இதை அடிப்படையாகக் கொண்டு புஷ்யமித்திரன் இரேனியன் என்ற கருத்து எழுந்துள்ளது. அவன் சூரியனை (மித்திரன்) வழிபடுபவன் என்றும் கூறப்படுகிறது. சனாதன, பிராமணர்களின் வழக்கமெனக் கருதப்படும் 'அசுவமேதம்' அல்லது குதிரை வேள்விகளை அவன் இருமுறை நடத்தினான் என்று சொல்லப்படுகிறது. அண்டையிலுள்ளவர்கள் யாவரையும் வென்றுவிட்டதற்கு அறிகுறியாக இவ்வேள்விகள் நடத்தப்பெற்றன எனக் கருதலாகும்.

### கிரேக்க–பாக்திரிய படையெடுப்பு

'யூதிடிமஸ்' அல்லது ஒருவேளை மினாந்தரின் மகனெனக் கருதப்படும், டெமிட்ரியஸ் என்னும் கிரேக்க மன்னன் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தான். அவனைப் புஷ்யமித்திரன் முறியடித்து விரட்டினான். மினாந்தரே பஞ்சாபை ஆண்டுவந்த மிலிந்தன் எனப் பௌத்த பரம்பரைச் செய்திகள் கூறுகின்றன.

வலிமை மிக்க படையொன்றுடன் (தோராயமாக கி.மு. 175 ஆம் ஆண்டில்) அவன் இந்தியநாட்டினுள் புகுந்து சௌராஷ்டிர தீப கற்பப்பகுதியுடன் (கதியவார்) கூடிய சிந்துவின் வண்டல் பகுதியைக் கைப்பற்றி, மேற்குக்கரையிலும் சில பகுதிகளை வென்று, யமுனை ஆற்றங்கரையிலுள்ள மதுராவையும் கைப்பற்றி, தற்போது ராஜஸ்தானத்தில் சித்தூர் என வழங்கப்படும் 'நாகரி'க் கருகிலுள்ள 'மத்யமிகா'வை முற்றுகையிட்டு, தெற்கு அயோத்தியிலுள்ள சாகேதத்தையும் அழித்து, சுங்கரின் தலை நகரான பாடலிபுத்திரத்தைத் தாக்கினன் அல்லது கைப்பற்றி னன் என்று தெரியவருகிறது.

சிபி என்னும் மக்களினத்தின் முக்கிய நகரமாக அக்காலத் தில் 'மத்யமிகா' விளங்கியது. அவர்கள் பஞ்சாபிலிருந்து இப் பகுதியில் குடியேறியவராதல் வேண்டும். படையெடுத்து வரும் ஒருவன் சுலபத்தில் கடக்க இயலாதவாறு அக்காலங்களில் மத்யாத்மிகம் ஒரு முக்கிய பகுதியாக விளங்கி வந்தது. சித்தூரைப் பற்றிய வரலாற்றிற்குச் சிதைந்த சின்னங்கள் ஏராளமான குறிப்புகளை அளிக்கின்றன. மௌரியனின் புனித ஆலயம் ஒன்றிருந்ததற்கான சுவடுகளை இன்றும் காணலாம். சுங்கர் காலத்துக் கல்வெட்டுகள் இரண்டு கண்டெடுக்கப் பட்டுள்ளன. 'வாஜபேயம்' 'அசுவமேதம்' என்ற வேள்விகள் நடந்தேறின என்னும் செய்தியைக் கல்வெட்டுகள் அறிவிக் கின்றன.

**பிராமணசமய எதிரொலி**

எங்கிருந்து வந்தவனாயினும், புஷ்யமித்திரன் ஒரு ஹிந்து என்றே கருதப்பட்டான். இந்து சமயத்தினரிடையில் சூரியனை வழிபடும் வழக்கமுண்டு. இன்றும் சௌரர்கள் அல்லது சூரியனை வழிபடும் வகுப்பினர் இருந்து வருகின்றனர். வடமேற்கு இந் தியா, சௌராஷ்டிரம், ராஜஸ்தானம் ஆகிய பகுதிகளில் தற் போதிருப்பதைக் காட்டிலும் பண்டைய நாட்களில் சூரியனை வழி படும் வழக்கம் மிக அதிகமாக இருந்ததென்று நம்புவதற்கு நல்ல பல காரணங்கள் உண்டு. சுங்ககுல மன்னர்களில் முதல்வன் பௌத்த சமயத்தின் வைரியாக விளங்கினன் என்றும், வடதிக் கில் ஜலந்தர் வரையிலுமுள்ள பல்லாயிரக்கணக்கான மடாலயங் களை அவன் அழித்தான் என்றும் பரம்பரைச் செய்திகள் வாயி லாக நாம் அறிகிறோம். அசோகன் காலத்தில் மிக்க சலுகை பெற்று வளர்ந்த பௌத்த சமயத்திற்கு, புஷ்யமித்திரன் ஆட்சி யில் கடுமையான பிராமண சமய எதிர்ப்பு இருந்ததென்று தெரிய வருகிறது. புஷ்யமித்திரன் சமயத்தின் பெயரால்

கொடுமைகள் இழைத்ததாகச் சொல்லப்படும் பௌத்தரின் கூற்றுகள் உண்மையைச் சற்று மிகைப்படுத்துகிற தென்று எண்ண இடமுண்டு. சுங்கர் காலத்தில் வழக்கிலிருந்த இந்து சமயத்தில் புரோகிதர்களின் செல்வாக்கு மிகுந்திருந்தது. சாம வேதத்தில் கூறப்பட்டுள்ள சடங்கு முறைகளை அவர்கள் பின் பற்றிவந்தனர்.[1]

புகழ் மிக்க பதஞ்சலி ஒருகால் புஷ்யமித்திரனின் சமகாலத்தவனுக இருந்திருக்கக்கூடும். 'மாளவிகாவும் அக்னி மித்ரனும்' (மாளவிகாக்னிமித்ரம்) என்னும் காளிதாசன் இயற்றிய நாடக இலக்கியத்தில் அவனது வரலாறு ஓரளவு கூறப்பட்டுள்ளது. இந்நூல் கி. பி. ஐந்தாவது நூற்றுண்டில் இயற்றப்பட்டிருக்கக் கூடும்.

**கண்வர்குலம் :**

சுங்கரில் இறுதியான தேவபூதி அல்லது தேவபூமி என்பவன் நெறிகெட்ட வாழ்க்கை நடத்தி வந்தான். கேவலமான சூழ்ச்சியொன்றில் ஈடுபட்டிருந்த அவன் உயிரிழந்தான். வாசுதேவன் என்ற அவனது பிராமண அமைச்சன் மன்னனைக் கொல்வதற்குக் காரணமாக இருந்தான். காலியாக இருந்த சிங்காதனத்தில் ஏறி அவன் முடி சூட்டிக்கொண்டான். அவனைத் தொடர்ந்து புதிய அரசகுலம் ஒன்று தோன்றிச் சின்னுட்களுக்கு அரசு செலுத்தியது. அக்குலத்தில் நான்கு மன்னர்களே அரசாண்டனர். அவர்களது மொத்த ஆட்சிகாலம் நாற்பது ஆண்டுகள். ஒவ்வொரு மன்னனும் சில காலமே ஆட்சி செலுத்தினன் என்னும் செய்தி அமைதியற்ற அக்கால நிலையைக்குறிப்பிடுகின்றது. ஒருகால் சுங்கரின் வழித்தோன்றல்கள் வழிமுறையாக வந்த பகுதிகளை மேலும் சின்னுட்களுக்கு ஆண்டு வந்திருக்கலாம் கண்வாயனம் அல்லது கண்வர்குலம் என்ற பெயர் பெற்ற இக்குல மன்னர்களின் சாதனைகளைப் பற்றி அறியக்கூடவில்லை. இக்குல மன்னர்களில் இறுதியானவனை கி. மு. 28-ல் ஆந்திர மன்னனொருவன் முறியடித்ததாகக் கூறப்படுகிறது. இவ்வாந்திர மன்னன் யார் என்று உறுதியாகக்கண்டறிய முடிவதில்லை. ஒருகால் அக் குலத்தின் முதல் மன்னனை சிமுகனுக இருக்கக்கூடும்.

**சாதவாகனர் அல்லது ஆந்திரர்**

இச்சந்தர்ப்பத்தில் சாதவாகன அரசர்களின் வரலாற்றுச் சுருக்கத்தைக்கூறுவது பொருத்த முடையதாகு மென்று எண்ணு

[1] எம். எம். ஹரப்பிரசாத் சாத்திரி-வங்காள ஆசியசங்கத்தின் சஞ்சிகை, கல்கத்தா 1912, பக். 287.

கிறேன். புராணங்கள் அவர்களை, 'ஆந்திரர்கள்' என்ற பெயரால் அழைக்கின்றன. இக்குலத்திலுதித்த முப்பது மன்னர்களின் பெயர்களைப் புராணங்கள் குறிப்பிடுகின்றன. அவர்களது ஆட்சி முழுமையாக நானூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு நீடித்திருந்தது என்றும் கூறப்படுகிறது. ஒரு நூற்றாண்டு காலத்தை இது மிகை யாகக்கூறுவதாகத்தோன்றுகிறது. நாணயங்களிலும் கல்வெட்டு களிலும் புராணத்தில் கூறப்படுகின்ற பெயர்களும் பொறிக்கப் பட்டுள்ளன. ஆயினும் கல்வெட்டுத்துறை ஆராய்ச்சி இவைகளை முற்றிலும் ஏற்கவில்லை. இக் குலத்தைச் சார்ந்த மன்னர்களின் பல பெயர்கள் நாணயங்களில் காணப்படுகின்றன. அவையாவும் புராணங்களில் கூறப்படவில்லை. கல்வெட்டுகளும், நாணயங் களும் இவர்களை ஆந்திரர் என்று அழைப்பதில்லை. இவர்களைப் பற்றிய மிகப்பழமையானகுறிப்புகள் வடமேற்குத் தக்காணத்தில் கிடைக்கின்றன. அங்கு, கோதாவரி ஆற்றின் மேற்கரையிலுள்ள பிரதிஸ்தானம் (தற்போது பெய்த்தான்) இவர்களின் தலைநகராக இருந்தது. பிற்காலங்களில் ஆந்திரம் (கோதாவரியின் கீழ்ப் பகுதியும், கிருஷ்ணா ஆற்றின் பகுதியும்) என்ற பெயரில் வழங் கும் பகுதிகளில் கி.பி. இரண்டாவது நூற்றாண்டு வரையிலும் இவர்களது செல்வாக்கு அதிகமாகப் பரவியிருக்கவில்லை.

இக்குலத்தின் முதல் அரசன் சிமுகா என்பவன் கி.மு. முதல் நூற்றாண்டில் அரசு செலுத்தியிருக்கவேண்டும். அவன் கண்வர் களை அழித்தான் என்று புராணங்கள் கூறுகின்றன. மேற்குக் கோதாவரிக்கரையில் கண்டெடுக்கப்பட்ட சமகாலக் கல்வெட் டுகளில், அவனது சந்ததியார்களான கிருஷ்ணா, சதகர்ணி ஆகியோரது பெயர்கள் கூறப்படுகின்றன. க்ஷகரதர் குலத்தைச் சார்ந்த 'சாகர்' தொடர்ந்த நூற்றாண்டின் இறுதியில் மேற்குத் தக்காணத்தில் குடியேறியிருந்தனர். சாதவாகனர்களை வழி முறையாக அவர்கள் பெற்ற நாட்டுப்பகுதியிலிருந்து சகர்களின் கவர்னர் (சத்ரப்) நாகபாணன் என்பவன் தாற்காலிகமாகத் துரத்தினான். கி.பி. 126 ஆம் ஆண்டில் கௌதமி புத்ர சதகர்ணி என்னும் ஆந்திரமன்னன் மீண்டும் மேற்குத் தக்காணத்தைக் கைப்பற்றினான். நாகபாணன் வெளியிட்ட நாணயங்களை அழித்து, தன்பெயர் தாங்கிய நாணயங்களை இவன் வெளியிட்டி யிருக்கிறான். கி.பி. 130 ஆம் ஆண்டின் முற்பகுதியில் அவனைத் தொடர்ந்து வாசிஷ்டீபுத்ர புலுமாயி என்பவன் அரசேற்றிருக்க வேண்டும். சாதவாகன குலத்தைச் சார்ந்த அவனது ஆட்சியை விளக்கும் சின்னங்களை இன்றும் ஆந்திரப்பகுதியில் ஏராளமாகக் காணலாம். பிற்கால ஆந்திர மன்னர்களில் கௌதமீபுத்ர யஞ்னஸ்ரீ என்பவன் மிகவும் வலிமை பெற்றிருந்தான். இரண்டா

வது நூற்றாண்டின் பிற்பகுதியில் சுமார் முப்பது ஆண்டுகாலம் அவன் ஆட்சி செலுத்தினன். இக்குல எழுச்சியையும், வீழ்ச்சியையும் குறித்த வரலாறு நன்கு ஆராய்ந்து அறிவிக்கப்படவில்லை. வீழ்ச்சியுற்றகாலம் கி.பி. 225 ஆம் ஆண்டு என ஒருவாறு கூறத் துணியலாம். 'சுட்டுகள்' என்ற கிளையினர், முக்கிய நகரமாக விளங்கிய வானவாசியை (தெற்கு பம்பாயில் துங்கபத்ரா ஆற்றின் மேற்கரை) அடுத்த பகுதிகளை, மூன்றாவது நூற்றாண்டின் இறுதிவரையிலும் ஆண்டு வந்தனர். மகதத்தையும் பண்டைய தலைநகரான பாடலிபுத்ரத்தையும் ஏதோ ஒரு சமயம் ஆந்திரர் வசப்படுத்தியிருக்கவேண்டும் என்பது உண்மையே எனினும், இச்செய்தியை உறுதி செய்கின்ற சான்றுகள் இன்றும் நம் கைகளுக்கு எட்டவில்லை. கி. பி. இரண்டாவது நூற்றாண்டில் உஜ்ஜயினியில் சாகசத்ரபர்களின் எழுச்சிக்கு முன்னதாக, நர்மதை ஆற்றிற்கு வடக்கிலும் ஆந்திரரின் செல்வாக்குப் பரவியிருந்ததென்பது ஐயமற நிரூபிக்கப்படுகிறது. பொதுவில் புராதன பிராமண சமயத்தை அவர்கள் போற்றிவந்தனரெனத் தெரியவருகிறது. பௌத்தர்களுக்கும் அவர்களது ஆட்சி எல்லைக்குள் ஏராளமான நன்கொடைகள் வழங்கப்பட்டுவந்தன.

**காரவேளன்**

பிந்திய – மௌரியர் காலத்தில் வாழ்ந்த கலிங்கத்துக் காரவேளன் என்பவனும் குறிப்பிடத்தக்கவனேயாவான். தற்காலத்திலுள்ள ஆந்திரத்தின் வடபகுதியும் ஒரிசாவும் கலிங்கத்திலடங்கும். பூரி மாவட்டத்தில் உதயகிரி என்னும் குன்றிலுள்ள சமண சமயக் குகையொன்றில் காணப்படும் ஒரே கல்வெட்டின் உதவியுடன் இவன் வரலாற்றை நாம் அறிகிறோம். காலத்தால் சிதைவுற்றிருக்கும் இவ்'ஹாதிகும்பா' கல்வெட்டின் சில பகுதிகள் முழுவதும் அழிந்து விட்டன. அதில் பெரும் பகுதியையும் தோராயமாகவே ஊகித்து அறிய வேண்டியிருக்கிறது. மனவெழுச்சியைத் தூண்டுகின்ற இச் சான்றைப் பற்றிய, பல ஊகங்கள் எழுந்துள்ளன. வாசகத்தை அரைகுறையாக ஆய்ந்தும், மிகவும் சிதைவுற்றிருக்கும் பகுதிகளிலுள்ள செல்லரித்துப் போன தெளிவற்ற எழுத்துகளை இனம் புரிந்து கொண்டு விட்டதாக எண்ணியும் பொறுப்பற்ற பல கருத்துகள் எழுந்துள்ளன.

காரவேளன் ஆர்வமிக்க சமணனாக விளங்கினன். அவன் இந்திய நாட்டின் பல பகுதிகளின் மீது மமதையுடன் படையெடுப்பதும், வெற்றி காண்பதும் இதனால் நின்று விடவில்லை. மகதமும் சின்னாட்களுக்கு இவனது ஆதிக்கத்திலிருந்ததாகத் தெரிய வருகிறது. தென் கோடியிலுள்ள பாண்டியரின்

னாட்டையும் இவன் ஒரு வேளை படையெடுத்திருக்கக் கூடும். மதுராவை ஆண்டுவந்த யவன மன்னனுடன்[1] இவன் போரிட்டான் என்றும் அம் மன்னனின் பெயர் டெமிட்ரியஸ் என்று கல்வெட்டுகளில் காணப்படுவதாகவும் கூறப்படுகிறது. புஷ்யமித்திரன் காலத்தில் இந்தியாவின் மீது படையெடுத்து வந்த டெமிட்ரியஸ் இவனே என்றும் கூறப்படுகிறது. கல்வெட்டு வாசகம் மிகவும் தெளிவற்றிருக்கிறது. எனவே இனம் புரிந்து கொள்வதில் பெரும் தவறு ஏற்ப்பட்டுள்ளது என்பது பெரும்பாலும் உறுதி. அரசன் சதகர்ணியைக் கல்வெட்டுக் குறிக்கிறது. சாதவாகன குலத்தைச் சார்ந்த முதல் மன்னனின் பெயராகவும் இதைக் கொள்ளலாம்.

கி. மு. 1ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் காரவேளன் வாழ்ந்திருந்தான் என்பதே ஏற்கக்கூடிய சிறந்த கருத்தாக விளங்குகிறது. கல்வெட்டுத்துறை ஆராய்ச்சி, மற்றும் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் நந்த அரசன் ஒருவன் வாய்க்கால் வெட்டியதாகக் கூறப்படும் கல்வெட்டுச் செய்தி ஆகிய இரண்டு சான்றுகளும் இக்கருத்தை உறுதிப்படுத்துகின்றன. காரவேளனது குணங்களை எடுத்துரைப்பவனின்; மிகையான வர்ணனைகளை நீக்கி நோக்கினும், அவன் சத்தி வாய்ந்த ஒருவனுகவே தோன்றுகிருன். போர் புரிவதோடு பொது நலனுக்காக உழைப்பதற்கும் பக்தி செலுத்துவதற்கும் அவனுக்கு நேரமிருந்தது. அவனது சந்ததியார்கள் சக்தியற்றவர்களாக இருந்திருக்க வேண்டும். இந்திய அரசியல் அரங்கம் முழுவதிலும், இத்தகைய சிறந்த வாய்ப்பை, ஒரிசா என்றுமே பெறவில்லை.[2]

1 அயோனியன் அல்லது கிரேக்கன் என்ற பொருள்படும் 'யவனன்' என்ற சொல், வடமேற்கில் வசித்த யாவருக்கும் தடையின்றி வழங்கப்பெற்றது. காரவேளன், சாகமன்னன் ஒருவனையே முறியடித்திருக்க வேண்டும் என்று கொள்வதும் மிக்க பொருத்தமுடையதாகவே தோன்றுகிறது.

2 டாக்டர் ஸ்மித் அவர்களின் ஆதி நூலுக்கு இப்பகுதி சேர்க்கப்பட்டுள்ளது. சாதவாகனர் வரலாறு மீண்டும் திருத்தியமைக்கப்பட்டுள்ளது. காரவேளனையும் முற்கால சாதவாகனரையும் ஒருங்கே, ஒரு நூற்றுண்டுக் காலத்திற்கு முன் வாழ்ந்தவர் என்று கொள்வதற்கு மேலும் பல சான்றுகளும் கிடைக்கலாம் இக்காலவரன் முறையை மறுத்து டாக்டர் ஸ்மித் இறந்த பின் எடுத்துரைக்கப்பட்டிருக்கும் பல கருத்துகள் அவரைத் திருப்தி செய்யக்கூடும். காலவரன் முறையைப் பற்றிப் பேராசிரியர் ஹெச். சி. ராய் சௌத்திரி அவர்களின் கருத்தையே ஏற்றுள்ளோம். பி. ஹெச். ஏ ஐ: 'யில் பொருத்தமுள்ள அதிகாரங்களைக் காணவும். (ப-ர்)

காலவரன்முறை

(தெய்திகள் பொதுவில் சரியானவைகளே ; இந்தியரைப் பொறுத்த வரையில் உறுதி கூற இயலாது)

மௌரியவமிசம்

| கி. மு. | நிகழ்ச்சி |
|---|---|
| 326 அல்லது 325 | இளவயதுடைய சந்திரகுப்த மௌரியன் அலெக்சாந்தரைச் சந்தித்தான். |
| 323 ஜூன் | பாபிலோனில் அலெக்சாந்தரின் மரணம். |
| 323–22 | மாசிடோனியப் படைகள் வெளியேற்றப் படுதல். |
| 322 | சந்திரகுப்த மௌரியன் அரசேற்றல் [தெய்தி சற்று முந்தியாகவுமிருக்கலாம்]. |
| 312 | பாபிலோனை செல்யூகஸ் நிகேதார் மீண்டும் கைப்பற்றி செல்யூகிதன் சகாப்தத்தைத் தோற்றுவித்தல். |
| 306 | செல்யூகஸ் மன்னன் என முடி சூட்டிக்கொள்ளுதல். |
| 305 | இந்தியாவின் மீது செல்யூகஸின் பயனற்ற படையெடுப்பு. |
| 302 | பாடலிபுத்ரத்திற்கு மெகாஸ்தனீஸ் தூதுவராகச் செல்லுதல். |
| 298 | பிந்துசார அமித்ர காதன் பட்டமேற்றல், மெகாஸ்தனீஸை அடுத்து டீமாக்கஸ் என்பவன் தூதுவனுகப் பட்ட மேற்றல். |
| 285 | டாலமி பிலடெல்பஸ், எகிப்து மன்னனுக அரசேற்றல். |
| 280 | செல்யூகஸ் நிகேதாரின் மரணம், அண்டியோகஸ் ஸோடர் பதவியேற்றல். |
| 278 அல்லது 277 | ஆன்டியோகஸ் கொனேடஸ், மாசிடோனிய அரசன் பட்ட மேற்றல். |
| 273 | அசோக (வர்த்தனன்) அரசேற்றல். |
| 272 | அலெக்சாந்தர்–எபிரஸ் மன்னன்–அரசேற்றல். |

269 அசோகனின் மகுடாபிஷேகம் அல்லது பட்டாபிஷேகம் [218. பு.பின். (அன்றே புத்தே) சிங்கள காலவரன் முறை அடிப்படையில்].

261 ஆன்டியோகஸ் தியோஸ்–சிரிய மன்னன் அரசேற்றல்- கலிங்கப்போர்.

259 வேட்டையாடும் பழக்கத்தை அசோகன் தடை செய் தல், தூதுவரை அசோகன். அனுப்புதல்.

258 சைரீன் நாட்டு மன்னன் மாகசு மரணமடைதல். எபிரஸ் நாட்டு மன்னன் அலெக்சாந்தர் இறந்தான்.

257—256 பதினன்கு குகைக்கல்வெட்டுகள் - கலிங்கக் கல் வெட்டுக்ள் – தணிக்கையாளர்களை அமர்த்துதல்.

254 கோனகமன ஸ்தூபியை இரண்டாம் முறையாக அசோ கன் விரிவுபடுத்துதல்.

251 திச்சா – சிங்கள மன்னன் பதவியேற்றல்.

251 அல்லது 250 மகேந்திரன் (மகிந்தன்) சிங்கள நாட்டிற் குத் தூது கோஷ்டியுடன் செல்லுதல் [236–பு. பின்].

249 புனித தலங்களுக்கு அசோகன் யாத்திரையாகச் செல்லுதல்.

? 248 பாக்திரிய, பார்த்திய நாடுகள் சுதந்திர மடைதல்.

247 டாலமி பிலடெல்பஸ் - எகிப்து மன்னன் மரணம்.

247 அல்லது 246 ஆன்டியோகஸ் தியோஸ்–சிரிய மன்னன் மரணம்.

246 ஷீ – யுவாங் - டி – என்ற சின் குல மன்னன் சீன அர சைப் பெறுதல்.

242 ஏழு தூண் கல்வெட்டுகளை அசோகன் பிரசுரித்தல்.

242-239 ஆன்டிகோனஸ் கொனேடஸ் — மாசிடோனிய மன்னன் இறத்தல்.

240–232 பாடலிபுத்திர அவை—சமயப் பிளவைக் கண்டித் துச் சிறுதூண் கல்வெட்டுகள் வெளியீடு.

232 அசோகன் மரணம்—கிழக்கு மாகாணங்களில் அவனது பெயரன் தசரதன் பதவி பெறுதல்—மற்றுமோர் பெயரனான சாம்பிரிதி ஒருகால் மேற்கு மாகாணங்களில் அரசேற்றிருக்கலாம்.

221 ஷீ—யுவாங்—டி—சீனப் பேரரசைப் பெறுதல்.

211 சிங்களமன்னன் திச்சன் மரணம்—உத்தியன் அரசேற்றல்.

204 மகேந்திரனின் (மகிந்தன்) சிங்களத்தில் மரணமடைதல்.

203 மகேந்திரனின் சகோதரி சங்கமித்ரை சிங்களத்தில் மரணமடைதல்.

185 பிருகத்ரதன், இறுதி மௌரிய மன்னன் கொல்லப்படுதல்

சுங்கர் வமிசம்

185 புஷ்யமித்திரன் (புஷ்பமித்ரன்) அரசேற்றல்—பிராமண சமயத்தினரின் எதிர்ப்பு - பதஞ்சலி.

175 பாக்திரிய கிரேக்கர் படையெடுப்பு.

73 தேவபூதி (பூமி) அங்க குல இறுதி மன்னன் கொல்லப்படுதல்.

73-28 கண்வ அல்லது கண்வாயன குலம்.
(சாதவாகன குலம்)

சி. 50 வடமேற்குத் தக்காணத்தில் சிமுகன்.
வடமேற்குத்தக்காணத்தில் கிருஷ்ணன்.
வடமேற்குத்தக்காணத்தில் சதகர்ணியும்—கலிங்கத்தில் காரவேளனும்.

சி. 80 க்ஷகரதசாகர் மேற்கு தக்காணத்தை ஆட்சி புரிதல்.

சி. 126 கௌதமி புத்ர சதகர்ணி சாகரை வெளியேற்றுதல்

சி. 130 வசிஷ்டி புத்ர சதகர்ணி — சாதவாகனராட்சியை விளக்கும் ஆந்திரப்பகுதியிள்ள சான்றுகள்.

சி. 170–200 யஞ்யஸ்ரீ

சி. 225 குலம் முடிவடைதல்—வானவாசியில் 'சுட்டுகள்'

## மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

'அசோகனின் கல்வெட்டுகள்' ஹல்ட்ச் என்பவரின் பதிப்பு (கார்ப்பஸ் இன்ஸ்ருகுப் ஷியோனம் இண்டிகாரும், வால்யூம் i, ஆக்ஸ்போர்ட், 1925) யாவரும் ஏற்கும் நூலாக இன்று விளங்குவதுடன், சிறந்ததொரு முன்னுரையும் கொண்டது.

'பளாச்' என்பவரின் பதிப்பு சற்றுச் சிறிய அளவில் உள்ளது. பிரஞ்சு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. (லீ இன்ஸ்க்ரிப்ஷன்ஸ் டி அசோகா, பாரீஸ் 1951)

அசோகனது வாழ்க்கை வரலாற்று நூல்களில்இவ்வாசிரியர் எழுதியுள்ள 'இந்தியப் பெரு மன்னர்கள்' தொகுப்பு (மூன்றாவது பதிப்பு, ஆக்ஸ்போர்டு 1920) இன்றும் பயனுள்ளது.

ஆர். கே. முகர்ஜியின் 'அசோகன்' (லண்டன் 1928)

டி. ஆர். பந்தார்க்கரின் 'அசோகன்' (கல்கத்தா 1925)

பி. எம். பரௌவாவின் 'அசோகனும் அவனது கல்வெட்டுகளும்' (கல்கத்தா 1946)

கே. இ. வ —வால்யூம் 1, எப். டபிள்யூ. தாமஸ் பொருத்தமுடைய அதிகாரங்கள் இன்றும் பயன்படக் கூடிய வரலாற்றுச் சுருக்கம்.

இ. ஜே. ராப்சன் எழுதியுள்ள 'புராதன இந்தியா' (கேம்பிரிட்ஜ 1914) இக்காலத்தை வர்ணிக்கும் நல்ல நூல்.

அஜீவகர்களைப் பற்றிய விவரங்களுக்கு ஏ. எல், பாஷா அவர்களின் 'அஜீவகர்களின் வரலாறும் கொள்கைகளும்' என்ற நூலைப் பார்க்கவும் (லண்டன் 1951)

'இந்திய மக்களின் வரலாறும் பண்பும்' (பேரரசு இணைப்பு—சகாப்தம், பம்பாய் 1951) இரண்டாவது வால்யூம், பதிப்பு ஆர். சி. மஜூம்தார். இக்காலத்தை விளக்கும் அதிகாரங்கள் உள்ளன.

எர்ரகுடி கல்வெட்டுகளில் பதிப்பிக்கப் பெற்ற ஒன்று (பி. எம். பரௌவா) 'இந்திய வரலாற்றுக் குவார்டர்லி' வால்யும் xiii பக்கம் 132 ff-ல் காணப்படும்.

'தட்சசீல அராமிக் கல்வெட்டு' ஹெர்ஸ்பெல்டு என்பவராலும் (எபி. இந். வால்யூம் xix பக்கம் 251)

'லாக்மான் கல்வெட்டு' டபிள்யூ ஹென்னிங் (பி.எஸ்.ஓ.எஸ். வால்யூம் xiii பக்கம் 80) என்பவராலும் ஆராயப்பட்டுள்ளது.

இங்குக் கடைப்பிடிக்கப்பட்டிருக்கும் 'காலவரன் முறை' எச். சி. ராய் சௌதிரியின் (பி.எச்.ஏ.ஐ. 'பக்கம் 403ff, 483ff) கருத்துகளை ஒட்டியே அமைந்துள்ளது.

காரவேளனைப் பற்றிய குறிப்புகளுக்கு, டி. சி. சர்க்கார் வெளியிட்டுள்ள, 'தேர்ந்தெடுக்கப்பட்ட கல்வெட்டுகள்' (கல்கத்தா 1942) பக்கம் 206 என்ற நூலில் காணப்படும் நூலடைவைக் காண்க.

நூலாசிரியரின் 'இந்திய நாட்டின் பண்டைய வரலாறு— 'அசோகன்' ஆகியவைகளில் காணப்படும் பல குறிப்புகள் இன்றும் அவசியமானவைகளாக விளங்குகின்றன.

## 3. இந்தோ-கிரேக்கர் மற்றும் வடமேற்கு இந்தியாவில் ஆட்சி செலுத்திய பிற நாட்டு வமிசங்கள்; குஷானியர் அல்லது இந்தோ-சித்தியர்; கிரேக்க ஆதிக்கம்; அன்னிய நாட்டு வாணிபம்; சோழர் வரலாறு தொடக்கம்

### பாக்திரிய பார்த்திய நாடுகளில் புரட்சி

தோராயமாக மூன்ருவது நூற்ருண்டின் இடைப்பகுதியில், கி. மு. 250 ஆம் நூற்ருண்டு தொடங்கிய ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளில், அசோகனின் ஆட்சி உச்ச நிலை எய்திய அதே நேரத்தில் பாக்திரியா, பார்த்தியா ஆகிய இருமுச்கியப் பகுதிகள், செல்யூகிதான் பேரரசிலிருந்து பிரிந்து, ஒரே காலத்தில் தனித்தனி அரசுகளை அமைத்துக்கொண்டன. இந்த நிகழ்ச்சியின் விளைவு இந்திய வரலாற்றுடன் மிக்க தொடர்புள்ளதாக இருக்கிறது.

### பார்த்திய நாடு

பார்த்திய நாடு காஸ்பியன்கடலுக்குத்தென்கிழக்கிலுள்ளது. அந்நாட்டில் வாழும் மக்கள் உடலுறுதி பெற்ற குதிரை வீரர்கள். பிந்திய கால துர்க்கோமான்களுடன் (துருக்கியர்) அவர்களை ஒப்பிடலாம். அங்குத் தோன்றிய புரட்சி நெடுநாட்களாக நடைபெற்றதோடு தேசியப் புரட்சியாகவும் விளங்கியது. கி. மு. 248 ஆம் ஆண்டில் அந்நாடு சுய ஆட்சி பெற்றதெனக் கூறலாம். சுதந்திரப் போரட்டத்தில் நாட்டு மக்களுக்குத் தலைவகை அர்சேர்க்ஸ் என்பவன் விளங்கினன். போராட்டத்தில்வெற்றிபெற்ற அவன் அர்சேகிதன் வமிசமென்ற அரச குலத்தைத் தொடங்கினன். இப்பாரசீக அரச வமிசம் தோராயமாக ஐந்து ஆண்டுகள் நிலை பெற்றிருந்து பின் கி. பி. 226-ல் சசானியரால் அழிக்கப்பெற்றது. கிழக்கு நோக்கிப் பரவத்தொடங்கிய பார்த்தியரின் செல்வாக்கு, ஒரு காலத்தில் பாரசீக அகேமினியன்களுக்குச் சொந்தமாயிருந்த பகுதிகள் அனைத்தையும் கைப்பற்றியது. அரசு ஏற்பட்ட ஒரு நூற்ருண்டுக்காலம் வரையிலும் இந்திய நாட்டின் மீது அதன் ஆதிக்கம் அதிகமாகப் பரவவில்லை.

### பாக்திரியா

இந்துகுஷ் தொடருக்கும் ஆச்சஸ் ஆற்றிற்கும் இடைப்பட்ட பகுதியில், செழிப்பும் டண்பும் மிக்க பாக்திரிய நாடு அமைந்

திருந்தது. சுமார் ஆயிரம் நகரங்களடங்கிய இப்பகுதி அகாமினியன் காலத்தில் மிகவும் புகழெய்தி அகாமினியன் ஆட்சியில் முதன்மை இடம் பெற்று விளங்கியது. அங்குத்தோன்றிய புரட்சி சாதாரணமாக ஆசிய நாடுகளில் தோன்றும் புரட்சிகளைப்போல டயடோட்டஸ் என்னும் கவர்னர் ஒருவன் கிளர்ச்சி செய்ததினால் விளைந்தது.

இவ்வாறு புதிதாக எழுந்த இராச்சியங்கள் அசோகனுக்குச் சொந்தமான காபூல் அல்லது பாரோபனிசதாய் மாகாணத்தை அடுத்து அமைந்திருந்தன. எனவே, அங்குக் கிளம்பிய கிளர்ச்சியின் எதிரொலி பாடலிபுத்திர அவையிலும் கேட்டிருக்கவேண்டும். இச்செய்தி அறிவிக்கின்ற இந்திய நாட்டுக் குறிப்புகள் இல்லை. அசோகன் உயிருடன் இருந்த வரை கிரேக்க நாடுகளுடன் நட்புக்கொண்டிருந்தான். மேலும் அவனது திறமையான ஆட்சியும், அலெக்சாந்தரது சந்ததிகளால் இந்திய நாட்டிற்கு எவ்விதக் கெடுதியும் நேராதவாறு பாதுகாத்தது. அரங்கிலிருந்து அசோகன் மறைந்ததும் அவனது நாடு நசித்துவிட்டது: சிந்து நதிக்கப்பாலுள்ள அவனது சாம்ராச்சியப்பகுதிகளுக்கு ஆபத்து விளைவதற்கு நெடுநாட்கள் பிடிக்கவில்லை.

### காபூலைச் சிரியர் படையெடுத்தல்

பாக்திரியாவின் மூன்றாவது மன்னன் யூதி டிமஸ் என்பவனுக்கும் சிரியா நாட்டைச் சார்ந்த மகா ஆன்டியோகஸ் என்பவனுக்கும் பகை மூண்டது. பாக்திரியா சுயேச்சை நாடென்பதைப் பின்னவன் ஒப்புக்கொண்டதால் கி. மு. 208-ல் சமாதானம் ஏற்பட்டது. சின்னாட்களுக்குப்பின் ஆன்டியோகஸ் இந்துகுஷ் தொடரைக்கடந்தான். காபூல் பள்ளத்தாக்கை ஆண்டு வந்த 'சுபக சேனன்' (சோபக சேனர்கள்) என்னும் இந்திய அரசனைத் தாக்கினான். ஏராளமான பொருளையும் யானைகளையும் இந்திய மன்னனிடமிருந்து திறையாகப்பெற்று, அரகோசியா, (காண்டஹார்) திராங்கியானா வழியாக வீடுதிரும்பினான். இந்தப் படையெடுப்பினால் நிலையான விளைவுகள் எதுவுமில்லை.

### டெமிட்ரியசு-இந்தியர்களின் அரசன்

யூதிடிமசின் மகனும், பார்த்திப நாட்டின் நான்காவது மன்னனுமான டெமிட்ரியசு, மிகவும் வலிமை பெற்று விளங்கினான். ஆரியானா அல்லது ஆப்கானிஸ்தானம் முழுவதையும் வெற்றி கண்டதோடு; பஞ்சாபிலும் மேற்கு இந்தியாவிலும் பல பகுதி

களைக் கைப்பற்றும்அளவிற்கு அவனது வலிமை ஓங்கியிருந்தது.[1] அவன் அல்லது மினாந்தர் (அல்லது இருவருமே) இந்திய நாட்டின் மையப்பகுதியைத் தீவிரமாகத் தாக்கினர். முன்னரே நாம் குறித்ததுபோல, இப்படையெடுப்புகளைப் புஷ்யமித்திரன் எதிர்த்து நின்றான். இதனால், அவனுக்கு 'இந்தியர்களின் அரசன்' என்ற பெயரும் உண்டாயிற்று. சமகாலத்திய பண்டாலியன், அகாதோகிள்ஸ் ஆகியோரது சதுர நாணயங்கள், இந்தியாவில் உள்ள தட்ச சீல நாணயங்களைப்போல அமைந்துள்ளன. இதிலிருந்து. கிரேக்கக் குடியேற்ற நாடுகளுக்கும் டெமிட்ரியசின் இந்திய வெற்றிக்கும் ஏதோ ஒரு வகையான தொடர்பிருந்திருக்கிறதென்பதும் தெரியவருகிறது. குடியேற்ற நாடுகள் கி. மு. இரண்டாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் வடமேற்கு எல்லையில் நிறுவப்பெற்றிருக்கவேண்டும். தோராயமாகக் கி. மு. 175-ஆம் ஆண்டில் யூக்ரடைடிஸ் என்னும் எதிரி ஒருவன் டெமிட்ரியசிடமிருந்து பாக்திரியாவைச் கைப்பற்றினான். அவன் மற்றுமோர் புதிய எல்லைப்புற அரச குலத்தைத் தோற்றுவித்தான். அக் குலத்தைச் சேர்ந்த நாற்பதிற்கும் அதிகமான மன்னர்களின் பெயர்களை நாணய ஆராய்ச்சியின் மூலமாக அறியக்கூடும். இம் மன்னர்களிடையில் நிலவிய உறவின் தன்மையைப் பற்றியோ, அல்லது அவர்கள் அரசாண்டுவந்த பகுதிகளின் எல்லைகளைக் குறித்தோ, உறுதியாக அல்லது தெளிவாக எதுவும் கூறுவதற்கில்லை.

**மினாந்தர்**

கி. மு. 140-லிருந்து 160 வரை பஞ்சாபில் அரசாண்ட மினாந்தர் என்பவனே மிகச்சிறந்தவன். 'மிலிந்தனின் கேள்விகள் என்ற பிரசித்தி பெற்ற புத்த இலக்கியம் அவனது நினைவு கூர்வதாக அமைகின்றது. அந்நூலின் கூற்றுப்படி அவன் பௌத்த சமயத்தைத் தழுவினான் என்றும் தெரிய வருகிறது. அவனது புகழ் மிகவும் பரவியிருந்தது. அவன், இறந்தபோது பல நகரங்கள் அவனது சாம்பலுக்கு நினைவுச்சின்னம் எழுப்புவதற்குப் போட்டியிட்டன. கவர்ச்சியும் அழகும் மிக்க அவனது நாணயங்கள் பல நமக்குக்கிடைக்கின்றன. யமுனை ஆற்றிற்குத் தெற்கிலும், சில நாணயங்கள் இந்தியாவில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

1 நாணய ஆராய்ச்சி செய்வோர் பலர் இரு டெமிட்ரியசுகள் இருந்தனரென நம்புகின்றனர். முதலாம் டெமிட்ரியசு வெளியிட்டதாகக் கூறப்படும் இந்திய நாணயங்கள், உண்மையில் இரண்டாவது டெமிட்ரியசு வெளியிட்டவைகளேயாகும். முதலாம் டெமிட்ரியசு இந்திய நாட்டை வென்றான் என்ற செய்தியைப்பற்றிய ஐயப்பாடு இப்போதுமிருந்திருக்கிறது. அவன் இந்துகுஷ் தொடருக்கப்பால் படையெடுத்து வந்திருக்க இயலாது.

**ஆன்டியால் கிடாஸ்**

மத்திய இந்தியாவில் பீல்ஸாவிற்கு அருகிலுள்ள பேஸ்நகர் என்னுமிடத்திலுள்ள கல்வெட்டு ஒன்றின் மூலமாகக் காலத்தால் சற்று பிந்தியவனும், தட்சசீலத்தை ஆண்டுவந்தவனுமான ஆன்டியால் கிடாஸ் என்ற பெயருடைய மன்னனொருவனைப் பற்றிய வியப்பும் திகைப்புமிக்க சில செய்திகளை அறிகிறோம். இக்கல்வெட்டு கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் அல்லது முதல் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றியிருக்க வேண்டும், 'தியான்' என்பவனின் மகனும், தட்சசீல மன்னனுமானஹெலியேடோரஸ் என்பவரது கட்டளைக்கேற்ப நிறுவப் பெற்றது. பேஸ் நகரை ஆண்ட மன்னனிடம் ஆன்டியால் கிடாஸ் என்ற மன்னனால் இவன் தூதுவனாக அனுப்பப் பெற்றான். ஹெலியேடோரஸ், மஹாவிஷ்ணுவின் ஓர் அம்சமான வாசுதேவ பக்தன் எனக் கூறிக்கொண்டான். வாசுதேவனுக்குக் கடனாற்றுகின்ற வகையில் ஒரே கல்லாலான ஸ்தூபி ஒன்றை எழுப்பினான். இந்தியநாட்டுச் சமய வரலாற்றில் இச்சான்று மிகவும் முக்கிய இடம் பெறுகிறது. வாசுதேவனைக் குறித்த பக்தி இயக்கத்தின் தொடக்க காலத்தை இச்சான்று விளக்கவல்லது. மேலும் கிரேக்கரின் பெயர் சூடியவர்களும், கிரேக்க மன்னர்களிடம் பணியாற்றியவர்களும் இந்து சமயம் சார்ந்த கடவுளரை வழிபட்டு வந்தனர் என்றும் தெரியவருகிறது.

**பாக்திரிய அரசின் முடிவு**

சாகர் போன்ற ஆசிய நாட்டு உட்பகுதியைச் சார்ந்த பல கூட்டத்தினர், ஈக்கூட்டங்கள் போல வெளிப்பட்டு கி. மு. 120-க்கும் 140-க்கும் இடைப்பட்ட காலவெளியில், பார்த்திய பாக்திரிய நாடுகளைத் தாக்கினர்.[1] பார்த்திய மன்னருள் இருவர் கொல்லப்பட்டதுடன், பாக்திரிய நாட்டில் கிரேக்கர் ஆட்சிக்கும் முற்றுப்புள்ளி வைக்கப் பெற்றது. யூக்ரடைடிசின் குலத்தில் தோன்றிய கிரேக்க – பாக்திரிய மன்னர்களில்

1 இந்தியர் 'சகர்' (சாகர், ஷகர்) என்னும் சொல்லைப் பயன்படுத்தினர். கணவாய்க்கு அப்பாலிருந்து வந்தவர்களை இச் சொல் பொதுவில் குறித்தது. 'ஏகலிங்க மகாத்மியத்தில்' காணப்படுவதுபோல பிற்காலங்களில் இப் பெயர் முஸ்லிம்களுக்கும் வழங்கியது.

ஹீலியோகிள்ஸ் என்பவன் இறுதியாக அரசாண்டான்.[1] மேலும் ஒரு நூற்றாண்டுக்காலமாகத் தழைத்திருந்த பாக்திரிய அரசு கி. மு. 130-க்கும் 140-க்கும் இடைப்பட்ட காலத்தில் முடிவுற்றதாகக் கூறலாம். முடிவெய்திய காலத்தை உறுதியாக அறிந்து கூற இயலவில்லை.

### பார்த்தியாவும் இந்தியாவும்

தோராயமாகக் கி. மு. 138ஆம் ஆண்டில்,[2] அவனது ஆட்சியின் இறுதியாண்டுகளில், சிந்துவிற்கும் ஹிடாஸ்பஸ்ஸிற்கும் இடையுள்ள பகுதியை, அல்லது தட்சசீலப் பேரரசைப் பார்த்தியாவைச் சேர்ந்த மித்ரிடேட்ஸ் I (சி 171 to 136. கி. மு.) என்பவன் தன்னாட்சியில் இணைத்து விட்டான். இவ்வாறு கைப்பற்றப் பட்ட பகுதியை நன்முறையில் ஆட்சி செய்வதற்குப் பார்த்திய மன்னர்களால் இயலவில்லை. எனினும், பார்த்திய அல்லது பாரசீக அரசிற்கும் இந்தியநாட்டிற்குமிடையில் ஏற்பட்ட தொடர்பின் விளைவாக, 'சத்ரப்' அல்லது மஹாசத்ரம்' என்னும் பிருதுகளை அன்னிய குலத்தினரான பல இந்திய அரசர்கள் அணிந்து கொள்ளும் வழக்கமேற்பட்டது. இப்பிருதுகள் பாரசீக மன்னர் குலமரபை ஒட்டியவை. இவ்வாறு பிருதுகளைச் சூட்டிக்கொள்ளும் வழக்கம் இந்திய மன்னர்களிடையில் பல நூற்றாண்டுக்காலம் நிலவியிருந்தது. சாகசத்ரபன் என்ற பிருது சூடிய பரம்பரையில் இறுதியானவனைக் கி. பி. நான்காவது நூற்றாண்டில் செளராஷ்டிரத்தை ஆண்டு வந்தவனைக் கூறலாம். அந்நூற்றாண்டில், குப்த பேரரசன் அவனை வென்று நாடிழக்கச் செய்தான்.

### இந்தோ - கிரேக்க, இந்தோ பார்த்திய இளவல்கள்

பாக்திரியாவை ஆண்ட கிரேக்க மன்னர்களில், 'ஹிலியோகிள்ஸ், இறுதியானவன் என்று கூறினோம். ஒருவேளை கி. மு. 130 ஆம் ஆண்டிற்கு முன்னதாகவே அவன் மறைந்திருக்கக் கூடும் என்றாலும், காபூல் நாட்டிலும், இந்தியநாட்டின் வடமேற்கு எல்லைப் பகுதிகளிலும் கிரேக்கர்களின் பெயர் தாங்கிய

1 'அட்டிக் டெட்ராடிராக்மர'க்கள் என்னும் ஒருவகை நாணயங்கள், கிரேக்கபாணியில் அமைந்திருப்பதோடு, கிரேக்க கதைகளையும் கொண்டிருக்கின்றன. சமீபகாலத்தில் கண்டெடுக்கப்பெற்ற இவைகள் ஹெர்மாஸ் வரையிலுள்ள பிற்கால மன்னர்களால் வெளியிடப்பெற்றவை. கிரேக்க ராச்சியங்கள் அழியும்வரை பாக்திரியாவின் ஒருசில பகுதிகள் கிரேக்கர் வசமாயிருந்தன என்பதை இவை அறிவிக்கின்றன. (ப-ர்)

2 'ஓரோசியஸ்'ஸில் காணப்படும் வாசகமொன்றை அடிப்படையாகக் கொண்டு இச்செய்தி தரப்படுகிறது. வாசகம் தெளிவற்றதென்பதால் இச்செய்தியை உறுதியாக நம்புவதற்கில்லை.

பல இளவல்கள் மேலும் பல ஆண்டுகளுக்கு அரசாண்டு வந்தனர். அவர்களுள் ஹெர்மேயஸ் என்பவனை இறுதியான இளவலாகக் கூறலாம். இவன் கிறிஸ்துவிற்குப் பின் முதல் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தான்.

இந்த இடைக்காலத்தில் எல்லைப்புறங்களைத் தாற்காலிகமாக அரசாண்ட பல அன்னியநாட்டுக் குடிகள் உண்டு. அவர்களில் சிலர் பார்த்தியப் பெயர்களைத் தாங்கியிருந்தனர். அவர்களைக் குறித்த தகவல்கள் தெளிவற்று இருப்பதால், ஐயத்திற்கிடமான தகவல்களை இந்நூலில் விவாதிப்பதற்கு மனமில்லை.

### கோண்டோ பெர்னசும் புனித தாமசும்

அத்தகைய மன்னர்களில் கோண்டோ பெர்னசு என்பவன் கவனத்திற்குரியவன். பெயர், பார்த்தியப் பெயர் வரிசையைச் சார்ந்ததென்பது கூறாமலே விளங்கும். அவனது ஆட்சி காலம் கி. பி. 20-லிருந்து 48-வரை எனக் கூறலாம். அரக்கோசியா அல்லது காண்டஹார் பகுதி, காபூல், தட்சசீல அரசு ஆகியவைகளடங்கிய பரந்த சாம்ராச்சியத்தை அவன் ஆண்டு வந்தான். கோண்டோ பெர்னசு அல்லது கோண்டோபேர்ஸ் என்ற பெயர் ஐரோப்பிய வாசகர்களுக்கு அறிமுகமான பெயரேயாகும். கி. பி. மூன்றாவது நூற்றாண்டைச் சார்ந்த, சமயச் சார்புள்ள கதைகளின் வாயிலாக, புனித தாமசு என்ற கிறித்துவப்பாதிரி அவனது சாம்ராச்சியத்தில் சமயப் பிரசாரம் செய்து, பின் கொலையுண்டார் என்று ஐரோப்பிய கிறித்தவர் அறிவார்கள். அப்புனிதர் தாமசு, சென்னைக்கருகிலுள்ள மயிலாப்பூரில் கொலையுண்டார் என்றும், வேறு சில மரபுக் கதைகள் கூறுகின்றன. இரண்டு வகைச் செய்திகளையும் உண்மை என்று நாம் ஏற்பதற்கில்லை. மிகப் பெரிய புனிதரென்றாலும் சாவென்பது வாழ்வில் ஒரு முறையே நிகழும்; ‘தொடர்புள்ள சான்றுகள் யாவையும் நன்கு ஆராய்ந்த பின், தென்னிந்தியாவில் புனிதர் கொலையுண்டார்’ என்ற மரபுச் செய்தி, கிடைக்கும் செய்திகளிரண்டிலும், நம்புவதற்கு அதிக பொருத்தமுடையது என்ற முடிவெய்தியுள்ளேன். மற்றும் புனித தாமசு கொலையுண்டு இறந்தார் என்று உறுதியாகக் கூறுவதற்கும் தகுந்த ஆதாரமெதுவுமில்லை. கிளாஸ்டிக் ஹீராக்லியன் என்ற பண்டைய நூலாசிரியர் ஒருவர் புனித தாமசின் இறுதி நாட்கள் அமைதியாகக் கழிந்தன என்று திட்டவட்டமாகக் கூறுகிறார். கோண்டோபெர்னசின் சாம்ராச்சியத்திற்குப் புனித தாமஸ் விஜயம் செய்தார் என்ற கதைக்குரிய காரணமாக, அப்புனிதரின் சீடர்களான கிருஸ்துவர்கள் அப்பகுதியில் பலநாட்களுக்கு

முன்னதாகவே குடியேறிப் புனிதரின் வழிமுறைகளைக் கடைபிடித்து வந்ததே காரணமாகும். வழக்கிலிருந்துவரும் இரு கதைகளையும் சேர்த்து, ஒருசிலர் புனித தாமஸ் முதலில் கோண்டோபெர்னசின் இராச்சியத்திற்குச் விஜயம் செய்தாரென்றும், பிறகு தீபகற்ப இந்தியாவிற்குச் சென்றார் என்றும் கூறுவர். ஆனால், இவ்வகையான யூகங்களை உண்மையான விளக்கங்களாக ஏற்க இயலாது. இவ்விஷயத்தைப் பல்வேறு கோணங்களிலிருந்து நூலாசிரியர்கள் தீவிரமாக ஆராய்ந்து விட்டனர். ஏற்கக்கூடியதாக ஏதாவதொரு முடிவு எய்தவேண்டுமென்பதற்காக ஏராளமான அறிவைப் பயன்படுத்தியுள்ளனர். ஆனால் ஓரளவிலேனும் உண்மையை இன்னும் அறியக் கூடவில்லை. மேலும் சில சான்றுகள் கண்டுபிடிக்கப்படும் என்று எண்ணுவதற்குச் சிறிதும் இடமேயில்லை.

### குஷானியரின் ஆட்சி காலத்தைப் பற்றிய குழப்பம்

காபூல், வடமேற்கு இந்தியா ஆகிய பகுதிகளை வல்லமை பொருந்திய குஷானியர் ஆண்டு வந்தனர். அவர்கள் நாடோடிகளாக யூ-ச்சி இனத்தைச் சார்ந்தவராவர். அன்னியக் குடிகளான இக்குஷானியரின் காலவரன் முறை இந்திய வரலாற்றில் தீர்க்கவியலாத சிக்கல் நிறைந்த ஒரு பிரச்சினையாக இருந்து வருகிறது. அவ்வமிசத்தைச் சார்ந்தவருள் கனிஷ்கன் என்ற அரசன் மிக்க புகழ் பெற்றவன். எனவே, இப்பிரச்சினையைப் பொதுவில் 'கனிஷ்கனின் ஆட்சி காலம்' என்றே குறிப்பது வழக்கமாயிருந்து வருகிறது. சிக்கல் நிறைந்த இப் பிரச்சினைக்குரிய விளக்கம் கண்டாலன்றி, வட இந்தியாவின் சற்றேறக் குறைய மூன்று நூற்றாண்டுக் கால வரலாறு தெளிவு பெறுவதற்கு வழியில்லை. திட்டவட்டமான குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு, பிரச்சினைக்கு ஏற்றதொரு முடிவு காணும் முயற்சியில் முன்னேற்றம் காணப்படுகிறது. குஷானிய மன்னருள் முக்கியமான, ஐவரைக் காலவரன் முறை அடிப்படையில் வரிசைப் படுத்தித் தற்போது தன்னம்பிக்கையுடன் கூறலாம்.[1] மேலும், காலவரன் முறையைப் பற்றிய கருத்து வேற்றுமைகள் யாவும் சுமார் அறுபது ஆண்டு அளவிலேயே நிலவி வருகின்றன. மேலும், தெளிவாகக் கூறுவோமாகில் கனிஷ்கன் கி.பி. 78 ஆம் ஆண்டில் அரசெய்தினனா?

1 காட்பிசஸ் i, காட்பிசஸ் ii, கனிஷ்கன், ஹூவிஷ்கன், வசுதேவன் ஆகிய ஐவரே குறிக்கப்பட்டுள்ளனர். ஆங்கிலத்தில் 'குஷான்' என்று குறிக்கப் பெறுகின்ற சொல், வெவ்வேறு மொழிகளிலும், எழுதுகின்ற முறைகளிலும் வெவ்வேறாகக் காணப்படுகின்றன: இரண்டாவது அட்சரத்திலுள்ள தீர்க்கமான உச்சரிப்பைச் சரியென்று கொள்ளலாம்.

அல்லது தோராயமாக நாற்பது அல்லது அறுபது ஆண்டுகளுக்குப் பின்னர் பட்டமேற்றானா? என்பதே பிரச்சினையாக இருந்து வருகிறது.

1914 ஆம் ஆண்டில் நான் 'பண்டைய இந்திய வரலாறு' என்ற நூலின் மூன்றாவது பதிப்பை வெளியிடும் போது, நடைமுறையில் கி.பி. 78-ல் கனிஷ்கன் அரசெய்தினான் என்று நிலவிய கருத்தையே ஏற்றிருந்தேன். எனினும், உறுதியான காலம் சற்றுப் பிந்தியதாக இருக்கலாம் என்ற கருத்தையும் வெளியிட்டிருந்தேன். மேலும் கிடைத்துள்ள சான்றுகளை ஆராய்ந்து சர். ஜான் மார்ஷலும், பேராசிரியர் ஸ்டென் கோனோவ் என்பவரும் தோராயமாகக் கி.பி. 120 ஆம் ஆண்டில் கனிஷ்கனின் ஆட்சி தொடங்கிற்றென்று எண்ணுகின்றனர். இக்கருத்தைப் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே, வேறு காரணங்களை அடிப்படையாகக் கொண்டு நான் வெளியிட்டிருக்கிறேன். இப்போதும் அதையே ஏற்கிறேன். இந்நூலில் இக்கருத்தின் பிழையின்மையை ஏற்று மேலும் தொடருவேன்'. தொல் பொருள் ஆராய்ச்சியில் மீண்டும் கால விரயம் செய்வதென்பதைத் தவிர்க்க விரும்புகிறேன். சிறிய இந்நூலில் அத்தகைய விவரங்கள் யாவையும் விரிவாக எடுத்துரைக்க இயலாது.[1]

### யூச்சி நாடுபெயர்தல்

கி. மு. 160-க்கும் 174-க்கும் இடைப்பட்ட காலத்தில் மகா-யூச்சி என்னும் நாடோடிக் கூட்டம் மேற்குச் சீனாவிலிருந்து விரட்டப்பட்டது. அக்கூட்டம் இடம் பெயர்ந்து டாக்லமகான் (கோபி) பாலைவனத்தின் வடக்குச் சாலை வழியாக, மேற்கு நோக்கிப் புறப்பட்டது. இவ்வாறு அலைந்து திரியும் போது, மற்றுமொரு நாடோடிக் கூட்டமான 'சாகாய்' அல்லது சகர்களுடன் (சீனரின் ஸீ அல்லது ஸாய்) போரிட நேர்ந்தது. சாகாய் கூட்டத்தினர் 'ஜாக்ஸார்ட்ஸ்' அல்லது 'சிர்டார்யா' ஆற்றிற்கு வடதிக்கில் வசித்து வந்தனர். யூச்சியினர் அவர்களை முறியடித்து அவர்களிடமிருந்து மேய்ச்சல் நிலங்களைப் பெற்றுக் கொண்ட

1 இப்பகுதி டாக்டர் ஸ்மித் எழுதியுள்ளவாறே தரப்படுகிறது- சென்ற முப்பதாண்டு ஆராய்ச்சியில் கனிஷ்கரின் ஆட்சி காலத்தைப் பற்றிய தெளிவு எதுவும் கிட்டவில்லை. அண்மையில் இவ்வாராய்ச்சியில் ஈடுபட்டுள்ள இருவருள் டாக்டர் கிர்ஷ்மான் கி.பி. 144 ஆம் ஆண்டு என்ற முடிவு கூறுவார். மீலூஷியன் டி லீவ் கி.பி. 78 என்ற முடிவு கூறுவார். பேராசிரியர் கோனோவின் கி.பி. 128 என்ற முடிவு இன்னும் பலரால் ஏற்கப்படுகிறது. டாக்டர் ஸ்மித் அவர்களின் மதிப்பீடு இதனுடன் பெரும்பாலும் ஒத்திருக்கிறது (ப-ர்)

னர். நிலமிழந்த சாகர்கள் இந்திய நாட்டின் எல்லைப் புறங்களில் புதிய உறைவிடங்களை நாடிச் செல்ல வேண்டியதாயிற்று.

வெற்றி கண்ட யூச்சியினரும் சின்னாட்களுக்குப் பின் வூ-சன் என்ற மற்றுமொரு கூட்டத்தினரால் விரட்டப்பட்டனர். சாகரிடமிருந்து கைப்பற்றிய நாடுகளை விடுத்து இவர்களும் ஓடவேண்டியதாயிற்று. ஆக்ஸஸ் நதியின் வட கரையில் தலைநகரமொன்றை அமைத்துக் கொண்டு, அந்நதியின் பள்ளத்தாக்கில் குடியேறினர். தெற்கில், பாக்திரியாவிலும் இவர்களது ஆதிக்கம் பரவியிருந்ததெனக் கூறலாம்.

**காட்பிசஸ்—I**

'யூச்சி' என்ற இப் பெருங்கூட்டத்தினர் நாளடைவில் சுற்றித் திரியும் வழக்கத்தை விட்டு, நிலையாகப் பாக்திரியப் பகுதிகளை ஆக்ரமித்துக்கொண்டனர். இச்சம்பவம், நடைபெற்ற காலத்தையும் உறுதியாக அறிந்து சொல்வதற்கில்லை. பாக்திரியப் பகுதியும் ஐந்து பெரும் சாம்ராச்சியங்களாகப் பிரிந்திருந்தது. இவ்விராச்சியங்கள் எப்போது முளைத்தன என்பதையும் ஓரளவில் கூட நம்மால் அறிந்துகொள்ளும் வாய்ப்பில்லை. சுமார் ஒரு நூற்றாண்டுக் காலத்திற்குப் பின் யூச்சியினரின் ஒரு பிரிவினரான குஷானியர் பிறரைக் காட்டிலும் மிகவும் புகழ் பெற்று எழுவதைப் பார்க்கிறோம். அப்போது அவர்களுக்குத் தலைவனாக விளங்கியவன் குஜலா-காரா-காட்பிசஸ் என்பவனாவான். அவனைத் தற்கால வரலாற்றாசிரியர்கள் முதலாம் காட்பிசஸ் என்ற சுருக்கமான பெயரிட்டு அழைக்கின்றனர். தோராயமாக கி. பி. 40 ஆம் ஆண்டில் அவன் குஷானியரின் அல்லது யூச்சியினரின் அரசனாகி விட்டான் என்று கொள்ளலாகும்.[1]

பெருகிவரும் மக்களின் தொகைக்கு. பாக்திரியா நாடு மிகச் சிறியது என்பதை உணர்ந்தாற்போல், வெகு விரைவில் முதலாம் காட்பிசஸ், இந்துகுஷ் தொடரின் தென் திசையிலுள்ள பகுதிகளின் மீது போர் தொடுக்கத் துணிந்தான்.

நீண்ட ஆயுளையும் வளமிக்க வாழ்வையும் பெற்றிருந்த அவன் தன் ஆட்சி காலத்திற்குள் பாக்திரியாவில் வலிமை பெற்று விளங்கியதோடு, மலைத்தொடருக்குத் தென்திசையிலுள்ள காபூல் பகுதியையும் கைப்பற்றினான். சிந்து நதியின் கீழ்த்திசையிலுள்ள 'கி-பின்'னையும் தன் அரசுடன் இணைத்தான். 'கி-பின்'

[1] கி. பி. 25-க்கும் 81-க்கும் இடைப்பட்ட காலமென்றாலும் முந்திய காலத்தையொட்டி அமைப்பதே சிறந்தது. இதுவே பிராங்கே என்பவரின் கருத்து மாகும் பக். 27-73.

என்ற பகுதி, தற்காலங்களில் தட்சசீலத்தை உள்ளடக்கிய காந்தாரராச்சியத்தைக் குறிப்பதாக ஓரளவு துணிந்து கூறலாகும். அங்குக் கி. பி. 48-ல் அவன் கோண்டோ பெர்னசைத் தொடர்ந்து அரசேற்றிருக்கவேண்டும். பார்த்தியர்களையும் அவன் தாக்கினன்.

இம்முயற்சிகள் யாவும் வெற்றிபெறுவதற்கு நீண்டகாலம் பிடித்திருக்கவேண்டும், இவ்விடைக்காலத்தில் குஷானியர் அல்லது இந்தோ-சித்தியர் சிறுகச்சிறுக எல்லைப்புறங்களிலிருந்த இந்தோ-கிரேக்க, சாக, இந்தோ-பார்த்திய அரசர்களை முறியடித்திருக்க வேண்டும். எண்பது வயதடைந்த முதலாம் காட்பிசஸ் கி. பி. 77 அல்லது 78-ல் இறந்திருக்கவேண்டும்.

### இரண்டாம் காட்பிசஸ்

முதலாம் காட்பிசனைத் தொடர்ந்து அவனது மகன் வீமா காட்பிசஸ் அரசேற்றான். நாணயங்களில் காணப்படும் கிரேக்கு கதைகளில் அவன் வீமோ (ஊமோ) என்றழைக்கப்படுகிறான். சீன வரலாற்றாசிரியர்கள் அவனை 'யென்-கியோ-சாங்க்' என்ற பெயரால் அழைக்கின்றனர். அவனை இரண்டாம் காட்பிசஸ் என்ற பெயரால் அழைப்பது சுலபமாகப்படுகிறது. வடஇந்தியாவைக் கைப்பற்றுவதில் முனைந்த அவன் ஓரளவு வெற்றியும் கண்டான். கி.பி. 78 ஆம் ஆண்டில் அவனது ஆட்சி தொடங்கியதிலிருந்து சாக சகாப்தமும் தொடங்குகிறது என்று கருதுவது மிகவும் பொருந்த முடையது. எனினும், இதை மெய்ப்பிக்கின்ற சான்றுகள் இல்லை. அவன் அரசேறிய நாள் அல்லது சற்றுபின் முடிசூட்டிக்கொண்ட நாள் சாகசகாப்தத்தின் தொடக்க நாளாக அமைந்திருக்கக்கூடும். பிற பிரச்சினைகளை ஒப்பு நோக்கும்போது இச்சகாப்தத்தைப்பற்றிய பிரச்சினை அத்துணைச் சிக்கல் நிறைந்ததாக இல்லை.[1] இரண்டாம் காட்பிசஸ் என்பவன் இந்திய நாட்டில் கண்ட வெற்றிகளை வலியுறுத்தும் சான்றுகள் மிகக்குறைவாகவே உள்ளன. இதை அறிவதற்குப் பரவலாகச் சிதறிக்கிடக்கும் அவனது நாணயங்களே மிகவும் துணைபுரிகின்றன. ஏராளமாகக்காணக்கிடைக்கும் நாணயங்களிலிருந்து, அவன் நெடுங்காலம் அரசாண்டிருக்கவேண்டுமென்பது உறுதியாகின்றது. சிந்து நதியின் முகத்துவாரத்திலும், கங்கைச் சமவெளியில் குறைந்தது 'டெரைஸ்' வரையினும், அவன் செல்வாக்குப்பெற்றிருந்திருக்கக்

[1] இச்சகாப்தத்தை முறையே கனிஷ்கன், காட்பிசன் 1 அல்லது க்ஷகராதாசத்ரப் நாகபாணன் ஆகியோர் தொடங்கியதாகப் பிற ஆராய்ச்சியாளர் கருதுவர்.

கூடும். தெற்கில், அவனது ஆதிக்கம் நர்மதை ஆறு வரையிலும் பரவியிருக்கக்கூடும். மாளவம் மற்றும் மேற்கு இந்திய இராச்சியங்களிலுள்ள சாகசத்ரபர் அவனைத் தங்கள் பேரரசனாக ஏற்றிருந்தனர்.

**சீனத்துடன் போர்**

பல நாடுகளைக் கைப்பற்றி வந்த இரண்டாம் காட்பிசஸ் சீனநாட்டுடனும் போரிட வேண்டியதாயிற்று. பேரரசன் வூ-டி.(கி.மு. 140-86) யின் ஆட்சியில் சீனர்கள் மேற்கு ஆசியாவுடன் தொடர்பு கொண்டுவிட்டனர். அப்போது சீனாவின் இடைப்பேரரசின், சார்பாக 'சாங்-கியன்' என்பவனைத் தலைவனாகக்கொண்ட நல்லெண்ணத் தூது கோஷ்டியொன்று ஆக்சஸ் பகுதிக்கு அனுப்பப்பெற்றது. கி. மு. 120-ல் சாங்-கியன் சீன நாட்டிற்குத் திரும்பினான். இத்செய்தியைப்பற்றிய கருத்து வேற்றுமைகள் ஏராளமாக உண்டு. ஏதோ ஒரு காரணம் பற்றி, மேற்குப்பகுதிகளுடன் சீனா கொண்ட தொடர்பு கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் துண்டிக்கப்பட்டது. கி.பி.23-ல் ஹான் வமிசத்தினரின் அரசு முடிவுற்றபோது, அந்நாடுகளில் சீனரின் செல்வாக்கு முற்றிலும் அழிந்து விட்டது எனக் கூறலாகும்.

ஐம்பது ஆண்டுகளுக்குப்பின் பேராசை மீண்டும் சீனரைப் பற்றிக்கொண்டது. கி. பி. 73-க்கும் 102-க்கும் இடைப்பட்ட காலத்தில், ஜெனரல் பாஞ்சோ என்பவன் 'கோட்டான்' வழியாகவும் தற்போது சீன துருக்கிஸ்தானம் என்ற பெயரில் வழங்கிவருகின்ற பிற பகுதிகளின் வழியாகவும் பாரசீகத்தின் குறுக்காகச் சென்று, பார்த்தியாவினுள்ளும், காஸ்பியன் கடற்கரைவரையிலும் தனது நாட்டின் செல்வாக்கைப் பரப்பினான்.

கோட்டான் மார்க்கமாக முன்னேறியதின் விளைவாக, 'தக்ளமகான்' (கோபி) பாலைவனத்திற்குத் தெற்கிலுள்ள வழி புலனாயிற்று. அப்பாலைவனத்திற்கு வடக்கிலுள்ள வழி கி. பி. 94-ல், 'குச்சா' 'கராஷர்' ஆகிய பகுதிகளை அடக்கும்போது, புலனாயிற்று.

**சீனரின் வெற்றி**

சீனர் பெற்றுவந்த வெற்றிகள் குஷானியமன்னர் இரண்டாம் காட்பிசசை அச்சுறுத்தின. இந்நூலில் கடைப்பிடிக்கப்பட்டுள்ள காலவரன்முறையை அடிப்படையாகக்கொண்டு இக்கருத்து அறிவிக்கப்படுகின்றது. கி. பி. 87-ஆம் ஆண்டில், சுவர்க்கத்திலிருந்து உதித்த 'சான்' என்பவனுக்குத்தான் சமதையானவன் என்று துணிவுடன் அறிவித்ததோடு அம்மன்னனின் மகளையும்

மணம் செய்து கொள்ளவிரும்பினன். இத்திருமணப் பேச்சு, ஒரு பெருங்குற்றமாகச் சீனரால் கருதப்பெற்றது. குஷானியத்தூது வனை ஜெனரல் பாஞ்சோ, கைது செய்து தாய் நாட்டிற்கு அனுப்பிவைத்தான். 70,000 குதிரை வீரர்களடங்கிய வெல்வ தற்கரிய பெரும்படையொன்றை, வைசிராய் 'சி' என்பவனின் தலைமையில் காட்பிசஸ் திரட்டினன் 'தாக்டம்பாஷ் பாமீர்' அல்லது சு-லிங் மலைத்தொடரைக் கடந்து சீனவின் மீது படை யெடுத்துச் செல்லுமாறு இப்பெரும்படைக்கு ஆணையிடப்பட்டது. வழியிலிருந்த தாஷ்குர் கான் கணவாய் 14000 அடி உயர மிருந் தது. மேலும், கரடுமுரடான பெருவழியைக் கடந்து செல்வதில் பயங்கரமான ஆபத்துகள் நிறைந்திருந்தன. இப்பெருவழியை மிகப்பிரயாசையுடன் கடந்து வந்த குஷானியர் படை 'காஷ்கர்' அல்லது 'யார்கண்ட்' சமவெளியை அடைந்ததும் மிக எளிதில் முறியடிக்கப்பட்டது. இரண்டாம் காட்பிசஸ் சீனருக்குத் திறை செலுத்தவேண்டியதாயிற்று, சீன வரலாற்றுக் குறிப்புகளின்படி பேரரசன் ஹோடியின் (கி.பி. 89-105) ஆட்சியில் சீனவிற்கு இந் தியர் தூதுவரை அனுப்பிவந்தனர் என்றும், இத்தூதுவர் விலை யுர்ந்த பரிசுகளையும் திறைப்பணத்தையும் தாங்கி வந்தனர் என் றும் தெரிய வருகின்றது.

### இரண்டாம் காட்பிசஸ், கனிஷ்கன் ஆகியோரது ஆட்சிகளுக்கு இடைப்பட்ட காலம்

பரந்த நிலப்பகுதிகளில் சிதறிக் கிடக்கும் நாணயங்களி லிருந்து, நாம் முன்னர்க் குறிப்பிட்டது போல இரண்டாம் காட்பிசஸ் நீண்ட நாட்கள் அரசாண்டு வந்தான் என்பது புலனு கும். சீனரிடமிருந்து நாம் பெறும் குறிப்புகளுக்கிணங்க அவனுடைய தகப்பனர் எண்பதாவது வயதில் மரணமடைந் தார் என்பதால், இவனது ஆட்சி முப்பதாண்டுகளுக்கு மேலாக நீடித்திருக்கவும் முடியாது. கி. பி. 110 ஆம் ஆண்டில் அவன் மரணமடைந்ததோடு அவனது ஆட்சியும் முடிவடைந்திருக்க வேண்டுமெனத் தோராயமாகக் கூறலாம். இந்திய மாகாணங் களை ஆள்வதற்கென அவன் இராணுவகவர்னர்களை நியமித் தான் என்று கூறப்படுகிறது. அவன் மரணமடைந்த சில ஆண்டுகளுக்குப் பின்னும் இக் கவர்னர்கள் இந்திய மாகாணங் களை ஆண்டு வந்தனர் என்று கூறலாம். இனம் புரியாத சில மன்னர்கள் வெளியிட்ட நாணயங்கள் நமக்குக் கிடைக்கின்றன. 'ஸோடர் மேகஸ்' அல்லது பெருங்காவலர் என்ற பிருதுகளை இம்மன்னர்கள் சூடியிருந்தனர். இரண்டாம் காட்பிசசுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த இக் கவர்னர்களே அத் தகைய நாணயங்களை வெளியிட்டிருக்க வேண்டும். அடுத்து

நாம் கேள்வியுறுகின்ற கனிஷ்கன் இரண்டாம் காட்பிசசின் மகனல்லன். 'வஜேஷ்கன்' என்பதே அவனது தகப்பனின் பெயராக இருந்திருக்க வேண்டும். அவன், பெருங்கூட்டத்தின ரின் உட்பிரிவான, சிறுயூச்சியினரின் மரபைச் சார்ந்தவனாக இருத்தல் வேண்டும். இவன் 'கோட்டான்' பகுதியில் குடியேறி இருந்ததாகத் தெரியவருகிறது. யூச்சிவகுப்பினரின் பெருங் குடியைச் சார்ந்த இவனது முன்னோன் பாக்திரியா நாட்டுப் பெரும் பிரிவைச் சார்ந்தவன். இரண்டாம் காட்பிசசின் மரணத்திற்கும் கனிஷ்கன் அரசேற்றதற்கும் நீண்டதொரு இடை வெளி இருந்திருக்க வேண்டும். தோராயமாக கி. பி. 110 ஆம் ஆண்டில் இரண்டாம் காட்பிசஸ் இறந்தான் என்றும் கி.பி.120 ஆம் ஆண்டில் கனிஷ்கன் அரசேற்றான் என்றும் கூறலாம். அரசு ரிமை இரண்டாம் காட்பிசசின் கையிலிருந்து, கனிஷ்கனின் கைக்கு எவ்வாறு மாறியது என்பதைப் பற்றிய குறிப்பு எதுவும் நமக்குக் கிட்டவில்லை.

### கனிஷ்கனின் சகாப்தம்

கனிஷ்கன் அரசேற்ற அல்லது மகுடாபிஷேகம் செய்து கொண்ட சற்றுப்பிந்திய நாளை அடிப்படையாகக் கொண்டு புதிய தொரு சகாப்தம் தொடங்குகிறது. இச் சகாப்தம் காபூல் உட் பட வட இந்தியாவில் கடைப்பிடிக்கப்படுகிறது.) ஆட்சிக் காலத்தை அடிப்படையாகக் கொண்ட இக் காலவரன்முறையை கனிஷ்கன் அல்லது அவனது குடிமக்கள் தொடங்கியிருக்க வேண் டும். அவனது சந்ததியாரும் இம் முறையைக் கடைப்பிடித் தொழுகியிருக்கவேண்டும். கண்டெடுக்கப்பட்டுள்ள தனியரர் கல்வெட்டுகள் சில, இக்கால முறையையொட்டி மூன்றாவது ஆண்டிலிருந்து 99 ஆம் ஆண்டுவரை தெய்தியிடப்பட்டுள்ளன. இதனால், கனிஷ்கன் அரசேற்ற நாள் ஐயமின்றித் தெளிவு பெறு மாயின், இவ்வாட்சிக்கால வரன்முறையிலுள்ள பல சிக்கல்கள் தெளிவுபெறும்.

### கனிஷ்கனின் சாம்ராச்சியம்

கனிஷ்கன் காந்தார நாட்டையாண்டு வந்தான் என வர்ணிக் கப்படுகிறது. இந்தியப் பகுதிகளின் தலைநகரமாகவும், மத்திய அரசின் இருப்பிடமாகவும் 'புருஷபுரம்' அல்லது 'பெஷாவர்' விளங்கிவந்தது. அங்குச் சிறந்ததொரு பௌத்த சமயச்சார்புள்ள கட்டடத்தையும் அவன் எழுப்பினான். சிதைந்த அச் சின்னத்தின் பகுதிகள் சில புதைபொருளாராய்ச்சியின் விளைவாகக் கண் டெடுக்கப்பட்டுள்ளன. தனது இளமை நாட்களில் காஷ்மீரப்

பள்ளத்தாக்கை அரசுடன் இணைத்துக்கொண்டு, சிந்து கங்கைச் சமவெளிகளில் தனது ஆட்சியை வலுப்படுத்தி, பார்த்தியர்களுடனும் போர் தொடுத்தான். சிறிது காலத்திற்குப்பின் சீனரிடம் தன் முதாதையருக்கு ஏற்பட்ட அவமானத்திற்குச் சீன துருக்கிஸ்தானத்தில் பழி தீர்த்துக்கொண்டான். கோட்டான், யார்க்கண்ட், காஷ்கர் பகுதிகளை ஆண்டுவந்த சிறுமன்னர்களும் பிற தலைவர்களும் சீனப்பேரரசின் சிற்றரசராவார்கள். பெரும்படையொன்றை வெற்றியுடன் பாமீர் மலைத்தொடர்களைக் கடக்கச் செய்வது செயற்கரிய செயலாகும். அச்செயலில் வெற்றிகண்டு சிற்றரசர்களையும் கனிஷ்கன் முறியடித்தான் என்பதில் ஐயத்திற்கிடமேயில்லை. இக்குறுநில மன்னர்களில் ஒருவனிடமிருந்த பிணையாளிகளில் சிலரைப் பெற்று அவர்களைக் காபூல் மாகாணத்திலும் பஞ்சாபிலும் வசிக்கச் செய்தான் என்றும் தெரியவருகிறது. மிக வயதடைந்திருந்த கனிஷ்கனை, வடக்குப்பகுதிகளில் போர் நடந்து கொண்டிருக்கும் போது படைத்தலைவர்கள் சிலர், கழுத்தை நெரித்துக் கொன்றுவிட்டனர் என மரபுச் செய்திகள் அறிவிக்கின்றன. கனிஷ்கனது போர் வெறியே இவ்வெறுப்பிற்குக்காரணமென்றும் சொல்லப்படுகிறது. போர் புரிந்து வெற்றி காண்பதிலேயே கனிஷ்கன் தன் வாழ்நாளில் பெரும்பகுதியைக் கழித்தான். நெடுந்தூரத்திற்கப்பால் போர்களில் ஈடுபட்டிருந்த அவன், இந்திய நாட்டு அரசாங்க விவகாரங்களை ஆதியில் தனது மூத்தமகனை வசிஷ்கனிடமும், பிறகு இளைய மகனை ஹுவிஷ்கனிடமும் ஒப்படைத்திருந்தான் என்று தெரியவருகிறது. தகப்பனரின் துணை அலுவலர்களாக அவர்கள் பணியாற்றியபோதும் அரசனுக்குரிய, பிருதுகள் யாவையும் புனைந்து கொள்வதற்கு அவ்விளவல்களுக்கு அனுமதியிருந்தது. கனிஷ்கனுக்கு முன்னதாகவே வசிஷ்கன் இறந்திருக்கவேண்டும். அரசு கட்டிலேறுவதற்கென உயிர் வாழ்ந்த ஹுவிஷ்கன், பன்னிரண்டு அல்லது ஒருகால் இருபதாண்டுகள் வரையிலும் அரசாண்டிருக்கக்கூடும். வசிஷ்கனின் பெயர் தாங்கிய நாணயம் எதுவும் கிடைக்கவில்லை. ஹுவிஷ்கனின் நாணயங்கள் ஏராளமாகவும், பல இடங்களிலிருந்தும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன. பெரும்பாலும் இவை கனிஷ்கனின் மரணத்திற்குப்பின்னரே வெளியிடப்பட்டிருக்க வேண்டும். தகப்பனரின் துணை அலுவலனைகப் பணியாற்றிய காலத்திலேயே, ஒருகால் இந்நாணயங்களின் பகுதியை ஹுவிஷ்கன் வெளியிட்டிருக்கவும் கூடும்[1].

[1] இந்நூலில் கண்டிருக்கும் கருத்து ஆதியில் ஆர். டி. பானர்ஜி என்பவரால் வெளியிடப்பட்டது. நிகழ்ச்சிகளை விளக்குவதற்கு இது போதுமானதாக அமைகின்றது. அறிவிற்கெட்டிய செய்தி விபரங்கள்:-

கி. பி. 124ஆம் ஆண்டில் பான்யாங் என்ற வரலாற்றாசிரியன் இறந்து விட்டதால், மேலை நாடுகளைப்பற்றிய தகவல்கள் சரிவரக் கிடைக்கவில்லை என்பதை சீனர் ஒப்புக்கொள்ளுகின்றனர்; தனது தகப்பன் 'பாங்கியோ'விற்குப்பின், துருக்கிஸ்தான கவர்னர் பதவியை அவன் ஏற்றான். கி.பி. 152 ஆம் ஆண்டில் கோட்டானைச் சீனர் இழந்து விட்டனரென்றும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. உள் நாட்டுக் குழப்பமொன்று இருந்ததென்றும், புரட்சியின் போது கவர்னர் வாங்-கிங் கொல்லப்பட்டானென்றும், அதனால் இந்நிலை ஏற்பட்டதென்றும் கூறப்படுகிறது. கி. பி. 125-160 ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில், சீனத்துருக்கிஸ்தானத்திலுள்ள குறுநில மன்னர்களின்மீது தனது ஆதிக்கத்தைக் கனிஷ்கன் ஏற்படுத்தினான் என்ற பொதுக்கருத்தை இச்செய்திகள் உறுதி செய்கின்ற வகையில் உள்ளன. பௌத்த கதாசிரியர்கள் கனிஷ்கனைப்பற்றி மிகையாகப் பேசும் போது, சீன எழுத்தாளர் மௌனம் சாதிப்பதை இது ஒருவாறு விளக்குகிறது. இடைக்கால சீனப்பேரரசில் வாழ்ந்த எழுத்தாளர், பெருமன்னனுக்கு அவமதிப்பைத்தேடித்தருகின்ற எந்த நிகழ்ச்சியையும் பாராட்டுவதில்லை என்ற உண்மை நன்கு வெளிப்படுகிறது.

**கனிஷ்கனின் சமயம்**

கனிஷ்கன் மற்றும் அவனது சந்ததியார்களின் காலத்தில் பல கல்வெட்டுகள் நிறுவப்பெற்றன என்பதைத் தற்கால ஆராய்ச்சிகள் வெளிப்படுத்துகின்றன. இக்கல்வெட்டுகளின் மூலம் அவனது சாம்ராச்சியத்தின் எல்லைகளையும் மற்றும் குணாதிசயங்களையும் அறிகிறோம். வாழ்நாட்களின் பிற்பகுதியில் பௌத்த சங்கத்தின் ஆர்வமிக்க பக்தனாக மாறியதோடு, சங்கத்திற்கு ஏராளமாக வாரிவழங்கும் வள்ளலாகவும் விளங்கினான். இது

---

கனிஷ்கன்—வருடம் 3 (சாரநாத்); 18 (மாணிக்கியாலா) மற்றும் 41 (ஆரா).

வசிஷ்கன்—பிருதுகள் உட்பட, ஆண்டு 24 எண்ணிலும் எழுத்திலும் (இசாபூர், மதுரா). ஆண்டு? 28 (சாஞ்சி, இருக்கலாம்); ஆண்டு 29 (மதுரா - இருக்கலாம்).

ஹுவிஷ்கன் — ஆண்டு 33 (மதுரா); 51 (வார்தாக், மேற்கு காபூல்) மற்றும் 60 (மதுரா).

வாசுதேவன் — 74 (மதுரா); 80, 83, 87, 98 (அதே இடம்).

ஆராக்கல்வெட்டு இரண்டாம் கனிஷ்கனால் வெளியிடப்பட்டதென்றும், அல்லது அவனால் தோற்றுவிக்கப்பட்ட சகாப்தத்தைக் குறிப்பதென்றும், மற்றும் பலர் கருத்தறிவித்துள்ளனர்.

தெய்திக் குறிப்புகள் தாங்கிய கல்வெட்டுகள் யாவும் தனியார்களால் பதிவு செய்யப்பட்டவையாகும். அவைகளில் அதிகாரபூர்வமானவைகள் இல்லை.

அவனது புகழிற்குரிய காரணமாக விளங்குகிறது. அவனைப் போற்றி ஏற்றுகின்ற முறையில் பௌத்த நூலாசிரியர்கள், இரண்டாம் அசோகன் என்று வர்ணிக்கின்றனர். பௌத்த சமயத்திற்குக் கனிஷ்கன் காட்டிய பெரும் பரிவிற்கு உரிய காரணங்களை நம்மால் அறிய முடியவில்லை. சமய நூல்களில் காணப் படும் விளக்கங்கள் அசோகனது வாழ்க்கையை யொட்டிய சம்ப வங்களை, இவனுக்கும் பொருந்துமாறு அமைக்கும் முயற்சிகளே என்று தெரியவருகிறது. ஸொராஷ்டிரிய, கிரேக்க, மித்ரேய கடவுளரின் கதம்பத்திற்கு இந்தியக்கடவுளரையும் சேர்த்துக் கனிஷ்கன் ஆதரித்தான் என அவன் வெளியிட்ட நாணயங்களின் வாயிலாக அறிகிறோம். 'ஹிலியல்', சிலீன் (சலீன் என்று உச்சரி கப்படும்). கிரேக்கப் பெயர்களோடு, சூரியனையும், சந்திரனை யும், ஹிராகிள்சையும் நாம் கேள்விப்படுகிறோம். 'சந்திரன்' ஓர் இரேனியக்கடவுளாக 'மேயோ' என்ற பெயருடன் அறிமுகமாகி றான். விநோதமான இரேனிய அல்லது பாரசீகப் பெயர்கள் தாங்கிய கடவுளர் வரிசையில், ஆர்தோ அல்லது அக்னி, மிரோ அல்லது சூரியன், நாநா, ஒயனிந்தா, லுருஸ்போ முதலிய பெயர் களைக் குறிப்பிடலாம். பார்த்தியரின் தலைவன் கோண்டோ பெர்னசும், யூச்சிகளின் மாபெருந்தலைவன் இரண்டாம் காட்பீச சும், இரு புஜங்களையுடைய இந்தியக் கடவுள் சிவனது உருவத் தைத் தங்கள் நாயணங்களில் பொறித்துள்ளனர். நான்கு, இரண்டு, புஜங்களைத்தாங்கிய அக்கடவுளரின் உருவம் கனிஷ் கனின் நாணயங்களிலும் காணப்படுகிறது. இந்தியரின் மரபுக் கிணங்க அமர்ந்திருக்கும் புத்தனின் உருவமும், கிரேக்க பாணி யில் உடையணிந்து நிற்கும் புத்தனி (போதோ)ன் உருவமும் நாணயங்களில் பொறிக்கப்பட்டுள்ளன. நூதனமான கடவுள ரின் குழு, பலவிதமான ஹேஷ்யங்களுக்கு இடமளிக்கின்றது. சொராஸ்டிரிய சமயத்தின் சாதாரணப் பிரிவொன்றைச்சார்ந்து கனிஷ்கன் வாழ்ந்தான் எனக் கூறலாம். அப் பிரிவின் சமயக் கோட்பாடுகளுக்கேற்ப, எச்சமயத்தைச் சார்ந்த கடவுளரை யும் வணங்கும் அனுமதியளிக்கப்பட்டிருந்தது. கனிஷ்கனின் முன்னோர்களும் அச்சமயக் கோட்பாடுகளையே பின்பற்றி வாழ்ந் தனர் என்றும் சொல்லப்படுகிறது. ஏழாவது நூற்றாண்டில், கனோஜின் அரசன் ஹர்ஷன் செய்ததைப் போல, பல இந்திய மன்னர்கள் பௌத்த சமயத்தைப் பிற சமயங்களுடன் பிணைக்கும் வாய்ப்புப் பெற்றிருந்தனர். சமய மாற்றத்தைக் 'கனிஷ்கன்' ஏற் றான் என்பது உண்மையேயாயினும், ஆதியில் தான் கடைப் பிடித்த சமயத்தைச் சார்ந்த கடவுளரையும் அவன் வழிபட்டான். அவனுக்குப்பின் அரசேற்ற ஹுவிஷ்கன் அவ்வாறே செய்தான் என்பது உறுதியாகத்தெரிகிறது. வடமேற்கு இந்தியாவிலும்

அதை யொட்டிய பிற பகுதிகளிலும் வழக்கிலிருந்த பௌத்த சமயத்தின் தன்மை கட்டுப்பாடற்ற இத்தகைய விதிகளால் மிகவும் மாறுதலடைந்திருந்த தென்பதைக் கனிஷ்கன், ஹுவிஷ்கன் ஆகியவர்கள் வெளியிட்டுள்ள நாணயங்களின் வாயிலாக நாம் அறிகிறோம்.

**கனிஷ்கனின் அவை**

பௌத்த சமயக் கொள்கைகளையும் அவைகளைக் கடைபிடிக்க வேண்டிய விதிமுறைகளையும் பற்றிய கருத்து வேற்றுமைகளை நன்கு ஆய்வதற்கும், சமரசம் செய்து வைப்பதற்கும் சமய குரவர்களடங்கிய அவையொன்றைக் கனிஷ்கன் கூட்டுவது வழக்கம். அசோகனது அடிச்சுவடுகளைப் பின்பற்றி அவன் இவ்வாறு செய்தான். சமயக் கோட்பாடுகளுக்கு, அதிகார பூர்வமான விளக்கச் சூத்திரங்களாக, அவையின் தீர்ப்புகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. அவைகளைச் செப்புத் தகடுகளில் பொறித்துக் கல் பேழைகளில் அடக்கி, அவை கூடுமிடமாகிய காஷ்மீரத் தலைநகரில் இதற்கென எழுப்பப் பெற்ற ஸ்தூபியொன்றில் அடக்கம் செய்து வைத்தனர். இவை இன்னும் எங்கோ மறைந்திருக்கின்றன என்பதும், அதிர்ஷ்டவசமாகப் புதை பொருளாராய்ச்சியாளரின் கையில் என்றோ ஒருநாள் அகப்படக்கூடும் என்பதும் உறுதி. கனிஷ்கனின் அவைக்குப் பிரதிநிதிகளை அனுப்பிய பௌத்த சமயப் பிரிவினர், 'ஹீன அயனம்' அல்லது சிறு மார்க்கத்தைச் சார்ந்தவர்களெனக் கருதப்பெற்றனர். இப்பிரிவு புராதன புத்த சமயக் கொள்கைகளைக் கடைப் பிடித்தது. ஆனால் கனிஷ்கன் காலத்தில் மிகவும் பரவியும், அதிகமாகக் வழக்கிலிருந்தும் வந்த சமயம் 'மகா அயனம்' அல்லது பெருமார்க்கம் என்ற பெயரால் வழங்கியது. அக்காலத்தில் உருப்பெற்ற சிற்பங்கள் பல இவ்வுண்மையை விளக்குகின்றன.

**பௌத்தனின் உருவங்கள்**

சாஞ்சி, பார்ஹுட் (பாஹர்ஹுட்) ஆகியவிடங்களில், பண்டைய புத்த சமயத்தினரின் கொள்கைகளைச் சித்திரவடிவில் காண்கிறோம். இறந்துபட்ட தங்கள் குருநாதரின் சிலைகளை அவர்கள் அமைக்கவில்லை. நிகழ்ச்சியொன்றில் தலைவனிருப்பதைச் சித்திரிக்க வேண்டுமெனில், ஒரு காலி ஆசனம், பாதுகை ஜதை, மற்றும் இதுபோன்ற அடையாளக் குறிகளையே கையாண்டனர்.

குஷாணியராட்சியிலுள்ள பௌத்தருக்கு இத்தகையவழக்கங்களிருந்ததாகத் தெரியவில்லை. பௌத்தனின் முந்திய கால நிகழ்ச்சிகளையும், அந்தியகால நிகழ்ச்சிகளையும் சித்திரிக்கும்போது, அந்தச் சாக்கியமுனி கௌதமனாகவும், போதிசத்துவனாகவும், புத்தனாகவும் ஒவ்வொரு முறையும் சித்திரிக்கின்றனர். கணக்கில்லாத உருவங்களும் பிரதிபிம்பங்களும், பௌத்த சிற்பக் கலையில் முக்கிய இடம் பெற்றன. கிரேக்கர், பாரசீகர், இரேனியர் போன்ற அன்னியரின் தொடர்புகளையே இம்மாறுதலுக்குரிய முக்கிய காரணமாக நாம் கூறவேண்டும்.

**பௌத்த சமயம் மாறுதலடைதல்**

கிருத்துவ சகாப்தத்தின் முதலிரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகளில் பௌத்த சமயம் பெரு மாறுதலுக்குட்பட்டது. இந்திய வரலாற்றிலும் உலக வரலாற்றிலும் இது குறிப்பிடத்தக்கதொரு முக்கிய நிகழ்ச்சியாகும். எனவே, அதைச் சற்று விரிவாக ஆராய்தல் வேண்டும். கீழ்த்தொடரும் கருத்துகளை நான் பல ஆண்டுகளுக்கு முன்பாக வெளியிட்டேன். இன்றும் அக் கருத்துகளை வெளியிடுகின்றேன். அவை உண்மைகளை அடிப்படையாகக் கொண்டவை என்று கருதுகின்றேன். அவை, சற்று விரிவாகக் காணப்படினும், அதிகமாறுதல் செய்யாது மீண்டும். அவைகளை அச்சிடுவதில் நன்மையுண்டு என்று நான் கருதுகிறேன்.

கி. மு. மூன்றாவது நூற்றாண்டில் அசோகனது ஆட்சியிலேயே, இந்தியாவின் வடமேற்கு எல்லைப் பகுதிகளில் பௌத்த சமயம் புகுத்தப் பெற்று விட்டது, கி. மு. இரண்டாவது நூற்றாண்டில், பெயரறிய முடியாத யூச்சித் தலைவனொருவன் சீனத்தூதுவனொருவனுக்கு கௌதமனின் சமயக்கோட்பாட்டை எடுத்துரைக்குமளவில், சமயப் பற்று கொண்டிருந்தான். கனிஷ்கனுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே அப்பகுதிகளில் ஏதோ ஒரு வகையான பௌத்த சிற்பக் கலையும் பரவியிருக்க வேண்டும். ஆனால் பரந்த நோக்கமும், தாராளமான ஆதரவும் பெற்ற அரசகுல கண்காணிப்பில் அது வளர்ந்திருக்க முடியாது. அதனால், புராதன பௌத்த சிற்பக் கலையை விளக்குகின்ற சான்றுகள் அரியனவாக உள்ளன. ஒருகால், அக் கலைப்படைப்புகளுக்கு மரத்தையே உபயோகித்திருக்கவும் கூடும்.

மாபெரும் மன்னனான கனிஷ்கன் தீவிரமாகப் பௌத்த சமயத்திற்கு ஆதரவளிக்க முன் வந்தமையாலும், இரண்டாம்

அசோகன் எனப் பணி புரியச் சித்தமாக இருந்தமையாலும் இச்சமயத்தைப் பின்பற்றியவர்களுக்கு ஓர் ஊக்கம் பிறந்தது. இவ்வூக்கத்தின் விளைவாக அதி விரைவில் ஏராளமான கலைப் படைப்புகள் தோன்றின. அவைகள் யாவும், மிகச் சிறப்பு வாய்ந்தவைகளாக விளங்கின.

நாட்டில் நிலவிய சமயக் கருத்துகளைச் சிற்பத்தில் வடித்த கனிஷ்கனின் அவையைச் சார்ந்த கலைஞர்களான சிற்பிகள், பெரும்பாலும் அன்னிய நாட்டைச் சார்ந்தவர்களாகவே இருத்தல் வேண்டும். 'சம்வாதங்களில்' விளக்கப் பெற்றிருக்கும் புராதன பௌத்த சமயக் கொள்கைகளைப் பேராசிரியர் ரிஸ் டேவிட்ஸ் நன்கு மொழிபெயர்த்துள்ளார். மறுபிறப்பு, கர்மவினை, மனிதச் செயலின் பொது விளைவு, வாழ்க்கையின் துன்பங்களிலிருந்து விடுபடுவதிலுள்ள ஆனந்தம் ஆகிய அதிலடங்கிய பல கருத்துகளும் இந்திய சமயங்களின் மரபையொட்டியவைகளாகவே காணப்படுகின்றன.

இத்தகைய கருத்துகள் இந்திய நாட்டைச் சேர்ந்த பல்வேறு சமய குரவர்களின் பொதுச் சொத்தாக விளங்கி வருகின்றன. இவற்றை உள்ளடக்கிய புராதன பௌத்த சமயக் கொள்கை, நடைமுறைக்கேற்ற அறநெறியை வகுத்து அளித்தது. பலன் கருதாது உண்மையுடன் செயற்படுவது, மனிதன் அல்லது மிருகமேயாயினும் உயிரினங்களின் உணர்ச்சிக்கு மென்மையான ஏற்ற மரியாதை அளிப்பது ஆகிய சிறந்த நெறிகளை வற்புறுத்தி, புத்திக்கும் நெஞ்சிற்கும் தொடர்பு ஏற்படுத்த, கடவுள் என்று ஒருவரைச் சிருஷ்டி செய்யத் தவறிவிட்டாலும், சமயம் என்று கருதப்படுவதற்கு அருகதையுள்ளதாகப் பௌத்தம் தோன்றியது.

அசோகன் அச் சமயத்தைப் பின்பற்றத் தொடங்கியது முதல் அதற்கு அதிர்ஷ்டம் பிறந்ததென்றாலும், அதே நேரத்தில் அச் சமயத்தின் அழிவிற்கும் வித்திடப் பெற்றது. அரசமரியாதைக்குரிய தலைவனை கௌதமனின் கட்டளைகளைக் கங்கை ஆற்றின் கரைகளிலிருந்து, பனியுறைந்த இமாலயத்தின் உச்சிக்கும், மத்திய ஆசியப் பாலைவனங்களுக்கும், அலெக்சாந்திரியக் கடைவீதிகளுக்கும், அவனது சீடர்களும் சமயப்பிரசாரகர்களும் எடுத்துச் சென்றனர்.

காசி நகரிலுள்ள சமயக் கூட்டத்தினரின் அந்தரங்க விருப்பத்திற்கு ஏற்ப அமைந்த கோட்பாடுகளைக் கடின உள்ளம்

படைத்த மலைச்சாதியினனுக்கும், நாடோடிக் குதிரை வீரனுக்கும்; கிரேக்கப் பண்புள்ள அலெக்சாந்திரியனுக்கும் வழங்கு முன், அதில் உரிய மாறுதல்களை ஏற்படுத்தியிருக்க வேண்டும். இந்திய மண்ணில் தோன்றிய பௌத்த சமயம், வெளிநாட்டுப் பிரயாணம் தொடங்கியதும், அதில் மாறுதலேற்படுவது உறுதியாயிற்று. அது மாறுதலடைந்த பல நிலைகளையும் நம்மால் அறிந்து கூற இயலாதென்றாலும் ஏற்பட்ட மாறுதலை நாம் முழுமையாகக் காணலாம்.

### ரோமானியப் பேரரசின் ஆதிக்கம்

இந்தியா, பார்த்தியா, சைனு நீங்கலாகவுள்ள நாகரிகம் முதிர்ந்த உலகம் முழுவதும் சீசர்களின் ஆதிக்கத்தில் கொண்டு வரப்பட்டது.[1] இவ்வாறு உலகம், ஒன்றுபட்ட நிகழ்ச்சி நாம் மேலே குறித்த திடீர் மாற்றம் ஏற்படுவதற்கு முக்கியமானதொரு காரணமாக விளங்கியது. உரோமானிய சாம்ராச்சியத்தில் நிலவிய அமைதி எல்லைப்புறப் போர்களாலும், அரண்மனைப் புரட்சிகளாலும், அரைப் பயித்திய மன்னர்களின் செய்கைகளாலும் அதிகமாகப் பாதிக்கப்படவில்லை. அந்த நெடுங்கால அமைதியில், முளைத்தெழுகின்ற கிருத்துவ சமயம் முழு வளர்ச்சியுற்ற பௌத்தச் சமயத்தை, ஆசியா, எகிப்து ஆகிய நாடுகளின் அரங்கங்களிலும் கடை வீதிகளிலும் சந்தித்தது. பல கடவுள்களின் மீதுள்ள பக்தியை விளக்கும் கலைப் பொருள்கள், பலவகையான நிரீச்வர வாதங்கள் ஆகியவைகளுடன் இவ்விரு சமயங்களும் உறவாட வேண்டிய நிலையும் ஏற்பட்டது. நாடுகளுக்குள் தொடர்பு ஏற்படுவதற்குச் சாதகமான வாய்ப்புகளால் தூண்டப் பெற்றும், பண்பாடுகளுக்குள் அடிக்கடி ஏற்பட்டு வந்த போட்டியாலும், பாரசீகத்தின் புராதன சமயக் கோட்பாடும் மனிதனின் சிந்தனையைப் பொங்கி எழச் செய்தது.

### புதிய குறிக்கோள்கள்

இத்தகைய சூழ்நிலையில், பௌத்தத்திற்குப் பழைய இந்திய நாட்டு மரபை விடுத்து, புதியதொரு சமயமாக மாறவேண்டிய சந்தர்ப்பமும் கிடைத்தது. அதன் வளர்ச்சியில் பெரும்பங்கு

[1] ஆராக்கல்வெட்டில் கனிஷ்கன், 'சீசர்' என்ற பிருதைச் சூடிக் கொண்டான் என்ற லூடர்சின் கருத்தை நான் ஏற்கிறேன் (கெய்சரசா). வாசகத்தைக் குறித்து எவ்வித கருத்து வேற்றுமைக்கும் இடமில்லையென்பதால், அதை வற்புறுத்தாமல் இருப்பதே நலமாகும். கனிஷ்கன் சூடிக்கொண்ட பிருதுகள் யாவும் உலகின் நான்கு திக்குகளின் மீதும் உள்ள அரசுரிமையைக் குறிக்கின்றன (ஸிட்ஸ்ரிங்ஸ்பெர். டி. கோனிக்ல். பிரயுஸ் - அகாட் - டெர் விஸ்ஸன்சாப்டன், 1912, பக். 829).

கொண்டிருந்த இந்திய நாட்டுச் சமய மரபுகள் சிறுக்கச் சிறுக மறையலாயின. புதிய குறிக்கோள்கள் முன்னணிக்கு வரத் தொடங்கின. உண்மையைக் கடைப்பிடிப்பதே பெரு வெற்றி யென்றும், அவன் எண்ணியவாறு, இவ்வாழ்க்கைக்குப் பின் மறு பிறவி இல்லையென்றும், பூதவுடல் அழிந்து வாழ்வின் எல்லையை அடைந்தவுடன் கடவுளரும், மானிடரும் அவனைக் காணவியலா தென்றும் எண்ணுவதற்குக் காரணமான நாடோடிப் பைராகிக் கூட்டத்தினரின் அமைதியான போதகர், இருதய பூர்வமாக நம் புகிறவர்களுக்கும், எந்நேரமும் தோத்திரங்களைக் கேட்பதற்குச் செவிகளைத் தீட்டிவைத்திருப்பவருக்கும் புலப்படக் கூடிய தெய்வ சக்தியாக நாளடைவில் மாறிவிட்டார். அவருக்குப் பணி புரிவதற் குப் படிப்படியான போதிசத்துவரும் பிறரும்; பாபிகளுக்கும் அவருக்கும் இடை நிற்கின்ற தரகர்களும் ஏராளமாக உண்டாயி னர்.

சுருங்கக் கூறுமளவில், இறந்துபட்ட போதகர் ஒருவருக்குச் செலுத்துகின்ற மரியாதை, உயிருள்ள இரட்சகர் ஒருவருக்குச் செலுத்தும் தோத்திரமாக மாறிவிட்டது. என் அறிவிற்கு எட்டு கின்ற வரையில், இந்திய மரபை யொட்டிய 'ஹீன அயனம்' என்ற புராதன பௌத்த சமயத்திற்கும், புதிய சமயமான மகாஅயனத் திற்கும் உள்ள வேற்றுமை இதுவேயென்று தோன்றுகிறது. கனிஷ்கனின் அவைக்கு வந்த பிரதிநிதிகளை, அதிகார பூர்வமாக ஹீனஅயனச் சமயம் சார்ந்தவர்கள் என்று கருதிய போதிலும், நடைமுறையில் கடைப்பிடிக்கப்பட்ட சமயக் கோட்பாடுகள் மகா அயனக்கருத்துகளையே அடிப்படையாகக் கொண்டிருந்தன. ஓரள விற்குக் கனிஷ்கனின் சமகாலத்தவனாக விளங்கிய நாகார்ஜுனன் என்பவனே அக்கோட்பாடுகளை வகுத்தும், பரவச் செய்தும் வந் தான்.

கி.பி. 105-க்கும் 273-க்கும் இடைப்பட்ட காலத்தில், மேலை கீழை நாடுகளுக்கிடையே வாணிபத் தொடர்பு வளருவதற்கு முக்கிய சந்தையாக 'பல்மைரா' விளங்கிய போதும், வடமேற்கு இந்தியாவைக் குஷாணியர் ஆண்டு வந்த போதும், மகாயான பௌத்த சமயம் வளர்ந்ததென்றும், அதை யொட்டிய கலையும் முழு வளர்ச்சி பெற்றதென்றும் கூறலாகும். மனிதனின் சிந்த னையை ஒட்டிய பெரு இயக்கங்களைக் குறிப்பிட்ட காலவரையுள் அடக்கிக் கூறுவது இயலாது என்பதை வற்புறுத்தி இங்கே எடுத்துரைக்க வேண்டுவதில்லை. புதிய பௌத்த சமயம் போன்ற இயக்கங்கள் பல்லாண்டுகளுக்கு முன்னரே தொடங்கி நாளடை வில் படிப்படியாக வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும். வெளிப்

படையாக இம்மாறுதல்கள் புலப்படுவதற்கும் ஆண்டுகள் பல தேவையாக இருந்திருக்க வேண்டும். கட்டுப்பாடான புராதன பௌத்த சமய விதிகள், சாதாரண எளிய மனிதனது உள்ளத்தைத் தொடுகின்ற வாய்ப்பினைப் பெறவில்லை. உணர்ச்சி வசப்பட்டாலன்றி, அவ்விதிகளை அவனால் ஏற்கவியலாதிருந்தது. ஒவ்வொரு நாட்டிலும் விரிவாகப் பரவியிருந்த பௌத்த சமயம், புராதன சமயத்திலும் வேறுபட்டதாகவே இருந்தது. ஆனால் ஆதி நூல்களின் புனிதத் தன்மை என்றுமே மறுக்கப்படவில்லை. மகாயானம் வளர்ச்சியுற்றமைக்கு அன்னியரின் ஆதிக்கமே பெரும்பாலும் காரணமென்றாலும், அத்தகைய சமயக் கொள்கை உருப்பெறுவதற்குத் தேவையான வித்துகள் இந் நாட்டிலிருந்தன என்பதை நான் மறுப்பதாகக் கொள்ளக் கூடாது. புத்த சங்க வளர்ச்சியில் இத்தகைய எண்ணம் மிகப் பழங்காலத்திலிருந்தே இருந்திருக்க வேண்டும்.

**இலக்கியமும் கலையும்**

இலக்கியத் துறையில், பிரசித்தி பெற்ற பௌத்த நூலாசிரியர்களான நாகார்ஜுனன், அஸ்வகோஷன், வஸுமித்திரன் ஆகியவர்கள் கனிஷ்கனை நினைவு கொள்ளச் செய்கின்றனர். அஸ்வகோஷன், கவியென்றும், இசைக் கலைஞன் என்றும், புலவனென்றும், சமயத் தர்க்கவாதங்களில் தேர்ந்தவனென்றும், சமயப்பற்று மிக்க சனாதனியென்றும், கட்டுப்பாடான வாழ்க்கையில் மிக்க பற்றுள்ளவனென்றும் வர்ணிக்கப்படுகிறான். வைத்திய சாத்திர நூலாசிரியன் என்று மிகவும் புகழ் பெற்ற 'சரகன்' கனிஷ்கனின் அரசாங்க வைத்தியர்களுள் ஒருவனாவான். கட்டடக் கலையும் அதனுடன் துணை நிற்கும் சிற்பக் கலையும் கனிஷ்கனால் நன்கு போற்றி வளர்க்கப் பெற்றன. அசோகனைப் போலவே கனிஷ்கனும் கட்டடங்கள் எழுப்புவதில் மிக்க ஆர்வமுடையவன். பௌத்தனின் பூத உடலில் எஞ்சியவைகளுக்குப் பெஷாவர் நகரில் அவன் எழுப்பிய கோபுரம், மரத்தால் ஆனது. அது 400 அடி உயரமுள்ளது. தட்சசீலத்தின் ஸர் சுக் பகுதி கனிஷ்கனால் எழுப்பப் பெற்ற நகரத்தின் சிதைவுச் சின்னங்களை மறைத்து நிற்கிறது. இன்று ஒரு குக்கிராமமாக விளங்கிவரும் இடமொன்று பண்டைய நாட்களில் கனிஷ்கனின் பெயர் கொண்ட பெரு நகரமாக விளங்கியதெனத் தெரிய வருகிறது. கனிஷ்கன், மற்றும் அவனது சந்ததியார்களின் காலத்தில் யமுனை ஆற்றின் கரையிலுள்ள மதுராவில், நேர்த்தியான கட்டடங்களும் கலையழகு நிரம்பிய சிற்பங்களும் உருப்பெற்றன. கவர்ச்சிமிக்க கனிஷ்கனின் உருவச் சிலையொன்று மதுராவிற்கு அருகில் கண்டெடுக்கப்பட்டுள்ளது. துரதிர்ஷ்டவசமாக இச்சிலையின் உடற்

பகுதி மட்டிலுமே நமக்குக் கிடைத்துள்ளது. அவ் வமிசத்தைச் சேர்ந்த பிற இளவல்களின் உருவச்சிலைகளும் அங்குக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இக் கலைப் படைப்புகளில் கிரேக்கரின் கலை மணம் வீசுவதில்லை.

**காந்தாரக் கலை**

கனிஷ்கன் மற்றும் அவனது சந்ததியார் காலத்துச் சமயம் சார்ந்த சிற்பங்கள் காந்தாரப் பாணியிலேயே வடிக்கப்பட்டுள்ளன. காந்தாரம் என்பது, தட்சீலம், பெஷாவர் ஆகிய பகுதிகளை உள்ளடக்கிய, எல்லைப் புறத்திலுள்ள ஒரு மாகாணமாகும். கிரேக்க கலை உத்திகள், பௌத்த சமயம் சார்ந்த நிகழ்ச்சிகளைச் சித்திரிப்பதற்கு வெகு இலாவகமாக வெற்றியுடன் கையாளப் பட்டிருப்பதால், இவ்வகை கிரேக்க-பௌத்த கலை என்று மிகவும் பொருத்தமாகவே வர்ணிக்கப்படுகிறது. 'அப்பாலோ'வைப் போன்ற தோற்றத்தில் பௌத்தனின் உருவச் சிலைகள் வடிக்கப் பட்டுள்ளன. யக்ஷகுபேரனுக்கு 'பீடியன்சீயஸ்' போன்ற உருத் தோற்றமும், மற்றும் இதைப் போன்ற சிலைகளும் வடிக்கப்பட்டுள்ளன. சிலைகளுக்கு அழகு செய்வதில் கிரேக்க உத்திகள் கையாளப்பட்டுள்ளன. சீன துருக்கிஸ்தானம் வழியாக, இப்பாணி தூர கிழக்கு நாடுகளுக்குப் பரவியுள்ளது. இன்றும், சீனவிலும், ஜப்பானிலும் வடிக்கப்படும் பௌத்த சிலைகள், கனிஷ்கனது அவையிலுள்ள கிரேக்க பாணியில் வடிக்கப் பெற்ற சிலைகளைப் போன்றவைகளாக விளங்குகின்றன. சர் எம். எ. ஸ்டீன், மற்றும் புதைபொருளாய்வாளர்களின் முயற்சியால், சீன துருக்கிஸ்தானத்திலுள்ள கோட்டான்-பகுதியில், கனிஷ்கன் ஆட்சிக் காலம் உட்பட கிருத்துவ சகாப்தத்தின் ஆதி நூற்றுண்டுகளில், கிரேக்க, இந்திய, இரேனிய, சீனப் பண்பாடுகள் ஒன்று கூடின என்று தெரிய வருகிறது கி.பி. 98 லிருந்து 138 ஆம் ஆண்டு வரையிலுள்ள இடைக் காலத்தில் ட்ராஜன், ஹாட்ரியன் என்ற உரோமானிய அரசர்கள் தங்கள் எல்லைகளைக் கிழக்கு முகமாக விஸ்தரித்தனர். இதனல், கிரேக்கரின் கருத்துகளும் கலையின் உத்திகளும், இந்தியாவிலும் பிற ஆசிய நாடுகளிலும் பரவுவதற்கு நல்ல வாய்ப்புக் கிட்டியது. ஆசியா மைனரிலுள்ள அலெக்சாந்திரியா, பெர்கமான், யூபீசஸ், போன்ற இடங்களில் இந்தோ கிரேக்க கலைஞர்கள், கலையைப் பயில்வதற்கு நல் வாய்ப்புப் பெற்றிருந்தனர். கிரேக்க நாட்டின் புராதனக் கலைஞர்களிடம் இத்தகைய வாய்ப்புகளைப் பெற்றிருக்கவில்லை. நுணுக்கமாகச் சொல்லும் போது, காந்தாரக் கலையைக் கிரேக்க உரோமானியப் பாணி என்றே குறிப்பிட வேண்டும். ஆசியா மைனர், மற்றும்

ரோமானியப் பேரரசைச் சார்ந்த நகரங்களில், கிறிஸ்து சகாப்தத்தின் முதல் மூன்று நூற்றாண்டுகளில் வளர்ந்த கலப்படக் கலையே, காந்தாரக் கலை என்று கூறலாம்.



பெரும் ஸ்தூபி, சாஞ்சி



அ. போதிசத்துவர்
காந்தாரப் பாணி



ஆ. புத்தர், சாரநாத்
ஐந்தாம் நூற்றாண்டு

இவ்வகையைச் சார்ந்த அருமையான கலைப்படைப்புகள், கி. பி. இரண்டாவது நூற்றாண்டில், கனிஷ்கன், ஹுவிஷ்கன் ஆகியவரது ஆட்சிக் காலங்களில் உருவாயின.



கனிஷ்கனின் தலைநீங்கலாக உள்ள சிலை



அ. மெடாலியின், அமராவதி



ஆ. ஹெர்குலேனியத்திலிருந்து கிடைத்த தந்தத்தினலான இந்திய தேவதை ஒன்றின் சிலை

**பிற சிற்பக் கலை**

காந்தாரக் கலை வகையைச் சார்ந்தவை ஏராளமாகக் காணக் கிடைக்கின்றன என்றாலும், கலைக்குப் பெயர் பெற்ற பிற பகுதி களிலுள்ள கலைத் திறனும், கனிஷ்கன், ஹுவிஷ்கன் ஆகியவர் களால் போற்றி வளர்க்கப்பட்டு வந்தது. தரத்திலும், எண்ணிக் கையிலும் அப்பகுதிகளிலும் கலைப் படைப்புகளுக்குக் குறைவே யில்லை. பெனாரசிற்கு அருகிலுள்ள சாரநாத் என்னுமிடத்திலும் யமுனைக் கரையிலுள்ள மதுராவிலும், சென்னை மாகாணம், குண்டூர் மாவட்டம் கிருஷ்ணா ஆற்றின் கரையிலுள்ள மதுராவிலும், நேர்த்தியான சிற்பங்கள் உருவாக்கப் பெற்றன. நாம் குறிப்பிட் டுள்ள ஒவ்வொரு பிரதேசத்திலும் தனித்தனியான பாணிகள் கையாளப் பெற்றன. இவைகளுள், அமராவதியிலிருந்து கண் டெடுக்கப்பட்டுள்ள கலைப் பொருள்கள் மிகப் பிரசித்தி பெற் றவை. பிரிட்டிஷ் மியூசியத்தின் நுழைவாயிலிலுள்ள பரந்த அறை யில் இவைகளைப் பிறர் கண்டுகளிக்குமாறு வைக்கப்பட்டிருப் பதை அங்குச் செல்பவர்கள் நன்கு அறிவார்கள். மரபுச் செய்தி கள் அமராவதியிலுள்ள கட்டடங்களை நாகார்ஜுனனுடன் தொடர்பு படுத்துகின்றன. அங்குச் செய்து முடிக்கப் பெற்றுள்ள வேலைகளுக்குப் பல நூற்றாண்டுகள் பிடித்திருக்கக் கூடும். ஆனால் அவைகளில் பெரும்பாலானவை ஹுவிஷ்கனின் ஆட்சியிலேயே செய்து முடிக்கப் பெற்றிருக்க வேண்டும்.

**ஹுவிஷ்கன்**

தகப்பன் வெகு தொலைவில் நடந்த போர்களில் ஈடுபட்டி ருந்த போது ஹுவிஷ்கன், அவனது சார்பில் இந்திய மாகாணங் களை ஆட்சி புரிந்து வந்தான். கனிஷ்கனின் மகனென்று கருதக் கூடிய இவன் கி.பி. 162 ஆம் ஆண்டில் சாம்ராச்சியத்தின் அரச பதவி ஏற்றான். அவனது ஆட்சியில் நிகழ்ந்த சம்பவங்களை நாம் அதிகமாக அறியக்கூடவில்லை. அவன் கனிஷ்கனைக் காட்டிலும் அதிகமான நாணயங்கள் வெளியிட்டுள்ளான். அந்நாணயங்களில் கலையழகு மிகுதியாக உள்ளது. அவ்வரசனின் உருவமும் நாண யங்களில் பொறிக்கப்பட்டுள்ளது. பருத்தும் நீண்ட மூக்கையு டையவனாகவும், நடு வயது அல்லது மூப்பெய்தியவனாக அவன் தோற்றமளிக்கிறான். யூச்சி வகுப்பைச் சார்ந்த இளவல்களுக்கும் 'இடுங்கிய கண்களை'யுடைய மங்கோலியருக்கும் எவ்வித உருவ ஒற்றுமையும் கிடையாது. அவர்கள் கட்டுமஸ்தான தேகமும், பரந்த ஊதா நிறமுடைய முகங்களையுடையவர்களாகவுமிருந்த னர். ஒருகால், அவர்கள் துருக்கருடன் தொடர்பு கொண்டவர் களாயிருக்கக் கூடும். . நீண்ட தரையில் புரளும் கோட்டுகளையும்

மெல்லிய தோலாலான பூட்சுகளையும் அணிந்து, ஐரோப்பியரைப் போல நாற்காலிகளில் அவர்கள் அமர்ந்திருப்பார்கள். ஒரு வகை இரேனிய மொழியை அவர்கள் பேசி வந்தனர். அவர்கள் கடைப்பிடித்த சமயக் கொள்கை, சொராஸ்டிரிய சமயத்தின் சற்று மாறுபட்ட வகையாக இருந்தது. காஷ்மீரப் பகுதியி லுள்ள நகரமொன்றும், மதுராவிலுள்ள பௌத்த மடாலயம் ஒன்றும் ஹுவிஷ்கன் பெயரோடு தொடர்பு கொண்டவைகளாக இருக்கின்றன. அவன் வெளியிட்ட நாணயங்கள் நூதனமாகக் கிரேக்க, இந்திய, இரேனியக் கடவுளரின் பல்வகையான உரு வங்களைக் கொண்டுள்ளது. பௌத்த சமயம் சார்ந்த நாணயங் களெவையும் கண்டெடுக்கப்படவில்லை. கனிஷ்கன் கைப்பற்றிய பரந்த சாம்ராச்சியத்தைக் காத்து அவன் ஆண்டுவந்தான் என்றே தெரியவருகிறது. கி.பி. 180 அல்லது 185-ல் அவன் மரண மடைந்ததாகக் கூறலாம். கனிஷ்கனின் ஆட்சி காலத்தை அடிப் படையாகக் கொண்ட கணக்கின்படி 33லிருந்து 60 ஆண்டுகள் வரையிலும் அவனது வெட்டெழுத்துகள் காணக்கிடைக் கின்றன. இறக்கும் போது அவன் மிக வயதடைந்தவனுகவோ அல்லது மூத்தவனுகவோ இருந்திருக்க வேண்டும்.

### குஷானியர் சாம்ராச்சியத்தின் முடிவு

முதலாம் வசுதேவன், ஹுவிஷ்கனைத் தொடர்ந்து அரசேறிய வன். அவனது ஆட்சியில் சாம்ராச்சியத்தின் சரிவு தொடங்கி யது. இந்திய நாட்டில் குஷானியரின் ஆட்சி எவ்வாறு முடிவுற்ற தென்பதைப்பற்றித் தெளிவாக எதையும் அறிந்து கூற இயல வில்லை. இறக்கும் வரையிலும் பரந்ததொரு சாம்ராச்சியத்தை ஆண்டுவந்த மன்னன் ஹுவிஷ்கனே என்பதில் ஐயமில்லை. சாம் ராச்சியத்தின் சரிவைப்பற்றி நமக்குக் கிடைக்கும் குறிப்புகள் நாணய ஆராய்ச்சியின் வாயிலாகவே பெறப்படுகின்றன. மிகச் சொற்பமாகக்கிடைக்கும் சான்றுகள் வாயிலாகப் பெறப்படு கின்ற ஊகங்களும் மிகவும் சந்தேகத்திற்கிடமானவைகளாகவே உள்ளன. வசுதேவனின் பின் வந்தவர்கள் வெளியிட்டுள்ள நாணயங்கள் பாரசீகப்பாணியை ஒட்டியவைகளாகவே இருக் கின்றன. இவர்களில் சிலர் வசுதேவனின் பெயரையே கொண் டிருந்தனர். இந்திய நாட்டில் குஷானியர் சாம்ராச்சியம் வீழ்ந்த தற்கும் கி. பி. 226-ல் சசானியரின் ஆட்சி தொடங்கியதற்கும், நெருங்கிய தொடர்புண்டு என்று கூறப்படும் கருத்தும் பொருத்த முடையாதகவே தென்படுகிறது. முதல் சசானிய மன்னன் ஆர்த்தஷீர் பாபகன் என்பவனும் அவனது வழித்தோன்றல் களும் பிற்காலத்தில் மேற்கொண்ட படையெடுப்புகளைத்

தொடர்ந்து சிந்து நதிவரையிலும் வந்தனர் என்று கூறப்பட்ட போதிலும், இக்கூற்றுகளுக்கு ஆதாரமேயில்லை. ஐந்தாவது நூற்றுண்டில் ஹூணர்கள் படையெடுத்த காலம் வரையிலும் வலிமை மிக்க, குஷானிய மன்னர்கள் காபூலிலும் அதன் சுற்றுப் புறங்களிலும் அரசாண்டு வந்தனர். ஏழாவது நூற்றுண்டில் பாரசீகத்தை அராபியர் கைப்பற்றுகின்ற நாள் வரையிலும் சில சிற்றரசுகள் தழைத்து வந்தன.

'வசுதேவன்' என்ற பெயர், அதிவிரைவில் குஷானியர் இந்துக்களாக மாறிவந்தமைக்கு ஒரு முக்கியச்சான்ருக விளங்குகிறது. விஷ்ணு அல்லது வாசுதேவனை வழிபடுபவன் என்பது அதன் பொருள். ஆனல் நாணயங்களில் சிவன் மற்றும் காளையின் உருவங்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. இவை, இரண்டாம் காட்பிசசின் நாணயங்களில் முன்னரே வெளிவந்தவைகளாம்; சமயம் அல்லது அரசியல் துறைகளில் மூன்ருவது நூற்றுண்டின் வரலாறு தெளிவு குன்றி இருப்பதால் இந்நூலில் அவைகளைக்குறித்து மேலும் விவாதிப்பதற்கு இடமில்லை.

**கிரேக்க ஆதிக்கம்**

இந்தியப் பண்பாட்டுடன் கிரேக்க அல்லது ஹெல்லனிச தொடர்பு எவ்வளவில் உள்ளதென்ற ஆராய்ச்சி மிகவும் சுவையானது. இதை மிக்க ஆர்வமுடன் விவாதிக்கின்ற ஐரோப்பிய நூலாசிரியர்கள், தனியாகப்பிரிந்து நிற்கும் இந்திய நாட்டின்கண் உள்ள விநோதமான பழக்க வழக்கங்களை, ஐரோப்பியப்பண்பாட்டின் ஆணிவேராக விளங்கும், பரிச்சயமுள்ள கிரேக்ககருத்துகளுடனும் நிறுவனங்களுடனும் ஒப்பு நோக்கி, இவைகளிடையிலுள்ள தொடர்பை ஆய்வதில் மிக்க விருப்பமுடையவராக உள்ளனர். எனவே, இப்பிரச்சினைகளைக் குறித்த சில உண்மைகளை நாம் ஆய்ந்தோய்ந்து சிந்திப்பதால் நன்மையுண்டு. ஹெல்லனிச உலகிற்கும் இந்திய நாட்டிற்குமிடையே பல்லாண்டுகளாக வாணிபத்தொடர்பிருந்து வந்ததென்பதை, வரும் அதிகாரங்களில் கூறுவோம். ஆனல், அச் செய்தியை, இச்சந்தர்ப்பத்தில் சற்று மறந்துவிடுவதே நல்லது. அத்தகைய தொடர்பினுல், இந்திய அல்லது ஐரோப்பிய நாடுகளில் நிலவுகின்ற கருத்துகளிலும், இயங்கிவருகின்ற நிறுவனங்களிலும் எவ்வித மாறுதல்களும் ஏற்படவில்லை. எல்லாக்காலங்களிலும் நடைபெறுவதைப்போலவே வியாபாரிகள் தங்கள் வாணிபத்திலேயே முழுக்கவனம் செலுத்தினரே யன்றி. பிற விஷயங்களைப் பொருட்படுத்தவேயில்லை. அவர்கள் குறிப்பு எதையும் விட்டுச்செல்லவில்லை. நம் அறிவிற்கு எட்டுகின்ற வரையில், பிளினி, ஸ்டிராபோ, போன்ற புலவர்

பெருமக்களுக்கு, அவ் வணிகர் அதிகச் செய்திகள் தெரிவிக்க வில்லை என்பதும் நன்கு தெரியவருகிறது. தற்கால ஐரோப்பா வும், பம்பாய், கல்கத்தா, வணிகர்களிடம் அதிகமாக இந்திய நாட்டைப் பற்றிய அறிவு பெறுவதற்கு முயல்வதால் பலனேற் படாது.

**அலெக்சாந்தர் படையெடுப்பின் விளைவுகள்**

இந்தியரின் சிந்தனைகளையோ அல்லது நிறுவனங்களையோ அலெக்சாந்தரது தீரமிக்க படையெடுப்பு அதிகமாக நேரடியாகப் பாதிக்கவில்லை. சிந்துவெளியில் தங்கியிருந்த சின்னாட்களையும் அவன் போரிடுவதிலேயே கழித்தான். அப்பகுதிகளில் வாழ்ந்து வந்த எளிய மக்களுக்கு ஒருகால் அவனது நினைவு இருந்திருக்கக் கூடும். அரக்ககுணம் மிகப்படைத்த காட்டுமிராண்டியைப்போல எவ்வித இரக்கமுமின்றிப் பிராமணர்களைத் தூக்கிலிட்டும், தர்ம சாத்திரங்களுக்குப் புறம்பான கொடிய வழிகளில் போர்களில் வெற்றிகண்டும், மக்களை அச்சுறுத்தினன். அத்தகையகுணம் படைத்தவனிடம் இந்தியர் எதையும் கற்பதற்கு விரும்பவில்லை. போர்க்கலையில் வல்லவனை அவனிடம் அக்கலையையும் கூடப் பயில்வதற்கு இந்தியர் விரும்பவில்லை. தங்கள் மரபைப்பின்பற்றி நான்கு வகைச்சேனைகளையும், யானைகளையுமே அவர்கள் பெரிதும் நம்பியிருந்தனர். சந்திரகுப்தமௌரியன், பஞ்சாபில் எஞ்சியி ருந்த மாசிடோனியத் தளபதிகளை ஒழித்துக்கட்டியதுடன், இந் திய மண்ணில் தாற்காலிகமாகக் கிரேக்க ஆதிக்கத்திற்கு முற்றுப் புள்ளிவைக்கப்பட்டது. சில ஆண்டுகளுக்குப்பிறகு இந்தியாவின் மீது போர்தொடுத்த செல்யூகஸ் நிகேதார் முறியடிக்கப்பட்டான். இவ்வெற்றி இந்திய நாட்டை, மீண்டும் கிரேக்கரின் படை யெடுப்புகளுக்கு இலக்காகாமல் தடுத்ததெனலாம்.

**மௌரியர் பண்பாடு**

ஆசியா, ஆப்பிரிக்கா நாடுகளிலுள்ள கிரேக்க இளவல்களுக் கும், மௌரிய அரசர்களுக்குமிடையில், தொடர்ந்து எழுபது அல்லது எண்பது ஆண்டுகளுக்கு,நட்பும் சமாதானமும் நிலவியது. மௌரிய சாம்ராச்சியத்தில் விலைமதிப்பற்ற இவ் விவரங்களை மெகாஸ்தனீஸ் குறித்திருக்கிறார். அவருக்கு நாம் மிகவும் கடமைப் பட்டவர்களாவோம். இந்திய நாட்டின் அரசியல் மற்றும் சமுதா யத்துறைகளில் கிரேக்கரின் ஆதிக்க மிருந்ததாக அக்குறிப்புகள் அறிவிப்பதில்லை. மௌரியர் அரசு, புராதன இந்து தர்மசாத் திரங்களை அடிப்படையாகக் கொண்டு இயங்கியது. பாரசீக முறைகளில் ஒரு சிலவற்றையேனும் அவர்கள் பின்பற்றினர்கள்

என்று கூறவியலுமே அன்றி அரசியல் துறையில் கிரேக்க மணம் ஒரு சிறிதுமில்லை. பெரும்பாலும் அரசியலை மௌரியர் தாங்களாகவே வகுத்துக்கொண்டனர். இந்து மரபுச் செய்திகளை உறுதி செய்கின்ற வகையில் இவ் விவரங்களை கிரேக்கத் தூதுவரும் மீண்டும் எடுத்துக் கூறியுள்ளார், நாணயங்களும், ஆசியாவில் நிலவிய பாணிகளையொட்டி அமைந்திருந்தன என்பதன்றி கிரேக்க ஆதிக்கத்திற்கு இடமளிக்கவில்லை. அழகான பாக்திரிய நாணயங்களைப்போலவும், தன்னுடைய உருவத்தையும் பிற செய்திகளைப் பொறித்து கிரேக்கரைப் போலவும், நாணயங்களை வெளியிடுவதற்கு அசோகன் விரும்பவில்லை. தனது ஆட்சிகாலத்திற்கு முன்பாகவே வழங்கிவந்த கரடுமுரடாக வார்த்தெடுத்து, மணையிவிட்டு அச்சடிக்கப்பட்ட நாணங்களைப் போலவே அசோகனும் பல நாணயங்களை வெளியிட்டான்.

நுண்கலைத்துறையில், கிரேக்கரின் முறைகளும் உத்திகளும் கையாளப்பெற்றன என்பதற்குரிய சான்றுகள் சில தென்படுகின்றன. மௌரியரின் சிற்பக்கலை, மிகச்சிறந்து விளங்கியதற்கு இந்திய, இரேனிய, கிரேக்க உத்திகளை அழகாக ஒன்று சேர்த்து சிற்பிகள் கையாண்டதையே, காரணமாகக் கூறவேண்டும்.

அழிவில்லாத மூலப்பொருள்களைக் கிரேக்கர் உபயோகித்ததை ரசித்து உணர்வதற்கு அசோகனுக்கு அரிய வாய்ப்புகள் இருந்தன. இதன் விளைவாக என்றும் நிலைத்து நிற்கக்கூடிய கல்லாலான கட்டடங்களையும், சிற்பங்களையும் உருவாக்கத்துணிந்தான் என்று கூறுவதும் பொருத்தமுடையதாகவே இருக்கின்றது.

இந்தியக் கட்டடங்களின் அமைப்புக்குரிய திட்டங்களில் கிரேக்க மணமில்லை. தட்சீலப் பகுதியில் கண்டெடுக்கப்பட்டுள்ள ஒருசில கட்டடங்களிலிருந்து, அப்பகுதியில் ஒரு சில கட்டடங்கள் கிரேக்க முறையைப் பின்பற்றி எழுந்தவை அல்லது கடைப்பிடித்தவை என்றும் கூறலாம். தட்சசீலத்தின் சமபகுதியை அன்னிய நாடாகவும் மறுபகுதியை இந்திய நாடாகவும் எண்ணலாகும். இதனல் அப்பகுதியில் முறையானதென்று ஏற்கப்படும் பழக்க வழக்கங்களை, இந்திய நாட்டின் உட்புறங்களிலுள்ள மாகாணங்கள் ஏற்கவேண்டுமென்பதில்லை.

**டெமிட்ரியசும் பிறரும்**

கிரேக்க நாடுகளுக்கும், பஞ்சாபிற்குமுள்ள நேரடித்தொடர்பு கி. மு. இரண்டாவது நூற்றுண்டிலேயே ஏற்பட்டுவிட்டது என

லாம். அப்போது அசோகன் இறந்து நாற்பது அல்லது ஐம்பது ஆண்டுகள் கழிந்திருந்தன. அந்நேரத்தில், பாக்திரிய மன்னன் 'டெமிட்ரியசு' 'இந்தியரின் அரசன்' என்ற பெயர் சூடியிருந்தான். டெமிட்ரியசின் நாணயங்களில் பொறிக்கப்பெற்றிருக்கும் யானைத் தலை, இந்திய நாட்டின் மீது அவன் கொண்ட வெற்றிக்குச்சான்ருக விளங்குகிறது. சின்னுட்களுக்குப் பின். 'பண்டாலியன்' என்ற கிரேக்கப் பெயருடைய அரசனெருவன், தட்சசீலத்தில் தொன்று தொட்டு வழங்கிவந்த நாணயங்களைப்போலச் சதுர வடிவில் நாணயங்களை அச்சிட்டு வெளியிடுவதைப் பார்க்கிருேம் அக்காலத்திலேயே, 'அகாதோகின்ஸ்' என்பவனும் இருமொழிகளில் கதைகள் எழுத முற்பட்டான். டெமிட்ரியசின் ஆதரவு பெற்றிருந்த அவன், மன்னனின் பிருதுகளுக்கு, கிரேக்க மொழியிலும், ஒருவகையான பிராகிருத மொழியிலும், விளக்கம் கூறினன். தற்காலத்தில் 'நகரி' அல்லது 'தேவநகரி' என்ற பெயரால் வழங்கிவரும் வரிவடிவத்தின், முன்னேனை 'பிரம்மி' என்ற வரிவடிவத்தின் உதவியால் இந்திய மொழி எழுதப்பட்டுள்ளது. இருமொழிகளில் கதைகள் எழுதுவதைத் தொடர்ந்து பல மன்னர்கள் ஆதரித்து வந்தனர் என்றும் தெரிய வருகிறது.

**நாணயவகைகள்**

பெஸ்நகர் மன்னனிடம், ஹெலியோடாரசு என்பவனைத் தூதுவனுக அனுப்பிவைத்த தட்சசீல மன்னன் ஆண்டியால் கிடாஸ், இந்திய நாணய எடைக்குச் சமமான எடையுள்ள நாணயங்களை வெளியிடுகின்ற பழக்கத்தை மேற்கொண்டான். நாணயங்களின் இரு புறங்களிலும், முன்பும் பின்பும், ஒரு புறத்தில் மன்னனின் உருவத்தையும் பிருதுகளையும் அச்சடிப்பது இந்திய நாட்டிற்குப் புதுமையானது. அன்னியரான சகர்கள், பார்த்தியர், யூச்சியினர் மற்றும் பலர் மேற்கொண்டிருந்த வழக்கத்தை இந்திய மன்னர்கள் அறிந்து, சிறுகச் சிறுகக் கடைப்பிடித்தனர். மற்றத்துறைகளில் போற்றுதற்குரிய வெற்றியடைந்திருந்த இந்தியக் கலைஞர்கள், அச்சுவார்க்கின்ற கலையில் அதிகமாக ஈடுபடவில்லை. இதனல், உண்மையில் நேர்த்தியான நாணயமொன்றை அவர்கள் உருவாக்கவில்லை. கி. பி. 400 ஆண்டிற்குச் சற்று முன்பும் பின்பும் குப்தப்பேரரசர்கள் வெளியிட்ட தங்க நாணயங்கள் சில மேலை நாட்டுப் பாணியை ஒட்டியவையாகும். அவை சிறந்தவையே எனினும் முதல் தரமானவை என்று கூறுவதற்கில்லை. முற்கால பாக்திரிய மன்னர்கள் வெளியிட்டுள்ள மிகச்சிறந்த அச்சு நாணயங்களுடன் இவைகளை ஒப்பிடுவதற்கில்லை. வெகுநேர்த்தியான சைரக்யூஸ் நாணயங்களைப்பற்றிக் கூறத் தேவையில்லை.

**இந்தோ-ரோமானியத் தங்க நாணயங்கள்**

கி.பி. முதல் இரண்டு நூற்றூண்டுகளில் அரசாண்டு வந்த, யூ-ச்சி, இந்தோ-சித்திய அல்லது குஷானிய மன்னர்கள், உரோமானியப் பேரரசுடன் சுறுசுறுப்பான வாணிபத்தொடர்புகொண்டிருந்தனர். உரோமானியத் தொடர்பு அப்போது கிழக்கு முகமாகவும் பரவியிருந்தது. முதலாம் காட்பிசஸ் வெளியிட்ட நாணயங்கள் சிலவற்றில், அகஸ்டஸ், டைபீரியஸ் அல்லது கிளாடியஸ் ஆகியவர்களின் உருவம் பொறித்த நாணயங்களைப் போல, மன்னனின் உருவமும் பொறித்திருப்பதைக் காணலாம். உரோமானியரின் வழக்கத்தை இரண்டாம் காட்பிசஸ் மேலும் அதிகமாகக் கடைபிடித்து நேர்த்தியான ஏராளமான தங்க நாணயங்களை வெளியிட்டான். 'சீசர்' வெளியிட்டுள்ள 'ஔரி' என்ற தங்க நாணயங்களை யொத்த எடையுள்ளவைகளாக இவை விளங்குகின்றன. தரத்திலும், இவை அவைகளை விடக் குறைந்தவை அல்ல. பஞ்சாப், காபூல் மற்றும் அதையடுத்துள்ள பகுதிகளில் ஏற்றுமதி செய்யப் பெற்ற இந்திய நாணயங்கள் அடிக்கடி கண்டெடுக்கப் பெறுகின்றன. இந்திய நாட்டினுள் ஏராளமான அளவில் உரோமானியத் தங்கம் பாய்ந்தோடியதென்பதை கி.பி. 77 ஆம் நூற்றூண்டில் பிளினி என்னும் நூலாசிரியர் கூறுவர். வட இந்திய சாம்ராச்சியத்தைப் பொறுத்தவரை, முதலில் இரண்டாம் காட்பிசஸும், பின் கனிஷ்கன், ஹுவிஷ்கன், வசுதேவன் ஆகியவர்களும், இந்நாணயங்களை உருக்கிக் கீழை நாட்டு 'ஔரி' களாக வெளியிட்டனர் என்று தெரிய வருகிறது. பிரிட்டிஷ் நாணயமான சவரன் ஒரு காலத்தில் பல நாடுகளில் செலாவணியானதைப் போலவே, தீபகற்ப இந்தியாவில் 'ஔரஸ்' என்ற நாணயமும் நடைமுறையில் செலாவணியாகி வந்தது. ஒருகால், சற்றுப் பிற்காலத்தில் புகுத்தப் பெற்ற தென்னிந்தியாவின் தனியுரிமையான, தங்கச் செலாவணியும், ஐரோப்பிய வகைகளுடன் எவ்விதத் தொடர்பும் கொண்டவையல்ல.

**கிரேக்க எழுத்தும் கடவுளரும்**

கனிஷ்கன், ஹுவிஷ்கன், வசுதேவன் ஆகியவர்கள் தங்கள் நாணயங்களில் சம்பவங்களைக் குறிப்பதற்குத் தங்கள் மொழியையே பயன்படுத்தினர். இம் மொழி சாகரின் மொழியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டதாக இருந்தது. ஆனால் இதை எழுதுவதற்குக் கிரேக்க வரிவடிவங்களையே பயன்படுத்தினர். ஏதோ ஒரு காரணம் பற்றியே ஆசிய மொழிகளின் வரிவடிவங்களெதையுங் அவர்கள் உபயோகிக்கவில்லை. கனிஷ்கன், ஹுவிஷ்கன் ஆகியவர்கள் வெளியிட்ட நாணயங்களில் காணப்

படும் பலரகக் கடவுளரின் உருவங்களையும், கிரேக்க பௌத்தக் கலைக் கூட முறைகளின் நவீனங்களையும், முன்னரே நன்கு விவாதித்து ஆராய்ந்தோம். பல கடவுளரை வழிபடும் முறையைக் கொண்ட ஹெல்லனிச சமயக் கோட்பாடுகள், பிற்கால பௌத்த சமயத்தின் மீது கொண்டிருந்ததாக ஊகிக்கப்படும் ஆதிக்கத்தையும் ஆராய்ந்தோம். எல்லாச் சான்றுகள் வாயிலாகவும் அறிவது யாதெனில், ஹெலியோடோரசு போன்ற அன்னியர்கள் இந்தியக் கடவுளரை ஏற்கத் தயாராக இருந்தனர்; இந்திய கிரேக்கக் கடவுளரை வழிபடுவதில் மிக்க ஆர்வமுடன் இல்லை. கனிஷ்கன், ஹுவிஷ்கன் ஆகியோர் வெளியிட்ட நாணயங்களில் பொறிக்கப்பட்டிருக்கும் கிரேக்க கடவுளரும் பாரசீக வகையைச் சார்ந்தவர்களே. அவைகள் பார்த்தியரிடமிருந்து பெறப்பட்டவைகளாகும். இந்தோ கிரேக்க இளவல்களும், மக்களும் இந்து சமயத்தினராக மாறுவதில் மிக்க ஆர்வம் கொண்டிருந்தனர் என்பது உறுதியாகத் தெரிகிறது. இந்திய அரசர்களும் மக்களும் கிரேக் மரபுகளைப் பின்பற்றுவதில் அத்துணை ஆர்வமுடையவர்களாக இல்லை. தங்களைப் பாதுகாத்துக் கொள்வதிலும், ஏற்க விரும்பாத அன்னியரின் கருத்துகளை,நெருங்கவிடாது தொலைவிலேயே வைத்திருப்பதிலும் பிராமணர் வல்லவராயிருந்தனர்.

### கிரேக்கராட்சியை விளக்கும் சொற்பச் சான்றுகள்

வடமேற்கு இந்திய எல்லையில் நெடுங்காலமாக நீடித்த கிரேக்கராட்சியை விளக்கும் நாணயச் செய்தி நீங்கலாக உள்ள தடையங்கள் மிகச் சொற்பமாகவே காணக்கிடைக்கின்றன. கிரேக்க மொழியிலோ, அல்லது வரிவடித்திலோ உள்ள வெட்டெழுத்துகள் இன்றும் கண்டெடுக்கப்படவில்லை. கிரேக்கரின் பெயர்களைக் கொண்ட வெட்டெழுத்துகளும், மிகச் சொற்பமாக, சுமார் அரை டஜனுக்கு மேலில்லை. இரு குறிப்புகள், இந்தோ கிரேக்க மன்னனிடம் பணியாற்றும் ஜில்லா அதிகாரியை, 'மெரிடார்க்' என்ற பெயரால் அழைக்கின்றன. அவைகளில் ஒன்று தட்சசீலத்திலிருந்து கண்டெடுக்கப்பட்டதாகும். கிரேக்க மொழி, ஓரளவு அரசாங்க அலுவல்களில் பயன்படுத்தப்பட்டது என்பதை இதனின்றும் அறியலாகும். இந்தோ கிரேக்க மன்னர்களின் அவைகளில் கிரேக்க மொழி வழங்கியிருக்க வேண்டும். ஆனால் இந்தியரிடையில் அம்மொழி அதிகமாகப் பரவியதாகத் தெரியவில்லை. கனிஷ்கன் மற்றும் சந்ததியார்களின் நாணயங்களில் காணப்படும் செய்திக் குறிப்புகளைப் பொறிப்பதற்குக் கிரேக்க வரிவடிவங்கள் உபயோகிப்பட்டுள்ளனஎன்பதிலிருந்து மொழி கிரேக்க எழுத்து முறையிலேயே ஆதியில் வடிக்கப் பெற்றதென ஒருவாறு கூறலாம். நாணயங்களில் கிரேக்க எழுத்

துகள் பொறிக்கப்பட்டுள்ளன என்பதிலிருந்து, கிரேக்க அரிச்சுவடியில் மக்களுக்கு நல்லறிவு இருந்ததென்று கூறவியலாது. மொழி அல்லது வரிவடிவம் எத்தகையதாக இருந்த போதிலும், இந்திய மக்களினத்தின் ஒரு சிறு பகுதியினரே இதைப் படிக்கும் ஆற்றல் பெற்றிருந்திருக்கக் கூடும். ஆட்சியிலிருந்த அரசன் நாணயங்கள் தாற்காலிகமாகச் செலாவணியாயிருக்க வேண்டும். அதற்கும் அவைகளின் மீதுள்ள எழுத்துகளுக்கும் எவ்விதத் தொடர்பும் இருந்திருக்க வேண்டுமென்பதில்லை.

### கருத்துச் சுருக்கம்

இறுதியாக, இப் பிரச்சினை என்னைக் கவர்ந்த ஆதி நாட்களில் நான் எண்ணி வந்ததற்கு மிகவும் குறைவாகவே, கிரேக்க அல்லது ஹெல்லனிச ஆதிக்கம் இந்தியாவின் மீது மிகக் குறைந்த அளவே உள்ளது எனக் கூறலாகும். இந்தியச் சமயக் கோட்பாடுகளில் கிரேக்கரின் தொடர்பால் கணிசமான மாறுதல்கள் ஏற்பட்டன என்று கூறத் துணிந்தால், பௌத்த சமயத்தை மட்டிலுமே நாம் குறிப்பிட இயலும். இந்து மதம், சமணம் ஆகியவைகள் எத்தகைய மாறுதலுக்கு முட்படவேயில்லை. எல்லைப் புறக் காந்தார மாகாணத்தைச் சேர்ந்த குறிப்பிடத்தக்க கிரேக்க பௌத்த சிற்பக் கலை, உள்நாட்டிலும் ஓரளவு பரவியிருந்தது. சீனரும் ஜப்பானியரும் உருவாக்கிய பௌத்த விக்கிரகங்களின் தோற்றத்தை இது நிர்ணயித்தது என்று கூறலாம். கிரேக்கர் உபயோகித்து வந்த அணிகலன்களைப் பற்றிய அறிவு இந்திய நாட்டில் அதிகமாகப் பரவியது எனலாம். குறிப்பிட்டுக் கூற முடியாத, ஆனால் உண்மையில் கிரேக்கரைச் சார்ந்த கலையம்சம் ஒன்றை அசோகர் காலத்திய நேர்த்தியான சிற்பங்களில் காணலாகும். கிரேக்கரின் கட்டடக் கலையைப் பின்பற்றி எழுந்த ஒரு கட்டடம் காணப்படுமேயெனில் அது காந்தாரப் பகுதியிலேயே அமைந்திருக்க வேண்டும். நல்ல அச்சு நாணயங்களை இந்தியக் கலைஞர்கள் உருவாக்கியதே இல்லை. அவ்வாறு நேர்த்தியாக ஏதேனுமிருந்தால், அவை கிரேக்க உரோமானிய நாணயங்களைப் பின்பற்றி எழுந்ததாகவே இருக்க வேண்டும். கிரேக்க மொழியும் இந்திய நாட்டில் அதிகமாகப் பரவவில்லை. கிரேக்கப் பெயர் தாங்கி, எல்லைப்புறங்களில் ஆட்சி செலுத்தி வந்த ஒரு சில மன்னர்களின் அவைகளிலேயே அம்மொழி வழக்கிலிருந்திருக்க வேண்டும். அத்தகைய மன்னர்களின் நரம்புகளில் கலப்பு இரத்தமே ஓடியதெனலாம். இந்தோ பாக்திரிய மக்களை', 'பழங்கால கோவா மக்கள்' என்று வர்ணிப்பதுண்டு. கனிஷ்கனின் வைத்தியனை சரகன் ஈந்த வைத்திய

சாத்திரக் குறிப்புகளில், ஹிப்போகிரேட்ஸ் என்பவரின் கருத்து கள் கலந்திருப்பதாக கூறப்படுகிறது. இதை, உறுதி செய்கின்ற வகையில் அளிக்கப்படும் சான்றுகள், திருப்திகரமாக இல்லை.

இந்த அதிகாரத்தில், நாம் குறிப்பிட்டுள்ள காலவரையறைக் குப் பன்னுட்களுக்குப் பின், குப்தப் பேரரசர்களின் ஆட்சியில் இந்தியக் கலை, இலக்கியம், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் மேலை நாட்டு மணம் மீண்டும் வீசத் தொடங்கியது. அவ் விஷ யத்தை உரிய நேரத்தில் கவனிப்போம்.

### தரைமார்க்கமாக நடைபெற்ற வாணிபம்

குஷானிய மன்னர்கள் ஆட்சியில் இந்தியாவிற்கும் உரோ மானிய சாம்ராச்சியத்திற்குமிடையில் நடைபெற்ற வாணிபத் தைப் பற்றிய குறிப்புகள் முன்னரே எடுத்துரைக்கப்பட்டன. மேற்கு ஆசியாவுடன் தரைமார்க்கமாக இந்தியநாடு கொண்டி ருந்த வாணிபத்தொடர்பு மிகப்பழமையானது. இந் நில மார்க்கம் பாரசீகம், மெசபடோமியா, ஆசியா மைனர் ஆகிய நாடுகளின் வழியாக அமைந்திருந்தது. சீனரின் பட்டுத் துணி வியாபார மும் இந் நில மார்க்கத்தின் மூலமாகவே நடைபெற்றது. பார்த் தியருக்கும் உரோமானியருக்குமிடையில் அடிக்கடி பகை மூண்ட தால், ஆசியாவின் குறுக்காகச் சென்ற இந்நில மார்க்கம் பல முறை மூடப்பட்டது. எனவே, போக்குவரவு 'பாரிகாஸ' அல்லது ப்ரோச் போன்ற இந்தியாவின் மேற்குக் கரையிலுள்ள துறைமுகங்களுக்கு திருப்பப்பட்டு, அங்கிருந்து வாணிபப் பொருள்கள் கடல் மார்க்கமாகப் பாரசீக வளைகுடாவிற்கும் செங்கடலுக்கும் அனுப்பப்பட்டு வந்தன.

### கடல் மார்க்கமாக நடைபெற்ற வாணிபம்

தீபகற்ப இந்தியா, ஐரோப்பிய நாடுகளுடன் கடல் மார்க்க மாக எகிப்தின் மூலம் நடத்தி வந்த வாணிபம், மன்னன் கிளா டியசின் ஆட்சிக்கு முன் அதிகமாக இருந்தென்று கூறுவதற் கில்லை. கிளாடியசின் ஆட்சியின்போது; பருவக்காற்றுகளின் போக்கைத் தீர்மானிப்பதற்கு உரோமானிய வணிகர் கற்றனர். ஆனல், எகிப்திய நாட்டுடன் ஓரளவு வாணிபத் தொடர்பு பன் னுட்களுக்கு முன்னதாகவே ஏற்பட்டிருக்க வேண்டும். தென் கோடியில் அரசாண்ட மதுரையைச் சார்ந்த பாண்டிய அரசன், 'மன்னன் பாண்டியன்' உரோமானிய அகஸ்டசுக்கு கி.மு, 20 ஆம் ஆண்டில் தூது கோஷ்டியொன்றை அனுப்பி வைத்தான் என்று அறிகிறோம். கிருத்து சகாப்தத்தின் முதலிரண்டு

நூற்ருண்டுகளில், தென்னிந்தியாவிற்கும் உரோமானியப் பேரரசுக்குமிடையில் நெருங்கிய வாணிபத் தொடர்பிருந்ததாகத் தெரியவருகிறது. அராபியத் துறைமுகம் ஒன்றிலிருந்து, மலபார்க் கரையிலுள்ள முசிரிஸ் அல்லது கிராங்கனூரை நாற்பது நாட்களில் வணிகர் பிரயாணம் செய்து அடைய முடியும். ஜூலை அல்லது ஆகஸ்டு மாதத்தில் பிரயாணத்தை மேற்கொண்டு, வியாபாரங்களைச் செவ்வனே முடித்து, டிசம்பர் அல்லது ஜனவரிமாதத்தில் அவர்கள் தாய்நாடு திரும்பலாம். முசிரியிலும் பிற நகரங்களிலும் உரோமானியப் பிரஜைகள் வசித்து வந்தனர் என நம்புவதற்கும் இடமுண்டு. கி.பி. 215ஆம் ஆண்டில் அலேக்சாந்திரியாவில் காரகாலாஸ் என்பவன் மக்களைப் படுகொலை செய்தான். இதனுல் வாணிகம் தடைபட்டது; ஒருகால் தாற்காலிகமாக நிறுத்தப்பட்டது என்றுகூடச் சொல்லலாம். இந்தியப் பொருள்களின் விலையாக 'ஔரி', 'தினரி' நாணயங்கள் கொடுக்கப்பட்டன. அத்தகைய நாணயங்கள் ஏராளமாகக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. பண்டைய பூவியல் வல்லுநர் 'போடௌக்' என்றழைக்கும் பாண்டிச்சேரிக்கருகிலுள்ள வியாபாரஸ்தலமான அரிக்காமேடு என்னுமிடத்தில், உரோமானியர் உபயோகித்த மண்பாண்டகளின் சிதறிய துண்டுகளில் பல அண்மையில் கண்டெடுக்கப் பட்டுள்ளன.

**வணிகப் பொருள்களும் பல துறைமுகங்களும்**

திருநெல்வேலியிலுள்ள தாமிரபருணியில் விளைந்த நன்முத்துகளும், மைசூர், கோயம்புத்தூர் சுரங்கங்களிலிலிருந்து கிடைத்த மரகதக் கற்களும், அதே பகுதிகளிலிருந்து கிடைத்த பவழங்களும், இலங்கையிலிருந்து கிடைத்த விலையுயர்ந்த பல வகையான இரத்தினங்களும், மலபார் கரையிலிருந்து கிடைத்த மிளகு முதலிய வாசனைப் பொருள்களும் அன்னிய நாட்டு வணிகர்களால் மிகவும் விரும்பி ஏற்றுமதி செய்யப்பட்டன. நாம் கொடுத்துள்ள பட்டியல் விரிவானதல்ல. தற்போது திருவிதாங்கூரில் அடங்கிய, பாக்கரை அல்லது வைக்கரை என்னும் கோட்டயத்திலடங்கிய துறைமுகமும், மலபார் கரையிலுள்ள முசிரிசும், கிராங்கனூரும் முக்கியத் துறைமுகங்களாக விளங்கின. தாமிரபருணி ஆற்றிலுள்ள கொற்கை என்னும் துறைமுகம் நன்முத்து வியாபாரத்திற்குப் பெயர் பெற்றிருந்தது. 'புகார்' என்றும் காவிரிப்பூம்பட்டினம் என்றுமழைக்கப்பட்ட 'புகார்' அக்காலங்களில் காவிரி (காவேரி) ஆற்றின் முகத்துவாரத்திலிருந்தது. சில காலத்திற்குச் செல்வத்திலும் புகழிலும் அது சிறந்து விளங்கியது. அது, அப்பகுதியிலுள்ள பண்டைக் காலத் துறைமுகங்கள் சிலவற்றைப் போல பாழடைந்து கிடக்கிறது. காலப்

போக்கில் நிலப்பகுதி உயர்ந்து வந்தமையால் கரையில் மாற்றங்களேற்பட்டமையால் இவ்வாறுயிற்று.

**தமிழக அரசுகள்**

விலைமதிப்பற்ற அன்னிய நாட்டு வாணிபத் தொடர்பினுல் தென்கோடியிலுள்ள தமிழக அரசுகள், செல்வமும் புகழும் பெற்று விளங்கினதோடு, பண்டைய நாட்களிலேயே சிறந்த நகர்ப்புற நாகரிகத்தையும் கொண்டிருந்தன. பாண்டிய நாட்டின் செல்வாக்கைப் பற்றி மெகாஸ்தனீஸ் கேள்விப்பட்டதுண்டு. அரசுகளின் பெயர்களும் அசோகனின் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளன. காலத்திற்குக் காலம் நாட்டின் எல்லைகள் மாறி வந்தன. ஆனல் பாண்டியர், சேரர் அல்லது கேரளர், சோழர் ஆகிய மூன்று அரசுகளுமிருந்தனவென்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. 'சத்தியபுத்திரர்' என்ற நான்காவது சிற்றரசு ஒன்றையும் அசோகர் குறித்துள்ளார். மிகவும் பழமை வாய்ந்ததெனப் பெயர் பெற்றுள்ள பாண்டிய அரசுடன் இது பிற்காலத்தில் இணைந்திருக்கக்கூடும். இவ்வரசு, மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களை உள்ளடக்கியிருந்ததெனத் தோராயமாகக் கூறலாம். மலபார் மாவட்டமும், தற்காலக் கொச்சி, திருவிதாங்கூர் சமஸ்தானங்களும், கேரள அல்லது சேரநாட்டில் அடங்கியிருந்ததெனக் கூறலாம். சில சமயங்களில் இது கிழக்கு முகமாகவும் பரவியதுண்டு. சோழ அரசில் சோழ மண்டலம் அல்லது சென்னைக்கரை அடங்கியிருந்தது. சோழரின் வணிகப் பொருள்களில் பருத்தி ஆடை மிகவும் முக்கியமானது. அவர்களிடமிருந்த திறமையான கப்பல்படை ஐராவதி, கங்கை ஆறுகளின் முகத்துவாரங்கள் வரையிலும், மலாய், ஆர்ச்சிபிலாகோ தீவுகள் வரையிலும் அச்சமின்றிப் பிரயாணம் செய்து வந்தது.

**தமிழிலக்கியம்**

கிருத்து சகாப்தத்தின் டண்டைய நூற்றுண்டுகளில் நாம் குறிப்பிட்டுள்ள நாடுகளிலெல்லாம் தமிழ் மொழியே வழங்கி வந்தது. அப்போது, மலையாள மொழி வழக்கிலிருந்ததாகத் தெரியவில்லை. அமோகமாக இலக்கிய வளர்ச்சி ஏற்பட்டது. கி. பி. முதல் மூன்று நூற்றுண்டுகளையும் இவ்விலக்கிய வளர்ச்சியின் பொற்காலமென்று குறிப்பிடலாம். இவ்விலக்கிய வளர்ச்சிக்கு மதுரை இருப்பிடமாக விளங்கியது. இக்காலத்திலேயே 'எட்டுத்தொகை' நூல்களும் எழுந்தன. நடை, உத்தி, விஷயம், ஆகிய மூன்று துறைகளிலும் ஆரியக்கலப்பே இல்லாத, சமயச்

சார்பற்ற இலக்கியத் தொகுதிகளென இவைகளைக் குறிப்பிடலாகும். இவைகள் தோன்றிய சின்னுட்களுக்குப் பின், குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்கள் தோன்றின என்றும் கூறலாம். இவைகளில் வடக்கின் மணம் வீசுவது தெரியும். கோதாவரி ஆற்றிற்குத் தெற்கில் மக்களின் மதிப்பையும் ஆதரவையும் பெற்ற சிறந்த நூலென்றும் இலக்கியக் கருவூலமென்றும், கவிதையின் வாயிலென்றும், தமிழ் மக்களின் நாவன்மையையும் நற் பண்பையும் விளக்கும் மிகச் சிறந்த இலக்கியமென்றும் 'குறள்' சித்திரிக்கப்படுகின்றது. தனித்தூய்மை, அழகு என்ற அறக்கோட்பாடுகளை இந்நூலாசிரியர் எடுத்துரைப்பது போல, என் அறிவிற்கு எட்டியவரையில் வட விந்தியாவிலுள்ள சம்ஸ்கிருத இலக்கியத்திலும் காண்பதரிது. கோவர் என்பவரின் சிறந்த மொழிபெயர்ப்புகளை இங்குக் கூறலாம். இவற்றிற்குரிய தமிழ் மூலம் வருமாறு:

**அன்புடைமை**

அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

அன்பின் வழியது உயிர்நிலை, அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

**பொறையுடைமை**

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று.

**குலவரலாறு**

இவ்வதிகாரத்தில் கண்டுள்ள காலவரையறையிலும், உண்மையில் அதற்குப்பின் பல நூற்றுண்டுகளிலும், தமிழக எல்லைகளில் நிகழ்ந்த அரசியல் செய்திகளைத் தெளிவற்ற முறையிலேயே தொகுத்துரைக்க இயலும். இலக்கியத்திலிருந்து குலவரலாற்றின் ஒரு சில செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. சான்றுகளிலிருந்து நாம் அறியக்கூடிய 'கரிகால்' அல்லது 'கரிகாலன்' என்ற பண்டைய சோழ அரசன் கி. பி. 100–ல் அரசு செலுத்தினன் என்று கூறலாம். இரண்டாம் காட்பிசசின் சமகாலத்தவனை இவன் புகார் என்னும் துறைமுகத்தைக் கட்டினன் என்றும் காவிரி (காவேரி) ஆற்றிற்கு நூறு மைல்கள் வரையிலும், சிங்களத்திலிருந்து, தான் சிறைப்பிடித்த கைதிகளின் உழைப்பைக்

கொண்டு, கரை எழுப்பினன் என்றும் கூறப்படுகிறது. தீவின் அரசர்களுடன் இடைவிடாது போர் புரிவதென்பது, தமிழக வரலாற்றில் நாம் அடிக்கடி பல நூற்றாண்டுகளுக்குக் கேள்விப்படும் ஒரு முக்கியச் செய்தியாகும். இவ்வரசர்கள் தங்களுக்குள் இடையறாது மேலும் தீவிரமாகப் போரிட்டு வந்தனர் என்பதைக் கூறத்தேவையில்லை. வரலாற்றுச் சான்று வாயிலாக நாமறியும் முதல் பாண்டிய மன்னன், சற்றேறக்குறைய கரிகால சோழனின் பெயரனுக்குச் சமகாலத்தவனாதல் வேண்டும். வலிமைமிக்க சேர மன்னன் ஒருவனும், இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் அரசாண்டுவந்த சிங்கள மன்னன் கயவாகு என்பவனும் சமகாலத்தவர்கள் என்பது காலவரன் முறைக்கு ஒரு முக்கிய ஊன்றுகோலாக விளங்குகிறது. நான்காவது நூற்றாண்டில் பல்லவர்கள் தோன்றுகின்ற வரையில், இக்காலத்திற்குப் பின்னுள்ள குலவரலாற்றை எடுத்துரைப்பது இயலாது காரியமாக வுள்ளது.

**அன்னிய குலத்தவரையும் அவர்களது சமகாலத்தவர்களையும் இணைக்கும் காலவரன் முறை அட்டவணை.**

(செய்திகள் நிகழ்ந்த காலத்தைப்பற்றிய இந்தியக் குறிப்புகள் தோராயமானவை. ஆய்வாளர்களிடையே சுமார் அறுபது ஆண்டுகாலம் வரை கருத்து வேற்றுமைகள் உண்டு).

| கி. மு. | |
|---|---|
| சி 250—248 | பாக்திரிய, பார்த்திய நாடுகளில் புரட்சி |
| சி 232 | அசோகனின் மரணம் |
| சி 208 | பாக்திரியன் தன்னாட்சி நிலைபெறுதல் |
| சி 200—190 | டெமிட்ரியஸ், 'இந்திய மன்னன்' |
| சி 190—180 | பந்தாலியனும் அகதாகிள்சும் – தட்சசீல மன்னன். |
| சி 174—160 | சீனாவிலிருந்து மகாயூச்சியனர் மேற்கு முகமாகப் பரவுதல் |
| சி 180—160 | மினாந்தர் (மிலிந்தா) காபூல் மன்னன் |
| சி 140—130 | ஆண்டியால் கிடாஸ், தட்சசீல மன்னன், ஹிலியோகிள்ஸ், பாக்திரியாவை இறுதியாக ஆண்ட பெருமன்னன். சகரின்படையெடுப்புகள் முதலியன |

கி. மு.

சி 138 முதலாம் மித்ரிடேட்ஸ், பார்த்திய மன்னன் (?) தட்சசீலப் பேரரசைத் தாற்காலிகமாக ஆட் கொள்ளுதல்

சி 122—120 சாங்-கியன் மீண்டும் சீனத்தை வந்தடைதல்

சி 95 மேயஸ், அரக்கோசியா, பஞ்சாப் ஆகிய நாடுகளின் சக அல்லது இந்தோ-பார்த்திய மன்னன் – அரசேற்றல்

சி 58 அதேபகுதிகளில் முதலாம் ஆசஸ் பதவியேற்றல்; 58-57 விக்ரம சகாப்தப் பெருங்காலம்

30 எகிப்தை ரோமானியர் கைப்பற்றுதல்

கி. பி.

14 அகஸ்டஸ் சீசர் மரணம். உரோமானியப் பேரரசர் டைபீரியஸ் அரசேற்றல்

சி 20— 48 கோண்டோ பெர்னஸ் (கோண்டோபேர்ஸ் முதலிய) தட்சசீல மற்றும் பகுதிகளின் அரசன் ஒருகால் இரண்டாம் ஆசஸைத்தொடர்ந்திருக்கலாம்

23 சீனவில் முதல் ஹான் குல ஆட்சி முடிவுறுதல்.

40 முதலாம் காட்பிசஸ் (குஜுலா காரா காட்பிசஸ், முதலியன) குஷானியன் எல்லா யூச்சினருக்கும் தலைவராதல்

41 கிளாடியஸ், ரோமானியச் சக்கரவர்த்தி அரசேற்றல்

சி 77 அல்லது 78 முதலாம் காட்பிசசின் மரணம்

78 ?இரண்டாம் காட்பிசஸ் அரசேற்றல் — சாக சகாப்தப் பொற்காலம்

89 - 105 சீனப் பேரரசர் ஹோ–டி

சி 87 பான் - கியோ என்ற சீனத்தளபதி இரண்டாம் காட்பிசசினல் முறியடிக்கப்படுதல்

98 ரோமானியப் பேரரசன் டிராஜன் அரசேற்றல்

105 'பால்மிரா' முக்கியத்துவம் அடைதல்

சி 110 இரண்டாம் காட்பிசசின் மரணம்

கி.பி.

| | | |
|---|---|---|
| சி | 110 - 120 | ? வடமேற்கு இந்தியப் 'பெயரில்லா மன்னன்' |
| | 116 | டிராஜன், மெசபடோமியாவின் மீது வெற்றி பெறுதல் |
| | 117 | ஹாட்ரியன், ரோமானியப் பேரரசர் அரசேற்றல். மெசப்படோமியா மீண்டும் பிரிதல் |
| சி | 120 | குஷானிய கனிஷ்கன் அரசேற்றல் — அவனது ஆட்சியின் முதலாண்டு |
| சி | 123 | கனிஷ்கனின் சாரநாத் கல்வெட்டு (மூன்றாவது ஆண்டு) |
| சி | 138 | கனிஷ்கனின் மாணிக்கியாலாக் கல்வெட்டு (18 வது ஆண்டு) ரோமானியப் பேரரசன் அன்டோனியஸ் பயஸ் அரசேற்றல் |
| சி | 144—150 | வசிஷ்கன் (?) கனிஷ்கனின் மகனும், வைஸ்ராயாக அவனுடன் சமகாலத்தில் ஆண்டவனுமாவான் [24 (?) லிருந்து 30 ஆண்டுகளுக்குள்ளாக] |
| சி | 150 - 162 | ஹுவிஷ்கன் (?) கனிஷ்கனின் மகனும், அவனது வைஸ்ராயாக இந்திய நாட்டை யாண்ட சமகாலத்தவன் (ஆண்டுகள் 30 - 42) |
| சி | 161 | கனிஷ்கனின் 'ஆராக்கல்வெட் (41 ஆம் ஆண்டு) ரோமானியப் பேரரசன் மார்க்கஸ் அரீலியஸ் அரசேற்றல் |
| சி | 162 | ஹுவிஷ்கன், குஷானியப் பேரரசனைக் கனிஷ்கனைத்தொடர்ந்து பதவி ஏற்றல் |
| சி | 182 | முதலாம் வசுதேவன் அரசேற்றல் |
| | 193 | ரோமானியப்பேரரசன் செப்டிமியஸ் சிவீரஸ் அரசேற்றல் |
| சி | 194—218 | முதலாம் வசுதேவனின் கல்வெட்டுகள் (ஆண்டுகள் 74 98) |
| சி | 220 | முதலாம் வசுதேவன் மரணம் |
| | 226 | முதலாம் ஆர்தஷீர், பாரசீகத்தில் சசானிய குலத்தைத் தோற்றுவித்தல் |
| | 240 | ஷாபுர் (சாபோர்) I, பாரசீகத்தில் அரசேற்றல் |
| | 273 | அரீலியன் பால்மிராவை அழித்தல் |

## மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

கிரேக்க பாக்திரிய குலங்களைப் பற்றிய அதிகாரங்கள் கே. இ. வ. வால்யூம் i; இன்றும் வழக்கிலிருப்பவை.

'பாக்திரியாவிலும், இந்தியாவிலும் கிரேக்கர்' ஸர் டபிள்யூ, டபிள்யூ. டார்ன் (கேம்பிரிட்ஜ் 2 ஆம் பதிப்பு 1951) மிகத் துணிகரமாகவும் முழுவதும் இப் பிரச்சினையை ஆய்கிறது.

அண்மையில் ஏ. கே. நரெய்ன் என்பவர் 'இந்திய கிரேக்கர்' (ஆக்ஸ்போர்டு 1956) என்னும் தனது நூலில் 'டார்னின்' கருத்துகளைப் பலமாகக் கண்டித்துள்ளார்.

மார்ஷல் எழுதியுள்ள 'தட்சசீலம்' (3 வால்யூம்கள், கேம்பிரிட்ஜ் 1951) என்னும் நூலில் காலவரன் முறையைப் பற்றிய நவீன கருத்துகளை அறியலாம்.

கோனொவ் என்பவரின் 'கரோஷ்டி கல்வெட்டுகள்) கார்பஸ் இன்ஸ்கிரிப்ஷி யோனம் இண்டிகாரும் வால். ii, ஆக்ஸ்போர்டு, 1929) என்னும் நூலில் பயனுள்ள முகவுரை ஒன்று காணப்படும்.

ஆர். கிர்ஷ்மான் எழுதியுள்ள 'பேக்ராம், ரிசர்ச்சஸ் ஆர்க்கியலாஜிகல் எட் ஹிஸ்டாரிகஸ் கௌசன்ஸ் (கெய்ரோ, 1946)

ஜே. இ. வான் லௌகிசன்டி லீவ்ஸ் எழுதியுள்ள 'சித்தியரின் காலம்' (லெய்டென் 1949) ஆகிய அண்மையில் வெளியான நூல்களைக் குறிக்கலாம்.

டி. லா வேல் பௌசின்ஸ் என்பவரின் 'ல இன்டே ஆக்ஸ் டெம்பர்ஸ் டெஸ் மௌரியாஸ், (பாரிஸ் 1930) என்னும் நூல் இன்று வரை இவ் விஷயத்தைப் பொறுத்த கருத்துகள் யாவையும் எடுத்துக் கூறுகின்றது. புலமை மிக்க சஞ்சிகைகளில் வெளியாகியுள்ள கட்டுரைகள் இச்சிறு நூலில் அடக்கவியலாத அளவில் ஏராளமாக உண்டு.

மேலை நாடுகளுடன் உள்ள தொடர்பை அறிவதற்கு, ஜி.என் பானர்ஜி எழுதியுள்ள 'புராதன இந்தியாவில் கிரேக்கர் பண்பு' (லண்டன் 1919) என்ற நூலையும். மற்றும்,

ஹெச். ஜி. ராலின்சனின் 'இந்திய மேலை நாடுகளிடையுள்ள தொடர்பு' (கேம்பிரிட்ஜ் 1916)

இ. எச். வார்மிங்னின் 'உரோமானியப் பேரரசிற்கும் இந்திய நாட்டிற்குமுள்ள வாணிபத் தொடர்பு' (கேம்பிரிட்ஜ் 1928)

ஆர்.இ.எம். வீலர் 'இந்தியாவுடன் ரோமானியர் தொடர்பு' மூலம் 'புதை பொருளாய்வின் சில அம்சங்கள் ஓ. ஜி. எஸ்.கிராபோர்டு என்பவருக்கு அளிக்கப்பட்ட (லண்டன் 1951) கட்டுரைகள், ஆகிய நூல்களைப் பார்க்கவும்.

பௌச்சர் என்பவரின் 'லா ஆர்ட், கிரேக்கோ போதிக் டு காந்தாரா' (பாரிஸ் 1905—23) என்னும் நூல், காந்தாரக் கலையைப் பற்றிய விவரங்களை அறிவதற்குகந்த நூலாக விளங்குகிறது.

பண்டைய தமிழர், பண்பாட்டைப் பற்றி அறிவதற்கான நூலடைவுக்கு 87-88 ஆம் பக்கம் பார்க்கவும். முழுவதும் நம்புவதற்கு அருகதையில்லாத நூல்கள் வாயிலாக-வென்றாலும், ஒருவாறு பண்டைய தமிழரின் அரசியல் வரலாற்றைப் போற்றுதற்குரிய முறையில், கே. என் சிவராச பிள்ளையவர்கள் 'பண்டைய தமிழரின் காலவரன் முறை' (மதராஸ் 1932) என்ற தமது நூலில் கூறியுள்ளார்கள்.

மகாயான பௌத்த சமயத்தைப் பற்றிய நூல்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன எனினும், எலியட் என்பவர் எழுதியுள்ள 'இந்து சமயமும் பௌத்தமும்' (3 வால்யூம்கள், லண்டன் 1921) என்ற நூலில் உள்ள பொருத்தமுடைய அதிகாரங்கள் படிப்பதற்குச் சுவையாக உள்ளன என்பதோடு, பல உண்மைகளையும் உள்ளடக்கியிருக்கின்றன.

இ. கான்ஸ் என்பவரின் 'பௌத்தம், அதன் மூலக் கருத்துகளும், வளர்ச்சியும்' என்ற நூல் (இரண்டாம் பதிப்பு, ஆக்ஸ்போர்டு 1963) அண்மையில் வெளிவந்துள்ள நூல்களில் மிகவும் முக்கியமானது.

ஹேஸ்டிங்க்ஸ் என்பவர் தொகுத்துள்ள 'சமயம், அறக் கோட்பாடு களஞ்சிய'த்தில் டி. லா. வேல் பௌசின், போதி சத்துவர்களைக் குறித்து விரிவாக ஆராய்ந்துள்ளார்,

இ. ப. வ, ' (1923) விலுள்ள பல குறிப்புகளும் இன்றும் பொருள் செறிந்து விளங்குகின்றன.

## 4. குப்தர் காலம்; பொற்காலம்; இலக்கியம், கலை, மற்றும் விஞ்ஞானம்; இந்து சமய மறுமலர்ச்சி; ஹூணர்கள்; மன்னன் ஹர்ஷன்; சாளுக்கியர்; வட இந்தியாவில் குழப்பம்.

### கி. பி. 320 ஆம் ஆண்டு முதல் காலவரன் முறை தெளிவுபெறுதல்

தெளிவற்றதும், கருத்து வேற்றுமைகள் நிறைந்ததுமான அன்னியர் குல வரலாற்றுப் பகுதிகளிலிருந்து, ஒப்பு நோக்கில் புனிதமான சூழ்நிலையாக விளங்குகின்ற குப்தர் கால வரலாற்றிற்குச் செல்வது, வரலாற்றாசிரியனுக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடியதேயாகும். இதைப் போன்ற மன அமைதியையே தெளிவற்ற நந்தர் கால வரலாற்றிலிருந்து, திடமான செய்திகள் நிறைந்த மௌரிய வரலாற்றை ஆராயும்போது அவன் பெறுகிறான். இவ்விரண்டு சந்தர்ப்பங்களிலும், வரலாற்றாசிரியனின் நிலையைச் சாதாரணக் கட்டு மரமொன்றில் அலை நிறைந்த நடுக்கடலில் பிரயாணம் செய்பவன், கொந்தளிப்படங்கிய துறைமுகப் பகுதியை அடையும் போது பெறும் மனவெழுச்சிக்கு ஒப்பிடலாம்

கி.பி. 320ல் தொடங்கும் குப்தராட்சியைத் தோராயமாகக் கி.பி. 300 ஆம் ஆண்டிலிருந்து கி.பி. 647 அல்லது ஏழாவது நூற்றாண்டின் இடைக்காலம் வரையிலும் நீடித்திருந்ததாகக் கொள்ளலாம். இக் குப்தர் காலத்திய காலவரன் முறை முக்கியச் செய்திகளைப் பொறுத்த வரையில் தெளிவாக இருப்பதோடு, பெரும்பாலும் ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதி நீங்கலாகச் செய்திகள் விரிவாகவும், தவறின்றியும் இருக்கின்றன.

எனவே, மூன்றரை நூற்றாண்டுகளுக்கும் அதிகமாக உள்ள வடக்கு மற்றும் மேற்கிந்திய வரலாற்றை எவ்வித தடையுமின்றித் தொடர்ச்சியாக எடுத்தியம்புவது சாத்தியமாகிறது. காலவரன் முறை என்ற அடித்தளம் சற்று அசைந்து கொடுக்கும் போது, வரலாற்றைத் தொகுப்பதில் நமக்கேற்படும் மனக்கிலேசத்திற்கு இங்கு வழியே இல்லை.

### குப்த வமிசத்தினரின் எழுச்சி

கி.மு. மூன்றாவது நூற்றாண்டில் ஏதோ ஒரு காலத்தில் இந்தோ–சித்திய அல்லது குஷானிய சாம்ராச்சியம் வீழ்ந்தது. எக்காரணங்களால், எவ்வாறு இச்சரிவு நிகழ்ந்ததென்பதை நம்

மால் தெளிவாகக் கூற இயலவில்லை. சம காலக் கல்வெட்டுகளோ அல்லது பிற சான்றுகளோ இல்லாமலிருப்பதற்கு அக்காலத்தில் நிலவிய குழப்ப நிலையே சான்ருக உள்ளது. மேலும், நூல்கள் வாயிலாக நாம் பெறும் செய்திகள் மிகக் குழப்பம் விளைவிப்பவையாக இருக்கின்றன. பேரரசின் ஆதிக்கம் தீர்ந்தவுடன் இடைக்காலத்தில் ஏராளமான சிற்றரசுகள் தோன்றியிருக்க வேண்டும். இறுதியாக நாம் கேள்வியுற்ற வைசாலி நகர லிச்சாவிகள், 800 ஆண்டுக் காலம் வாளாவிருந்து மீண்டும் எழுவதைப் பார்க்கிறோம். பண்டைய பேரரசுகளின் தலைநகரமாக விளங்கிய பாடலிபுத்திரத்தை இக்குடியினர் அல்லது தேசத்தினர் கைப்பற்றினரென்றும், பெஷாவரைத் தலைநகரமாகக் கொண்டிருந்த குஷானியரின் அடிமைகளாக அல்லது சிற்றரசர்களாக ஆட்சி செலுத்தினர் என்றும் தெரிய வருகிறது. நாலாவது நூற்ருண்டின் முற்பகுதியில், லிச்சாவி குல இளவரசியொருத்தி சரித்திரப் புகழ் வாய்ந்த சந்திரகுப்தன் என்ற பெயரையுடைய மகத நாட்டு மன்னனொருவனை மணந்தாள். லிச்சாவிகளுடன் கொண்ட இத் திருமணத் தொடர்பு அவனது பலத்தைப் பன்மடங்காகப் பெருக்கியது. எனவே, அயோத்தி, மகதம் மற்றும் கங்கைக் கரையோரமாக அலகபாத் அல்லது பிரயாகை வரையிலும், அவன் தன்னாதிக்கத்தைப் பரப்பினான். மனைவியின் உறவினர்களைத் தான் சார்ந்திருந்ததைச் சந்திரகுப்தன் நன்கு உணர்ந்திருந்தான். அவனது தங்க நாணயங்களில், தன் பெயரையும், அரசி (குமாரதேவி) மற்றும் லிச்சாவி மரபு முழுவதையும் பொறித்திருந்தான்[1]. புதியதொரு குப்த சகாப்தத்தைத் தோற்றுவிப்பதற்குத் தனக்குத் தகுதியிருப்பதாக அவன் எண்ணினான். அச் சகாப்தம் 26 பிப்ரவரி 320 ஆம் ஆண்டில் தொடங்கி மார்ச்சு 13 ஆம் தேதி 321 ஆம் ஆண்டு வரையிலும் நீடித்தது. தொடக்க ஆண்டு அவன் அரசேற்ற நாளாகவோ அல்லது முடிசூட்டிக் கொண்ட நாளாகவோ இருக்கக் கூடும். பல நூற்ருண்டுக் காலம், இந்தியாவின் சில பகுதிகளில் இச் சகாப்தம் வழக்கிலிருந்தது. முதலாம் சந்திரகுப்தன் சின்னாட்களே ஆண்டிருக்க வேண்டும். கி.பி. 330 ஆம் ஆண்டில் அது முடிவடைந்திருக்க வேண்டும். அவனுக்குப் பின் அரசெய்திய அவனது மகன், தன்னை எச்சரிக்கையாக 'லிச்சாவிகளின் மகளின் பிள்ளை' என்றே கூறிக் கொண்டான். தான் பெற்ற அரச பதவிக்குத் தாயைச்

[1] நாணயக் குறிப்புகளுக்கு, இயற்கையான விளக்கம் இதுவென்றே கருதுகிறேன். நாணயங்களைத் தன் தாய் தந்தையரைப் போற்றுகின்ற வகையில் சமுத்திரகுப்தன் வெளியிட்டான் என பிரிட்டிஷ் மியூசியத்தைச் சார்ந்த திரு. ஆலன் அவர்கள் கூறுவர். இக் கருத்தை என்னால் ஏற்க இயலாது.

சேர்ந்தவர்களுக்குத் தான் பட்ட கடனை இச் சூத்திரம் விளக்குவ தாக அமைந்தது




குப்தப் பேரரசு

**சமுத்திரகுப்தன்**

தோராயமாக நாற்பது அல்லது ஐம்பதாண்டு காலம் அரசு செலுத்திய, குப்தர்குல மன்னருள் இரண்டாவதான[1] சமுத்திரகுப்தன், இந்திய வரலாறு கண்டறிந்த சிறப்பும் திறமையும் மிக்க

[1] கச்சா (காச்சா) என்பவன் சில தங்க நாணயங்களை வெளியிட்டான். அவனைச் சமுத்திரகுப்தனிடமிருந்து வேறுபட்டவனாகக் கருதினால், அவனுக்குச் சற்று முன்பு அல்லது பின்பு, சில மாதங்களுக்கு அவன் அரசாண்டிருக்கவேண்டும். இரு பெயர்களும் ஒருவரையே குறிப்பதாகப் பலர் ஒப்புக்கொள்ளுகின்றனர்.

மன்னருள் ஒருவனாக விளங்குகிறான். இந்திய நாட்டின் தலை சிறந்த பேரரசாகத் தன்னை உயர்த்திக் கொள்ளும் அரிய செயலைத் துணிகரமாக மேற்கொண்டு வெற்றியுமடைந்தான். கங்கைச் சமவெளியில் அரசாண்டு வந்த சிற்றரசர்கள் சிலர் அவனது தலைமையை ஏற்க மறுத்ததால், அவர்களை அடக்கு வதில் சின்னாட்களைக் கழித்தான். பிறகு, காட்டு வாசிகளான சில மூர்க்கரை வென்று அடிபணிய வைத்தான். இறுதியாகப் பெரும் படையொன்றுடன் தக்காணத்தின் வழியாகச் சென்று தீபகற்ப இந்தியாவை அடைந்து, சென்னைக் கருகிலுள்ள காஞ்சியை ஆண்டு வந்த பல்லவருடன் (காஞ்சீவரம்) போரிட்டான். தென் இந்தியாவில், தான் வென்ற பகுதிகளை அவன் நிலையாக ஆட்சி செய்யவில்லை. தான் வென்ற அரசர்களிடமிருந்து, ஏரா ளமான பொருளைத் திறையாகப் பெற்று அப் பொற்குவியலைத் தனது தலைநகரத்திற்கு எடுத்துச் செல்வதுடன் அவன் மன நிறைவு பெற்றான். பன்னாட்களாகத் தான் கொண்டிருந்த விருப் பத்தை நிறைவேற்றுகின்ற வகையில், அசுவமேதம் அல்லது குதிரை வேள்வி யொன்றையும் அவன் செய்து முடித்தான். இந் நிகழ்ச்சியைக் கொண்டாடுகின்ற வகையில், சில தங்க நாணயங் களையும் வெளியிட்டான். பேரரசன் எனத் தன்னை உலகம் ஒப் புக் கொண்டுவிட்டது என்பதைப் பறைசாற்றுவதற்கு, இக் கொண்டாட்டம் நடைபெற்றது.

**சமுத்திரகுப்தனின் பேரரசு**

சமுத்திரகுப்தனின் வெற்றிமிக்க வாழ்க்கையின் இறுதிக் காலத்தில், அசோகனாட்சிக்குப் பின் இந்திய நாட்டில் மிகப் பரந்து விளங்கிய இராச்சியமாக, வட திக்கில் காஷ்மீரம் நீங்க லாக இமயமலை வரையிலும் பரவியிருந்தது. பிரம்மபுத்திர ஆற்றைக் கிழக்கெல்லையாகக் கூறலாகும். நர்மதை ஆறு தெற் கெல்லையாக அமைந்திருந்தது. யமுனை, சம்பல் ஆறுகள் பேரர சின் நேரடி ஆட்சியின் கீழ் இருந்த மேற்கெல்லையைக் குறித்தன. யௌதேயர், மாளவர் மற்றும் பல குடியினர் ஆண்டு வந்த பஞ் சாப் மற்றும் மாளவப் பகுதியிலுள்ள சிற்றரசுகள், பேரரசின் பாதுகாப்பில் தன்னாட்சி பெற்ற நாடுகளாக விளங்கின.

சமதாதம் அல்லது பிரமபுத்ர ஆற்றின் வண்டல் பகுதி, தவகம்-கிழக்கு வங்காளமாக இருக்கக் கூடும்; தோராயமாக அஸ்ஸாம் பகுதியென்று கருதக் கூடிய காமரூபம், குமோன், கர்ஹ்வால் மற்றும் நேபாளப் பகுதிகளை உள்ளடக்கிய கர்த்ரி புரம் ஆகிய ஐந்து எல்லைப்புற நாடுகளின் அரசர்களும் பேரர சிற்கு வணக்கமும் திறையும் செலுத்தி வந்தனர்.

### அன்னிய இராச்சியங்களுடன் தொடர்பு

வடமேற்கெல்லையில் அரசு செலுத்தி வந்த குஷானிய அரசர்கள் தம்மை மிகவும் கௌரவத்துடன் ஏற்றனர் எனச் சமுத்ரகுப்தர் கூறுவர். அவர்கள் யாவரையும் அவர் 'சகரின் தலைவர்கள்' என்று குறிப்பர். அவ்வாறே சிங்களத்தைச் சேர்ந்தவரும்[1] நடந்து கொண்டனர் என்றும் கூறுகிறார். இதனால் சமுத்திரகுப்தரின் பெயர் இந்திய நாடெங்கிலும் கௌரவமாக ஏற்கப்பட்டதென்பது தெளிவாக விளங்குகிறது. சிந்து நதி தீரத்திலும் அதற்கப்பாலும் அரசு செலுத்தி வந்த குஷானியரைச் சட்லஜ் ஆற்றைக் கடந்து எதிர்த்துப் போரிடுவதற்கு அவர் விரும்பவில்லை. கி.பி. 360 ஆம் ஆண்டில் இலங்கையுடன் நட்பிருந்ததென்பதைச் சீன வரலாற்றாசிரியன் ஒருவனும் கூறுகிறான். சிங்கள மன்னன் மேகவர்மன் (சி 352 – 79) பல வெகுமதிகளுடன் தூதுவரை அனுப்பி, போத்கயாவிலுள்ள புனித மரத்திற்கு வடக்கில், யாத்திரிகர்களின் வசதிக்காக அருமையான மடாலயம் ஒன்று எழுப்புவதற்கு அனுமதி பெற்றான் என்று அச் சீன ஆசிரியன் கூறுகின்றான்.

### குணாதிசயங்கள்

மிக வலிமையுள்ளவனாகவும், பல துறைகளில் புலமை பெற்றவனாகவும், சமுத்திரகுப்தன் விளங்கினான். சமுத்திரகுப்தன் வெளியிட்ட அரிய நாணயங்கள் அல்லதுமெடல்கள் சில அரசனைப் படுக்கையொன்றின் மீது கையில் வீணையேந்தி அமர்ந்திருப்பது போன்று சித்திரிக்கின்றன. இசைக் கலையிலும், பாக்கள் தொகுப்பதிலும் அவனுக்குள்ள திறமையை இவை விளக்குகின்றன. இதனுடன் தொடர்புள்ள கவிதை புனைகின்ற துறையிலும் அவன் வல்லவனாக இருந்தான். கவிதை புனைவதையே, தொழிலாகக்கொண்ட ஒரு கவிஞனைப்போல, சிறந்த பல கவிதைகளை அவனியற்றினான் என்றும் கூறப்படுகிறது.

1 புகழ்பெற்ற கல்வெட்டில் 'மரியாதையுடன் கூடிய சேவையைப்' பற்றி 23ஆம் வரியில் கூறப்படுவது வருமாறு: 'தைவபுத்ரஷாஹி-ஷஹனுஷாஹி - சாக - முருந்தர், சிங்களத்தவர், மற்றும் பலர்' — தற்கால ஆராய்ச்சியின் உதவிகொண்டு இதற்கு விளக்கம் கூறவேண்டும் மரியாதைகளைச் சிங்கள மன்னன் மேகவர்ணன் மற்றும் 'சாகத்தலைவர் அல்லது சாக மருந்தர்' என்ற வடமேற்கு எல்லைவாழ் அரசர்களும் செலுத்தினர் எனப் பொருள் கொள்ளவேண்டும். அவர்கள் தெய்வ புத்திரர் (=சீன மொழியில்: தேவனின் புதல்வன்) என்ற பிருதுகளைச் சூடிக்கொண்டனர். 'ஷாஹி' என்பதற்கு அரசன் என்று பொருள். 'ஷஹனுஷாஹி' என்பதற்கு மன்னருக்குமன்னன்' என்று பொருள். 'ஷஹனு' ஆறும் வேற்றுமைப் பன்மை. புராணங்கள் 'சகரை' முருந்தரிடமிருந்து வேறுபட்டவராகக் கருதுகின்றன. இச் சொல்லுக்கு, 'தலைவன்=சீனமொழியில் வாங்' என்பதே பொருள். சகருள் ஒரு பகுதியினரைக் குறிப்பதற்கு முருந்தர் என்ற பெயர் பயன்படுத்தப்பட்டது.

புலவர்களுடன் உறவாடுவது அவனுக்கு மகிழ்ச்சியூட்டுவதாக இருந்தது. புனித ஏடுகளை அழிந்துவிடாது பாதுகாப்பதற்கென அவன் புலவர்களை அமர்த்தினான். விஷ்ணுவிடம் அதிக பக்தி கொண்ட இந்து சமயப் பிராமணனாக அவன் விளங்கினான். அவன் வீட்டைச் சார்ந்த பிறரும் அவ்வாறே இருந்தனர்.

சமுத்திரகுப்தன் மரணமடைந்த தெய்தியை உறுதியாக எடுத்துரைக்கக் கூடவில்லை. ஆனால், அவன் மிகவும் மூப்பெய்திய பின்னரே மரணமடைந்திருக்கவேண்டுமென்றும், அதற்குள்ளாக எவ்விதத் தடையுமற்றி வளமிக்க சாம்ராச்சியத்தைத் அரை நூற்றாண்டுக் காலம் ஆட்சிபுரிந்தான் என்றும் கூறலாம்.

**இரண்டாம் சந்திரகுப்தன்**

கி. பி. 380ஆம் ஆண்டு அல்லது அதற்கு ஐந்தாண்டுகளுக்கு முன், அரசு செலுத்துவதற்கு மிகவும் தகுதியுடையவன் என்று தேர்ந்தெடுக்கப்பட்ட அவனது மகன் அரசு கட்டிலேறினான். பாட்டனின் பெயரைத்தாங்கிய இவனை இரண்டாம்சந்திரகுப்தன் என்றே வரலாறு அழைக்கிறது. சின்னாட்களுக்குப்பின் இவன் விக்ரமாதித்யன் (சக்தியின் ஒளி) என்ற பிருதையும் சூட்டிக் கொண்டான். சகரை முறியடித்துக் கி. மு. 58-57-ல், விக்ரம சகாப்தத்தைத் தொடங்கிய, உஜ்ஜயினி நாட்டு மன்னனையே இப்பெயரிட்டு மரபுச் செய்திகள் வர்ணிக்கின்றன. இம்மரபுச் செய்தி கல்வெட்டுகள், நாணயங்கள், மற்றும், நினைவுச் சின்னங்களின் துணையுடன் உறுதி செய்யப்படவில்லையெனினும், அத்தகைய பெயர் கொண்ட மன்னனொருவன் இருந்திருக்கக்கூடும். 'ராஜாபிக்ரமனை' ப்பற்றிய பிரசித்திபெற்ற நாடோடிக் கதைகள் இரண்டாம் சந்திரகுப்தனுடன்கூடிய அரைகுறையான நினைவுகளுடன் கலந்து வழங்கப்படுகின்றன. இதுகாறும் சகமன்னர்களால் ஆளப்பட்டுவந்த மாளவம், குஜரத், சௌராஷ்டிரம் அல்லது கத்தியவார் ஆகிய பகுதிகளை இரண்டாம் சந்திரகுப்தன் வென்றான். இது அவனது போர்த் திறமையை நன்கு விளக்குகிறது. தோல்வியுற்ற சகரின் தலைவர்கள், தங்களைச் 'சத்ரபர்' என்றும் 'மகாசத்ரபர்' என்றும் கூறிக்கொண்டனர். இவர்கள் குஷானியருக்கு அடிபணிந்திருந்தனர். கி. பி. 388-க்கும் 461-க்கும் இடைப்பட்ட காலத்தில் சந்திரகுப்தன் படையெடுத்திருக்க வேண்டும். சராசரியாகக் கணக்கிட்டு 395ஆம் ஆண்டில் போர்கள் நிகழ்ந்தனவெனக் கொள்ளலாம். போராட்டம் பலகாலம் நீடித்திருக்கவேண்டும். சமுத்ரகுப்தனின் பாதுகாப்பிலிருந்தனவென்றாலும் அவனது சாம்ராச்சிய எல்லைக்கப்பாலிருந்த மாளவரையும் மற்றும் பல குடியினரையும் சந்திரகுப்தன் வெற்றிகொள்ள

நேரிட்டது. சத்ரபரில் இறுதியான ருத்ரசிம்மன் கொல்லப்பட்டான். 'மாற்றானின் மனைவியொருத்தியைக் காதலிக்கும் போது, அக் காதலியின் உடையணிந்திருந்த சந்திரகுப்தனுல்' சகரின் மன்னன் துண்டுதுண்டாக வெட்டியெறியப்பட்டான் என மிகவும் இழிவான மரபுச் செய்தியொன்றை ஏழாம் நூற்றாண்டு ஆசிரியர் ஒருவர் குறித்துள்ளார். இந்நிகழ்ச்சி வலிவற்றவனும் சந்திரகுப்தனின் மூத்த சகோதரனுமான இராமகுப்தனின் காலத்தில் நடந்ததென, 'தேவி சந்திரகுப்தம்' என்ற நூலொன்றின் பகுதிவாயிலாக அறிகிறோம். சந்திரகுப்தன், இராமகுப்தனைக் கொன்று அவனது அரசியை மணந்தான் என்றும் அந்நூல் மேலும் கூறுகிறது. அனுபவமிக்க ஆராய்ச்சியாளர் இக்கதையை ஏற்பதில்லை என்றாலும் இதில் ஒரு துளி உண்மை இருக்கக்கூடுமென்று நான் கருதுகிறேன்.

### மேலை நாடுகளுடன் வாணிபம்: உஜ்ஜயினி

செல்வம் கொழித்தும், வளமிகுந்தும் விளங்கிய சத்ரபரின் இராச்சியங்களையும் மாகாணங்களையும் இணைத்துக்கொண்ட வடவிந்தியப் பேரரசு, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் செல்வத்திலும் செல்வாக்கிலும் மிக உயர்ந்தோங்கி வளர்ந்திருந்தது. மேலைக் கடற்கரையிலுள்ள பல துறைமுகங்கள் இப்போது குப்தராட்சியில் அடங்கியிருந்தன. இத்துறைமுகங்களில் வசூலிக்கப்பெற்ற சுங்க வரிகள், குப்தருக்குப் போற்றுதற்குரிய வருவாயைத் தேடித்தரும் ஊற்றென விளங்கியிருக்கவேண்டும். பண்டைய நாட்கள் முதலாகவே பரோச் (ப்ரோச்), சொபாரா, காம்பே, மற்றும் ஏராளமான துறைமுகங்கள், மேலைநாடுகளுடன் கடல் மார்க்கமாகச் செழிப்பான வாணிபம் நடத்தி வந்தன. பல பெருஞ்சாலைகள் ஒன்று கூடுமிடத்தில் ஓர் உள்நாட்டுக் கேந்திர நகரமாக உஜ்ஜயினி விளங்கியது. மிகப் பழங்காலந்தொட்டு இன்று வரையிலும் தனது பண்டை நாட்பெயரையே தாங்கி நிற்கும் இந்நகரம், மத்திய பாரதத்தின் வளமிக்க நகரமாக விளங்கி வருகிறது. இந்துசமயம் சார்ந்த ஏழு புனித நகரங்களில் ஒன்றாகப் புனிதத் தன்மையில் பெனாரசிற்கு அடுத்தபடியாக இந்நகரம் இன்றும் கருதப்பட்டு வருகிறது. பண்டைய நாட்களில், தீர்க்க ரேகையின் இறுதிமுனையாக இதைக் கருதிப் பிற தீர்க்க ரேகைகளைக் கணக்கிட்டு வந்தனர். வாணிபப் பெருக்கத்திற்கு உகந்த இடத்தில் அமைந்திருந்ததால் அதன் செல்வாக்கும், புனிதத்தன்மையும் வளர்ந்தனவென்றே கூற வேண்டும். அரசு செலுத்திய ஒவ்வொரு மன்னனும் இந்நகரத்தைப் பேணி வளர்த்ததுடன் அவ்வப்போது சமயப்பணிகளுக்கென தேவையான பொருளையும் வழங்கிவந்தான்.

### மகாராஷ்டிர மகாசத்ரபர்கள்

மகாசத்ரபர்கள் என்று பெயர் சூடிய, சாக மன்னருள் இரு கிளைகள் மேற்கிந்தியாவில் ஆண்டு வந்தன. அவ்விரு கிளைகளுக்குள்ளும் எவ்வித உறவுமில்லை. 'மேற்குத் திசையிலுள்ள சத்ரபர்' என்ற பொதுவான பெயரில் இவ்விருகிளையினரையும் புகுத்தி வீணைக் குழப்பமடையக் கூடாது.

இதில் காலத்தால் முந்திய குலம் மகாராஷ்டிரம் அல்லது மேற்குத் தொடர்ச்சி மலைத் தொடர்ப் பகுதியில் ஆண்டுவந்தது. நாசிக் இவர்களின் தலைநகரமாக விளங்கியது. இது எப்போது உருவாயிற்றென்பதையும் நம்மால் அறியக்கூடவில்லை. இதுகாறும் 'பூமுகன்', 'நாகபாணன்' என்ற இரு இளவல்களின் பெயர்களையே நம்மால் அறியமுடிகிறது. பிற மன்னர்களும் இருந்திருக்கக்கூடும். இவர்களைச் சாதவாகனர் அல்லது ஆந்திரரைப் பற்றி ஆராயும்போது நாம் முன்னரே சந்தித்திருக்கிறோம்.

### உஜ்ஜயினியின் மகாசத்திரபர்கள்

அதே நேரத்தில் அல்லது அதற்குச் சின்னாட்களுக்கு முன்பு, 'சாஸ்தன'என்னுமொரு தலைவன், உஜ்ஜயினியைத்தலைநகரமாகக் கொண்டு, மாளவத்தின் மகாசத்ரபனைப் பதவியேற்றான். இரண்டாம் காட்பிசசின் ஆதிக்கத்தை ஏற்று இவன் ஆண்டிருக்க கூடும். அவனது ஆட்சி நெடுநாட்களாக நீடிக்கவில்லை; அவனைத் தொடர்ந்து அவனது மகனும் அரசேற்கவில்லை. குழப்பமிக்க நாட்களாதலால், இவன் ஒருவேளை போரில் கொல்லப்பட்டிருக்கக்கூடும். கி. பி. 130ஆம் ஆண்டில், ருத்ரதாமன் என்ற பெயருடைய சாஸ்தனவின் பெயரன் அவனது பாட்டனுடன் கூட்டாட்சி நடத்தினன். நாம் கடைப்பிடித்துவரும் காலவரன் முறை சரியானதென்றால், கனிஷ்கன் அரசாண்டு வந்தபோது, இவன் மீண்டும் மஹாசத்ர பதவி எய்தியிருக்கவேண்டுமென்பதோடு, நர்மதை ஆற்றிற்கு வடக்கிலுள்ள மகாணங்களை உள்ளடக்கிய மேற்கிந்தியாவை இவன் ஆண்டிருக்க வேண்டும். இப்பகுதிகளைச் சின்னாட்களுக்கு முன்பாக மகாராட்டிர சத்ரபனிடமிருந்து சாதவாக மன்னன் கைப்பற்றியிருந்தான் என்பது நினைவிலிருக்கவேண்டும். சாஸ்தனவின் வழித்தோன்றல்கள் ஹுவிஷ்கனின் சிற்றரசர்களாக வாழ்ந்திருக்க வேண்டும். குஷானியப் பேரரசு சீர்குலைந்தவுடன், மேற்கில் அரசாண்டு வந்த இச்சிற்றரசர்கள் தங்களை மகாசத்திரபர் எனக் கூறிக்கொண்டு சின்னாட்களுக்கு அரசு செலுத்தியிருக்க வேண்டும். இவ்வரிசையில், இருபத்து ஒன்றாவது சத்ரபனை

நான்காவது நூற்ருண்டின் இறுதியில் இரண்டாம் சந்திரகுப்தன் கொன்று, அவனது இராச்சியத்தையும் நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளவாறு, குப்தப் பேரரசுடன் இணைத்தான். உஜ்ஜயினியின் மகாசத்திரபர்களின் பெயர்களையும், அவர்களது ஆட்சி காலங்களையும் நாணயங்களை ஆராய்வதின்மூலம் நன்கு அறியமுடிகிறது. ஆனால், அவரது வரலாற்றுக் குறிப்புகள் நமக்கு அதிகமாகக் கிடைப்பதில்லை.[1]

## இரண்டாம் சந்திரகுப்தனின் குணதிசயங்கள்

பிற்காலங்களில் அக்பரையும் அவரது வழித்தோன்றல்களையும் போல, அக்குலத்தைத் தோற்றுவித்தவர் நீங்கலாகப் பிற முக்கிய குப்த மன்னர்கள், நெடுங்காலம் அரசு செலுத்துகின்ற வாய்ப்பைப் பெற்றிருந்தனர். குறைந்த அளவில் கி. பி. 413 ஆம் ஆண்டுவரையிலும், சுமார் நாற்பதாண்டுகளுக்குச் சந்திரகுப்த விக்ரமாதித்யன் அரசு செலுத்திவந்தான். அவனது வாழ்க்கையைப் பற்றி நமக்குக் கிடைக்கும் குறிப்புகளிலிருந்து, பரந்த சாம்ராச்சியமொன்றை ஆள்வதற்கும், நிலைபெறச் செய்வதற்கும் தேவையான வலிமையும் உழைப்பும் அவனிடமிருந்தன என நாம் அறியலாகும். நெடிய, ஒலி மிக்க பிருதுகளைச் சூட்டிக் கொள்வதில் அவனுக்கு விருப்பமதிகம். அவனது போர்த்திறமையை அவை விளக்கின. அக்கால மன்னர்களின் சாதாரண கேளிக்கையாக விளங்கிய சிங்கத்துடன் போராடும் பழக்கம் அவனுக்குண்டு; அவ்வாறே அவன் வெளியிட்ட நாணயங்களிலும் உருவங்களைப் பொறித்துள்ளான். 1824 ஆம் ஆண்டில் பிஷப் ஹீபர் வாழ்ந்த காலம் வரையிலும். உத்திரப்பிரதேசத்தின் வடபகுதியில் சிங்கங்கள் ஏராளமாக இருந்தன. அவை, தற்போது சௌராஷ்டிரப்பகுதியில் மட்டிலுமே காணப்படுகின்றன. இவ்வகையில் வட இந்தியாவில் இறுதியானது 1872 ஆம் ஆண்டில் குவாலியர் மாகாணத்தில் சுட்டு வீழ்த்தப்பட்டது.

## சீனயாத்திரிகன் — பாஹியான்

குப்தர் வரலாற்றின் காலவரன் முறை என்ற இன்றியமையாத எலும்புக்கூடு, செய்திக் குறிப்புகளுடன் கூடிய பல கல்வெட்டுகள், மற்றும் நாணயங்களுடைய உதவியால் உருவாக்கப்படுகிறது. அன்னிய நாட்டைச்சார்ந்த யாத்திரிகர்கள் விடுத்துச் சென்றுள்ள குறிப்புகள் எலும்புக்கூட்டிற்குத் தசை

1 நாகபாணனின் ஆட்சி காலத்தைக் குறித்த கருத்து வேற்றுமைகள் ஏராளமாகக் காணப்படுகின்றன; அப்பிரச்சினைக்கு உரிய விடை இன்றும் நமக்குக் கிடைக்கவில்லை.

அளித்து உதவுகின்றன. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தி லிருந்து, பௌத்த சமயம் பிறந்த புனித நாடு என்ற முறையில் ஏராளமான சீன யாத்திரிகர்கள் இந்திய நாட்டிற்கு விஜயம் செய் தனர். இவர்களுள் பாஹியான் அல்லது பாஹ்சியான் கி.பி. 399-லிருந்து 444ஆம் ஆண்டுவரையிலும் இந்நாட்டில் சுற்றுப்பிரயாணம் மேற்கொண்டான். யாத்திரிகர்களுள், தன் பிரயாணத்தைப் பற்றிய குறிப்புகள் விடுத்துச் சென்றிருப்பவருள் இவனே முதல் வனாவான் 'வினயபிடகம்' அல்லது மடாலயங்களில் அனுசரிக்க வேண்டிய புனித விதிகளடங்கிய அசல் நூல்களைத் தேடிக் கடு மையான இப் பிரயாணத்தை அவன் மேற்கொண்டான். துணிவு மிக்க இப் பிரயாணி, மேற்குச் சீனாவிலிருந்து புறப்பட்டு தக்ள மகான் (கோபி) பாலைவனத்தின் தெற்காகச் சென்று, ஷா-கௌ லாப்-நார் ஆகியவைகளின் வழியாகக்கோட்டானைச் சென்றடைந் தான். அங்கு வாழ்ந்திருந்த மக்கள் பௌத்த சமயத்தை, அதி லும் குறிப்பாக மகாயானப்பிரிவைச் சார்ந்திருந்தனர்.[1] இதற் குப்பின், பாமீர் மலைத்தொடர்களைச் சொல்ல வொண்ணாச் சிர மத்துடன் கடந்து உதயணம் அல்லது சுவாட் (ஸ்வாட்)டிற்குச் சென்று அவ்வாறே தட்சசீலம் போன்ற பல இடங்களையும் கடந்து, புருஷபுரம் அல்லது பெஷாவரைச் சென்றடைந்தான். மூன்று ஆண்டுகள் பாடலிபுத்ரத்திலும் இரண்டு ஆண்டுகள் தாம் ரலிப்தியிலும் கழித்தான். 'தாம்ரலிப்தி' என்பது, வங்காளத்தில் மிட்னாப்பூர் மாவட்டத்தில் தற்போது 'தாம்லுக்' என்ற பெயரில் வழங்கிவருகிறது. அக்காலங்களில், 'தாம்ரலிப்தி' ஒரு முக்கியத் துறைமுகமாக விளங்கியது. ஆனால், தற்போதுள்ள 'தாம்லுக்' கடற்கரையிலிருந்து குறைந்தது அறுபது மைல்கள் தொலைவி லுள்ளது. வீடுதிரும்பும்போது, பாஹியான், தாம்ரலிப்தி-த் துறைமுகத்திலிருந்து புறப்பட்டு, வழியில் இலங்கை, ஜாவா, ஆகிய நாடுகளுக்குப் விஜயம் செய்து பின் கடல் மார்க்கமாகச் சீனத்தைச் சென்றடைந்தான். கி. பி. 401 வரையுள்ள இடைக் காலத்தை அவன் இந்திய நாட்டில் கழித்தான். இக் காலமுழு வதும் இரண்டாம் சந்திரகுப்தனின் ஆட்சிக் காலத்திலேயே அடங்கியுள்ளதென்பது கவனிக்கத் தகுந்தது. சுமார் ஆறு ஆண் டுக்காலத்தை, அம்மன்னனின் பேரரசு எல்லைக்குள் பாஹியான் கழித்தான்.

ஆர்வமிக்க யாத்திரிகன்; சமயப்பணியையே தன் வாழ் நாளின் குறிக்கோளாகக் கொண்டிருந்ததால், அரசு செலுத்தி

1 மொழிபெயர்ப்பாளர் எவரும் லாப்-நாரிலிருந்து கோட்டானுக்கு யாத்திரிகன் சென்ற வழியைச்சரியாகக் குறிப்பிடவில்லை. இன்றும் அது தெளிவில்லாமலே இருந்துவருகிறது. ஆனால் உறுதியாக அவன் லாப்-நாரைக் கடந்திருக்கவேண்டும்.

வந்த மன்னனின் பெயரைக்கூட அவன் குறிப்பதில்லை. மக்களின் வாழ்க்கையைக் குறித்த சில செய்திகளைக் கூட அவன் சாதாரணமாகத் தற்செயலாகவே எடுத்துரைக்கின்றான். அவனது கருத்துகள் எத்துணை நம்பகமுள்ளவை என்பதை இவை உணர்த்துகின்றன. நவநாகரிக மோகங்கொண்டுள்ள நாம், யாத்திரிகன் உலகியல் செய்திகளை அதிகமாகக் கூறியிருந்தால் மிகவும் மகிழ்ந்திருப்போம். அவனது சிறுகுறிப்புகளிலிருந்து இரண்டாம் சந்திரகுப்தனின் ஆட்சியில், கங்கைச் சமவெளியிலுள்ள மாகாணங்களின் நிலையைப் பற்றிய விரிவான விளக்கம் நமக்குக் கிடைக்கிறது. இதற்கு நாம் நன்றி செலுத்தவேண்டும். கங்கைச் சமவெளியை அவன் 'மத்திய-இந்தியா' அல்லது 'மத்திய அரசு' என்று குறிக்கிறான். பீஹார், உத்திரப் பிரதேசம், மாளவம், ராஜஸ்தானத்தின் பகுதி யொன்று ஆகிய தற்கால நிலப்பகுதிகள் அம்மத்திய அரசில் அடங்கியிருந்தன வென்று கூறலாம். மத்திய - இந்தியப்பகுதி முழுவதும் குப்தப் பேரரசின் ஆட்சியில் அடங்கியிருந்தது.

### நாட்டின் நிலை

மகதம் அல்லது தெற்கு பீஹாரில் பெருநகரங்களிருந்தன. சீரும் சிறப்பும் பெற்று மக்கள் செல்வம் படைத்திருந்தனர். தருமஸ்தாபனங்கள் ஏராளமாக இருந்தன. பிரயாணிகளுக்கென, நெடுஞ்சாலைகளில் விடுதிகள் அமைக்கப்பெற்றிருந்தன. தர்ம சிந்தனையும் கல்வியறிவும் பெற்ற மக்கள் வாழ்ந்திருந்த தலைநகரில், சிறந்த இலவச வைத்தியசாலை யொன்றிருந்தது. பாடலிபுத்ரம், சிறப்புக்குன்றாது தழைத்தோங்கியிருந்தது. அங்கு இரு மடாலயங்கள் இருந்தமையால் பாஹியானது கருத்தை அந்நகரம் அதிகமாகக் கவர்ந்தது. அவைகளில் ஒன்று மகாயானப்பிரிவையும் மற்றொன்று ஹீனயானப்பிரிவையும் சார்ந்திருந்தது. அங்கு வசித்து வந்த 600 அல்லது 700-க்கும் மேற்பட்ட பௌத்த பிக்ஷுகள், கல்வியில் சிறந்து விளங்கியதால், பல திசைகளிலிருந்து, அவரது உரைகளைக் கேட்பதற்கென மாணவர்கள் குழுமியிருந்தனர். பண்டைய நாட்களிலிருந்து பேரரசின் தலைநகரமாக விளங்கிய பாடலிபுத்ரத்தில், வடமொழியையும் பௌத்த சமயப்புனித நூல்களையும் கற்பதில், மூன்று ஆண்டுகளைப் பாஹியான் மனநிறைவுடன் கழித்தான். யாத்திரிகன் விஜயம் செய்த காலத்திலும், நகரின் மத்தியில் அசோகனால் எழுப்பப்பெற்ற மாளிகையும் விசாலமான கூடங்களும் அழியாதிருந்தன. அவைகள் பாஹியானின் பெருமதிப்பைப்பெற்றன. சிற்பங்களையும் சிங்கார வேலைப் பாடுகளையும் கொண்ட மிகப்பெரிய கல்மாளிகை, அச்சீனயாத்திரிகனுக்குப் பூதகணங்களின் கைத்திறமையாகக்காட்சி

யளித்தது. இது மனித முயற்சிக்கு அப்பாற்பட்டதென அவன் கருதினன். தற்போதுள்ள நகரத்தின் தெற்கிலுள்ள கும்ரஹார் கிராமத்திலேயே இம் மாளிகை நிறுவப்பெற்றிருக்க வேண்டுமென நம்பப்படுகிறது.

சமுத்ரகுப்தன் காலத்தில், அரச குடும்பத்தினரின் முக்கிய வாசஸ்தலமாக பாடலிபுத்ரம் விளங்கியிருக்க வேண்டும். அவனது சந்ததியார்கள், அரசிற்கு உகந்த இருப்பிடமாக அயோத்தியைத் தேர்ந்தெடுத்திருக்க வேண்டுமென்பதற்கான சான்றுகள் தென்படுகின்றன.

சிந்துவிலிருந்து, மதுராவிற்கு யமுனை ஆற்றின் வாயிலாகச் சுமார் 500 மைல்களுக்கும் மேற்பட்ட பிரயாணத்தின் போது வழியில் பல பௌத்த மடாலயங்களைக் கண்டான். ஆயிரக்கணக்கான பிட்சுகள் அம் மடாலயங்களில் வாழ்ந்து வந்தனர். மதுராவில் மட்டிலும் 3000 பிட்சுகளைக் கொண்ட இருபது நிறுவனங்கள் இருந்தன. யமுனைக்கரையோரமாகப் பௌத்த சமயம் மிகவும் தழைத்தோங்கியிருக்க வேண்டுமென பாஹியான் கருதினன்.

### ஆட்சி முறை

கால நிலை அவனுக்கு மிகவும் ஒத்திருந்த தோடு, அன்பு கலந்த ஆட்சி முறையையும் அவன் அனுபவித்தான். தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொள்ளவேண்டும், அல்லது அனுமதிச் சீட்டுப்பெற வேண்டுமென்ற வலுக்கட்டாய மின்றித் தங்களிச்சைப்படி, பிரயாணம் செய்வதற்கு மக்கள் உரிமை பெற்றிருந்தனர், பெரும்பாலும் குற்றங்களுக்குத் தண்டனையாக அபராதங்களே விதிக்கப்பட்டன. கொலைத்தண்டனை விதிப்பது வழக்கிலிருந்ததாகத் தெரியவில்லை. கொள்ளையடிப்பதையே தொழிலாகக் கொண்டிருப்பவர்கள் அல்லது தீவிரப் புரட்சிக்காரர்களுக்கு மட்டிலும், கைகால் முதலிய அங்கங்களைத் துண்டிக்கும் தீர்ப்பு வழங்கப்பட்டது. அத்தகைய குற்றமிழைப்பவரின் வலக்கையைத் துண்டிப்பதே பெரிதும் வழக்கமாக இருந்தது. அரசனுக்குரிய நிலங்களிலிருந்து தேவையான வருவாய் கிடைத்தது. தற்கால வழக்கில் இதை 'நிலவரி' என்று குறிப்பிடலாம். அரசனின் மெய்க்காவலருக்கும் பிற அலுவலருக்கும் ஒழுங்காக ஊதியமளிக்கப்பட்டது.

### மக்களின் பழக்க வழக்கங்கள்

வாழ்க்கைக்குப் புத்த சமயம் வகுத்த அறநெறி பொதுவில் கடைப்பிடிக்கப் பெற்றது. 'நாடு முழுவதிலும், உயிரினங்களுக்கு

எவரும் தீங்கிழைப்பதில்லை; மது அருந்துவதில்லை, ஈருள்ளி, வெங்காயம் ஆகியவைகளை உண்பதில்லை; பன்றிகளையோ, கோழிகளையோ வளர்ப்பதில்லை. ஆடு மாடுகள், வியாபாரப் பொருள்களாக இல்லை. சந்தை கூடுமிடங்களில் கசாப்புக் கடைகளோ அல்லது மதுவகைகளைக் காய்ச்சுகின்ற இடங்களோ இல்லை' என்று நமக்கு அறிவிக்கப்படுகிறது. புனித வாழ்க்கைக்குரிய விதிகளைக் கடைப்பிடிக்காத சண்டாளர் அல்லது தாழ்ந்த வகுப்பினர், தனியாக வசிக்க வேண்டியிருந்தது. ஒரு நகரம் அல்லது கடைவீதியினுள். பிரவேசிக்கும் போது தங்கள் வருகையைப் பிறர் உணரும் வகையில், மரக்கட்டையொன்றை அவர்கள் தரையில் தட்டி வந்தனர். இவ்வொலியைக் கேட்டதும், அசுத்தத்தினால் பீடிக்கப்படாதவாறு பிறர் விலகிக் கொள்ளுவர்.

மௌரியராட்சிக் காலத்திற்குப் பின், மக்களின் பழக்கவழக்கங்களும், அரசினரின் குறிக்கோள்களிலும், பல மாறுதல் ஏற்பட்டிருந்தனவென்பது இக்குறிப்புகளிலிருந்து நன்கு விளங்கும். தட்சசீல மக்கள் கொழுத்த மிருகங்களை உணவிற்கெனக் கொல்லப்படுவதற்காக அலெக்சாந்தருக்கு வழங்கிய போது எவ்வித அருவருப்பும் கொள்ளவில்லை. அசோகனும் கூட ஆடுகள் வெட்டப்படுவதைத் தடை செய்யவில்லை. மதுபான விற்பனை அரசினருக்கு வருமானம் தேடித்தரும் நல்லதொரு சாதனமென அர்த்த சாத்திரம் கருதியதுடன் பொது விற்பனை மண்டிகளை, மக்களின் கவனத்தை இழுக்கின்ற வகையில் அமைக்க வேண்டுமென்ற எண்ணத்தையும் வெளியிட்டது. பாஹியான் தன் குறிப்புகளை மிகவும் சுருக்கமாக எடுத்துரைக்கிறார் என்பதுடன், அவருக்கு, அதற்குரிய யோக்கியதாம்சங்கள் இல்லையென்றும் கூறலாம்: பலியிடுகின்ற வழக்கத்தை இந்து பிராமணர்கள் பலர் மேற்கொண்டிருக்க வேண்டும். கி.பி. 400-ல் நாடெங்கிலும், 'தாழ்ந்த வகுப்பினர் நீங்கலாகப் பிறர் உயிரினங்களைக் கொல்வதில்லை போதை தரும் பானங்களை அருந்துவதில்லை அல்லது வெங்காயம், உள்ளி போன்றவைகளைப் புசிப்பதில்லை என்னும் கூற்றை அதிகமாக நப்புவதற்கில்லை[1]. அவன் வசித்து வந்தபோது 'மத்திய இந்தியாவில்' அகிம்சைக் கொள்கை மிக அதிகமாகக் கடைபிடிக்கப்பட்டு வந்தது என்ற பாஹியானின் கூற்றை நாம் ஏற்கலாகும். இன்று நடைமுறையிலிருப்பதைவிட, வழக்கொழிந்து வந்த பௌத்த சமயம், அன்று அதிகமாகப் பரவி யிருந்திருக்கக்

[1] அதே அதிகாரத்தில் xvi காணப்படும் 'வாங்குவதிலும் விற்பதிலும், சௌரிச் சிப்பிகளே உபயோகப்படுத்தப்பெற்றன' என்னும் கூற்றையும், நாணயங்கள் உபயோகத்திலில்லை என்று பொருள் கொள்வதற்கில்லை. இரண்டாம் சந்திரகுப்தன் ஏராளமான தங்க நாணயங்களையும், ஒரு சில வெள்ளி, செப்பு நாணயங்களையும் வெளியிட்டான்.

கூடும். யாத்திரிகனின் கூற்றுகள்; பெரும்பாலும் பௌத்த சமயத்தினரைப் பற்றியவைகளாகவே இருக்கின்றன. தாழ்த்தப்பட்ட வகுப்பினரான, சண்டாளரிடமிருந்து, உயர் குலத்தைச் சார்ந்தவர்களைக் காப்பாற்றுவதற்கென விதிக்கப் பெற்ற தடைகள், மிகச் சமீபகாலம் வரையிலும், தீபகற்ப இந்தியாவில் வழக்கிலிருந்த சில பழக்க வழக்கங்களைப் போன்றவையே என்பது கவனிக்கத் தக்கது. மாகர்கள், டோமர்கள், சூஹ்ரர்கள், சாமரர்கள் போன்ற இனத்தினரிடம், பம்பாய் மற்றும் வட விந்தியப் பகுதிகளில் இன்றும் அத்தகைய உறவு முறையே கடைப்பிடிக்கப்படுகிறது. சாதி முறையின் கடின விதிமுறைகள், மேலை நாட்டு நாகரிகத் தொடர்பினாலும், நவீன கால சீர்திருத்த இயக்கங்களாலும் ஒருவாறு தளர்ந்திருக்கின்றன என்று கூறலாம்.[1]

### நல்லாட்சி

தற்செயலாகப் பா–ஹியான் தரும் தகவல்களை முழுமையாகக் கவனிக்கும் போது, ஐந்தாம் நூற்றாண்டு குப்த சாம்ராச்சியத்தில் நல்லாட்சி நடைபெற்றதென்றே கூறவேண்டும். அதிகக் குறுக்கீடு செய்யாமல் அரசினர் மக்களை வாழ விடுத்தனர். சமயத் துறையில் பொது நோக்கும், குற்றங்களைக் கண்டிப்பதில் இரக்கமும் கொண்டு அரசு இயங்கிற்று. அன்னிய யாத்திரிகன் மிக அமைதியாகத் தான் கற்க வேண்டியவைகளைக் கற்க முடிந்தது. அவன் விரும்பிய இடத்தில் தங்கவும், இந்திய நாடெங்கிலும், எவ்வித அச்சமுமின்றிப் பிரயாணம் செய்யவும் வசதிகளிலிருந்தன. வழியில் எங்கும் கொள்ளைக்காரருடன் சிக்கிக் கொண்டதாக அவன் கூறவே இல்லை. அவன் தாய் நாடு சென்றடைந்த போது, கையெழுத்துப் பிரதிகளையும், சிலைகளையும், சித்திரங்களையும் மிகப் பத்திரமாகத் தன்னுடன் எடுத்துச் சென்றான். மேலும் பல சீன யாத்திரிகர்கள் அவனது அடிச்சுவடுகளைப் பின்பற்றினர். இவர்கள் எல்லோரிலும் ஏழாவது நூற்றாண்டைச் சார்ந்த ஹ்யூன்-சாங் அல்லது யுவாங்-சுவாங் மிகவும் குறிப்பிடத் தக்கவராவார்.

### குமாரகுப்தன்–I

கி.பி. 415 ஆம் ஆண்டில் இரண்டாம் சந்திர குப்தனை அடுத்து அவனது மகனை குமாரகுப்தன் பட்டமேற்றான். அவன், சாம்ராச்சியத்தை நாற்பதாண்டுகள் ஆண்டுவந்தான். இவனது

1 'சமயம் மற்றும் அறநெறிக்களஞ்சிய'த்தில் ஹேஸ்டிங்ஸ் எழுதியுள்ள 'ஈனசாதியினர்' என்ற கட்டுரையைப் பார்க்கவும். வால் ix, பக். 581ff.

ஆட்சியில் நிகழ்ந்தவைகளைப்பற்றிய குறிப்புகள் இல்லை. அசுவமேத வேள்வி யொன்றை இவன் நடத்தினன் என்பதால், இவன் பெரும் போர்களில் வெற்றி கண்டிருக்க வேண்டும். இதை உண்மையென், நாம் ஏற்போமாகில், குப்தசாம் ராச்சியத்தை இவன் மேலும் விரிவடையச் செய்திருக்க வேண்டும்.

### ஸ்கந்தகுப்தன்-குப்தர் குலத்தின் இறுதிமன்னன்

கி. பி. 455 அல்லது அதற்குச் சற்று முன்னதாக குமாரகுப்தன் மரணமடைந்திருக்கக்கூடும். அதன்பின், அரசு அவனது மகனை ஸ்கந்த குப்தனுக்குக் கைம்மாறியது. குமாரகுப்த்னின் ஆட்சியின் இறுதியில் புஷயமித்திரன்[1] என்னும் கூட்டத்தினர் அல்லது இனத்தினர் சாம்ராச்சியத்தின் மீது படையெடுத்தனர் என்றும், குப்த மன்னன் அவர்களைத் துரத்தியடித்தான் என்றும் கூறப்படுகிறது. ஒருகால், இக்கூட்டத்தினர் இரேனியராக இருந்திருக்கக் கூடும். ஸ்கந்தகுப்தன், அரசேற்ற பின் மிகவும் முர்க்ககுணம் படைத்த மத்திய ஆசிய நாடோடிகளான ஹூணர்கள், மிகவும் தீவிரமாகப் பேரரசைத் தாக்கினர். அவர்களும் முறியடிக்கப்பெற்று விரட்டப்பட்டனர். ஆனல், அலை அலையாகத் தொடர்ந்து படையெடுத்து வந்த கூட்டத்தினர் பேரரசை நிலை கலங்கச் செய்தனர். ஆயினும் குப்தர் வமிசம் அழியவில்லை மிகவும் ஒடுங்கிய இராச்சியப்பகுதிகளை,வலிமையற்ற அரசகுலத்தினர் மேலும் பல தலைமுறைகளாக ஆண்டு வந்தனர். முகலாயப் பேரரசர்களுள் ஔரங்கசீப் ஆலம் கீர் என்பவனை இறுதியாக ஆண்டவன் என்பதுபோல, குப்தப் பேரரசர்களுள், ஸ்கந்தகுப்தனையே இறுதியானவன் எனக் கூறுவது பொருந்தும்.

### குப்தரின் பொற்காலம்

ஹூணர் படையெடுப்பைப் பற்றியும், அதன் விளைவுகளைப் பற்றியும் குறிப்பதற்கு முன்பாக, குப்த சாம்ராச்சியப் பொற்காலத்தைச் சிறிது விளக்கிக் கூறுவோம். இவ்வாறு குறிக்கப்படுகின்ற காலம் கி. பி. 320 லிருந்து 480 வரையிலும் நீடித்திருந்ததென்றும், முதலாம் சந்திரகுப்தன், சமுத்திரகுப்தன், இரண்டாம் சந்திரகுப்தன் விக்கிரமாதித்தியன், முதலாம் குமாரகுப்தன், பாட்டனரைப்போன்று விக்கிரமாதித்யன் என்ற பிருது சூடிய ஸ்கந்தகுப்தன் ஆகியோரது ஆட்சி காலங்களை உள்ளடக்கியிருந்ததென்றும் கூறலாம்.

1 ஸ்கந்தகுப்தனின் பிட்டாரிக் கல்வெட்டில் உள்ள வாசகத்தை இவ்வாறு கொள்வது ஏற்கப்படுவதில்லை. 'புஷயமித்திரன்' —'போரில் அவனது எதிரிகள்' எனக்கொள்ள வேண்டுமென்று பலர் கருதுவர் (ஆ-ர்.)

'கிரேக்க வரலாற்றில்; பெரிகிள்ஸ் என்பவனின் ஆட்சிகாலம் எவ்வாறு சிறந்து விளங்குகிறதோ, அதைப்போலவே பண்டைய இந்திய வரலாற்றில் குப்தராட்சியும் சிறந்து விளங்குகிறது' என்று கற்றறிந்த ஐரோப்பியப் புலவர் ஒருவர் கூறுவர். இந்திய நூலாசிரியர் ஒருவர், இவ்வாட்சி காலத்தை 'இந்து சமயத்தின் மறுமலர்ச்சிக்காலமென்று கருதுவர். இவ்விரு வர்ணனைகளும் ஏற்கக் கூடியவைகளேயாகும். இந்து இந்தியாவின் வரலாற்றில் வேறு எந்த ஆட்சி கால்த்தையும் விட, குப்த மன்னரின் ஆட்சி காலம் மிகச்சிறந்தும், திருப்திகரமாகவும் விளங்குகிறது. நாம் முன்னர் குறித்த பா-ஹியானின் நற்சான்றிலிருந்து, கொடுமை என்பது ஒரு சிறிது மற்ற அரசு நடைபெற்றதென அறியலாகும். கௌதில்யனல் எடுத்துரைக்கப்படுவதும், மௌரியரால் கடைப் பிடிக்கப்பட்டதுமான, இரகசிய ஒற்றர்படை போன்ற கீழ்த்தர மான நிறுவன்மொன்றும் குப்த ராட்சியில் இல்லை. இலக்கியம், கலை, விஞ்ஞானம் ஆகியவை மிக நன்ருகத்தழைத்து வளர்ந்தன. வற்புறுத்தல்கள் எவையுமின்றி அமைதியாகச் சமயத்துறையில் மாறுதல்கள் புகுத்தப்பெற்றன. இக் கருத்துகள், தற்போது சற்று விரிவாக எடுத்துரைக்கப்படும்.

### இந்து சமய மறுமலர்ச்சி

அசோகனின் நீடித்த உழைப்பும், சிறந்த ஆர்வமும், அவனது ஆட்சியின் பிற்பகுதியில் வட இந்தியாவிலுள்ள பெரும் பாலான மக்கள் பௌத்தசமயத்தைத் தழுவி ஏற்கும் வழிவகுத் தன என்று கூறலாகும். இதனல், பிராமண இந்து சமயமும் சமணமும் வழக்கொழிந்து விடவில்லை. இம்மூன்று சமயங்களி லும், ஒவ்வொரு மாகாணத்திலும், வெவ்வேறு காலத்தில், மக்கள் ஏதாவதொன்றை விரும்பிக்கடைப்பிடித்து வந்தனர்: குவிஷ்கன், கனிஷ்கன் போன்ற குஷானிய மன்னர் புத்த சமயத் தில் கொண்ட ஈடுபாடு, மிக ஆழமானதல்ல. உண்மையில் அம் மன்னர்கள் கடைப்பிடித்து வந்த சமயத்தை, ஒருவகையான 'சொராஸ்டிரிய' அல்லது 'மாகிச'க் கொள்கையென்றே கூறலாம் அவர்களது முன்னேன், இரண்டாம் காட்பிசஸ், ஒரு புறத்தில் சிவபிரானது உருவத்தையும், மறுபுறத்தில் காளையினது உருவத் தையும் பொறித்திருந்தான். ஹுவிஷ்கனையடுத்துப் பட்டமெய் திய முதலாம் வாசுதேவனும் இப்பழக்கத்தைக் கடைப்பிடித் தான். உஜ்ஜயினியை அரசாண்டுவந்த சத்ரபர்களும், பௌத்த சமயத்தை ஆதரித்தனர் என்ருலும் அவர்கள் பிராமண இந்து சமயத்தையே கடைப்பிடித்தொழுகி வந்தனர். குப்தமன்னர்கள் விஷ்ணு அல்லது 'பகவத்' என்ற பெயருடைய கடவுளைத் தங்கள் குல தெய்வமென வழிபட்டு வந்தனர். ஆனல், பௌத்தருக்கும்,

சமணருக்கும், தங்கள் சமயக் கோட்பாடுகளைக் கடைப்பிடித் தொழுகுவதற்கும், புனித தலங்களுக்கு நன்கொடைகள் வழங்கு வதற்கும் முழு உரிமை அளித்திருந்தனர். தற்காலக் கண் கொண்டு நோக்கும் போது, நெடிய நமது திருஷ்டிக்கு ஐந்தாம் நூற்றாண்டில் அல்லது அதற்குச்சற்று முன்பாகவே இந்து சமய மறுமலர்ச்சி பௌத்த சமயத்தை வெற்றி கொள்வதற்குத் தொடங்கிவிட்டதென்று தோன்றினாலும், இவ்வியக்கம் பாஹியா னது கண்களுக்கு புலப்பட்டதாகத் தெரியவில்லை. அவனது கண் களுக்கு, இந்திய நாடு புத்த சமயப்புனித பூமியாகவே காட்சி யளித்தது. அந்நாட்டில், அவன் கடைப்பிடித்தொழுகிய சமயத் தின் கோட்பாடுகள் மிக உயர்ந்து விளங்கியதையே அவன் கண் ணுற்றான்.

### சம்ஸ்கிருதம் (வடமொழி)

சம்ஸ்கிருத மொழி, பிராமணரின் புனித மொழியானதால், சமண, புத்த மடாலயங்களின் செல்வாக்குக்குறைந்து, பிராமண ரின் செல்வாக்கு உயர்ந்ததும், அம்மொழியும் ஏற்றம் பெறலா யிற்று. அசோகன் சம்ஸ்கிருத மொழியை அரசாங்க மொழியா கப் பயன் படுத்தவில்லை. அவனது பிரகடனங்கள் யாவும் பிர தேசமொழிகளில் மக்களுக்கு எளிதில் விளங்குமாறு தொகுத்து வெளியிடப்பட்டிருந்தன. எழுத்துக் கூட்டிப்படிக்கும் திறனுள்ள வருக்கு அவை எளிதில் விளங்குபவையாக இருந்தன. சாதவா கன மன்னரும் பிராகிருத மொழியையே உபயோகித்து வந்த னர். இலக்கணமுறைப்படி சுத்தமான வடமொழியில் எழுதப் பெற்ற முதல் கல்வெட்டு அறிவுக்கெட்டுகின்ற வரை, கனிஷ்கன் காலத்திலேயே உருவாயிற்றென்று தெரிய வருகிறது. இதற் குச்சான்றாக, கனிஷ்க சகாப்தம் 24ஆம் ஆண்டுத் தெய்தியிட்ட மதுராவில் கண்டெடுக்கப்பட்ட சுருக்கமான குறிப்பொன்றையும், கி. பி. 150 ஆம் ஆண்டுத் தெய்தியையுடைய, சௌராஷ்டிரத்தில் கண்டெடுக்கப்பட்ட கிர்னார் கல்வெட்டையும் கூறலாம். நீண்ட தொரு இலக்கிய வாசகத்தைக் கொண்ட கிர்னார் கல்வெட்டு, மகாசத்ரபன் ருத்ரதாமன் கொண்ட வெற்றிகளை எடுத்துரைக் கின்றன.

### இலக்கியம்; காளிதாசன்

குப்தர் நாணயங்களில் காணப்படும் குறிப்புகளும் சம்ஸ்கிருத மொழியிலேயே காணப்படுவது, அம்மொழி அதிகமாக வழக்கி லிருந்ததென்பதை உணர்த்தும். மிகச்சிறந்த வடமொழி இலக் கிய வளர்ச்சியும் இக்கருத்தையே மேலும் வலியுறுத்துகின்றது.

நாடகாசிரியன் என்ற முறையிலும், கவிஞன் என்ற முறையிலும், வடமொழிப் புலவர்களின் இலக்கிய படைப்புகளில் காளிதாசனது இலக்கியங்களே மிகச் சிறந்தவையென இலக்கிய விமர்சகர்கள் ஒரு முகமாகக் கூறுகின்றனர். மிக்க கீர்த்தி வாய்ந்த இந்தியக் கவிஞர்களின் இலக்கியங்கள், ஐந்தாம் நூற்றூண்டில் குப்த மன்னர்களின் ஆதரவிலேயே இயற்றப்பெற்றன என்னும் கருத்து யாவராலும் ஒருமுகமாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. மாளவத்தில் (தற்போது மத்திய பாரதம்) உள்ள மாண்டசோர், அல்லது ஒரு காலத்தில் மிகவும் கீர்த்தி பெற்று விளங்கிய அந்நகரத்தையடுத்த ஒரு பகுதியைக் காளிதாசன் சார்ந்தவன் என்பதற்குத்தகுந்த காரணங்கள் எடுத்துரைக்கப்படுகின்றன. உஜ்ஜயினியின் அரசவையோடும், மேற்கிந்தியாவின் தலைநகரமாக விளங்கிய அந்நகரத்தின் சிறந்தோங்கிய வாணிபம் மற்றும் அறிவாற்றல் மிக்க வாழ்க்கையோடும் மிகவும் நெருங்கிய தொடர்பு கொள்ளும் வாய்ப்பும் அவனுக்கிருந்தது. ஆதியில் அவன் உருவாக்கிய 'ருது சம்ஹாரம், மேக தூதம்' போன்ற வர்ணனை மிக்க கவிதைகள், உஜ்ஜயினியை வெற்றி கண்ட இரண்டாம் சந்திரகுப்த விக்கிரமாதித்தியன் காலத்திலேயே எழுந்திருந்திருக்க வேண்டும். முதலாம் குமாரகுப்தன் ஆட்சியின் போது (கி. பி. 413-55) அவனது நாடகங்கள் உருவாயிருக்கக்கூடும். அவன் வாழ்ந்திருந்த காலம், உண்மையில் சற்றுப் பிந்தியிருக்கவும் கூடும். ஐரோப்பிய விமர்சகர்களின் கவனத்திற்கு வந்ததும்; 'சாகுந்தலம்' என்னும் அவனது தலை சிறந்த நாடகம் ஒருமுகமான பாராட்டுதல்களைப் பெற்றது. கீழை நாடுகளிலும், மேலை நாடுகளிலும், இக் கவிஞனின் நிகரிலாச் சிறப்பு என்றுமே மறுக்கப்படுவதில்லை.[1]

## பிற இலக்கியம்

'அமைச்சரின் முத்திரை மோதிரம்' (முத்ராராக்ஷசம்) என்ற பெயர் கொண்ட அரசியல் நாடகம், குப்தராட்சியின் பிற்பகுதியில் எழுந்த தெனச் சிறந்த புலவர்கள் தற்போது கருத்தறிவிக்கின்றனர். சுவை மிக்க 'மண் வண்டி' (மிருச்சகடிகம்) என்ற நாடகம் அதற்குச் சற்று முன்பாக உருவாகியிருக்கக்கூடும். வழக்கிலிருக்கும் 'புராணங்களில்', வாயு புராணம் மிகப் பழமையானவைகளில் ஒன்ருகும். அது தற்போதுள்ள வடிவில் நான்கா

1 காளிதாசன் பிறந்த ஊரை அறிவதற்கு ஜே. பி. மற்றும் ஓ. ஆர். சொசைட்டி (வால் 1, பக்கம் 197-212) சஞ்சிகையில் எம். எம். ஹரப் பிரசாத் சாஸ்திரியின் கட்டுரையைப் பார்க்கவும். 'ருதுசம்ஹாரம்' காளிதாசனின் ஆதிநூல்களில் ஒன்று எனத் தொன்றுதொட்டு வழங்கி வரும் கருத்தையே நானும் ஏற்கிறேன்.

வது நூற்றூண்டின் முற்பகுதியில் உருவாயிருக்கக்கூடும். எல்லாப் புராணங்களிலும் வெவ்வேறு காலத்திய செய்திகள் அடங்கியுள்ளன. அவைகளில், சில பகுதிகள் மிகவும் பழமையானவை: அத்தகைய தொகுப் பொன்றுக்கு வழங்கப் பெறும் காலம், அவ்விலக்கியம் முழுமையான உருப்பெற்றபின் வழங்கப்பட்ட காலமாகவே இருக்கவேண்டும்.

### விஞ்ஞானம்

கணிதம், ஜோதிடம் உள்ளடங்கிய வானசாத்திரம் ஆகிய விஞ்ஞானத்துறைகளிலும்,குப்தராட்சியில் அதிகமானமுன்னேற்றமேற்பட்டது. இத்துறைகளில் மிகவும் சிறந்த நூலாசிரியனாக ஆரியபட்டன் என்பவனைக் குறிக்கவேண்டும். கி. பி. 476-ல் பிறந்த இவர், பாடலிபுத்திரத்தில் கற்றவைகளோடு, கிரேக்கரிடமிருந்து தான் பெற்றிருந்த அறிவையும் இணைத்தார்: கிரேக்கரின் விஞ்ஞான அறிவில், வராகமிஹிரன் (கி. பி. 505-87) என்பவன் மிக்க ஆர்வம் கொண்டிருந்தான். கிரேக்கர் கையாண்டு வந்த பல கலைச்செற்களை இவனும் கையாண்டுவந்தான். கி. பி. 598 ஆம் ஆண்டு பிறந்து, குப்தராட்சியின் இறுதியாண்டுகளில் வசித்துவந்தபிரமகுப்தனையும்இவ்வரிசையிலேயே வைத்து எண்ணவேண்டும். எண்ணிக்கைகளைப்பயன் படுத்து வதற்கென தசாம்ச முறையையும் இக்காலங்களில் இந்தியர் உபயோகித்தனர் என்பதற்கும் சான்றுகள் பல உண்டு. இம்முறையால் ஸ்தானங்களையும், 'பூஜ்யத்தையும்' அடிப்படையாகக்கொண்டு, பத்து நூறு, ஆகிய எண்ணிக்கைகளை இவர்கள் கையாண்டு வந்தனர். இவ்வனுபவ அறிவுமுறை உலகிற்கு இந்திய நாடளித்த நன்கொடையாக விளங்குகிறது. ஆரியபட்டனுக்கு, ஓர் நூற்றூண்டுக்காலத்திற்குப் பின்னரே கல்வெட்டுகளில் இம்முறை கையாளப்படுகிறது.

### நுண்கலைகள்

சமுத்ரகுப்தனுக்கு இசையில் பயிற்சியுண்டு என்பது முன்னரே குறிக்கப்பட்டுள்ளது. அக்கலையைப் பயின்று வழங்கிய கலைஞர்கள், மன்னனின் ஆதரவைப்பெற்று ஏராளமாக இருந்திருக்க வேண்டுமென நாம் ஒருவாறு ஊகித்தறியலாம். இதனுடன் துணையாக நின்ற கட்டடக்கலை, சிற்பக்கலை, சித்திரக்கலை ஆகிய மூன்று துறைகளிலும் மிகவும் போற்றுதற்குரியமுன்னேற்றங்கள் காணப்படுகின்றன. குப்தர் அரசு நீடித்திருந்த நிலப்பகுதிகள் யாவும், பின்னொரு காலத்தில் இஸ்லாமியர் வச மிருந்ததென்பது, தற்செயலாக ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியே யாகும். ஆதியில் அரசு

செலுத்திய இஸ்லாமியர், இந்துக்களின் கட்டடங்கள் யாவையும் பல நூற்றாண்டுகளாகத் திட்டமிட்டு அழித்து வந்தனர். குப்தரின் கட்டடக்கலையைப்பற்றிய தொடர்ச்சியான வரலாற்றை அறிவதற்கு இச்சம்பவம் தடையாக நிற்கிறது. அக்காலங்களில் எழுந்த பெருங்கட்டடங்கள் நிலைத்திருக்கவில்லை. நாசமடையாது எஞ்சி நின்ற சிறு கட்டடங்கள், இஸ்லாமியப்படை வீரரின் பார்வைக்கு அகப்படாது, மத்திய இந்திய, மத்தியப்பிரதேச (முன்னுளில் மத்திய மாகாணங்கள் எனப் பெயர் கொண்டவை)ங்களில் தொலை தூரங்களிலுள்ள இடங்களில் அமைந்துள்ளன. உருவத்தில், அவை குகைகளில் குடைந்தெடுக்கப்பட்ட கோவில்களைப் போலவே உள்ளன. உத்திரப்பிரதேசம் ஜான்ஸி மாவட்டத்திலுள்ள, லலிதபூர் தொகுதியின் தியோகாரிலுள்ள கற்கோவில் குப்தர் காலத்தைச் சார்ந்தது. அளவில் சிறிய இக்கோவில் மிக்க அழகுடையதாகவும், கவனத்திற்குரியதாகவும் விளங்குகிறது. இக்கோவில், ஆரும் நூற்ருண்டு அல்லது ஐந்தாம் நூற்ருண்டின் முற்பகுதியைச் சார்ந்ததெனக் கூறலாகும். இக்கோவிலின் சுவர்களில், இந்தியச் சிற்பக்கலையின் தலை சிறந்த படைப்புகள் சிலவற்றை நாம் காண்லாம். ஐக்கிய மாகாணம், கான்பூர் மாவட்டத்திலுள்ள, 'பித்தார் கோயன்' என்னுமிடத்திலுள்ள செங்கற்களிஞல் எழுப்பப்பட்டிருக்கும் கோவில் இரண்டாம் சந்திரகுப்தன் காலத்தில் கட்டப்பெற்றதெனலாம். சுட்ட களிமண்ணிஞலான, நன்கு திட்டமிட்டு உருவாக்கப்பெற்ற உணர்ச்சிமிக்க சிற்பங்களுக்கு அக்கோவில் பெயர் பெற்று விளங்குகிறது. அழகு மிக்க சிற்பங்களுடன் கூடிய சில துண்டுகளிலிருந்து, பனரசிற்கு அருகிலுள்ள சாரநாத் என்னுமிடத்திலும், பிற இடங்களிலும், குப்தர் காலத்தில் அருமையான கற்கோவில்கள் இருந்தன என்று அறியலாம். குப்தர் காலத்துச் சிற்பங்களுக்கும், சிங்காரவேலைப்பாடுகளுக்கும், சாரநாத் ஒரு கருவூலமாக விளங்கிவருகிறது. அவைகளில் சிறந்து விளங்குகின்ற சில சமுத்ரகுப்தன் மற்றும் அவனது சந்ததியார்களின் கால முதலே உருப்பெற்றவை எனத் தெரியவருகின்றன. குப்தக்கலைஞர்களும், தொழிலாளிகளும், உலோகங்களை உபயோகிப்பதிலும் வல்லவர்களாக இருந்தனர். முதலாம் குமாரகுப்தனின் காலத்தில் உருப்பெற்று, இன்றும் நாம் டெல்லியில் காணும் தேனிரும்பிஞலான தூண், உலோக உபயோகக்கலையில் குப்தரின் திறனைப்பறை சாற்றுகின்றது. அச்சு வார்ப்பு முறையில், பெருவாரியான செம்பு உருவங்களை வடிப்பதிலும் மிகவும் தேர்ந்திருந்தனர். ஆருவது நூற்ருண்டின் இறுதியில் 80 அடி உயரமுள்ள புத்தரின் செப்புச்சிலை ஒன்று, பீஹாரிலுள்ள நாளந்தாவில் எழுப்பப்பட்டதாகத் தெரிய வருகிறது. பெர்மிங்ஹாம் கண்காட்சி சாலையில் $7\frac{1}{2}$ அடி உயரமுள்ள

சுல்தான் கஞ்ச் புத்தரை இன்றும் நாம் காணலாம். இரண்டாம் சந்திரகுப்தனின் ஆட்சியில் அது உருவாயிற்றென்றும் தெரிய வருகிறது. இரண்டாம் சந்திரகுப்தனும அவனது மகனும் அரசு செலுத்தி, காளிதாசனும் வாழ்ந்திருந்த ஐந்தாவது நூற்றாண்டில் குப்தரது கலைத்திறன் உச்சநிலையை அடைந்தது என்று கூறலாம் அஜந்தாக் குகைகளில் மிகச் சிறந்தவையான நிர் XVI மற்றும் XVII, தலை சிறந்த கலை வெற்றிகளைக் கண்ட இந்த நூற்றாண்டையே சார்ந்தவை எனக் கூறலாம்.[1] அஜந்தாக்குகைகளிலுள்ள சித்திரங்களின் சிறப்பைப்பற்றி, நாம் இப்போது வர்ணிக்க வேண்டுவதில்லை. அதைத் தங்குதடையின்றித் தற்போது யாவரும் ஒப்புக்கொள்ளுகின்றனர் 'உண்மையான இந்திய நாட்டுக் கலை எத்தகைய உயர் நிலை எய்தியிருக்கின்ற தென்பதை இவை விளக்குகின்றன' என்றும், 'முழுநோக்கிலும் மற்றும் ஒரு சிறு முத்து அல்லது பூ இவைகளைத்தனியாகக் கவனித்தாலும், சித்திரத்தின் ஒவ்வொரு பகுதியிலும் கலைஞனின் கருத்தாழமும், கைத்திறனும் மிக நன்றாக விளங்கும்,'[2] என்ற இது போன்ற கருத்துகளை கலை விமர்சனம் செய்வதையே தொழிலாகக் கொண்டுள்ள டச்சுக் கலைஞர் ஒருவர் அறிவித்துள்ளார்.

ஸ்கந்தகுப்தனின் ஆட்சி முடிவுற்றதையடுத்து; கி.பி. 479-க்கும் 497-க்கும் இடைப்பட்ட காலத்தில் அஜந்தாவுடன் தொடர்பு கொண்ட சிங்களத்திலுள்ள சிகிரியா சித்திரங்கள் உருப்பெற்றிருக்க வேண்டும்.

### இந்து சமயம் சார்ந்த கலையின் உச்சநிலை

மிகப் பரவலாக; நாம் மேலே எடுத்துக் கூறிய செய்திகளிலிருந்து, இசை, கட்டடக்கலை, சிற்பக்கலை, சித்திரக்கலை ஆகிய துறைகளில் குப்தர் காலத்தில் வாழ்ந்திருந்த கலைஞர் மகோன்னத நிலை எய்தியிருந்தனர் என்று கூறலாம். என் அறிவுக்கு எட்டுகின்ற வரையில் குறிப்பாக, ஐந்தாம் நூற்றாண்டிலேயே இவ்வுயர் நிலை இந்து சமயம் சார்ந்த கலைக்குக் கிட்டியது எனக் கூறுவேன். குப்தர் காலத்திய சிற்பங்களில் மனத்திற்கு இரம்மியமான சில கூறுகள் உண்டு. அவைகளைக் கண்ணுற்ற மாத்திரத்திலேயே, குறிப்பிட்டதொரு சிலை, குப்தர் காலத்தைச் சார்ந்ததா அல்லது வேறு காலத்தில் உருவானதா என்று சுலபமாகக்

[1] ராயல் ஏஷியாடிக் சொசைட்டி - சஞ்சிகை, 1914 பக்கம் 335.

[2] நைஜாம் டொமினியன் புதை பொருளாராய்ச்சி இலாகா வருடாந்திர அறிக்கை 1914 - 15 பொருத்தமான தலைப்பில் - ஆக்செல் ஜார்ல்.

கூறிவிடலாம். உருவங்களில் இத்தகைய புற அழகையும், உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதிலுள்ள கம்பீரத்தையும், ஆடம்பரமற்ற அடக்கமான உத்திகளையும். இதே அளவில் இந்திய நாட்டிலுள்ள, எந்தக் காலத்தைச் சேர்ந்த சிற்பங்களிலும் நாம் காணவியலாது. திறனை விளக்குகின்ற வேறு சில விசேஷ அம்சங்களையும் நாம் எளிதில் கண்டு கொள்ளலாம். எளிமை மிகுந் ஆடைகள் உடலழகைக் கண்ணாடி போல் எடுத்துக் காட்டுவது; ஏராளமான ஒளிப்பிழம்புகள், நூதனமான சிகை அலங்காரங்கள் ஆகியவைகளை இவற்றுள் ஒரு சில அம்சங்களெனக் குறிப்பிடலாம். மேலும் பல குணாதிசயங்களையும் குறிப்பிடலாம். சிற்பங்கள் பலவற்றிற்குத் செய்திகள் காணப்படுகின்றன.

**கருத்துகள் பரிவர்த்தனை**

குப்தர் காலத்திய அளவிடற்கரிய சிந்தனை வளத்திற்கு, கிழக்கு மேற்கு நாடுகளுடன், அக்காலத்து மக்கள் பரிவர்த்தனை செய்து கொண்ட கருத்துச் செல்வமே காரணமாயிருந்தது.

கிருத்து சகாப்தத்தின் தொடக்க முதலே, ஆசியப் பாலைவனங்களில், பல பேரரசுகள் தழைத்து வந்திருக்கின்றனவென்பது நன்கு விளங்கும். அங்கு, இரேனிய மற்றும் சீனப் பண்பாடுகளுடன் இந்தியப் பண்பாடும் கலந்து பௌத்த சமயம் மூலமாக பரவியது எனலாம். இவைகளில், 'கோட்டானும்' சீன துருக்கிஸ்தானத்தின் தாரிம் முகத்துவாரமும் குறிப்பிடத்தக்கவைகளாக விளங்குகின்றன. இவைகளில், பின்னல் கூறப்பட்டிருப்பது ஒருகால் கி.பி. முதல் நூற்றாண்டிலேயே குஷானியரின் ஆட்சி காலத்தில் அவர்களால் நிறுவப்பட்டிருக்கக் கூடும். இப்பகுதிகளை, ஆதியில் அரசாண்டு வந்த மன்னர்கள், இந்திய நாட்டில் வழங்கும் பெயர்களைச் சூடியிருந்தனர். அவர்களது அரசாங்க ரிக்கார்டுகள் 'பிராகிருத மொழியில்' கரோஷ்டி வரிவடிவங்களால் எழுதப்பட்டிருந்தன. பிற்காலங்களில், குப்தர் பயன்படுத்திய ஒரு வகை வரிவடிவங்கள் கையாளப் பெற்றன. தற்போது வழங்கிவரும் திபெத்திய எழுத்து முறை அதிலிருந்து பெறப்பட்டதெனக் கருதப்படுகிறது. புதை பொருளாராய்ச்சியும், சீன யாத்திரிகர்களின் குறிப்புகளும், இப் பகுதிகளில் பௌத்த சமயத்தைத் தழுவிய குடிமக்கள் ஏராளமாக வாழ்ந்திருந்தனர் என்பதை உறுதிப்படுத்துகின்றன. அச்சமயத்தைச் சார்ந்த ஏராளமான மடாலயங்களும், கோவில்களும் அங்கிருந்தன என்பதையும் நாமறிவோம். வடமொழியிலும், மற்றும் பிரதேச மொழிகளிலும் இயற்றப் பெற்ற விலை மதிப்பற்ற ஏடுகள், இச்சமய மடாலயங்களிலிருந்தும், கோவில்களிலிருந்தும் ஏராள

மாகக் கிடைத்தன. இரேனிய, சீன, இந்திய கலைத் திறன்களை ஒன்று சேர்த்து விளக்குகின்ற அழகான வர்ணச் சித்திரங்களையும் இப்பகுதிகளிலிருந்து நாம் பெறுகிறோம். ஆனால், திபெத்தில் மந்திர யந்திர வகையைச் சார்ந்த பௌத்த சமயம் இன்று வரை பேராதரவு பெற்று விளங்குகிறது. இச்சமயக் கோட்பாடுகள், இடைக் காலத்தில் பீஹார், பெங்கால் ஆகிய பகுதிகளை அரசாண்டு வந்த பாலர் சாம்ராச்சியத்திலிருந்து பரவியிருக்க வேண்டும்.

சீன தேசத்திற்கு, மத்திய ஆசியாவிலிருந்து பௌத்தசமயம் பரவியது. ஒரு சில புத்த சமய குரவர்கள், அதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னதாகவே சீனத்திற்கு விஜயம் செய்திருக்கக் கூடும். என்றாலும் கி. பி. 65 ஆம் ஆண்டிலேயே, ஹான் வமிசத்தைச் சார்ந்த மிங். டி என்பவர் சீனத்தை யாண்டு வந்த போது தர்மரத்னம், காஸ்யப மதங்கள் என்ற மத்திய ஆசியாவைச் சார்ந்த இரு சமய குரவர்கள் லே - யாங் என்னுமிடத்தில்வெண் குதிரை மடாலயத்தை மன்னரின் ஆதரவு பெற்று நிறுவினார்கள். இந்நிகழ்ச்சி, முதலாவதாகச் சீன தேசத்தில் பௌத்தம் காலடி வைத்ததை விளக்குவதாகக் கொள்ளலாம். இவர்களைத் தொடர்ந்து பல பௌத்த சமயத் துறவிகள் சீனத்திற்குச் சென்றனர். புனித ஏடுகள், சீன மொழியில், மொழி பெயர்க்கப்பட்டன. பௌத்த சமயமும் அதிவிரைவில் பரவியது. இச் சமயத்துடன் தொடர்பு கொண்ட புனித இடங்களைக் காணவும், சமஸ்கிருத மொழியில் அதிகப் புலமை பெறுவதற்கும், சீனத்தைச் சார்ந்த பல பௌத்த சமயத் துறவிகள் இந்திய நாட்டிற்கு விஜயம் செய்தனர். குப்தராட்சி தொடங்கியது முதல், இந்திய நாட்டின் ஏதேனுமொரு பகுதியிலிருந்து தூது கோஷ்டியினர் சீனத்திற்குச் சென்றனர். பௌத்த சமய மூலமாக அன்றிப் பிற வகையில் சீனப் பண்பாட்டுடன் இந்திய நாட்டிற்கு எவ்விதத் தொர்டர்பும் இல்லை. ஆனால், சமயத் துறையின் மூலமாகச் சீன நாட்டில் பரவிய நுணுக்கமான கருத்துகள், சீனர் வாழ்க்கை முறைகளையும், சிந்தனையையும் அதிகமாகக் கவர்ந்தன.

இந்தியக் கடற்கரைகளுக்கும், ஆர்ச்சிபிலாகோ தீவுகளுக்குமிடையில் துரிதப் போக்குவரத்து எப்பொழுதும் நடைபெற்று வந்தது. ஜாவனியரைப் பௌத்த சமயத்திற்கு, குணவர்மன் என்னும் காஷ்மீர இளவல் மாற்றினான் எனச் சீனர் கூறிவருகின்றனர். குணவர்மன் கி.பி. 431 ஆம் ஆண்டில் சீன நாட்டிலுள்ள 'நான்கிங்' என்னுமிடத்தில் மரணமடைந்தான் என்றும் கூறப்படுகிறது. தென் கிழக்கு ஆசியாவிலும் இந்தோனீசியாவிலும் கண்டெடுக்கப்பட்டுள்ள ஏராளமான கல்வெட்டுகளிலி

ருந்து நான்காம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து ஸ்தல மன்னர்கள் இந்து சமயத்தைக் கடைபிடிக்கத் தலைப்பட்டனர் என்றும், பிராமணீயச் சமயச் சார்புள்ள வேள்விகளைச் செய்து வந்தன



குரங்குகள்—அஜந்தா



தாயும் சேயும்—அஜந்தா



யாளி—குப்தர் காலம்



கந்தரிய மஹாதேவ் கோயில்—காஜுராஹோ



பாலர் காலத்துச் சிற்பம்



கைலாசநாதர் கோவில்-
எல்லோரா

ரென்றும்,சமஸ்கிருதத்தை அரசாங்கமொழியாகப் பயன்படுத்தி வந்தனர் என்றும் அறிகிறோம். இவ்விஷயம் இவ்வதிகாரத்தின் இறுதியில் காணப்படும் துணைப் பகுதியில் மேலும் விரிவாக

எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அஜந்தா சித்திரங்களிலிருந்து, மேற்கிந்தியாவிற்கும், பாரசீகத்திற்கும்; ஏழாம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்தே தொடர்பிருந்து வருவதும் தெரிய வருகின்றது. கி.பி. 336, 361 மற்றும் 530 ஆம் ஆண்டுகளில் முறையே ரோமானியப் பேரரசர்களிடம் தூது கோஷ்டி அனுப்பப்பட்டதும் குறிக்கப் பெற்றுள்ளது. நாணயச் சான்றுகள் உரோமானியருடன் கொண்ட தொடர்பை ஐயத்திற்கிடமின்றி நிரூபிக்கின்றன. லத்தீன் மொழிச் சொல்லான 'தேனரியஸ்' என்ற சொல்லைப் போல, 'தினரம்' என்ற சொல் தங்க நாணயங்களைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது.

நான்காவது நூற்றுண்டின் இறுதியில் இரண்டாம் சந்திர குப்தன் மேற்கிந்தியாவை வென்றுன். இவ்வெற்றியால்; கங்கைச் சமவெளி மாகாணங்களுக்கும்; மேற்கிந்தியத் துறை முகங்களுக்கும், மற்றும் அலெக்சாந்திரியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் நெருங்கிய தொடர்பேற்பட்டது. வாணிபமும் பாரசீகத்தின் வழியாகத் தரைமார்க்கமாகப் பரவியது. ஆர்யபட்டன், வராகமிஹிரன், ஆகிய இருவரும் விடுத்துச் சென்றுள்ள வான நூல்களில் ஐரோப்பாவுடன் எளிதில் கொண்ட தொடர்பின் விளைவுகள் நன்கு புலனுகின்றன. அவர்களிருவரும் லத்தீன் மொழியை நன்கு கற்றிருந்தார்கள் என்பதும் தெளிவு. மினந்தர் காலத்திய நாடக இலக்கிய உத்திகளுக்கும், புராதன இந்திய நாடக பாணிகளுக்குமிடையே மிக நெருங்கிய தொடர்பு உண்டு என 'விண்டிஷ்' என்பவர் கருத்தறிவிக்கின்றுர். இக் கருத்து, தற்செயலாகக் கிடைக்கின்ற சான்றுகளிலிருந்து விளைந்ததல்ல. அதை உறுதி செய்யும் ஆணித்தரமான பல காரணங்களுண்டு. குப்தர் காலத்தில் வழங்கிய சிற்பக்கலைத் துறையில் கிரேக்க ராதிக்கம் பிரதானமாக இல்லையென்றுலும், ஓரளவிருந்ததென்பதும் உண்மையே ஆகும். சிற்பங்கள், இந்திய நாட்டுப் பாணியிலேயே உருவானவை. அவைகளைக் கிரேக்க சிலைகளின் நகல்கள் என்றே அல்லது கிரேக்க கலைகளின் உத்திகளைக் கையாண்டு வடிக்கப்பெற்றவை என்றே கூற இயலாது. ஆனல், கிரேக்க கலையின் தத்துவத்தை அவை பிரதிபலிக்கின்றன. இம் முறையில், பல நூற்றுண்டுகளுக்குப்பின் எழுந்த தன்னிகரற்ற தாஜ்மஹாலில் கீழை மேலை நாட்டுக்கலையுத்திகள் ஒன்று சேர்ந்திருப்பது போல, இங்கும் மேலை கீழை நாடுகளின் கலையுத்திகள் ஒருங்குசேரப் பரிணமிப்பதையே காண்கிறோம். ஐரோப்பிய நாடுகளுடன் கொண்ட தொடர்பு ஏழாவது நூற்றுண்டுடன் மறைந்த பின்னரும். இந்திய நாட்டில் புதியதோர் வகையான சிற்பக்கலை தோன்றி வளர்ந்தது. ஆனல், அதில் அன்னிய கலை வாசனையைக் காண்பது அரிதாயிற்று. கலை விமர்சனத்தில் தலை

சிறந்த சிலர், எட்டாவது நூற்றுண்டில் எழுந்த கலைப்படைப்புகள், இந்தியக்கலை வரலாற்றின் உச்ச நிலையைச் சுட்டிக் காட்டுவதாகக் கூறுவர். என் ரசனைத் திறனைப் பொறுத்தமட்டில், நான் முன்னரே கூறியபடி ஐந்தாம் நூற்றுண்டுக் கலைப்பொக்கிஷங்கள் என்னை மிகவும் கவர்ந்திருக்கின்றன. வேறு எந்தக் காலத்திலும் உருப்பெற்றவைகளைக் காட்டிலும், இவை அழகிற் சிறந்தவைகளாகவே எனக்குப் புலப்படுகின்றன.

**ஹூணர்கள்**

ஸ்கந்தகுப்தனுக்குப்பின் அரசு செலுத்திய குப்த மன்னராட்சிகளில் கவனத்திற்குரிய செய்திகளெவையும் இல்லை. அவைகளை வெறும் கற்பனைக் கதைகளாகவே கருதி நாம் மேற்செல்லலாம். கம்பீரமான குப்தப் பேரரசு என்னும் பெருங்கட்டடத்தைத் தகர்த்தெறிந்த அன்னியர் படையெடுப்பைக் குறித்து நாம் ஒரு சிறிது கூறியேயாக வேண்டும். நாசவேலை மத்திய ஆசியாவிலிருந்து வெளிப்போந்த பெரும் நாடோடிக் கூட்டத்தால் மேற்கொள்ளப்பட்டது. சகரும், யூச்சிகளும், முந்திய நூற்றுண்டுகளில் செய்தது போலவே இக்கூட்டத்தினரும் வடமேற்குக் கணவாய்களை மொய்த்துக் கொண்டனர். பிற்காலத்தில் வந்த காட்டுமிராண்டிக் குணம் படைத்த எல்லோரையும்; இந்தியர் பொதுவில் ஹூணர் என்று பெயரிட்டு அழைத்தனர். ஆனால், கூர்ஜரரையும் (ஹானர்கள்) அவர்களையொட்டிய பிற குடிகளையுமே நாம் ஹூணர்கள் என்று பெயரிட்டு அழைக்கிறோம். ஐந்தாம் நூற்றுண்டில், ஆக்சஸ் பள்ளத்தாக்கில் குடிபுகுந்த குடியினரை மட்டிலும், வெள்ளை ஹூணர் அல்லது ஈப்தலைட்டுகள் என்ற பெயரால் அழைக்கிறோம். நாளடைவில் அவர்கள் சிறுகச் சிறுகப் பாரசீகத்தையும், காபூலையும் ஆக்கிரமித்துக் கொண்டனர்; கி. பி. 484–ல் சகானிய மன்னன் பிரோஸையும் அவர்கள் கொன்றனர். கி. பி. 455 ஆம் ஆண்டில் முதன் முறையாகக் குப்தப் பேரரசை அவர்கள் தாக்கியபோது விரட்டப்பட்டனர். பாரசீக எதிர்ப்பு முற்றிலும் வலிவிழந்தபின் தலைவாயில் தடையின்றி விசாலமாகத் திறந்து விடப்பட்டது. ஏராளமான ஹூணர் இந்திய நாட்டினுள் தடையின்றிக் குடி புகுந்தனர். கி. பி. 500 ஆம் ஆண்டில் அவர்கள் தலைவன் தோரமானன் மாளவத்தில் வேரூன்றி நிலைத்துக்கொண்டான். அவனைத் தொடர்ந்து அரசேற்ற அவனது மகன் மிகிரகுலன் (சூரியகாந்தி) பஞ்சாபிலுள்ள சாகாலம் அல்லது சாயால் கோட்டிற்குத் தனது தலைநகரை மாற்றிக்கொண்டான்.

அக்காலங்களில் இந்திய நாடு ஹூண சாம்ராச்சியத்தின் ஒரு பகுதியாக மட்டிலும் விளங்கி வந்தது. அது மேற்கில் பாரசீகத்திலிருந்து கிழக்கில் கோட்டான் வரை பரந்து, நாற்பது மாகாணங்களையும் உள்ளடக்கியிருந்தது. ஹீரட்டிற்கு அருகிலுள்ள பாமியன் இக்கூட்டத்தினரின் தலைநகரமாக விளங்கியது. புராதனப் பட்டினமான, 'பால்க்' இரண்டாம் தலைநகரமாக விளங்கியது. மாளவமன்னன் யசோதர்மனும், மகத சாம்ராச்சிய குப்த மன்னனெனக் கருதப்படுகின்ற பலாதித்யனும் கி. பி. 528 ஆம் ஆண்டில் இந்திய மண்ணில் மிகிரகுலனின் ஆதிக்கத்தைச் சீர்குலைத்தனர். காஷ்மீரத்தைச் சென்றடைந்த மிகிரகுலன், அந்நாட்டு அரசைக் கைப்பற்றி அங்கேயே மரணமடைந்தானென்றும் கூறப்படுகிறது. அவனது வாழ்க்கையைப்பற்றிய கற்பனைக் கதைகள் நிறைந்திருப்பதால் அவனது வரலாற்றைச் சரிவர அறிந்துகொள்ள இயலவில்லை.

ஆறும் நூற்றாண்டின் இடைக்காலத்தையடுத்து ஆக்சஸிலுள்ள ஹூணர் அரசு, துருக்கியர் வசமாயிற்று. சின்னாட்கள் வாழ்ந்திருந்த ஹூண அரசின் தலைவர்களாகத் துருக்கர் விளங்கினர்.

**வரலாற்றில் ஒரு திருப்பம்:**

ஐந்து, ஆறும் நூற்றாண்டுகளில் நிகழ்ந்த அநாகரிக மக்களின் படையெடுப்புகள், இந்திய வரலாற்றாசிரியர்களால் அதிகமாகப் பாராட்டப்படுவதில்லை. எனினும், மேற்கு அல்லது வடக்கு இந்திய அரசியல் மற்றும் சமுதாய வரலாறுகளில் அது ஒரு திருப்பமுனையாக விளங்குகிறது. குப்தர் காலத்திய அரசியலமைப்பு முழுவதும் நாசமாக்கப்பட்டு, புதிய ராச்சியங்கள் தோன்றின. நம்பகமுள்ள குடும்ப அல்லது இனமரபுகள் ஹூணர் படையெடுப்புக் காலத்திற்கு முன்னதாகத் தோன்றவில்லை. அதற்குமுன் வழக்கிலிருந்த அரசகுலங்களின் நம்பகமுள்ள மரபுச் செய்திகள் யாவும் மறைந்துபோயின. மௌரியர், குஷானியர், குப்தர் ஆகியவர்களின் வரலாறுகள், புலவர்களின் இடையறா ஆராய்ச்சியின் பயனாக ஓரளவு நமக்குக் கிடைக்கின்றன. இத்தகைய ஆராய்ச்சிக்கு வழக்கிலிருக்கும் மரபுச் செய்திகள் அதிகமாகப் பயன்படுவதில்லை.[1] அன்னியர், எவ்வாறு காலப்போக்கில் இந்து சமயத்தைத் தழுவலாயினர், மற்றும் ரஜபுத்திரக்குடியினர் எவ்வாறு தோன்றினர் என்பதையும் அடுத்துவரும் அதிகாரத்தில் விரிவாகக் கூறுவோம்.

1 சாம்பிரதி அளிக்கும் சமண மரபுகளை இக்கூற்றுக்கு விதிவிலக்காகக் கொள்ளவேண்டும்.

**மௌகாரிகளும் 'மகத நாட்டுக் குப்தர்களும்'**

குப்தப் பேரரசு அழிந்து மறைந்த பின்னரும், 'குப்தர்' என்ற பெயரில் முடிகின்ற மற்றுமொரு குலமன்னர், மகத நாட்டில் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்களது வமிசாவளியை நோக்கும் போது, குப்தப் பேரரசர்களுக்கும் இவர்களுக்கும் தொடர்பில்லை என்பது தெரிய வருகிறது. இதே காலத்தில், கங்கையின் வட கரையில், மௌகாரி குல மன்னர்கள் சிறப்பெய்தி வந்தனர். மௌரியர் காலமுதலாகவே, போர்க்குணம் படைத்த மௌகாரி குல மன்னர்கள் இருந்துவந்தனரெனத் தெரியவருகிறது. மௌகாரித் தலைவர்கள் சிலர், கயா மாவட்டத்தில் குப்தப் பேரரசின் ஆதிக்கத்தில் ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரசு செலுத்தி வந்தனரென்றும் தெரிய வருகிறது. ஆறாவது நூற்றாண்டில் அவர்கள் சுதந்திரம் பெற்று, கனோஜைத் தங்கள் தலைநகரமாகக் கொண்டு அரசு செலுத்தத் தொடங்கினரென்றும் தெரியவருகிறது. இந்நாட்டைத் தலைநகரமாகக் கொண்ட முதல் அரசகுலம் இதுவேயாகும். பண்டைய நூற்றாண்டுகளில், இந் நகரம் சிறியதாகவும், அதிகப் புகழடையாமலும் இருந்து வந்தது. கங்கைச் சமவெளியின் பெரும்பகுதியில், செல்வாக்குப் பெற்றிருந்த இரு அரச மரபினருக்குள், ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் இடைவிடாது போர்கள் நடந்துகொண்டிருந்தன. அந்நூற்றாண்டின் இறுதியில் மௌகாரிகள், பிற்கால குப்தர்களை அவர்களது பண்டைய குடியேற்றங்களிலிருந்து துரத்தினர் என்றும் தெரிய வருகிறது. அத்துடன் மகதம் முழுவதையும் அல்லது பகுதியையேனும் இவர்கள் கைப்பற்றி ஆக்கிரமித்துக் கொண்டிருக்க வேண்டும். ஹர்ஷப் பேரரசின் எழுச்சியை வர்ணிக்கும் 'பாணன்' என்ற நாடகாசிரியன், குப்தர்களை மாளவ தேசத்தின் அரசர்களென்றே கூறுவான். இதிலிருந்து அவர்கள், தங்கள் சாம்ராச்சியத்தின் கீழ்ப் பகுதியில் வாழ வேண்டிய நிலை ஏற்பட்டதெனலாம். அங்கு ஹர்ஷனின் தகப்பன் பிரபாகர - வர்த்தனனுடன், இவர்களுக்குத் தொடர்பேற்பட்டிருக்க வேண்டுமென்றும் யூகித்தறியலாம். இக்குலத்தைச் சார்ந்த இளவல்களைப் பாணனும், சீன யாத்திரிகன் ஹுயூன்-சாங்கும், ஹர்ஷனின் சிற்றரசர்கள் என்றே வர்ணிக்கின்றனர். 'மாளவத்தின் கொடுங்கோல் மன்னன்' என்றழைக்கப்படுகின்ற ஒருவனால், மௌகாரிகுல இறுதி மன்னன் கிருகவர்மன் கொல்லப்பட்டான் எனத் தெரிய வருகிறது. இவ்வாறு ஏழாவது நூற்றாண்டின் தொடக்கத்திலேயே மௌகாரி சாம்ராச்சியம் வீழ்ந்தது. 'மாளவத்தின் கொடுங்கோல் மன்னன்' ஹர்ஷனின் கல்வெட்டொன்றில் குறிக்கப் பெற்றுள்ள தேவகுப்தனாதல் வேண்டும்

என்றும் உணரப்படுகிறது. வாரிசுகளின்றிக் கிரகவர்மன் இறந்ததும், கனோஜ் அவனது மைத்துனன் ஹர்ஷன் வசமாயிற்று. ஹர்ஷனின் ஆட்சியைப் பற்றிப் பின்வரும் பக்கங்களில் விரித்துரைக்கப்படுகிறது. ஹர்ஷனின், மரணத்தைத் தொடர்ந்து அவனது பேரரசும் வீழ்ந்தவுடன், ஆதித்தியசேனன் தலைமையில் குப்தர்கள் மீண்டும் புகழ் பெற்று எழுந்தனர் (ச. 675). எட்டாவது நூற்றாண்டில் அவர்கள் மறைந்தனர். மௌகாரி குலத்தைச் சார்ந்தவனாகை நாம் கருதக் கூடிய கனோஜ் நாட்டு 'யசோவர்மன்' இவர்களது அழிவிற்குக் காரணமாயிருந்திருக்கக் கூடும்.

**வாலபியும், பிற இராச்சியங்களும்**

ஐந்தாவது நூற்றாண்டின் இறுதியில் குப்ரது செல்வாக்கு மிகவும் ஒடுங்கிய பின், மேற்கிந்தியப் பகுதி, சிறுகச் சிறுக, மெய்த்ரகர் என்னும் ஓர் அன்னிய குடியினர் வசமாயிற்று. இம் மெய்த்ரகர் இரானிய நாட்டைச் சார்ந்தவர்களாக இருக்கக் கூடும். இக்குடியினர் வாலபியைத் (இந்திய இம்பீரியல் கஜட்டியர் சஞ்சிகையில் வாலா என்றும், 'ராஸ்மாலா'வில் உல்லுபீ-பூர் என்றும் குறிக்கப்படுவது) தலைநகரமாகக் கொண்டு தங்கள் ஆட்சியை நிறுவினர். 'வாலபி' சௌராஷ்டிர தீபகற்பத்தில் உள்ளது. தோராயமாக 770 ஆம் ஆண்டு வரையிலும் நிலைபெற்றிருந்த இவ்வரசை, அவ்வாண்டில் அராபியர் வென்றனர். குப்த சகாப்தத்தை, அடிப்படையாகக் கொண்ட இக்குல மன்னர்களின் நீண்ட வமிசாவளியும், அவரது பெயர்களும் தெய்திக் குறிப்புகளும் தெளிவாகத் தெரிய வருகின்றன. இவ்வரசு போதிய செல்வச் செழிப்பும், முக்கியத்துவமும் பெற்று விளங்கியது. ஆறுவது நூற்றாண்டில் தலைநகரத்தில், புகழ்பெற்ற பௌத்த சமய போதகர்கள் வசித்து வந்தனர். ஏழாவது நூற்றாண்டில், பௌத்த சமய கலைக் கூடமாக, பீஹாரிலுள்ள நளாந்தாவையும் அது போட்டியிட்டு மிஞ்சி விட்டதென்று கூறலாம். தற்போது அந்நகரம் பொலிவிழந்து நிற்கிறது. பண்டைய நாட்களில், அது சிறந்து விளங்கியதென்பதற்குரிய சான்றுகளே இல்லை.

வாலபி வீழ்ச்சியுற்றதும், மேற்கிந்தியப் பகுதியின் முக்கிய நகரமாக 'அன்ஹில்வாரா' (நாகர்வாலா முதலியன அல்லது பாட்ன) விளங்கியது: பதினைந்தாவது நூற்றாண்டில் அதுவும் அழிந்தமையால், ஆமதாபாத் அதன் வாரிசாக வளர்ந்து சிறப்பெய்தியது.

ஹூணர்களுடன் நாம் தொடர்புபடுத்திக் கூறிய கூர்ச்சரர்கள் தெற்கு ராஜஸ்தானத்தில் பாரோச் (ப்ரோச்) பீன்மல் என்னுமிடங்களில் இராச்சியங்களை ஏற்படுத்தினர்.

ஆருவது நூற்ருண்டில், இந்திய வரலாறு மிகவும் குழப்பமடைந்து காணப்படுகிறது. அமைதியின்மையும், அலங்கோலமும் அதிகமாகத் தாண்டவமாடியிருக்க வேண்டும்.

இவ்வதிகாரத்தில் நாம் விவரித்துள்ள வட இந்திய இராச்சியங்களுடன், சமகாலத்தில் தழைத்து வந்த, தென் கோடியிலுள்ள தமிழரசுகளைப் பற்றித் தற்சமயம் குறிப்பாக நாம் எதையும் சொல்வதற்சில்லை.

**ஏழாவது நூற்ருண்டிற்குரிய ஏராளமான சான்றுகள்**

ஆருவது நூற்ருண்டின் பிற்பகுதியைப் பொறுத்த வரலாற்றிற்குப் போதிய சான்றுகளில்லை என அவதியுற்ருேம். ஆனல் ஏழாவது நூற்ருண்டைப் பொறுத்த வரையில் அத்தகைய கஷ்டங்கள் இல்லை. ஹூயூன்-சாங் அல்லது யுவான்-சுவாங் என்ற பெயர் கொண்ட பிரசித்தி பெற்ற சீன யாத்திரிகனின் வர்ணனைக் குறிப்புகள், அவனது நண்பர்கள் அவனைப் பற்றி எழுதியுள்ள வாழ்க்கைக் குறிப்புகள், சீன அரசின் ஆதரவு பெற்ற வரலாற்று நூல்கள், ஹர்ஷனுடன் நண்பனுகப் பழகுகின்ற வாய்ப்புப் பெற்றிருந்த பிராமண நூலாசிரியன் பாணன் என்பவன் இயற்றியுள்ள வரலாற்றுத் தொடர்புள்ள நாடகம் ஆகிய இலக்கியச் சான்றுகளோடு, கல்வெட்டுக்களிலிருந்தும், நாணய ஆராய்ச்சி வாயிலாகவும், இதர சான்றுகளிலிருந்தும், பயனுள்ள முழுமையான விவரங்கள் நமக்கு ஏராளமாகக் கிடைக்கின்றன. மௌரியர் ஆட்சிக் காலம் நீங்கலாக, பண்டைய இந்தியாவில் ஆட்சிபுரிந்த எந்தக் குல வரலாற்றிற்கும், பெரு அளவில் இவ்வாறு கிடைக்கின்ற சான்றுகள் இல்லையென்றே கூறலாம். கனேஜ் நாட்டைச் சேர்ந்த ஹர்ஷன், நாற்பத்தோராண்டுகள் அரசு செலுத்தினன். அசோகனைப் போலவே, திறமைமிக்க இவன், வட இந்தியாவில் நிலவிய குழப்பத்தை நீக்கினன். இவனை, வமிசாவளியில் இடம் பெற்றுள்ள ஓர் அரசன் என்று சுலபமாக ஒதுக்கிவிடுவதற்கில்லை. அவனை நன்கறிந்தவர்கள், மன்னனின் குணதிசயங்களைப் பற்றியும், அவனது ஆட்சியின் சிறப்பியல்புகளையும் எடுத்துக் கூறியுள்ளார்கள். அவைகளிலிருந்து உழைப்பாலும் திறமையாலும் உயர்ந்து என்றும் சிரஞ்சீவியாக வாழ்கின்ற ஒருவனுகவே இவன் விளங்கி வருகிருன்.

**மன்னர் ஹர்ஷன்: கி. பி. 606-47.**

ஹர்ஷன் அல்லது ஹர்ஷவர்த்தனன் என்பவன் தானேஸ்வரத்தை ஆண்டுவந்த பிரபாகரவர்த்தனனின் இளைய மகனாவான். தானேசுவரம் டெல்லிக்கு வடக்கிலுள்ள புனித நகரங்களில் ஒன்றாகும். பிரபாகரவர்த்தனன் ஆறாவது நூற்றாண்டின் பிற்பகுதியில், அண்டையிலுள்ள கூர்ச்சரர், மாளவர் மற்றும் பலரை வென்று பெரும்புகழ் படைத்திருந்தான். கி.பி.604 ஆம் ஆண்டில் எதிர்பாரா வகையில் அவன் திடீர் மரணமடைந்தான். அவனைத் தொடர்ந்து அவனது மூத்த மகனும் இறந்தான். மத்திய வங்காளம் அல்லது கௌட தேசமன்னன் சசாங்கன் அவனை வஞ்சகமாகக் கொலை செய்தான் என்று கூறப்படுகிறது. பிரபாகவர்த்தனின் இளைய மகன் ஹர்ஷன் அப்போது பதினாறு அல்லது பதினேழு வயது நிரம்பப் பெற்றிருந்தான். காலியாக இருந்த சிங்காதனத்தை ஏற்குமாறு பிரபுக்கள் அவனைத் தூண்டினர். வட இந்தியா முழுவதையும் அடக்கி ஆளுகின்ற பொறுப்பையும், குழப்பத்தை நீக்குகின்ற பொறுப்பையும் அவன் ஏற்க வேண்டியதாயிற்று. இளமை மிக்க இம்மன்னன் அக்டோபர் 606 ஆம் ஆண்டில் தன்மீது சுமத்தப்பெற்ற பொறுப்புகளை மனமின்றியே ஏற்றான். ஐந்தரை ஆண்டுகளை அவன் போரிடுவதிலேயே கழிக்க வேண்டியதாயிற்று. அரசேற்றதும், தன் மைத்துனன் மௌகாரிகுல, கிரகவர்மனுக்குச் சொந்தமான கனோஜ் நாட்டை அவன் கைப்பற்றிக் கொண்டான். மாளவ மன்னனொருவனால் போரில் கொல்லப்பட்ட இவனுக்கு வாரிசுகள் இல்லை. இவனைக் கொன்ற மாளவ மன்னன் தேவகுப்தனாக இருக்கக்கூடும் என்றும் முன்னர்க் குறித்தோம், சாம்ராச்சியத்திலுள்ள பிரபுக்களும், பிற பெரியோர்களும் ஒன்று கூடி ஆட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டுமென ஹர்ஷனை வேண்டிக்கொண்டதாக யுவாங்-சுவாங் கூறுகிறார். மௌகாரி குல மன்னர்களில், இறுதியான மன்னனின் விதவை என்ற முறையில், ஹர்ஷனின் சகோதரி ராஜ்ய ஸ்ரீ, இம்முயற்சியில் தீவிரப்பங்கு கொண்டாள் எனத் தெரிய வருகிறது. இந் நிகழ்ச்சிகளுக்குப்பின், தானேசுவரத்திலிருந்து கனோஜிற்குத் தன் தலைநகரை மாற்றிக் கொண்டான்.

சில ஆண்டுகளுக்குப்பின் இந்திய நாட்டிற்கு விஜயம் செய்த சீன யாத்திரிகன் கீழ் வருமாறு கூறுகிறான்: ‘தன் ஆணைக்கு அடங்காதவர்கள் யாவரையும் கிழக்கிலிருந்து மேற்குவரை சென்று ஹர்ஷன் போரில் வென்றான்; யானைகளை அடக்குவாருமில்லை; போர் வீரர் தங்கள் கவசங்களை அகற்றியதுமில்லை. கொண்ட வெற்றிகளுக்கு உதவியாக இருந்த படையில் 5,000

யானைகளும், 20,000 குதிரை வீரர்களும், 50,000 காலாள் வீரரு மிருந்தனர். தேர்களை அவன் ஒதுக்கிவிட்டான் எனத் தோன்று கிறது. குறிக்கோள்கள் யாவையும் நிறைவேற்றிய பின்னரும் அவனது படையில் குதிரைப்படையினர் 1,00,000 மாகவும் யானை கள் 60,000 மாகவும் பெருகிவிட்டதாகக் கூறப்படுகிறது. இப் புள்ளி விவரங்களை நம்புவதற்கில்லை; ஒரு வேளை அவை தவறாக வும் இருக்கக்கூடும். பஞ்சாப் நீங்கலாகப் பீஹார் மற்றும் வங்காளத்தில் பெரும் பகுதியைக் கொண்ட மேலை இந்தியா முழுவதையும் 612 ஆம் ஆண்டிற்குள் ஹர்ஷன் வென்றிருக்கக் கூடும். அப்போது அவனுக்கு முறையாக முடிசூடப்பெற்றதென் றும் தெரிய வருகிறது. ஆனால், மிகவும் பரவியிருந்த ஹர்ஷனால் தோற்றுவிக்கப்பட்ட புதிய சகாப்தம் அக்டோபர்606-ல் அவனது ஆட்சி ஏற்றுக்கொள்ளப்பட்ட நாளிலிருந்து கணக்கிடப்படு கிறது. வங்காளக் குடாக்கடல் கரைமீதுள்ள, கஞ்சாமின் மீது அவன் 643 ஆம் ஆண்டில் தொடுத்த போர் இறுதியானதாகும். சில ஆண்டுகளுக்கு முன் அவன் வாலாபியின் மீது படை யெடுத்து வெற்றி கண்டான். இவ்வெற்றியின் விளைவாக மேற்குத் திசையினுள்ள அரசுகள் ஹர்ஷனின் ஆதிக்கத்தை ஏற்றன. கீழ்த்திசையிலும் அவனது புகழ் பரவியிருந்தது. வெகு தொலைவிலுள்ள அஸ்ஸாம் பகுதியின் அரசனும்,பேரரசின் ஆணைகளைச் சிரமேற்கொண்டு ஹர்ஷனின் அவையில் பிரசன்ன மாயிருந்தான்.

### சாளுக்கியருடன் போர்

ஆறுவது நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோன்றிய தக்காணத்திலுள்ள சாளுக்கிய அரசு அக்குலத்தைச் சார்ந்த இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் மிகவும் சிறந்து விளங்கியது. அவன் ஹர்ஷனுடன் சமகாலத்தில் ஆட்சி புரிந்தவன். வட விந்திய மன்னன் தனக்குப் போட்டியாக விளங்கிய புலிகேசியை கி. பி. 520-ல் தாக்கினன். போரில் தோல்வியுற்ற ஹர்ஷன், நர்மதை ஆற்றையே தனது தெற்கெல்லையாக ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. ஹர்ஷனது போர் முயற்சிகளில் அவன் பெற்ற தோல்வி இது ஒன்றேயாகுமெனத் தெரிகிறது. அவ்வப் போது படை வீரருக்கு உரிய வேலை தேடித்தருவதிலேயே அவனது ஆட்சிக் காலத்தின் பெரும் பகுதி கழிந்தது. எனினும் ஆர்வமிக்க அவன் அரசாங்க வேலைகளிலும், மிகவும் அதிகமான நேரத்தைச் சமயப்பணியிலும் தத்துவ விசாரங்களிலும் செல விட்டு வந்தான் என்பதும் குறிப்பிடத்தக்கதேயாகும்.

**தலைநகரம் கனோஜ்**

கங்கைக்கரையிலுள்ள புராதன நகரமாக கனோஜ் (கன்யா குப்ஜம்) ஹர்ஷனால் பேரரசின் தலைநகரமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டது. அரண்களால் பாதுகாக்கப்பட்டு, செல்வமிக்க சிறந்த நகரமாக அது விளங்கியது. நான்கு மைல்கள் நீளமும், ஒரு மைல் அகல முள்ள அந்நகரத்தில், உயர்ந்த பல கட்டடங்களும் குளங்களும் தோப்பு துரவுகளும் அமைக்கப் பெற்றன. ஏராள மான பிராமண–சமயக் கோவில்கள் அக்காலத்தில் இருந்த போது, நூற்றுக்குமதிகமான பௌத்த மடாலயங்கள் ஹர்ஷ னின் காலத்தில் அங்கிருந்தன. ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த அவைகளில் ஒன்றிரண்டு மடாலயங்களே இப்போது காணக் கிடைக்கின்றன. அங்கு வசித்த குடிமக்கள் பௌத்த சமயத்திற் கும், பிராமண சமயத்திற்கும் ஒரே வகையான ஆதரவளித்து வந்தனர். பலவகையான அனுபவங்களுக்குப்பின் இந்நகரம், பதினாறுவது நூற்றாண்டில் ஷெர்கான் அல்லது ஷெர்ஷா என் பவனால் அழிக்கப்பெற்றது. தற்போது, அந்நகரம் இஸ்லாமியர் வசித்து வரும் ஒரு சிறு கிராமமாக விளங்குகிறது. பல மைல் களுக்குக் குறிப்பிட உருவமெதுவுமற்ற மணல்குன்றுகளே காணப் படுகின்றன. அம்மணல் மேடுகள், புகை வண்டிக்குரிய நிலக்கரி தேக்கிடங்களாகப் பயன்படுகின்றன. ஹர்ஷர் காலத்தில் எழுந்த கட்டடங்களை கனோஜிலோ அல்லது பிறவிடங்களிலோ காண்பதரிது.

**நிர்வாகம்; இலக்கியம்**

கி.பி. 647 ஆம் ஆண்டின் முற்பகுதியில் அல்லது கி.பி.646 ஆம் ஆண்டின் பிற்பகுதியில் ஹர்ஷன் இறந்தான், அப்போது அவன் ஐம்பத்தேழு அல்லது ஐம்பத்தெட்டுஆண்டுகள் எய்தியிருந்தான். எனினும், வாழ்நாளில் பெரும்பகுதி அவன் இளமையின் முறுக் குடனேயே இருந்தான். வாழ்நாளில் மௌரியராட்சியிலிருந் தது போல, அதிகாரிகளின் ஆணவமிக்க ஆட்சியைப்பற்றி நாமெதுவும் கேள்விப்படுவதில்லை. எனினும் அரசாங்க அலுவல் களைச் சரிவரக் கவனிப்பதற்குத் தேவையான அதிகாரிகள் நிய மிக்கப்பட்டிருக்க வேண்டும். மிகப்பரந்த சாம்ராச்சியத்தில் அவ் வப்போது, அரசன் மேற்கொண்ட நேர்முக மேற்பார்வையுடன் அவன் திருப்திடைந்திருந்தான். மாரிக்காலங்களில் பெருவழி கள் சேதமடைந்து போக்குவரத்தைத் தடைசெய்து வந்தமை யால், அக்காலங்கள் நீங்கலாகப் பிற நேரங்களில் மேற்பார்வைக் கென மன்னன் பிரயாணங்களை மேற்கொண்டான். தங்கமுரசங் கள் முழங்கத் தன் பரிவாரங்களுடன் அவன் பவனி வருவது

வழக்கம். தற்காலப்பர்மா அரசர்களைப்போல வழியில் அவன் தங்குவதற்கெனத் தாற்காலிகமாக, மூங்கில் மற்றும் மரத்தினால் தங்குமிடங்கள் எழுப்பப்படுவதுண்டு. மன்னன் புறப்பட்டுச் சென்றதும் அவைகளை எரித்து விடுவது வழக்கம். பல மாகாணங்களில் விரிவான அரசியல் நிர்வாகத்தைக்குறுமுடி மன்னர்கள் கவனித்து வந்தனர். அரசியல் முறை மிகச்சிறந்திருந்த தென்று சீனயாத்திரிகன் எண்ணினான். ஐந்தாம் நூற்றாண்டில் குப்தராட்சியில் நிலவிய கடுமை சற்றுக் குறைந்து காணப்பட்டது. திபெத்தியரிடை உள்ள பழக்கத்தைப்போல அநாகரிகமான முறையின் சீன யாத்திரிகன் ஒரு முறை சிறைப்படுத்தப்பட்டான். இதனால், உயிரோடிருப்பதோ அல்லது இறப்பதோ, கைதியின் திறமையைப் பொறுத்திருந்தது. இத்தன்மையான தண்டனை யாவருக்கும் தாராளமாக வழங்கப்பட்டது. அங்கஹீனம் செய்வது, தீவிர ஆலோசனையின் பின்னரே மேற்கொள்ளப்பட்டது. விக்ரமாதித்தியன் காலத்தைப் போல, பிரயாணம் செய்வது அபாயமற்றதாக விளங்கவில்லை. பெருவழிகளில் கள்ளர் பயமிருந்துவந்தது. அரசாங்க அலுவல்களைப்பற்றிய குறிப்புகள் ஒவ்வொரு மாகாணத்திலும், அதற்கென அமர்த்தப் பெற்றிருந்த அலுவலர்களால் எழுதப் பெற்று வந்தது. கல்வியறிவு பரவியிருந்தது. மகதத்தில், நளாந்த போன்ற இடங்களிலிருந்த பௌத்த மடாலயங்கள்; கல்விக் கூடங்களாகவும், கலைக்கூடங்களாகவும் விளங்கின. மன்னரும், கல்வி கேள்விகளில் மிகச் சிறந்து விளங்கி இலக்கண நூலொன்றையும், சில செய்யுள்களையும், மூன்று வடமொழி நாடகங்களையும் இயற்றினான். அவைகளில், புத்த சமயக் கதையொன்றைக் கருவூலமாகக் கொண்டு இயற்றப்பட்ட நாடகமான 'நாகாநந்தம்' மிகவும்போற்றப்படுவதுடன் ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. மன்னனுக்கு நெருங்கிய நண்பனான 'பாணன்' என்ற ஒரு பார்ப்பனன், எசமானனின் ஆட்சியிலடங்கிய நிகழ்ச்சிகளில் ஒரு பகுதியைச் சுவைமிக்கதொரு வரலாற்று நாடகமாக இயற்றியுள்ளான். இந்நாடகம், சோர்வளிக்கும் கரடுமுரடான நடையில் எழுதப்பட்டிருந்த போதிலும், துல்லியமான பயனுள்ள சில வரலாற்றுக் குறிப்புகள் நமக்குக் கிடைக்கின்றன. இம்முறையில், அதை அபுல்-பாசலின் 'அக்பர்நாமா' என்ற நூலுடன் ஒப்பிடலாம்.

**சமயம்**

மிகவும் பக்திமானாக விளங்கிய ஹர்ஷன், நாள்தோறும் சமய சிந்தனையில் பல மணி நேரங்களைக் கழித்தான். ஆதியில் சிவபிரானிடம் மிக்க ஈடுபாடுடைய அவன் சூரியன், புத்தன் ஆகி

யோரையும் வழிபடலானான். ஆட்சிக் காலத்தின், இறுதியில் பௌத்த சமயக்கொள்கைகளில்,அவன் அதிக கவனம் செலுத்தி வந்தான். அசோகனைப் போலவே தொண்டு செய்வதில் அவனுக்கு விருப்பமதிகரித்ததெனத் தெரிய வருகிறது. 'சமயச் சிறப்பை வேரூன்றச் செய்ய வேண்டுமென்ற ஆர்வத்தில் அவன் ஊணுறக்கங்களை மறந்தான். ஜீவராசிகளைக் கொல்வதையும், மாமிசம் உண்பதையும் 'ஐந்து தீவுகளிலும்' அவன் தடை செய்தான். இவ் விதிகளை மீறுபவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்படும். அதிலிருந்து மன்னிப்போ அல்லது விதிவிலக்கோ பெறுவது அரிதாயிற்று.

அவனது அரசு முறைகள் படிப்பதற்கு மிகச்சுவையானவையாக விளங்குகின்றன. அதைக் குறித்த வரலாற்றுச் செய்திகள் மிக அதிகமாகக் கிடைக்கின்றன. ஹர்ஷனது ஆட்சியை மட்டிலும் விரித்துரைத்துப் பெரும் நூலொன்றை எழுலாம். பிரசித்தி பெற்ற ஹயூன்-சாங் அல்லது யுவாங்-சுவாங் என்ற சீன யாத்திரிகன் விடுத்துள்ள குறிப்புகள் நமக்கு நம்பிக்கையுள்ள முக்கியச் சான்றுகளாக விளங்குகின்றன. எனவே,கருத்துச் செறிந்த அவனது வாழ்க்கை வரலாற்றைச் சற்று விரிவாக எடுத்துரைப்பது விரும்பத்தக்கதாகும்.

**ஹயூன்-சாங் அல்லது யுவாங் சுவாங்**

கௌரவமும் கல்வியறிவும் மிக்க சீனப் பிரமுகர் ஒருவரின் நான்காவது மகனான யுவாங்-சுவாங், குழந்தைப் பருவம் முதலே கடுமையாகச் சிந்திக்கும் வழக்கமுடையவராகவும், புனிதக்கோட்பாடுகளைக் கற்பதில் ஆர்வமுடையவராகவும் விளங்கினார். இருபத்தொன்பதாம் வயதில், தமது பிரயாணங்களைத் தொடங்கும் போது (கி.பி. 629) 'புத்த துறவி'யென அவர் புகழ் பெற்றிருந்தார். புண்ணிய பூமியான இந்திய நாட்டிலுள்ள சமயநூல்கள் யாவையும் கற்றுணர வேண்டுமென்ற ஆர்வம் கொண்ட அவர் மேற்கு முகமாகப் பிரயாணம் செய்யக் கூடாதென மன்னன் விதித்த தடையையும் மீறத் துணிந்தார். மேற்குச் சீனத்தில் அவர் புறப்பட்ட இடத்திற்கும், இந்திய நாட்டின் தலைவாயிலிலுள்ள காபூலுக்கும், மூவாயிரத்திற்கு மேற்பட்ட மைல்கள் உண்டு. அச்சமிக்க இந்நெடுந் தூரப்பிரயாணத்தை மேற்கொள்வதற்கும், வழியில் நிகழ்ந்த பல இன்னல்களைத் துணிவுடன் ஏற்கவும், இப் பேரார்வமே யாத்திரிகருக்குப் போதிய திடமளித்தது. அவர் எதிர்த்து நின்ற ஏராளமான இன்னல்களின் வர்ணனையைச் செவியுறும் போது, அது ஒரு வீரகாவியமெனத் தோற்றமளிக்கிறது. திடசித்தமுடைய சீன யாத்திரிகர் வடக்கிலிருந்த

பெரு வழியைப் பின்பற்றி இசிக் கூல் ஏரியைக் கடந்து, தாஷ் கெண்ட், சாமர்கெண்ட், குண்டஸ் ஆகிய பகுதிகளைக் கடந்து, 630 ஆம்ஆண்டு அக்டோபர் மாதத் தொடக்கத்தில் காந்தார நாட்டை அடைந்தார். 630 ஆம் ஆண்டிற்கும் 643 ஆம் ஆண்டு இறுதிக்கும் இடைப்பட்ட காலத்தில் இந்திய நாட்டின் ஒவ்வொரு மாகாணத் திற்கும் விஜயம் செய்து, அப் பகுதிகளின் புவிஇயல், நினைவுச் சின்னங்கள், மக்கள், சமயநிலை ஆகியவைகளை நன்கு கவனித்துக் குறிப்புகள் எழுதியுள்ளார். இத்தகைய சேவைகள் அவரை 'இந்தியப் பௌ–சானியஸ்' என்ற பட்டப் பெயருக்கு உரியவராக் குகின்றன.[1]

தென் திசையிலுள்ள பெருவழியைத் தேர்ந்து, பாமீர்களைக் கடந்து காஷ்கர், யார்க்கண்ட், கோட்டான், லாப்நார் ஆகியவை களின் வழியாக அவர் வீடு திரும்பினர். உண்மையில், இது மிகவும் அற்புதமான ஒரு பிரயாணமாகும். 635 லிருந்து 643 வரையிலும் எட்டு ஆண்டுகளை ஹர்ஷனின் அவையிலேயே கழித் தார். அதிக மதிப்புள்ள ஏராளமான உருவங்களையும் ஏடுகளை யும், நினைவுச் சின்னங்களையும் சேகரித்துக் கொண்டு 645 ஆம் ஆண்டின் முற்பகுதியில், தாய்நாடு திரும்பினர். சில புலவர்களை அமர்த்திக் கொண்டு தாம் சேகரித்து வந்த சான்றுகளை ஆராய் வதில் எஞ்சிய தமது வாழ் நாட்களைக் கழித்து, 664 ஆம் ஆண் டில் தமது அறுபத்து நான்கு அல்லது அறுபத்துஐந்தாவது வய தில் மரணமடைந்தார். அவரது சீரிய பண்பு, சலனமற்ற வீரம், ஆழ்ந்த கல்வி ஆகிய நற்குணங்கள் சீனப் பேரரசரையும் மக்களையும் எளிதில் கவர்ந்தன. 'சமயப் புரவலர்' என்று யாவ ராலும் 1200 ஆண்டுகளுக்கு முன்னதாக மனமொப்பி அளிக்கப் பெற்ற பிருது, இன்றும் பௌத்தம் சமயம் சார்ந்த பகுதிகளில் அழியாது பசுமையாகவே விளங்கி வருகிறது.

இந்திய வரலாறு, ஹயூன்–சாங்கிற்குப் பட்டிருக்கும் கடனைச் சுலபத்தில் எடுத்துக் கூற இயலாது.

[1] வாட்டர்ஸ் என்பவரின் 'இந்தியாவில் யுவாங்-சுவாங்கின் யாத்திரை, (1905) என்ற நூலில் வால்யூம் ii இறுதியிலுள்ள வரை படத்தைப் பார்க்க வும். கிரேக்க வரலாறு அறியாத வாசகர்களின் உதவிக்கென, பின்வரும் தகவல் அளிக்கப்படுகிறது. கி. பி. 2 ஆம் நூற்றுண்டில் பௌசானியஸ் என்பவன், கிரேக்கநாடு முழுவதும்சுற்றினன்.பல குறிப்புகளையும், பத்துப் பகுதிகள் கொண்ட நூலாக இயற்றி வெளியிட்டான். 'யாத்திரிகன் அல்லது மேற்குப் பகுதிகளின் குறிப்பேடுகள்' என்ற சீன யாத்திரிகனது நூல் பன்னிரண்டு பகுதிகள் (சுவான்) கொண்டது. வாட்டர்ஸ் என் பவரின் நூலிலுள்ள அதிகாரங்களு (xvi —xviii) க்கிணையாகக் கூறக்கூடிய இறுதியான மூன்று பகுதிகளும் காணக் கிடைக்கவில்லை. அவை இடைச் செருகல்களாகவும் தரம் குறைந்தவைகளாகவும் காணப்படுகின்றன.



a. Medal of Alexander the Great




b. Coins of Taxila




c. Diodotos II



d. Euthydemos




e. Eukratides




f. Menander




g. Gondophernes



h. Kanishka

பண்டைய இந்திய நாணயங்கள்




*a*. Candragupta I




*b*. Samudragupta




*c*. Candragupta II




*d*. Toramāṇa




*e*. Govindacandra Gāhaḍavāla




*f*. Pallava




*g*. Rājarāja I Cola

பண்டைய இந்திய நாணயங்கள்

**கனோஜ், பிரயாகை ஆகிய இடங்களில் கூட்டப்பெற்ற அவைகள்**

வங்காளத்தில் கொலு வீற்றிருக்கும்போது முதன் முதலாக, ஹர்ஷன் 'சமயப் புரவலரை'ச் சந்தித்தான். அவரைக் கௌர விக்கின்ற வகையில் தலைநகரமான கனோஜில் சிறந்த அவை யொன்றைக் கூட்டினான். தூரக் கிழக்கிலுள்ள அஸ்ஸாமின் மன்னன், மேற்கில் தொலை தூரத்திலுள்ள வாலபி மன்னன் ஆகியவருட்பட இருபது குறுமுடி மன்னர்கள் அவையில் வந்தி ருந்தனர். கனோஜ் அவை செவ்வனே நடந்தேறியபின், மதிப் பிற்குரிய தனது விருந்தினரைத் தன்னுடனேயே பிரயாகை (அலகாபாத்)க்கு அழைத்துச் சென்றான். அங்கு மீண்டுமொரு பெருங் கூட்டம் கூட்டப்பெற்றது. அரசனின் கருவூலத்திலுள்ள பொருள்கள் யாவும், பிராமண, சமண மற்றும் பௌத்த சமயம் சார்ந்த பல்லாயிரக்கணக்கான புனிதத் துறவிகளுக்கு வாரிவழங் கப்பெற்றது. தொடக்க நாளன்று பௌத்தரின் உருவச் சிலைக்கு ஆடம்பரமான வழிபாடு நடத்தப்பெற்றது. அடுத்த இரண்டு, மூன்றாவது நாட்களில், சூரியன், சிவன் ஆகியவர்களின் உருவச் சிலைகளுக்குச் சற்று எளிய முறையில் வழிபாடுகள் நடைபெற்றன. 643 ஆம் ஆண்டில் பிரயாகையில் கூடிய அவை, அவ்வகைகளில் ஆறாவதெனக் கூறப்படுகிறது. ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை; தான் சேமித்துள்ள பொருள்களை வாரி வழங்கும் பழக்கம் ஹர்ஷ னிடமிருந்தது. இத்தகைய மற்றுமோர் திருவிழாக் கொண்டாட் டத்தைக் கண்டுகளிப்பதற்கு ஹர்ஷன் உயிருடனில்லை. பெருமை கள் யாவும் சூட்டி ஏராளமான பொருள்களையும் வெகுமதியாக அளித்து யாத்திரிகரை வழி அனுப்பி வைத்தனர்.

**ஹர்ஷனின் மரணம், விளைவுகள்**

646 ஆம் ஆண்டின் இறுதியில் அல்லது 647 ஆம் ஆண்டின் முற்பகுதியில் வாரிசு எதுவுமின்றி மன்னன் இறந்தான். வன்மை யுள்ள அவன் மறைந்ததும், நாடு முழுவதிலும் குழப்பமேற் பட்டது; பஞ்சமொன்று மேற்பட்டு அல்லலை அதிகரித்தது.

அப்போது நூதனமான சம்பவமொன்று நிகழ்ந்தது. வாங்-ஹியூன்-சி என்ற சீனத்தூதுவன் ஒருவன் ஹர்ஷனது அவையிலிருந்தான். அவனுக்கு, பாதுகாவலர்களாக முப்பது வீரர்களும் இருந்தனர். காலியாக இருந்த அரச பீடத்தைக் கைப்பற்றிய அமைச்சனொருவன், தூதுவனைத்தாக்கி, அவனது பொருள்களையும் கொள்ளையிட்டு, காவலர் சிலரைக் கொன்று, மற்றும் சிலரைச் சிறைப்பிடித்தான். வாங்-ஹியூன்-சி தந்திர மாக நேபாளத்திற்குத் தப்பிச் சென்றான். நேபாளம், அப்போது திபெத்தின் ஆதிக்கத்தில் அடங்கியிருந்தது. சிராங்-சான்

காம்போ என்ற புகழ் பெற்ற திபெத்திய மன்னன் சீன இளவரசி யொருத்தியை மணந்திருந்தான். திபெத்தியரும், நேபாள மக்களும் கொண்ட படையொன்றைத் திரட்டிய அவன், சமவெளியில் புகுந்து, 'திர்குட்' என்னும் முக்கிய நகரத்தை முற்றுகையிட்டு, கடுமையான உயிர்ச்சேதத்திற்குப்பின் இந்தியப் படையினரை முறியடித்து, அரசைக் கவர்ந்த கயவனை, உற்ருர் உறவினருடன் சிறைப்பிடித்தான். கைதியைச் சீன தேசத்திற்கு அனுப்பி வைத்தான். அவன் அங்கு உயிர் நீத்தான். கி. பி. 703ஆம் ஆண்டு வரையிலும் 'திர்குட்' திபெத் மன்னன் வசமிருந்து வந்தது.

ஹர்ஷனின் மரணத்தால்; சாம்ராச்சியத்தை நன்ருகப் பிணைத்திருந்த சூத்திரக்கயிறு அறுந்தது. மூன்று, ஆருவது நூற்ருண்டுகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் மீண்டும் தோன்றின. நாடுகளின் புனரமைப்பும் தொடர்ந்தது. இந்நிகழ்ச்சிகளைப் பற்றிய குறிப்புகள் தெளிவின்றிக் காணப்படுகின்றன. அரங்கிலிருந்து, ஹர்ஷன் வெளியேறிய பின்னர், சின்னுட்களுக்கு நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் குறித்துத் தெளிவாக எதுவும் கூறுவதற்கில்லை.

அவனுக்குப் போட்டியாக, விளங்கிய சாளுக்கியன் இரண்டாம் புலகேசி, வடவிந்தியர் தாக்குதலிலிருந்து தக்காணத்தை மிகவும் கவனமாகப் பாதுகாத்தான். ஆனல், ஹர்ஷன் உயிர் நீப்பதற்கு ஐந்தாண்டுகள் முன்னதாகவே உயிர் துறந்தான். தென்கோடியிலுள்ள காஞ்சி அல்லது காஞ்சிவரம் என்னுமிடத்தில் ஆட்சி செலுத்தி வந்த, நரசிம்மவர்மன் என்னும் பல்லவ மன்னன் 642ஆம் ஆண்டில், புலகேசியை முறியடித்ததோடு, கொன்றுமிருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. இவ்வாறு பல்லவ மன்னன், தீபகற்ப இந்தியாவின் பெருமன்னனுகை விளங்கினுன். தென் இந்திய வரலாற்றுக் கண்ணேடு, இதைப் பற்றிய விவரங்களைப் பின்னெரு பகுதியில் மேலும் விரித்துரைப்போம்.

**வரலாற்றின் ஒருமைப்பாடு மறைதல்**

இந்திய வரலாற்றில் இதுகாறும் நாம் கண்டுவந்த ஒரு சிறிது ஒருமைப்பாடும், ஹர்ஷனின் மரணத்தோடு மறைந்து விடுகிறது. பன்னிரண்டாவது நூற்ருண்டின் இறுதியில் மகமதுகோரி மற்றும் அவனது சார்பில் போரிட்ட தளபதிகளும், இந்திய நாட்டின் பல பகுதிகளையும் கைப்பற்றினர். ஹர்ஷனின் மரணத்தையடுத்து நாம் இழக்கும் வரலாற்று ஒருமைப்பாட்டை மீண்டும் அக்காலத்திலேயே; கண்ணுறுகிருேம். இந்திய

நாட்டின் பெரும்பகுதி. அப்போது டெல்லி சுல்தான்களின் ஆட்சியில் அடங்கியிருந்தது. ஏழாவது நூற்றாண்டு இடைக்கால முதல், இஸ்லாமியரின் ஆட்சி ஏற்படும்வரை, அல்லது தோராய மாகக் கி. பி. 1200 வரை வட இந்தியாவிலும், கி. பி. 1300 வரை தென்னிந்தியாவிலுமுள்ள இடைக்கால இந்து இந்திய வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொடர்ச்சியாக எடுத்துரைக்க இயலாது. இவ் விஷயத்தை, நூலின் மூன்றாம் பகுதியில் சற்று விரிவாக ஆராய் வோம்.

## 5. தென்-கிழக்கு ஆசியாவில் இந்திய நாட்டின் செல்வாக்கு

கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்க நூற்றுண்டுகளில் தொன்மை வாய்ந்த இந்தியப் பண்பாடு, தென்கிழக்கு ஆசிய நாடுகளின் பண்பாடுகளுடன் உறவு கொண்டு, தன் பண்பாட்டுச் சிறப்பை உணர்த்தத் தொடங்கியது. குப்தராட்சியின் இறுதிக்குள், அப் பகுதிகள் முழுவதிலும் இந்தியரின் கருத்துகளும், பழக்க வழக்கங்களும், குறிப்பாகச் சமயக் கருத்துகள் அதிகமாகப் பரவின. எனவே, தென்கிழக்கு ஆசியப் பண்டைச் சாம்ராச்சியங்கள் சிலவற்றை இங்கு நாம் கற்பது பொருத்தமுடையதேயாகும்.

**புராதனத் தொடர்புகள்**

கிறிஸ்து சகாப்தம் தொடங்குவதற்கு முன்பாகவே, இந்தோனேசியத் தீவுகளுக்கும், இந்திய நாட்டிற்குமிடையில் நெருங்கிய தொடர்பிருந்து வந்ததெனத் தெரிய வருகிறது. பௌத்த சமயம் சார்ந்த 'ஜாதகக் கதைகளிலும்' பிற இலக்கியங்களிலும், 'தங்கம் விளையும் நாடு', 'பொன் விளையும் தீவு' என்ற குறிப்புகள் பல முறை பயன்படுத்தப்பட்டுள்ளன ('சுவர்ண பூமி' சுவர்ண த்வீபம்). இச் சொற்கள் இந்திய நாட்டிற்குக் கிழக்கிலுள்ள தீவுகளையும் பகுதிகளையுமே குறிப்பதாகக் கொள்ளலாம். கி. பி. இரண்டாம் நூற்றுண்டில், டாலமி என்பவர் இயற்றியுள்ள பூவியல் நூலிலிருந்து, இந்தியத் துறைமுகங்களுக்கும் தென் கிழக்கு ஆசியத் துறைமுகங்களுக்குமிடையில் நெருங்கிய வாணிபத் தொடர்பிருந்து வந்ததெனவும் அறிகிறோம். தென் கிழக்கு ஆசியப்பகுதிகள் பலவற்றிற்கு, இந்திய-நாட்டுப் பெயர்கள் சூட்டப்பெற்றுள்ளன. கடல் கடந்து வாணிபம் செய்யும் பழக்கம் அதிகரித்து வந்தமையாலும், இந்தியப் பொருள்களுக்கு ரோமாபுரியில் மதிப்பு மிகுந்ததாலும், தென்கிழக்கு ஆசியாவில் இந்தியரின் செல்வாக்கு வளர்ந்து வந்தது என்று கூறுவதே பொருத்தமுடையதாகும். திட்டமிட்ட குடியேற்றத்தால் இச் செல்வாக்கு வளர்ந்ததென்று கூறுவது அத்துணைப் பொருத்தமுடையதன்று. பௌத்த சமயத்தை, மற்றுமொரு காரணமாகக் கூறலாம். குறிப்பாக, மகாயானப் பிரிவைச் சார்ந்த பௌத்த சமயக் கோட்பாடுகளை, உறுதி பூண்ட சமயத் துறவிகள் கடல் கடந்தும் சென்று பரப்பி வந்தனர். சமயக் கோட்பாடுகளுடன்

இந்தியப் பண்பாடுகளையும் அவர்கள் உடன் கொண்டு சென்றனர். தாய்லாந்து, கம்போடியா, அன்னும், சுமத்ரா, ஜாவா, செலிபீஸ் ஆகிய தீவுகளில் காணப்படும் அமராவதி கலைப்பாணியில் அமைந்த பௌத்த உருவச் சிலைகளில், இந்திய நாட்டிற்கும், தென்கிழக்கு ஆசிய நாட்டிற்குமிடையிலுள்ள ஆதிப் பண்பாட்டு உறவை முதன் முறையாகக் காணலாம். கம்போடியாவிலுள்ள ஆக்-ஹியோ என்னுமிடத்தில் அத்தகைய உருவச்சிலையொன்று கண்டெடுக்கப்பட்டது. அதன் அருகிலேயே 'அந்தோனியஸ் பயஸ்' (கி. பி. 138-61) என்னும் உரோமானியப் பேரரசரின் தங்க நாணயமும் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

ஜாவா, போர்னியோ, மலேயா, கம்போடியா ஆகிய இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள தென்-கிழக்கு ஆசிய வெட்டெழுத்துகள் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டின் பகுதியைச் சார்ந்தவையெனத் தெரிய வரும். இவை தெளிவான சம்ஸ்கிருத மொழியிலுள்ளவை. இவைகளிலிருந்து அப்பகுதிகளில் இந்தியரின் பெயர் தாங்கிய மன்னர்கள் ஆண்டு வந்தனரென்றும், அவர்களில் பலர் வேதகாலச் சடங்குகளைச் செய்து முடித்தனரென்றும் தெரிய வருகிறது. கி. பி. முதல் நூற்றாண்டில் கௌன்டின்யன் என்ற பெயர் கொண்ட இந்திய நாட்டுப் பிராமணன் ஒருவன், தற்காலங்களில் கம்போடியா என்ற பெயரில் வழங்குகின்ற பியூனன் என்ற இராச்சியத்தை ஏற்படுத்தியதாகச் சீன வரலாற்று ஏடுகள் கூறுகின்றன. இச் சீன மரபு, பல நூற்றாண்டுகளுக்குப் பின் ஏற்பட்டது. செய்தியும், பிரதேச கர்ண பரம்பரைச் செய்தியை ஒட்டி எழுந்ததாகத் தெரிகிறது. எனவே, சீன வரலாற்று ஏடுகளின் கூற்றில் அதிக நம்பிக்கை கொள்வதற்கில்லை. பிற்கால ஜாவனிய மரபுகளும் இந்திய இளவலொருவனின் வருகையைப் பற்றிக் கூறுகின்றன. அவ்விந்திய இளவல் பலர் புடைசூழ வந்திருந்து கி. பி. முதல் நூற்றாண்டின் இறுதியில், முதல் ஜாவனிய அரசைத் தோற்றுவித்தான் என்று கூறப்படுகிறது. அத்தகையதொரு பெருங் குடியேற்றமிருந்ததென்பதற்கான சான்று அநேகமாக இல்லையென்றே சொல்லலாம். மேலும், தென் கிழக்கு ஆசியாவின் தலைசிறந்த மன்னர்களின் உடம்பில் எவ்வளவில் இந்திய இரத்தம் ஓடிற்றென்பதும் மிகவும் ஐயத்திற்குரிய செய்தியேயாகும், இந்திய நாட்டு முன்னோர்களுடன், தென்கிழக்கு ஆசிய அரசகுடும்பத்தினரைத் தொடர்புபடுத்திக் கூறும் மரபுகள், தங்கள் கௌரவத்தையும் செல்வாக்கையும் காப்பாற்றிக் கொள்வதற்கும், இந்து சமயத்தில் அம் மன்னர்களுக்கு உரிய இடம் தேடிக் கொள்வதற்கும் அப்பிராமண ஆலோசகர்களின் கற்பனைகளில் எழுந்தவையே

ஆகும். ஐயத்திற்கிடமற்ற ஆதாரமெதுவும் இல்லையென்ற முறையில், இந்திய மயமாக மாறிய இம்முறையைக் கீழ்வருமாறு ஊகித்துக் கூறலாம். கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்திலேயே, தென்கிழக்கு ஆசியாவின் துறைமுகப்பட்டினங்களில் இந்திய வணிகர் குடியேறத் தொடங்கினர். அப் பட்டினங்கள், நாகரிக வசதிகளுடன் கூடியிருந்ததோடு, அவைகளில் சுறுசுறுப்பான வியாபாரமும் நடைபெற்று வந்தது. அங்கு வாழ்ந்திருந்த மக்கள், பண்பாட்டில் மிக இழிந்த நிலையிலிருந்தனர் எனக் கூறவியலாது. இத்தகைய குடியேற்றங்கள் நாளடைவில் எண்ணிக்கையிலும் உருவத்திலும் பெருகி வந்தன. குடியேறியவர்களில் பெரும்பாலும் பிராமணரும் பௌத்தரும் அதிகமாக இருந்தனர். கிறிஸ்து சகாப்த தொடக்க நூற்றாண்டுகளில் வாணிபப் பெருக்கினால் இந்தியக் குடியேற்றங்கள் அதிகரித்தன. இந்தியக் கருத்துகளும் கோட்பாடுகளும் அதி விரைவில் பரவி வந்தன. இந்திய முறைகளைப் பின்பற்றி பிரதேசத் தலைவர்களும் ராஜாக்கள் என்றும் மகா ராஜாக்கள் என்றும் தங்களை அழைத்துக் கொள்வாராயினர். வேதங்களில் கூறியுள்ளபடி, சடங்குகளைச் செய்யத் தலைப்பட்டதுடன், தற்பெருமைக்கென இந்திய நாட்டைச் சார்ந்த முன்னோர்களையும் கற்பித்துக் கொண்டனர். இவர்களுள், பலரில் திருமணத் தொடர்பும் ஏற்பட்டிருக்கவேண்டும். அங்குமிங்குமாகத் துணிவுமிக்க ஒரு சில இந்தியர் சிறு இராச்சியங்களையும் நிறுவியிருக்கக் கூடும். இத்துடன், தென் கிழக்கு ஆசியாவைச் சேர்ந்தவர்கள் தாய்நாட்டிலிருந்து இந்தியாவிற்கு அங்குமிங்குமாகப் பிரயாணம் செய்து வந்தமையாலும், இந்தியரின் செல்வாக்கு பரவியிருக்ககூடும்.

இவ்வாறு பரவிய இந்தியச் செல்வாக்கு, பெரும்பாலும் தீபகற்ப இந்தியாவிலிருந்தே பரவியிருக்க வேண்டுமெனத் தெரிய வருகிறது. மிகப் பழமையான கல்வெட்டுகளில் காணப்படும் வரிவடிவம், முற்காலப் பல்லவரின் எழுத்து முறைகளை ஒத்திருக்கின்றது. அமராவதியில், மிகப் பழமையான புத்த உருவங்களைக் காணலாம். ஒருகால் கடலோரமாக அமைந்திருந்த இந்தியப்பகுதி ஒவ்வொன்றிற்கும், தென்கிழக்கு ஆசியாவுடன் தொடர்பிருந்ததாகக் கூறலாம். பீஹார், வங்காளப் பகுதிகளில் தழைத்தோங்கிய பௌத்த சமயக் கோட்பாடுகளும் பண்பாடும் மிக அதிகமாக, ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின் தென்கிழக்கு ஆசியாவில் பரவியதெனக் கூறலாம்.

மேற்கூறியவாறு, இந்திய ஆதிக்கம் தென்கிழக்கு ஆசியாவில் பரவியபோதும், அவை பிரதேச சமயக் கோட்பாடுகளையும்

பழக்க வழக்கங்களையும் முற்றிலும் அழித்து விடவில்லை. முக்கியப் பகுதியைக் காட்டிலும், இந்தோனேசியாவிலும், மலேயாவிலும் இந்தியரின் செல்வாக்கு அதிகமாகக் காணப்படும். இந்தோனேசியாவில் வழங்கிய பௌத்தம் மற்றும் இந்து சமயக் கோட்பாடுகளில், அந்நாட்டிற்கே உரிய சில குணங்களையும் காணலாம். இவ்வகையில் அவை இந்தியநாட்டிலிருந்து மாறுபட்டிருந்தன. சம்பா, (தற்கால வியட்நாமின் தென்பகுதி) கம்போடியா ஆகிய பகுதிகளில் வழங்கிய பண்பாடுகள் மேலும் மாறுபட்டவை. தென்கிழக்கு ஆசிய நாடுகளில், மன்னரைக் கடவுளென்றே பாவித்து வந்தனர். அவ்வாறு நாடாள்பவருக்குப் புனிதத் தன்மையை ஏற்றி வழிபட்டு வரும் பழக்கம் அந்நாடுகளின் தனிச் சிறப்பாக அமைந்தது. பரமசிவனின் அம்சமாக அவனைக் கருதித் தனிக் கோயில்களெழுப்பி வழிபாடு நடத்தினர். சிவ ஆகம வழிபாட்டு முறைகளின்படி இவ்வழிபாடு, 'இராசலிங்கம்' அல்லது அதை உணர்த்துகின்ற ஸ்படிக உருவமொன்றை, மன்னனின் சக்தியை அடக்கியிருப்பதாகக் கொண்டு, அதை வழிபடுவதாகவும் அமைகின்றது. பொது வழக்கிலிருந்த சமயம் பல நாட்களுக்கு, இந்தியக் கருத்துகளை ஏற்காமலிருந்து வந்தது. சிங்களத்திலிருந்து, ஹீனயான பௌத்தம் பரவுகின்ற வரையிலும் இந்நிலை நீடித்ததெனலாம். இடைக் காலத்தின் பிற்பகுதியில் இச்சமயக் கருத்துகள் மஹாயன பௌத்த சமயக் கொள்கைகளையும், இந்து சமயக் கொள்கைகளையும் பர்மா, தாய்லாந்து, கம்போடியா, லேயோஸ் ஆகிய பகுதிகளிலிருந்து நாளடைவில் விரட்டியதெனலாம். அதேநேரத்தில், இந்தோனேசியாவிலும், மலேசியாவிலும், இஸ்லாமிய சமயம் பரவத் தொடங்கியதால், இந்திய நாட்டுச் சமயக் கொள்கைகள் மறையத் தொடங்கின. 'பாலி' போன்ற தீவுகளில், இன்றும் ஒரு வகையான இந்து சமயம் வழக்கிலிருந்து வருகிறது. இந்து சமுதாயத்தைப் போன்று நான்கு சாதியினரைக் கொண்ட பிரிவுகளும் இன்று அங்குக் காணப்படுகின்றன.

### மலேயாவும், இந்தோனீசியாவும்

கி. பி. ஐந்தாவது நூற்றாண்டு முதலாக நமக்குக் கிடைக்கின்ற கல்வெட்டுகளிலிருந்து, மலேயா, ஜாவா, போர்னியா ஆகியவிடங்களில் இந்திய மரபையொட்டிய இராச்சியங்கள் இருந்து வந்தனவென்பது தெரிய வருகிறது. ஏழாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் மிகச் சிறப்பு வாய்ந்த 'ஸ்ரீ விஜயம்' என்ற பேரரசு எழுந்தது. சுமத்ராவிலுள்ள 'பாலெம் பாங்' என்னுமிடத்துடன் இதை ஒப்பிடுவது வழக்கம், எட்டாவது நூற்றாண்

டில், ஜாவாவைச் சார்ந்த சைலேந்திர மன்னர்கள் அதைக் கைப் பற்றினர். இம்மன்னர்கள், இந்தோனீசியாவின் பெரும் பகுதி யையும், மலேயாவையும், சிறிது காலம் கம்போடியாவையும் கைப்பற்றியிருந்தனர். சைலேந்திரர் குலம் பதினொன்ருவது நூற்ருண்டு வரையிலும் தழைத்திருந்தது. ஆயினும், நாளடை வில் அதன் செல்வாக்குக் குறைந்து வந்தது. சோழப் பேரரசன் முதல் இராஜேந்திரனின் படையெடுப்பு அக்குலத்திற்குப் பேரிடி யாக் விளங்கியது. இவ் வதிர்ச்சியினின்றும் அக் குலம் மீண்டு எழுவதற்கு வகையில்லாதொழிந்தது. ஜாவா நாட்டைச் சார்ந்த மஜாபஹித் மன்னர்கள், பதின்ன்காவது நூற்ருண்டில் சைலேந் திரரைப் போன்று செல்வாக்குப்பெற்று விளங்கினர். இவ்வாறு இரண்டாம் முறையாக, அத் தீவில் பேரரசு ஒன்று தொடங் கியது. இப்பேரரசு சிலகாலம், இந்தோனீசியா, மலேயா ஆகிய நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்தி வந்தது. பதினைந்தாவது நூற்ருண்டில், இஸ்லாமிய மதம் அப் பகுதிகளில் விரைவாகப் பரவிவந்தது. மேற்கு இந்திய வணிகர்கள் சாத்துவிகமான முறையில் அச் சமயக் கொள்கைகளைப் பரப்பி வந்தனர். மஜா பஹித் சாம்ராச்சியம் விழலாயிற்று. இந்து சமயம் 'பாலி'த் தீவு களில் மட்டிலுமே எஞ்சியுள்ளது. எனினும், இந்தோனீசியாவி லும் மலேயாவிலும் இன்றும் இந்து சமயப் பண்பாடுகளின் தொடர்பை நாம் காணலாம்.



பாராபுதூர் ஸ்தூபி

இந்தோனீசியாவின் பண்டைய பேரரசுகள் தழைத்த இடங்களிலிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ள சான்றுகளிலிருந்து, இந்தியக் கருத்துகளும் கலை உத்திகளும், மிக அழகாக அந்நாட்டு இயற்கைத் திறனுடன் ஒன்று சேர்ந்து இணைந்து திகழ்வது விளங்கும். இவைகளில், மத்திய ஜாவாவிலுள்ள பௌத்த ஆலயத்தின் பிரசித்தி பெற்ற பாராபுதூர் ஸ்தூபி மிகச் சிறந்து விளங்குகிறது. கி. பி. 750க்கும் 850க்கும் இடைப்பட்ட காலத்தில் இது உருப்பெற்றிருக்க வேண்டும். இயற்கையாக அமைந்த குன்று ஒன்றை அடுத்து அமைந்த இந்த ஸ்தூபியைச் சுற்றிலும், பரிவட்டத்தில் சதுரவடிவான ஏழு கட்டடங்கள் அமைந்துள்ளன. இவைகளில் மிகச் சிறியதாக விளங்குவது 131 கஜ நீளமுள்ளது. பௌத்த சமயம் சார்ந்த கதைகளை அடிப்படையாகக் கொண்டு வண்ணச்சித்திரங்களும் சிற்பங்களும் நெற்றிகளை அலங்கரிக்கின்றன.

**தென்-கிழக்கு ஆசியாவின் முக்கிய நிலப்பகுதி :**

தற்போது, வியட்-நாம் என்ற பெயரில் வழங்கி வருகிற பகுதியின் தென்கிழக்கில், கி. பி. இரண்டாவது நூற்றாண்டு முதலாகவே, இந்தியப் பண்பாட்டில் விளைந்த அரசு இருந்ததாகச் சீனர்களின் குறிப்புகளிலிருந்து அறிகிறோம். ஆனால், அதைச் சார்ந்த கல்வெட்டுகள் ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவைகளாக இருக்கின்றன. தலைநகரின் பெயரை அடிப்படையாகக் கொண்டு அவ்விராச்சியத்தைச் சம்பா என்று அழைக்கின்றனர். சீனர், அன்னமைட்டுகள், கம்போடியர்கள் ஆகிய பலரால் தாக்குண்ட போதிலும், அவ்விராச்சியம் தழைத்து வந்தது. இறுதியாகப் பதினைந்தாவது நூற்றாண்டில், அன்னமைட்டுகள் அவ்விராச்சியத்தை வென்றனர்.

இதற்கும் சற்றுமேற்கில், சீனர்களால் பியூனன் என்றழைக்கப்படும் ராச்சியம் அமைந்திருந்தது. கி. பி. மூன்றாவது நூற்றாண்டைச் சார்ந்த சீன ஏடுகள் இவ்விராச்சியத்தின் எழுச்சியைப் பற்றிப் பேசுகின்றன. கௌண்டியன் என்ற ஒரு இந்திய பிராமணன், இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னதாகவே இதைத் தோற்றுவித்தான் என்றும், அப் பகுதியைச் சார்ந்த இளவரசியொருத்தியை மணந்து, அவளது குடிமக்களுக்கு இந்து சமுதாயப் பண்பாட்டை அறிமுகப்படுத்தினான் என்றும் கூறப்படுகிறது. பியூனன் அரசின் அடிமையாக இருந்த ஒருவன் அந்நாட்டையே ஏழாவது நூற்றாண்டில் கைப்பற்றினான். அவ்வடிமை காம்போஜம் (கம்போடியா) நாட்டைச் சார்ந்திருந்ததால், அப் பகுதி முழுவதற்கும் அப்பெயரே சூட்டப்பட்டது. எட்டாம்

நூற்றாண்டில் சில நாட்களுக்குக் காம்போஜம், ஸ்ரீவிஜயத்தைச் சார்ந்த சைலேந்திரர்களின் அடிமையாக இருந்தது. இரண்டாம் ஜயவர்மன் என்ற புகழ்மிக்க அரசனுட்சியில் (802-50) அது மீண்டும் சுதந்திரம் பெற்றது. இதையடுத்துத் தொடங்கிய அதன் பொற்காலம், பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் நீடித்திருந்ததெனலாம். இக்காலத்தில் தாய்லாந்து, லேயோஸ் அடங்கிய இந்தோ-சீனத் தீபகற்பம் முழுவதையும் காம்போஜம் அடக்கி ஆண்டு வந்தது. இன்று 'அங்கோர்தாம்', 'அங்கோர்வாட்' என்ற பெயரில் வழங்கிவருகிற கருத்தைக் கவரும் சான்றுகள் காம்போஜ நாட்டைச் சார்ந்தவை. காம்போஜத்தின் தலைநகரமாக விளங்கிய 'அங்கோர்தாம்' மதில் சுவர்களால் சூழப்பட்டிருக்கிறது. இதை அரசன் ஏழாம் ஜயவர்மன் (1181—1218) மறுமுறை கட்டியிருக்க வேண்டும். அப்பழுக்கற்ற சதுர வடிவமுள்ள இந்நகரம் இரண்டுமைல் நீளமுள்ளது.



அங்கோர் வாட்டிலுள்ள கோவில்—கம்போடியா

அதன் மையத்தில் 'பேயோன்' என்ற கற்பனைக்கெட்டாத கோவிலொன்று அமைந்திருக்கிறது. அக்கோவிலிலுள்ள, சுவர்களில் குடைந்தெடுக்கப்பட்ட சிற்பங்கள் மிகப் பொலிவோடு விளங்குகின்றன. அங்கோர்தாமிற்குத்தெற்கில் நாம் முன்னர் குறித்த அங்கோர் வாட், உருவத்திலும் அழகிலும் மிகவும் கவர்ச்சியுள்ளதாக விளங்குகிறது. சமயச் சார்புள்ள

(7) ஐக்கிய அரசின் அயல்நாட்டுச் செலுத்துநிலையைப்பற்றிய விரிவான விளக்கங்களுடன், ஆண்டுதோறும் இரண்டு வெள்ளை அறிக்கைகள் (Two White Papers) வெளியிடப் பெறுகின்றன.

மேற்குறித்தவற்றுள், முதல் இரண்டைத் தவிர, எஞ்சிய அனைத்தையும் அரசாங்க இலாகா வெளியிடுகின்றது.

லண்டன், கேம்பிரிட்ஜ் பொருளாதாரப் பணிபற்றிய காலாண்டுக் கையேடு (The Quarterly Bulletin of the London and Cambridge Economic Service): இது 'Times Review of Industry' ஆல் வெளியிடப்பெறுகின்றது. இதில் நீண்ட தொடர்புடைய (1913ஆம் ஆண்டிலிருந்து) 90-க்கும் மேற்பட்ட முக்கியமான புள்ளி விவரத் தொடர்கள் அடங்கியுள்ளன.

| | |
|---|---|
| கி.பி. | |
| சி 360 | சிங்கள மன்னன் மேகவர்ணனிடமிருந்து தூது |
| சி 380 | இரண்டாம் சந்திரகுப்தன் அரசேற்றல் |
| சி 395 | மேற்கிந்தியாவைக் கைவசமாக்குதல் |
| 405—11 | குப்த இராச்சியப் பகுதிகளில் பாஹியானின் யாத்திரை |
| 415 | குமாரகுப்தன் I அரசேற்றல் |
| 455 | ஸ்கந்தகுப்தன் அரசேற்றல் - ஹூணருடன் முதற் போர் |
| 476 | வானசாஸ்திரி ஆர்யபட்டன் அவதரித்தல் |
| சி 480—490 | குப்தப் பேரரசு சீர்குலைதல் |
| 484 | பாரசீக மன்னன் பிரோஸை ஹூணர்கள் கொலை செய்தல் |
| சி 490—770 | வல்லபி குலம் |
| 499 | புத்தகுப்தனின் இறுதியான நாள் |
| சி 500 | மாளவத்தில் தோரமானன் அரசேற்றல் |
| 505 | வான சாஸ்திரி வராஹமிஹிரன் ஜனனம் |
| சி 528 | இந்திய அரசர்கள் ஹூணர் தலைவன் மிகிரகுலனை முறியடித்தல் |
| சி 540—600 | மௌகாரிகளும், மகத குப்தர்களும், கங்கைச் சமவெளியை ஆட்சி புரிதல் |
| 578 | பிரமகுப்தன்—வானசாத்திரி ஜனனம் |
| சி 605 | கனோஜ் நாட்டு மௌகாரி மன்னன் கிரகவர்மனின் தோல்வியும் மரணமும் |
| 606 | ஹர்ஷவர்த்தனன் அரசேற்றல்; ஹர்ஷசகாப்தத்தின் சிறப்பு |
| 606—12 | ஹர்ஷன் வட இந்தியாவைக் கைப்பற்றுதல் |
| சி 620 | இரண்டாம் புலிகேசி, சாளுக்கியன் ஹர்ஷனை முறியடித்தல் |

| கி.பி. | |
|---|---|
| 622 | முகம்மது, மெதினாவிற்கு ஓட்டமெடுத்தல்—ஹிஜிரா சகாப்தத் தொடக்கம் |
| 629—45 | ஹயூன்-சாங்கின் (யுவாங்-சுவாங்) யாத்திரை |
| 641 | பாரசீகம் அராபியர் வசமாதல் |
| 642 | சாளுக்கியன் இரண்டாம் புலகேசி பல்லவரிடம் தோல்வியுறுதல் |
| 643 | கனோஜ், பிரயாகை ஆகிய இடங்களில் ஹர்ஷன் அவை கூடுதல் |
| 645 | ஹயூன்-சாங் சீனா திரும்புதல் |
| 647 | ஹர்ஷனின் மரணம்—அமைச்சர் அரசைக் கவருதல் |
| 664 | ஹயூன்-சாங்கின் மரணம் |

## பகுதி III

# இடைக்கால இந்து இராச்சியங்கள்

## கி.பி. 647-ல் ஹர்ஷன் இறந்தது முதல் இஸ்லாமியரின் ஆட்சித் தொடக்கம் வரை

### 1. இடைக்கால நிகழ்ச்சிகள்; இராஜபுத்திரர்கள்: இமாலயத்திலுள்ள இராச்சியங்கள் - திபெத், சைனு ஆகிய நாடுகளுடன் அவைகளுக்குள்ள தொடர்புகள்

**மாறுதல்களைக் கொண்ட இடைக்காலம்**

ஹர்ஷனின் மரணத்திற்குப் பின், பல நாட்களுக்குக் குழப்ப நிலைநீடித்திருந்ததென முன்னர்க் குறித்தோம். அக்கால நிகழ்ச்சி களைப் பற்றி, நம்மால் அதிகமாக அறியமுடிவதில்லை. சீனத் தூது வன் ஒருவன் தாக்கப்பட்ட விவரத்தையும், அதன் விளைவாக திபெத்தியர்களால் திர்குட் கைப்பற்றப்பெற்றதையும் முன்னர்க் கூறினேம். அத்தகைய குழப்பங்கள் நிறைந்திருந்த காலத்தை இந்திய வரலாற்றின் பண்டையநாட்களுக்கும்,மத்திய காலத்திற் கும் இடைப்பட்ட கால்மாகக் கருதலாம். இவ்விடைக் காலத் தில், அன்னிய நாட்டுப் படையெடுப்பாளர் பலர் இந்து சமயத் தினரோடு ஒன்ருகக் கலந்தனர். புதிய இராச்சியப் பிரிவினை கள் புதியனவாக எழுந்தன. இவ்விடைக் காலத்தில், இராஜபுத் திரர்களின் எழுச்சியைப் பற்றிக் கேள்வியுறுகிறேம். இவர் களைப் பற்றி இதற்கு முன்பாக நாம் கேள்வியுறுவதில்லை. இந் தியாவின் வடக்குப் பகுதிகளிலும் மேற்குப் பகுதிகளிலும் எட் டாம் நூற்றாண்டு முதல் இவர்கள் மிகச் செல்வாக்கு பெற்று விளங்குகின்றனர். ஹர்ஷனின் மரணத்திற்கும், இஸ்லாமியரின் படையெடுப்பிற்கும் இடைப்பட்ட காலத்தில், அல்லது ஏழாவது நூற்றாண்டின் இடைக் காலத்திலிருந்து, பன்னிரண்டாவது

நூற்றுண்டின் இறுதி வரையிலுமுள்ள இடைவெளியை 'இராஜ புத்திர சகாப்தம்' என ஐயத்திற்கிடமின்றி 'அழைக்கலாம். அநேகமாக இராச்சியங்கள் முழுவதும் இராஜபுத்திர குடும்பங் கள் அல்லது குழுவினரால் ஆளப்பட்டு வந்தன. பண்டையக் காலம் முதலாக இவர்களைக்கூட்டாக இராஜபுத்திரர்கள்என்றே அழைக்கும் வழக்கமிருந்து வருகிறது. பொதுவாக வழங்கி வரும் இப்பெயருடன், 'சத்ரி' அல்லது 'தாகுர்' என்ற பெயர்களும் வழக்கிலிருந்து வருகின்றன. க்ஷத்ரியர் என்ற வடமொழிச் சொல்லிற்குப் பிரதேச மொழியில் வழங்கி வரும் கலைச் சொற் களாக இவைகளை எண்ணலாம்.

### இராஜபுத்திரர்களின் எழுச்சி

குறிப்பிட்டதொரு சமுதாயத்தைச் சேர்ந்தவனுக்கு 'இராஜ புத்திரன்' என்ற பெயருண்டு. இரத்த சம்பந்தமான உறவையோ அல்லது வழிமுறையையோ, இது குறிப்பதில்லை. ஓரினத்தையும் இது சுட்டுவதில்லை. போர்க்குணம் படைத்த ஓரினம், மரபு, கூட்டம், அல்லது சாதியினருக்கு இப் பெயர் ஏற்பட்டுள்ளதெனலாம். அம் மரபினர் தங்களைப் பிரபுக்களின் வழித்தோன்றல்கள் என எண்ணிக் கொண்டனர். இவர்களைப் புனிதச் சமய நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள க்ஷத்திரிய வகுப் பைச் சேர்ந்தவர்களெனப் பிராமணர் கூறினர். மிகவும் பரந்து கிடந்த இராஜபுத்திர மரபில் பல்வேறு வகையான மக்களிருந் தனர். ஆறு அல்லது ஐந்தாவது நூற்றுண்டுகளில் இந்திய நாட் டின்மீது படையெடுத்துவந்த அன்னியர் சிலரும். இந்நாட்டு வாசி களில் பெரும் பகுதியினரும், இவ்வினத்தில் அடங்குவர். இதி லடங்கும் நாட்டுவாசிகளின் வர்க்கத்தினர் சிலர் இன்றும் இந்து சமயத்தை அரைகுறையாகத் தழுவியவர்களாகவும் ஈன சாதி யினராகவும் காணப்படுகின்றனர்.

இராஜஸ்தானத்தைச் சார்ந்த பிரசித்தி பெற்ற மரபினரும், சாதியினரும், அன்னியரே என நாம் கொள்வது பெரும்பாலும் பொருத்தமுடையதாகவே தோன்றுகிறது. அவ்விந்தியர் 'டாட்' நாட்டைச் சார்ந்த 'சித்தியராகவே' இருக்கவேண்டும். படை யெடுத்து வந்த ஹூணர்கள், கூர்ச்சரர்கள், மயித்ரகர், மற்றும் பலருள் மேல் வகுப்பினர். இராஜபுத்திரராக மாறியிருக்க வேண்டும். அவர்களில், சற்றுத் தாழ்ந்தவர்கள், ஈன ஜாதி இந்துக்களாக, சமுதாயத்தில் சற்றுக் குறைந்த கௌரவத்துடன் வாழ்ந்திருக்க வேண்டும். கூஜர், அஹிர்கள், ஜாத்கள் ஆகி யோரை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

இறுமாப்பும், வீரமும் கொண்ட மேவார் நாட்டுச் சிசோடியர் அல்லது குஹிலதர், பரிஹரர் (பிரதிஹாரர்), சௌஹான்கள் (சாகுமணர்), பாவார்கள் (பராமரர்), சோலங்கிகள் அல்லது சாளுக்கியர் ஆகிய வகுப்பினரை அன்னிய மரபினரைச் சார்ந்தவர்களாகக் கருதலாம்[1].

தக்காணத்தைச் சேர்ந்த ராட்டிரகூடர், இராஜஸ்தானத்து ராதோர்கள், பண்டுல்கண்டைச் சார்ந்த சாந்தலர், பண்டேலர் ஆகியவர்களைக் கௌரவிக்கப்பட்ட இனத்தினராகக் கருதலாகும். இராஜஸ்தானத்து ராதோர்கள் என்பது பிரதேச மொழியில் இராஜபுத்திரருக்கு வழங்கிய மறு பெயரென்றே தோன்றுகிறது. சாந்தலர், கோண்ட் வகுப்பினருடன் தொடர்புடையவராக இருத்தல் கூடும். 'கோண்ட்' வகுப்பினருக்கும் 'பார்கள்' என்ற வகுப்பினருக்கும் நெருங்கின தொடர்பு உண்டு. இப் பிரச்சினையை மேலும் விவாதிப்பதென்பது கடினம். மேற்கோள்கள் எல்லையற்று விரிந்து கிடக்கின்றன.

**பிராமணரும் க்ஷத்திரியரும்**

பிராமணருக்கும், க்ஷத்திரியருக்கும், பண்டை நூல்கள் ஒரே நிலையான கௌரவத்தையே வழங்குகின்றன. அறிவில் சிறந்த பிராமணரையும், பேராற்றல் மிக்க க்ஷத்திரியரையும் அவை ஒன்றாகவே மதித்து வந்தன. கலப்பு மணங்களாலும், தொழில் மாற்றங்களாலும், இவ் வகுப்பினரிடையே இன மாறுதல்களும் தோன்றியிருந்தன. சாதாரணமாகச் சிறப்பு மிக்க பிராமணன் ஒருவன் அரசவையில் அமைச்சனாகவே பணியாற்றி வந்தான். சில சந்தர்ப்பங்களில் நேரிடையாக ஆட்சி செலுத்த எண்ணி பிராமணன் அரசைக் கவர்ந்ததுமுண்டு. முற்காலத்தைச் சார்ந்த சுங்க, கண்வ அரசகுலத்தினர், பிராமண வகுப்பினரே யாவர். இதைப் போன்ற பிராமணரின் ஆட்சி பிற்காலங்களிலும் நடைபெற்று வந்ததாகத் தெரிகிறது. ஏழாவது நூற்றாண்டில் உஜ்ஜயினி, பண்டுல்கண்ட் அல்லது ஜிஹோதி ஆகிய நாடு

[1] பாபா என்ற குஹிலாட்களின் முன்னோன் ஒருவன் தலைமறைவாக அல்லது சிறப்பாக பிராமணனாக வளர்க்கப்பட்டான் என, பண்டிட் மோகன்லால் விஷ்ணுலால் பாண்டியா என்பவர் ஒப்புக் கொள்கிறார் (வங்காள ஆசிய சங்கத்துச் சஞ்சிகையும் குறிப்புகளும், 1912. பக்.62-99 மேவார் நாட்டு ராணாக்களின் எழுச்சி பற்றிய டி.ஆர். பந்தார்க்கர் அவர்களின் கருத்துகளை மறுத்துக்கூறும் முயற்சி வெற்றியளிக்கவில்லை. தற்காலத்தில் மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சிகளின் விளைவாக, அப்பழுக்கற்ற உண்மைகள் எடுத்துரைக்கப்பட்டு, அதனால் கிலேசம் உண்டாவதென்றால், இந்நிலை வருந்தத்தக்கதேயாகும். ஆனால் வெகு நாட்களுக்கு முன்னதாகவே அசோகன் கூறியதைப் போல உண்மையைப் பேசியேயாக வேண்டும்.

களைப் பிராமண அரசர்கள் ஆண்டு வந்தார்கள் என்று ஹ்யூன் சாங் குறிப்பிட்டுள்ளார். பிராமண அமைச்சர்கள் அரசைக் கவருவதும் நிகழ்ந்து வந்தன. பிராமணன் ஒருவன் அரசகுல மொன்றை வெற்றியுடன் தொடங்கினால், அவனது சந்ததியார் களை மக்கள் க்ஷத்ரியர் என்றே மதித்து வந்தனர். பிற க்ஷத்திரிய குலப்பெண்களை அவர்கள் மணப்பதும் வழக்கமாயிருந்துவந்தது. பிராமணரும், பல இனத்தைச் சார்ந்தவர்களே என்பதையும் நாம் நினைவில் கொள்வது நலம். அவர்களில் நாகர்களைப் போன்றபலர் கல்விகேள்விகளில் சிறந்த அன்னிய குலத்தினரின் சந்ததியார்களாகவும் இருக்கக்கூடும். 'மாகர்' பிரிவைச் சார்ந்த பிராமணர், இரேனிய மாகிகளுடன் தொடர்புடையவர்களாக இருக்கக்கூடும். பிராமண குலமொன்று க்ஷத்திரிய மரபாக மாறி வருகின்ற இடைக்காலத்தின் சமுதாயத்தின் அப்பிரிவிற்கு பிரம - க்ஷத்ரிய என்ற பெயர் வழங்கியது. இப்பெயர் கொண்ட அரசகுலங்கள் பல இருந்தன என்பதற்கான குறிப்புகள் உண்டு மேவார் நாட்டு 'சிசோடியரையும்' வங்காளத்துச் 'சேனர்களை யும்' இப்பிரிவிற்குரிய தலைசிறந்த உதாரணங்களாகக் கூறலாம்.

**இராஜபுத்திரரை ஓர் இனமாகக் கருத இயலாது**

பொதுவானதொரு முன்னோனுடன் இரத்தபாசத்தால் தொடர்பு கொண்ட பொது இனமாக இராஜபுத்திரரைக் கருத வியலாது என நாம் முன்னரே குறித்துள்ளோம். இராஜஸ் தான எல்லைக்குள் இருந்தவர்களும், ஆதியில் பல்வேறு கிளை களின் வழித்தோன்றல்களாகவே இருந்தனர். அக் கிளைகள் பல இனத்தைச் சார்ந்தவைகளாகும். போர்த்திறனிலும், மற் றும் சில சமுதாயப் பழக்க வழக்கங்களிலும் இவர்களுள் குறிப் பிடத்தக்க ஒற்றுமை காணப்பட்டது. பல நூற்றாண்டுகளாக வழக்கிலிருந்த திருமண முறைகளும் மற்றும் சாதிக் கட்டுப்பாடு களும் இக்குடியினரிடையில் மிகப் பரவலாக இரத்தபாசத் தொடர்புகளை ஏற்படுத்தின. இதனால் இவர்களிடையே பல பிரிவுகளும் தோன்றலாயின.

எட்டாம் நூற்றாண்டில், இந்திய வரலாற்றில் இராஜபுத்திரர் கள் மிகவும் சிறந்து விளங்கியதற்கு, நாம் இதுகாறும் சுருக்கமாக எடுத்துரைத்துள்ள விவரங்கள் தகுந்த விளக்கமாக அமையு மென்பதை வரலாற்று மாணவர்கள் எளிதில் உணரலாம். நாம் முன்னொரு அதிகாரத்தில் கூறியதைப்போல ஹூணர் படை யெடுப்புகளும் அதன் விளைவுகளும், தொடர்ச்சியான வரலாற் றிற்கு இடையூறுகளாக அமைந்தன. வழக்கிலிருந்து வரும். மர பினரின் பழக்கவழக்கம் ஏதேனுமிருந்தால் எட்டாம் நூற்றாண்

டிற்கும் முன்பாக அவை வழங்கி வருவதாகக் கூறுவதற்கில்லை; மற்றும் சில, அத்துணைப் பழமை வாய்ந்ததாகவும் காணப்படுவதில்லை. வழக்கிலிருந்து வரும் மரபுப் பிரிவுகள் ஆறுவது நூற்றாண்டிலேயே தோன்றியிருக்க வேண்டும். புதிதாகக் கிளர்ந்தெழுந்த பிரபுக்கள் கூட்டத்தினரைப் புராதன க்ஷத்திரிய வகுப்பினருடன் இணைத்துப் பேசுவதில், பிராமணர்களுக்கு மிகுந்த நன்மைகள் இருந்தன. அவர்கள் எந்த இனத்திலிருந்து எழுந்தனர் என்பதைக் குறித்து பிராமணர் கவலை கொண்டதேயில்லை. அவர்களை 'இராஜபுத்திரர், அல்லது 'இராஜ்புத்' என்ற பெயரால் அழைக்கத் தொடங்கினர். இச்சொற்களுக்கு'மன்னர் மகன்' அல்லது 'அரசகுலம் அல்லது குடியைச் சார்ந்தவன் என்று பொருள். இவ்வாறாக, இராஜபுத்திரன், க்ஷத்திரியனென்றே மதிக்கப் படுபவனாயினன்.

சமவெளிகளில் நிலைபெற்று விளங்கிய பிரதான இராஜபுத்திர இராச்சியங்களைப் பற்றிக் கூறுமுன், ஹிமாலய இராச்சியங்களான, நேபாளம், காஷ்மீரம், அஸ்ஸாம் ஆகியவைகளைப் பற்றியும், அவைகளுக்குத் திபெத், சைனா ஆகிய நாடுகளுடன் இருந்த தொடர்புகளைப் பற்றியும் குறிப்பிடுவது மிகவும் தேவையாகின்றது. அவைகளது வரலாறுகளை இங்குச் சுருக்கமாகக் கூற முற்படுவோம்.

### சீனமும், இந்திய எல்லை நாடுகளும்

சின்னாட்கள் தழைத்தோங்கிய ஹூண சாம்ராச்சியத்தை, மேலைத்துருக்கர் சின்னாபின்னப்படுத்தினர். அத் துருக்கரைக் காலப்போக்கில் சீனர் முறியடித்தனர். 661 முதல் 665 ஆம் ஆண்டு வரையிலும், சில ஆண்டுக்காலம் சைனா மிகவும் புகழ் பெற்று விளங்கியது. சுவாத் பள்ளத்தாக்கு, மற்றும் பாரசீகத்திலிருந்து கொரியா வரையிலும் பரந்திருந்த நாடுகள் முழுவதிலுமிருந்து, தூதுவர்கள் சீனப் பேரவையில் வந்திருந்தனர். ஆனால், இப் புகழ் வெகுகாலம் நீடித்திருக்கவில்லை. 670ஆம் ஆண்டில் காஷ்காரியா திபெத்தியர் வசமாயிற்று. சின்னாட்களுக்குப்பின், துருக்கர் மீண்டும் வலுப்பெற்றெழுந்தனர். எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில், பேராசைமிக்க ஹியூன்-சங் என்னும் சீனப் பேரரசர், மேலை நாடுகளைச் சீனர் ஆதிக்கத்தில் கொண்டுவரும் முயற்சியில் வெற்றி பெற்றார். காஷ்மீர மன்னர்களும் கூட, சீன நாட்டிலிருந்து அதிகாரச் சின்னங்களைப் பெற்று அனுமதியோடு ஆட்சி நடத்தினர். எட்டாம் நூற்றாண்டின், மத்தியில் அராபியரின் முன்னேற்றம், மலைப்பாங்கான காஷ்மீர நாட்டின் மீது சீனர் கொண்டிருந்த ஆதிக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தது.

அந்த நாள் முதல், நேபாளம் நீங்கலாக இந்திய நாட்டு எல்லைப் புறத்தில் உள்ள எந்த ஒரு நாடும் சீனத்துடன் அரசியல் உறவு கொண்டதில்லை.

**திபெத்; ஸ்டிராங்-சான் காம்போ**

ஏழாம் எட்டாம் நூற்றாண்டுகளில், திபெத் வலிமை மிக்க நாடாக விளங்கியதோடு இந்தியாவுடனும் சீனத்துடனும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. தற்காலங்களில் மூடிக் கிடக்கின்ற, லாசா, நேபாளம் வழியாக சீனத்திலிருந்து இந்திய நாட்டிற்குள் செல்லும் பெருவழிகள், ஒருகாலத்தில் யாத்திரிகர் களாலும், பிற பிரயாணிகளாலும் அதிகமாகப் பயன்படுத்தப் பட்டது. திபெத்திய மன்னர் வரிசையில் மிகவும் பிரசித்தி பெற்று விளங்கும் ஸ்டிராங்-சான்காம்போ என்பவர் கி. பி. 629–க்கும் 650–க்கும் இடைப்பட்ட காலத்தில் அரசாண்டிருக்க வேண்டுமென, சிறந்த வரலாற்றாசிரியர்கள் கருதி வருகின்றனர். ஹர்ஷனுக்குப்பின் நேபாள அரசைக் கைப்பற்றிய கயவனை சாங்-காம்போ வீழ்த்தினான்; நேபாள இளவரசி ஒருத்தியையும், சீன இளவரசியொருத்தியையும் மணந்து, 'திர்குத்' என்ற பகுதி யையும் கைப்பற்றி வலிமை மிகுந்து விளங்கினான்.[1] அவனது மனைவியர் பௌத்த சமயத்தில் பற்றுக் கொண்டிருந்தனர். அவர்களது விருப்பத்திற்கிணங்க, தனது ஆட்சி எல்லையில் பௌத்த சமயத்தைப் புகுத்தினான். மேலும் அறிவு பெறுவதற் குத் துணையாக, இந்திய நாட்டில் வழக்கிலிருந்த வரிவடிவ முறை ஒன்றையும் பரவச் செய்தான்: இன்றும், அது திபெத்தில் வழக்கிலிருந்து வருகிறது. லாசா நகரை அவன் நிருமாணித் தான். இந்நகரை உருவாக்குவதற்கென, பெரிய ஏரியொன்றைக் கற்களால் நிரப்பினான் என்றும் கூறப்படுகிறது.

அறிவுக் கூடமாக விளங்கிய மகதத்தைச் சார்ந்த அடிசா போன்ற பிரசித்திபெற்ற சமயத் துறவிகள், பதினொன்றாவது நூற்றாண்டின் முற்பகுதியில், ஆட்சி புரிந்து வந்த மன்னனின் அழைப்பை ஏற்றுத் திபெத்திற்கு விஜயம் செய்தனர். அவர்கள் வழக்கிலிருந்த பௌத்த சமயத்தில் பல மாறுதல்களையும் சீர் திருத்தங்களையும் புகுத்தினர். இவை தற்காலத்தில் வழக்கி லிருந்து வரும் 'லாமா' வகைப் பௌத்த சமயத்திற்கு அடிகோலி யது எனலாம்.

[1] பெர்ட்ஹோல்டு லாஃபர் (ஜே. ஏ. ஓ. எஸ். வால். 38 (1918) பக் 31–46)

ஆதியில் பௌத்தன் போதித்து வந்த பௌத்த சமயத்தைத் திபெத்தில் நிறுவுவதற்காக இம் மாறுதல்கள் புகுத்தப்படவில்லை. அத்தகைய கருத்தே பெரும்பாலும் நிலவி வருகிறது. ஆனால், உண்மையில் கலப்பற்ற மகாயான புத்த சமயத்தை நிலைபெறச் செய்வதற்கே, இம்முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. நாகார்ஜுனனின் கொள்கைகளைச் சிறந்த சமயத்துறவிகள் திபெத் முழுவதிலும் பரப்பி வந்தனர். ஒருமைக் கொள்கையை அடிப்படையாகக் கொண்ட காலசக்ர தத்துவமும், அவர்களால் பெரிதும் விரும்பப்பட்டது.[1]

**நேபாளம்**

இந்திய நாட்டின் வடக்கெல்லையோரமாக, மேற்கில் குமானிலிருந்து கிழக்கில் சிக்கிம் வரையிலும் பரவிய 500 மைல் விஸ்தீரணமுள்ள பரந்த இராச்சியமாகத் தற்போது நேபாளம் விளங்கி வருகிறது. ஆனால், இந்திய வரலாற்றின் பண்டைய நாட்களில், இருபது மைல்கள் நீளமும், பதினைந்து மைல்கள் அகலமும் உள்ள ஒரு சிறு பள்ளத்தாக்காகவே நேபாளம் விளங்கி வந்தது. இப்பகுதியினுள் தலைநகரமான காட்மண்டுவும் பிற நகரங்களும் அடங்கியிருந்தன. அண்டையிலிருந்த ஒரு சில பகுதிகளும் அவ்வப்போது நேபாள அரசெல்லைக்குள் அடங்கி யிருந்திருக்கக்கூடும். தற்காலத்து நேபாள மாகாணத்தில் அடங்கியுள்ள மலைப்பாங்கான, மற்றும் சமவெளிப் பகுதிகள் பல்வற்றில் அக் காலங்களில் சுயேச்சையான சிறு குடியினரோ அல்லது தனி நபர்களோ ஆட்சி புரிந்து வந்தனர்.

இப்பள்ளத்தாக்கு அசோக சாம்ராச்சியத்தின் ஒரு பகுதியாக விளங்கியது என்பதில் எவ்வித ஐயமுமில்லை. குஷானியரும், அப்பகுதியின் அரசியல் நிலையை மாற்றுவதற்கு முயலவில்லை. கி. பி. நான்காவது நூற்றாண்டில், சமுத்திரகுப்தனின் இறைமையை நேபாளம் ஒருவகையில் ஏற்றிருந்தது. ஏழாவது நூற்றாண்டில் திபெத்தின் ஆதிக்கம் நிகரன்றி வலுப்பெற்றிருந்தது. ஹர்ஷனின் மரணத்திற்குப் பின் நேபாளம் அரை நூற்

[1] ஏ. எச். பிராங்கே என்பவரின் 'இந்திய திபெத்தின் பழம் பெரு நூல்கள்' (கல்கத்தா 1914) பக்-52. காலசக்கரம் மற்றும் இது போன்ற நிலைதாழ்ந்த பௌத்தக் கொள்கைகளைப் பற்றிய விவரங்களுக்கு, நாகேந்திரநாத் வாசு என்பவரும், எம். எம். எச். டி, சாஸ்திரி என்பவரும் எழுதியுள்ள 'தற்கால பௌத்த சமயமும், ஒரிசாவில் அதைப் பின்பற்றுவோரும்' (கல்கத்தா 1911) என்ற அழகிய சிறு நூலைப் பார்க்கவும்.

றுண்டிற்கும் மேலாக திபெத்தின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது.[1] நேபாளத்தை வென்று தனது சகாப்த முறையை ஹர்ஷன் அங்குப் புகுத்தினன் என்ற கருத்து தவறானதென்றே தெரிய வருகிறது. இப்போது நேபாளத்தை ஆண்டு வரும் கூர்க்கர் அப்பகுதியை 1768 ஆம் ஆண்டில் கைப்பற்றினர் என்றும் தெரியவருகிறது. 1815 ஆம் ஆண்டிலிருந்து அவ்விராச்சியத்தின் வெளிநாட்டு விவகாரங்கள், இந்திய அரசாங்கத்தாரால் கவனிக்கப்பட்டுவந்தன. அவ்வப்போது தனக்குத் திறை செலுத்த வேண்டுமெனச் சீன மன்னர் கோரியதுமுண்டு. இடைக் காலங்களில் அரசு செலுத்தி வந்த குலங்களின் நீண்ட கறைபடிந்த வரலாறு பொதுவாகச் சுவையளிப்பதல்ல. பிரதேச வரலாறுகளில் ஆர்வமுள்ள மாணவர்களுக்கு அதை விட்டு விடுவோம்.

பல நூற்றாண்டுகளாக நடைபெற்று வருவதும், இன்றும் தொடர்ந்து வருவதுமான ஆழ்ந்த சமயப் பூசல்களை, ஆராய்வதில் தற்கால நேபாள வரலாற்றுமாணவர்கள் அதிககவனம்செலுத்தி வருகின்றனர். அங்குள்ள இழிவானதொரு வகைப் பௌத்த சமயம் துறவிகள் மணம்செய்து கொள்வதற்கும் அனுமதிக்கிறது. ஆனால், இந்து மதச் சார்புள்ள பிராமண சமயத்தின் ஆதிக்கத்தால் இது நாளடைவில் க்ஷீணித்து வருகிறது. இப் பிராமண சமயமே தற்போது அரசினர் ஆதரவு பெற்று விளங்குகிறது. நேபாள நாட்டு நூல் நிலையங்களில் ஏராளமான பௌத்தசமயம் சார்ந்த கையேட்டுப் பிரதிகள் உண்டு. கி.பி. 1820-க்கும் 1858-க்கும் இடைப்பட்ட காலத்தில் பிரியன் ஹாட்ஸன் என்பவரின் பெரு முயற்சியால் இவை வெளியிடப் பெற்றன. பல வகையான புத்த சமயக் கருத்துகளையும், பிரிவுகளையும் இந் நூல்கள் தெளிவுபடுத்துகின்றன. அவைகளைப் பற்றிய ஆராய்ச்சிகளுக்கும் இவை அதிகமாக உதவுகின்றன.

நேபாளத்தில் நிகழ்ந்த இச்சம்பவங்களால் இந்திய வரலாற்றின் பொது நோக்கு தடைப்பட்டதேயில்லை. நேபாளம் தனியானதொரு பகுதியாகவே விளங்கி வந்திருக்கிறது.

[1] கி. பி. 703 ஆம் ஆண்டில் நேபாளமும் இந்தியாவும் (பகுதி. திர்குட்) திபெத்திய ஆதிக்கத்தினின்றும் விடுதலை பெற்றன. தனது ஆதிக்கத்தை மீண்டும் நிறுவுவதற்கு முயன்ற போது திபெத்திய மன்னன் கொல்லப்பட்டான்- (பார்க்கர், 'சீனு; நேபாளம் முதலியன' எப், மாஞ்செஸ்டர் ஓரியண்டல் சொசைடி 1911 பக்கம் 129-52) தாங் வமிசத்தினரின் வரலாறுகளில் குறிக்கப்பெற்றுள்ள அச் செய்தியைப் பண்டைய ஐரோப்பிய எழுத்தாளர் அறிந்திருக்கவில்லை.

**கலை**

நேபாளக் கலை, திபெத் நாட்டுடன் நெருங்கிய தொடர்புள்ளதாக விளங்குகிறது. உலோக வேலைகளில் இவ்விரு நாடுகளைச் சார்ந்த சிற்பிகளும் சிறந்து விளங்குகின்றனர். பிற்காலப் பௌத்த சமயக் கடவுளர் வரிசையைச் சார்ந்த பல பிம்பங்களையும், பிற பௌத்த துறவிகளின் உருவங்களையும் தத்ரூபமாக வடிப்பதில் திபெத்தியக் கலைஞர்கள் மிகவும் புகழ் பெற்று விளங்குகின்றனர். திபெத்தியச் சித்திரங்கள் சில போற்றுதற்குரியனவாக விளங்குகின்றன. தற்காலங்களில் நேபாளத்தில் வழக்கிலிருந்து வரும் கட்டடக் கலை, இந்திய நாட்டைக் காட்டிலும் சீன முறைகளையே பெரிதும் பின்பற்றி வளர்ந்துள்ளன.

**காஷ்மீர்**

இந்து காஷ்மீரின் நம்பிக்கையுள்ள வரலாறு கிறித்துவிற்குப் பின் ஏழாம் நூற்றாண்டிலிருந்து தொடங்குகின்றதெனலாம். அவ் வரலாற்றுக் குறிப்புகள் மிகவும் விரிவாக 'இராசதரங்கிணி' என்னும் நூலில் காணப்படுகின்றன. சந்தத்துடன் கூடிய செய்யுள்களடங்கிய இந்நூல், கல்ஹணன் அல்லது கல்யாணன் என்ற அறிவிற் சிறந்த பிராமணன் ஒருவனால் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. இதை எம்.ஏ ஸ்டெயின் என்பவர் அற்புதமாகப் பதிப்பித்தும், மொழிபெயர்த்தும் அளித்துள்ளார். இவ்வரலாறு தனிப்பட்ட முறையில் மிகவும் சுவையுள்ளதே எனினும், இந்திய நாட்டின் பொது வரலாற்றுடன் அதிகத் தொடர்புடையதாக இல்லை. காஷ்மீர்ப் பள்ளத்தாக்கைச் சுற்றிலும் அமைந்திருக்கின்ற உயர்ந்த மலைகள், அந் நாட்டை அன்னியர் படையெடுப்புகளின்றும் பாதுகாப்பதற்குப் போதுமானதாக இருந்ததுடன், அது பிரிந்து நின்று தனிவாழ்வு நடத்துவதற்கும் உதவி செய்தது. இருப்பினும், மௌரியரும், குஷானியரும், காஷ்மீரின் மீது ஆதிக்கம் செலுத்தி வந்தனர். குப்தர்கள் இதைப் பாராட்டவில்லை. காஷ்மீர அரசனை அடிபணிய வைக்கும் வாய்ப்பு ஹர்ஷனுக்கு இருந்த போதிலும், அந்நாட்டைப் பேரரசுடன் இணைத்துக் கொள்வதற்கு அவன் முற்படவில்லை.

இடைக்காலத்தில் அரசு செலுத்தி வந்த இந்து அரசர்கள் கொடுஞ் செயல்கள் பல புரிந்தனர் எனத் தெரிய வருகிறது. பதினொன்றாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் அரைகுறைப் பைத்தியமான ஹர்ஷன் என்றொரு மன்னன் காஷ்மீரத்தை ஆண்டு வந்தான். அவனுக்குக் 'காஷ்மீர தேசத்து நீரோ' என்று மிகவும் பொருத்தமாகவே பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. நிலையான அரசு விஷயத்தில் காஷ்மீரத்தைப் போன்று உலகில்

ஒரு சில துரதிர்ஷ்ட நாடுகளே இருந்திருக்கக் கூடும்; பொறு மைசாலியான மக்களை இதற்கு ஒரு வகையில் காரணமாகக் கூற லாம். இதனால் கொடுங்கோலர் அதிகரித்தனர். பெரும்பாலும் கால முழுவதும் இந்து அரசர்கள் விவசாயிகளைப் பிழிந்தெடுத்து வரி வசூல் செய்து, அவர்கள் உயிர் வாழ்வதற்குத் தேவையான குறைந்த அளவுப் பொருள்களை மட்டிலும் அவர்களுக்கு அளித்தி ருந்தனர். பதினான்காம் நூற்றாண்டில் மக்களில் பெரும்பான் மையர் இஸ்லாமிய சமயத்தை ஏற்க வேண்டியதாயிற்று. 1587 ஆம் ஆண்டில் அதிகப் பிரயாசையின்றி, அக்பர் காஷ்மீரைத் தன் சாம்ராச்சியத்துடன் இணைத்துக் கொண்டான். அதுவரை, காஷ்மீரை இஸ்லாமிய மன்னர் ஆண்டு வந்தனர். சாதாரண மக் களுக்கு வாழ்க்கை கசப்பாகவே இருந்தது. இந்து அரசர்களாயி னும், முஸ்லீம் மன்னராயினும் இந்நிலையைச் சீர்திருத்துவதற்கு முயலவில்லை. பிற்காலங்களில் காஷ்மீர மக்களை ஆப்கானியரும், சீக்கியரும் முறையே வருத்தி வந்தனர். பத்தொன்பதாம் நூற் றாண்டின் பிற்பகுதி வரையிலும், நல்லாட்சி ஒன்றின் பலன்களைக் காஷ்மீர் மக்கள் அறிவதற்கான வாய்ப்பில்லை.

அரசியல் நோக்கில், காஷ்மீர் இந்திய நாட்டிலிருந்து பிரிந்து தனி வாழ்க்கை நடத்தியதென்றாலும், தன்னைச் சுற்றியுள்ள நாடு களுடன் சமயத் துறையிலும் கலாசாரத் துறைகளிலும் காஷ்மீர் தொடர்பு கொள்ளுவதற்குத் தவறியதேயில்லை. உண்மையில் இவ்வாதிக்கம் அதிகமாக இருந்ததென்றே கூறலாம். குறைந்த அளவில், அசோகராட்சியிலிருந்து இப்பள்ளத்தாக்கில் சமஸ் கிருத மொழி மிகச் சிறந்து வளர்ந்தோங்கியிருக்க வேண்டும். இவ்வகையான இந்தியப் பண்பும், கலையும் கோட்டான், அண்மை யிலுள்ள சீன துருக்கிஸ்தானப் பகுதிகள் மற்றும் தூர கிழக்கில் வெகு தொலைவிலும் பரவி வந்த பௌத்தம், மற்றும் பிராமணச் சமயச் சார்புள்ள பல புண்ணியதலங்கள் இப்பள்ளத்தாக்கில் உள்ளன. சமணம் இப்பள்ளத்தாக்கில் அதிகமாகப் பரவிய தாகத் தெரியவில்லை. எட்டு, ஒன்பதாவது நூற்றாண்டுகளில், புது வகையானதோர் கட்டடக் கலை இப்பள்ளத்தாக்கில் உருவா கியது. லலிதாதித்யன் காலத்தில் சூரியனுக்கென்று எழுப்பப் பெற்ற மார்த்தாண்ட ஆலயத்தை (கி. பி. 724-60) இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். இதுபோன்ற, பிற கோயில்களும் பல இருக்கின்றன.

**அஸ்ஸாம்**

அஸ்ஸாம் என்னும் நிலப்பகுதி, தோராயமாகப் பண்டை நாட்களில் காமரூபம் என்ற பெயரில் வழங்கியது எனலாம்.

காஷ்மீரம் போலவே இயற்கையிலமைந்த அரண்களால் இதன் தனிமையும் பாதுகாக்கப்பட்டிருந்தது. இதனால் இப் பகுதியும் தனது தனித்தன்மையைப் பாதுகாத்துக் கொண்டிருந்தது. மௌரியப் பேரரசிலோ அல்லது குஷானியரின் சாம்ராச்சியத்திலோ இப்பகுதி அடங்கியிருந்ததாகத் தெரியவில்லை. ஆனால், பண்டைய இந்து அரச குலத்தைச் சார்ந்த மன்னன் ஒருவன், நான்காவது நூற்றாண்டில், சமுத்திரகுப்தனின் அரசியலாதிக்கத்தை ஏற்றிருந்தான் எனத் தெரிய வருகிறது. இங்கு பௌத்த சமயம் பரவுவதற்கு வகையில்லை. ஆனால், ஏழாவது நூற்றாண்டில் இப் பகுதியில் அரசு செலுத்திய மன்னனொருவன், பௌத்த சமயம் சார்ந்த சீன யாத்திரிகனை ஹியூன் சாங்கை வற்புறுத்தித் தனது நாட்டிற்கழைத்து மிகவும் கௌரவித்தான் எனத் தெரிய வருகிறது. அரசன் நேரடியாக ஹர்ஷனுக்கு அடிபணியவில்லை; என்றாலும், அவனது மாட்சிமை பொருந்திய கட்டளைகளை நிறைவேற்ற வேண்டியதாயிற்று. மேலும் அழைப்பின் பேரில் ஹர்ஷனது பவனியில் தலைகுனிந்து கலந்து கொள்ள வேண்டிய நிலையும் ஏற்பட்டது. 1205 ஆம் ஆண்டிற்கும் 1662 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் நாட்டின்மீது படையெடுத்து வந்த இஸ்லாமியத் தலைவர்களில் சிலர், பல சந்தர்ப்பங்களிலும் மீண்டும் தலையெடுக்கவியலாத வகையில் படுதோல்வியுற்றனர். இத்தகைய படையெடுப்புகளில் அவுரங்கசீபின் படைத்தலைவன், மீர் ஜும்லாவின் முயற்சியை இறுதியானதாகக் கருதலாம். இதை விரித்துரைக்கின்ற இஸ்லாமிய வரலாற்றாசிரியன் ஒருவன், பதினேழாம் நூற்றாண்டில் இந்நாட்டு மக்களைப் பற்றிப் பிறர் கொண்டிருந்த பயங்கர நினைவுகளை எடுத்துரைக்கிறான். அவன் உபயோகித்துள்ள, கவர்ச்சிகரமான வார்த்தைகளை இங்கு எடுத்துரைப்பது மிகவும் பொருத்தமுடையதாகும்.

'அஸ்ஸாம் (அவன் கூறுவது) அடர்ந்த, அச்சம் விளைவிக்கக் கூடிய ஆபத்துகள் நிறைந்த ஒரு நாடு...மரணத்தின் தலைவாயிலுக்கு இட்டுச் செல்லும் பாதையைப் போல, அந் நாட்டின் சாலைகள் மிகவும் பயங்கரமானவையாகும். ஜனசந்தடியற்ற நரகத்தைப் போன்று, இந் நாட்டின் பரந்த வெளி உயிருக்கு ஆபத்து விளைவிப்பதாகும்.

'அக்குன்றுகளிலுள்ள காற்றும் தண்ணீரும், அராபிய நாட்டுப் பாலைவனங்களில் வீசும் கொடுங்காற்றைப் போன்றவையேயாம். உள் நாட்டினருக்கும் அயல் நாட்டினருக்கும், அவை மிகக்கொடிய விஷத்திற்கொப்பாகும்.

'[அந்நாட்டுவாசிகள்] இரண்டு கால்களின் உதவியைக் கொண்டு நிமிர்ந்து நடக்கின்றனர் என்பதைத் தவிர, வேறு எதிலும் அவர்கள் மனித இனத்தைச் சார்ந்தவரல்ல. [மந்திர ஜாலங்களில் அவர்கள் மிகச் சிறந்தவரென்று பெயர் பெற்றவர்கள்]. சுருங்கக் கூறுமளவில், இந் நாட்டு எல்லையை மிதித்த ஒவ்வொரு படையும், வாழ்க்கைப் பேற்றிலிருந்து விடுதலையடைந்து வந்தது. இந் நாட்டிற்குள் காலடி வைத்த கூட்டமொவ்வொன்றும், மரணத்தின் தலைவாயிலிலேயே தன் மூட்டை முடிச்சுகளுடன் வசிக்கத் தொடங்கிவிட்டதெனலாம்.[1]'

பர்மாவின் மேற்குப் பகுதியில் வாழ்ந்த ஷான் குலத்தைச் சார்ந்த 'அஹோம்ஸ்' என்ற பிரிவினர், பதின்மூன்ருவது நூற்ருண்டின் முற்பகுதியிலேயே அஸ்ஸாமின் மீது படையெடுத்தனர். சிறுகச் சிறுக நாட்டில் அரசியலாதிக்கம் பெற்ற அவரகள், 1816 ஆம் ஆண்டில் பர்மியர் அந்நாட்டை ஆக்கிரமித்துக் கொள்ளும் வரையிலும், 1825 ஆம் ஆண்டில் பிரிட்டிஷார் ஆட்சியைக் கைப்பற்றும் வரையிலும். செல்வாக்குடன் அரசு செலுத்தி வந்தனர். தங்கள் மரபினருக்கே உரித்தான ஒரு வகைச் சமயக் கோட்பாட்டை, அஹோம்ஸ் சாதியினர் அஸ்ஸாமில் பரப்பினர். பதினெட்டாவது நூற்ருண்டின் தொடக்கத்தில், இந்து சமயத்தில் அதிகப் பற்றுக்கொண்டு இச்சமயக் கோட்பாட்டைக் கைவிட்டனர். அவர்கள் பேசி வந்த மொழி முழுவதும் மறைந்துவிடவில்லையென்ருலும், அநேகமாக வழக்கொழிந்து விட்டதெனலாம். அஹோம்ஸ் சாதியினர், அங்குள்ள இந்துக்களுடன் ஒன்ருகக் கலந்து விட்டனர். அஸ்ஸாமிய மொழியையும், வங்காளம், சமஸ்கிருதம் ஆகியவைகளுடன் ஒப்பிடக்கூடிய ஒருவகை ஆரிய மொழியையும் அவர்கள் பேசி வருகின்றனர். அரசியலாதிக்கம் பெற்றிருந்தபோது, திறமைமிக்க ஆனல் கொடுமை அல்லது சொடூரம் நிறைந்த அரசாட்சியை அவர்கள் நிறுவியிருந்தனர். சிறந்த வரலாற்று இலக்கியத்தை அவர்கள் தோற்றுவித்தனர். மரத்தில் சிற்பவேலைப்பாடுகள் செதுக்குகின்ற கலையில் அவர்கள் மிகவும் தேர்ச்சியுற்றிருந்தனர். 'கார்கோயன்' அரண்மனையிலுள்ள அலங்கார வேலைப்பாடுகளை, நாம் முன்னர் குறித்த இஸ்லாமிய நூலாசிரியன் மிக வியப்போடு வர்ணித்துள்ளான்; அவைகளைப் பொறுத்த நினைவுச்சின்னம் எதுவுமில்லை.

1 டாலிஷ்—பீஹார், ஒரிசா ஆராய்ச்சிக் கழகத்தின் சஞ்சிகையில் (வால் 1. பக். 179-95) பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் மொழி பெயர்த்துள்ளவாறு.

இந்திய சமயங்களைப்பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடுபவனுக்கு, அஸ்ஸாம் கவர்ச்சிமிக்கதொரு மாகாணமாக விளங்கும். மங்கோலிய இந்தியக் கருத்துகள் இங்கு ஒன்றோடொன்று கலந்து உறவாடின என்பதே இச் சிறப்பிற்கு மூலகாரணமாக விளங்குகிறது. இக்கூட்டின் விளைவாக, ஒரு வகையான தாந்திரிக இந்து சமயம் உருவாயிற்று. பெண் இனத்தைச் சார்ந்த 'சக்தி' என்னும் ஒருவகைத் தெய்வத்திற்கு, இவ்வழிபாட்டு முறையில் மிகுந்த ஏற்றமளிக்கப்படுகிறது. கௌஹாத்திக்கு அருகிலுள்ள 'காமக்யா' ஆலயம், இவ்வழியில் தோன்றிய பிரசித்திபெற்ற ஆலயங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆத்மவிசாரத்தில் அதிகப்பற்றுள்ள சாதியினரின் அநாகரிக வழிபாட்டு உருவங்கள், மற்றும் விநோதமான குடியினரின் கடவுளர் ஆகியவைகளுக்குக் கௌரவமளித்து, பிராமண சமயம் சார்ந்த புனித தெய்வங்களாக மாற்றப்படும் முறைக்கு, அஸ்ஸாம் நாட்டில் பல மேற்கோள்களை நாம் காண இயலும்.

## கால வரன் முறை

(பல்வேறு நாட்கள்)

| கி.பி. | |
|---|---|
| 622 | சிராங்-ட்ஸான்-காம்போ திபெத்திய அரசேற்றல் |
| 639 | சிராங்-ட்ஸான்-காம்போ லாஃசாவைத் தோற்றுவித்தல் |
| 641 | சிராங்-ட்ஸான்-காம்போ, நேபாள, சீன இளவரசிகளை மணத்தல் |
| 643 | காமரூபத்திற்கு ஹுவான் சாங்கின் விஜயம் |
| 647 | கனோஜ் நாட்டு ஹர்ஷனின் மரணம் |
| 670 | காஷ்கேரியம் அல்லது சீன துருக்கிஸ்தானத்தைச் சீனரிடமிருந்து திபெத்தியர் பறித்தல் |
| 703 | நேபாளம், திர்குட் ஆகியவை திபெத்தின் ஆதிக்கத்தினின்று மீட்சி பெறுதல் |
| 713 | ஹுயூன்-சங்-சீனப் பேரரசன் அரசேற்றல் |
| 720—733 | காஷ்மீர மன்னர் சீனாவிலிருந்து ஆட்சிச் சின்னங்களைப் பெறுதல் |

| | |
|---|---|
| கி.பி. | |
| 751 | அராபியர் சீனரை முறியடித்தல் |
| 1038 | திபெத்திற்கு 'அடிஸா'வின் தூது (வாடல் லாஃசா, பக். 320) |
| 1089–1111 | ஹர்ஷன்-காஷ்மீர மன்னன் |
| 1339 | காஷ்மீரத்தில் இஸ்லாமியர் ஆட்சி நிறுவப் பெறுதல் |
| 1587 | அக்பர் காஷ்மீரத்தை இணைத்துக் கொள்ளுதல் |
| 1768 | நேபாளத்தைக் கூர்க்கர் கைப்பற்றுதல் |

### மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

ஆங்காங்கே தரப்பட்டுள்ள குறிப்புகளிலும், பண்டைய இந்திய வரலாறு (1924) நூலிலும் ஏராளமாகக் காணவியலும். பண்டைய இந்திய வரலாறு பிரசுரமான பின், இஸ்லாமிய ராட்சிக்கு முன்னதாகப் புதிய செய்தி எதுவும் இல்லை.

சர் இ. கெய்ட் என்ற நூலாசிரியரின் 'அஸ்ஸாமிய வரலாறு' (கல்கத்தா, 1925)

மற்றும், கே எல். பருவா என்பவரின் 'காமருமத்தின் பண்டைய வரலாறு' (ஷிலாங் 1933) என்ற நூலேயும் அஸ்ஸாமைப் பொறுத்தவரையில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்.

அலிஸ் கெட்டி என்பவரும். ஜே. தேனிகர் என்பவரும் (கிளாரண்டன்பிரஸ் 1914) 'வட நாட்டுப் பௌத்த சமயம் சார்ந்த தெய்வங்கள்' என்ற அற்புதமான நூலொன்று இயற்றியுள்ளனர். திபெத்தியக் கலே, மற்றும் கற்பனைக் கதைகளுக்கு இதை ஒரு கருவூலமாகக் கருதலாகும்.

ஜே. ஏ. ஓ. எஸ். வால்யூம் 38 (1918) பக்கம் 32–46 லாஃபர் என்பவர் எழுதியுள்ள கட்டுரையைப் பார்க்கவும்.

## 2. சமவெளியைச் சார்ந்த வடக்கு மற்றும் மேற்குத் திசையிலுள்ள இராச்சியங்கள்

**எண்ணிலடங்கா இராச்சியங்கள்**

ஹர்ஷனின் மரணத்திற்கும், இஸ்லாமியர் தங்கள் ஆட்சியை ஏற்படுவதற்கும் இடைப்பட்ட ஐந்தரை நூற்றாண்டுக்காலம், பஞ்சாப் நீங்கலாக உள்ள பிற பகுதிகளில், அன்னியராதிக்கம் நிலையாக ஏற்படவில்லை. இந்திய நாட்டின் பெரும் பகுதி இஸ்லாமியராட்சி ஏற்பட்ட செய்தியை உணர்ந்ததாகத் தெரியவில்லை. அந்நிகழ்ச்சியைப் பற்றிய அறிவும் அவர்களுக்கு இருந்ததாகவும் தெரியவில்லை. சிறுகச் சிறுக, இந்து சாம்ராச்சியங்கள் உருப்பெற்று எழலாயின. எண்ணிக்கையிலும் பரப்பிலும் அவைகள் பலவாறாக மாறுபட்டிருந்தன. அவைகளுக்குள் சமாதானமும் நல்லுறவும் அதிகமாக நீடித்ததில்லை. ஆனால் அவ்வரசர்களும் மக்களும் போர்க் களத்தையும், சூறையாடுவதையும் தவிர எதையும் எண்ணவில்லை என்று கொள்வதும் தவறாகும். கலைச் சிறப்புமிக்க அவைகளை அவர்கள் கூட்டிவந்தனர். சமாதானச் சூழ்நிலையில் எழுந்து பரவும் கலைகள் யாவற்றையும் வெற்றியுடன் பேணி வளர்த்து வந்தனர். வியப்பூட்டும் பெருங் கட்டடங்களை எழுப்பி அவைகளில் கலையழகு மிளிரும் ஏராளமான சிற்பங்களை அமைத்து, அவர்கள் நாட்டின் பல பகுதிகளையும் கலைக்கூடங்களாக்கினர். வடமொழியில் தேர்ந்த புலவர்கள், பெரும்பாலும் அரசர்களால் தரமறிந்து நன்கு பாராட்டப் பெற்று வந்தனர். இவ்வரசர்களில் பலர் சிறந்த போர் வீரர்களாக விளங்கியதுமன்றி, கல்வி கேள்விகளிலும் மிகத் தேர்ந்திருந்தனர். தற்போது வழக்கிலிருந்து வரும் இந்தி, வங்காளி, குஜராத்தி மொழிகள், நாளடைவில் புகழ் பெற்று நிலை பெறலாயின. பிரதேச மொழிகளின் வளர்ச்சிக்கும் தகுந்த அஸ்திவாரமிடப் பெற்றது.

பொது வரலாற்றைப் பரவலாக எடுத்துரைக்கின்ற இது போன்ற நூல்களில், ஒவ்வோர் அரசின் வரலாற்றையும் விரிவாக எடுத்துரைப்பது இயலாத காரியம். அவை, ஒவ்வொன்றையும் பற்றிய விரிவான குறிப்புகள் கிடைப்பதால், ஒவ்வோர் இராச்சிய வரலாறும் இது போன்றதொரு சிறந்த நூலாக விரிவடையும். ஐந்து, ஆறாவது நூற்றாண்டுகளில் நிகழ்ந்த அன்னியப் படையெடுப்பின் விளைவுகள் பல நூற்றாண்டுகள் வரை செல்வாக்குப் பெற்று விளங்கின. பிறபெயர் தாங்கியிருந்த, உறவினருடனும், தொடர்புடையவருடனும் கூடிய கூர்ச்சரர்கள்,

இராஜபுத்திரர்களாக ஏற்கப்பட்டனர் என்பதை முன்னரே விரிவாகக் கூறியுள்ளோம். இராஜஸ்தானத்தில் அவர்களது செல்வாக்குப் பெருகியிருந்தது. அதை ஊன்று கோலாகக் கொண்டு அவர்களது நாடு மேலும் விரிவடையலாயிற்று. ஒன்பது, பத்தாவது நூற்றாண்டுகளில் கூர்ச்சரப்பிரதிஹரர்கள் (பரிஹர்கள்) வடமேற்கு இந்தியாவில் தலைசிறந்து விளங்கலாயினர். வங்காளம், 'பாலர்' வசமாயிற்று. இந் நாட்டைச் சேர்ந்த ஓர் ஆதி குலத்தினர் என்று நான்கு நூற்றாண்டுக் காலமாகப் 'பாலரை'க் கருதும் வழக்கம் இருந்து வருகிறது. மாளவம், குஜரத் மற்றும் பல அரசுகள், மிகுந்த செல்வத்தையும் செல்வாக்கையும் பெற்று விளங்கின.

**வரலாற்றின் போக்கு**

வட இந்திய வரலாற்றின் போக்கு அலாதியானது. தீபகற்ப இந்திய நிகழ்ச்சிகளுடன் அது மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கவில்லை. ஆனால், தக்காணத்தை ஆண்டுவந்த மன்னர்கள் அவ்வப்போது செழிப்புமிக்க ஆர்யவர்த்தம் அல்லது இந்துஸ்தானச் சமவெளி மீது படையெடுத்தனர். இதனால் தாற்காலிகமாகக் கங்கைக் கரை வரையிலும் அவர்களது செல்வாக்கும் பரவி வந்தது. வடஇந்திய மன்னன் எவனும் தக்காணத்தை வெல்லும் முயற்சியை மேற்கொள்ளவில்லை. தென்கோடியிலுள்ள தமிழக இராச்சியங்களும், தனித்து நின்று தனியுலகமாக இயங்கி வந்தன; தக்காண இராச்சியங்களுடன் சில போர்களில் ஈடுபட்டு வந்ததோடு, சிங்களம் மற்றும் அன்னிய நாடுகளுடன் பெருவாரியாக வாணிபத் தொடர்பும் கொண்டிருந்தது.

பண்டைய பாண்டிய, சேர, சோழ நாடுகள் பல்லாண்டுகளாகக் குறிப்பாக ஏழாவது நூற்றாண்டில் சோபையிழந்திருந்தன. காஞ்சி (கஞ்சீவரம்)யைத் தலைநகரமாகக் கொண்ட பல்லவரின் செல்வாக்கு மிகவும் உயர்ந்திருந்தது. பதினொன்றாவது நூற்றாண்டில் சோழ நாடு தென்னிந்தியாவில் மிகவும் சிறந்தோங்கியிருந்தது. உண்மையில் இந்திய நாடுகளில் மிக வலிமையுடையதாக அதைக் கருதலாம்.

இவ்வாறு பெருவாரியாகவும், தொடர்ச்சி குன்றியும், அடிக்கடி மாறுதல்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. காலவரன் முறையை அடிப்படையாகக் கொண்ட இது போன்றதொரு வரலாற்று நூலில் அவைகளை விரிவாக எடுத்துரைக்க முடியாது. அரசியல் துறையில் ஏற்பட்ட புரட்சிகரமான மாறுதல்களை ஒட்டி, சமயம், கலை மற்றும் பொதுப் பழக்க வழக்கங்களிலும்

அமைதியான முறையில் பல மாறுதல்கள் நிகழ்ந்து வந்தன. அவைகளையும் சுருக்கமாகவும் கோவையாகவும் எடுத்துரைக்க இயலாது.




இந்தியா—கி. பி. 1000

(வளைவுக்குள் தரப்பட்டுள்ள இராச்சியங்கள் இந்நாளுக்குப் பின் சுதந்திரமடைந்தன)

ஓய்வின்றி நடைபெற்று வந்த குலச் சண்டைகளும், மற்றும் புரட்சிகளும், அரசியல் நிறுவனங்கள் உருப்பெற்று வளர்ச்சியுறுவதற்குத் தடையாக நின்றன. குடியரசுகள் எழவில்லை. சுதந்திரம் பெற்ற நகரங்களும் வழக்கிலில்லை. பெரும்பாலும் பழைய மரபுகளையொட்டிக் குடிமன்னர்கள் அவர்களிச்சைப்படி அரசு

செலுத்தி வந்தனர். செல்வாக்குள்ள வரையிலும் அம்மன்னர்களின் ஆணைகளுக்கு எதிர்ப்பில்லை. சமயம் சார்ந்த ஒருசிலரும், பிராமணரும் ஒரோரு சமயங்களில் அம்மன்னர்களின் தான் தோன்றி அரசைக்கட்டுப்படுத்தி வந்தனர்.

சமவெளிகளின் வடக்கு மற்றும் மேற்குப் பகுதிகளில் தழைத்தோங்கி வந்த ஒருசில நாடுகளைப்பற்றிய வரலாறுகளை மட்டிலும், பரவலாக இவ்வதிகாரத்தில் எடுத்துரைப்பது சாத்தியமாகும். தொடர்ந்து வரும் அதிகாரத்தில் தீபகற்ப இந்திய அரசுகளின் பொது வரலாற்றையும் அவ்வாறே எடுத்துரைக்க முயல்வோம். இவ்விரு பகுதிகளிடையிலும் நிலவிய தொடர்புகளையும் ஆங்காங்கே குறிப்பிடுவதற்கும் முயற்சி செய்வோம்.

**கூர்ச்சரப்பிரதிஹாரரின் அரசு**

பதினாறாவது நூற்றாண்டின் முற்பகுதியிலே பல பெயர்களைக் கொண்ட துணை மரபினர் சிலர் பின் தொடரக் கூர்ச்சரர் இந்தியாவினுட் புகுந்தனர். பல இடங்களில் குடியேறி, அரசுகளையும் அமைத்துக்கொண்டனர். இவ்வாறு அமைந்த அரசுகளில் கூர்ச்சர நாடான தெற்கு இராஜஸ்தானம் இந்திய நாட்டின் பொது வரலாற்றுடன் மிக நெருங்கிய தொடர்புடையதாக விளங்கியது. 'அபு' மலைத் தொடருக்கு வடமேற்கில் அமைந்துள்ள பின்மல் அல்லது பில்மல் அதன் தலைநகரமாக இருந்திருக்கக் கூடும். கற்பனைக் கதைகளில் கிடைக்கும் ஆதாரங்களிலிருந்து இங்குள்ள அக்கினி குண்டத்திலிருந்து பரிஹாரரும், மற்றும் பல இராஜபுத்திரக் கிளையினரும் தோன்றினர் என்ற செய்தி கிடைக்கிறது. ஏழாவது நூற்றாண்டின் முற்பகுதியில் ஹுயூன்-சாங், கூர்ச்சர நாட்டிற்கு விஜயம் செய்தான். அங்குள்ள மன்னன் அன்னிய குலத்தினன் என்றாலும் க்ஷத்திரியன் என்றே ஏற்றுக் கொள்ளப்பட்டான்.

தோராயமாகக் கி. பி. 725 ஆம் ஆண்டில் பிரதேசகுலமொன்றை நாகபட்டன் என்ற தலைவனொருவன் தோற்றுவித்தான். கூர்ச்சரர்களில் பிரதிஹாரப் (பரிஹர்) பிரிவைச் சேர்ந்தவனாக அவன் விளங்கினான். இக்குலத்தினர் உச்சயினியைக் கைவசப் படுத்தினர் என்றும் தெரிய வருகிறது. தோராயமாக ஒரு நூற்றாண்டுக் காலத்திற்குப்பின், கி.பி. 816 அல்லது அதற்குச் சமீபமாக, முன்னவனின் வழித் தோன்றலாகிய நாகபட்டன் என்ற பெயருடைய மற்றொருவன் கங்கைப் பகுதியைப் படையெடுத்து கனோஜைக் கைப்பற்றி, ஆண்டுவந்த மன்னனிடமிருந்து அரசையும் பறித்தான். ஒருகால் ஹர்ஷனின் தலைநகர

மாக விளங்கிய அக்கனோஜ் நாட்டிற்குத் தன் ஆட்சி பீடத்தையும் மாற்றிக்கொண்டிருக்கவேண்டும். அவனது வழித்தோன்றல்கள் பல தலைமுறைகளாக அந் நகரத்திலிருந்து அரசாண்டு வந்தனர். மேலும், இரண்டு நூற்றாண்டுகளுக்கு 1018—19 ஆம் ஆண்டு வரையிலும், கனோஜ் பிரதிஹாரர் வசத்திலேயே இருந்து வந்தது. அப்போது கஜினியைச் சார்ந்த சுல்தான் முகம்மது கனோஜைக் கைப்பற்றி, மன்னனை, 'பாரி' என்னும் பகுதிக்கு விரட்டினான்.

**கனோஜ்**

ஹர்ஷனின் மரணத்தைத் தொடர்ந்து விளைந்த குழப்பங்களில் கனோஜ் நாட்டிற்கு மிகுந்த சேதமேற்பட்டிருக்கக்கூடும். 731 ஆம் ஆண்டு வரையிலும் நேர்ந்த இக்கேடுகளைப்பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை. அப்போது, கனோஜை ஆண்டுவந்த யசோவர்மன் சீனதேசத்திற்குத் தூதுகோஷ்டியொன்றை அனுப்பிவைத்தான். தன் விரோதிகளிடமிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்வதின் நிமித்தம் உதவி கோரி, இத் தூதுவர் அனுப்பப்பட்டனர் என்று தெரிய வருகிறது. உதவியொன்றும் கிடைத்ததாகத் தெரியவில்லை. 740 ஆம் ஆண்டில் அல்லது அதற்குச் சமீபமாக யசோவர்மனை, லலிதாதித்தியன் முறியடித்துக் கொன்றான். 'மார்த்தாண்ட்' ஆலயத்தைக் கட்டி முடித்த இவன் காஷ்மீர மன்னர்களில் மிகச் சிறந்தவனாவான். யசோவர்மனை அடுத்துப் பட்டமெய்தியவனையும், லலிதாதித்யனை அடுத்து அரசெய்திய அவன் மகன் முறியடித்தான் என்று கூறப்படுகிறது. மீண்டும் 810 ஆம் ஆண்டில் வங்காள அரசன் தர்மபாலன், கனோஜை ஆண்டு வந்த மன்னனிடமிருந்து அரசைப் பறித்து, தனது அடியான் ஒருவனிடம் ஒப்படைத்தான் எனத் தெரிய வருகிறது. அவ்வாறு நியமிக்கப்பட்ட மன்னனை, நாகபட்ட பிரதிஹாரன் விரட்டியடிப்பதைப்பற்றி முன்னர்க் கூறினோம். இவ்வாறு, எழுபத்தாறு ஆண்டுக்கால இடைவெளிக்குள், (கி. பி. 740—816) கனோஜை ஆண்டு வந்த நான்கு மன்னர்களை, பகைகொண்ட பிறர் முறியடித்தனர். இதிலிருந்து அக்காலத்தில் வட இந்தியாவில் நிலவிய குழப்பமான நிலையை ஒருவாறு ஊகித்தறியலாம்.

**போஜனின் கூர்ச்சரப் பேரரசு**

மிஹிரப்பிரதிஹாரன் என்பவன் மிக்க செல்வாக்கும் வலிமையும் பெற்றுக் கனோஜ் நாட்டை அரை நூற்றாண்டுக்காலம் (கி. பி. 840—90) ஆண்டு வந்தான். இவனைப் போஜன் என்ற மாற்றுப் பெயராலேயே பொது உலகம் நன்கறியும். இவனுடைய வழித்

தோன்றல்கள் சௌராஷ்டிரம், அயோத்தி ஆகிய பகுதிகளையும் ஆண்டுவந்தனரெனத் தெரிய வருகிறது. எனவே, இப் பகுதிகளும், போஜனது இராச்சியத்தில் அடங்கியிருந்திருக்க வேண்டும். எனவே, அதைச் சாம்ராச்சியம் என்று குறித்தாலும், மிகையாக உரைப்பதாகாது. வடக்கில் மலையடிவாரத்தையும், வடமேற்கில் சட்லஜ் ஆற்றையும், மேற்கில் சிந்துவின் எல்லையாக விளங்கிய ஹக்ரா அல்லது 'கை நழுவிய ஆற்றையும்', தெற்கில் மிஹ்ரானிலிருந்து அரபிக்கடல் வரையிலும், ஜெஜகா-புக்தியின் எல்லையாக விளங்கிய யமுனை ஆறு வரையிலும், தென்மேற்கில் நர்மதை ஆற்றோரங்களின் கீழ்ப்பகுதிகளையும், கிழக்கில் பாலர் நாட்டின் எல்லைப் பகுதியான மகதத்தையும், போஜனது ஆட்சியின் எல்லைகளாகக் குறிக்கலாம். அவனது மகன் மகேந்திர பாலன் (கி. பி. 890—910) தகப்பனிடமிருந்து தான் பெற்ற பகுதி முழுவதையும் அரசாண்டு வந்தான் எனத் தெரிய வருகிறது. அவனது கல்வெட்டொன்றில் சிராவஸ்தி மாகாணம் மற்றும் மாவட்டத்தைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. பிரசித்தி பெற்ற இந்நகரத்தில் பத்தாவது நூற்றாண்டிலும் மக்கள் வாழ்ந்திருந்தனர் என்பதும் தெளிவாகிறது. மகதம் அல்லது பீஹாரின் தென்பகுதி, சின்னாட்களுக்குக் கிளை நாடாக இருந்ததென்றும் தெரிய வருகிறது.

கனோஜில் நிலைத்திருந்த கூர்ச்சர் அல்லது பிரதிஹார அரசின் உள்நாட்டு வியவகாரங்களைப்பற்றி, அநேகமாகச் செய்திகள் இல்லை. ஒன்பதாவது நூற்றாண்டின் இடைப்பகுதியில் போஜன் என்ற மன்னனொருவன் ஆண்டு வந்தான் என்றும், சிறந்த குதிரைப் படையும், பல ஒட்டகங்கள் கொண்டதொரு படையும் அவன் வசமிருந்தன என்றும், அரபு நாட்டின் யாத்திரிகன் ஒருவன் வாயிலாக அறிகிறோம். இராஜஸ்தானத்தைச் சார்ந்த இராச்சியங்களில் சிறந்த ஒட்டகைகள் வளர்க்கப்படுவதை நாம் இன்றும் காணலாம். போஜனது குதிரைப்படையும், ஒட்டகைப் படையும் மிக துரிதமாகச் செல்லும் தன்மையுடையவை. பிற இந்து அரசர்களின் படைகள் அத்துணை சக்தி வாய்ந்தவைகளாக இல்லை என்பதால் போஜனது படை வலிமை மிகவும் பெருகியிருக்க வேண்டும். மன்னன் செல்வச் சிறப்புடையவனாக விளங்கினான். 'இந்தியாவின் வேறு எந்தப் பகுதியிலும், கள்வரிடமிருந்து இத்துணைச் சிறப்பு வாய்ந்த பாதுகாப்பைக் காணவியலாது' என்ற யாத்திரிகனின் குறிப்பு, உள்நாட்டு விவகாரங்களில், அரசினரின் சிறப்பை உணர்த்துகின்றது.

வராக அவதார உருவத்தில், மஹாவிஷ்ணுவை மிகவும் பக்தியுடன் வழிபட்டுவந்த ஓர் இந்துவாகப் போஜன் விளங்கினான்

'பகவதி' அல்லது 'லக்ஷ்மி'யையும் அவன் வழிப்பட்டு வந்தான் என்று தெரியவருகிறது. ஏராளமாகக் காணக் கிடைக்கின்ற அவனது நாணயங்களில் 'ஆதிவராகன்' என்ற எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. இச்சொல் மகாவிஷ்ணுவின் வராக அவதாரத்தைச் சுட்டிக் காட்டுகிறது. வெள்ளை ஹூணர் மற்றும் கூர்ச்சர இளவல்களின் நாணயங்களைப்போல, போஜனின் நாணயங்களும், சசானிய மன்னர்களின் மரபை யொட்டி வெளிவந்த நாணயங்களாகவே காணப்படுகின்றன. கிரேக்கரின் நாணயங்களான 'டிராக்மா'க்களை அடிப்படையாகக் கொண்டு இவை உருப்பெற்றிருக்க வேண்டுமெனத் தெரியவரு கிறது. கூர்ச்சர நாணயங்களுக்கு 'டிரம்மா' என்னும் பெயர் இன்றும் வழக்கிலிருந்து வருகிறது. இந்திய நாட்டின் மீது படையெடுத்து வந்த அன்னியர் அக்காலங்களில் தங்களுக்கெனப் புதுவகையான நாணயங்களை உற்பத்தி செய்வதில் கவனம் செலுத்தவில்லை. அரைகுறையான வளர்ச்சியுடைய நாகரிக மற்ற பழமை வாய்ந்த பாரசீக நாணயங்களைப் பின்பற்றி தங்கள் நாணயங்களையும் வெளியிட்டுக்கொள்வதோடு அவர்கள் திருப்தி யடைந்தனர்.

**மகேந்திர பாலன்**

போஜனின் மகன் மகேந்திர பாலன் (890-910) அவனுக்குப் பின் அரசேற்றான். தகப்பனைக்காட்டிலும் அவன் மிகுந்த செல் வாக்குடையவனாக விளங்கினான். பாலர்களை, மகதத்தினின்றும் அவன் விரட்டியதோடு, மேற்கு வங்காளத்தில் கல்வெட்டு ஒன்றையும் நிறுவியிருந்தான். தக்காணத்தைச் சார்ந்த இராஜ சேகரன் என்னும் புலவனிடம் அவன் சீடனாக இருந்தான். அர சவையை அலங்கரித்த அப்புலவன் நான்கு அரிய நாடகங்களை இயற்றியுள்ளான். அவைகளில் 'கர்ப்பூரமஞ்சரி' என்ற பெயர் கொண்ட நாடகமொன்று, முழுவதும் பிராகிருத மொழியில் எழு தப்பட்டுள்ளது. நாடகத்தலைவியின் பெயரே நாடகத்திற்குச் சூட்டப்பெற்றுள்ளது. இது சுவைமிக்க நூதனமானதோர் நாடகமாகும். பேராசிரியர் லான்மென் என்பவர், இந்நூலை மிகவும் சாமர்த்தியமாக ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். செய்யுள் இலக்கியத்தைக் குறித்த நூலொன்றையும் இந் நாடகா சிரியர் இயற்றியுள்ளார். செய்க்ஞவார் ஓரியன்டல் நூல் வரிசை யில் இந் நூலும் இடம் பெற்றிருக்கிறது.

கூர்ச்சரப் பேரரசின் சரிவையும் வீழ்ச்சியையும், கனோஜ் 1018-19-ல் சுல்தான் முகம்மது கஜினியால் கைப்பற்றப்பட்ட செய்தியையும் விரித்துரைக்கமுற்படுவதற்கு முன்,வங்காளத்துப்

'பாலர்' குலத்தைப்பற்றியும் 'ஜிஜஹோத்தி' அல்லது புண்டெல் கண்டைச் சார்ந்த சாந்தல குல மன்னர்களைப் பற்றியும் சுருக்கமாக எடுத்துரைப்பதால் பயனுண்டு. வட இந்தியாவைச் சார்ந்த, இவ்விரு பிரதான இராச்சியங்களும் கூர்ச்சர இராச்சியம் அல்லது கனோஜ் பேரரசுடன் சமகாலத்தவையாக விளங்குகின்றன. அன்னிய இராச்சியங்களுடன் ஆங்காங்கே இவை கொண்ட தொடர்புகளும் தெரிய வருகின்றன.

**வங்காளம், ஆதிசூரன்**

ஹர்ஷனின் மறைவுக்குப்பின் வங்காளம், பீஹார் ஆகிய பகுதிகளின் வரலாறு தெளிவற்றுக் காணப்படுகிறது. அதே நூற்றுண்டில் மேற்கு வங்காளம், ஒரு வேளை மகதத்தைச் சார்ந்த பிற்கால குப்தர்களின் ஆட்சியிலிருந்திருக்கக்கூடும். கனோஜ் நாட்டு யசோவர்மனின் வெற்றிகளுக்கும், அப்பேரரசின் திடீர் மறைவிற்கும் பின் வங்காளத்தின் தலை விதியைப்பற்றிய செய்திகள் மிகவும் தெளிவற்றிருக்கின்றன.

வங்காளப் பகுதியில் நிலவிவரும் மரபுச்செய்திகள் ஆதிசூரன் என்ற மன்னனொருவனைப்பற்றி அதிகமாகக் கூறுகின்றன. கௌர் அல்லது லக்ஷ்மணவதி என்னுமிடத்திலிருந்து அரசு செலுத்திய அவன் பௌத்த சமய எழுச்சியினால் செல்வாக்கிழந்திருந்த பிராமண சமயத்திற்குப் புத்துயிரளித்தான் என்று கூறப்படுகிறது. கனோஜிலிருந்து ஐந்து பிராமணர்களை அவன் இங்குக் குடியேற்றினன் என்றும், அவர்கள் இந்து சமயத்தைப் பரப்பிவந்தனரென்றும் கூறப்படுகிறது. ராதிய, வரேந்திரப் பிராமணக்கிளையினருக்கு இவ்வைவரும் முன்னோடிகளாக விளங்கினர். கி.பி. 700-க்குப்பின் இவன் வாழ்ந்திருந்தான் என்று சொல்லலாம்.

**பாலர் வமிசம்: தர்ம பாலன்**

வங்காளத்தில் நிலவிய குழப்பம் கி.பி. 750-ல் உச்ச நிலையை அடைந்தது. இதனால் விளைந்த துன்பத்தைப் பொறுக்க வியலாத மக்கள், 'கோபாலன்' என்ற ஒருவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்தனர். 'கடலரசனின் மரபை'ச் சார்ந்தவனாகக் கருதப்படுமிவன் நல்லதோர் அரசை ஏற்படுத்துவான் என்றும் எதிர் நோக்கியிருந்தனர். இச் செய்தியைப் பற்றிய விரிவான குறிப்புகள் நம் கைகளுக்குக்கிட்டவில்லை.நெடுங்காலமாக அரசு செலுத்துகின்ற வாய்ப்பைப் பெற்ற கோபாலனின் மகன் தர்ம பாலன் இக்குலத்தினரின் சிறப்பிற்கு உண்மையில் அடிகோலியவனாவான். இக்குலத்தைச் சார்ந்த மன்னர்களின் பெயர் 'பாலர்' என்று முடி

வுறுவதால், இம்மரபிற்கு வங்காளத்தின் 'பாலர் வமிசம்' என்ற பொருத்தமான பெயர் சூட்டப்பெற்றது. வங்காளம், பீஹார் ஆகிய பகுதிகளின் எல்லைகளுக்கு அப்பாலும் தர்ம பாலன் வெற்றிகரமாகத் தன் படைவலிமையை நிலை நாட்டினன். முன்னரே நாம் குறித்தவாறு வட இந்தியா முழுவதிற்கும் இவன் தலைவனானன். வலிமை பொருந்திய இவன் பட்டத்திலிருந்த கனோஜ் மன்னனை அரசிழக்கச் செய்து, தனது கையாள் ஒருவனுக்கு முடி சூட்டினன். இப் புரட்சிகரமான மாறுதலை ஒன்பது வட இந்திய மன்னர்களின் துணையுடன் அவன் செய்தான் என்றும் கூறப்படுகிறது. சமகாலக் கல்வெட்டொன்றிலிருந்து கிடைக்கும் இச்செய்தியை நாம் நம்புவோமாகில், வங்காள மன்னனின் செல்வாக்கு வடமேற்கெல்லையில் காந்தார நாடுவரையிலும் பரவியிருந்த தென்பது உறுதியாகிறது. இச் சம்பவங்கள் கி.பி. 810 அல்லது அதற்குச் சமீப காலத்தில் நிகழ்ந்தன என்று கூறலாம்.

அவனது மரபினரைப்போல, தர்ம பாலனும் பௌத்த சமயத்தில், மிகவும் பற்றுடையவனாக இருந்தான். புகழ் வாய்ந்த விக்கிரம சீல மடாலயத்தையும் கல்லூரியையும் இவன் தோற்றுவித்தான். இவை, பகல்பூர் மாவட்டத்திலுள்ள 'பத்தார்கதம்' என்னுமிடத்தில் அமைந்திருக்கவேண்டும். பாலர் பின்பற்றி பொழுகிய பௌத்த சமயம், கௌதம புத்தன் போதித்த கோட்பாடு அல்லது தத்துவங்களிலிருந்து மிகவும் மாறுபட்டிருந்தது. மகாயான பௌத்தப்பிரிவின் கடை நிலையொன்றை இது சார்ந்திருந்ததெனலாம்.

### தேவ பாலன்

தர்ம பாலனின் மகன் தேவபாலன் நெடு நாட்களாக அரசு செலுத்தினன். வங்காள மரபின்படி, பாலர்களில் அவன் மிகச் சிறந்து விளங்கியிருக்கவேண்டும். அவனது ஆட்சியும், அவனது தகப்பனின் ஆட்சியுமாகச் சுமார் நூறுண்டுக்காலம் நடைபெற்றிருக்கவேண்டும். இவ்விரு ஆட்சிகளும் தோராயமாக ஒன்பதாவது நூற்றாண்டு முழுவதும் நடைபெற்றன என்று கூறலாம். தேவபாலனின் படைத்தலைவன் லௌசேனன் அல்லது லவணசேனன், அஸ்ஸாம், கலிங்கம் ஆகிய இரு பகுதிகளையும் வென்று பாலர் அரசுடன் இணைத்தான். இக்காலத்தில், பாலர்கள் இந்தோனீசிய இராச்சியமான ஸ்ரீவிஜயத்துடன் அரசியல் தொடர்பு கொண்டிருந்தனர். ஆர்ச்சிபிலாகோவில் ஸ்ரீவிஜயத்தின் செல்வாக்கு அதிகமாகப் பரவியிருந்தது. சைலேந்திர குலத்தைச்

சார்ந்த பாலபத்ர தேவன் என்ற ஸ்ரீவிஜய மன்னன் நளாந்தா வில் பௌத்த மடாலயம் ஒன்றை எழுப்பினான். பாலர் சிறப்பை விளக்கும் கட்டடச் சான்றுகள் இன்று இல்லை. அம்மன்னர் களின் ஆணைப்படி உருப்பெற்ற குலங்களையும், செயற்கை ஏரி களையும், குறிப்பாகத் தினம்பூர் மாவட்டத்தில் நாம் இன்னும் காணலாம். கல்லாலும், உலோகத்தாலும் உருவச் சிலைகள் வடிப்பதில் அவர்கள் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தனர். தீமன், பிட்டாலோ அல்லது விட பாலன் ஆகிய புகழ்பெற்ற இரு கலை ஞர்களின் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. ஏராளமாகக் காணப் படுகின்ற கலைப்பொருள்கள் அவர்களாலேயே உருவாக்கப் பெற்றவை எனத் துணிந்து கூறலாகும்.

**மஹிபாலன் முதலியவர்கள்—சேனர்கள்**

பிற மன்னர்களைக் காட்டிலும் இக் குலத்தின் ஒன்பதாவது மன்னனையே, (கி.பி. 978–1030) கர்ணபரம்பரைச் செய்திகள் அதிகமாக நினைவுறுத்துகின்றன. சுமார் அரை நூற்றாண்டுக் காலம் அவன் அரசு செலுத்தினான். கி.பி. 1023 ஆம் ஆண்டில், தென் கோடியிலுள்ள தமிழ் நாட்டு மன்னன் இராஜேந்திர சோழனின் தாக்குதலுக்குள்ளாகும் விநோத அனுபவம், அவனுக் குக் கிடைத்தது. இத்தமிழக அரசன் கங்கைக்கரைவரையிலும், படையெடுத்துச்சென்று வெற்றி கண்டதாகப் பெருமை கொண் டான். நாம் முன்னர் குறிப்பிட்டுள்ளவாறு, திபெத் நாட்டிற்கு கி.பி. 1038 ஆம் ஆண்டில் அடிஸா தூது கோஷ்டியொன்றை அனுப்பினான். அப்போது மஹிபாலனின் பின் அரசெய்தி நய பாலன் அரசு செலுத்தி வந்தான்.

வெற்றியையும், தோல்வியையும் அடுத்தடுத்துக் கண்டு இக் குலம், 1199 ஆம் ஆண்டில் பீஹாரை இஸ்லாமியர் படையெடுக் கும் வரை தழைத்து வந்தது. பதினொன்றாவது நூற்றாண்டின் முற்பகுதியில், வங்காளத்தின் ஒரு பகுதியை சேனர்கள் என்ற புதிய குலத்தினர் கைப்பற்றிக் கொண்டனர். 1158 ஆம் ஆண்டி லிருந்து 1169 ஆம் ஆண்டுவரையிலும், வல்லாளசேனன் அல்லது பல்லாளசேனன் என்ற ஒரு மன்னன் அரசு செலுத்தி வந்தா னென்று வங்காளக் கர்ணபரம்பரைச் செய்திகள் கூறுகின்றன. சாதி முறையைப் புனரமைத்து, 'குலீனச'வழக்கத்தைப் பிராம ணர், பெய்ந்தியர், காயஸ்தர், ஆகியோரிடையில் இவன் புகுத் தியதாகக் கூறப்படுகிறது[1]. சேனர்கள், தக்காணத்திலிருந்து

[1] இம் முறைக்கேற்ப நாம் குறித்துள்ள மூன்று பிரிவினரும் மேலும் சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டனர். இவர்களுள் 'அனுலோம,

குடியேறிய பிராமணராதல் வேண்டும். 1023ஆம் ஆண்டில், சோழர்கள் படையெடுத்ததின் விளைவாகவே இவர்கள் சிறப் பெய்தியிருக்கவேண்டும். அவர்தம் காலவரன் முறைகளைப் பற்றிய குறிப்புகளும், பிற வரலாற்றுச் செய்திகளும் தெளி வின்றிக் காணப்படுகின்றன.

**சாந்தலரின் குலம்**

ஜிஜஹோத்தி அல்லது பண்டுல் கண்டைச் சார்ந்த சாந்தலரின் குலமும், தோராயமாக மூன்று நூற்றாண்டுகளுக்கு வட இந்திய அரசியல் வானில் அதிகச் செல்வாக்குப் பெற்று விளங்கியது. ஆந்திரர் அல்லது பாலர்களைப் போன்று இக் குல மன்னர்கள் அதிகச் செல்வாக்குப் பெற்று விளங்கவில்லை என்றாலும், இவர் களும் வரலாற்று நோக்கில் குறிப்பிடத்தக்கவராகவே காணப் படுகின்றனர். சாந்தல மன்னர்கள் ஆதியில், கோண்ட் மரபைச் சார்ந்த குறுநில மன்னர்களாக இருந்தனர். அண்மைக்காலம் வரையிலும், மத்தியப் பிரதேசத்திலுள்ள 'சத்ரபூரி' என்ற பெயரில் வழங்கிய மாகாணப்பகுதியிலேயே இவர்கள் வாழ்ந் திருக்கவேண்டுமென நம்பப்படுகிறது. அன்னிய குலத்தைச் சார்ந்த அண்டையிலுள்ள பிரதிஹார (பரிஹார்)த்தலைவர்களை, ஒன்பதாவது நூற்றாண்டில் இவர்கள் முறியடித்தனர். இவ்வன்னி யர் கனௌஜ் குலத்தைச் சார்ந்தவர்களாக இருந்திருக்கக்கூடும். வடக்கு நோக்கி, தற்போது பண்டுல்கண்ட் என்ற பெயரில் வழங்கிவரும் பகுதிவரைச்சிறுகச் சிறுகத்தங்கள் செல்வாக்கைப் பெருக்கி, யமுனை ஆறு வரையிலும் இவ்வன்னிய மரபினர் பரவி யிருக்கவேண்டும். சத்தர்பூரிலுள்ள காஜுராஹோ, ஹமீர்பூர் மாவட்டத்திலுள்ள மஹோபா, உத்திரப் பிரதேச பந்தா மாவட் டத்திலுள்ள கலஞ்சர் ஆகிய பகுதிகளே சந்தலர் ஆட்சியில், 'ஜெஜகா-புக்தி' அல்லது 'ஜிஹோத்தி' என்ற பெயரில் சிறந்த பட்டணங்களாக விளங்கின. வலிமை மிக்க கலஞ்சர் கோட்டை இவர்களது வசமிருந்தது. அதனால் இவர்களது படை வலிமை மிகவும் பெருகியிருந்தது.

கனௌஜின் போஜ அரசர்களிடம் சிற்றரசாகளாக விளங்கிய சாந்தல மன்னர்கள், பத்தாவது நூற்றாண்டிற்குப்பின் முற்றிலும் விடுதலையடைந்தனர் எனத்தெரிய வருகிறது. அந் நூற்றாண்டின்

---

மணமுறை (உயர் குலத்தைச் சார்ந்தவனொருவன், கீழ்வகுப்பைச் சார்ந்த ஒருத்தியை மணப்பது) அனுமதிக்கப்பட்டது. இதனால், உயர் வகுப்பில் மணமாகாத பெண்டிர் தொகை அதிகமாயிற்று. உயர் குலத்தைச் சார்ந்தவர்கள் பல பெண்டிரை மணந்து அவர்களைக் காப்பாற்றாது விடு கின்ற பழக்கமும் அதிகரித்தது.

பிற்பகுதியில் அரசு செலுத்தி வந்த தாங்கன் என்பவன், இக்குல மன்னர்களில் மிகவும் சிறப்பெய்தி விளங்கினன். அமீர் சபுக்டிஜின் என்ற இஸ்லாமியன் முதன் முறையாகப் படையெடுத்து வந்தபோது, அவனுக்கெதிராக அமைந்த இந்துக்களின் கூட்டணியில் இவனும் அங்கத்தினனாக இருந்தான். ஆப்கானிய எல்லையில் நேசநாடுகள் முறியடிக்கப்பட்டதால், இவனுக்கும் பெரு நஷ்டம் விளைந்தது. பிற்காலத்தில் அரசு செலுத்திய சாந்தன் என்ற மன்னன் சுல்தான் முகம்மதுவை எதிர்ப்பதில் பங்கு பெற்றான். அதைப்பற்றி மேலும் விரிவாக இன்னும் சற்று நேரத்தில் கூறுவோம். பதினொன்றாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் அக்குலத்தின் பெருமையைக் கீர்த்திவர்மன் என்னும் மன்னன் மீண்டும் நிலைபெறச் செய்தான். மண்ணுசை பிடித்த சேடி தேசத்தின் மன்னன் கர்ணதேவனை அவன் முறியடித்தான். மகாகோசலம் என்றும் பெயர் படைத்திருந்த 'சேடி' அரசு, தற்கால மத்தியப் பிரதேசப் பகுதியில் (பண்டைய மத்திய மாகாணம்) அமைந்திருந்ததெனலாம். கீர்த்திவர்மன் தனது இராச்சிய எல்லைகளை மேலும் விரிவாக்கினன். 'பிரபோத-சந்திரோதயம்' அல்லது 'மதி என்ற மதியின் உதயம்' என்னும் சிறந்த நாடக இலக்கியம் உருப்பெறுதவதற்கு அவன் பேராதரவு அளித்தான் எனக் கூறப்படுகிறது. வேதாந்த சிந்தாந்தத்தை மறைமுகமாக இந்நாடகம் உணர்த்துகிற தென்றும், கி. பி. 1065 ஆம் ஆண்டில் கீர்த்திவர்மனின் அவையில் இது நடித்துக் காட்டப்பெற்றதென்றும் கூறப்படுகிறது. 'மஹோபா'க் குன்றுகளுக்கிடையில் அமைந்திருக்கின்ற கிராட்சாகரம் என்னும் ஏரியையும் அம்மன்னர் கட்டி முடித்ததாக இன்றும் அவன் நினைவு நிலைத்திருக்கின்றது.

குறிப்பிடத்தக்க செல்வாக்குப் பெற்று விளங்கிய சாந்தல மன்னர்களில், பரமார்தி அல்லது பார்மல் என்பவனை இறுதியானவனாகக் குறிப்பிடலாம். 1182ஆம் ஆண்டில் செளஹன் குலத்தைச் சார்ந்த பிருதிவிராஜ் என்பவனால் அவன் முறியடிக்கப் பெற்றான். 1203 ஆம் ஆண்டில் குட்-புடீன் ஐபக் மீண்டும் அவனை வென்றான். அதற்குப்பின், சாந்தல மன்னர்களைப்பற்றிய செய்திகளை நாம் கேள்வியுறுவதில்லை. ஆனால், பண்டுல்கண்டைச் சார்ந்த காடுகளில் அவர்கள் குறுநில மன்னர்களாகச் சில காலம் ஆண்டு வந்தனர். 1564 ஆம் ஆண்டில், அக்பரின் தளபதி அசப்கான், முகாந்திரமெதுவுமின்றி படையெடுத்து வந்தபோது, கோண்ட்வானாவின், புனித பேரரசியான துர்காவதி அவனைத் தீரமுடன் எதிர்த்து நின்றாள். அவள் சாந்தல குலத்தைச் சார்ந்த பெருமகளாவாள். அவள், கோண்ட் பகுதி குறுநில மன்னனொரு

வனை மணந்திருந்தாள். சமவெளிகளில் மன்னனுக்குரிய மரியாதைகள் யாவும் பெற்று விளங்கிய இரஜபுத்திரருக்கும், காட்டு வெளிகளில் அரசு செலுத்தி வந்த குறுநில மன்னர்களுக்கு மிடையில் மீண்டும் திருமணத்தின் மூலமாகத் தொடர் பேற்பட்டது. பீஹாரைச் சார்ந்த மாங்கீர் (முங்கிர்) மாவட்ட கிதேளர் மன்னர்கள், இக்குலத்தின் பெருமையை விளங்கச்செய்து வந்தனர். அவரது முன்னோர்கள் பதின் மூன்றும் நூற்றாண்டில் பண்டுல் கண்டியிலிருந்து குடிபெயர்ந்து வந்தவராவர்.

**சாந்தலர் கட்டடக்கலை**

குன்றுகள் சூழ்ந்த பண்டுல்கண்டின் அடர்த்தியான கானகங்களின் குறுக்காக அணைகள் கட்டி, அங்குள்ள பள்ளத்தாக்குகளில், சாந்தலர் நீரைத் தேக்கி வந்தனர். அத்தகைய தொருபரந்த ஏரியை முன்னர்க்குறித்தோம் இதைப்போன்ற நீர்த்தேக்கங்கள் பல உண்டு. அவைகளின் கரையோரமாக, நான் இளவயதில் பல விடங்களில் முகாம் செய்த துண்டு. இத்தேக்கங்களின் கரைகள், கருங் கல்லினால் எழுப்பப்பெற்றவை. இவைகளின் உச்சிகளில் சில இடங்களில் அழகான கோவில்களும், சில இடங்களில் குகைகளும் சிகரமாக அமைந்துள்ளன. இத்தகைய, ஆலயத் தொகுதிகளைக் கொண்ட பகுதிகள், இன்றும் காஜுராஹோவிலிருப்பது, இந்தியக் கட்டடக்கலையை ஆராயும் மாணவர்களுக்குப் பொதுவில் நன்கு தெரியும். பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் 'தாங்கா மன்னன்' இவைகளில் மிகச்சிறந்த சிலவற்றைக் கட்டி முடித்தான். பதினொன்று, பன்னிரண்டாம் நூற்றாண்டுகளில் சாந்தலப்பகுதியில் சமணசமயத்திற்கு நல்லாதரவு இருந்து வந்தது. தற்போது, அப்பகுதியில் சமணசமயம் இல்லையென்றே கூறலாகும். பழமை வாய்ந்த சமணக்கோவில்களையும் தெய்திக் குறிப்புகளுடன் கூடிய உருவச் சிலைகளையும், பல கிராமங்களில் இன்றும் காணலாம். பௌத்த சமயத்திற்கு, நாட்டில் பொதுவாக மதிப்பிருந்ததாகத் தெரியவில்லை ஒரு சில பௌத்த சிலைகள் ஆங்காங்கே கண்டெடுக்கப் பட்டுள்ளன.

**தார் நாட்டுப்போஜன்**

அபு மலையிலுள்ள அக்கினி குண்டத்திலிருந்து வெளிப்பட்ட அன்னிய மரபினருள் ஒருவராகக்கருதப்படும், பராமரர் அல்லது பாவார்கள் என்னும் க்ஷத்திரியர் மாளவத்தில் வேரூன்றிக்கொண்டனர். அக்காலங்களில் நிகழ்ந்த போர்களில் பங்கு கொண்ட அவர்கள் மிகுந்த புகழெய்தினர். அக்குல மன்னருள் போஜராஜன் என்டவன் மிகவும் புகழுடன் விளங்கினான். 1018 லிருந்து

1060 ஆம் ஆண்டு வரையிலும் காற்பதாண்டுகளுக்கு மேலாக அவன் அரசு செலுத்தினன்.[1] கல்வி கேள்விகளில் சிறந்திருந்த அவன் வடமொழி வளர்ச்சிக்கு நல்லாதரவு அளித்து வந்தான். இதனுல், இந்து சமய மன்னருக்கு இலக்கணமாக அவனது பெயர் வழங்கி வருகிறது. கி. பி. 1060 அல்லது அதற்குச் சமீப மாகக் குஜராத், சேடி ஆகிய நாட்டுப்படைகளின் கூட்டணி, போஜ மன்னனை முறியடித்தன. இதனுல் மாளவ அரசனின் அரசியல் ஆதிக்கமும் மிகவும் குறைந்து விட்டது. அண்மைக் காலம் வரையிலும் சிறு இராச்சியமொன்றின் தலை நகரமாக விளங்கிய தார் அல்லது தாரா, போஜனின் தலைநகரமாக விளங் கியது. அந்நகரத்தில், அழகு மிக்க பல கட்டடங்களை அவன் எழுப்பினன். பன்னுட்களாக, அப்பகுதியை இஸ்லாமியர் ஆக்ர மித்திருந்த போதிலும், அழகு மிக்க கட்டடங்கள் இருந்தன வென்பதற்கறிகுறியான சான்றுகள் இருக்கின்றன. பெட்வா ஆற்றையும், மற்றுமொரு கிளை நதியையும் குறுக்காக அணையிட் டுத் தடுத்து நிறுவப்பெற்றுள்ள மாபெரும் போஜ்பூர் ஏரி, 250 சதுர மைல்கள் விஸ்தீரண முள்ளது. அதைப் போஜராஜன் நிறுவினன் என்று கூறப்படுகிறது. பதினைந்தாம் நூற்றுண்டின் முற்பகுதியில் இவ்வணையை மாளவ சுல்தான் ஹோஷங் ஷா புனரமைத்ததின் விளைவாக, ஏராளமான விளை நிலம் பயிரிடு வதற்கேற்றதாயிற்று. ஏரிகரையின் காய்ந்த நிலப் பகுதியோர மாகத் தற்போது இருப்புப்பாதை அமைக்கப் பெற்றுள்ளது.

### சௌராஷ்டிரம்

பத்தாம் நூற்றுண்டில், மூலராஜா என்பவர் சௌராஷ்டிரத் தில் நிறுவிய சோலங்கி அல்லது சாளுக்கிய குலத்தைப்பற்றி ஒரு சிறிது கூறி நிறுத்துவது நலமென்றெண்ணுகிறேன். மூல ராஜனைப் பற்றிய வரலாற்றுச் சார்புள்ள கட்டுக்கதைகள் அம் மாகாணத்தில் ஏராளமாக நிலவி வருகின்றன. கர்ணபரம்பரைச் செய்திகளுக்கேற்ப மூல ராஜன் கனேஜ் நாட்டு அரசனெருவனின் மகனுவான். இவ்வாறு குறிக்கப்படும் மன்னன் ஒரு கால் மஹி பாலனுக இருக்கவேண்டும். தன் மகனை, மஹிபாலன் மேற்கி லுள்ள பகுதிகளுக்கு வைசிராயாக அமர்த்தியிருக்க வேண்டும்.

1 கனேஜில் ஆண்டுவந்த மிஹிர பிரதிஹாரன் அல்லது போஜன் என்பவனுடன் இவனை இணைத்துக் குழப்ப மடைய வேண்டியதில்லை. கி. பி. 840 லிருந்து 890 வரையிலும் அவன் அரசு செலுத்தினன். இந்திய கர்ணபரம்பரை மரபு அவனை மறந்து விட்டதெனலாம் மஹிபாலன், மஹேந்திரபாலன் போன்ற பெயர்களும், மற்றும் இதுபோன்ற பல பெயர்களும், தெளிவான குலவரலாற்றுப் பட்டியல்களில் காணப்படு கின்றன. இப்பெயர் தாங்கியுள்ளவரை ஒருவரோடொருவரைக் குழப்பிக் கொள்வதற்கான வாய்ப்பு அதிகமுண்டு.

சூழ்நிலையைப் பயன் படுத்திக் கிளர்ச்சி செய்து மூல ராஜன் தன்னரசு பெற்றிருக்கக்கூடும். அவனுக்குப் பின் அரசெய்திய வர்களில், குமாரபாலன் (1143-72) முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். சமண சமயப்புலவன் ஹேமசந்திரனே அவன் மிகவும் ஆதரித்து வந்தான். அவனும் மிக்க ஆர்வமுடன் சமணசமயத் தைத் தழுவினன்.

நாம் இப்போது மீண்டும் வடதிசை நோக்கிச்சென்று கனேஜ் மற்றும் வட இந்திய 'இராச்சியங்களின் வரலாறுகளைத் தொடருவோம்.

### கனேஜ் நாட்டு மஹிபாலன்

மஹிபாலனின் ஆட்சி காலத்தில், பிரதிஹார சாம்ராச்சியம் சரியத்தொடங்கியது (கி. பி. 910-40). மஹிபாலன் போஜ மன் னரின் பெயரனவான். கி. பி. 916-ல், தக்காணத்தைச் சார்ந்த ராஷ்டிர கூட மன்னன், மூன்றும் இந்திரன் கனேஜைக்கைப்பற் றியது மஹிபாலனுக்குப் பேரிடியாயிற்று. மேற்குப்பகுதியிலுள்ள மாகாணங்களை அவன் கைவிடவேண்டியதாயிற்று. மஹிபாலன் தனது தலைநகரைத் திரும்பப்பெறுவதற்குச் சாந்தல மன்னன் உதவி அளித்தான். சின்னுட்களுக்குப்பின் குவாலியர் சுயேச்சை அடைந்தது. எனினும், கனேஜ் நாடு ஒரு பிரதான இராச்சிய மாகவே விளங்கிவந்தது.

### 'பதிந்தா' மன்னன் ஜயபாலன்

பிரதிஹாரரின் செல்வாக்கு, சட்லஜ் ஆற்றைத் தாண்டிச் சென்றதில்லை. ஏழாவது நூற்றுண்டிற்குப், பத்தாவது நூற்றுண் டிற்கும் இடைப்பட்ட காலத்திலுள்ள பஞ்சாபின் வரலாறு மிகவும் தெளிவுகுன்றியே காணப்படுகிறது. ஒரு சமயத்தில் அங்கு வலிமை மிக்க சாம்ராச்சியம் அமைந்த தென்றாலும், திட்ட மாக அக்காலத்தை அறிய முடிவதில்லை. இவ்வாறு அமைக்கப் பெற்ற இராச்சியம் சிந்துவிற்கு அப்பாலுள்ள மலைத்தொடர்களி லிருந்து கிழக்கு முகமாக 'ஹக்ரா' அல்லது 'நழுவிய ஆறு' வரை யிலும் பரவியிருந்தது. பஞ்சாபின் பெரும் பகுதியும் சிந்து மாகாணத்தின் வட பகுதியும் இதிலடங்கியிருந்தன. பதிந்தா (பாடிண்டா) இதன் தலைநகரமாக விளங்கியது. தற்போது பாடி யாலா மாகாணத்தில் உள்ளடங்கியுள்ள இதைத் தாபர் ஹிந்த் என இஸ்லாமிய வரலாற்றுசிரியர்கள் கூறுவர். முல்டானையும் இந்திய நாட்டையும், டெல்லி வழியாகப் பிணைக்கும் பெருவழி யில் முக்கியம் வாய்ந்த ஓர் இராணுவ கேந்திரமாக இது விளங்கி

வருகிறது. அக்காலத்தில், டெல்லி நகரம் உருப்பெற்று இருந்த தென்று நாம் ஒப்புக்கொண்டாலும், அது மிகச் சிறிய தொன்ருகவே இருந்திருக்கவேண்டும். பத்தாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் பதிந்தா மன்னன் 'ஜயபாலன்,' ஜாத் அல்லது ஜத் குலத்தைச் சார்ந்தவனுக இருந்திருக்கவேண்டும்.

### இந்து இராச்சியங்களின் சுதந்திரம்

தோராயமாகப் பத்தாவது நூற்ருண்டின் இறுதிவரையிலும் இந்திய மன்னர்கள் தங்களிச்சைப்படி அரசு செலுத்துகின்ற வாய்ப்பைப்பெற்றிருந்தனர். அவர்களை அடக்கியாளும் திறமை படைத்த பேரரசு ஒன்று நிலைபெற்றிருக்கவில்லை. அன்னியரின் படையெடுப்புகளைப்பற்றியும் அவர்கள் அஞ்சியதில்லை. மண்ணைசை கொண்ட, அன்னிய சமயத்தினரான இஸ்லாமியர் படையெடுத்து வந்தமையால் இந்திய மன்னர்கள் மிகுந்த கஷ்டத்திற்கு உள்ளானுர்கள். இவ்விந்தியரின் நடையுடை பாவனைகளும், கருத்துகளும், போர் முறைகளும் முற்றிலும் மாறுபட்டிருந்தன. இந்தியாவின், உள்நாட்டு அரசியலிலும் நூதனமான மாறுதல் புகுந்து கொண்டது. இந்நாட்டின் உள்நாட்டு அரசியலில் இத்தகைய குழப்பம் எட்டாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் அராபியர் சிந்துவின் மீது படையெடுத்து வந்த காலத்திலும், பிற்காலங்களில் காபூலை இஸ்லாமியர் ஆக்கிரமித்துக்கொண்ட போதும், ஏற்பட்டதில்லை.

### அமீர் சபுக்டிஜின்

கஜினி நாட்டு அமீரும், பேராசை கொண்டவனுமான சபுக்டிஜின் என்னும் இஸ்லாமியத் தலைவனெருவன், இத்தகைய திடீர் மாறுதலைஏற்படுத்தினன். கி.பி.986-7ல் (ஹிஜிரா சகாப்தம் 376) இந்தியநாட்டில் முதன்முறையாகப் படையெடுத்து வந்தான். பதிந்தாவின் அரசன் ஜயபாலுடன் அவன் போரிட வேண்டியதாயிற்று. இரண்டு ஆண்டுகளுக்குப்பின் இந்து அரசன், அமீரின் இராச்சியத்தின்மீது மறுதாக்குதல் நடத்தினன். இப்போரில் ஜயபாலன் தோல்வியுற்றதால், அமீருடன் உடன்படிக்கை யொன்று செய்து கொண்டான். அவ்வுடன்படிக்கைக்கிணங்க, அமீருக்கு, நஷ்ட ஈடாக ஏராளமான பொன்னையும், யானைகளையும், வழங்கியதுடன் சிந்து நதியின் மேற்றிசையிலுள்ள, நான்கு கோட்டைகளையும் விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று. ஜயபாலன் இவ்வுடன்படிக்கைக்கிணங்க நடக்கத் தவறினன். எனவே, அமீர் பெரும்படையுடன், இந்திய அரசின் எல்லைப்புறங்களைச் சூறையாடி அழித்தான். லாக்மான் அல்லது ஜலாலா

பாத் மாவட்டத்தை ஜயபாலன் இழக்க வேண்டியதாயிற்று. கி. பி. 991–அல்லது அதற்குச் சமீபமாகச் சின்னாட்களில், இவ்விஸ்லாமிய ஆக்ரமிப்பை எதிர்த்துப் போராடுவதின் நிமித்தம், இந்து மன்னர்களடங்கிய கூட்டணியொன்றை அமைப்பதற்கு ஜயபாலன் மிகவும் முயன்றான். இக்கூட்டணியில் பிறருடன் கனோஜின் பிரதிஹார மன்னன் இராச்சிய பாலனும், யமுனைக்குத் தெற்கில் தொலைவிலுள்ள சாந்தலமன்னன் தாங்கனும் இடம் பெற்றிருந்தனர். குர்ரம் பள்ளத்தாக்கில் (குர்மா) அல்லது அதற்குச் சமீபமான ஓரிடத்தில், சுதேச மன்னர்களின் கூட்டணி முறியடிக்கப்பட்டது. பெஷாவர் இஸ்லாமியர் வசமாயிற்று.

**சுல்தான் மகமது**

கி. பி. 997ஆம் ஆண்டில், சிறிதுகால இடைவெளிக்குப்பின்; சபுக்டிஜினின் மகன் மகமது கஜனியின் மன்னனாக முடிசூட்டப் பெற்றான். சுல்தான் என்ற பட்டத்தை இவன் சூட்டிக்கொண்டான். இந்திய நாட்டை அரசாண்டுவந்த இஸ்லாமிய மன்னர்கள் பல நூற்றாண்டுகளாக, இப்பிருதைச் சூட்டிக்கொண்டிருந்தனர். இஸ்லாமிய சமயத்தில், மிகவும் பற்றுதல் கொண்ட, அக்காலக் கொடுங்கோலர் வகையை, மகமது சார்ந்திருந்தான். சிலைகளை வழிபடுவோரைக் கொல்வதைத் தனது கடமையாக எண்ணி மிக்க மகிழ்ச்சியுடன் அதைக் கடைப்பிடித்தும் வந்தான். பொருள் தேடியடைவதில் மிக்க பேராசை கொண்ட அவன் தனது புனித படையெடுப்பு ஒவ்வொன்றின் மூலமும் ஏராளமாகப் பொருளீட்டி வந்தான். அவனது படையெடுப்புகளின் மொத்த எண்ணிக்கையைப்பற்றியும், அவை நிகழ்ந்த நாட்களைப் பற்றியும் வரலாற்று அறிஞர்களிடையே, தெளிவான கருத்துகள் நிலவுவதில்லை. பதினேழு தடவைகள் அவன் படையெடுத்து வந்ததாக, சர். ஹென்றி எலியட் என்பவர் கணக்கிட்டுச் சொல்லுவார். அக்கருத்தையே நாம் ஏற்கலாம். சமயம் வாய்த்தபோது, ஆண்டுக்கொருமுறை அவன் படையெடுத்து வந்தான், அவன் கடைப்பிடித்த முறைகளைப்பற்றி இந்து சமயப் புலவர்கள் அதிகமாகக் கூறுவதில்லை. இஸ்லாமிய வரலாற்றாசிரியர்களின் குறிப்புகளிலிருந்தே இச்செய்திகளைப் பெரும்பாலும் அறிகிறோம். அவர்களிடையே ஏராளமான கருத்து வேற்றுமைகள் காணப்படுகின்றன.

பொதுவில், அக்டோபர் மாதத் தொடக்கத்தில் தலைநகரை விடுத்து குளிர்கால முழுவதிலும் இத்தகைய வேலைகளை மேற்கொள்ளுவது சுல்தானின் வழக்கம். வளமிக்க கங்கைப் பகுதி

களை அடைவதற்கு அவனுக்குச் சாதாரணமாக மூன்று மாத காலம் பிடித்தது. அவ்வாறு, கங்கைப் பகுதிகளை அடைவதற்கு முன் ஏராளமான மக்களைக்கொன்று குவித்து, அளவிடற்கரிய செல்வத்தையும் அவன் பெற்றுவிடுவது வழக்கம். கோடைக் காலம் தொடங்கும்போது, தான் பெற்ற செல்வத்துடன் வீடு திரும்பி, தனது வெற்றிகளின் பலனை அனுபவிப்பதற்கு அவன் தயாராகி விடுவது வழக்கம். கூட்டங் கூட்டமாக கைதாகிய அடிமைகளை அவன் தன்னுடன் அழைத்துச் செல்வதுண்டு. இவ்வடிமைக் கூட்டத்தில் கைதேர்ந்த சட்டட வேலைக்காரரும், பிற தொழிலாளர்களும் அடங்கியிருந்தனர். இவர்களைத் தன் தலைநகரத்தை அழகுறச் செய்யும் பணியில் அவன் ஈடுபடுத்துவ துண்டு. இவனைப்பின்பற்றி, அவனது வழித் தோன்றல்களும், நகர நிர்மாண வேலையில் அடிமைகளைப் பயன்படுத்தி வந்தனர். அவனது படையெடுப்புகளைப்பற்றிய விவரங்கள் யாவையும் விரிவாக எடுத்துரைப்பது பொறுமையைச் சோதிப்பதாக அமையும். முக்கியமான சில படையெடுப்புகளைப்பற்றி விவரிக் கும்போது; அப்போர்களின் தன்மை நன்கு புலனாகும்.

### ஆதியில் நடைபெற்ற போர்கள்

1001ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில், முடிசூட்டிக் கொண்ட சின்னுட்களுக்செல்லாம் அவன் இரண்டாம் முறையாக இந் நாட்டின்மீது படையெடுத்து வந்தான். பெஷாவருக்கருகில் ஜயபாலன் என்ற மன்னனை முறியடித்து குடும்பத்தினருடன் அவனைக் கைதியாகப் பிடித்தான். ஒப்பந்தமொன்று செய்து கொண்டதின் பேரில் கைதாகிய மன்னனுக்கு விடுதலையளிக்கப் பட்டது. தனக்கு நேர்ந்த அவமானத்தைப் பொறுத்துக் கொள்ள இயலாமையால், ஜயபாலன் நெருப்பில் குதித்து; தற்கொலை செய்து கொண்டான். அவனைத் தொடர்ந்து அரசு செய்திய அவனது மகன் அனந்தபாலன் அன்னியருடன் தொடர்ந்து போரிட்டு வந்தான். ஆனால் அவனுக்கு அதிக வெற்றி கிடைக்கவில்லை. தகப்பனின் அடிச்சுவட்டைப் பின் பற்றி, உஜ்ஜயினி, குவாலியர், கனோஜ், டெல்லி, ஆஜ்மீர், ஆகிய இராச்சியங்களின் மன்னர்களடங்கிய கூட்டணியொன்றை அவனமைத்தான். இக்கூட்டணியின் பெரும்படை ஆஜ்மீரைச் சார்ந்த சௌஹான் மன்னன் விசாலதேவனின் தலைமையில் எழுந்தது. சபுக்டிஜினை எதிர்த்த படையைக் காட்டிலும் இது மிகவும் பெரியது. நாற்பது நாட்களாக, எதிர்ப்படையினர் பெஷாவரின் பரந்தவெளியில் ஒருவரையொருவர் வேவுபார்த்து வந்தனர். அப்போது, பஞ்சாபிலுள்ள கோகர் மரபினர் இந்துப்

படைகளுக்குத் தேவையான தளவாடங்களை அனுப்பிவந்தனர். தன்னைச் சுற்றிலும், பாதுகாப்பான அரணமைத்துக்கொண்டு, சுல்தான் பதுங்கி வாழவேண்டியதாயிற்று. புதிய போர் வீரர்கள் வந்து சேரவும் இந்துக்கள் தாக்குதல்களைத் தொடங்கினர். சில விநாடிகளில் 3000 அல்லது 4000 இஸ்லாமியர் கொல்லப்பட்டனர். இந்துக்களுக்கு வெற்றி கிடைக்கும் வாய்ப்பு அருகிலேயே இருந்தது. ஆனல், அப்போது நிகழ்ந்த ஒரு துரதிர்ஷ்ட வசமான சம்பவத்தால் இவ்வரிய தருணம் கை நழுவியது. இத்தகைய நிகழ்ச்சிகள் பல தடவைகளாகப் போர்க்களங்களில் வெற்றி தோல்வியைத் தீர்மானித்துள்ளன. அனந்தபாலன் அல்லது அவனது மகன் பிரமபாலனைத் தாங்கிவந்த யானை, திரும்பி ஓடலாயிற்று, யானைமீது சவாரி செய்தவரைப் பற்றிக் கருத்து வேற்றுமைகள் உள்ளன. இதைக்கண்ட இந்திய வீரர் குழப்பமுற்று ஓடலாயினர். இரண்டு இரவு-பகல்களாக இஸ்லாமியரின் குதிரைப்படைகள் அவர்களைத் துரத்தியதோடு, 8000க்கும் அதிகமானவர்களைக் கொன்று, ஏராளமான பொருளையும் கொள்ளை கொண்டன. இந்துபடைக் கூட்டணியின் ஒவ்வொரு பகுதியும், தனியொரு தலைவனின் கீழ் இயங்கி வந்தது. இதனல் அவர்களிடையே ஒருமுகமான முயற்சியேற்படுவதற்கு வகையில்லாதொழிந்தது. அன்னிய குதிரைப் படையினர், ஒரே தலைவனின் ஆணைக்குட்பட்டு மிகவும் தீவிரமாகப் போரிட்டனர். இத்தாக்குதலை இந்துக்களால் எதிர்த்து நிற்க முடியவில்லை.

**காங்க்ரா**

இவ்வாறு ஐயமின்றிக் கிடைத்த வெற்றி சுல்தானுக்கு மிகவும் ஊக்கமளித்தது. வலிமை மிக்க காங்க்ரா அல்லது பீம் நகர்க்கோட்டையைத் தாக்குவதற்கு அவன் முற்பட்டான். பல தலைமுறைகளாக இந்துக்கள் மிகவும் பக்தியுடனும் (கி. பி 1009) ஆர்வமுடனும் வழிபட்டுவந்த கோவிலொன்று அங்கிருந்தது. அக்கோவிலுக்கு ஏராளமான செல்வமிருந்தது. ஏராளமான தங்க நாணயங்களும் வெள்ளிக் கட்டிகளும் அக்கோவிலிலிருந்து கொள்ளைபோயின. 'பெருஞ்செல்வர்களின் வீடுகளில் உள்ளதைப்போல, சுத்தவெள்ளியிலான வீடு ஒன்றும்' கோவில் கருவூலத்திலிருந்தது. அவ்வீடு முப்பது கஜ நீளமுள்ளதாகவும் பதினைந்து கஜ அகலமுள்ளதாகவுமிருந்தது. அதைச் சிறு பகுதிகளாகப் பிரிக்கவும் மீண்டும் ஒன்று சேர்க்கவும் கூடும். இதன்மீது மிகவும் அருமையான கம்பளி இழையால் நெசவு செய்யப்பட்ட துணியால் கூடாரமொன்றும், அமைக்கப்பெற்

திருந்தது: 'அத்துணி, நாற்பது கஜ நீளமுள்ளதாகவும், இருபது கஜ அகலமுள்ளதாகவுமிருந்தது. வார்த்தெடுக்கப்பட்ட இரு தங்கத்தூண்களும் இருவெள்ளித் தூண்களும், கூடாரத் துணியைத் தாங்கி நின்றன. சுல்தான் கொள்ளையடித்த பொரு ளுடன் கஜினிக்குத் திரும்பினன். அன்னிய நாடுகளிலிருந்து, தன்னைக் காணவந்த தூதுவர்களிடம் தான் பெற்ற ஆபரணங் களையும், பிற இரத்தினங்களையும் பெருமையோடு காட்டி வந்தான். 'இயற்கையழகோடு மிளிர்ந்த இம்முத்துகளும் பவழங்களும் நெருப்புக்கட்டிகள் போலவும், பனிக்கட்டியின்மீது உறைந்த மதுவைப்போலவும் பிரகாசித்தன. வைடூரியங்கள் அன்று மலர்ந்த பசுமையான செடிகள் போலவும், வைரங்கள் அளவிலும் எடையிலும் கொய்யாப் பழங்களைப் போலவுமிருந் தன'. இக்கோட்டையை இஸ்லாமியப்படைகள் முப்பத்தைந்து ஆண்டுகளாக ஆக்கிரமித்து வந்தனர். அதற்குப்பின், இந்துக்கள் அதை மீண்டும் பெற்றனர். 1620-ஆம் ஆண்டு வரையிலும் அது இஸ்லாமியரின் ஆதிக்கத்திற்கு உட்படவில்லை. அவ்வாண்டில் ஜஹாங்கிரின் அலுவலன் ஒருவன் அக்கோட்டையைக் கைப் பற்றினன். அதிலுள்ள கட்டடங்கள், 1905 ஆம் ஆண்டில் நிகழ்ந்த பூமி அதிர்ச்சியினல் மிகவும் சேதமடைந்தன.

**மதுராவும் கனோஜும்**

பன்னிரண்டாம் படையெடுப்பாகக் கருதப்படும் முயற்சியின் போது; வடஇந்தியாவின் பிராதன நகரமான கனோஜ் தாக்கப் பட்டது. அக்காலத்தில், அந்நகரை ராஜ்யபால பிரதிஹாரன் ஆண்டு வந்தான். எதிர்ப்புகள் யாவையும் ஒதுக்கித்தள்ளிய பிறகு சுல்தான், 1048 ஆம் ஆண்டு டிசம்பர் 2 ஆம் தேதியன்று யமுனையைக் கடந்தான். பாரன் அல்லது புலாண்ட் ஷர் என்னு மிடத்தைத் தாக்குவதற்கான ஏற்பாடுகளை அவன் கவனித்து வந்தான். ஹரதத்தன் என்னும் அரசன், 10,000 ஆட்கள் புடை சூழ, சுல்தானின் . அடிபணிந்து வணங்கினன். அதனுடன் இஸ்லாமிய சமயத்தைத் தழுவுவதற்கும் உடன்பட்டான்.

கிருஷ்ணபகவானுடன் உறவுகொண்ட புனித நகரமான மதுரா அடுத்து இஸ்லாமியரின் படையெடுப்பிற்கு இலக்கா யிற்று, 'நகரத்தின் மத்தியில் கோவிலொன்று இருந்தது. பிற ஆலயங்களைக் காட்டிலும் விசாலமாகவும், அழகாகவுமிருந்த இக் கோவிலைச் சித்திரிப்பதோ அல்லது பாராட்டுவதோ இயலாது'. அக்கோவிலைக் கட்டி முடிப்பதற்கு, இருநூறு ஆண்டுகளாவது பிடித்திருக்கவேண்டுமென சுல்தான் கருதினன். அங்கு அமைந்

திருந்த உருவச் சிலைகளில் ஐந்து செம்பொன்னாலானவை; ஒவ்வொன்றும் ஐந்தடி உயரமுள்ளவை. அவற்றின் கண்கள் விலை மதிப்பற்ற இரத்தினங்களாலானவை. 'அரக்குப் பொதிகளை நிரப்பி, தீ மூட்டிக் கோவில்களைத் தரை மட்டமாக்க வேண்டுமென சுல்தான் ஆணையிட்டான்'. இவ்வாறு புராதன இந்தியாவின் நிகரற்ற நினைவுச் சின்னங்கள் பல நாசமடைந்தன.

தனது தலைநகரத்தைச் சீரிய முறையில் தற்காத்துக் கொள்வதைப்பற்றி, ராஜயபாலன் ஒரு சிறிதும் சிந்திக்கவில்லை. கங்கை நதியைத் தாண்டி அவன் ஓட்டமெடுத்தான். கனோஜைப் பாதுகாத்து வந்த ஏழுகோட்டைகளும் ஒரேநாளில் கைப்பற்றப் பட்டன. 1019 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சுல்தானின் படைகள் கட்டுப்பாடின்று நாட்டைச் சூறையாடவும், மக்களைக் கைதியாகப் பிடிக்கவும் தலைப்பட்டன. நகரத்தில் 10,000 கோவில்களிருந்தன வென்று கூறப்படுகிறது. ஆனால், அவைகள் யாவும் அழிக்கப் பெற்றனவென்று, உறுதியாக எங்கும் கூறப்படவில்லை. பாத்தேபூர் மாவட்டம் வரையிலும், ஜிஜஹோத்தி (பண்டுல் கண்ட்)யின் எல்லை வரையிலும், தன் பிரயாணங்களை மேலும் தொடர்ந்து, கொள்ளைப் பொருள்களுடனும்; ஏராளமான கைதிகளுடனும் சுல்தான் கஜினிக்குத் திரும்பினான்.

### கந்தசாந்தலனின் சரிவு

கனோஜ் மன்னன், கோழைத்தனமாக நாட்டை விடுத்து ஓடிய செய்தி, பிற இந்து அரசர்களுக்கு மிகுந்த சினமூட்டியது. சாந்தல மன்னனொருவன் தலைமையில் அவர்கள் வெகுண்டெழுந்து ஒன்று சேர்ந்து முதலாவதாக இராச்சியபாலனைக் கொன்றனர். அவனுக்குப் பதிலாக திரிலோசன பாலன் என்பவன் அரியணையிலமர்த்தப்பட்டான்.

கொலையுண்ட இராச்சிய பாலனை, முகமது தனது அடிமையாகக்கருதினான்; எனவே, தனது வலிமையைச் சோதிக்கத் துணிந்த இந்து மன்னர்களைத் தண்டிக்க விரும்பினான்; கி.பி. 1019 ஆம் ஆண்டில், இந்திய நாட்டின் மீது மீண்டுமொரு முறை படையெடுத்து வந்தான்; யமுனை ஆற்றைக் கடந்து, கந்த சாந்தலனின் அரசெல்லைக்குள் புகுந்தான். உண்மையில் இம் மாபெரும், படையைக்கண்டு சுல்தான் அஞ்சினான். ஆனால், கோழைமனம் படைத்த கந்த சாந்தலன் இரவோடிரவாக ஓடி ஒளிந்து கொண்டான். கஜினிக்கு 580 யானைகளையும், மற்றும் ஏராளமான பொருள்களையும் கொண்டு செல்லும் வாய்ப்பினை, மகமது சுல்தானுக்கு அளித்தான். 1021-2 ஆம் ஆண்டில் சுல்தான்

முகமது மீண்டும் படையெடுத்து வந்த நேரத்திலும் கந்த சாந்தலன் போரிடுவதற்கு மறுத்து விட்டான்; எதிரிக்கு ஏராளமான பொன்னை யளித்துச் சமாதானம் செய்துகொள்ளவே விரும்பினன்.

**சோம்நாத்**

சுல்தான் முகமது மேற்கொண்ட முயற்சிகளில், பதினாருவது முறையாக அவன் படையெடுத்து வந்த செய்தி குறிப்பிடத்தக்கதாக விளங்குகிறது. சௌராஷ்டிரம் அல்லது கதியவாரின் கடற்கரையிலுள்ள சோமநாத் அல்லது பிரபாச பட்டினம் என்ற பெயர் கொண்ட கோவிலைக் கொள்ளையடிப்பது மகமதுவின் நோக்கமாக இருந்தது. அக்கோவிலில் கணக்கிட வியலாத அளவில் செல்வம் குவிந்திருந்ததாகக் கூறப்பட்டது. சுல்தான் கையாண்ட முறைகளைக்குறித்து ஆசிரியரிடையே பலவகையான கருத்து வேற்றுமைகள் நிலவிவருகின்றன; காலவரன் முறையும் தெளிவாக இல்லை. முகமது ஓராண்டு காலத்திற்கு மேலாக அங்குத்தங்கியிருந்தான் என்பதே இக்குழப்பத்திற்கு ஒருகால் காரணமாக இருக்கக்கூடும்.[1] அவன் கஜினியை விடுத்து டிசம்பர் மாதத்தில் புறப்பட்டான் எனத்தெரிய வருகிறது. கி.பி. 1023ல் (ஹிஜிரா 414) 30,000 குதிரை வீரருடனும், பிறதுணைப் படையினருடனும் அவன் புறப்பட்டான். மூல்டான் வழியாக முன்னேறிய அவன் அஜ்மீரிலிருந்து ராஜஸ்தான் பாலைவனத்தின் வழியாக அன்ஹில்வாரா அல்லது சௌராஷ்டிரத்திலுள்ள பதான் என்னும் ஊரை அடைந்தான். உணவும் தண்ணீரும் ஒரு சிறிதும் காணமுடியாத வெளிகளில் அவன் பிரயாணம் செய்தான். அவனது சப்ளை இலாகா மிகவும் திறன் படைத்ததாக இருந்திருக்க வேண்டும். மேலும், நெடுந்தூரத்தைக் கடப்பதற்குற்கும். பல நாட்கள் பிடித்திருக்கவேண்டும். இதனால் ஹிஜிரா ஆண்டு 414-ன் பதினொன்ருவது மாதம் வரையிலும் அல்லது கி.பி. 1024 வரையிலும் அவன் சோமநாத்தை அடைந்திருக்க வகையில்லை என்று கூறலாம். ஒரு சில ஆசிரியர் நிகழ்ச்சி 1025 ஆம் ஆண்டில் நடைபெற்ற தென்றும் கூறுவர். கடுமையான எதிர்ப்பிற்கு ஈடுகொடுத்துப் படையெடுத்து வந்தவர்கள் அரணுடன் கூடிய ஆலயத்தைக் கைப்பற்றினர். அதனுடன் ஏராளமான செல்வ

1 ஓராண்டு காலம் அங்குத் தங்கியிருந்தான் என்பதை அறிவதற்கு, போர்ப்ஸ் என்பவரின் 'ரசமாலை' வால் 1. பக். 79 யையும் எல்பின்ஸ்டன் நூலையும் பார்க்கவும். 'இந்திய இம்பீரியல் கஜட்' (1908) எஸ். வி. சோமநாத், காலவரன் முறையைத்தெளிவாக 1024-6 என்று எடுத்துரைக்கிறது.

மும் அவர்கள் வசமாயிற்று. 50,000-க்கும் மேற்பட்டவர்கள் உயிரிழந்தனர் என்றும் தெரிய வருகிறது.

அக்கோவிலில் கல்லினாலான சிவலிங்கமொன்று வழிபாட்டிற்கென அமைக்கப்பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் மரத்தினாலான கர்ப்பக்கிருகம் கட்டப்பட்டிருந்தது. கோவிலின் முக்கிய மண்டபத்தில் ஐம்பத்தாறு மரத் தூண்கள் இருந்தன. அவைகளுக்கு, ஈயத்தினாலான கவசம் அணிவிக்கப்பெற்றிருந்தது.

சிந்துவின் வழியாகச் சுல்தான் வீடு திரும்பினான். நாட்டிற்குள் வரும்போது உபயோகித்த சாலைக்குச் சற்று மேற்காக அமைந்திருந்த மற்றொரு சாலையின் வழியாக அவன் திரும்பினான். குடிதண்ணீரின்றி அவனது படையினர் மிகவும் அவதியுற்றனர். 1026 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் கொள்ளைகொண்ட ஏராளமான பொருள்களுடன் அவன் கஜினியைச் சென்றடைந்தான்.

முகமது மேற்கொண்ட முக்கியமான படையெடுப்புகளில் சோமநாத் படையெடுப்புக் குறிப்பிடத்தக்கது. கி.பி. 1027 ஆம் ஆண்டில் இறுதியாக, மூல்டானை அடுத்திருந்த பகுதிகளில் வாழ்ந்த 'ஜாத்' என்னும் சாதியினரின்மீது அவன் போர் தொடுத்தான். எஞ்சிய வாழ்நாட்களை உள்நாட்டுக் கலகங்களை அடக்குவதில் அவன் செலவிட வேண்டியதாயிற்று. கி. பி. 1030-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் தனது அறுபத்திரண்டாம் வயதில் (ஹிஜிரா 421) முகமது இறந்தான்.

**படையெடுப்புகளின் விளைவுகள்**

பஞ்சாப் அல்லது அதில் பெரும்பகுதி கஜினி நாட்டுடன் இணைக்கப்பெற்றது. இவ்விணைப்பு ஒன்றே முகமது கஜினியை ஓர் இந்திய மன்னனைக் கருதுவதற்கு இடமளிக்கிறது. முஸ்லீம் வரலாற்றாசிரியர்கள் அவனை இஸ்லாமின் அருந்தவப்புதல்வர்களில் ஒருவனை எண்ணுகின்றனர்; ஆனால், விருப்பு வெறுப்பின்றி மதிப்பிடும்போது, அவன் சாதனைகளில் வியப்புக்குரியதாக எதுவுமில்லை என்றே குறிப்பிடவேண்டும். 'பேராசை' என்ற குறிக்கோளொன்றே அவனை ஊக்குவித்து வந்தது. தன் தலைநகரை அழகுபடுத்துவதிலும், அதிலுள்ள இஸ்லாமிய நிறுவனங்களுக்குத் தாராளமாக நன்கொடை வழங்குவதிலும் அவன் ஏராளமான பொருளைச் செலவு செய்தான். ஆசியாவின்மீது படையெடுத்து வெற்றிகண்ட பலரைப்போல, அவனுக்கும் பாரசீக இலக்கியத்தில் மிகுந்த பற்றுதலுண்டு. பாவலரையும் நாவலரையும் போற்றி ஆதரிக்கும் பெருவள்ளல் என அவன்

புகழ் பெற்றிருந்தான். பாரசீக மொழியிலுள்ள 'ஷா நாமா' என்னும் பெருங்காவியத்தின் ஆசிரியன் பிர்தௌசி என்பவன்; தன்னை உகந்த முறையில் சுல்தான் ஆதரிக்கவில்லை என்று குறை கண்டான். சுல்தானின்மீது, கடுமையான சிலேடைக் கவியொன்றையும் இயற்றினான். இன்னும் அது நமக்குக் கிடைக்கின்றது. எல்பின்ஸ்டன், மற்றும் பல ஆசிரியர்கள் இயற்றியுள்ள வரலாற்று நூல்களில் இத்தகைய சம்பவங்கள் ஏராளமாகக் காணக் கிடைக்கின்றன. இந்திய நாட்டு வரலாற்றிற்கும் அவைகளுக்கும் அதிகமான தொடர்பு இல்லை. எனவே, அவைகளைக் கற்பதில், நாம் நேரத்தை வீணாக்க வேண்டியதுமில்லை. இந்திய நாட்டைப் பொறுத்த வரையில் முகமது ஒரு பெருங் கொள்ளைக்காரனாகவே காட்சியளிக்கிறான். இந்து ராஜாக்களுக்கு அவனைத் தடுத்து நிறுத்துவதற்கான வலிமையில்லை. எனவே முகமது விளைத்த சேதங்களை ஈடு செய்யும் சக்தியுமில்லாதொழிந்தது.

பஞ்சாப் நீங்கலாக பிற இடங்களில் மகமது தனது அரசையும் ஏற்படுத்தவில்லை. அவனது படையெடுப்புகளால் உள்நாட்டுப் பகுதிகளில் நிலையான விளைவுகள் ஏற்பட்டதாகக் கூறுவதற்கில்லை. உயிர், பொருள் விலைமதிப்பற்ற கலைப்பொருள்கள் ஆகியவை, நஷ்டமடைந்ததொன்றே எஞ்சிய விளைவாகத் தென்படுகிறது.

### ஆல்பிருனி

சுல்தான் முகமதுவின் ஆட்சியில் குறிப்பிடத்தக்க இரத்தினமாக ஆல்பிருனி என்னும் புலவன் விளங்கினான்.[1] போர் வெறி கொண்ட சுல்தானிடம், அவன் மிக நன்றியுள்ளவனாக இருந்தான் என்று கூறுவதற்கில்லை. சுல்தானின் மகன் மாசூட் என்பவன் தரமறிந்து புலவனை ஆதரித்து வந்தான். கி.பி. 973ஆம் ஆண்டில் பிறந்து கி.பி. 1048 ஆம் ஆண்டில் மரணமடைந்த ஆல்பிருனி, குவாரிசிம் அல்லது 'கிவா' என்னும் இராச்சியப் பகுதியைச் சார்ந்தவன். கஜினிக்கு அவன் ஒரு கைதியாகவோ அல்லது அனுதையாகவோ கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும். பஞ்சாபைக் கைப்பற்றி, தனது ஆதிக்கத்தை நிலைநாட்டுவதில்

1 அவனது முழுப்பெயர் அபுரிஹான் (ரெய்ஹான்) முகமது என்பதாகும். அவன் அகமதுவின் மகனாவான். பு-ரிஹான், உஸ்தாத் (ஆசிரியன்) ஆல்பிருனி (அன்னியன்) என்ற பொதுப் பெயராலேயே அவன் அழைக்கப்படுவது வழக்கம். 'ஆல்பிருனி' அல்லது 'ஆல்பெருனீ' ஆகிய இரு வகைகளும் ஏற்கக்கூடிய பெயர்களேயாம்.

சுல்தான் வெற்றிகண்டபோது, ஆல்பிருனியும் அப்பகுதியில் குடியேறியதாகத் தெரிய வருகிறது. இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு இந்து சமயச் சார்புள்ள கலைகளையும் தத்துவத்தையும் ஆல்பிருனி நன்கு கற்றுணர்ந்தான். புராண இலக்கியங்களைப் பிறரது உதவியின்றிக் கற்றுணருமளவிற்கு அவன் வடமொழியில் புலமை பெற்றிருந்தும், அவன் அதனுடன் திருப்தி கொள்ளவில்லை. இந்துக்களின் வரலாறு, குணம், நடையுடை பாவனைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவைகளைப் பொறுத்து, முக்கியச் செய்திகள் சிலவற்றை அல்பிருனி சேகரித்து நமக்கு வழங்கியுள்ளான். இச் செய்திகள் யாவையும் தொகுத்து அவன் வழங்கியுள்ள நூலைப் பொதுவில் 'அல்பிருனியின் இந்தியா' என்ற பெயரால் அழைக்கிறோம். இஸ்லாமியர் உருவாக்கியுள்ள இலக்கியங்களில் இது ஒரு தனிவகையாக விளங்குகின்றது. ஐந்து நூற்றாண்டுகளுக்குப்பின், இந்நூலாசிரியனின் அடிச்சுவட்டைப் பின்பற்றியே அபுல்-பாசல் என்பவன் 'ஐ-னி-அக்பாரி' என்ற நூலியற்றினன். ஆயினும், பூர்வாசிரியனுக்குத் தான் கடன் பட்டிருப்பதாக அவன் கூறிக்கொள்ளவேயில்லை. அல்பிருனிக்கு இந்திய இலக்கிய உத்திகளில் உள்ள குறைபாடுகள் நன்கு புலனாயிருந்த போதும், இந்திய தத்துவசாத்திரத்தில் அவனுக்கு மிகுந்த பற்றுதலேற்பட்டது. குறிப்பாக 'பகவத் கீதையின்' தத்துவபோதனை அவனை மிகவும் கவர்ந்தது. உண்மையை அதன்பொருட்டே கற்றுணரவேண்டுமென்ற ஆர்வம் அவனுக்கு மிகுதியாயிற்று. இயற்கையாக இஸ்லாமியருக்குள்ள வெறுப்புணர்ச்சிகளை மறந்து, உண்மையை உணர்ந்து கொள்வதற்காக அவன் சீரிய முயற்சிகளை மேற்கொண்டான். அவனது நூலின் புலமை மிக்க மொழிபெயர்ப்பாளர் கீழ் வருமாறு கூறுவர்:

'வாள்கள் ஒன்றோடொன்று உராய்வதால் எழுகின்ற சப்தமும், நெருப்பில் பொசுங்குகின்ற நகரங்களும், கொள்ளையடிக்கப் பெறும் ஆலயங்களின் அவலமும் நிறைந்திருக்கின்ற இக்கால வரலாற்றில் இவ்வமைதியான விருப்பு வெருப்பற்ற ஆராய்ச்சி நூல் செப்பிடுவித்தையால் எழுப்பப்பெற்ற தீவுபோல்' விளங்குகிறது.

'வானசாத்திரம், கணிதம், காலவரன்முறை, பூவியல் கணிதம், இரசாயனம், பௌதிகம், தாதுப்பொருளாராய்ச்சி'— ஆகியவை அந்நூலில் தனியிடம் பெறுகின்றன. இத்துறைகளில் புலமை மிக்க அவனது ஆராய்ச்சிக் கருத்துகளை, மொழிபெயர்த்தளிக்கும் ஆற்றலுள்ளவர்கள் தற்காலங்களில் இல்லையென்றே

கூறலாம். அவ்வாறு அவனது கருத்துரைகளின் மொழி பெயர்ப்பு மக்களுக்குக் கிடைக்கின்ற வாய்ப்புக்கிட்டினும், அவை களைக் கற்றுணரும் ஆற்றல் கல்வி கேள்விகளில் தேர்ந்த பலருக் குத் தற்காலத்தில் இல்லை. விஞ்ஞான அடிப்படையில் முறை யான ஆராய்ச்சியில் முறைபோகிய வரலாறு அறிந்த பெரியோர் களில் ஒருவனாக ஆல்பிரூனி விளங்குகிறான். அவன் எழுதிய பல குறிப்புகள் நம் கைகளுக்குக் கிடைப்பதில்லை. மற்றும் சில கையெழுத்துப் பிரதிகளாகவே இருக்கின்றன. 'புராதன மரபினரின் காலவரன்முறை'— என்ற நூலை 'சாச்செள' என்பவர், மொழிபெயர்த்து 1879 ஆம் ஆண்டில் வெளியிட்டார். அந்நூலைக் கற்றுணர்வது மிகவும் கடினமென்றாலும், மிகவும் பய னுள்ள ஆதார நூலாக அது விளங்குகின்றது.

### கனோஜ்நாட்டு காகர்வார்கள்

முகமதுவின் படையெடுப்பையொட்டி கனோஜ் நாட்டில் பிரதிஹார குலத்தினரின் ஆட்சியும் முற்றுப் பெற்றது. அதை யடுத்து, காகத்வாலர் (காகர்வார்கள்) மரபைச் சார்ந்த அரசர் கள், அரசைக் கைப்பற்றினர். அவர்கள் சந்தலருடன் தொடர் புடையவரென்றும், இந்நாட்டு மக்களேயாவர் என்றும் தெரிய வருகிறது. இக்குலத்தைத் தோற்றுவித்தவனின் பெயரானை கோவிந்தசந்திரன், அரை நூற்றாண்டுக் காலத்திற்குமதிகமாக ஆட்சி செலுத்தி வந்தான். (கி. பி. 1100-லிருந்து 1160 வரையி லும்) கனோஜ் நாட்டின் பழம் பெருமையை மீட்பதில் அவன் கணிசமாக வெற்றி பெற்றான். அவனது ஆட்சியைச் சார்ந்த பல கல்வெட்டுகள் இன்னும் காணக்கிடைக்கின்றன.

### ராஜா ஜயச்சந்தன்

கோவிந்தசந்திரனின் பெயரன், மக்களிடையே நிலவி வரு கின்ற கதைகளில். ராஜா ஜயச்சந்தன் (ஜயச்சந்திரன்) என்ற பெயரால் அழைக்கப்படுகிறான். இஸ்லாமிய வரலாற்றாசிரியர்கள் அவனைப் பனாரசின் மன்னன் என்று அறிவார்கள். அவனை இந்திய நாட்டின் தலைசிறந்த மன்னனென்று அவர்கள் வர்ணித் துள்ளனர். பெரும்பாலும், அவன் பனாரசிலேயே வசித்து வந்தான் என்று தெரியவருகிறது. அவனது மகள், ராய் பிதோரா அல்லது ஆஜ்மீர் நாட்டு செளஹான் குலமன்னன் பிருதிவிராஜனின் மீது காதல் கொண்டிருந்ததும், அவன் அவளைச் சிறையெடுத்துச் சென்றதும், நாட்டுப் பாடல்களின் முக்கியக் கருத்துகளாக அமைந்துள்ளன.

1194 ஆம் ஆண்டில் பொங்கி எழுந்த இஸ்லாமியப் படையெடுப்பை அணையிடுவதற்குச் ஜயச்சந்தன் முயன்றபோது, முகமது கோரி (சாம் என்பவரின் மகன், ஷியாபுடீன் அல்லது முயுசுடீன்) இந்துக்களடங்கிய பெரும்படையொன்றை முறியடித்தான். யமுனை ஆற்றின் அருகிலுள்ள இடாவா மாவட்டத்திலுள்ள சந்த்ரவார் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் பலர் கொல்லப் பட்டனர். அரசனும் போரில் கொல்லப்பட்டான். அவனது தலைநகரமான பனாரஸ் சூறையாடப் பெற்றது. கொள்ளைப் பொருள்களை ஏற்றிச் செல்வதற்கு, 1400 ஒட்டகைகளின் உதவி தேவையாக இருந்தது. கனோஜ் நாட்டின் சுதந்திர வாழ்வு இப்போருடன் முடிவடைந்ததெனலாம். அதற்குப் பின். கனோஜை அரசாண்டு வந்த சிற்றரசர்கள் அவ்வப்போது நிலை பெற்றிருந்த பேரரசிற்கு அடிபணிந்து அப்பழம்பெரு நகரைப் பலகாலம் ஆட்சி புரிந்து வந்தனர். காஹதவால மன்னர்களை யடுத்துச் சாந்தலர் அரசெய்தினர். இஸ்லாமியரின் ஆதிப் படையெடுப்புகளால்,பல இராஜபுத்திர மரபினர் குடிபெயர்ந்தனர் எனக் கிராமங்களில் நிலவி வரும் கர்ண பரம்பரைச் செய்திகள் வாயிலாக அறியலாம். சந்தத்துடன் அமைந்த சில நாடோடிப் பாடல்களிலும் இக்கருத்துகள் பொதிந்து கிடப்பதை அறியலாம்.

### சௌஹன் மரபினர்—பிருதிவிராஜன்

இஸ்லாமியரின் வட இந்தியப்படையெடுப்பு வரலாற்றிலும், இந்து மரபின் செய்திகளிலும், ராஜஸ்தான சாம்பர், ஆஜ்மீர் பகுதிகளைச் சார்ந்த சௌஹன் குலத்தினர், மிக முக்கிய இடம் பெறுகின்றனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவனாக விக்ரஹ ராஜன் (IV) விளங்குகிறான். வடமொழி இலக்கிய வளர்ச்சிக்கு, அவன் அருந்தொண்டாற்றினான். அவனியற்றியதாகக் கூறப் படும் நாடகமொன்றின் பகுதிகள், ஆஜ்மீரின் கல்வெட்டுகளில் செதுக்கப்பெற்றுள்ளன. 'ராய்பிதோரா' அல்லது பிருதிவி ராஜன் என்பவன் அவனது அண்ணன் மகனாவான். நாம் ஏற்கெனவே கூறியுள்ளவாறு, கி.பி. 1175 ஆம் ஆண்டில், ஜயச் சந்திரன் மகளை அவன் சிறையெடுத்துச் சென்றான். சந்தலரை அவன் 1182 ஆம் ஆண்டில் முறியடித்தான். பத்தாண்டுகளுக்குப் பின் கோரிமகமதுவிற்கு எதிராகப் பெரும்படையொன்றை நடத்திச் சென்று இவன் தீவிரமாகப் போராடினான். தரெயின் (பானிபட்டு) என்னுமிடத்தில் இரண்டாவது முறையாக நடை பெற்ற போரில், சிறைபட்டு உயிரிழந்தான். அவனது ஆஜ்மீர்

நகரம் அழிக்கப்பெற்றது. அங்குள்ள மக்கள் ஒன்று கொலை யுண்டனர் அல்லது அடிமைகளாயினர்.

மக்களின் அன்பைப் பெற்று, இன்றும் வட இந்தியாவில் அவன் தலை சிறந்து விளங்குகிறான். அவனது தீரச் செயல்களைப் பிரதேச மொழியில், பாடல்களாக அமைத்து இன்றும் வழங்கி வருகின்றனர்.

**சாந்தரைஸா**

அத்தகைய காவியங்களில் 'சாந்தரைசா' மிகவும் சிறந்து விளங்குகிறது. 'சாந்தபார்தை' என்ற பிருதிவிராஜனின் அவைப்புலவனால் அது இயற்றப்பெற்றது. புராதன ஹிந்தி மொழியில் அமைந்த ஆதி காவியத்தை வழங்குகின்ற கலைஞர்கள் காலப்போககில் அதை விரித்து உருவாக்கியுள்ளனர். இவ் வகையில் அதை ஹோமான் காவியத்துடன் ஒப்பிடலாகும். அதில் 125,000 செய்யுள்கள் அடங்கியுள்ளதாகக் கூறப்படுகின் றன. இதைப்போன்ற மற்றும் பல இலக்கியங்கள் இராஜஸ் தானத்தில் காணக்கிடைக்கின்றன.

**டெல்லியின் வரலாறு**

டெல்லி என்று இங்கு நாம் குறிப்பது, குதுப்மினாரையடுத்து அமைந்திருந்த பண்டைய நகரத்தையே குறிக்கும். ரேவர்டி என்பவரின் கூற்றை ஆதாரமாகக் கொண்டு, இந்நகரம் கி.பி. 993-4-ல் நிறுவப்பெற்றதெனலாம்.[1] பதினொன்றாவது நூற்றாண் டில் தோமார குல மன்னர்கள், பல கோயில்களைக் கட்டினரென் றும் அவைகளை இஸ்லாமியர் தகர்த்தெறிந்து, கிடைத்த பொருள் களைத் தங்கள் மசூதிகளை எழுப்புவதற்குப் பயன்படுத்தினர் என்றும் கூறப்படுகிறது. பன்னிரண்டாவது நூற்றாண்டில், இந் நகரம் பிருதிவிராஜனின் ஆட்சியிலடங்கியிருந்தது. 'விஷ்ணு பாதக் குன்று' என்னும் யாத்திரைத்தலமொன்று, குருக்ஷேத் திரத்திற்கு அருகிலுள்ளது. வியப்பிற்குரிய இரும்புத்தூண் ஆதியில் அங்கு அமைக்கப்பட்டிருந்ததென்றும், தற்போது அது காணப்படுகின்ற இடத்திற்கு, தோமாரத் தலைவன் ஒருவனால் பதினொன்றாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் கொண்டு செல்லப்பட்டதென்றும் கூறப்படுகிறது. 24 அடி நீளமுள்ள தேனிரும்பினாலான அது ஆறு டன்களுக்கும் அதிகமான எடை யுள்ளதென்று மதிக்கப்படுகிறது. உலோகம் நன்றாக இணைத்துப்

1. வேறு சில செய்திகளும் குறிப்பிடப்படுகின்றன.

பிணைக்கப்பட்டுள்ளது. எளிதில் சிதறியோடும் தன்மை வாய்ந்த உலோகத்தைக்கொண்டு, இத்தகையதோர் சாதனை மிகவும் போற்றுதற்குரியது. இரும்பு போன்ற உலோகங்களைக் கையாண்டு, இத்தகைய நற்படைப்புகளை உருவாக்குவதில், பண்டைய இந்தியர் மிகவும் தேர்ந்திருந்தனர் என்பதற்கு, இதைப் போன்ற வேறு பல சான்றுகளும் உண்டு.

தற்போது நாம் காணும் 'இந்தர்பத்' என்னும் கிராமம் மிகப் பழங்காலந்தொட்டு மகாபாரத காவியத்தில் குறிக்கப்பெறுகின்ற இந்திரப்பிரஸ்தத்தின் ஒரு பகுதி என்று கருதப்படுகிறது. இதனடிப்படையே கணக்கிட இயலாத அளவிற்குத் தொன்மை வாய்ந்த நகரமாக இன்றும் டெல்லி கருதப்படுவதற்குக் காரணமாகும். இம்மரபுச் செய்தி உண்மையானதாக இருக்கலாம். வரலாற்றறிவிற்கு எட்டாத தொன்மை வாய்ந்த நகரமென்று கருதுவதற்குரிய சான்றுகள் கிடைப்பதில்லை. பல சிறு நகரங்களை உள்ளடக்கிய, டெல்லி என்ற பெயருடைய பகுதி, கிறிஸ்துவிற்குப்பின் பத்தாவது நூற்றாண்டின் இறுதியில் நிறுவப் பெற்றது. பதினொன்றாவது நூற்றாண்டின் இடைப்பகுதியில். அனங்கபால தோமாரன் ஆட்சி வரையிலும், அது சிறப்புப் பெற்று விளங்கவில்லை என்றும் தெரிய வருகிறது. மக்களில் பலர், டெல்லி, இந்திய நாட்டின் தலைநகரமாகஎன்றுமே இருந்து வந்திருக்கிறதென ஒரு வகையாக நம்பி வருகின்றனர். அவ்வாறு எண்ணுவாரேயாகில் அது தவறானதாகும். இந்து வரலாற்றில் என்றுமே டில்லி முக்கிய இடம் பெற்றதில்லை. 1206–லிருந்து 1526 ஆம் ஆண்டு வரையிலும் இந்துஸ்தானத்தை ஆண்டுவந்த சுல்தான்களின் இருப்பிடமாக இருந்து வந்திருக்கிறது. 1648 ஆம் ஆண்டு வரையிலும் அது முகலாயரின் தலைநகரமாக இல்லை. அவ்வாண்டில் ஷாஜஹான் ஆக்ராவிலிருந்து தனது அவையை டெல்லிக்கு மாற்றினான். அவனது வழித்தோன்றல்கள் 1858 ஆம் ஆண்டு வரையிலும் அங்கு வசித்து வந்தனர். அதன் பிறகு அவரது குலம் நசித்துப் போயிற்று. 1912 ஆம் ஆண்டிலிருந்து புதிய டெல்லி நகரமொன்று இந்திய அரசாங்கத்தின் தலைநகரமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

### காலவரன் முறை

| கி.பி. | |
|---|---|
| 647 | ஹர்ஷனின் மரணம் |
| சி 700 | வங்காளத்தில் ஆதிசூரன் |
| 712 | சிந்துவை அராபியர் கைப்பற்றுதல் |

| | |
|---|---|
| கி.பி. | |
| 731 | கனோஜ் மன்னன் யசோவர்மன் சீனுவிற்குந் தூதுவரை அனுப்புதல் |
| சி 740 | காஷ்மீர மன்னன் லலிதாதித்யன் யசோவர்மனை முறியடித்தல் [கி.பி. 733—69] |
| சி 750 | கோபாலன், வங்காளத்தில் பாலர் குலத்தைத் தோற்றுவித்தல். |
| சி 810 | வங்காள மன்னன் தர்மபாலன், கனோஜ் மன்னனொருவனை அரசிழக்கச் செய்து, மற்றொருவனை அமர்த்துதல். |
| சி 816 | பிரதிஹாரரின் தலைநகரம் கனோஜிற்கு மாற்றப்படுதல் |
| சி 840—890 | கனோஜ் பிரதிஹார குலத்தின் சக்தி வாய்ந்த போஜன் |
| சி 916 | இராஷ்டிரகூடன் மூன்றும் இந்திரன் கனோஜைக் கைப்பற்றுதல் |
| சி 992— 97 | குஜரத் மன்னன் மூலராஜன் |
| சி 950— 99 | சந்தலரின் சிறப்பு வாய்ந்த மன்னன் தாங்கன் |
| 973—1048 | முறையான ஆசிரியன், ஆல்பிருனீ |
| 993— 4 | டெல்லி நிறுவப்பெற்ற தோராயமான நாள் |
| 997 | கஜினி முகமது அரசேற்றல் |
| 1001 | ஜயபாலனை சுல்தான் முகமது முறியடித்தல் |
| 1008—19 | சுல்தான் அனந்தபாலை வென்று காங்க்ராவைக் கைப்பற்றுதல் |
| 1018—19 | சுல்தான் கனோஜைக் கைப்பற்றுதல் |
| சி 1018—60 | மாளவ மன்னன் போஜ மராமரன் |
| சி 1023 | வங்காளத்தில் ராசேந்திர சோழன் படையெடுத்தல் |
| டிசம் 1023—ஏப்ரல் 1026 | சுல்தான் மகமதுவின் சோமநாத் படையெடுப்பு |

| கி.பி. | |
|---|---|
| சி 1030 | சுல்தான் மகமதுவின் மரணம் |
| 1038 | வங்காள மன்னன் நயபாலன், அடிசா என்ற பௌத்தனின் தலைமையில் தூது கோஷ்டியொன்றைத் திபெத்திற்கு அனுப்பி வைத்தல். |
| சி 1048—1100 | சாந்தல மன்னன் கீர்த்திவர்மன் |
| சி 1100— 60 | கோவிந்த் சந்திரன், கனோஜின் சஹத்வால மன்னன் |
| 1143— 72 | குஜரத் மன்னன் சௌளுக்கிய, குமாரபாலன் |
| சி 1158— 69 | டல்லாள சேனன் (வல்லாள சேனன்) வங்காளத்தின் ஒரு பகுதிக்கு மன்னன் |
| 1182 | பார்மல் சந்தல்—சௌஹன் ராஜா பிருதிவி ராஜனிடம் தோல்வியுறுதல் |
| 1192 | பிருதிவிராஜன் தோல்வியுறுதலும் மரணமும் |

## மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

'இந்தியாவின் புராதன வரலாறு' என்ற நூலில் பல மேற்கோள்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அண்மையில் வெளியாகியுள்ள நூல்களின் பட்டியல் சிலவற்றைக் இங்குக் காணலாம்.

டி-லா-வால்லீ-பௌசின்ஸ் என்பவரின் 'டைனஸ்டீஸ் எட் ஹிஸ்டரி' (முன்குறிப்பு) என்ற நூலில், பிரதான குணங்களின் வரலாற்றைக் குறித்த சாராம்சங்களும் மேற்கோள்களும் காணப்படுகின்றன.

கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு, வால் II விலும் (அச்சிலுள்ளது) சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன.

ஆர். ஜி. மஜூம்தார் என்பவரைப் பதிப்பாசிரியராகக் கொண்ட (பம்பாய் 1955) 'இந்திய மக்களின் வரலாறும் பண்பாடும்' என்ற வரிசையில் நான்காவது வால்யூமில் (கனோஜ் பேரரசுக்காலம்), இக்காலத்தைபற்றிய இந்திய ஆராய்ச்சியாளரின் அரிய கருத்துகள் அடங்கியிருக்கின்றன.

ஹர்ஷனின் ஆட்சியை விவரிக்கும்போது ஆர். எஸ். த்ரிபதியின் 'கனோஜ் வரலாறு' (பனாரஸ் 1937) என்ற நூலைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளோம். பிரதிஹாரரின் வரலாறு அதில் மிக நன்றாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது.

பாரமரர்களைப்பற்றி அறிந்துகொள்வதற்கு, டி. சி. கங்குலி என்பவர் இயற்றியுள்ள 'பாரமரர் குல வரலாறு' (டாக்கா 1943) என்ற நூலைப் பார்க்கவும்.

'வங்காள வரலாறு' என்ற விரிவான நூலின் இரு பகுதிகள் வெளியாகியுள்ளன. முகலாயர் ஆட்சிகாலம் வரையுள்ள அப்பகுதியின் வரலாற்றை இவ்விரு பகுதிகளும் எடுத்துரைக்கின்றன.

ஆர். சி. மஜும்தார் பதிப்பித்துள்ள முதல் பகுதி, பாலர்கள் மற்றும் சேனர்களின் வரலாற்றிற்கு இன்றியமையாதது.

பத்தாவது நூற்றுண்டு தொடங்கி, பிற்காலங்களில் ஆட்சி செய்து வந்த குலங்களின் வரலாற்றை ஐயமறக் கற்பதற்கு எச். சி. ரே என்பவர் எழுதியுள்ள வட இந்தியக் குல வரலாறு (2 பகுதிகள்) (கல்கத்தா 1931–6) என்ற நூல் இன்றியமையாதது.

காஸ்னவிட் சுல்தான்களின் ஆட்சியை அறிந்து கொள்வதற்கு முகமது நசீம் என்பவரின் 'காஸ்னு முகமதுவின் வாழ்க்கையும், அவன் வாழ்ந்த காலமும்' (கேம்பிரிட்ஜ் 1931) என்ற நூல் பயனுள்ளது.

# 3. தீபகற்ப இந்திய இராச்சியங்கள்

## 1. தக்காணமும் மைசூரும்

### இராச்சியத் தொகுதிகள்

தீபகற்ப இந்தியாவின் இடைக்கால வரலாறு, தக்காண பீடபூமியிலுள்ள இராச்சியத்தொகுதிகளின் வரலாறும்,அதற்கும் அப்பாலுள்ள இராச்சியத் தொகுதிகளின் வரலாறும் ஆகும், தக்காண பீடபூமியின் வடக்கெல்லையாக நர்மதை ஆற்றையும் தெற்கெல்லையாக கிருஷ்ண, துங்கபத்ரா ஆறுகளையும் கூறலாம். பூகோளரீதியாக, மைசூர் மிகவும் தென்கோடியில் அமைந்துள்ளது. தமிழக நாடுகளுடன் கொண்டிருப்பதைவிடத் தக்காண பீட பூமியுடன் அது மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டது. அதைத் தக்காண பீடபூமியின் உப அங்கமாகவே கருதலாம். பாண்டிய, சேர, சோழ பல்லவ இராச்சியங்களடங்கிய தமிழக வரலாறு, தனியொரு பகுதியாக விளங்கி வருகிறது. பிரதான தக்காணமும்; மைசூர் அல்லது கன்னட நாடும், தமிழகம் அல்லது தமிழ்நாடு ஆகிய மூன்று பகுதிகளும் ஒன்றோடொன்று நெருங்கிய உறவு கொண்டிருந்தன. ஆனால், தீபகற்ப இந்திய அரசுகளுக்கும், வட இந்தியப் பகுதிகளுக்கும் இடையில் அதிகத் தொடர்பு இல்லை.

### வரலாறு கற்பதிலுள்ள இடர்ப்பாடுகள்

தற்கால ஆராய்ச்சியின் விளைவாகத் தெளிவு குன்றிய தீபகற்ப இந்திய வரலாற்றை ஒரு வகையாகத் தொகுத்துக் கூறும் முயற்சியில் கணிசமான வெற்றி காணப்படுகிறது. குறையின்றி எடுத்துரைத்தல் என்ற தசையூட்டி எலும்புக்கூடாகத் தோற்றமளிக்கின்ற வரலாற்றிற்கு உயிரூட்டுகின்ற முயற்சி பயனளிக்கவில்லை. ஊக்கமிகுந்த போற்றுதற்குரிய தேவையான புதைபொருளாராய்ச்சியின் பயன்களைச் சாதாரணமாக, வரலாறு படிக்கின்ற மக்களால் சுவைத்துணர முடியாது. அச்செய்திகளை, அவர்கள் நினைவிலிருத்திக்கொள்வதும் மிகவும் கடினமேயாகும். தென்னிந்திய மன்னர்களின் பெயர்களும் பிற பிரபுக்களின் பெயர்களும் வரலாற்று மாணவனுக்கு நூதனமான கஷ்டங்களை விளைவிக்கின்றன. பெயர்கள் நீண்டிருப்பதோடு, ஒவ்வொரு மன்னனுக்கும் பல மாற்றுப் பெயர்களும், பிருதுகளும் காணப்படுகின்றன. இப்பிருதுகளை நாம் உச்சரிப்பதும் பல.

சந்தர்ப்பங்களில் கடினமாகவே இருக்கின்றது. அவை நம்மை குழப்பமடையவும் செய்கின்றன.[1] பட்டியலில் ஒரே பெயர் மீண்டும் மீண்டும் இடம்பெறும்போது நாம் அவைகளைத்தவறுதலாகப் புரிந்துகொள்வதற்கும் இடமேற்படுகிறது. மேலும். இவ்விராச்சியங்கள் வெளியுலகுடன் அதிகமான தொடர்பு கொண்டதுமில்லை. எனவே, அவ்விராச்சியங்களின் வரலாறு, அப்பகுதி வாழ் மக்களுக்கே, அதிகச் சுவையும் பயனுமுள்ளதாக இருக்கிறதேயன்றி, உலக வாழ் மக்களுக்கு அதிகப் பயனுள்ளதாக இருப்பதற்கு வழியில்லை. இத்தகைய காரணங்களாலும், இதே போன்று மேலும் பல காரணங்களாலும், இடைக்காலத்திலுள்ள தென் இந்திய இராச்சியங்களின் வரலாற்றைத் தெளிவாக எடுத்துக்கூறுவது, வட இந்திய இராச்சியங்களின் வரலாற்றைத் தொகுத்தளிப்பதைக்காட்டிலும் மிகவும் கடினமாகக் காணப்படுகிறது. வட இந்திய இராச்சிய வரலாறுகளைத் தொகுத்தளிக்கும் வேலை போதிய அளவு குழப்பத்தை உண்டு பண்ணுகிறது. இந்த அதிகாரத்தில், தனியொரு குலத்தின் வரலாற்றைத் தொடர்ச்சியாகத் தொகுத்தளிக்கும் முயற்சி மேற்கொள்ளப்படுவதில்லை. முக்கியமான சில நபர்களைப்பற்றியும். வலிமை பெற்று விளங்கிய சில பேரரசுகளைப்பற்றிய செய்திகளையும் பொதுவான முறையில் இங்குப் பரவலாக எடுத்துரைத்திருக்கிறோம். அதேபோன்று சமயம், இலக்கியம், கலை ஆகிய துறைகளிலும், பல நூற்றாண்டுகளாக நடைபெற்று வந்த ஒருசில மாறுதல்களையும் குறிப்பிட்டிருக்கிறோம். அரசியல் நோக்கில் தென் இந்தியா, தனித்து நின்று இயங்கியது என்றாலும், அப்பகுதியிலிருந்து உருவாகிய சமயப் புரட்சிகளும் தத்துவப் புரட்சிகளும், வட இந்தியரின் சிந்தையையும் கருத்தையும் அதிகமாகக் கவர்ந்திருந்தன எனலாம். இராமானுசர் போன்ற தென் இந்தியச் சமய குரவர்களின் கருத்துகள் குமரிமுனையிலிருந்து இமயமலை வரையிலும் பரவியிருந்ததை, இந்து-இந்தியாவின் அடிப்படை ஒற்றுமையை விளக்குகின்ற ஒரு சான்றாகக் கூறலாம். இரத்த பாசம், மொழி, நடையுடை பாவனைகள், அரசியல் வியவகாரங்கள் ஆகிய பல பிரிவினைச் சக்திகள் வேலை செய்து வந்த போதிலும், இவ்வடிப்படை ஒற்றுமை சீர்குலையாது இன்றும் நிலைத்திருக்கிறது.

1. உதாரணமாகக் கல்வெட்டொன்றில், ஒரு மனிதனுக்கு, 'மேதினி மிசார கண்டகத்தாரி-த்ரிநேத்ர சளுவ நரசன நாயகன்' என்ற பெயர் காணப்படுகிறது. சாளுக்கிய மன்னன் முதலாவது புலிக்கேசின் என்பவனுக்கு, சத்யாச்ரயன் என்றும், ரணவிக்ரமன் என்றும், வல்லபன் என்றும் பல மாற்றுப் பெயர்கள் உண்டு. அப்பெயர்களைச் சரிவர எழுதத் தவறினால், அவைகளைப் படித்துணர்வது மிகவும் கடினமாகிவிடும்'

**வாகடகர்கள்**

சாதவாகனர் அல்லது ஆந்திரரின் மறைவிற்குப் பின் மத்திய இந்தியாவிலும், தக்காணத்திலும், சிறு குலங்கள் பல தோன்றி ஆட்சி நடத்தலாயின. அவைகளில் வாகடகர்களை மிகச் சிறந்தவராகக் குறிப்பிடலாம். நான்காவது நூற்றாண்டின் முற் பகுதியில் முதலாம் பிரவரசேனன் என்னும் மன்னன் மிகச் சிறந்து விளங்கினான். மத்தியப் பிரதேசமும், மேற்குத் தக்காணத் தின் பெரும் பகுதியும் அவனது ஆதிக்கத்திலிருந்தன. அப்பகுதி யிலடங்கிய பேசிம், பீஹார் ஆகிய விடங்களில், தன் இரண்டா வது மகன் சர்வேசேனின் தலைமையில் சிற்றரசுகளை நிறுவினான். குப்தப் பேரரசன் இரண்டாவது சந்திரகுப்தனின் ஆட்சியில், வாகடகர் சாம்ராச்சியம் குப்தப் பேரரசின் ஆதிக்கத்தின்கீழ் வந்தது. இரண்டாம் ருத்ரசேனனின் மனைவியும், இரண்டாம் சந்திர்குப்தனின் மகளாகிய பிரபாவதி குப்தா, விதவையான பின்பும், சிறு வயதினரான மக்களின் சார்பில் ஆட்சி செலுத்தி வந்தாள். அவள் தனது பெயரால் பல பிரகடனங்களை வெளி யிட்டு வந்தாள். அப்பிரகடனங்களில் தன்னை, குப்த மரபின ளாகவே தெரிவித்து அறிக்கைகள் விடுத்தாள். புகுந்தஇடத்தின் பெயரை அவள் அதிகமாகப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. அவளது மகன் இரண்டாம் பிரவரசேனன் கி. பி. 410 ஆம் ஆண் டில் அரசெய்தினான். சிறுகச் சிறுக அவன் குப்தராதிக்கத்தை ஒதுக்கித் தள்ளினான் எனத்தெரிய வருகிறது. ஐந்தாம் நூற்றாண் டின் பிற்பகுதியிலேற்பட்ட குழப்பமான நாட்களில் வாகடகர் சின்னாட்களாக, மாளவத்தில் ஆட்சி செலுத்தி வந்தனர். அம்மர பினருள், இறுதியாக ஆட்சி செலுத்திய ஹரிசேனன் என்பவன் மிக்க சிறப்பு வாய்ந்தவன் எனத் தெரிய வருகிறது. அவன் தக்காணத்தின் மத்தியப் பகுதி முழுவதையும் ஆண்டு வந்தான். ஆறாவது நூற்றாண்டின் முற்பகுதியில் அவன் மரணமடைந்தபின், வாகடக சாம்ராச்சியம் அழிந்தது. வாகடகரின் ஆட்சி காலத்தி லேயே அஜந்தாவின் குகைகள் பல அர்ப்பணிக்கப் பெற்றன.

**கடம்பர்**

கி. பி. மூன்றாவதிலிருந்து ஆறாவது நூற்றாண்டுவரையிலும் தற்போது, வடக்கு, தெற்குக் கானரா மாவட்டங்களாக உள்ள பகுதிகளிலும், மைசூரின் மேற்குப் பகுதியிலும், கடம்பர் என் னும் ஒரு மரபினர் அல்லது குலத்தினர், தன்னாட்சிபெற்று, சிறப் பாக அரசு செலுத்தி வந்தனர். அவர்களது தலைநகரமாக விளங் கிய வானவாசி மிகவும் பழமை வாய்ந்ததொன்றாகத் தெரியவரு

கிறது. அதற்கு ஜயந்தி என்றும் வைஜயந்தி என்றும் மறுபெயர்கள் உண்டு. மூன்ருவது முறையாகப் பௌத்த அவை கூடிய பின், இந்நகரத்திற்குப் பௌத்த சமயத் தூதுவரை அசோகன் அனுப்பி வைத்தான் எனச் சிங்கள நாட்டிலுள்ள புத்த சமய மரபுச் செய்திகளின் வாயிலாக அறிகிருேம். கடம்பரும் பிராமண குலத்தவரே யாவர். இவர்களைப்போன்ற பிரசித்திபெற்ற பல அரசகுலத்தினர் பிராமணராக இருந்ததையும் நாம் நன்கறிவோம். அரசு செலுத்தி வந்தமையால், செய்தொழிலின் அடிப்படையில் இவர்களை, க்ஷத்திரியர் என்று கருதும் வழக்கமேற்பட்டது. இக்குலத்தின் முதல் மன்னன் மயூரசர்மன், பிராமண குலத்தைச் சார்ந்த ஒரு மாணவனென்றும், காஞ்சி பல்லவர்களுக்கெதிராகக் கிளர்ச்சி செய்தானென்றும் கூறப்படுகிறது. தக்காணத்தில் வெகு தூரம் இவன் படையெடுத்துச்சென்ருன். இவன் நான்காவது நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருந்ததாக நம்பப்படுகிறது. பதிஞன்காவது நூற்ருண்டின் தொடக்க காலம் வரையிலும், கடம்ப குலத்தைச் சார்ந்தவர்கள் குறுநில மன்னராக அரசு செலுத்தி வந்தனர். என ஊகித்தறியலாகும். பதிஞன்காம் நூற்ருண்டின் தொடக்கத்தில் சிறப்பு வாய்ந்த விஜயநகர சாம்ராச்சியத்தைத் தோற்றுவித்த ராயர்களுக்கும் கடம்பர்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என, ஆராய்ச்சியாளரில் சிலர் கருதி வருகின்றனர்.

**கங்கர்கள்**

இரண்டாவது நூற்ருண்டிலிருந்து பதிஞெனருவது நூற்ருண்டுவரையிலும், மைசூரின் பெரும்பகுதியை, அதேபோன்ற சிறப்புடைய கங்கர் குலத்தவர் ஆண்டு வந்தனர். இடைக்காலங்களில் அடிக்கடி நிகழ்ந்த போர்களில், அவர்கள் மிக முக்கியப் பங்கு கொண்டிருந்தனர். பத்தாம் நூற்ருண்டில் அரசுசெலுத்தி வந்த கங்கர்கள் சமணமதத்தில் தீவிரப்பற்றுக் கொண்டவர்கள். தீபகற்ப இந்தியாவில் கி. மு. நான்காவது நூற்ருண்டு முதல் சமண சமய வரலாறு தொடங்குகிறது. சிரவணபெல்கோளத்திலுள்ள பெருங்கற்பாறை யொன்றின் உச்சியில், பாறையில் குடைந்தெடுக்கப்பட்ட 56½ அடி உயரமுள்ள கோதமனின் மிகப்பெரிய கற்சிலையொன்று அமைக்கப்பெற்றிருக்கிறது. அது போன்ற பிரமாண்டமான உருவங்களை அமைக்கும் முயற்சி இந்திய நாட்டில் எக்காலத்திலும் மேற்கொள்ளப்படவில்லை என அறிகிருேம். கங்க மன்னரின் அமைச்சரான சாமுண்டராயன்

என்பவனின் ஆணையின்பேரில் கி. பி. 980 ஆம் ஆண்டில் இவ்வுருவச் சிலை நிறுவப்பெற்றது என அறிகிறோம்.[1]

ஆறாவது நூற்றாண்டிலிருந்து, பதினாறாவது நூற்றாண்டுவரையிலும் சுமார் ஆயிரமாண்டுகளுக்கு, கங்கர்களின் ஒரு கிளையினர் ஒரிசாவில் ஆண்டு வந்தனர்.

**முற்கால சாளுக்கியர்**

தக்காணத்தில் அரசு செலுத்திய, இடைக்கால மரபினருள் சாளுக்கியரை முதன்மையானவர்களாகக் கூறலாம். ஆறாவது நூற்றாண்டின் இடைக்காலத்தில் முதலாவது புலிகேசின் இக்குலத்தைத் தோற்றுவித்தான். அவன் ஆதியில் தன்னை வாதாபி அல்லது பதாமியின் தலைவனென கூறிக்கொண்டான். வாதாபி அல்லது பாதாமி, தற்போது பம்பாய் மாகாணத்தின் பீஜபூர் மாவட்டத்திலிருக்கிறது[2]. அவனது பெயரன் இரண்டாம் புலகேசின் (608–42) என்பவனைத் தோராயமாகக் கனோஜியை ஆண்டுவந்த ஹர்ஷனின் (606-47) சமகாலத்தவனாகக் கருதலாம். வட இந்தியாவில் ஹர்ஷனுக்கு ஏற்பட்டிருந்த பெருமதிப்பு தென் இந்தியாவில் இம்மன்னனுக்கும் ஏற்பட்டிருந்தது. கி. பி. 620 ஆம் ஆண்டில் ஹர்ஷன் தக்காணத்தையும் தன்னாதிகத்தின் கீழ்க்கொண்டுவர விழைந்தான். ஆனால் அவனினும் வலிமை பொருந்திய புலிகேசின், ஹர்ஷனை முதுகிட்டோடச் செய்தான். அதிலிருந்து நர்மதை ஆறு இரு இராச்சியங்களுக்கும் எல்லையாக அமைந்தது. தக்காணப் பேரரசனின் அவைக்கு கி. பி. 641 ஆம் ஆண்டில் ஹியூன்-சாங் என்னும் சீன யாத்திரிகன் விஜயம் செய்தான். புலகேசினுக்கு நாட்டிலிருந்த செல்வாக்கையும், போர் வெறிமிக்க அவனது சிற்றரசர்கள் அவனைப்போற்றி நின்ற பெருமையையும் கண்டு, சீனயாத்திரிகன் மிகவும் வியப்படைந்தான். தலைநகரம் நாசிக் அல்லது அதற்கு அருகிலிருக்க வேண்டும். மேற்கு மலைத்தொடரின் அடர்த்தியான காடுகளில் ஏராளமான திருடர்கள் வசித்து வந்தனர். அதைக் கடந்து செல்வது யாத்திரிகனுக்கு மிகுந்த பிரயாசையாகவே இருந்தது. தற்காலங்களைப்போலவே, அக்காலங்களிலும் அப்பகுதிக்கு மகாராஷ்டிரம்

1. இதைப்போன்ற, ஆனால் அளவில் சிறிய உருவச் சிலைகள், தென் கானரா மாவட்டத்தில் கார்க்கலா என்ற விடத்திலும், ஏனூர் என்ற விடத்திலும் காணப்படுகின்றன. இவை பிற்காலங்களில் தோன்றியவை என அறிகிறோம். முன்னர் குறிப்பிடப்பட்டதை இந்திய, சிங்களநாட்டு, நுண்கலை வரலாறு என்ற நூலில் காண்க. பிளேட் liii.

2. சாளுக்கியர் 'பன்றியைத்' தங்களது சின்னமாக உபயோகித்தனர். இவ்வுருவச் சின்னத்தையே பிற்காலத்தில் விஜயநகர ராயர்களும் பிறகுலத்தவரும் ஏற்று உபயோகித்தனர்.

என்ற பெயரே வழங்கி வந்தது. நாட்டில் நூற்றுக்குமதிகமான பௌத்த மடாலயங்கள் இருந்தனவென்றும், அவைகளில்தோராயமாக 5000-க்கு மேற்பட்ட பிக்ஷுக்கள் வசித்துவந்தனரென்றும் தெரிய வருகிறது. நாட்டு மக்களில் பெரும்பகுதியினர் பௌத்த சமயத்தைப் பின்பற்றவில்லை. அஜந்தாக் குகைகளைப்பற்றி, சுருக்கமான, தெளிவற்ற வரலாறு, ஹுயூன்-சாங்கினால் கூறப்படுகிறது. அவைகளை, அவர் நேரில் சென்று கண்டார் என்றும் தெரியவருகிறது. அக்குகைத் தொகுதிகளைச் சார்ந்த அருமையான சில சிற்பங்களும், வர்ண ஓவியங்களும் அக்காலத்திலேயே உருப்பெற்றுவிட்டன.

புலகேசியின் புகழ் பாரசீகம் வரையிலும் எட்டியிருந்தது. அந்நாட்டுமன்னன் புலகேசியுடன் தூதுவரைப் பரிமாறிக் கொண்டான். இவ்வாறு, பாரசீகத்துடன் அவன் கொண்டிருந்த தொடர்பு குகைகளில் சித்திரிக்கப்பட்டுள்ளது.

தக்காணத்தின் போர்த்திறன் மிக்க குறுநிலமன்னர் தலைவனிடம் மிகவும் நன்றியுடனிருந்த போதும், தலைவனது வீழ்ச்சியை அவர்களால் தடுக்க இயலவில்லை. ஹுயூன்–சாங்கின் விஜயத்திற்கு ஓராண்டிற்குப்பின், சாளுக்கிய மன்னன், காஞ்சியின் பல்லவ மன்னனான நரசிம்மவர்மனால் (642) முறியடிக்கப்பெற்றான். ஒருகால் நரசிம்மவர்மன் அவனைக்கொன்றிருக்கவும் கூடும். இதற்பிறகு, பல்லவமன்னன் தீபகற்பத்தின் பேரரசனாக விளங்கலானான். வெற்றிகண்ட மன்னனின் சாதனைகளை மேலும் விரிவாக வாகப் பல்லவ வரலாறு என்ற தலைப்பில் எடுத்துரைப்போம்.

முப்பத்திரண்டு ஆண்டுகளுக்குப்பின் (674) புலகேசியின் மகனொருவன், தந்தையின் மரணத்திற்குப்பழி தீர்த்துக் காஞ்சியைக் கைப்பற்றினான். எட்டாம் நூற்றாண்டின் (757) இடைக்காலம் வரையிலும், பல்லவருக்கும் சாளுக்கியருக்கும் இடையில் பகையிருந்து வந்தது. நடைபெற்ற போர்களில் வெற்றி தோல்விகளும் நிலையின்றி ஏற்பட்டுவந்தன. இந்நிலையில் தண்டிதுர்க்கன் என்னுமொரு இராட்டிர கூடன் அரசு செலுத்தி வந்த சாளுக்கியனை வென்றான் (757). இரு நூறு ஆண்டுகளுக்கும் மேலாகச் சாளுக்கியர் அனுபவித்து வந்த; தக்காணத்தின் இறைமை. இராட்டிரகூடர்களுக்குக் கைம்மாறியது. மேலும் இரண்டேகால் நூற்றாண்டுகளுக்கு இராட்டிரகூடர் பேரரசர்களாக விளங்கி வந்தனர்.

**சமயம்**

பெரும்பாலான இந்திய மன்னர்களைப்போல முற்கால சாளுக்கியரும், பிராமண சமயம் சார்ந்த இந்துக்களே யெனினும், பிற சமயங்களையும் அவர்கள் போற்றி ஆதரித்து வந்தனர். அவர்தம் ஆட்சிக்காலத்தில் பௌத்த சமயம் க்ஷீணித்து வந்தது. சமயச் சடங்குகள் நிறைந்த இந்து மதம் மிகச் சிறப்புற்று விளங்கியதோடு, பல இலக்கியங்கள் அச்சமயத்தின் பெருமைகளை எடுத்தியம்பலாயின. அழகான கோவில்கள் பல கட்டப்பெற்றன. தீவிர இந்து சமயவாதிகளும் குகைக்கோவில்களை, பூமியினின்றும் வெட்டி யெடுத்துப் புதுமையூட்டினர். இவ்வகையில் அவர்கள், போட்டி சமயத்தினரான பௌத்தர்களுக்கும் சமணருக்கும் கடன்பட்டிருந்தனர். ஆறும் நூற்றுண்டில் உருப்பெற்ற, பிராமண சமயம் சார்ந்த பாதாமி குகைக்கோவில்களில், அருமையான சிற்பங்கள் சில இன்றும் நல்ல நிலையிலேயே காணப்படுகின்றன. தென் மகாராட்டிரப்பகுதியில், சமண சமயத்தைப் பலர் பின்பற்றியிருந்தனர் எனத்தெரிய வருகிறது.

இராட்டிர கூடர்,மேற்கொண்ட போர்களை விரித்துரைப்பது அவசியமில்லை. ஹைதராபாத் மாகாணத்தின் எல்லோரா என்னுமிடத்திலுள்ள 'கைலாச' என்னும் குகைக்கோவில், முதலாம் கிருஷ்ணன் (அரசேற்றது கி.பி. 760) என்ற இராட்டிர கூட மன்னன் காலத்தில் உருப்பெற்றது. அம்மன்னனின் ஆட்சி இவ்வொருகாரணம் பற்றி நினைவுகூரத் தகுதியுடையதாகும். மனித முயற்சியால் எழுந்த மாபெருஞ் சாதனைகளில் இதுவுமொன்ருகும். ஆலயம் முழுவதும், ஒரு குன்றின் பகுதியிலிருந்து குடைந்தெடுக்கப்பட்டுள்ளது. ஏராளமான சிற்ப வேலைப்பாடுகளையுடைய இவ்வாலயம், எளிய முறையில் அமைந்ததைப் போன்றே தோற்றமளிக்கிறது.

**அமோக வர்ஷன்**

நெடுங்காலம் ஆட்சி செலுத்திய வரலாறு கண்ட மன்னர்களில் அமோகவர்ஷனும் (815–77) ஒருவன் ஒன்பதாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில், சுலைமான் என்ற அராபிய வணிகன், மேற்கிந்தியாவில் யாத்திரை செய்து வந்தான். இராட்டிரகூட மன்னனை, அவனது பட்டப்பெயரான 'பல்ஹாரா' என்னும் பெயரால் வணிகன் அறிவான். 'பல்ஹாரா' என்பது 'வல்லப ராய்' என்ற சொல்லின் சிதைந்த உருவமேயாகும். இந்திய மன்னருள் முதன்மையானவனுக இவன் கருதப்பட்டு வந்ததோடு, உலகின் கண்ணுள்ள பெருமன்னர்களான பாக்தாதின் கலீப் (கலிபா),

சீனப்பேரரசன், காண்ஸ்டான்டிநோபில் அல்லது ரூம் நாட்டுப் பெருமன்னன், ஆகியவர்களுடன் நான்காமவனுக இவன் கருதப் பட்டு வந்தான் எனச் சுலேமான் கூறுகிருர். சிந்துவில் குடியேறி யிருந்த அராபியருடன் இராட்டிரகூடர் மிக்க நட்புக் கொண்ட வராக விளங்கியதோடு, தமது மக்களை அந் நாட்டினருடன் வாணி பத்தொடர்வு கொள்ளுமாறு தூண்டிவந்தனர். செல்வத்தில் சிறந்து விளங்கியதோடு அமோக வர்ஷனிடம் ஏராளமான குதி ரைகளும் யானைகளுமிருந்தன. நிலையான பெரும்படையொன்றை யும் அவன் பராமரித்து வந்தான். தற்போது ஹைதராபாத் மாகாணத்திலுள்ள 'மால்கெட்' என்ற மான்யகேதம் அவனது தலைநகராக விளங்கியது. சமண சமயத்தை அவன் பின்பற்றி வந்ததோடு, திகம்பர அல்லது நிர்வாண சமணத்துறவிகளுக்கு அவன் மிக்க மரியாதை செலுத்தி வந்தான். ஒன்பதாவது, பத்தா வது நூற்ருண்டுகளில் தக்காணத்தில் சமணசமயம் மிகவும் தழைத்தோங்கி வந்தமையால், அப்பகுதியில் பௌத்த சமயத் தின் செல்வாக்குக் குறையலாயிற்று.

**கல்யாணி சாளுக்கியர்**

இரண்டாவது சாளுக்கிய குலமொன்றை கி. பி. 973 ஆம் ஆண்டில், 'கல்யாணியை'த் தலைநகரமாகக் கொண்டு 'தைலன்' அல்லது இரண்டாம் தைலப்பன் என்பவன் தொடங்கினன். இராட்டிரகூடர்களின் இறுதி மன்னனை அவன் அரசிழக்கச் செய்தான். இப்புதிய குல மன்னர்கள், அண்டையிலிருந்த அர சர்களுடன் போர்கள் பல நடத்தினர். சோழப்பெருமன்னன், மகாராசராசன் பதினொன்ரும் நூற்ருண்டின் தொடக்கத்தில், சாளுக்கிய நாட்டை மிகவும் கடுமையாகத் தாக்கினன். ஈவிரக்க மற்ற, ஆயிரக்கணக்கான படைவீரரைக் கொண்ட அவனது பெரும்படை, பிராமணரையும், பெண்டிரையும், குழந்தைகளையும் துன்புறுத்தியது.

கி. பி. 1052 அல்லது 1053-ல் சோமேஸ்வர சாளுக்கியன் அரசு செலுத்திவந்த சோழ மன்னன் இராசாதிராசனை வென்று வீழ்த்தினன். கிருஷ்ணு நதியின் கரையிலுள்ள கொப்பம் என்னு மிடத்தில் நடைபெற்ற இப்போர் மிகவும் பிரசித்திபெற்றது.[1]

**விக்கிரமாதித்தியன்**

கி.பி.1076-லிருந்து 1126-வரையிலும் அரசு செலுத்திய விக்கிர மாதித்தியன் அல்லது விக்ரமாங்கன், இம்மரபினருள் மிகச்

1 ப்ளீட் (எபிகிராபிகா இண் . வால் xii. பக். 298).

சிறந்து விளங்குகிறுன். அரசைப் பெறுவதற்குச் சகோதரன் ஒருவனுடன் அவன் போரிடவேண்டியதிருந்தது. வாழ்க்கையின் பிற்காலத்திலும் கிளர்ச்சி செய்த மற்றுமொரு சகோதரனுடன் போரிடவேண்டியதாயிற்று. தென் திசையிலுள்ள அரசுகளுடன் ஓய்வின்றி, போரை அவன் தொடர்ந்து நடத்திஞன். அக்காலங்களில் காஞ்சியில் பல்லவர்களை யடுத்துச்சோழர் ஆதிக்கம் பெற்று விளங்கினர். காஞ்சியைப் பல முறைகள் விக்ரமாங்கன் கைப்பற்றியதாகக்கூறப்படுகிறது. அண்டையிலுள்ளவருடன் போரிட்டு அவன் கண்ட வெற்றி மிகவும் குறிப்பிடத்தக்கதாக விளங்கியதால், தன் பெயரால் புதிய சகாப்த மொன்றை நிறுவுவதற்கு அவன் முற்பட்டான். ஆனுல் அதற்கு அதிக செல்வாக்கு கிடைக்கவில்லை. போரில் அவன் சாதனைகளும், மற்றும் காதல், வேட்டையாடுதல் ஆகியவைகளையும் உட்கொண்டு, காஷ்மீர் வாசியும் பிரதான வித்வானுமான பில்ஹணன் என்பவனுல், வரலாற்றுச் சார்புள்ள செய்யுளொன்று உருவாக்கப்பெற்றது. இக் காவியம், ஹர்ஷனின் சாதனைகளை விரித்துரைக்கும் பாணனின் கவிதையை நினைவுபுடுத்துகின்ற வகையில் அமைந்துள்ளது. தற்செயலாகச் சமண நூலகமொன்றில் இதைக் கண்டெடுத்த பூஃலர் என்பவர், அதை நன்கு ஆய்ந்து பதிப்பித்து வெளியிட்டுள்ளார். பண்டைய புராணங்களில் கண்டுள்ளது போல, விக்ரமாதித்தியனின் மனைவிகளில் ஒருத்தி அவனைச் சுயம்வர முறையில் தேர்ந்தெடுத்தாள் என்று சுவைமிக்க செய்தி கூறப்படுகிறது.

வங்காள எல்லைக்கப்பால் இந்து தர்ம சட்டத்தில் மிகவும் தேர்ச்சியுள்ள விஞ்ஞானேச்வரன் என்னும் வழக்கறிஞன் விக்ரமாதித்தன் ஆண்டுவந்த போது கல்யாணியில் வசித்து வந்தான் என்று தெரியவருகிறது. மிதாக்ஷரம் என்ற சிறந்த சட்டத் தொகுதியை அவனியற்றிஞன். விக்கிரமாதித்தியனின் திறமை மிக்க ஆட்சியில் செல்வம் செழித்தோங்கியிருந்தது.

**பிஜ்ஜல காலசூர்யன்**

பன்னிரண்டாவது நூற்றுண்டில் சாளுக்கியரின் செல்வாக்குக் குறைந்துவிட்டது. 1190 ஆம் ஆண்டிற்குப் பின்னர் பேரரசர்கள் பொலிவிழந்து குறுநில மன்னர்களாயினர். அவர்களது உடைமைகள் வேறு குலத்தினருக்குக் கைம்மாறின. தேவகிரியின் யாதவரும், துவாரசமுத்ர ஹோய்சளரும் அரசியலாதிக்கம் பெற்று விளங்கலாயினர். பிஜ்ஜல் காலசூர்யன் என்ற புரட்சி வீரன் ஒருவனும், அவனுடைய புதல்வர்களும் சின்னுட்களுக்குச் சாளுக்கிய நாட்டை ஆண்டுவந்தனர். 1167 ஆம் ஆண்டில் பிஜ்ஜலன் முடிதுறந்தான்.

**லிங்காயதப் பிரிவினர்**

அவன் ஆட்சி செலுத்திய சிறிது காலத்தில், லிங்காயதர் அல்லது வீரசைவ மரபினரின் எழுச்சி, கவனத்திற்குரிய நிகழ்ச்சியாக விளங்குகிறது. இன்றும் கானராப் பகுதிகளில், அதிலும் குறிப்பாக வணிகரிடையே அது செல்வாக்குடனிருந்து வருகிறது. இவ்வகைச் சமயக் கோட்பாட்டைக் கடைப்பிடிப்பவர்கள் சிவபிரானை லிங்க உருவில் வழிபட்டு வருகினறனர். வேதங்களை அவர்கள் ஒதுக்கி விடுவதோடு, மறு பிறப்புக்கொள்கையையும் அவர்கள் ஏற்பதில்லை. குழந்தை மணத்தை அவர்கள் விரும்புவதில்லை. விதவை மறுமணத்தை அவர்கள் வரவேற்கினறனர் அதனுடன் பிராமணரை மிகவும் வெறுத்து ஒதுக்குகின்றனர். இச்சமயக் கோட்பாட்டை உருவாக்கியவன் 'பஸவன்' என்னும் பிராமணனே என்றும் பிஜ்ஜலனின் அமைச்சனாக அவன் பணியாற்றினான் என்றும் கூறப்படுகிறது. மற்றும் சிலர், பஸவன் ஆதியில் சமணனாக இருந்தான் என்றும் கூறுவர். ஆனால் உருப்பெற்ற பின் இச்சமய மரபினர் சமண சமயத்தை மிகவும் வெறுத்தனர்.

**விஷ்ணுவர்த்தன ஹாய்சளன்**

மைசூர்ப்பகுதியை ஆண்டு வந்த 'ஹாய்சளர்' அல்லது 'பாய்சளர்,' மேற்கு மலைத்தொடரைச் சார்ந்த, சிறு குலத்தலைவனொருவனின் வழித்தோன்றல்களாவர். பித்தி தேவன் அல்லது 'பிட்டிகன்' என்பவனின் ஆட்சியில் இவர்கள் மிகவும் சிறப்பெய்தினர். பிற்காலத்தில், இவனுக்கு வழங்கிய பித்திதேவன் என்ற பெயராலேயே மக்கள் இவனை நன்கறிவர். சாளுக்கியரின் ஆதிக்கத்திற்குட்பட்டு சுமார் முப்பதாண்டுகளாக அரசு செலுத்திய பின் கி. பி. 1141 ஆம் ஆண்டில் இவன் மரணமடைந்ததாகத் தெரிய வருகிறது. கி. பி. 1190 ஆம் ஆண்டுவரை ஹாய்சளர் முழுமையாகத் தன்னாட்சி செலுத்தவில்லை. வழக்கமாக நடைபெறும் போர்களில் பிட்டிகன் பங்குபெற்றான். அவைகளை விரித்துரைக்க வேண்டிய தேவையில்லை. அவனது அரசெல்லை விரிந்தது. தீபகற்ப இந்தியாவின் சமயவாழ்வில் அவன் கொண்ட முக்கியப் பங்கு, இன்று நாம் அவனை நினைவுகொள்ள வேண்டியதாக அமைகிறது. மேலும், அவனது ஆட்சிக்காலத்திலும் அவனது வழித்தோன்றல்களின் ஆட்சியிலும், சட்டடம், சிற்பம் ஆகிய கலைத்துறைகளில் மிக அருமையான முனனேற்றம் காணப்பட்டது. ஆதி நாட்களில், பிட்டிகன் சமணசமயத்தைத் தீவிரமாகப் பின்பற்றினான். சைவ சமயத்தினரால் தூண்டப்பெற்ற சோழ மன்னர்கள், சமணசமயம் சார்ந்த ஆலயங்களை அழித்தனர் என்றும், பிட்டிகன் தனது அமைச்சனை கங்கராஜனை அவ்வாலயங்களைச் சீர்ப்

படுத்துமாறு பணித்தான் என்றும் கூறப்படுகிறது. அக்காலங்களில், பெரும்பாலான மன்னர்கள், அநேகமாக யாருவமே, சமயக்கொள்கையில் நடுநிலைமை வகித்தனர் என்று தெரிய வருகிறது. சில சமயங்களில், அரசியலை அடிப்படையாக்கொண்ட போர்களுக்கு, தனிப்பகுதியினரின் வெறுப்புணர்ச்சியும் காரணமாவதுண்டு. என்றாலும் சமயத்தின் பெயரால் கொடுமைகள் நிகழ்ந்தன. சோழர், சமண ஆலயங்களை அழித்தது பொருமையால் நிகழ்ந்தது என்று கொள்ளலாம். பதினொன்றும் நூற்றாண்டின் இறுதியில், அல்லது பன்னிரண்டாவது நூற்றாண்டின் தொடக்கத்தில், புகழ்பெற்ற இராமானுசர் என்னும் முனிவருக்கு பிட்டிகன் சீடனானன். இராமானுசர் அவனை வைணவ சமயத்தை ஏற்குமாறு தூண்டினர். இதன் பிறகு பிட்டிகன், விஷ்ணுவர்த்தனன் என்ற பெயருடன் வைணவ சமயத்திற்கு, அருந்தொண்டாற்றுவதில் முனைந்தான். ஈடிணையற்ற சிறப்பு வாய்ந்த பல ஆலயங்களையும் கட்டி முடித்தான். சமணவாதிகளை எண்ணெயாட்டுகின்ற கல்செக்கில் இட்டு விஷ்ணுவர்த்தனன் வதைத்தான் என்ற வைணவ மரபுக் கதைகளுக்கு ஆதாரமேயில்லை. சமணவாதிகளைச் சாதுர்யமாக இராமானுசர் வாதில் வென்றார் என்ற செய்தியையே வைணவர் இவ்வாறு மிகைப்பட உரைக்கின்றனர். வைணவ சமயத்தை ஏற்ற பின்னரும், பிற சமயங்களை அரசன் பேணி வந்தான் என்ற செய்திக்கு ஏராளமான ஆதாரங்கள் உண்டு. அவனது மனைவியருள் ஒருத்தியும், பெண்மக்களில் ஒருத்தியும் சமண சமயத்தையே கடைப்பிடித்தனர் என்று தெரியவருகிறது.

### ஹொய்சளரின் கலைப்பண்பு

பன்னிரண்டு பதின்மூன்றாவது நூற்றாண்டுகளில் விஷ்ணுவர்த்தனனும் அவனது வழித்தோன்றல்களும் எழுப்பிய ஆலயங்களைச் சமணரும், பிராமண சமயம் சார்ந்த இந்துக்களும் ஒருங்கே பயன்படுத்தி வந்தனர். இக்கோவில் நிர்மாணிப்பதில் கையாளப்பட்டுள்ள கலைஉத்தி மிகவும் போற்றுதற்குரியது. அறுகோண வடிவில் நட்சத்திரம் போன்ற மேடை அல்லது அடித்தளம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இவ்வடித்தளத்தில் அருமையான பல சிற்ப வேலைப்பாடுகள் காணப்படுகின்றன. அதிக உயரமற்ற பிரமிட் போன்ற மேல் தளம் அமைக்கப்பெற்றுள்ளது. அதனுச்சியில், பூத்தொட்டி போன்ற அலங்கார வேலைப்பாடும் காணப்படும். பல கட்டடங்களில் ஒன்று இரண்டு அல்லது நான்கு கோபுரங்களும் காணப்படுகின்றன. இதனால் ஒரே கட்டடத்தினுள் இரண்டு, மூன்று அல்லது

நான்கு ஆலயங்கள் இருப்பது போன்ற தோற்றமேற்படும். பொதுவாகக் கூறுமளவில் ஹாய்சளர் ஆலயம் முழுவதும், கணக்



சோமநாதபுரம் கோவில் — மைசூர் ஹாய்சளர்

கிலடங்காத, சிக்கலான சிற்பங்களுக்கு, பின்னணியாகக் கட்டப் பெற்றதாகவே தோன்றும். அடித்தளங்களில் சாரிசாரியாக அமைக்கப்பட்டுள்ள சிற்ப வேலைப்பாடுகளில், ஒன்றோடொன்று தொடர்பற்ற பல சிலைகள் அல்லது சிறு சிலைகள் காணப்படு கின்றன. ஹாளேபீட் அல்லது துவாரசமுத்திரம் என்னுமிடத் திலுள்ள கோவில் மிகவும் புகழ் பெற்றது. அதைப் போன்ற மற்றும் பல ஆலயங்களுமிருக்கின்றன. அங்குள்ள உருவச்சிலை கள் தரத்தில் மிகவும் உயர்ந்தவை. பல சிற்பிகளைக் கொண்ட கலைக்கூடத்தாலேயே நிர்மாண வேலை நடைபெற்றிருக்க வேண் டும். இந்தியச் சிற்பிகள் வழக்கமாகக் கையாளும் முறைக்கு முரணாகத் தாங்கள் உருவாக்கிய சிலைகளில் சிற்பிகள் பெயர் களையும் பொறித்திருக்கின்றனர். மைசூர்ப் பகுதியில் கலைத் திறன் இன்றும் மாய்ந்து விடவில்லை.[1]

### இராமானுஜர்

வைணவ சமயத் தத்துவ பேரறிஞரும் போதகாசிரியரு மாகப் பெரும் புகழுடன் விளங்கிய இராமானுஜர், காஞ்சி நகரில்

[1] இந்தியன் ஆண்டிக்குவேரி 1915, பக். 89.

கல்வி கற்றவரென்றும், அதிராஜேந்திர சோழன் காலத்தில் திருச்சிக்கருகிலுள்ள ஸ்ரீரங்கத்தில் வசித்து வந்தாரென்றும் அறிகிறோம். ஹாய்சள மன்னனை மதமாற்றியவரும் அவரேயாவர். சைவசமயத்தைத் தழுவியிருந்த மன்னரின் பகை காரணமாக அவர் மைசூர் இராச்சியத்திற்குச் செல்லவேண்டியதாயிற்று. அதிராஜேந்திரன், மரணமடைந்தபின் மன நிம்மதியடையும் வரை அவர் மைசூரிலேயே தங்கவேண்டியதாயிற்று. அதன் பிறகு ஸ்ரீரங்கம் திரும்பிய அவர் இறுதிக்காலம் வரையிலும் அங்கேயே வாழ்ந்திருந்தார். நெடுநாள் வாழ்ந்திருந்த அவரது ஜீவிய வரலாற்றைக் காலவரன்முறையில் அமைப்பது மிகவும் கடினமாகும். பன்னிரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் அவர் மரணமடைந்தார் எனக் கூறலாம். அவர் உலகிற்கு நல்கியுள்ள தத்துவம் அல்லது விசிட்டாத்துவைத சிந்தாந்தம், உபநிடதங்களுக்குரிய விளக்கத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆழ்ந்த பல கருத்துக்களையுடைய அதை ஆய்வதும், விவாதிப்பதும் இந்நூலில் அடங்காது. சங்கராச்சாரியரின் கருத்துகளை மறுத்துரைப்பவர்களில் இவர் முதன்மையானவராகக் கருதப்படுகிறார்.[1]

### பிற்கால ஹாய்சளர்

விஷ்ணுவர்த்தனனின் பெயரன் வீரபள்ளாளன் தனது குலப் பெருமையை மேலும் சிறக்கச் செய்தான். குறிப்பாக வடதிசையில் சென்று, தேவகிரி யாதவருடன் போரிட்டான் (கி. பி. 1191–2). இவன் கண்ட வெற்றிகளால், பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில், தக்காணத்தின் மிகச் சிறந்த குலமென்று யாதவர் சிறப்புற்று விளங்கினர். அலாவுதீன் கில்ஜியின் படைத் தலைவர்களான மாலிக் காபூரும், குவாஜா ஹாஜியும், 1310 ஆம் ஆண்டில் தக்காணத்தின்மீது படையெடுத்து, சின்னட்களே சிறப்புற்றிருந்த ஹாய்சள இராச்சியத்தை அழித்தனர். நாட்டைச் சூறையாடியதோடு அவர்கள் தலைநகரான ஹாளேபீடு அல்லது துவார சமுத்திரத்தையும் அழிக்கத் தொடங்கினர். சில நாட்களுக்குப்பின் இறுதியாக 1326 அல்லது 1327ஆம் ஆண்டில் இஸ்லாமியரின் படையொன்று தலைநகரைச் சின்னாபின்னபடுத்தியது. அதற்குப்பின், மேலும் சிறிது காலம், ஹாய்சள மன்னர்கள் பிரதேச அரசர்களாகவே விளங்கி வந்தனர்.

[1] இவருடைய கோட்பாடுகளை அறிந்து கொள்வதற்கு, டி. இராஜகோபாலாச்சாரியார் என்பவரது 'ஸ்ரீஇராமானுஜர்' பகுதி II என்ற நூலைப் பார்க்கவும்.
சென்னை, நடேசன் அண்டு கம்பெனி. என். டி.

**தேவகிரியின் யாதவர்கள்**

பிற்காலங்களில் அவுரங்கபாத் என்ற பெயரில் வழங்கிய, தேவகிரி அல்லது தியோகீர் நாட்டு யாதவர்கள் சாளுக்கிய இராச்சியக் குறுநில மன்னர்களின் வழித்தோன்றல்களாவர். நாம் முன்னர்க் குறித்துள்ளவாறு, பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில், அவர்கள் ஹாய்சளருடன் போட்டியிட்டனர். பதின் மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் 'சிங்கணன்' என்பவன் இக்குலத்தில் மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்கினன். குஜ ரத் மற்றும் சில பகுதிகளின் மீது போர் தொடுத்து அவன் பரந்த இராச்சியமொன்றைச் சமைத்தான். அது சின்னாட்களே நிலைத்திருந்தது. 1294 ஆம் ஆண்டில் அரசு செலுத்தி வந்த மன்னனைத் தாக்கிய அலாவுதீன் கில்ஜி, ஏராளமான பொருள் களைக் கொள்ளையடித்தான். தக்காணத்தில் தன்னாட்சி செலுத் திய மன்னர்களில் இறுதியான இராமச்சந்திரன் 1309 ஆம் ஆண் டில் மாலிக்காபூருக்கு அடிபணிந்தான். அவனது மருமகனை ஹரபாலன் அன்னியனை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யத் துணிந் தான். கொடுமைமிக்க இஸ்லாமிய வெற்றி வீரன் இவ்வாறு துணிவு பெற்ற ஹரபாலனை உயிருடன் தோலுரிக்குமாறு ஆணை யிட்டான் (1318). அக்கொடுமை யாதவரின் ஆட்சிக்கு முற்றுப் புள்ளியிட்டது.

இந்து சாம்ராச்சியமான விஜயநகரம் 1336 ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்டது. கிருஷ்ணா ஆற்றிற்கு தெற்கில் பரந்த ஓர் இராச்சியமாகப் பரவிற்று. தென் திசை இஸ்லாமிய இராச்சியங்களைப் பற்றி எடுத்துரைக்கும் போது, இதைப்பற்றி மேலும் விரிவாகப் பின்னுமோர் அதிகாரத்தில் கூறுவோம்.

## 2. தென்கோடியிலுள்ள தமிழ்ப் பேரரசுகள்

**பல்லவரின் எழுச்சி**

பகுதி இரண்டின் மூன்றாவது அதிகாரத்தில் தமிழக அரசு களின் தொடக்க கால, கிறிஸ்து சகாப்தத்தின் முதலிரண்டு நூற்றாண்டுக்கால, வரலாற்றை ஒருவாறு கண்டோம். தொடர்ச்சி யான வரலாறு ஒன்று புனைவதற்குத் தேவையான செய்திகள் மேலும் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரே நமக்குக் கிடைக் கின்றன.

கரிகால சோழன், சிங்களநாட்டுக் கயவாகு, ஆகியோருக்குப்பின், வரலாற்று அரங்கில் பல்லவர்களே முதன்முதலாகத் தோன்றுகின்றனர். நான்காம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சமுத்திரகுப்தன் காஞ்சி நாட்டுப் பல்லவ மன்னன் ஒருவனுடன் போரிட நேர்ந்தது. சதவாஹனரின் வீழ்ச்சிக்குப்பின், இக்குலம் மூன்றாம் நூற்றாண்டில் தோன்றியிருக்கக்கூடும் என்ற கருத்தை மறுத்துரைப்பதற்குரிய காரணமெதுவுமில்லை.

இந்திய வரலாற்றில், பல்லவர் ஆட்சியைப் பற்றிய செய்திகள் மிகவும் சிக்கல் நிறைந்தவைகளாகக் காணப்படுகின்றன. அவர்களை பஹ்லவர் என்றும், வடமேற்கிலிருந்து இங்குக் குடியேறிய பார்த்தியர், அல்லது பாரசீகர் என்ற கருத்திற்கு, இச்சொற்களுக்கிடையே நிலவுகின்ற உச்சரிப்பு ஒன்றே காரணமாக விளங்குகிறது. மேலெழுந்தவாரியாக உள்ள இக்காரணத்தை ஏற்கத் தகாதது என்றே தள்ளிவிடலாம். அவர்களைப்பற்றி நாம் அறிகின்ற செய்திக் குறிப்புகளிலிருந்து, தீபகற்ப இந்தியாவைச் சார்ந்த ஒரு குடியினராகவோ, வகுப்பினராகவோ அல்லது மரபினராகவோ அவர்களைக் கருதுவதற்கு வழியுண்டு. அவர்களைக் குறும்பரின் வழித்தோன்றல்கள் என்றோ அல்லது அவர்களுடன் நெருங்கிய தொடர்புடையவரென்றோ கருதலாம். தமிழ் மரபில், ஆடு மேய்க்கும் தொழிலிலீடுபட்டிருந்த குறும்பர் என்ற குடியினரைப் பற்றி அதிமாகக் கேள்விப்படுகிறோம். சில சந்தர்ப்பங்களில் பல்லவர் 'காடுவெட்டிகள்' என அழைக்கப்படுகின்றனர். இதனின்று அவர்களைக் கள்ளர் மரபினர் என்று கருதுவதற்கும் இடமேற்படுகின்றது. இக்கள்ளர், வெல்வதற்கரிய போர்த்திறன் மிக்கவரென்றும் 'தீரமும், தளரா உறுதியும் போர் வெறியும்' கொண்டவரென்றும், சமீபகாலம் வரையிலும் கருதப்பட்டு வருகின்றனர். திருச்சி, தஞ்சை, மதுரை மாவட்டங்களுக்கிடையில் அமைந்திருக்கும் புதுக்கோட்டை இராச்சியத்தின் அரசன் கள்ளர் குலத்தைச் சார்ந்தவன். பல்லவ மன்னரின் வழித்தோன்றல் என அவன் பெருமை கொண்டாடுகிறான்.[1]

[1] 'பல்லவர் பண்டைய நாகர் குலத்தைச் சார்ந்தவரென்று, சீனிவாச அய்யங்கார் கூறுகிறார். அவருக்குப் பிரதேசச் செய்திகளில் நல்ல அனுபவம் உண்டு. ஆஸ்டிரலேஷியன் வகையைச் சார்ந்த நீக்ரிடோப் பிரிவினர் என அவர் நாகர்களைக் கருதுவர். பிற்காலங்களில் அதில் கலப்படம் நேர்ந்ததாகவும் தெரியவருகிறது. சென்னையை அடுத்துள்ள மாவட்டத் தொகுதி அக்காலங்களில் தொண்டை மண்டலம் என்று வழங்கியது. அதுவே அவரது உறைவிடமென்று கூறப்படுகிறது. தஞ்சையும், திருச்சியும் பிற்காலங்களில் கைப்பிடிக்கப்பட்டன. பல்லவரின் படைவீரர் பெரும்பாலும் பள்ளிகள் அல்லது குறும்பர்களையே கொண்டிருந்தது. தமிழ் மூவேந்தரின் தலைமுறைப் பகைவர்களாகப் பல்லவர் விளங்கினர். தென் ஜில்லாக்களில் புகுந்த அன்னியர் எனப்

பிரதேச மொழி நூல்களில், பல்லவர் வரலாறு ஓரளவு வழங்கி வருகின்றதென்றாலும், பொதுவாக மக்கள் அதை நினைப்பதில்லையென்றே கூறவேண்டும். 1840 ஆம் ஆண்டில் அக்குலத்தைச் சார்ந்த கல்வெட்டுகள் கண்டெடுக்கப்பட்டன. அதுவரையிலும் ஐரோப்பியர் பல்லவ வரலாற்றுச் செய்திகளை அறிந்து கொள்வதற்கு வழியில்லை. அந்நாள் முதல், புலவர்களின் பொறுமை மிக்க ஆராய்ச்சியால், பரவலான பல்லவ வரலாற்றுச் செய்திகள் தெளிவாயின. இம் முயற்சியால் இந்திய வரலாற்றில் பல்லவருக்குரிய இடமளிப்பதற்கு வகையேற்படலாயிற்று. எவ்வகையிலும் வரலாற்றில் ஓர் உயர்ந்த இடத்தையே பல்லவர்கள் பெற்றிருக்கின்றனர்.

**தமிழக அரசுகளின் எல்லை**

பழமை வாய்ந்த தமிழக மூவேந்தரின் அரசெல்லைகள், பல தலைமுறைகளாக மரபுச் செய்திகளால் வரையறுக்கப்பட்டுள்ளன. அவற்றை மக்கள் ஏற்று மதிக்கின்றனர். ஆனால், உண்மையில் இவ்வெல்லைகள். காலத்திற்குக்காலம் பெரு அளவில் மாறுபட்டிருந்ததெனலாம்.

மரபுச் செய்திகளுக்கேற்ப, பாண்டிய நாடு, வடதிசையில் தெற்கு வெள்ளாறு நதியிலிருந்து (புதுக்கோட்டை) குமரிமுனை வரையிலும், கிழக்கில் கொரமண்டல் கரை (சோழமண்டலம்) யிலிருந்து, 'சிறந்த பெருவழி' வரையிலும் பரவியிருந்தது. 'சிறந்த பெருவழி' என்பது தென் கேரளம் அல்லது திருவிதாங்கூருக்கு வழியமைக்கும் அச்சன்கோவில் கணவாயைக் குறிக்கும். தற்கால மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களும், திருவிதாங்கூரின் பகுதிகளும் அதிலடங்கியிருந்தன.

மிகவும் வழக்கிலிருந்து வரும் மரபுச் செய்திகளுக் கேற்பக் கொரமண்டல் கரையோரமாக நெல்லூரிலிருந்து புதுக்கோட்டை வரையிலும் சோழநாடு பரவியிருந்ததென்றும், அங்குப் பாண்டிய நாட்டுடன் இணைந்தது என்றும் தெரிய வருகிறது. மேற்குத் திசையில் குடகு நாட்டு எல்லை வரையிலும் சோழ நாடு எட்டியிருந்தது. இவ்வாறு நாம் வரையறுக்கும் எல்லைக் கோட்டிற்குள்,

---

பல்லவரைக் கருதுவது மரபு. 'பழவன்' என்ற தமிழ்ச் சொல்லுக்குக் 'கயவன்' என்றே பொருள். சோழ, பாண்டியப் பகுதிகளில் குடியேறிய பல்லவப் பிரஜைகளின் ஒரு பகுதியினருக்கு, 'கள்ளர்' அல்லது 'திருடர்' என்றே பெயர் வழங்குகிறது. இவர்கள் யாவரும் 'நாகர்' இனத்தைச் சார்ந்தவரேயாவர். இத்தகைய குறிப்புகள், நாம் நூலில் பல ஆண்டுகளுக்கு முன்னரே கூறியுள்ள கருத்தை உறுதிசெய்கின்றன. 'பல்லவர்கள்' — ஜோடுப்ரெல் என்ற நூலைப் பார்க்கவும்- பாண்டிச்சேரி-1917.

சென்னையும் அதைச் சுற்றியுள்ள மாவட்டங்களும், மைசூர் இராச்சியத்தின் பெரும் பகுதியும் அடங்கியிருந்தன. ஆனால் பண்டைய இலக்கியக் குறிப்புகள், சென்னைக்கு நூறு மைல்களுக்கு வட மேற்கிலுள்ள புலிகாட், வேங்கடம் அல்லது திருப்பதி மலைகளுக்கப்பால் தமிழ்நாட்டெல்லை பரந்திருந்ததாகக் கூறுவதில்லை. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சீன யாத்திரிகன் ஹுயூன்-சாங் பிரயாணம் செய்து வந்தபோது, சோழருக்குப் பல தலைமுறைகளாகச் சொந்தமாகவிருந்த பகுதிகளைப் பல்லவர் கைப்பற்றியிருந்தனர் என்றும், சோழரின் பிரதான இராச்சியம் வளங்குன்றிய சிறு எல்லைக்குள் அடங்கியிருந்ததாகவும் தெரிய வருகிறது. இச்சிறுபகுதி தற்காலக் கடப்பா மாவட்ட எல்லையை ஒத்திருந்தது.

சேர அல்லது கேரள நாட்டில், சந்திரகிரி ஆற்றிற்குத் தெற்கிலுள்ள மேற்குமலைத் தொடரின் கரடுமுரடான பகுதிகளே முக்கியமாக அடங்கியிருந்தன. சந்திரகிரி ஆறு மங்களூருக்கு அருகிலுள்ள கடலில் சங்கமமாகிறது. துளு, மலையாளம் ஆகிய மொழிகளைப் பேசி வருகின்ற மக்கள் வாழ் பகுதிகளுக்கு எல்லையாகச் சந்திரகிரி ஆறு விளங்குகின்றது.

பல்லவ சாம்ராச்சியத்தின் எல்லைக் கோடுகளைப் பற்றிய விரிவான மரபுச் செய்திகள் இல்லை. ஆதியில் அவர்கள் தொண்டை நாட்டில் குடியேறியிருந்தனர். சென்னையை அடுத்துள்ள மாவட்டங்கள் தொண்டை நாட்டில் அடங்கியிருந்தனவென்பதை நாம் நன்கறிவோம். தங்கள் கையில் சிக்கிய பகுதிகள் முழுவதையும் அவர்கள் ஆண்டு வந்தனர். காஞ்சி அல்லது காஞ்சீவரம் என்னும் அவர்களது தலைநகரம் சோழமண்டலத்தில் மையமாக அமைந்திருந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் தான் தோன்றிகளான மராட்டியரைப் போலவே, ஆட்சி நடத்திவந்த பழைய மன்னர்களை வெற்றிகண்டு, ஆக்கிரமிப்புக் கொள்கையைக் கடைப்பிடித்தும் மற்றும் அச்சுறுத்தியும், பல்லவரும் சிறப்படைந்திருக்க வேண்டுமென வரலாற்றுச் சான்றுகளிலிருந்து நாம் அறியலாம்.

### பல்லவ வரலாற்றுச் சுருக்கம்

ஆறாவது நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து எட்டாவது நூற்றாண்டின் இடைப்பகுதி வரையிலும், சுமார் 200 ஆண்டுகளுக்குப் பல்லவர் தென்னகத்தே மிகச் சிறந்து விளங்கினர். இக்கால எல்லைக்குள் அரசு செலுத்தி வந்த புராதன அரச மரபினர் யாவரும் பல்லவருக்குக் கீழ்ப்படிந்து ஆண்டு வந்தனர்

எனத் தெரியவருகிறது. ஆருவது நூற்ருண்டின் இறுதியில் அரசு செலுத்திய சிம்ம விஷ்ணு பல்லவன், பாண்டிய, சேர, சோழ மன்னர்களேயும் சிங்கள அரசரையும் தான் வென்று விட்டதாகப் பெருமை கொண்டாடினன்.

பல்லவரின் புகழ் சிறந்தோங்கியிருந்த காலத்தில் வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு, செங்கற்பட்டு அல்லது சென்னே, திருச்சிராப்பள்ளி, தஞ்சை மாவட்டப் பகுதிகள், அவர்களது நேரடி ஆட்சியில் அடங்கியிருந்தன. வடக்கில் ஒரிசா எல்லேயி லிருந்து தெற்கில் பொன்னி ஆறு அல்லது தெற்குப் பெண்ணுறு வரையிலும், கிழக்கில் வங்காள குடாக்கடலிலிருந்து மேற்குத் திக்கில் சேலம், பெங்களூர் வழியாகப் பீரார் வரையிலும் தோராயமாக வரையும் நேர் கோட்டெல்லேக்குள் உள்ள பகுதிகளும் பல்லவரது ஆட்சியிலடங்கியிருந்தன.[1]

ஏழாம் நூற்ருண்டின் முற்பகுதியில் கிருஷ்ணு, கோதாவரி ஆறுகளுக்கு இடையிலுள்ள வேங்கி மாகாணத்தைப் பல்லவர் சாளுக்கியருக்கு விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று. அதை அவர்கள் மீண்டும் பெறவே இல்லே. ஆனுல் அந்நூற்ருண்டிலேயே அவர்களது புகழ் உச்சநிலேயை அடைந்திருந்தது. அக் காலத்திலேயே, அவர்கள் அழிவற்ற கலேப்படைப்புகளே அமைத்து, என்றும் நம் நினேவுகளில் நீங்காத இடம் பெறுகின்ற வகையமைத்துக் கொண்டனர். ஒன்பதாவது நூற்ருண்டின் இறுதியில் அரசுரிமை, பல்லவரிடமிருந்து சோழருக்குக் கைமாறி விட்டது என்று உறுதியாகக் கூறலாம்.

பல்லவ வரலாற்றுச் சுருக்கத்தை. இவ்வாறு பரவலாக எடுத்துக்கூறிய பின்னர், தெளிவாகப் பல்லவர் சாதனேகளேப் பற்றி நாமறியும் செய்திகளே எடுத்துரைப்பதற்கு நாம் முற்படுவோம்.

**மகேந்திரவர்மன்**

முதலாவது மகேந்திரவர்மன் (கி.பி. 600-25) நாம் முன்னர்க் குறித்த வெற்றி வீரனுன சிம்மவிஷ்ணு என்பவனின் மகனுவான். பொதுமக்களின் நலனுக்கென அவன் செய்த பொதுப்பணிகள் அவனுக்கு நிலேயான இடமொன்றைத் தேடி அளிக்கின்றன. ஆர்க்காட்டிற்கும் அரக்கோணத்திற்கும் இடையிலுள்ள மகேந்திர

[1] இம்பீரியல் கஜெட்டியர் எஸ். வி. செங்கற்பட்டு மாவட்டம் திருச்சி, தஞ்சை மாவட்டங்கள் தொண்டை நாட்டில் அடங்கியிருக்க வில்லே.

வாடி நகரமும் அதற்கருகிலுள்ள நீர்த்தேக்கமும், மற்றும் பல குகைக் கோவில்களும் இவனால் எழுப்பப்பட்டவைகளேயாகும். மகேந்திரவாடி தற்போது மிகவும் சீரழிந்த நிலையிலிருந்து வருகிறது. கி.பி. 610-ல் சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலகேசி அவனைப் போரில் வென்றதோடு, பல்லவனிடமிருந்து வேங்கி நாட்டையும் பறித்தான். அங்கு, சாளுக்கிய மரபினரின் கிளையொன்று நிறுவப்பெற்று, பல நூற்றாண்டுகள் அரசு செலுத்தி வந்தது.

#### நரசிம்மவர்மன்

ஆற்றல் மிக்க மன்னன் பலரைக் கொண்ட பல்லவ குலத்தில், மகேந்திரனுக்குப்பின் அரசேற்ற நரசிம்மவர்மனை (கி. பி. 625–45) மிகவும் கீர்த்தி வாய்ந்தவனாகவும், நல்லரசனாகவும் கருதலாம். கி.பி. 642-ஆம் ஆண்டில் அவன் சாளுக்கியரின் தலைநகரமான வாதாபி (பதாமி)யைக் கைப்பற்றினான். ஒருகால், அவன் இரண்டாம் புலகேசியைப் போரில் கொன்றிருக்கவும் கூடும். இந்நிகழ்ச்சிக்குப்பின், தமிழ் நாடு மட்டிலுமன்றி, சின்னாட்களுக்குத் தக்காணத்திலும் பல்லவர்கள் மிகச்சிறந்து விளங்கலாயினர்.

#### காஞ்சியில் ஹுயூன்–சாங்

இவ்வெற்றிக்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன் ஹுயூன்–சாங் காஞ்சி நகருக்கு விஜயம் செய்தான். அவன் மேற்கொண்ட பிரயாணத்தின், தெற்கெல்லையாகக் காஞ்சி விஜயத்தைக் கருதலாம். சிங்களத்தில் உள்நாட்டுப்போர் நிகழ்ந்து வந்தமையால் கடல் கடந்து அந்நாட்டிற்குள் பிரயாணம் தொடர இயலவில்லை. சிங்களத்தீவைப் பற்றியும், பாண்டிய நாட்டைப் பற்றியும் அவன் நமக்களிக்கின்ற குறிப்புகள், காஞ்சி நகரத்தில் அவன் சேகரித்த தகவல்களேயாகும். அரசு செலுத்திய மன்னனின் பெயரையோ அல்லது பல்லவன் என்ற குலப்பெயரையோ யாத்திரிகன் கூறுவதில்லை. காஞ்சிப் பேரரசையும் அவன் தமிழ் நாடு என்றோ அல்லது திராவிடம் என்று மட்டிலுமே குறிக்கிறான். நிலம் வளமிகுந்திருந்ததென்றும், நன்கு பயிரிடப்பெற்று வந்ததென்றும் அவன் கூறுகிறான். நெஞ்சுறுதி, வாக்குநாணயம், பொதுநலக் கருத்து. கல்வி கற்பதில் ஆர்வம், ஆகிய நற்பண்புகள் மக்களிடம் அமைந்திருந்ததையும் அவன் குறிப்பிட்டுள்ளான். பேச்சிலும், எழுத்திலும் வடதிசையிலிருந்து மொழி வேறுபட்டதாக அவன் கூறுகிறான். இன்றுபோல், அன்றும் தமிழ் மொழியையே அவர்கள் பேசி வந்தனர். மாலக்கோட்டை அல்லது பாண்டிய நாட்டின் தலைநகரம் ஐந்து அல்லது ஆறு மைல்கள் சுற்றளவுள்ள

தாக இருந்ததென அவன் குறித்துள்ளான். ஒருகால், மதுரை நகரையே அவன் அவ்வாறு வர்ணித்திருக்கக்கூடும். காஞ்சி நகரின், அமைப்புத் திட்டத்தை அறிந்து தற்கால ஆய்வாளர் ஒருவர் மிகவும் வியப்பெய்துகிறார்.

[பேராசிரியர் கெட்டிஸ் என்பவர் எழுதுவதாவது]

*பெரிய ஆலயங்களும், செல்வத்திலும் வகையிலும் மாறுபட்ட பல சிறு ஆலயங்களும் இந்நகரில் நிறுவப் பெற்றுள்ளன என்ற ஒரு காரணத்தால் மட்டிலும் அந்நகரம் அழியாப்புகழ் பெற்று விடவில்லை. மிகவும் நன்முறையில் வகைப்படுத்தியும், சங்கிரகமாகத் தொகுத்தும் அளிக்கப்பட்டுள்ள நகர் நிர்மாணத் திட்டத்தின் இன்றியமையாமையை அவர்கள் உணர்ந்திருந்த செய்தி என்னை மிகவும் பரவசப்படுத்துகிறது. இத் திட்டம், விசாலமான கம்பீர நகரமொன்றிற்கு வழி செய்வதோடு அந்நகர வாழ் மக்களின் கலையுணர்ச்சிக்குப் போதிய சுதந்திரமளிப்பதாகவும் அமைந்திருக்கின்றது. இந்திய நாட்டின் பிற பகுதிகளிலோ அல்லது உலகின் பிற பகுதிகளிலோ, இதைப் போன்று ஜீவித்திருக்கின்ற ஈடான திட்டமொன்றை என்னால் கூறவியலாது.*[1]

பல்லவர் காலத்துக் கட்டடக் கலையின் உயர் பண்பிற்கு இது ஒரு சிறந்த நற்சான்றிதழாக விளங்குகிறது. அதை உறுதிப்படுத்துகின்ற வகையில் பல்லவரின் சிற்பங்களும் கட்டடங்களும் அமைந்திருக்கின்றன. அவ்விராச்சியத்தில் நூற்றுண்டுக்குமதிகமான பௌத்த மடாலயங்கள் இருந்தன. அதில், ஸ்தவிராப் பிரிவைச் சார்ந்த, பத்தாயிரத்திற்குமதிகமான பௌத்த பிட்சுகள் வசித்து வந்தனர். பௌத்த சமயச் சார்பற்ற ஆலயங்களும் ஏராளமாக இருந்தன. அவைகள் பெரும்பாலும் திகம்பர சமண சமயம் சார்ந்தவைகளெனத் தெரிகிறது. சில கட்டடங்களை அசோகன் கட்டியதாகக் கூறப்படுகிறது. பௌத்த விஹாரங்கள் பலவற்றை இந்து சமயத்தினர் கைப்பற்றி, மீண்டும் புதுப்பித்திருக்கின்றனர். இதனால் அவற்றில் பல நம் கவனத்திற்கு எட்டாமலேயே இருந்து வருகின்றன.

1915ஆம் ஆண்டில் சில மணி நேரங்கள் தேடியலைந்த பின்னர் திரு. டி. ஏ. கோபிநாதராவ் என்பவர் காஞ்சீபுரத்தில் புத்தபிரானின் உருவச்சிலைகள் ஐந்தைக் கண்டெடுத்தார். அவைகளில் இரண்டு இந்துக்களின் காமாட்சி கோவிலிலிருந்து கண்

[1] 'பண்டைய தக்காணத்தில் நகர நிர்மாணத் திட்டம்' பக்கம் 78—சி. பி. வெங்கிட்ராமய்யர் எழுதியது—சென்னை 1916.

டெடுக்கப்பட்டவை.[1] ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டால், பல்லவ நாட்டில் பௌத்த சமயம் தழைத்திருந்ததை மெய்ப்பிக்கும் மேலும் பல சான்றுகள் கிடைக்கக்கூடும்.

**பல்லவர் கலை**

மாமல்லபுரம் அல்லது மஹாபலிபுரம் என்ற நகரத்தை நரசிம்ம பல்லவன் நிறுவினன்; அதில் அற்புதமான 'ரதங்கள்' அல்லது 'ஏழு பகோடாக்கள்' என்ற கலைத் தொகுதிகளைப் படைத்தான். ஒவ்வொன்றும் ஒரு சிறு கற்பாறையிலிருந்து குடைந்தெடுக்கப்பட்டிருக்கிறது. அதே இடத்தில் அவனது சிற்பிகள் கற்பாறைகளை அடித்தளமாகக்கொண்டு, அதில் பல அற்புத உருவங்களைச் செதுக்கியுள்ளனர். சாதாரணமாக, 'அர்ஜுனனின் தியானம்' என்று வழங்கப்பெறும் கற்பனை செறிந்த அழகிய சிற்பத்தை, அங்குள்ளவைகளில் மிகச் சிறந்ததென குறிப்பிடலாகும். மற்றொரு வகையாகக் கூறப்படும் விளக்கம் பொருத்தமுடையதேபோம் தோன்றினும்தவறானது[2]. நரசிம்மனையடுத்து அரசெய்தியவர்களும் சிற்பக்கலையை ஆதரித்து வந்தனர். சாளுக்கியர் படையெடுக்கத் தொடங்கியதும் கி.பி. 670 ஆம் ஆண்டில் கலை முயற்சியைக் கைவிட வேண்டியதாயிற்று.

காஞ்சியிலும் பிற இடங்களிலும் காணப்படும், அருமையான ஆலயங்கள் யாவும் பிற்காலங்களில் எழுந்தவை. எட்டாவது நூற்றாண்டின் முற்பகுதிருல் ராஜசிம்மனின் ஆட்சி காலத்திலேயே அவை யாவும் கட்டப்பெற்றன.

இந்திய கட்டடச் சிற்பக் கலைகளின் வரலாறு தென்னாட்டைப் பொறுத்த வரையில், ஆறாவது நூற்றாண்டின் இறுதியில் பல்லவர் ஆட்சியிலேயே தொடங்கியிருக்க வேண்டுமெனத் தெரிய வருகிறது. அதற்கு முன்பாக, காலத்தால் அழித்துவிடக் கூடிய பொருள்களையே கலைஞர்கள் உபயோகித்து வந்தமையால், அவை அழிந்துவிட்டன. மேலும், விளக்கமான ஆராய்ச்சியில் ஈடுபடுவதற்கில்லை. கட்டடம் மற்றும் சிற்பம் ஆகிய துறைகளில், பல்லவர் கையாண்ட உத்திகள் இந்தியக்கலை உத்திகளில்

[1] இந்தியன் ஆண்டிக்குவேரி, 1915, பக்கம் 127.

[2] 'பல்லவர் காலப் பழம் பொருள்கள்' வால்யூம் i, பக்கம் 75, 'இந்திய சிங்கள நாட்டு நுண்கலை வரலாறு' 1911, பக்கம் 222, பிளேட் xvi பழைய விளக்கத்தையே நான் ஏற்றிருக்கிறேன். அதுவே பொருத்தமுடையதாக விருக்கிறது (இ. ஆண். 1917 பக்கம் 54-57)

சிறப்புடைய, கவனத்திற்குரிய ஒரு வகையாகும் என்று கூறலாம். வட இந்தியாவில், மரத்தை உபயோகிப்பதை விடுத்து, கல் உபயோகம், கி.மு. மூன்றுவது நூற்றுண்டில், அசோகனது ஆட்சியில் ஏற்பட்டதெனலாம். தெற்கில், இம் மாறுதல் ஏற்படுவதற்கு மேலும் ஆயிரமாண்டுகள் பிடித்தன. இவ்வொரு செய்தி, இந்திய வரலாறு மிக நீண்டிருப்பதற்கு ஏற்ற விளக்கமாக இருக்கிறது. சிறுகச் சிறுக மாறுதல்கள் ஏற்பட்டமைக்கும், இம்மாறுதல்கள் நாடு முழுவதும் பரவியதில் காலதாமதமேற்படுவதற்கும் இதுவே காரணமாகவும் அமைகின்றது.

### பல்லவர் ஆட்சி முடிவுடைதல்

கி. பி. 740 ஆம் ஆண்டில், சாளுக்கியன் ஆட்சிபுரிந்துவந்த பல்லவ மன்னனைச் செம்மையாகப் போரில் முதுகிடச் செய்த நிகழ்ச்சியைப் பல்லவ ஆதிக்க வீழ்ச்சியின் தொடக்கமாகக் கருதலாம். எனினும், பல்லவரை அடுத்து, சாளுக்கியர் செல்வாக்குப் பெற்று விடவில்லை. கி. பி. 753-ல் இராட்டிரகூடர்களுக்கு அவர்கள் இடமளிகக வேண்டியதாயிற்று. ஒன்பதாம் நூற்றுண்டின் இறுதியில், பாண்டியருடன் நட்புப் பூண்ட சோழர், பல்லவரை ஐயத்திற்கிட மின்றி வெற்றிகண்டனர். பதின்மூன்றும் நூற்றுண்டு வரையிலும், ஆங்காங்கே பல்லவ குலத்தைச்சார்ந்த குறுமன்னர் அரசாண்டு வந்தனர். அப்பட்டப்பெயர் கொண்ட, சில பிரபுக்கள் பிற்காலத்திலும் வாழ்ந்திருந்தனர் என்று தெரியவரும். பதினேழாம் நூற்றுண்டிற்குப்பின் பல்லவர் குலம் அல்லது மரபு என்பது முற்றிலும் அழிந்து விட்ட தென்றே கூறலாம். கள்ளர், பள்ளிகள், மற்றும் வெள்ளாளர் ஆகியோரது உடம்பில் இன்றும் பல்லவர் குருதி ஓடுவதாகக் கூறலாம்.

### சமயம்

பல்லவ மன்னருள் பெரும்பாலானவர் பிராமண சமயம், சார்ந்த இந்துக்களாவர். அவர்களில், சிலர் விஷ்ணுவிடம் அதிக பக்தி கொண்டவர்களாகவும், மற்றும் பலர் சிவபக்தர்களாகவு மிருந்தனர். மகேந்திரன் தொடக்கத்தில் சமணசமயத்தில் பற்றுள்ளவனுகை இருந்தான். பிரசித்திபெற்ற தமிழ் முனிவன் ஒருவன் அவனுக்குச் சைவசமயத்தில் பற்று உண்டாகுமாறு செய்தான். வழக்கமான சமய வெறியுடன், மகேந்திரன் தென் ஆர்க்காட்டிலுள்ள சமண விகாரமொன்றை அழித்தான்.' இந்தியாவின் புராதன தலைநகரமான பாடலிபுத்திரத்தின் பெயர் மிகப்பழங் காலத்திலேயே இச்சமண விகாரத்திற்குச் சூட்டப்பட்டிருந்த

தெனத்தெரியவருகிறது. ஹு-யூன்சாங் சான்று வழங்குவதிலி ருந்து ஏழாம் நூற்றாண்டில் நிர்வாண அல்லது திகம்பரச் சமண மரபினர் ஏராளமாக இருந்தனர் என்றும், மிக்க செல்வாக்குடன் விளங்கினர் என்றும் தெரியவருகிறது. அவன் கூற்றிலிருந்து, மரபினர் பலரும் பொதுவில் நட்புக்கொண்டு வாழ்ந்திருந்தனர் என்றே தெரிய வருகிறது. ஆனால் இந்நிலைக்கு விதிவிலக்குகளும் இருந்திருக்கக்கூடும். தற்காலங்களில், பல்லவ சாம்ராச்சியம் தழைத்திருந்த பகுதிகளில், சைவ சமயமே தழைத் தோங்கியிருக் கிறது.

## முதலாம் பராந்தக சோழன்

கி. பி. 907 ஆம் ஆண்டிலிருந்து சோழர் காலவரன் முறை தெளிவு பெறுகிறது. அந்நாளில் பல்லவரை வெற்றிகண்ட ஆதித் யனின் மகனை முதலாம் பராந்தக சோழன் அரசேற்றான் எனத் தெரிய வருகிறது. நாற்பத்திரண்டு ஆண்டுகள் அரசு செலுத்திய பராந்தகன் போர் வெறியும் பேராசையும் கொண்டவன். பாண் டிய மன்னனை நாடுகடத்தி, தலைநகரமான மதுரையைக்கைப் பற்றி, சிங்களத்தின் மீதும் போர் தொடுத்தது பாரந்தகனின் சாதனைகளில் ஒரு சில வாகும். தமிழ் நாட்டு மன்னருக்கும் சிங் களத்தீவிலுள்ள அரசர்களுக்குமிடையில் இடைவிடாது போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. இந்நிகழ்ச்சிகள் இந்தியாவிலுள்ள ஏராளமான, கல்வெட்டுகளிலும், தீவிலுள்ள ஏடுகளிலும் இடம் பெற்றிருக்கின்றன.

## பேரரசன் இராசராசன்

சோழ மன்னர்களுள், பேரரசன் இராசராச-தேவனையும் அவனது மகன் முதலாம் இராசேந்திர சோழ தேவனையும் மிகச் சிறந்தவர்களாகக் குறிப்பிடலாம். கி. பி. 985ஆம் ஆண்டில் இராசராச தேவன் பட்டமெய்தினன். கி. பி. 1035-ல் இராசேந் திர சோழ தேவனின் ஆட்சி முற்றுப்பெற்றது. இவ்விடைக் காலத்திலுள்ள, ஐம்பது ஆண்டுகளைத் தமிழகத்தின் மீது சோழர் செல்வாக்குப் பெருகியிருந்த முக்கிய காலமாகக் குறிப்பிடலாம். தங்களுக்குப் போட்டியாக முளைத்தவரின் பிரதாபங்களைப் பாண் டியர் மனமுவந்து என்றுமே ஏற்றதில்லை. அதை நெடுங்காலமாக அவர்கள் எதிர்த்து வந்தனர். எனினும், சற்றேறக்குறைய, சோழரின் பேரரசிற்கு அவர்கள் முற்றிலும் தலைவணங்க வேண்டி யதாயிற்று.

இராசராசனின் சாதனைகளையும், சற்றேறக்குறைய அவனைப்போன்ற சக்தி வாய்ந்த அவனது மகன் சாதனைகளையும்

கல்வெட்டுகள் பலவற்றில் பொறித்திருக்கக்காணலாம். இக் கல்வெட்டுகள் இராசராசன் ஆட்சி தொடங்கிய எட்டு ஆண்டுகளுக்குப்பின் எழுந்தவையென அறிகிறோம். அவன் சேரர் நாட்டையே முதன் முதலாகக் கைப்பற்றினன் என்று தெரிய வருகிறது.[1]

' ஏழாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் பல்லவரிடமிருந்து கைப்பற்றப்பட்ட கீழைச்சாளுக்கியரின் இராச்சியமான வேங்கி யும், குடகு, பாண்டிய நாடு, தக்காணத்திலுள்ள சமநிலத்தில் பெரும்பகுதி ஆகியவை இராசராசன் ஆட்சி தொடங்கிப் பதி னன்கு ஆண்டுகளுக்குள் கைப்பற்றப்பட்டபின் சில ஆண்டுகளில் மலபார் கடற்கரையிலுள்ள 'கொய்லூன்' அல்லது கொல்லம் என்னுமிடத்தையும், கலிங்கத்தையும், சிங்களத்தையும் வென் ரூன். கி. பி. 1005ஆம் ஆண்டு சமீபித்ததும் அவன் வாளை உறையிலிட்டு, எஞ்சிய நாட்களை அமைதியாகக் கழித்தான். தள்ளாத வயதை அடைந்ததும், பட்டத்திற்குரிய அரசகுமார னைத் தன்னுடன் அரச வியவகாரங்களில் பங்கு கொள்ளுமாறு செய்தான். தென் இந்திய அரச குல மரபினருள் இவ்வழக்க மிருந்ததாகத்தெரிய வருகிறது.[2] இராச ராசனிடம் வலிமை மிக்க கடற்படையொன்று இருந்தது. 'லக்கடைவ், மால் டைவ்' தீவுகள் உட்பட, பல தீவுகளை அவன் கைப்பற்றியிருந்தான். அவன் இறந்த போது, தன் மகனுக்கு, மதுரை. திருநெல்வேலி நீங்கலாக உள்ள, சென்னை மாகாணம் முழுவதையும் விடுத்துச் சென்றான்.

### இராசேந்திர சோழதேவன் I

தகப்பனைக் காட்டிலும் அதிகமாக, முதலாம் இராசேந்திர சோழ தேவன், போரில் திறம் பெற்றிருந்தான்; வங்காளக் குடாக்கடலைக் கடந்து, கடற்படையொன்றை அனுப்பினன். இதனல் சின்னட்களுக்கு, பெகுவையும், சுமத்ரா, மலேயா, அந்த மான், நிக்கோபார் தீவுகளையும் ஆக்கிரமிப்பது சாத்திய மாயிற்று. கி. பி. 1023 ஆண்டிற்குச் சமீபமாக வட இந்தியாவின் மீது படையெடுத்துச் செல்லத் துணிந்த அவன், வங்காளம், பீஹார் ஆகிய பகுதிகளை யாண்டு வந்த பாலர் குல மன்னனை மதிபாலனை முறியடித்தான். இச்சாதனையைக் கொண்டாடுகின்ற

1 'இந்தியாவின் ஆதி வரலாறு' பக்கம் 465-ல் குறித்திருப்பது போலச் சேரர் கடற்படையை அல்ல. டி.. ஏ. கோபிநாத ராவ் அவர்கள் 'திருவிதாங் கூர் புதை பொருளாராய்ச்சி வரிசை' வால்யூம் ii, பக்கம் 3-5-ல் குறித் திருப்பதற்கேற்ப இக்கருத்து மாறுதல் ஏற்கப்பட்டுள்ளது.

2 அரசேற்ற நாட்களைத் தெளிவாக அறிய வியலாமலிருப்பதற்கு இவ் வழக்கமே காரணமாக அமைகின்றது.

முறையில், 'கங்கை-கொண்ட' என்ற பிருதைச்சூடிக்கொண்டான் அதனுடன் திருச்சி மாவட்டத்தில், 'கங்கைகொண்ட சோழபுரம் என்ற புதிய தலைநகரையும் தோற்றுவித்தான். அந்நகரை, விசால மான செயற்கை ஏரி ஒன்றும், மாபெருங்கோவிலொன்றும், வியப் பிற்குரிய அரண்மனையொன்றும் அலங்கரித்தன. சிதைந்த அந் நகரை நன்முறையில் வர்ணிப்பதற்கோ அல்லது விளக்கு வதற்கோ முயற்சிகள் மேற்கொள்ளப்படவில்லை. கட்டடச் சாத னங்களுக்காக, அவை பெரும்பாலும் அழிக்கப்பட்டுவிட்டன.

**பிற்காலச் சோழர்கள்**

கி. பி. 1052 அல்லது 1053 ல், சாளுக்கியருடன் பொருத போது, கொப்பம் என்னும் போர்க்களத்தில் இராசேந்திரனின் மகனை இராசாதி இராசன் இறந்ததாக முன்னர்க் குறித்தோம். பத்து ஆண்டுகளுக்குப்பின்னர்க் கடுமையான மற்றுமொரு போர் மூண்டது. அதில் சாளுக்கியர் முறியடிக்கப்பட்டனர்.

கி. பி. 1074 ஆம் ஆண்டில் கொலை செய்யப்பட்ட அதிராசேந் திர மன்னன், முனிவர் இராமானுசரின் வைரியாக விளங்கினன் என முன்னர்க் கூறினோம். இவனை யடுத்து, பட்டமேறிய முதலாம் இராசேந்திர குலோத்துங்கன் பிற்கால சோழருள் மிகச் சிறந்து விளங்கினன். அவன் அதிராசேந்திரனின் மகனல்லனென்று தெரியவருகிறது. வேங்கி நாட்டுக்கீழைச் சாளுக்கியருடன் அவர்கள் தொடர்பு கொண்டிருந்ததால், அவர்களுக்குச் சாளுக் கியச் சோழர் என்ற பெயர் வழங்கியது. நாற்பத்தொன்பது ஆண்டுகளுக்கும் மேலாக அரசு செலுத்திய இராசேந்திரன், ஏராளமான பகுதிகளைக் கைப்பற்றினன். கி. பி. 1086 ஆம் ஆண்டில் நிலவருமானக் கணக்கெடுப்பு ஒன்றை மிகப்பரந்த அள வில் மேற்கொண்டான். அவ்வாண்டிலேயே, ஆங்கிலோ-நார் மானிய, டூம்ஸ்டே பட்டியலும் தயார் செய்யப்பட்டது.

பதின்மூன்றும் நூற்றாண்டில், சோழரின் செல்வாக்குச் சிறு கச்சிறுக குறையலாயிற்று. அந்நூற்றாண்டின் பிற்பகுதியில் மீண்டும் வலிமை பெற்றெழுந்த பாண்டியர், சோழரின் ஆதிக் கத்தை வேரறுத்துத் தள்ளினர்.

1310 ஆம் ஆண்டில் இஸ்லாமியரின் படையெடுப்பும், அதன் பின் இந்து சாம்ராச்சியமான விஜய நகரத்தின் எழுச்சியும், பண்டைய சோழர் குலத்தையும், அவர்களது நிறுவனங்களையும் வேரறுத்தன.

**சோழரின் ஆட்சி நிர்வாகம்**

சோழப்பேரரசின் ஆட்சி நிர்வாகம், மிகச்சிறந்த முறையில் திட்டமிட்டு அமைக்கப்பெற்றிருந்தது. மிகப்புராதன காலத்தி லேயே அது நிறுவப் பெற்றிருக்கவேண்டும். கி. பி. 800– க்கும் 1300-க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுந்த பல கல்வெட்டுக்களி லிருந்து, நிர்வாகத்தைப் பற்றிய ஐயமற்ற குறிப்புகள் பல நமக் குக் கிடைக்கின்றன. முதலாம் பாரந்தகனின் சில குறிப்புகளும், பத்தாவது நூற்றுண்டின் முற்பகுதியில், கிராமச்சபைகள் இயங் கிவந்த முறையைப்பற்றிய முழு விவரங்களையும் நமக்கு அளிக் கின்றன. நிர்வாகம் என்ற கட்டடம் முழுவதும், கிராமம் அல்லது கிராமத் தொகுதிகள் என்ற அஸ்திவாரத்தின் மேலேயே எழுப் பப்பட்டிருந்தன. ஒரு தொகுதி அல்லது கிராமங்களின் இணைப்பு (கூற்றம்) என்பதை ஆராய்வது, தனிப்பட்டதோர் கிராம நிர் வாக ஆராய்ச்சியைக் காட்டிலும் எளிதானது. ஒவ்வொரு 'கூற்றம் அல்லது கிராமத்தொகுதியும் (சில பகுதிகளில் 'கோட்டம்' என்று வழங்கியது) தனது ஸ்தல விவகாரங்களை, ஒரு குழுவின் (மகா சபை) உதவியோடு கவனித்து வந்தது. இக்குழுவினருக்கு ஏரா ளமான அதிகாரம் வழங்கப் பெற்றிருந்தது. குழுவின் நடவடிக்கை களை அரசாங்க அலுவலர் (அதிகாரிகள்) தணிக்கை செய்து வந்த னர். குழுவின் அங்கத்தினர்களைப் பதிவோலை முறையில் தேர்ந் தெடுப்பதற்கென விசேஷ முறைகள் வகுக்கப் பெற்றிருந்தன. அங்கத்தினர் ஓராண்டுகாலம் பதவி வகித்தனர். ஒவ்வொரு தொகுதிக்கும் தனியான கருவூலம் அமைந்திருந்தது. கிராமத்தி லுள்ள விளை நிலங்களின்மீது அவர்களுக்குப் பூரண உரிமை யுண்டு. சில சந்தர்ப்பங்களில் அவைகளை விற்று விடுவதற்கும் அவர்களுக்கு முழு அதிகாரம் உண்டு. ஏரிகள், நந்தவனங்கள், நீதி மற்றும் இவை போன்ற ஒவ்வொரு துறையின் அலுவல்களை யும் கவனிப்பதற்கென, சிறு குழுக்கள் அமைக்கப்பெற்றிருந்தன.

சில கூற்றங்கள் அல்லது யூனியன்கள் கொண்ட பகுதிக்கு 'நாடு' என்றும், பல நாடுகள் சேர்ந்த மாகாணத்திற்கு, 'மண்ட லம்' என்றும் பெயர்கள் வழங்கின. பேரரசு முழுவதும் ஆறு மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. தோராயமாகத் தஞ்சை திருச்சி மாவட்டங்கள் அடங்கிய பகுதிக்குச் 'சோழ மண்டலம்' என்ற தனிப்பெயர் வழங்கியது.

பெயரளவில், விளை நிலங்களின் மகசூலில், ஆறில் ஒரு பகுதி நிலவரியாக அரசாங்கத்திற்குச் செலுத்தப்பட்டது. ஆனல் பல வகையான சிறு வரிகளும் ஏராளமாக விதிக்கப்பட்டு வந்தன. உண்மையில் விதிக்கப்பெற்ற வரி, நிலத்தின் தரத்திற்கேற்ப

மாறுபட்டிருந்தது. பேராசிரியர் என். கே. சாஸ்திரி அவர்களின் கருத்துப்படி, மிகவும் செழிப்பான நிலத்தின் மீது விளைபொருளில் மூன்றில்-ஒரு பங்கு வரியாக வகுலிக்கப்பெற்றது. வரியைப் பொருளாகவோ அல்லது பொன்னுகவோ செலுத்தலாம். பொதுவில், பொருளாகச் செலுத்துகின்ற வழக்கமே அதிகமாக இருந்தது. வழக்கிலிருந்த தங்க நாணயங்களில் 28 கிரெயின் மூசுத் தங்கம் கொண்ட 'காசு' என்பது அளவையாக விளங்கியது. வெள்ளியினுலான நாணயங்கள் பண்டையநாட்களில் தென்பகுதிகளில் அதிகமாக வழக்கிலில்லை என்றே தெரிய வருகிறது. நிரந்தரமான அளவை முறைகளைக் கையாண்டு, விளை நிலங்கள் ஒழுங்காக மதிப்பிடப்பெற்றன. இவ்வாறு சேகரிக்கப்படுகின்ற புள்ளி விவரங்களும் பட்டாவில் பதிவாயின.

படையமைப்பைப் பற்றிய விவரங்களை அறியக் கூடவில்லை. வலிமை மிக்க, கடற்படை யொன்று இருந்ததெனத் தெரிய வரு-



நடனமாடும் சிவன்; தென் இந்தியா, சோழர் காலம்.

கிறது. நன் முறையிலமைந்த நீர்ப்பாசனத் திட்டங்கள் ஏராளமாக நிறைவேற்றப்பட்டன. உதாரணமாகக் கங்கைகொண்ட சோழபுரத்தில் அமைந்த செயற்கை ஏரியின் கரை பதினறு மைல்கள் நீள முள்ளதாக இருந்தது. காவிரி (காவேரி) போன்ற பெரிய ஆறுகளின் குறுக்கே பேரணைகளையும், சிறு அணைக்கட்டுகளையும் அமைக்கின்ற கலையை, அவர்கள் முற்றிலும் உணர்ந்திருந்தனர் என்பது தெளிவாகத் தெரிய வருகின்றது. பொது-

கல வசதிக்கான மிகப்பெரிய கட்டடங்கள் நன் முறையில் திட்ட மிட்டு உருவாக்கப் பெற்றிருந்தன. தஞ்சை ஆலயத்தின், கோபுர உச்சியில் அமைந்திருக்கின்ற தனிக்கல் ஒன்று 25½ சதுர அடிகள் விஸ்தீரணமுள்ளது. அதன் நிறை 89 டன் என மதிப்பிடப்படு கிறது. நான்கு மைல் நீளமுள்ள சாரமொன்றின் உதவியோடு அக்கல் கோபுர உச்சிக்கு எடுத்துச் செல்லப்பட்டதெனப் பரம் பரைச் செய்திகள் வாயிலாக அறிகிறோம். இவ்வகையான கடுமையான வேலைகளைச் செய்து முடிப்பதற்கு, அடிமைகளை வற் புறுத்தி வந்தனர் எனத் தெரிய வருகிறது. முக்கியமான பெருஞ்



இராசராசேசுவர ஆலயம், தஞ்சைச் சோழர்.

சாலைகள் நன்கு பராமரிக்கப்பட்டுவந்தன. இவ்வாறு, நமக்குக் கிட்டுகின்ற சிறு குறிப்புகளின் சுருக்கத்திலிருந்து, நாட்டின் நிர் வாகம் நன்கு திட்ட மிடப் பெற்றிருந்த தென்பதும், நன் முறை யில் இயங்கி வந்ததென்பதும் நன்கு விளங்கும். கிராமச்சபை களுக்கு ஏராளமான சலுகை வழங்கப்பட்டிருந்ததால், மத்திய அரசிற்கு மக்களிடையில் நன் மதிப்பேற் படுவதற்கு நல்ல வாய்ப் புக்கிட்டியது. மக்களும், தங்களது தோழர்களின் ஆணைகளுக் குப் பெரு மதிப்பளித்து, கடைப்பிடித்தனர். பொதுமக்களின் செல்வாக்கு, கிராமச் சபைகளை ஊக்குவித்தது. சோழர்குலத்து டன் பதினன்காவது நூற்றுண்டின் முற்பகுதியிலேயே இம் முறை யான நிர்வாகமும் வழக்கொழிந்து விட்டதெனத் தெரிய வரு கிறது. அது முதற்கொண்டு, பழங்கால நினைவுகள் யாவும் அழிந்து விட்டன.

**சோழர் கலை**

தென் இந்தியாவின் கலை வரலாறு, மிகவும் கவனத்திற்குரியது 'கலை' என்று குறிப்பிடும்போது, பொதுவில் கட்டடக்கலையையும் சிற்பக்கலையையுமே அதிகமாக நினைவில் கொள்ளுகின்றோம். குறிப்பிடுவதற்குரிய கலையழகு மிக்க சித்திரங்கள் மிகச் சொற்பமாகவே நமக்குக் கிடைக்கின்றன[1]. இப்பகுதியில் வளர்ந்த கலை முழுவதும் நாட்டு மக்களின் முயற்சியாலேயே உருவாகியது. அன்னியரின் செல்வாக்கு இத் துறையில் இல்லை. இயற்கையான முறையில், பன்னெடுங்காலமாக இக் கலை வளர்ந்து, தேர்ச்சியடைந்துள்ளது. ஆதியில், உருப்பெற்ற கலைப் படைப்புகள் காலத்தால் அழியக்கூடிய பொருளால் ஆனவை. எனவே, அவை நம் கைகளுக்குக் கிடைப்பதில்லை. அவை முழுவதும் அழிந்து விட்டன. அவைகளைப்பற்றி விரித்துரைப்பதும் இயலாததொன்றாகும். ஆனால் அத்தகைய படைப்புகள் ஏராளமாக இருந்தன என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. அவைகளை உருவாக்கிய முறைகளைப் பின்பற்றியே, பிற்காலப் படைப்புகள் எழுந்தன எனலாம். பல்லவரின் ஆலயங்களையும், மாமல்லபுரச் சிற்பங்களையும், தோற்றுவித்த கலைஞர்களை எக்காரணம் பற்றியும் கலைத்துறையில் தொடக்க நிலையில் உள்ளவர்கள் என்று கருதுவதற்கில்லை. முழுப் பயிற்சி, அவர்கள் முன்னரே பெற்றிருக்க வேண்டும். தக்க தருணம் வாய்த்ததும் தங்கள் கருத்துகளை அவர்கள் கல்லில் வடித்தனர். தமக்குப் புதிதாகக் கிடைத்த மூலப்பொருளை, பன்னெடுங்காலமாகத் தாங்கள் பெற்றிருந்த பயிற்சியோடு இணைத்து வெற்றி கண்டனர். சோழர்காலக் கலை வளர்ச்சியைப் பல்லவர் காலக்கலை வளர்ச்சியின் தொடர்ச்சியென்றே கூறலாம். இவ்விரு காலங்களுக்கு மிடையில் குறிப்பிடத்தக்க இடைவெளிகள் இல்லை. ஏற்பட்ட மாறுதல்கள், காலப்போக்கில் இயற்கையாகவே நிகழ்ந்தவையாகும்.

சோழர் காலக் கோயில்களில் இதுவரை நாம் அறிந்தவற்றில் பழமையாக விளங்குவது தென் ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள தாடபுரம் கோவிலே ஆகும். அது பத்தாவது நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கவேண்டும். தஞ்சை ஆலயமும், கங்கைகொண்ட

[1] எம். ஜோ. டூப்ரெயில் என்பவர் ஒரு சில பல்லவ கலைச் சித்திரங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். ஐந்தாவது நூற்றாண்டில் உருப்பெற்ற சித்திரக் கலைத் தொகுதியொன்று சிங்களத்திலுள்ள 'சிகிரியா' என்னுமிடத்தில் கிடைக்கிறது. நுண் கலை வரலாறு பிளேட்டுகள் (lviii—lx). கூரைகளில் எழுதப் பெற்ற சோழர் காலச் சித்திரங்கள் சில, அண்மையில் தஞ்சையிலுள்ள பெரிய ஆலயத்திலிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ளன.

சோழபுர ஆலயமும், கட்டடச் சிறப்பிற்கு மிகவும் பெயர் பெற்றவையாகும். அவை சற்றுப்பின் காலத்தைச் சேர்ந்தவையெனத் தெரியவருகிறது. அக்கோவில்களின் அமைப்புக் கண்களுக்கு மிகவும் இரம்மியமாக விளங்குகிறது. கோவிலில் அமைந்திருக்கும் கம்பீரமான உயர்ந்த கோபுரம், கட்டட அமைப்பில் பெரும் பகுதியாக விளங்குவதே இதற்குக் காரணமாகும். பிற்காலச் சோழ கலைஞர், கர்ப்பகிருகத்தின் அளவைக் குறைத்து விட்டனர். ஆலயத்தின் தலைவாயில்களையும் கோபுரத்தையும் அழகு செய்வதிலேயே தங்கள் கவனத்தை அவர்கள் அதிமாகச் செல விட்டனர். இதற்கு ஓர் உதாரணமாகச் சிதம்பரத்திலுள்ள ஆலயத்தைக் குறிப்பிடலாம். மிகக் கம்பீரமாகக் காட்சியளித்தபோதும் இம்முறையைக் கையாண்டதால் முக்கிய விளைவு எதுவும் இல்லை.

சிங்களத் தீவிலுள்ள இந்து சமயக் கோவில்களையும் முற்காலச் சோழர் வகையைச் சார்ந்தவைகளாகவே கருதவேண்டும். அக்கலை உத்தி, இங்குச்சிறு கட்டடங்களை அமைப்பதற்குக் கையாளப்பட்டிருக்கிறது.

கங்கைகொண்ட சோழபுர ஆலயத் தட்டுகளில் செதுக்கப் பெற்றுள்ள சிற்பங்கள் தரத்தில் மிகவும் உயர்ந்தவை. ஜாவா நாட்டின் கலைத்திறனை அவை நினைவூட்டுகின்றன. இதைப் போன்ற சிற்பங்களைப் பிற இடங்களிலும் காணலாம்.

**சமயம்**

சோழ அரசர்கள் சிவபிரானை வழிபட்டுவந்தனர். இதற்கு அக்குல மன்னருள் விதிவிலக்கு இல்லை என்றே கூறலாம். வழக்கமான இந்திய மன்னர்களின் முறைப்படி பிற சமயத்தினரையும் அவர்கள் ஆதரித்து வந்தனர். ஒவ்வொரு சமயங்களில் இந்நற்பழக்கத்தைக் கைவிடவேண்டிய நிலையும் ஏற்படுவது உண்டு. சோழர் படையொன்று ஹாய்சள நாட்டிலுள்ள சமண விகாரங்களை அழித்ததையும், சோழ மன்னனொருவன் இராமானுஜரை நாடு கடத்தியதையும் இதற்கு உதாரணங்களாகக் கூறலாம்.

இக்குலத்தினர் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பேராதரவு அளித்தனர் என்று கூறப்படுகிறது.

**பாண்டியர் அரசு**

எஞ்சியுள்ள தமிழக மன்னர்களான பாண்டியரையும், சேரரையும், அதிகமாக நாம் கவனிக்க வேண்டுவதில்லை. ஏழா

வது நூற்றுண்டில், ஹுயூன்–சாங் நேரில் பாண்டிய நாட்டிற்கு விஜயம் செய்ததாகத் தெரியவில்லை. நிர்வாகத்தின் தரத்தைப் பற்றியோ அல்லது பாண்டிய நாட்டின் தலைநகரைப் பற்றியோ, அவன் எவ்விதத் தகவல்களையும் அளிப்பதில்லை. மதுரைமா நகர் பாண்டிய நாட்டின் தலைநகரமாக இருந்திருக்கவேண்டும். அந்நாட்களில், அரசு செலுத்தி வந்த பாண்டிய மன்னன் ஒரு கால் காஞ்சி பல்லவனின் சிற்றரசனுக விளங்கியிருக்க வேண்டும். பௌத்த சமயம் அநேகமாக வலுவிழந்து விட்டது. மடாலயங் கள் பல மிகவும் சிதைந்திருந்தன. நகரின் கீழ்த்திசையில், ஒரு மடாலயத்தின் பாழடைந்த சின்னங்களிருப்பதாகவும் அம்மடா லயமும் ஸ்தூபியும் அசோகனது சகோதரன் மகேந்திரனுல் கட்டப்பட்டவையென்றும்[1], அதை அவன் காணலாமென்று சீன யாத்திரிகனுக்குச் செய்தி அறிவிக்கப்பட்டது. அம் மடாலயம் இருந்த பகுதியைத் தேடும் முயற்சி பலனளிக்காதென்றே அஞ்சு கிறேன். இதுவரையிலும், பாண்டிய நாட்டிலுள்ள பௌத்த சமயம் சார்ந்த சின்னங்களைக் கண்டுபிடிக்கும் முயற்சி மேற் கொள்ளப்படவில்லை. இந்து சமயம் சார்ந்த கோவில்கள் ஏராளமாக இருந்தன. திகம்பர சமண சமயத்தைச் சார்ந்தவர் களும் பலரிருந்தனர்.

### சமயத்தின் பெயரால் சமணர் துன்புறுத்தப்படுதல்

ஹுயூன்-சாங் தெற்கில் தங்கிச் சென்ற சின்னுட்களுக்குப் பிறகு, பாண்டிய நாட்டிலுள்ள சமணர் குணன், சுந்தரன், அல்லது நெடுமாறன் பாண்டியன் என்ற மன்னனுல் மிகவும் கொடுமைக் குள்ளாயினர். சுந்தரன், ஆதியில் சமணனுக இருந்தான் என்றும், சோழ அரசியொருத்தியால் சைவ சமயத்திற்கு மாற்றப்பட்டான் என்றும் தெரிய வருகிறது. பிற சமணரும் தன்னைப்போன்று சமய மாறுதலை ஏற்க வேண்டுமென்று அவன் விரும்பினுன். ஆனுல் அவர்கள் இணங்காததால், தான் சமய மாறியதையடுத்துப் பல கொடுஞ் செயல்கள் புரியத் தலைப்பட் பட்டான். 8,000-க்கும் அதிகமானவரின் தோலுரிக்கப்பட்ட தென மரபுச் செய்திகள் கூறுகின்றன. இச்செய்தி, இன்றும் பலவழிகளில் நினைவு கூரப்படுகிறது. இத் துக்க சம்பவம் நிகழ்ந்த இடத்தில் இன்றும் மதுரையிலுள்ள இந்துக்கள்,

[1] சிங்களத்தில் பௌத்த சமயத்தைப் பரப்புவதற்கு, மதுரையைக் கேந்திரமாக மஹேந்திரன் கொண்டிருக்கக் கூடும் என்று நான் எண்ணு கிறேன். பௌத்த சமய நூல்கள் அறிவிக்கும் கட்டுக் கதைகள் நம்பத் தகாதவையென்று நினைக்கிறேன்.

'சமணரின் தோலுரிக்கப்பட்டதைத்' திருநாளாகக் கொண்டாடுகின்றனர். (உத்ஸவம்)[1]

**பிற்காலப் பாண்டியர்கள்**

பாண்டிய மன்னர்கள் இடைவிடாது பல்லவருடன் பொருது வந்தனர். ஒன்பதாவது நூற்றாண்டின் இறுதியில் சோழருடன் சேர்ந்து, தலைமுறையாக எதிரிகளாக விளங்கியவர்களை முறியடித்தனர். சிங்களத் தீவுடனும், பாண்டியர் அடிக்கடி போரிட வேண்டியதாயிற்று. பதினொன்று, பன்னிரண்டாவது நூற்றாண்டுகளில் மனமின்றி, சோழரின் ஆதிக்கத்திற்கு உட்பட வேண்டியதாயிற்று. எனினும், பதின்மூன்றாவது நூற்றாண்டில், அவர்களது நிலை சற்றுச் சீர்திருந்தியது. 1310 ஆம் ஆண்டில் இஸ்லாமியரின் படையெடுப்புகள் தொடங்கியதும், தமிழகத்தில் செல்வாக்குப் பெற்று விளங்கியவர் பாண்டியரே யாவர். அதன் பிறகு, அவர்கள் நாளடைவில் பிரதேசக் காவலராக மாறினர்.

**மார்க்கோ போலோவின் விஜயம்**

சீர்பெற்ற காலத்தில் பாண்டிய நாட்டின் நிலையை; வெனிஸ் நகர யாத்திரிகன் மார்க்கோ-போலோவின் குறிப்புகளிலிருந்து அறியலாம். 1288 ஆம் ஆண்டிலும், 1293 ஆம் ஆண்டிலுமாக இரு முறைகள், தாம்பிரவருணி நதிக்கரையிலுள்ள காயலுக்கு, மார்க்கோ போலோ விசயம் செய்தான். அந் நகரம் அக் காலத்தில், செல்வத்திலும் வணிகத்திலும் சிறந்திருந்தது. அராபிய நாட்டிலிருந்தும் சீனத்திலிருந்தும் ஏராளமான கப்பல்கள் அங்கு வருவதுண்டு. அக்கப்பல்களில் ஒன்றில் வெனிஸ் நகரத்தான் வந்து சேர்ந்தான். 'காயலை' (கேயல்) 'கம்பீரமான பெருநகர'மென்று அவன் சித்திரிக்கிறான். அங்கு வாணிபம் பெருகியிருந்தது. மன்னனிடம் ஏராளமான செல்வமிருந்தது. அவன் விலைமிக்க ஆபரணங்களை அணிந்திருந்தான். ஆடம்பரமான அவையை அரசன் நடத்தி வந்தான். அன்னியருக்கும் வணிகருக்கும் அவன் அதிகச் சலுகைகள் காட்டி வந்ததால், அவர்கள் அந்நாட்டிற்கு விசயம் செய்வதில் மிக்க மகிழ்ச்சி கொண்டனர். நாட்டையும் நேர்மையுடன் நன்கு அரசாண்டு வந்தான்.

நாளடைவில், நிலப்பகுதி உயர்ந்து வந்தமையால் பழைய காயல், கடலிலிருந்து இரண்டு மூன்று மைல்களுக்கு அப்பால்

1 டி. ஏ. கோபிநாதராவ் 'இந்துக் கடவுளரின் லட்சணக் குறிப்புகள்' வால்யூம் i, முகவுரை பக்கம் 55, சென்னை 1914.

சென்று விட்டது. பண்டைய நாட்களில் மக்கள் வசித்து வந்ததை விளக்கும் சின்னங்களைப் பல மைல்களுக்கு இன்றும் காணலாம். ஆனால் நகரமிருந்த நிலப்பகுதியில் தற்போது மீன வர் சிலரின் குடிசைகளே காணப்படுகின்றன.[1] அதிர்ஷ்ட தேவதையின் அற்புத லீலைகளை விளக்குவதற்கு, இதைக் காட்டி லும் சிறந்த மேற்கோள் இல்லை. சிதைந்த கட்டடங்கள் பல மண்ணில் புதையுண்டிருக்க வேண்டும். அவைகளை வெளிப் படுத்துகின்ற புதை பொருளாராய்ச்சி மேற்கொள்ளப்பட் வில்லை. 'காயலிலும்', அதைக் காட்டிலும் பழமை வாய்ந்த அண்டையிலுள்ள 'கொற்கை என்னுமிடத்திலும், சமணசமயம் சார்ந்த சிலைகள் பல கண்டெடுக்கப்பட்டுள்ளன.

### சேரர் அரசு

சேரர் அரசின் இடைக்கால வரலாறு மிகவும் தெளிவு குன்றியதாக இருக்கிறது. சோழகுல மன்னர்களில் வலிமை மிக்கவர் சிலர், சேரரின் மீது செல்வாக்குப் பெற்று விளங்கினர். கி. பி. 990ஆம் ஆண்டில், இராசராச சோழனது ஆட்சியில் பெரு அளவில் படைகொண்டு சேரரை வெல்லுகின்ற முயற்சி மேற் கொள்ளப்பட்டது. தற்காலத் திருவிதாங்கூர் மாகாணத்தின் பெரும்பகுதி அவ்விராச்சியத்தில் அடங்கியிருந்ததெனலாம். சோழராட்சியைப் போலவே இப்பகுதியிலும் கிராமச் சபை களுக்கு நிர்வாகத்தில் மிகுந்த செல்வாக்கிருந்தது. இப்பகுதி யைச் சேர்ந்த கல்வெட்டுகளில் கொல்லம் அல்லது மலபார் ஆண்டு கி. பி. 824–25 கடைப்பிடிக்கப்படுகிறது. இச் சகாப்தம் 'கொல்லம்' அல்லது 'கொயிலோன்' நிறுவப் பெற்ற நாளைக் குறிப்பதாகும்.

### கால வரன் முறை

கி.பி.

| | |
|---|---|
| 600—25 | மகேந்திர வர்மபல்லவன் (குகைக் கோவில் முதலியன) |
| 608—42 | இரண்டாம் புலகேசின்-சாளுக்கியன் |
| 610 | வேங்கி நாட்டுக் கீழைச் சாளுக்கிய குலம் நிறு வப் பெறுதல் |

1 'இந்தியன் ஆண்டிகுவேரி' வால்யூம் vi, பக்கம் 80-83, 215.

| கி.பி. | |
|---|---|
| 620 | கனோஜ் நாட்டு ஹர்ஷனைப் புலகேசின் முறியடித்தல் |
| 625—45 | நரசிம்ம வர்ம பல்லவன் (ரதங்கள்-ஓவியம் முதலிய) குணன் (அல்லது சுந்தரன் அல்லது நெடுமாறன்) பாண்டியன், சமணரைத் தோலுரித்தவன், சமகாலத்தவனுவான் |
| 640 | காஞ்சியில் ஹுயூன்-சாங் |
| 641 | புலகேசினின் அவையில் ஹுயூன்-சாங் |
| 642 | நரசிம்மவர்ம பல்லவன் புலகேசினை வென்று அரசிழக்கச் செய்தல் |
| 740 | சாளுக்கியரால் பல்லவர் முறியடிக்கப்படுதல் |
| 757 | முற்காலச் சாளுக்கியரை இராட்டிர கூடர் வென்று வீழ்த்துதல் |
| 760 | இராட்டிர கூடன் முதலாம் கிருஷ்ணன் அரசேற்றல். எல்லோராவில் கைலாசர் கோவில் |
| 815—77 | இராட்டிர கூட அமோக வர்ஷன் |
| 907 | முதலாம் பராந்தக சோழன் அரசேற்றல் |
| 973 | கல்யாணியில், இரண்டாவது சாளுக்கியர் குலத்தைத் தைலன் தோற்றுவித்தல் |
| 983 | சிரவணபெல்கோளத்தில் மாபெரும் சமணனின் சிலை உருப் பெறுதல் |
| 985 | இராச இராச சோழன் அரசேற்றல் |
| 1023 | இராசேந்திர சோழதேவன் வங்காளத்தின் மீது படையெடுத்துச் செல்லுதல் |
| 1052 அல்லது 1053 | 'கொப்பம்' என்னுமிடத்தில் போர்-சோழர் சாளுக்கியரால் முறியடிக்கப்படுதல் |
| 1076—1126 | விக்ரமாங்கன் அல்லது விக்ரமாதித்ய சாளுக்கியன் |
| 1110—41 | பிட்டிகன் அல்லது விஷ்ணு வர்த்தன ஹாய்சளன், இராமனுஜர் |

கி.பி.

| | |
|---|---|
| 1160—7 | அரசு கவர்ந்த பிஜ்ஜலன்—லிங்காயத சமயப் பிரிவு தோற்றம் |
| 1288—1293 | 'காயலுக்கு' மார்க்கோ போலோ விஜயம் |
| 1310 | மாலிக்காபூரின் படையெடுப்பு |
| 1318 | ஹரபால யாதேவ்—உயிருடன் தோலுரிக்கப் படுதல் |
| 1326—7 | துவார சமுத்திரமும் ஹாய்சளர் ஆதிக்கமும் அழிக்கப்படுதல் |
| 1336 | விஜயநகர சாம்ராச்சியம் உருவாகுதல் |

## மேற்கொண்டு படிப்பதற்குரிய நூல்கள்

இந்தியாவின் முற்கால வரலாறு என்ற நூலில் இன்றும் பல அருமையான குறிப்புகளை காணலாம். மற்றச் செய்திகள் விளக்க உரைகளில் கூறப்பட்டுள்ளன. ஜோடூப்ரெயில் அவர்களின் நூல்கள் மிகவும். கவனத்திற்குரியவை. 'ஆர்க்கியலோகிது சூ-டி-ல் இண்ட்'' (2 வால்யூம்கள், பாரிஸ் 1914).

'பல்லவரின் பழங்காலச் சின்னங்கள்' (வால். i லண்டன் 1916. வால். ii பாண்டிச்சேரி 1918)

திராவிட கட்டடக்கலை (சென்னை 1917).

பல்லவர்கள் (பாண்டிச்சேரி 1917) தக்காணத்தின் பண்டைய வரலாறு (பாண்டிச்சேரி 1920).

அண்மையில் வெளியான நூல்களில், டி. சி. சர்கார் என்பவரின் 'சதவாஹனருக்குப்பின். அரசெய்தியவர்கள்' (கல்கத்தா 1939) என்ற நூலில் பண்டைய தக்காண குலங்களைப் பற்றிய தெளிவான விரிவான வரலாறு கிடைக்கிறது.

வகாடகர்களைப் பற்றிய ஆராய்ச்சியில் மிக அண்மையில் வெளியானது, ஏ. எஸ். அல்டேகரின் 'இந்திய மக்களின் புதிய வரலாறு' (வால். vi) என்பதாகும்.

சாளுக்கிய குலத்தினரைப் பற்றிய செய்திப் பட்டியலடங்கிய நூலொன்று மிகவும் தேவைப்படுகிறது. ஜி. சி. ராய்சௌதுரி இத்தேவையைப் பூர்த்தி செய்வாரென எதிர்பார்க்கப்படுகிறது.

இராட்டிர கூடர் வரலாற்றினை ஏ. எஸ். அல்டேகர் (இராட்டிர கூடரும் அவர்களது காலமும், பூனா (1934) மிகக் கவனமாகக் கையாண்டிருக்கிறார். இடைக்காலத்தில் தக்காணத்தின் சமுதாயப் பொருளாதார நிலைகளை அந்நூல் நன்கு எடுத்துரைக்கிறது.

பல்லவர்கள் வரலாற்றை விளக்கும் அண்மையில் வெளியான நூல்கள் வருமாறு. ஆர். கோபாலன் (காஞ்சி பல்லவர் வரலாறு. சென்னை, 1928)

சி. மீனாக்ஷி (பல்லவராட்சியில் நிர்வாகமும் சமுதாய வாழ்வும் சென்னை 1938).

கடம்பர் வமிசத்தைப் பற்றிய முழு விவரங்களும். ஜி. எம். மொரெய்ஸ் என்பவரின் 'கடம்ப குல வரலாற்றில்' காணலாம் (பம்பாய், 1931).

தென்கோடியைக் குறித்தவரை கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்களின் நூல்கள், புலமை மிக்க சிறந்த நூல்களாக விளங்குகின்றன. இந்திய வரலாற்றாசிரியர்களின் நூல்களில் இவை மிகச் சிறந்தவை எனலாம். 'சோழர் வரலாறு' (இரண்டாம் பதிப்பு சென்னை 1955). பாண்டியப் பேரரசு (லண்டன் 1929) ஆகிய இரு நூல்களும் இக்குலங்களைப் பற்றிய பண்டைய வரலாறுகள் யாவற்றினும் மிகச் சிறந்து விளங்குகின்றன. 'தென் இந்திய வரலாறு' என்ற நூல் தற்போது வெளிவந்துள்ளது.

அண்மையில் 'இந்திய வரலாறு' (வால் 1 சென்னை 1959) என்ற நூலும், இதுவரையில், வெளிவந்துள்ள நூல்கள் யாவும் நினைத்துப் பார்க்காத வகையில், தென் இந்திய அரச குலங்களைப் பற்றித் தெளிவாகவும், விரிவாகவும் எடுத்துக் கூறுகின்றன.

ஹொய்சளரைப் பற்றி ஜே. டி. எம். டிரெட் என்பவர் வரைந்துள்ள நூல் அண்மையில் வெளிவர இருக்கிறது.

கீழ்ப்பகுதி அல்லது ஒரிசாப் பகுதி கங்கர் வரலாறும், ஏனைய ஒரிசா நாட்டுச் சிறு குலங்களின் வரலாறும், ஆர். டி. பானர்ஜி என்பவரின், 'ஒரிசாவின் வரலாறு' (2 வால். கல்கத்தா, 1931) என்ற நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

# பொருள் அட்டவணை

## அ

கூ



கெ



கே



கை



கொ



கோ



கௌ



ச

சா



சி



சீ



சு



சூ



செ



சே



சை



சொ

தீ



து



தே



தை



தொ



தோ



ந



நா



நி



ப



பா

**ஸோ**



**ஹ**



**ஹா**



**ஹி**



**ஹீ**



**ஹூ**



**ஹே**



**ஹோ**



**க்ஷ**



**க்ஷே**

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை-9

## 1966 வரை வெளியிட்டுள்ள நூல்கள்

பொருளாதாரம்

| | | | |
|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்–II ... | ... சி. வேலாயுதம் | ... 9–00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | ... திருமதி ஆர். தாமரஜாட்சி | ... 12–00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்-I ... | ... தி. சி. மோகன் | .. 12–00 |
| 4. | ,, II ... | ... எம். ஏ. அபூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | ... 10–75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு ... | ... க. முத்தையன் | ... 7–00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்-II ... | ... சி. வேலாயுதம் | ... 11–50 |
| 7. | நவீன பாங்கு இயல் ... | ... க. வெற்றிவேல் | ... 7–50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | ... பி. வி. ஸ்ரீநிவாசன் | ... 5–50 |
| *9. | அரசாங்க நிதி இயல் ... | ... அர. சேஷாசலம் | ... 4–75 |
| 10. | இந்தியப் பொருளியல்-I ... | ... எம். பாலசுப்பிரமணியன் | ... 10–00 |
| 11. | ,, II ... | ... எம். லூர்துநாதன் | ... 4–25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை–I ... | ... சி. சுந்தரராஜன் | ... 10–75 |
| 13. | ,, II ... | ... எஸ். குழந்தைநாதன் | ... 10–50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு–I | ... கீ. சீ. இராமசாமி | ... 6–00 |
| 15. | ,, II | ... ,, | ... 6–00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி ... | ... தி. சி. மோகன் | ... 5–00 |

| | | | |
|---|---|---|---|
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு-I | மு. க. சுப்பிரமணியம் | 11-00 |
| 18. | ,, II | பி. வி. சீனிவாசன் | 6-00 |
| 19. | ,, III | ,, | 6-50 |
| 20. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்-I | மா. குமாரசாமி | 10-00 |
| 21. | ,, II | அர. சேஷாசலம் | 9-50 |
| 22. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி-I | தே. வேலப்பன் | 10-00 |
| 23. | ,, II | ஜி. சிதம்பரம் | 8-00 |
| 24. | பணம்—சிறு விளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10-00 |
| * 25. | வணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடைய பிள்ளை | 9-50 |
| 26. | பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | கு. ரா. கறுப்பண்ணன் | 11-00 |
| 27. | பென்ஹாம் பொருளாதாரம்-I | ஏ. குழந்தை | 11-00 |
| 28. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 7-00 |
| * 29. | வரவுசெலவுத் திட்டம் | ஆர். ரங்காச்சாரி | 6-00 |

**வரலாறு**

| | | | |
|---|---|---|---|
| * 30. | பிரிட்டன் வரலாறு-I | கி. ர. அனுமந்தன் | 10-00 |
| * 31. | ,, II | ,, | 9-75 |
| * 32. | ஐரோப்பியர் வரலாறு-I | டி. வி. சொக்கப்பா | 4-50 |
| 33. | ஐரோப்பா-கடந்த ஐந்து நூற்றாண்டு காலச் சரித்திரம் | வை. விருத்தகிரீசன் | 15-00 |
| 34. | இங்கிலாந்து வரலாறு-I | இரா. அண்ணாமலை | 13-00 |
| 35. | ,, II | பா. மாணிக்கவேலு | 13-00 |
| 36. | ,, III | என். ஜே. ராஜகோபால் | 8-00 |
| 37. | ,, IV | ,, | 8-00 |

* மூலநூல் (Original Book)

வரலாறு—தொடர்ச்சி

| | | | |
|---|---|---|---|
| 38. | இங்கிலாந்தின் வரலாறு-I | க. த. திருநாவுக்கரசு | 15–00 |
| 39. | ,, II | எம். எக்ஸ். மிராண்டா | 8–00 |
| 40. | ,, III | ,, | 5–00 |
| 41. | இந்தியாவின் சிறப்பு வரலாறு-I | தி. வெ. குப்புசாமி | 7–50 |
| 42. | ,, II | ஏ. உஸ்மான் ஷெரீப் | 9–00 |
| 43. | ,, III | அ. பாண்டுரங்கன் | 11–00 |
| 44. | கிரேக்க நாட்டு வரலாறு-I | சைமன் ஐ. எஸ். பாக்கியநாதன் | 7–50 |
| 45. | ,, II | ,, | 7–00 |
| 46. | ,, III | பி. இராமானுஜம் தேவதாஸ் | 7–75 |

அரசியல்

| | | | |
|---|---|---|---|
| *47. | இந்திய அரசியலமைப்பு | வீ. கண்ணையா | 4–75 |
| 48. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8–50 |
| 49. | தற்கால அரசியல் அமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 8–50 |
| 50. | பன்னாட்டு அரசியல்-I | திருமதி நூர்ஜஹான் பாவா | 16–00 |
| 51. | பொதுத்துறை ஆட்சி இயல்-I | வீ. கண்ணையா | 9–00 |
| 52. | ,, II | அ. ஜெகதீசன் | 7–25 |
| 53. | பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்-I | வீ. கண்ணையா | 7–50 |
| 54. | ,, II | டி. செல்லப்பா | 7–50 |

உளவியல்

| | | | |
|---|---|---|---|
| 55. | குழந்தை உளவியல்-I | கி. ர. அப்புள்ளாச்சாரி | 8–00 |
| 56. | ,, II | ,, | 7–00 |

| | | | |
|---|---|---|---|
| 57. | உட்கவர் மனம் | சி. ந. வைத்தீஸ்வரன் | 7-00 |
| 58. | இளையோர் உளவியல்-I | தி. இரா. அரங்கராசன் | 12-00 |
| 59. | ,, -II | ,, | 9-00 |
| 60. | சமூக உளவியல் | என். வேதமணி மானுவேல் | 9-25 |
| 61. | பிறழ்நிலை உளவியல் | அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | 11-00 |
| 62. | பித்தரின் உள்ளம் | ,, | 3-00 |
| * 63. | குமர உள்ளம் | டாக்டர் மு. அறம் | 6-25 |

தத்துவம்

| | | | |
|---|---|---|---|
| 64. | இந்து சமயத் தத்துவம் | ஞா. ராஜாபகதூர் | 5-50 |
| * 65 | அறிவு ஆராய்ச்சி இயல் | ஆர். இராமானுஜாச்சாரி | 3-50 |
| * 66 | மேலைநாட்டுத் தத்துவம் | ஆர். எஸ். தேசிகன் | 3-50 |
| 67. | அத்துவித தத்துவம் | ஜி. எம். காந்தி | 6-50 |
| 68. | ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 5-50 |
| 69. | இந்தியத் தத்துவம் | வ. அ. தேவசேனபதி, பா. நா சண்முகசுந்தரம் | 3-50 |

அறவியல்

| | | | |
|---|---|---|---|
| 70. | அறவியல்—ஓர் அறிமுகம் | கோ. மோ. காந்தி | 8-50 |

அளவையியல்

| | | | |
|---|---|---|---|
| 71. | அளவை இயல்—தொடக்க நூல் | கி. ர. அப்புள்ளாச்சாரி | 2-50 |

* மூல நூல் (Original Book)

**மானிடவியல்**

| | | | |
|---|---|---|---|
| *72. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4–75 |
| 73. | பண்பாட்டுக் கோலங்கள் | கி. பூ. சுப்பிரமணியன் | 5–50 |
| 74. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3–50 |

**சமூகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 75. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10–00 |

**புவியியல்**

| | | | |
|---|---|---|---|
| 76. | ஆசியா-I | கொ. சேஷ. நரசிம்மன் | 9–50 |
| 77. | ,, II | ,, | 8–75 |
| 78. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8–50 |
| *79. | தென் கிழக்கு ஆசியா | ஜி. கிருஷ்ணமூர்த்தி | 8–50 |
| *80. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8–25 |
| *81. | தென் அமெரிக்கா | எம். என். பத்மநாபன் | 9–00 |
| *82. | தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4–00 |
| *83. | ,, —ஆஃபிரிக்கா | எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர் | 3–25 |
| *84. | புவிப்புறவியல்–II | நா. அனந்தபத்மநாபன் | 6–00 |
| *85. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9–00 |
| *86. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6–25 |
| *87. | சமுத்திரவியல் | கோ. இராமசாமி | 6–50 |
| 88. | காலநிலை இயல்–I | கொ. சேஷ. நரசிம்மன் | 10–00 |
| 89. | ,, | ,, | 5–00 |

| | | | | |
|---|---|---|---|---|
| 90. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | ... | 11–00 |
| *91. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | ... | 4–75 |

**புள்ளியியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| *92. | புள்ளியல்—அறிமுகம் | சு. வைத்தியநாதன் | ... | 10–00 |
| 93. | புள்ளியியல் முறைகள்-I | கோ. சண்முகசுந்தரம் | ... | 10–00 |
| 94. | ,, II | கே. ஆர். இராஜகோபாலன் | ... | 14–00 |
| 95. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமிநரசிம்மன் | ... | 6–50 |

**உயர் கணிதம்**

| | | | | |
|---|---|---|---|---|
| *96. | ஆயத்தொலை வடிவகணிதம் | டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை | ... | 12–50 |
| *97. | வகை நுண்கணிதம் | ,, | ... | 8–00 |
| *98. | தொகை நுண்கணிதம் | தி. கோவிந்தராசன் | ... | 9–00 |

**விலங்கியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| *99. | விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை<br>இரா. முருகேசன் | ... | 12–00 |

**பௌதிகவியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| 100. | ஒளி நூல் | ச. சம்பத்து | ... | 10–00 |

மூலநூல் (Original Books)

**விஞ்ஞானம்**

*101. வானவெளி வெற்றி ... ... டாக்டர் எம். ஏ. தங்கராஜ் ... 6–00
*102. ரேடியோ ... ... பி. திருஞானசம்பந்தம் ... 4–75
*103. எக்ஸ்-கதிர்கள் ... ... பெ. நா. அப்புசாமி, ஜே. பி. மாணிக்கம் 4–50
*104 பாம்புகள் ... ... பெ. மா. அண்ணாமலை ... 3–50
*105. தாவரம்—வாழ்வும் வரலாறும் ... ... டாக்டர் கு. சீனிவாசன் ... 8–00
*106. கரும்பு ... ... கு. பெரியசாமி ... 4–00

**மருத்துவம்**

*107. நீரிழிவு-க்ஷயரோகம் ... ... டாக்டர் ஜி. வேங்கடசாமி, டாக்டர் ஏ. கதிரேசன் ... 2–50
108. மகப்பேறும் மாதர் நோயும் ... ... டாக்டர் (குமாரி) மணிமேகலை ... 8–25
*109. பாக்டீரியா ... ... சு. சுந்தரம் ... 2–50

**பொறியியல்**

110. நீங்களே வீட்டைக் கட்டலாம் ... ... கே. வி. கிருஷ்ணராஜ், சி. ஆர் சுப்பிரமணியம், ஆர். இராமசாமி, கே. வேணுகோபால் ... 8–50

**சட்டம்**

*111. குற்றவியல் சட்டம் ... ... எம். சண்முகசுப்பிரமணியம் ... 10–00

**பொது நூல்கள்**

112. மகாத்மா காந்தி ... ... சரஸ்வதி தங்கையன் ... 3–25
113. விவசாயப் புரட்சி ... ... வி. கார்த்திகேயன் ... 8–00
114. சேமக் கை-நூல் ... ... ஆ. சுப்பிரமணியம் ... 2–50
*115. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் ... ... எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் ... 9–00
*116. உணவும் ஊட்டமும் ... ... தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார் ... 4–50

* மூலநூல் (Original Book)